# நவீன பாங்கு இயல்

ஆர். எஸ். சேயர்ஸ் தமிழாக்கம் க. வெற்றிவேல்




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

க. நூ. வெ. இ. வரிசை எண்—39

# நவீன பாங்கு இயல்

## (MODERN BANKING)

ஆசிரியர்

**ஆர். எஸ். சேயர்ஸ்**

தமிழாக்கம்

**க. வெற்றிவேல்,**

பொருளாதார விரிவுரையாளர்,

தியாகராசர் கல்லூரி, மதுரை.

**கல்லூரி நூல் வெளியீட்டு இயக்குநரகம்**

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—April 1964
Reprint—April 1971

D C P. No 38



**MODERN BANKING**

R S SAYERS

*Translation*

G VETRIVEL

**Net Price Rs. 5-00**
**(No discount)**

"This translation of 'MODERN BANKING'' by R S Sayers, Fifth Edition, is Published by permission of the Oxford University Press"

*Printed by*
KUMARAN PRESS,
298, Mint Street,
Madras-1

# அணிந்துரை

திரு இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி—உள்ளாட்சித் துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பத்து ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.யு.சி., பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். நாடு முழுவதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், தத்துவம், கணிதம், பௌதிகம், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல் ஆகிய பல துறைகளிலும் தனி நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனத்தின் கல்லூரி நூல் வெளியீட்டு இயக்குநரகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'நவீன பாங்கு இயல்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்—கல்லூரி நூல் வெளியீட்டு இயக்குநரகத்தின் 38ஆவது வெளியீடாகும். தமிழ் மக்களின் பேராதரவினாலும் தமிழைப் பயிற்சிமொழியாகக் கொண்ட மாணவர்களின் நல்லூக்கத்தினாலும் இதன் முந்தைய பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன. ஆதலின், இப்பொழுது இந் நூல் மீண்டும் வெளிவருகின்றது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# ஐநதாவது பதிபபிறகான முகவுரை

ரேடகிளிஃப குழுவினரின அறிககை வெளியானதை யொடடி பாஙகியஃப பறறி மாணவாகளும வேறு வாசகா களும, மேலும சில விஷயஙகள தெரிநது கொளள வேணடியது அவசியமாகிறது எனவே நானகாவது பதிபபை அடுதது, அதிவிரைவில இநத ஐநதாவது பதிபபை வெளியிடவேணடிய அவசியம நோநதுளளது ரேடகிளிஃப குழுவினரின கருததுகள இஙகிலாநதில காலப போககில செயலாறறபபடுவதையொடடி இநதப புததகததை முறறிலும திருததி அமைககவேணடியது நேரிடலாம அது விருமபததகக ஒனறேயாகும எனினும 1960, 1961 ஆகிய ஆணடுகளில தோ்வுககு அமரும மாணவாகளின உடனடியான தேவைகளைப பூாததி செயயும வகையில குறைநத அளவு திருததங களுடன உடனடியாகப புததகததை வெளியிடுவது நனமை தரககூடியது எனறு உணாந்தோம தேவைப படட திருததஙகளைப பதிபபில யாம செயதபோது ஓா எணணம எம உளளததில உதயமாகியது இநதப புததகததைப படிதத பினபே வாசகாகள ரேடகிளிஃப அறிககையைப படிகக முனைவது சாலச சிறநததாகும எனபதே அநத எணணமாகும

இநதப பதிபபில 1, 4, 5, 6 மறறும 12 ஆகிய அததியாயஙகளில முககியமான மாறறஙகள செயயப படடுளளன ஒவவொரு பதிபபிலும, முதலாவது அததி யாயததில சிறு சிறு மாறறங்களை யாம செயது வநதது போலவே, இவ ஐந்தாம பதிபபிலும மாறறஙகள செயதுளளோம, இவறறின விளைவாக, முதலாவது அததியாயததின தொனியில பெரிதும மாற் றஙகள நேர்நதுளளன இஙகிலாநது நாடடின மைய பாஙகு முறைபபறறிய ரேடகிளிஃப குழுவினரின கருதது களைப பிரதிபலிககும வகையில, 4ஆம அததியாயததை யும 5ஆம அததியாயததையும மாறறி அமைததுள ளோம முநதிய பதிபபில இறுதி அததியாயமான 12ஆம அததியாயததில எமது ஊகஙகளைத தநதிருந தோம ரேட கிளிஃப அறிககை வெளியானதை யொடடி இநத ஊகஙகள தேவையறறவை எனறு யாம கருதிய தால, அவறறை அகறறிவிடடு அவறறிறகுப பதிலாக 12ஆம அததியாயததில ரேட கிளிஃப அறிககையைப பறறிய ஒரு சிறு குறிபபைச சோததுளளோம எளிதில ஏனைய நாணயஙகளாக மாறறுவதறகு எடுககப படடுவரும முயறசிகளையொடடி ஆறுவது அத்தியா யததை மிகவும எளிதான ஒனறாக ஆக்கியுளளோம

லணடன பொருளாதாரப பளளி,
ஜனவரி, 1960

ஆா எஸ சேயாஸ்

# பொருளடக்கம்

# 1. அறிமுகம்

## 1. பண அளிப்பும் விலை மட்டமும்

பணத்தில் வர்த்தகம் செய்யும் நிறுவனங்களே பாங்குகள் என்றதொரு கருத்து பல ஆண்டுகளாக நிலவி வருகிறது. பணத்தில் வர்த்தகம் செய்வது ஒன்று மட்டிலுமே பாங்குகளின் பணி ஆகும் என்று கூறிவிட முடியாது. எனினும், இது ஒன்றே பாங்குகளின் தொழில் என்று வைத்துக்கொண்டாலும், பாங்கு களின் நடவடிக்கைகளில் பொருளாதார நிபுணர்கள் மிகுந்த ஆர்வம் காட்டுவார்கள். பங்கு வெளியீட்டகத்தின் (issuing house) நடவடிக்கைகளிலும், மூலதன மார்க்கெட்டின் (capital market) வேறு எந்தப் பகுதியின் நடவடிக்கைகளிலும் பொரு ளாதார நிபுணர்கள் எந்த அளவுக்கு ஆர்வம் காட்டுகின்றனரோ, அந்த அளவுக்குப் பாங்குகளின் நடவடிக்கைகளிலும் அவர்கள் ஆர்வம் காட்டுவர். கடனளிக்கும் கடன் ஈவோருக்கும் (creditor) இடையே இணைப்புக்களை ஏற்படுத்துவது நாட்டிலுள்ள பணப் பகிர்வை (distribution) மாற்றி அமைக்க வழிகோலும். இதனால், உடனடியாகப் பணத்தைச் செலவழிக்கும் விருப்பம் இல்லாத மக்களிடமிருந்து உடனடியாகப் பணத்தைச் செலவு செய்ய விரும்பும் மக்களிடம் பணம் போய்ச் சேருவதற்கான வாய்ப்புக்கள் ஏற்படலாம். எனவே, கடனளியையும் கடன் ஈவோரையும் இணைக்கும் பணியில் ஈடுபட்டுள்ள நிதி நிறுவனங்கள் (financial institutions or financial intermediaries) யாவும் தங்களுடைய நடவடிக்கைகளினால் நாட்டில் பொருள்கள் (goods), சேவைகள் (services) ஆகியவற்றிற்கான மொத்தத் தேவைகளை ஓரளவுக்கு மாற்றி அமைக்கும் ஆற்றல் பெற்றிருக்கின்றன. நிதி நிறுவனங்கள் பல உள்ளன; அவை பலதரப்பட்டவையுமாகும். நிதி நிறு வனங்கள் யாவற்றிலும் பாங்குகள் ஒரு சிறப்பான பொருளாதார முக்கியத்துவத்துடன் திகழ்கின்றன. பொருளாதார விளக்கங் களில் பாங்குகள் ஒரு சிறப்பான இடத்தை வகித்து வருகின்றன.

இதனினின்றும் பாங்குகளின் முக்கியத்துவத்தை நாம் உணரலாம். ஏனைய நிறுவனங்களைக் காட்டிலும் பாங்குகள் தனிச் சிறப்புக்கள் உடைய சக்தி வாய்ந்த கடன் தரும் நிறுவனங்களாகத் திகழ்கின்றன. பணத்தில் வர்த்தகம் செய்வது ஒன்றே பாங்குகளின் தொழில் அல்ல; பாங்குகள் பணத்தை உற்பத்தி செய்யும் நிறுவனங்களாகவும் திகழ்கின்றன.

'பணம்' என்ற சொல்லின் பொருள் என்ன, அதன் நடவடிக்கைகளில் நாம் ஏன் மிகுந்த அக்கறை கொள்ளுகிறோம் என்பவை பற்றி நாம் விளக்கமாகத் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியமாகும். கடன்களைத் தீர்ப்பதற்கு எல்லோராலும் தடையின்றி ஏற்றுக் கொள்ளப்படுகின்ற ஒரு சாதனமே பணமாகும்.[1] பொருளாதார நடவடிக்கைகளின் இறுதி நோக்கம் பொருள்களை நுகர்வதேயாகும். பொருள்களை நுகர்வதற்குப் பணத்தை நேரடியாகப் பயன்படுத்த முடியாது. மேலும், பொருள்கள், சேவைகள் ஆகியவற்றின் உதவியோடு தயாரிக்கப்படும் நுகர்வோர் பொருள்களை (consumption goods) உற்பத்தி செய்யவும் பணத்தை நேரடியாகப் பயன்படுத்த முடியாது. இருப்பினும், உடனடியான நுகர்வுக்கும், நுகர்வுப் பொருள் உற்பத்திக்கும் தேவைப்படும் பொருள்களையும், சேவைகளையும் விலை கொடுத்து வாங்குவதற்குப் பணம் பயன்படுகின்றது. தற்காலப் பொருளாதார அமைப்பு, பணப் பொருளாதார அமைப்பு, (money economy) என்பதை நாம் எல்லோரும் அறிவோம். இவ்வாறான அமைப்பில் பணத்தைக் கொண்டு உற்பத்திக் காரணிகளை (factors of production) வாங்குவோரின் இயக்கப்படியே பொருள்களின் உற்பத்தி நடைபெற்று வருகின்றது. அன்னார் பணத்தைக் கொண்டு உற்பத்திக் காரணிகளை விலைக்கு வாங்குகின்றனர்; அவற்றைப் பயன்படுத்திப் பொருள்களை உற்பத்தி செய்கின்றனர்; உற்பத்தி செய்த பொருள்களைப் பின் பணத்திற்கே விற்றுவிடுகின்றனர். பொருள்களை உற்பத்தி செய்வதற்கும் விற்பதற்கும் இவர்கட்குத் தூண்டுகோலாக அமைந்திருப்பது இலாபமேயாகும். நமது வாழ்விற்கு இன்றியமையாத பொருள்களை உற்பத்தி செய்வதற்கு உற்பத்திக் காரணிகளே பயன்படுகின்றன. பொருள்களை உற்பத்தி செய்யும்

1 பணத்தின் துணைகொண்டு நடைபெறும் எல்லாவிதமான பேரங்களையும் குறிக்கும் வகையில் 'கடன' என்ற சொல்லை ஈண்டு நாம் கையாண்டுள்ளோம். ஓர் எடுத்துக்காட்டு இதை விளக்கும். ஒரு பென்னிக்கு மிட்டாய் வாங்கும் நோக்கத்துடன் ஒரு சிறுவன் கடை ஒன்றுக்குள் நுழைகின்றான் என்று வைத்துக்கொள்வோம். ஒரு பென்னிக்கு மிட்டாய் தருமாறு கடைக்காரனிடம் சிறுவன் கேட்டுக்கொள்கிறான். உடனே கடைக்காரர் மிட்டாய் கொடுக்கின்றார். இப்பொழுது கடைக்காரரிடம் சிறுவன் ஒரு பென்னிக்குக் கடன்பட்டிருக்கின்றான். தன்னிடமுள்ள ஒரு பென்னியைக் கடைக்காரரிடம் கொடுத்துவிடுவதன் மூலம் சிறுவன் தன்னுடைய கடனைத் தீர்த்துக்கொள்கின்றான்.

நோக்கத்துடன் தொழிலதிபர்கள் உற்பத்திக் காரணிகளைப் பலவாறாக இயக்குகின்றனர். இந்த இயக்கங்கள் யாவும் பலவாறான பண அளிப்பைப் பொறுத்தவையாகும். சில சமயங்களில் பண அளிப்புக் குறைய நேரலாம்; வேறு சில சமயங்களில் பண அளிப்பு அதிகமாகலாம். மற்றும் ஒரு உபயோகத்திற்குக் கிடைக்கக்கூடிய பணத்தைத் தடை செய்து அந்தப் பணத்தைப் பிறிதோர் உபயோகத்திற்குக் கிடைக்கக்கூடியதாகச் செய்யலாம். பண அளிப்பு நிலையில் இவ்வாறாக நேரக்கூடிய மாற்றங்களின் விளைவால், உற்பத்தி செய்யப்படும் பொருள்களின் அளவும், மற்றும் சேவைகளும் மாற்றமுற நேரலாம். பண அளிப்பு அதிகமாகும் காலங்களில் நாட்டிலுள்ள மக்கள் ஒவ்வொருவரிடமுமுள்ள பண இருப்புகள் (money balances) ஒரே விகிதத்தில் அதிகமாகும் என்று எண்ணுவது தவறாகும்.[1] பண அளிப்பு அதிகரிப்பதையொட்டிச் சில குறிப்பிட்ட மக்களுக்கே மிகுதியான பண இருப்புகள் கிடைக்க நேரலாம். யார் யாரிடம் பண இருப்புகள் மிகுதியாகின்றனவோ அன்னாரெல்லாம் முன்னைவிட இப்பொழுது உற்பத்திக் காரணிகளை அதிகமாகப் பயன்படுத்த முடியும். அதாவது, அன்னாரெல்லாம் முன்னைவிட இப்பொழுது பொருள்களை அதிக அளவில் உற்பத்தி செய்ய முடியும். எனவே, இன்றைய பொருளாதார உலகில் பண அளிப்பை ஒழுங்கு செய்யும் ஆற்றல் பெற்றிருப்பவர் யாராயினும் சரி அவர் முக்கியமானவரே யாவர்.

பாங்குகள் தவிர வேறு நிதி நிறுவனங்களும் நாட்டில் உள்ளன. (உதாரணமாக, இன்சூரன்சுக் கம்பெனிகள், கட்டடச் சங்கங்கள், லேவாதேவிக்காரர் மற்றும் பலர்.) நிதி நிறுவனங்கள் யாவற்றையும்விடப் பாங்குகள் ஒரு தனிச் சிறப்போடு விளங்குகின்றன. இதற்குக் காரணம் உள்ளது. பாங்குகளின்மேல் பிறருக்குச் சில பாத்தியதைகள் (claims) உள்ளன. இப் பாத்தியதைகளே பாங்கு டெபாசிட்டுகளாகும். இந்தப் பாங்கு டெபாசிட்டுகள் பணத்திற்கு ஈடானவை. செக்குகள் ஒருவரிடமிருந்து இன்னொருவருக்குச் சாதாரணமாக மாற்றப்படுகின்றன. இதையொட்டி ஒருவர் பெயரிலுள்ள பாங்கு டெபாசிட்டுகள் இன்னொருவர் பெயருக்கு மாற்றப்படுகின்றன. செக்கு வரைபவரின் (drawer) பெயரிலுள்ள பாங்கு டெபாசிட்டுகள் செக்கு வரையப்

[1] சில சமயம் பண இருப்புகள் குறைக்கப்படலாம். இரண்டாவது உலக யுத்த காலத்தின் இறுதியில் ஐரோப்பிய நாடுகள் சில பண இருப்புகளைக் குறைக்கும் வகையில் நடவடிக்கைகள் எடுத்தன. இந்த நடவடிக்கைகளையொட்டி சில விளைவுகள் நேர்ந்தன. பண அளவுக் கோட்பாடு (Quantity Theory of Money) வலியுறுத்தும் உண்மையையும் பண அளவுக் கோட்பாட்டின் வரையறைகளையும் விளக்கும் வகையில் அமைந்துள்ள சிறந்த சான்றுகளாக இந்த விளைவுகள் நிகழ்ந்தன.

படுபவர் (drawee) பெயருக்கு மாற்றப்படுகின்றன. இவ்வாறு, டெபாசிட்டுகளை ஒருவர் பெயரிலிருந்து இன்னொருவர் பெயருக்கு மாற்றுவதன்மூலம் கடன்களைத் தீர்க்க முடியும். கடன்களைத் தீர்ப்பதற்கு எல்லோராலும் தடையின்றி ஏற்றுக்கொள்ளப்படுகின்ற ஒரு சாதனமே பணம் என்று ஏற்கெனவே கண்டோம். எனவே, பாங்கு டெபாசிட்டுகளும் பணமே என்று நாம் கொள்ளுவதில் தவறு ஏதுமில்லை. ஏனைய நிதி நிறுவனங்களினின்றும் பாங்குகள் தனித்து விளங்குவதற்கு இதுவே காரணமாகும். மேலும் இதை யொட்டி 'பாங்கு' என்பது யாது என்பது குறித்து நாம் ஒரு விளக்கம் தரமுடியும். எந்த நிறுவனத்தின் கடன்களை (பாங்கு டெபாசிட்டுகளை) ஏனையோர் தமக்கிடையே நேரும் கடன் பேரங்களைத் தீர்ப்பதற்குத் தடையின்றி ஏற்றுக்கொள்கின்றனரோ அந்த நிறுவனமே பாங்கு ஆகும்.[1] இதனின்றும் ஓர் உண்மை புலனாகலாம். நாட்டின் பண அளிப்பு பாங்குகளின் கடன் தரும் ஆற்றலையும் பொறுத்த ஒன்றாகும். பணத்தைச் செலவழிக்கக் கூடியவரிடம் இந்தப் பணம் (பாங்கு டெபாசிட்டுகள்) போய்ச் சேருமாறு பாங்குகள் மட்டுமன்றி ஏனைய நிறுவனங்களும் தங்களுடைய நடவடிக்கைகளை ஒழுங்கு செய்துகொள்ள முடியும். எனவே, இந்தப் பணம் எவ்வாறு பயன்படுத்தப்படும் என்ற விஷயம் பாங்குகள் ஏனைய நிறுவனங்கள் ஆகியவற்றின் ஆற்றலைப் பொறுத்தே அமையும். இருப்பினும், நாட்டின் பண அளிப்பைத் தீர்மானிப்பதில் பாங்குகளின் பங்கு சந்தேகத்திற்கிடமின்றி இன்றியமையாத ஒன்றாகும் என்பதை நாம் மறந்துவிடலாகாது.

பண அளிப்பில் மாற்றங்கள் ஏற்படுவதையொட்டி நேரக்கூடிய விளைவுகளை விளக்கும் ஒரு கோட்பாடு (Theory) உள்ளது. இந்தக் கோட்பாடே பண அளவுக் கோட்பாடாகும். (Quantity Theory of Money) பாங்கு முறைகளைப்பற்றி விவாதிக்கு முன்

[1] நாம் மேலே கொடுத்துள்ள விளக்கங்கள் தற்காலச் சமுதாயத்தில் மக்கள் அனுசரித்து வரும் சாதாரணப் பழக்க வழக்கங்களையொட்டியே அமைந்திருப்பதால் நாம் அவற்றைத் தேர்ந்தெடுத்துள்ளோம். பண ஆராய்ச்சியின் முடிவுகள் ஒருவர் தேர்ந்தெடுக்கும் விளக்கங்களைப் பொறுத்தவையல்ல என்பதை நாம் ஈண்டு வலியுறுத்த விரும்புகிறோம். தற்காலப் பொருளாதார ஆய்வு முறைகளை ஏற்கெனவே அறிந்துகொண்டிருக்கும் வாசகர்களின் மனத்தில் ஓர் எண்ணம் உதயமாகலாம். கணக்கிட முடியாத சொத்துக்கள் இருப்பதையும் அவற்றை நீர்மைத் தன்மையின் அடிப்படையில் வரிசைப்படுத்துவதால், பாங்கு டெபாசிட்டுகளும் அவற்றுள் ஒரு இடம் பெறுவதையும் அவர்கள் நினைவுகூறலாம். நீர்மைத் தன்மையின் அடிப்படையில் தங்களிடமுள்ள சொத்துக்களைப் பொதுமக்கள் பகிர்வு செய்திருப்பதை மாற்றி அமைப்பதே பண அளிப்பு மாற்றமுறுவதால் நேரக்கூடிய விளைவாகும், பாங்கு டெபாசிட்டுகட்குப் 'பணம்' என்ற பெயரைச் சூட்ட விரும்பினாலும் சரி, விரும்பாவிட்டாலும் சரி, பாங்கு டெபாசிட்டுகளில் மாற்றங்கள் நேரும்போது மேற்படி பகிர்வு மாற்றி அமைக்கப்படுகின்றது என்பது உண்மையாகும்.

இந்தக் கோட்பாடு குறித்துச் சிறிது அறிய முயலுவோம். இந்தக் கோட்பாட்டைப் பலர் பலவிதமாக விளக்கியுள்ளனர். சிலர் எளிய முறையிலும் வேறு சிலர் சிக்கல்களைச் சேர்த்தும் விளக்கியுள்ளனர். எளிய முறையில் அமைந்துள்ள விளக்கம் வருமாறு: பண அளிப்பு உயர்வதையொட்டிப் பொதுவான விலைகளின் மட்டம் உயரும்; பண அளிப்புக் குறைவதையொட்டிப் பொதுவான விலைகளின் மட்டம் குறையும். சிக்கல்கள் புகுத்தப்பட்டுள்ள விளக்கம் வருமாறு: பண அளிப்பு எந்த விதத்தில் உயருமோ அதே விதத்தில் பொதுவான விலைகளின் மட்டமும் உயரும்; பண அளிப்பு எந்த விதத்தில் குறையுமோ அதே விதத்தில் பொதுவான விலைகளின் மட்டமும் குறையும். மேலும், பண அளிப்பு எந்த விதத்தில் உயருமோ அதே விதத்தில் பணத்தின்மதிப்புக் (value of money) குறையும்; பண அளிப்பு எந்த விதத்தில் குறையுமோ அதே விதத்தில் பணத்தின் மதிப்பு உயரும். இந்த இரண்டு விளக்கங்களிலும் எளிதான முதல் விளக்கம் தெளிவற்றதாகும். இருப்பினும், உலகில் நாம் கண்கூடாகக் காணுகின்ற விஷயங்களை இந்த விளக்கம் பெரிதும் ஒத்தே இருக்கின்றது. இரண்டாவது விளக்கம் சிக்கல்கள் மிகுந்த ஒரு விளக்கந்தான். ஆனால், இதில் ஒரு சிறப்புக் காணக் கிடக்கின்றது. மிகக் குறைவான எடுகோள்களின் (assumptions) அடிப்படையில் தர்க்க ரீதியாக அமைந்துள்ள வாதத்தின் விளக்கமான முடிவாக இந்த இரண்டாவது விளக்கம் திகழ்கின்றது[1].

மக்கள் 'பணத்தைப் பணத்திற்காகவே விரும்பவில்லை; பணத்தின் உதவியால் தமக்குத் தேவையான பொருள்களை உடனடியாக வாங்கிக் கொள்ள முடிவதால்தான் மக்கள் பணத்தை விரும்புகின்றனர்' என்ற உண்மையின் அடிப்படையில் எழுப்பப்பட்டுள்ள கோட்பாடே பண அளவுக் கோட்பாடாகும். எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான பணத்தை இருப்புகளாக ஒருவர் வைத்திக்கின்றாரோ அவ்வளவுக்கவ்வளவு அவருக்குச் சௌகரியங்களும் அதிகமாகும். (அவரிடமுள்ள பணம் வசதியான உருவங்களில் அமைந்திருக்க வேண்டியது அவசியமாகும். 1,000 பவுன்

[1] பண அளவுக் கோட்பாடு குறித்து முழு அளவிலான விளக்கம் தருவது இங்கு நமது நோக்கமல்ல. பண அளவுக் கோட்பாடு குறித்து மேலும் அறிய விரும்பும் வாசகர்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ள ஆசிரியர்கள் எழுதியுள்ள புத்தகங்களைப் படிக்கலாம். இந்தப் புத்தகங்களில் கடைசியாகத் தரப்பட்டுள்ள புத்தகம் அண்மையில் பிரசுரமான ஒரு புத்தகமாகும். அண்மைக் காலத்தில் வெளிவந்துள்ள பண அளவுக் கோட்பாடு குறித்த விளக்கங்கள் பலவற்றுள்ளும் இப்புத்தகத்திலுள்ள விளக்கமே மிகச் சிறப்பாக அமைந்துள்ள விளக்கமாகும்:

Marshall (esp. Official Papers), Fisher (esp. Purchasing Power of Money), Keynes, Robertson, D. Patinkin, Money Interest and Prices (Evanston and New York, 1956).

களை இருப்பாக வைத்திருக்கும் ஒருவரிடம் எல்லாப் பணமுமே 3 பென்னி நோட்டுக்களின் உருவில் அமைந்திருந்தால் அவரிடமுள்ள பண இருப்புகளால் அவருக்கு வசதி ஏற்படும் என்று கூற முடியுமா ?) ஆனால், பணத்தை இருப்பாக வைத்திருப்பதையொட்டி வேறு வகையான சில சௌகரியங்களை மக்கள் இழக்க வேண்டி நேரிடும். பணத்தை இருப்பாக வைத்திருக்க எண்ணும் ஒருவர் உடனடியாகப் பயன் தரக்கூடிய நுகர்வுப் பொருள்களை வாங்குவதால் கிடைக்கக்கூடிய சௌகரியங்களை இழக்க நேரிடுகின்றது. எதிர் காலத்தில் மேலும் மேலும் வருமானம் பெற வசதி செய்யும் மூலதனப் பொருள்களில் முதலீடு செய்வதால் கிடைக்கக்கூடிய சௌகரியங்களையும் இழக்கவேண்டி இருக்கின்றது. எனவே, பண இருப்புகளைத் தம்மிடம் வைத்திருப்பதே சௌகரியமானது என்று எண்ணும் ஒருவர், வேறு சில சௌகரியங்களை இழக்க வேண்டியிருக்கின்றது. தனிப்பட்ட நபர்களும், நிறுவனங்களும் தங்களிடம் ஓரளவு பண இருப்புகள் வைத்திருக்கும் பழக்கத்தை மேற்கொண்டுள்ளனர். இவர்களுடைய பேரங்களின் மொத்தப் பண மதிப்பும் பிறருக்கு இவர்கள் வழக்கமாகப் பணம் செலுத்தும் முறைகளும், மற்றும் இது போன்றவைகளும் இவர்களிடமுள்ள பண இருப்புகளின் அளவுகளைத் தீர்மானிக்கின்றன. மற்றவை மாறுதிருக்கும் பட்சத்தில் (Other things remaining the same) இவர்கள் வழக்கமாகத் தங்களிடம் வைத்திருக்கும் பண இருப்புகள் அதிகரித்தால், இந்த அதிகரித்துள்ள பண இருப்புகள் இவர்கள் செலவு செய்ய விரும்பலாம். நுகர்வுப் பொருள்களை வாங்குவதற்காகவோ, முதலீடு செய்யவதற்காகவோ, இந்த மிகுதியான பண இருப்புகளை இவர்கள் செலவிடலாம். நாட்டிலுள்ள மொத்தப் பண அளிப்பு அதிகமாகின்றது[1] என்று வைத்துக்கொள்வோம். இந் நிலையில் குறைந்த அளவு இருப்புகள் வைத்திருப்போரின் எண்ணிக்கையைவிட மிகுதியான இருப்புகள் வைத்திருப்போரின் எண்ணிக்கை அதிகமாகும். தங்களிடமுள்ள பணத்தை மக்கள் பொதுவாகச் செலவிட விரும்புவர். நுகர்வுப் பொருள்களை வாங்குவதற்குச் செலவிடலாம் அன்றி முதலீடு செய்வதில் செலவிடலாம். நுகர்வுப் பொருள்களை வாங்கப் பெருமளவு பணத்தை

[1] தம்மிடமுள்ள பண இருப்புகள் உயருவதையொட்டித் தனிப்பட்ட நபர் பிறருக்குக் கடன் கொடுக்க முன் வரலாம் (அதாவது முதலீடுகளில் செலவிடலாம்) என்று மேலே கூறியுள்ளோம். உண்மையில், சில சமயங்களில் இதற்கு முற்றிலும் மாறான நிலை ஏற்படலாம். நாட்டில் உருவாகியிருக்கும் வாய்ப்பான சூழ்நிலையைப் பயன்படுத்த எண்ணும் தனிப்பட்ட நபர் ஒரு பாங்கு ஒன்றினை அணுகிக் கடன் பெற முயலலாம். கடன் வசதிகளை ஏற்பாடு செய்யும்போது பாங்கு தன்னுடைய டெபாசிட்டுகளை இவருக்குக் கொடுக்கின்றது. இவ்வாறு, இந்த நபரிடமுள்ள இருப்புகள் அதிகமாகின்றன. இவ்வாறு பண அளிப்பு உயருவதால் அடுத்தடுத்து விளைவுகள் நேரும். அவை மேலே நாம் குறித்துள்ளவைபோலவே அமையும்.

மக்கள் செலவிடுகின்றனர் என்று வைத்துக்கொண்டால், நுகர்வுப் பொருள்களுக்கான மக்களின் தேவை அதிகமாகும். இதன் விளைவாக நுகர்வுப் பொருள்களின் விலைகள் உயர நேரிடலாம். நுகர்வுப் பொருள்களின் அளிப்பும் உயரலாம் இவ்வாறன்றி, முதலீடுகளில் மக்கள் அதிகமான பணத்தைச் செலவிடுகின்றனர் என்று வைத்துக்கொண்டால், சில விளைவுகள் நேரும். ஆனால், நுகர்வுப் பொருள்களில் பெருமளவு பணத்தை மக்கள் செலவிடும் போது நேரக்கூடிய விளைவுகள் நமக்குத் தெளிவாகத் தோன்றியது போல, இந்த விளைவுகள் நமக்கு அவ்வளவு தெளிவாகத் தோன்றுது. இருப்பினும், நாட்டில் சில பொருள்களின் விலைகள் உயர நேரலாம். தங்களிடமுள்ள பண இருப்புகள் அதிகரிக்கும்போது ஆரம்ப காலத்தில் மக்கள் பழைய பத்திரங்களிலேயே முதலீடு செய்வதைப் பெரிதும் விரும்பலாம். இதையொட்டி மூலதன மார்க்கெட்டின் ஏனைய பகுதிகளிலும் மாற்றங்கள் நேர்வதற்கான வாய்ப்புக்கள் உருவாகலாம். உதாரணமாகப் பழைய பத்திரங்களின் தேவை அதிகரித்துள்ளதையொட்டி அவற்றின் விலைகள் அதிகமாகும். எனவே, புதிய பத்திரங்களையும் வாங்குவதில் மக்கள் ஆர்வங் காட்டலாம். (தங்களுடைய தொழிலை விரிவாக்க எண்ணும் நிறுவனங்கள் வெளியிடும் பத்திரங்களே இந்தப் புதிய பத்திரங்களாகும்.) புதிய பத்திரங்கட்கும் தேவை உருவாகி யுள்ளதையொட்டித் தங்களுடைய மூலதன வளர்ச்சிக்குத் தேவைப்படும் பணத்தைத் தொழிலதிபர்கள் எளிதில் பெற முடியும். இதன் விளைவாக உற்பத்திக் காரணிகள், கச்சாப் பொருள்கள் ஆகியவற்றுற்கான தேவைகளும் அதிகமாகும். இவற்றிற்கான தேவைகள் அதிகரித்துள்ளதையொட்டி, இந்தப் பொருள்களின் விலைகள் உயரும்.[1] இதுவரை பயன்படுத்தப் பெறுத செல்வ வளங்கள் ஏதேனும் பொருளாதார அமைப்பில் இருக்க நேர்ந்தால், பொருள்களின் உற்பத்தியும் அதிகரிக்கும். எனவே, மக்களிடம் உபரிப் பண இருப்புகள் திரளும்போது அவர்கள் அந்த இருப்புகளை நுகர்வுப் பொருள்களை வாங்குவதற்குச் செலவிட்டாலும். அன்றி முதலீடு செய்வதற்குப் பயன்படுத்தினுலும், விலைவாசிகள் உயருகின்றன ; சில சமயங்களில் உற்பத்திப் பெருக்கமும் நேர்கின்றது.

தங்களிடமுள்ள மொத்தப் பண இருப்புகளைத் தங்களுடைய நடவடிக்கைகளாலேயே மக்களால் குறைத்துக்கொள்ள முடியாது.

[1] பழைய பத்திரங்களின் விலை உயர்வுக்கும் தொழிலதிபர் உற்பத்திக் காரணிகட்கான தமது தேவையை அதிகரிப்பதற்கும் இடையேயுள்ள தொடர்புகள் மேலே விளக்கப்பட்டுளளதைப்போல மிகவும் எளிதானவை அல்ல. அவை பல சிக்கல்கள நிறைநதவையே யாகும். இந்தச் சிக்கல்களை அத்தியாயம் 7-ல் விளக்கியுள்ளோம்.

ஒரு தனிப்பட்ட நபர் தம்மிடமுள்ள பண இருப்புகளைக் குறைத்துக் கொண்டால் ஏனையோரிடமுள்ள பண இருப்புகள் அதிகமாகும். எனவே, பண அளிப்பில் எந்த விதமான மாற்றமும் நேராது. ஆனால், விலைவாசிகள் உயர்ந்துகொண்டிருக்கும்போது, தாங்கள் முன்பு வைத்திருந்த பண இருப்புகள் தற்சமயம் போதுமானதாகாது என்று மக்கள் எண்ணத் தலைப்படுவர். விலைவாசிகளின் உயர்வையொட்டி மக்களுடைய செலவினங்களும் அதிகமாகி இருக்கும், எனவே அவர்கள் அதிகமான இருப்புகளை விரும்புவர். நாட்டிலுள்ள பண இருப்புகள் உயருவதையொட்டி உற்பத்தி பெருகும்போதும் மக்கள் இவ்வாறே எண்ணத் தலைப்படுவர். உற்பத்திப் பெருக்கத்தையொட்டிப் பேரங்களின் அளவு அதிகமாகும். எனவே, தங்களிடம் அதிகமான இருப்புகள் வைத்திருப்பதையே மக்கள் விரும்புவர். இவ்வாறாக, விலைகள் உயர்வதாலும் உற்பத்தி பெருகுவதாலும் தங்களிடம் ஆரம்ப நிலையில் தோன்றியிருந்த உபரி இருப்புகள் தேவைக்குமேல் அதிகமானவை என்று மக்கள் தற்சமயம் எண்ணமாட்டார்கள். எனவே, நுகர்வுப் பொருள்களிலும், முதலீடுகளிலும் அதிகமான பணத்தைச் செலவிடுவதை விரும்பமாட்டார்கள். இதன் விளைவாக விலைவாசிகளின் உயர்வு தடையுற நேரும்.

இதுகாறும் நாட்டிலுள்ள மொத்தப் பண அளிப்பு அதிகரித்து அதையொட்டி மக்களிடமுள்ள பண இருப்புகள் அதிகமாவதால் நேரக்கூடிய விளைவுகள் யாவை என்று கண்டோம். இனி, பண அளிப்புக் குறையும்போது நேரக்கூடிய விளைவுகளை ஆராய்வோம். பண அளிப்புக் குறைவதையொட்டி மக்களிடமுள்ள பண இருப்புகள் குறையும். இதைத் தொடர்ந்து மக்கள் செலவுகளைச் சுருக்குவர். விலைவாசிகள் வீழ்ச்சியுறும். விலைவாசிகளின் வீழ்ச்சியால் மக்களுடைய செலவினங்களும் குறைய நேர்வதால், ஆரம்ப நிலையில் தங்களிடம் இருந்த குறைந்த இருப்புகளே தற்சமயம் போதுமானவையாகும் என்று மக்கள் எண்ணுவர். புதிதாக உருவாகியுள்ள (குறைந்த) விலை மட்டத்திற்கும், (குறைந்த) பண இருப்புகளின் அளவுக்கும் ஏற்றதொரு முறையில் பொருளாதார அமைப்பின் நடவடிக்கைகள் அமையும். சுருங்கக் கூறின், மற்றவை மாறாதிருக்கும் பட்சத்தில், பலவிதமான பண இருப்புகளுக்கும் (அதாவது பலவிதமான பண அளிப்புக்கட்கும்) ஏற்ற வகையில் விலைவாசிகளும் பலவித நிலைகளை அடையும். பண அளிப்பு உயர்வதையொட்டி விலைகள் உயரும்; பண அளிப்புக் குறைவதையொட்டி விலைகள் குறையும். எந்த வழியின்மூலம் பண அளிப்பில் மாற்றங்கள் நேர்ந்தபோதிலும் மேலே நாம் குறித்துள்ள விளைவுகள் (விலைவாசியில்) நேரும். ஏனெனில், பண அளிப்பு அதிகமாகும்போது,

பொதுவாக மக்களிடமுள்ள சராசரி பண இருப்புகளும் அதிகமாகின்றன. இதே போலப் பண அளிப்புக் குறையும்போது மக்களிடமுள்ள சராசரிப் பண இருப்புகளும் குறைகின்றன. பண இருப்புகளின் அடிப்படையில் நாம் மேலே கொடுத்துள்ள பண அளவுக் கோட்பாடு பற்றிய விளக்கம் தனியார் தொழில் துணிவுப் பொருளாதார அமைப்புக்கும் (private enterprise economy) இங்கிலாந்தில் அண்மையில் உருவாகி வருவதுபோன்ற 'திட்டமிட்ட பொருளாதார அமைப்புக்கும்' (planned economy) பொருந்தக்கூடிய ஒன்றாகும்.

விலைவாசிகள் உயர்வும் தாழ்வும் ஏற்படுவதையொட்டிச் சில துரதிர்ஷ்டமான விளைவுகள் நேருகின்றன. விலைவாசி மாற்றங்களால் நேரக்கூடிய பகிர்வுக் கேடுகள் (distributional evils) யாவை என்று முதற்கண் ஆராய்வோம். நீதிபதிகள், மதபோதகர்கள், குத்தகை வாங்குவோர் (rentiers) ஆகியோரின் பண வருமானங்கள் நிர்ணயிக்கப்பட்ட வருமானங்களாகும். இவர்களின் வருமானங்களை அரசாங்கம் நிர்ணயித்திருக்கலாம்; அல்லது நெடுநாட்களாக அனுசரிக்கப்பட்டு வரும் பழக்க வழக்கங்களையொட்டி இவர்களின் வருமானங்கள் ஒரு குறிப்பிட்ட அளவினவாக நிர்ணயிக்கப்பட்டிருக்கலாம். வேறு சிலரின் பண வருமானங்கள் (money incomes) விலைவாசிகள் எவ்வளவு விரைவில் உயர்கின்றனவோ அவ்வளவு விரைவில் அதிகரிக்கமாட்டா. உதாரணமாக, டாக்டர்கள், அரசாங்க ஊழியர்கள், ஆகியோர் பெறும் பண வருமானங்கள் விரைவில் அதிகரித்துவிடுவதில்லை. அற நிலையங்கள் (charitable institutions), கல்வி நிறுவனங்கள் ஆகியவற்றிற்குச் சொந்தமான மானியங்களினின்றும் அவை பெறும் பண வருவாயும் விலைவாசி உயர்வையொட்டிப் பெருமளவு மாறுவதில்லை. இவர்களும் இவர்களைப்போலவே நிலையான பண வருமானங்கள் பெற்றுக்கொண்டிருக்கும் ஏனைய மக்களும் விலைவாசிகள் குறையும்போது பயனுறுகின்றனர். ஏனெனில், விலைவாசிகளின் வீழ்ச்சியையொட்டி இவர்களுடைய உண்மையான வருமானங்கள் (real income) அதிகமாகின்றன. ஆனால், விலைவாசிகள் உயரும்போது இவர்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். ஏனெனில், விலைவாசிகளின் உயர்வையொட்டி இவர்களுடைய உண்மையான வருமானங்கள் குறைகின்றன. ஆனால், இதற்கு மாறாக வியாபாரிகளும் (வியாபாரிகளின் வருவாய் இலாபத்தினின்றும் கிடைப்பதாகும்), சாதாரண பங்குதாரர்களும் விலைவாசி உயர்வதையொட்டிப் பயனடைகின்றனர். விலைவாசிகள் உயர்ந்துகொண்டிருந்தபோதிலும் இவர்களின் பண வருவாய் விலைவாசிகளின் உயர்வைவிட அதிக அளவு உயர்ந்துகொண்டு போவதால்

இவர்கள் பயனுறுகின்றனர். தாங்கள் உற்பத்தியில் அமர்த்தியிருக்கும் காரணிகளை நீண்டகால உடன்படிக்கையின்பேரில் ஒரு குறிப்பிட்ட நிலைத்த விலைக்கே வியாபாரிகளால் விலைக்கு வாங்க முடிவதால், விலைவாசிகள் உயர்ந்தாலும் வியாபாரிகட்கு ஆகும் செலவினங்கள் அதிகமாவதில்லை[1] எனவே, இவர்கள் ஈட்டுகின்ற இலாபங்கள் அதிகமாவதற்கான வாய்ப்புக்கள் உருவாகுகின்றன. ஊதியம் பெறுவோர் (wage-earners) விலைவாசி உயர்வாலும் விலைவாசி வீழ்ச்சியாலும் பாதிக்கப்படலாம். விலைவாசிகள் உயரும்போது இவர்களுடைய ஊதியங்களில் எந்தவிதமான மாற்றங்களும் நேராதிருந்தால் இவர்கள் பாதிக்கப்படுவர். விலைவாசிகள் வீழ்ச்சியுறும் காலங்களில் இவர்களுடைய ஊதியங்களின் அளவு விலைவாசிகள் அளவைவிடக் குறைவாக இருப்பதற்கு வாய்ப்புகள் உள்ளன. இருப்பினும், விலைவாசிகள் உயரும் காலங்களில் ஆற்றல் வாய்ந்த தொழிற் சங்கங்களின் முயற்சியால் விலைவாசிகளின் உயர்வுக்கு ஏற்றதொரு வகையில் ஊதியங்களும் அதிகரிக்கப்படலாம். விலைவாசிகள் உயர்வதையும் குறைவதையும் ஒட்டி நேரக்கூடிய விளைவுகளைத் தடை செய்யும் வகையில் அதிகாரிகள் நடவடிக்கைகள் ஏதும் எடுக்க முன்வராதிருந்தால், நாட்டில் பெருமளவு ஏற்றத் தாழ்வுகள் நேரும். இவ்வாறன்றி, அதிகாரிகள் நடவடிக்கைகள் எடுத்தபோதிலும், விலைவாசி மாற்றங்களால் நேர்ந்துள்ள கேடுகளை முற்றிலும் அதிகாரிகளால் அகற்றிவிட முடியாது. விலைவாசிகளில் ஏற்படக்கூடிய மாற்றங்களையொட்டி ஒரு சாராருடைய உண்மையான வருமானங்கள் மிக அதிகமாகின்றன; வேறொரு சாராருடைய உண்மையான வருமானங்கள் குறைகின்றன. இவ்வாறு நேர்கின்ற ஏற்றத் தாழ்வுகள் அந்தந்த மக்களின் தகுதிக்கு ஏற்றவாறு அமைகின்றன என்று எண்ணுவது தவறாகும். விலைவாசிகளில் பெருமளவு மாற்றங்கள் ஏற்படுவதால் மக்களிடையே அநியாயமான ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுகின்றன.

விலைவாசிகளில் நேரக்கூடிய மாற்றங்களால் பொருள்களின் உற்பத்தி (production) எவ்வாறு பாதிக்கப்படுகின்றது என்று இனிக் காண்போம். விலைவாசிகள் வீழ்ச்சியுறுங் காலங்களில் பொதுவாகத் தொழிலதிபர்கள் பெரிதும் பாதிக்கப்படுகின்றனர். தொழிலதிபர்கள் உற்பத்தியில் அமர்த்தியிருக்கும் காரணிகட்கான

[1] இரண்டாவது உலக யுத்த காலத்தில் விலைவாசிகள் உயர்ந்துகொண்டிருந்தபோதிலும் தொழிலதிபர்களால் பெருமளவு இலாபம் ஈட்ட முடியவில்லை. அரசாங்கத்தின நடவடிக்கைகளே இதற்குக் காரணமாகும். பொருட்களை வாங்குவதற்கான பல உடன்பாடுகளை அரசாங்கம் செய்திருந்தது ஒரு காரணமாகும்; இலாபங்களைத் தடை செய்யும் நோக்கத்துடன் அரசாங்கம் வரிகளை விதித்தது மற்றொரு காரணமாகும்

விலைகள் பெரும்பாலும் நீண்டகால உடன்பாடுகளின்பேரில் நிர்ணயம் செய்யப்பட்டுவிடுகின்றன. அதாவது, தொழிலதிபர் அவற்றிற்கு நிலைத்த விலைகளையே கொடுக்கவேண்டியிருக்கின்றது. விலைவாசிகள் குறையும்போதும் தாம் வேலையில் அமர்த்தியுள்ள காரணிகட்குத் தொழிலதிபர் நிலைத்த விலைகளையே கொடுக்கவேண்டியுள்ளது. எனவே, தாம் விற்பனை செய்யும் பொருள்களின் விலைகள் குறைந்துள்ள போதிலும், தொழிலதிபருக்கு நேரக்கூடிய உற்பத்தி செலவினங்களில் பெருமளவு மாற்றங்கள் ஏதும் நேர்ந்திராது. இவ்வாறு உற்பத்தி இலாபகரமாக இல்லாதிருப்பதால் தொழிலதிபர் உற்பத்தியைக் குறைக்க முற்படுகின்றார். இதையொட்டி நாட்டில் பொருளாதார நடவடிக்கைகளும் வேலை மட்டமும் (level of empolyment) குறைகின்றன. உபயோககரமான பொருள்களை உற்பத்தி செய்யப் பயன்படும் செல்வ வளங்கள் பயன்படக்கூடிய வாய்ப்பின்றி அவமே கிடக்கின்றன. தனிப்பட்ட மனிதர்கள் வேலையில்லாத் திண்டாட்டத்தால் அவதியுறுகின்றனர். விலைவாசிகளின் வீழ்ச்சியையொட்டிச் சமுதாயத்தில் நேர்கின்ற இந்த உற்பத்தி குறைவு எல்லாத் தொழில்களிலும் ஒன்றுபோல நேர்வதில்லை. உற்பத்தியைச் சுருக்கும் நோக்கத்தோடு ஆரம்ப நிலையில் தொழிலதிபர்கள் தொழிலை விரிவாக்கும் திட்டங்கள் யாவற்றையும் கைவிடுவர். மேலும், பழைய சாதனங்களைப் புதுப்பிக்கும் எண்ணத்தையும் விட்டொழிப்பர். தொழிலதிபர்கள் இவ்வாறு செய்வதால் முதற் கருவிப் பொருள்களை (capital goods) உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் பெரிதும் பாதிக்கப்படுகின்றன. இந்தத் தொழில்களோடு இணைந்துள்ள மக்களும் இன்னலுறுவர். முதற் கருவிப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழில்கட்கு நேர்ந்துள்ள கதியே நீடித்த நுகர்வுப் பொருள்களை (durable consumption goods) உற்பத்தி செய்யும் தொழில்கட்கும் நேரலாம். (கார், மற்றும் இல்லங்களில் பயன்படும் சில சாதனங்கள் ஆகியவையே நீடித்த நுகர்வுப் பொருள்களாகும்.) தங்களிடமுள்ள நீடித்த நுகர்வுப் பொருள்களை நிலைமை சீரடைந்த பின் புதுப்பிக்கலாம் என்று எண்ணி மக்கள் இவற்றை வாங்க முன் வரமாட்டார்கள். நாட்டில் தாண்டவமாடும் வேலையில்லாத் திண்டாட்டமும் வருமானங்களின் வீழ்ச்சியும் மக்கள் இவ்வாறு எண்ணுவதற்கான காரணங்களாகும். ஆனால் நிலைமை சீர்பட்டு விலைவாசிகள் உயர்ந்துகொண்டிருக்கும் காலங்களில், இலாபம் ஈட்டக்கூடிய வாய்ப்புகள் பெருகுகின்றன. முதற் கருவிப் பொருள்களை உற்பத்தி செய்துவரும் தொழிற்சாலைகளும் நீடித்த நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்துவரும் தொழிற்சாலைகளும் விறுவிறுப்புடன் உற்பத்தியைப் பெருக்க முனைவதில் ஈடுபடும். அதிகரித்துள்ள

உற்பத்தி குறைந்துவிடாமல் எஞ்ஞான்றும் இந்தத் தொழிலகங்களால் போற்றிப் பாதுகாக்க முடியுமேயானால், இவற்றிற்கு எவ்விதமான கேடும் விளையாது. ஆனால், கடந்த கால அனுபவம் வேறு ஒரு உண்மையை—கசப்பான உண்மையையே—நமக்குச் சுட்டிக் காட்டுகின்றது. ஒரு குறிப்பிட்ட எல்லையைத் தாண்டி விட்டால் பொருளாதார வீக்கம் (boom) நீடித்து நிற்க முடிவதில்லை; மந்தநிலை (Slump) அதைத் தொடர்கின்றது. மந்தநிலை தொடராவிட்டாலும் 'பின்னிறக்க'மாவது (recession) தோன்றுகின்றது.

எனவே, விலைவாசிகள் உயர்வும் வீழ்ச்சியும் பெரும் கேடுகட்கு நிலைக்களனாகத் திகழ்கின்றன. விலைவாசிகளின் உயர்வுக்கும் வீழ்ச்சிக்கும் பல காரணங்கள் உள்ளன. பண அளிப்பில் நேர்கின்ற மாற்றங்களும் ஒரு காரணமாகத் திகழ்கின்றன. எனவே, தற்கால உலகில் பண அளிப்பை ஒழுங்குபடுத்துவோர் யாவர், அன்னாரின் நடவடிக்கைகட்கு அடிப்படையாக அமைந்துள்ள கொள்கைகள் யாவை என்பவை குறித்து நாம் விளக்கங்கள் காண வேண்டுவது அவசியமாகிறது.

## 2. பண அளிப்புக்களைத் தீர்மானிக்கும் காரண கர்த்தர்கள்

பொருளாதார வளர்ச்சியில் முன்னணியில் நிற்கும் நாடுகளிலுள்ள பண அளிப்பில் பாங்கு டெபாசிட்டுகளே பெரும் பங்கு பெறுகின்றன. பாங்கு டெபாசிட்டுகள் சில சமயம் 'பாங்குப் பணம்' என்ற பெயரும் பெறுகின்றன. ஒரு தனிப்பட்ட நபருக்கோ அல்லது கம்பெனிக்கோ பாங்கு கொடுக்கவேண்டியிருக்கும் கடனைக் குறிப்பதே பாங்கு டெபாசிட் ஆகும். பாங்குக்கு அதன் வாடிக்கைக்காரர் சில உரிமைகளை வழங்குகின்றார். (இந்த உரிமைகள் யாவை என்பது குறித்து அடுத்துக் காண்போம்.) இதற்கு ஈடாக பாங்கு தன்னுடைய கணக்கில் அந்த வாடிக்கைக்காரரின் பெயரில் ஒரு குறிப்பிட்ட தொகையை வரவு வைக்கின்றது. இவ்வாறு வாடிக்கைக்காரருக்குப் பாங்கு டெபாசிட் கிடைக்கிறது. தான் பிறருக்குக் கொடுக்கவேண்டியிருக்கும் கடன்களை இந்தப் பாங்கு டெபாசிட்டைக் கொண்டு வாடிக்கைக்காரரால் தீர்த்துக்கொள்ள முடியும். தன் பெயரிலுள்ள பாங்கு டெபாசிட்டின் ஒரு பகுதியைத் தன்னுடைய கடன் ஈவோரின் பெயருக்கு மாற்றுவதன்மூலம் வாடிக்கைக்காரர் கடன்களைத் தீர்த்துக்கொள்ள முடியும். பெரிய செலுத்தினங்கள் (payments) யாவும் பெரும்பாலும் இவ்வாறு பாங்கு டெபாசிட்டின் உதவியா

லேயே செலுத்தப்படுகின்றன. தன்னுடைய பெயரில் பாங்கிலுள்ள பணத்தைக் கடனுளியானவர் கடன் ஈவோரின் பெயருக்கு மாற்றுவதற்குப் பயன்படும் சாதனமே செக் ஆகும். செக் நம் எல்லோருக்கும் பழக்கமான ஒரு சாதனமேயாகும். செக் மூலம் ஒருவர் இன்னொருவருக்குப் பணம் செலுத்தும்போது செக்கை வரைந்தவர் கணக்கிலிருந்து செக்கில் குறிப்பிடப்பட்டிருக்கும் தொகை குறைக்கப்படுகின்றது. அதாவது, இந்தத் தொகை எவ்வளவோ அந்த அளவுக்குச் செக் வரைந்தவருக்குப் பாங்கு கொடுக்கவேண்டியுள்ள கடன் குறைகின்றது. இந்தத் தொகை எவ்வளவோ அந்த அளவுக்கு செக் பெற்றவருக்குப் பாங்கு கடனுளி ஆகின்றது. அதாவது, பாங்கின்மீது தான் பெற்றிருக்கும் 'பாத்தியதைகளில்' (claims) ஒரு பகுதியைச் செக் வரைந்தவர் தன்னுடைய கடன் ஈவோர் (creditor) பெயருக்கு மாற்றிவிடுகிறார். இவ்வாறு, பாங்குகளின் கடன்களைப் (அதாவது பொது மக்களின் பெயரில் பாங்குகளிடம் உள்ள இருப்புகள்) பயன்படுத்தியே தங்களுடைய மொத்தப் பேரங்களில் பெரும் பகுதியை நாட்டிலுள்ள மக்கள் தீர்த்துக் கொள்கின்றனர்.

தன்னுடைய வாடிக்கைக்காரரின் பெயரில் தன்னுடைய ஏட்டில் (book) பாங்கு ஒரு குறிப்பிட்ட தொகையை வரவு வைக்கும்போது இந்தப் பேரம் (transaction) வெறும் ஏட்டுக் குறிப்பாகவே உள்ளது. தன்னிடம் வாடிக்கைக்காரர் கொடுத்த தொகைக்கு அவரிடம் பாங்கு கடன்பட்டிருப்பதையே இந்த ஏட்டுக் குறிப்பு உணர்த்துகின்றது. இதுவே சுத்தமான பாங்கு டெபாசிட் (pure bank deposit) ஆகும். தனக்குப் பாங்கானது கடன் தரவேண்டியதைக் குறிக்கும் வகையில் சான்றிதழ் ஒன்றினை வாடிக்கைக்காரர் சில சமயம் பாங்கிடமிருந்து எதிர்பார்க்கின்றார். இந்தச் சான்றிதழ் (பாங்கு டெபாசிட்டுகளைப் போலல்லாமல்) எளிதில் பிறரிடம் மாற்றக்கூடியதாக இருக்கவேண்டும் என்று வாடிக்கைக்காரர் விரும்புகிறார். அவ்வாறாயின், வாடிக்கைக்காரர் தன்னிடம் கொடுத்த தொகையைப் பாங்கு தன்னுடைய ஏட்டில் அவர் பெயருக்கு வரவு வைப்பதில்லை. தன்னுடைய ஏட்டில் ஒரு பக்கத்தில் அந்தத் தொகையைக் 'கொணர்பவரு'க்குக் (bearer) கொடுக்கும் வகையில் பாங்கு வரவு வைக்கின்றது. உடனே, பாங்கு அந்தப் பக்கத்தைக் கிழித்துத் தனது வாடிக்கைகாரரிடம் கொடுக்கின்றது. இந்த வாடிக்கைக்காரரே முதலாவது 'கொணர்பவர்' (bearer) ஆகிறார். தான் பிறருக்குக் கொடுக்கவேண்டிய கடனுக்கு ஈடாக உடனடியாக இந்தச் சான்றிதழை மற்றவர்களிடம் வாடிக்கைக்காரர் மாற்றிவிட முடியும். இந்த வாடிக்கைக்காரரிடமிருந்து வேறு ஒருவர் கைக்கு இந்தச் சான்றிதழ் மாறு

வதைத் தனது ஏடுகளில் பாங்கானது குறிக்க வேண்டிய அவசியமே இல்லை. இவ்வாறு ஒருவர் கையிலிருந்து இன்னொருவர் கைக்கு மாறியதும் இந்தச் சான்றிதழ் 'பாங்கு நோட்டு' என்ற பெயர் பெறுகின்றது. எனவே, பாங்கானது பிறருக்குக் கொடுக்க வேண்டிய கடனைக் குறிக்கும் வெளிப்படையான சான்றிதழே 'பாங்கு நோட்டு' ஆகும். தங்களுக்கிடையே தோன்றும் எல்லா வகைக் கடன் பேரங்களைத் தீர்க்கும் பொருட்டுப் பொதுமக்கள் இந்தச் சான்றிதழை ஒருவரிடமிருந்து இன்னொருவருக்கு மாற்ற முடியும். இந்தப் பாங்கு நோட்டு முறையால் பாங்குக்கும் வாடிக்கைக்காரருக்கும் சில நன்மைகளும் கிட்டுகின்றன; சில தீங்குகளும் விளைகின்றன. ஒருவர் கையினின்றும் பிறிதொருவர் கையை இந்தப் பாங்கு நோட்டு அடையும்போது, இந்தப் பேரத்தைப் பற்றிய எந்தவிதமான குறிப்பையும் தனது ஏடுகளில் பாங்கானது குறிக்கவேண்டிய அவசியமே இல்லை. பாங்கு நோட்டால் பாங்கர் அடையும் நன்மை இதுவே யாகும். வாடிக்கைக்காரருக்கும் இந்தப் பாங்கு நோட்டு அனுகூலமுள்ளதாகவே திகழ்கின்றது. தான் பிறருக்குப் பணம் கொடுக்கவேண்டிய சமயங்களில் ஒவ்வொரு சமயமும் தனக்குப் பாங்கில் கணக்கு இருக்கின்றது என்று அவர்கள் நம்பும் வகையில் வாடிக்கைக்காரர் சொல்லவேண்டிய அவசியம் ஏதும் இல்லை. செக் மூலம் பணம் செலுத்துவதும் வசதியானதுதான். ஆனால், செக் முறையில் ஒரு சிறு இடர்ப்பாடு உள்ளது. நாம் யாருக்குப் பணம் தரவேண்டுமோ, அவர் நம்முடைய பெயரில் பாங்கில் டெபாசிட்டுகள் இருக்கின்றன என்று உறுதியாக நம்பினாலொழிய நாம் கொடுக்கும் செக்கினை அவர் ஏற்றுக்கொள்ள மாட்டார். பொதுவாகக் கடன்களைத் தீர்ப்பதற்கு எல்லோராலும் பாங்கு டெபாசிட் தடையின்றி ஏற்றுக்கொள்ளப் படுகின்றது. தனிப்பட்ட செக்கைப் பொறுத்தவரையிலும் இந்தப் பொதுவான உண்மை அப்படியே பொருந்தும் என்று எண்ணிவிடலாகாது. அந்தக் தனிப்பட்ட செக்குக்கு ஈடாகப் பாங்கில் டெபாசிட் இருக்கின்றது என்று ஒருவர் நம்பினால்தான் அவர் தடையின்றி செக்கை ஏற்றுக்கொள்ள முன் வருவார்[1]. இதுகாறும் பாங்கு நோட்டு முறையால் பாங்கரும் வாடிக்கைக்காரர்களும் எவ்வாறு பயனடைகின்றனர் என்று கண்டோம். பாங்கு நோட்டு முறையால் பாங்கருக்குச் சில கேடுகளும் விளையலாம். தான்

[1] பாங்கு டெபாசிட்டுகளைச் செக்கினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதற்கு ம் மேலே கொடுத்துள்ள விளக்கமே போதுமானது என்று கருதுகிறோம். ாங்கு டெபாசிட்டுகள பணமே யாகும; ஆனால், செககுகள் பணமாகா. பணம் ன்பது பாங்கு டெபாசிட்டைத்தான் குறிக்குன்றதே யொழிய, செக்கைக் குறிக் ாது. செக ஒரு சட்டபூர்வமான சாதனமே யாகும். ஒருவர் பெயரிலிருந்து ன்னொருவர் பெயருககு டெபாசிட்டை மாற்றுவதறகுமட்டும் பயன்படும் ாதனம் செக் ஆகும்.

வெளியிடும் நோட்டுகளுக்குப் 'போலி' நோட்டுகள் தோன்றி விடாமல் மிக்க கவனத்துடன் பாங்கர் கண்காணித்து வரவேண்டியது அவசியமாகும். தன்னுடைய அலுவலகத்தில் பணி புரிந்து வரும் குமாஸ்தாக்களும் பொதுமக்களும் போலி நோட்டுகளைத் தயாரித்துவிடாமல் பாங்கர் கண்காணித்து வரவேண்டும். பாங்கில் வேலை பார்க்கும் குமாஸ்தா போலி நோட்டுகளைத் தயாரித்து விடாமல் தடுக்க, பாங்கானது குமாஸ்தாக்களின் நாணயத்தை நன்கு பரிசோதித்து அவர்களை வேலையில் அமர்த்தும். ஏனையோர் போலி நோட்டுகளைத் தயாரித்து விடாமல் பாங்கர் கவனிக்க வேண்டுவதே மிகவும் முக்கியமானதாகும். இதற்காகப் பாங்கர் சில முன்னேற்பாடுகளைச் செய்யவேண்டியுள்ளது. தாம் வெளியிடும் நோட்டுகள் ஒரு குறிப்பிட்ட தோற்றத்தை உடையனவாக இருக்குமாறு பாங்கர் செய்யவேண்டியிருக்கின்றது. இதற்கு ஏற்பு காகிதத்தைப் பாங்கர் தேர்ந்தெடுக்கவேண்டும். போலிகளைத் தடை செய்யவேண்டுமேயாயின், இதுபோன்ற பல முன்னேற்பாடுகளைப் பாங்கானது செய்யவேண்டியது அவசியமாகின்றது. பாங்கின் வாடிக்கைக்காரர்கட்கும் பாங்கு நோட்டு முறையால் சில தீமைகள் விளையலாம். பெரும்பாலும் பாங்கு நோட்டுகளில் குறிக்கப்பெறும் தொகைகள் முழு எண்களையுடைய மதிப்புக்களைக் குறிப்பனவாகவே உள்ளன. உதாரணமாக, 1 டாலர் அல்லது 1 பவுன் அல்லது 10 ஷில்லிங் என்பனபோன்ற முழு எண்களையுடைய மதிப்புகட்கே பாங்கு நோட்டுகள் வெளியிடப்படுகின்றன. வாடிக்கைக்காரர் பிறருக்குக் கொடுக்கவேண்டியிருக்கும் கடன் தொகையின் மதிப்பு எப்பொழுதும் முழு எண்களாகவே இருக்கும் என்று நாம் கொள்ள முடியாது. எனவே, பாங்கு நோட்டுகளை மட்டிலுமே பயன்படுத்தித் தம்முடைய கடன்களை வாடிக்கைக்காரர் தீர்த்துக்கொள்ளமுடியாமல் போக நேரலாம். மேலும் வாடிக்கைக்காரரின் செக் புத்தகம் அவருக்குமட்டிலுமே பயன்படக்கூடியதாகும். ஆனால், பாங்கு நோட்டு எல்லோருக்கும் பயன்படக்கூடிய தொன்றாகும். பாங்கு நோட்டுகளைப் பயன்படுத்திக் கடன்களைத் தீர்க்க எண்ணும் வாடிக்கைக்காரர் தம்முடன் பல பாங்கு நோட்டுகளை எடுத்துச் செல்லவேண்டியிருக்கும். பாங்கு நோட்டு எல்லோருக்கும் பயன்படக்கூடிய ஒரு சாதனமாகையால், திருடர்கள் இவற்றைத் திருட முனையலாம். ஆனால், செக்மூலம் கடனைத் தீர்ப்பதில் இவ்வாறான கேடுகள் விளைய வாய்ப்பில்லை. இம்முறை ஆபத்து இல்லாத முறையாகும். உதாரணமாக, ஒருவர் இன்னொருவருக்கு 3 பவுன் 10 ஷில்லிங் கடன் கொடுக்க வேண்டியுள்ளது என்று வைத்துக்கொள்வோம். இந்தக் கடனுளிக்குப் பாங்கு டெபாசிட்டுகள் உள்ளன என்று கடன் ஈவோர் நம்புகிறார் என்றும் வைத்துக்கொள்வோம். அவ்வாறாயின்,

கடனைத் தீர்க்க எண்ணும் கடனாளி, தன்னுடன் செக் புத்தகத்தை மட்டிலும் எடுத்துச் செல்வது போதுமானதாகும். கடனாளி செய்யவேண்டியதெல்லாம் ஒரு செக் பாரத்தைப் பூர்த்தி செய்து கொடுக்கவேண்டியதேயாகும். இவ்வாறன்றி, பாங்கு நோட்டுகளைப் பயன்படுத்திக் கடனாளி கடனைத் தீர்க்க விரும்புகிறார் என்று வைத்துக்கொண்டால், அவர் நான்கு தனித்தனியான பாங்கு நோட்டுகளைத் தம்முடன் எடுத்துச் செல்ல வேண்டும். (அதாவது, 1 பவுன் நோட்டுகள் மூன்றையும் 10 ஷில்லிங் நோட்டு ஒன்றையும் அவர் தம்முடன் எடுத்துச் செல்லவேண்டும்) திரும்பப் பெறும் வாய்ப்பு ஏதுமின்றி இவற்றை ஒரு வேளை கடனாளி தொலைத்து விட நேர்ந்தாலும் நேரலாம்.

நோட்டு வெளியிடும் உரிமையை ஒரே பாங்குக்கோ அன்றி ஒரு சில பாங்குகட்கோ மட்டிலும் அரசாங்கம் அளிக்கலாம். இதற்கு ஏற்ற முறையில் அரசாங்கம் சட்டங்கள் இயற்றலாம். இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில் அரசாங்கங்கள் கடைப்பிடித்து வரும் கொள்கைகள் நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றன. கடந்த காலத்தில் எந்தெந்த முறைகள் நாட்டில் கடைப்பிடிக்கப் பட்டனவோ அவற்றையொட்டியே பெரும்பாலும் அரசாங்கங்கள் தற்சமயம் கடைப்பிடித்துவரும் கொள்கைகளும் அமைந்துள்ளன. நாட்டிலுள்ள பண அளிப்பைக் கட்டுப்படுத்தவேண்டுவது அரசாங்கத்தின் பணியேயாகும் என்ற ஒரு பொதுவான கருத்துத் தற்சமயம் நிலவி வருகின்றது. எனவே, பாங்குகள் பெற்றிருந்த நோட்டு வெளியீட்டு உரிமைகள் படிப்படியாகக் குறைக்கப்பட்டுள்ளன. இங்கிலாந்தில் நோட்டு வெளியீட்டு உரிமை தற்சமயம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கு (Bank of England) மட்டிலுமே வழங்கப்பெற்றிருக்கின்றது. ஆனால், ஸ்காட்லாந்தில் குறிப்பிட்ட அளவுக்கு மட்டிலும் நோட்டுகளை வெளியிடும் உரிமைகள் வேறு சில பாங்குகட்கும் அளிக்கப்பட்டுள்ளன. நோட்டுகளில் சில வகைகளைச் சட்டச் செலாவணிகளாக (legal tender) மக்கள் கருத வேண்டுமென்று அரசாங்கம் ஆணையிட்டுள்ளது. கடன் ஈவோரிடமிருந்து தான் கடனாக வாங்கிய முழுத் தொகையையும் கடனாளி திருப்பிக் கொடுக்கும்பொழுது, தன்னிடம் கடனாளி தருகின்ற நோட்டுகளை ஏற்றுக்கொள்ளுவதைத் தவிர வேறு வழியில்லை என்று கடன் ஈவோர் கருதினால், அந்த நோட்டுகளை நாம் சட்டச் செலாவணிகள் என்று கூறலாம். இவ்வாறன்றி, கடனைத் தீர்க்கும் முகத்தான் சட்டச் செலாவணிகளல்லாத பணத்தைக் கடனாளியானவர் கடன் ஈவோரிடம் கொடுக்க முன் வந்தால், கடன் ஈவோர் பணத்தை ஏற்றுக்கொள்ள மறுக்கலாம். பாங்கு டெபாசிட்டுகள் எக்காலத்தும் சட்டச் செலாவணிகளாக இருந்ததில்லை. ஆனால்,

இங்கிலாந்து நாடு முழுவதும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நோட்டுகள் சட்டச் செலாவணிகளாகவே திகழ்கின்றன[1].

பாங்குகள் பணத்தை உற்பத்தி செய்கின்றன என்று மேலே கண்டோம். பாங்குகள் தவிர அரசாங்கமும் பணத்தை உற்பத்தி செய்கின்றது. பாங்குகள் நோட்டுகளை வெளியிடுவதைப் போலவே சில சமயங்களில் அரசாங்கமும் நோட்டுகளை வெளியிடுகின்றது. பாங்கு ஒன்று வெளியிட்ட நோட்டைத் தன்னிடம் வைத்திருக்கும் ஒருவர் அந்தப் பாங்கின்மீது 'பாத்தியதைகள்' உடையவராகத் திகழ்கின்றார். அரசாங்க நோட்டுகளை இவ்வாறு கூற முடியாது. அரசாங்கத்தின்மீது பிறருக்குள்ள பாத்தியதைகளை அரசாங்க நோட்டு குறிக்கவில்லை. தான் வெளியிடும் நோட்டுகளை மக்கள் சட்டச் செலாவணிகளாக ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று அரசாங்கம் ஆணையிடுகின்றது. இந்த நோட்டுகளை மக்களும் அவ்வாறே சட்டச் செலாவணிகளாக ஏற்றுக்கொள்கின்றனர். 1914-லிருந்து 1928 வரை இங்கிலாந்து நாட்டில் புழக்கத்திலிருந்த 1 பவுன் கஜானு நோட்டுகளும் 10 ஷில்லிங் கஜானு நோட்டுகளும் இந்த வகையைச் சேர்ந்த நோட்டுகளேயாகும். ஆனால், பொதுவாகக் காசுகளையே (Coins) அரசாங்கம் வெளியிடுகின்றது. இவ்வாறு, அர்சாங்கம் வெளியிடுகின்ற காசுகள் யாவும் சிறிய இனங்களைச் (denominations) சேர்ந்தவையேயாகும். இந்தக் காசுகளும் சட்டச் செலாவணிகளேயாகும். இருப்பினும், இவை வரையறையற்ற சட்டச் செலாவணிகள் (Unlimited legal tender) அல்ல. இவை வரையறை செய்யப்பெற்ற சட்டச் செலாவணி (Limited legal tender) களேயாகும். அதாவது, சிறிய தொகைகளுக்கான கடன்களைச் செலுத்துவதற்கு மட்டிலுமே காசுகள் சட்டச் செலாவணிகளாகப் பயன்படுகின்றன. மக்கள் சிறிய தொகைகளையும் சில்லறைத் தொகைகளையும் பிறரிடம் செலுத்தும்போது நோட்டுக்களுடன் காசுகளையும் பயன்படுத்துகின்றனர். சிறிய செலுத்தினங்கட்குப் பயன்படக்கூடிய 1 ஷில்லிங், 1 பென்னி, 3 பென்ஸ்கள், 25 சென்டைம்கள் (centimes), 10 சென்ட்டுகள் ஆகிய காசுகளின் வகைகளை இங்கிலாந்தில் அரசாங்கம் வெளியிடுகின்றது.

இவ்வாறு, நாட்டிலுள்ள பணத்தின் அளிப்பிற்கு இருவர் நேரடியான காரண கர்த்தர்களாகின்றனர். அதாவது, பாங்குகள் ஒரு வகையிலும் அரசாங்கம் மற்றொரு வகையிலும் காரண கர்த்தர்களாகத் திகழ்கின்றனர். சாதாரணமான சூழ்நிலைகளே நாட்டில்

[1] இங்கிலாந்திலும் வேல்ஸிலும் மட்டுமே 5 பவுன் நோட்டுக்கள் சட்டச் செலாவணிகளாகும்.

நிலவக்கூடிய காலங்களில் பண அளிப்பானது பாங்குகளையும் அரசாங்கத்தையும் மட்டிலுமே சார்ந்திருக்கின்றது. ஆனல் அசாதாரணமான சூழ்நிலைகள் நாட்டில் உருவாகக்கூடிய காலங்களில் இவர்கள் இருவரைத் தவிர, வேறு பலரும் பணத்தை உற்பத்தி செய்ய முடிகின்றது.[1] 1923 ஆம் ஆண்டு ஜெர்மனியில் பண வீக்கம் (inflation) தலை விரித்தாடிய காலத்தில், அங்கு உருவாகியிருந்த சூழ்நிலைகளைப் போன்ற சூழ்நிலைகளையே நாம் இங்கு அசாதாரணமான சூழ்நிலைகள் என்று குறிப்பிட்டுள்ளோம். பாங்குகளும் அரசாங்கமும் பண அளிப்பை ஏன் கட்டுப்படுத்துகின்றன என்று நம்மால் அறிய முடியுமேயானல், நாட்டிலுள்ள பண அளிப்பு எவ்வாறு கட்டுப்படுத்தப்படுகின்றது என்பதை நாம் அறிய முடியும். பணக் கட்டுப்பாடு எவ்வாறு நேருகின்றது, ஏன் நேருகின்றது என்பது குறித்துப் போகப் போக இந்தப் புத்தகத்தில் விளக்கங்கள் தரப்படும். இந்த அத்தியாயத்தில் சில பொதுவான விஷயங்களை ஆராய்வது மட்டுமே எமது நோக்கமாகும்.

## 3. பணம் உற்பத்தி செய்யப்படும் முறை

பணம் எவ்வாறு உற்பத்தி செய்யப்படுகின்றது என்பதை ஆராயும் முன் ஒரு விஷயத்தை நாம் அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். பண உற்பத்தியானது பாங்குகளையும் அரசாங்கத்தையும் சார்ந்த ஒன்றேயாகும் என்று மேலே கண்டோம். மொத்தப் பண அளிப்பில் பாங்குகளின் பங்கு யாது, அரசாங்கத்தின் பங்கு யாது என்பவற்றை நாம் அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். இங்கிலாந்து நாட்டிற்கான புள்ளி விவரங்களைக் கீழே தந்துள்ளோம். கீழே தரப்பட்டுள்ள புள்ளி விவரங்கள் 1959 ஆம் ஆண்டு மே மாதத்திற்கான புள்ளி விவரங்களாகும். இங்குத் தரப்பட்டுள்ள புள்ளி விவரங்கள் துல்லியமானவையல்ல; இவை தோராயமானவையே யாகும்.

[1] பணத்தின் தன்மையையொட்டி எழக்கூடிய ஒரு விஷயத்தை மேலே நாம் குறிக்கவில்லை. அது வருமாறு: எல்லோராலும் தடையின்றி ஏற்றுக்கொள்ளப்படும் ஒரு சாதனமே பணமாகும் என்று நாம் ஏற்கெனவே கூறியுள்ளோம். மக்களின் பழக்க வழக்கங்களில் மாற்றங்கள் நேர்ந்து, சில நீர்மைத் தன்மை சொத்துகளையும், 'எல்லோராலும் தடையின்றி ஏற்றுக்கொள்ளக்கூடியவைகளாக' மக்கள் கருதக்கூடிய ஒரு சூழ்நிலை உருவாகலாம். இவ்வாறு மக்களின் பழக்க வழக்கங்களில் நேரக்கூடிய மாற்றங்கள், இவற்றின் விளைவாகப் பல பொருள்களும் பணமாகக் கருதப்படக்கூடிய நிலை, மற்றும், நிதி நிறுவனங்களின் நடவடிக்கைகளில் பொதுமக்கள் காட்டி வந்த ஆர்வத்தில் நேரக்கூடிய மாற்றங்கள் ஆகியவை யாவும் நெடுங்காலத்திலேயே உருவாகக் கூடியவை. சில சமயங்களில் மட்டுமே குறுங்காலத்திலும் இவை முக்கியத்துவம் பெறுகின்றன.

| | £ மில்லியன்கள் |
|---|---|
| பாங்கு டெபாசிட்டுகள் [இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள பொதுத் துறைகளின் டெபாசிட்டுகளும் (Public Deposits) ஏனைய கணக்குகளும்] | 6,372 |
| புழக்கத்திலுள்ள பாங்கு நோட்டுகள் | 2,076 |
| காசு ('அரசாங்கப் பணம்')* ... | 184 |
| மொத்தம் | 8,632 |

முழு எண்களையே நாம் மேலே கொடுத்துள்ளோம். இருப்பினும், இவை அறிவுறுத்தும் ஓர் அரிய உண்மையை வாசகர்கள் உணர்ந்திருப்பர் என்றே நாம் எண்ணுகிறோம். நாட்டிலுள்ள மொத்தப் பண அளிப்பில் பாங்குப் பணமே பெரும் பங்கு பெறுகின்றது. அமெரிக்காவிலும் மொத்தப் பண அளிப்பில் பாங்குப் பணம் பெரும் பங்கு பெறுகின்றது. பெரும்பாலான (பிரிட்டன் நீங்கலாக உள்ள) ஐரோப்பிய நாடுகளைப் பொறுத்தவரையிலுங் கூட இது உண்மையாகும். எனினும் இந்த ஐரோப்பிய நாடுகளில் பாங்கு டெபாசிட்டுகளைவிடப் பாங்கு நோட்டுக்களே அதிகமாக உள்ளன.

வாணிபப் பாங்குகள் எவ்வாறு பணத்தை உற்பத்தி செய்கின்றன என்பதை மட்டும் இங்குக் காண்போம். பாங்குகள் பொதுமக்களுக்குக் கடனாளிகளாகத் திகழுகின்றன. பொதுமக்களிடமிருந்து பாங்குகள் பெற்றுக்கொண்ட தொகைகளுக்குக் கடனாளிகளாகத் திகழ்கின்றன. தாமே முன் வந்து பொதுமக்களிடம் பாங்குகள் கடன்படுகின்றன. பொதுமக்களிடம் தாங்கள் கடன்பட்டிருப்பதைக் குறிக்கும் வகையில் தங்களுடைய ஏடுகளில் பொதுமக்களின் பெயரில் இந்தத் தொகைகளைப் பாங்குகள் வரவு வைக்கின்றன. இவ்வாறு, பாங்குகள் கடன்பட்டுள்ள தொகை பலலாயிரக் கணக்கான மில்லியன்கட்கும் (ஒரு மில்லியன் = பத்து இலட்சம்) மேலாகவே திகழுகின்றன. பாங்கு இவ்வாறு பொதுமக்களிடம் பெருந் தொகைக்குக் கடன்படுவானேன் என்ற வினா எழுகின்றது. இதற்கு இனி விடை காண முயலுவோம். இலாபங்களை ஈட்டுவதே பாங்குகளின் தலையாய நோக்கமாகும். பாங்குகள் தங்களிடம் கடன்படுமுன் தங்களிடமுள்ள சில 'பாத்தியதைகளை' (claims) பொதுமக்கள் பாங்குகளிடம் கொடுக்கவேண்டி

* வாணிபப் பாங்குகளிடமுள்ள நோட்டுக்களும் காசுகளும் இவற்றுள் அடங்கும்.

யுள்ளது. பாங்குகள் பொதுமக்கட்குத் தரவேண்டிய கடன்களின் மதிப்பும், பொதுமக்கள் பாங்குகளிடம் கொடுத்துள்ள பாத்தியதைகளின் மதிப்பும் சமமாகவே அமையும். மேலும், பொதுமக்கள் தங்களிடம் கொடுத்துள்ள பாத்தியதைகளினின்றும் பாங்குகளுக்கு வட்டி கிடைக்கின்றது. இவ்வாறு, கிடைக்கக்கூடிய வட்டிகளின் மூலமே பாங்குகளுக்கு வருமானங்கள் கிடைக்கின்றன. பாங்கு ஒன்று வெற்றிகரமாக நிர்வகிக்கப்பட்டு வரும் பட்சத்தில் அதனுடைய சொத்துகளும் பொறுப்புகளும் எப்பொழுதும் சமமாகவே அமையும். பொதுமக்கட்குப் பாங்குகள் கொடுக்கவேண்டிய கடன்களைக் குறிப்பனவே பாங்கு டெபாசிட்டுகளாகும். பாங்குகளிடம் பொதுமக்கள் கொடுத்துள்ள பாத்தியதைகள் சொத்துகளேயாகும் (assets). எனவே, பாங்கு டெபாசிட்டுகளுக்கு ஈடாக எப்பொழுதும் பாங்குகளிடம் சொத்துகள் உள்ளன. பாங்குகளும் பொதுமக்களும் தங்களுக்குள் பாத்தியதைகளைப் பரிவர்த்தனை (exchange) செய்துகொள்வதையொட்டியே பாங்கு டெபாசிட்டுகள் உற்பத்தி செய்யப்படுகின்றன. பொதுமக்கள் பாங்குகளிடம் ஒரு வகையான பாத்தியதைகளைக் கொடுக்கின்றனர். இவற்றிற்கு ஈடாகத் தங்களுடைய டெபாசிட்டுகளைப் பாங்குகள் பொதுமக்களிடம் கொடுக்கின்றன. பொதுமக்கள் பாங்குகளிடம் கொடுக்கும் பாத்தியதைகள் சட்டச் செலாவணிகளாக இருக்கலாம், அல்லது அரசாங்கப் பத்திரங்களாக இருக்கலாம் அல்லது பொதுமக்களின் உறுதிமொழிகளாகக்கூட இருக்கலாம். பாங்குகளின்மேல் தாங்கள் கொண்டிருக்கும் பாத்தியதைகளைப் பொதுமக்கள் பணமாகப் பயன்படுத்த முடியும். எனவே, இவ்வாறு பாங்குகளும் பொதுமக்களும் தங்களுக்குள் பாத்தியதைகளைப் பரிமாறிக் கொள்வதானது பொருளாதார முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாக விளங்குகின்றது. பாங்குகளும் பொதுமக்களும் தங்களுக்கிடையே பாத்தியதைகளைப் பரிமாறிக்கொள்ளும்போது பாங்கு கடனாளியாகின்றது. இந்தப் பரிவர்த்தனைக்கு முன் இவ்வாறான கடன் இவர்கட்கிடையே கிடையாது. பரிவர்த்தனையையொட்டியே இந்தக் கடன் உருவாகியுள்ளது. பாங்கு டெபாசிட் பணமேயாகும்; ஆனால், இந்தக் கடன் பணமாகாது. பாங்கு டெபாசிட்டுகள் பணமாகத் திகழ்வதால் இந்தப் பரிவர்த்தனையின் விளைவாக நாட்டிலுள்ள பணத்தின் மொத்த அளிப்பு அதிகமாகின்றது [1]

[1] இதற்கு ஒரு விலக்கு உள்ளது. வாடிக்கைக்காரர் பாங்கிடம் சட்டச் செலாவணிகளைக் கொடுத்து அவற்றிற்கு ஈடாக டெபாசிட்டுகள் பெறும்போது பணத்தின் மொத்த அளிப்பில மாற்றம் எதுவுமே நேராது. ஏனெனில், வாடிக்கைக்காரர் தம்மிடமிருந்த ஒருவகையான பணத்தை (சட்டச் செலாவணிகளை) வேறொருவகையைச் சேர்ந்த பணமாகவே (பாங்கு டெபாசிட்டுகள்) மாற்றியுள்ளார்.

அதிகப்பற்றுக் கடன்கள், சாதாரணக் கடன்கள், கழிவு செய்யப்பட்ட உண்டியல்கள், முதலீடுகள், மேலும் ரொக்கம் ஆகியவையே வாணிபப் பாங்கிடம் உள்ள தரமான சொத்துகளாகும்[1].

பாங்குகள் ஏற்பாடு செய்து வருகின்ற அதிகப்பற்றுக் கடன்களைப்பற்றி நாம் எல்லோரும் நன்கு அறிவோம். வாடிக்கைக்காரர் ஒருவர் பாங்கிடம் இருப்பாக வைத்திருக்கும் பணத்தைவிட அதிக அளவு பணத்தைப் பயன்படுத்துவதற்கான ஏற்பாடே அதிகப் பற்றுக் கடன் ஏற்பாடாகும். வாடிக்கைக்காரரின் உறுதிமொழிக்கு ஈடாகப் பாங்கர் இவற்றை ஏற்பாடு செய்யலாம். ஆனால், பெரும்பாலும் சில செலாவணிப் பத்திரங்களையும் (negotiable security) இவற்றிற்கு ஈடாகப் பாங்கர் எதிர்பார்க்கின்றார். ஒரு வேளை வாடிக்கைக்காரர் கடனைத் திருப்பித் தரத் தவறிவிட்டால், இந்தப் பத்திரங்களை விற்றுத் தனக்குச் சேரவேண்டிய பணத்தைப் பாங்கு பெற முடியும். தனது வாடிக்கைக்காரர் எவ்வளவு பணத்தை அதிகப்பற்றாகப் பயன்படுத்தலாம் என்று பாங்கர் வரையறை செய்கின்றார். (வாடிக்கைக்காரரின் தேவைகள் வாடிக்கைக்காரருக்கு எதிர் காலத்தில் கிடைக்கக்கூடிய இலாபங்கள் ஆகியவற்றை ஆராய்ந்து, பாங்கர் அதிகப்பற்றுக் கடனை வரையறுக்கின்றார்.) பாங்கு டெபாசிட்டுகளைப் பயன்படுத்திப் பொருள்களையும் சேவைகளையும் விலைக்கு வாங்க முடிவதுபோலவே அதிகப்பற்றுக் கடனையும் பயன்படுத்திப் பொருள்களையும் சேவைகளையும் விலைக்கு வாங்க முடியும். தனக்கு வழங்கப்பட்டிருக்கும் அதிகப்பற்றுக் கடனை வாடிக்கைக்காரர் இவ்வாறு பயன்படுத்தும்போது நாட்டிலுள்ள பணத்தின் அளிப்பு உயர்கின்றது. தாம் வாங்கும் பொருள்கட்கு ஈடாகத் தம்முடைய பாங்கின்மேல் வரையப்பட்ட செக்குகளை வாடிக்கைகாரர் கொடுப்பார். எனவே, பொருள்களை விற்றவர்களுக்குப் பாங்கின்மேல் பாத்தியதைகள் ஏற்படுகின்றன. இந்தப் பாத்தியதைகள் பணமேயாகும். ஏனெனில், கடன்களைத் தீர்ப்பதற்குத் தடையின்றி இந்தப் பாத்தியதைகளை மக்கள் ஏற்றுக்கொள்கின்றனர். அதிகப்பற்றுக் கடன் வசதிகளைப் பாங்கிடமிருந்து பெற விரும்பும் வாடிக்கைக்காரர் தமக்குக் குறுகிய காலத்தில், உதாரணமாக, மூன்று மாத காலங்களில், வேறு வகையான பணங்கள் கிடைக்கும் என்ற நம்பிக்கையிலேயே பாங்கை அணுகி அதிகப்பற்றுக்கு ஏற்பாடு செய்யுமாறு கேட்டுக்கொள்கிறார். மூன்று

1. இந்த அத்தியாயத்தில் பாங்குகளிடமுள்ள சொத்துகளை அறிமுகம் செய்கின்றோம். மற்றும் இந்தச் சொத்துக்களின் பாங்குகள் நடத்தும் பேரங்கள் நாட்டிலுள்ள பண அளிப்பை எவ்வாறு மாற்றுகின்றன என்பவை குறித்தும் விளக்கியுள்ளோம். மேலும், விரிவான விளக்கங்களை அடுத்து வரும் அத்தியாயங்களில், குறிப்பாக 2; 3, 8, மற்றும் 9 ஆகிய அத்தியாயங்களில் காணலாம்.

மாதங்களில் இவருக்குச் சட்டச் செலாவணிகள் கிடைக்கலாம் அல்லது ஏனைய பாங்குகளின் மீதான பாத்தியதைகள் கிடைக்கலாம். இவ்வாறு, தமக்குக் கிடைக்கக்கூடிய பண வகைகள் தாம் பெற விரும்பும் அதிகப்பற்றுக் கடனுக்குச் சமமாக இருக்கும் என்றும் வாடிக்கைக்காரர் நம்புகிருர். தாம் எதிர்பார்த்ததுபோலவே தமக்கு வேறு வகையான பணங்கள் கிடைத்த உடனேயே அவற்றை வாடிக்கைக்காரர் பாங்கிடம் கொடுத்துத் தம்முடைய கடனைத் தீர்க்கின்ருர். தாம் பயன்படுத்திய கடன் தொகைக்கு வாடிக்கைக்காரர் வட்டியும் கொடுக்கின்ருர். இவ்வாறு, வாடிக்கைக்காரர் கொடுக்கும் வட்டியே பாங்கருக்கு இலாபமாக அமைகின்றது. தன்னுடைய பாத்தியதைகளையும் பிறருக்குப் பாங்கு கொடுக்கின்றது; பிறருடைய பாத்தியதைகளைப் பாங்கு பெறுகின்றது, பிறருக்குக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதையொட்டிப் பாங்கு தன்னுடைய பாத்தியதைகளைப் பிறருக்குக் கொடுக்கின்றது. டெபாசிட் பேரங்களையொட்டிப் பிறருடைய பாத்தியதைகளைப் பாங்கு பெறுகின்றது. இவ்வாறு, பாங்கு கொடுக்கும் பாத்தியதைகளும், பாங்கு பெறும் பாத்தியதைகளும் சமமாகவே அமையும். தன்னிடமிருந்து கடன் வசதிகள் பெறுகின்றவர்களின் மேல் பாங்கு விதிக்கக்கூடிய வட்டி வீதங்கள் ஏனைய கட்டணங்கள் ஆகியவற்றினின்றே பாங்குக்கு வருவாய் கிடைக்கின்றது.

இதுகாறும் அதிகப்பற்றுக் கடன் முறையைப்பற்றிய விளக்கம் கண்டோம். சாதாரணக் கடன்களையும் தங்களுடைய வாடிக்கைக்காரர்கட்குப் பாங்குகள் ஏற்பாடு செய்கின்றன. பாங்குகள் சாதாரணக் கடன்களை ஏற்பாடு செய்வதையொட்டிப் பண அளிப்பு எவ்வாறு பாதிக்கப்படுகின்றது என்பதை நாம் மிகவும் எளிதில் கண்டுகொள்ளலாம். பாங்கிடம் கடன் வாங்குகின்ற வாடிக்கைக்காரர் தம்முடைய உறுதி மொழிகளைப் பாங்கிடம் பணத்திற்கு ஈடாகக் கொடுக்கலாம். உறுதி மொழிகளோடு துணை ஈடுகளையும் (collateral security) வாடிக்கைக்காரர் பாங்கிடம் கொடுக்கவேண்டியிருக்கலாம். உறுதி மொழிகளையும் துணை ஈடுகளையும் பெற்ற பின் உடனடியாக அவருடைய பெயரில் கடன் தொகையைப் பாங்கு தன்னுடைய ஏட்டில் வரவு வைக்கின்றது. கடன்தொகை எவ்வளவோ அந்த அளவுக்குப் பாங்கின் டெபாசிட்டுகளும் அதிகமாகின்றன. பாங்கு டெபாசிட்டுகள் பணமேயாகும். எனவே, பாங்கின் டெபாசிட்டுகள் எவ்வளவு அதிகமாகியுள்ளனவோ அந்த அளவுக்கு நாட்டிலுள்ள பண அளிப்பும் அதிகமாகின்றது. பாங்கு வாடிக்கைக்காரருக்குக் கொடுத்திருக்கும் கடன் பாங்கின் ஒரு சொத்தினமேயாகும். எனவே, இந்தக் கடன் தொகையின் மதிப்பு எவ்வளவோ அந்த அளவுக்குப் பாங்கிடமுள்ள சொத்துக்

களின் மதிப்பும் அதிகரிக்கும். அதாவது பாங்கின் பொறுப்புகள் எவ்வளவு உயர்ந்துள்ளனவோ அதே அளவுக்குப் பாங்கின் சொத்துகளும் அதிகமாகின்றன. வாடிக்கைக்காரருக்குப் பாங்கு கடனாகக் கொடுத்த தொகை 1,000 பவுன்கள் என்றும், இந்தக் கடன் பேரம் ஒன்றே பாங்கின் நடவடிக்கையாகும் என்றும் நாம் வைத்துக் கொண்டால், பாங்கின் இருப்பு நிலைக் குறிப்பு (balance sheet) கீழ்க்கண்டவாறு அமையும் :

| பொறுப்புகள் | £ | சொத்துகள் | £ |
|---|---|---|---|
| டெபாசிட்டுகள் (அதாவது வாடிக்கைக்காரர்களின் இருப்புகள்) | 1,000 | வாடிக்கைக்காரர்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள கடன்கள் | 1,000 |

வாடிக்கைக்காரருக்குத் தான் ஏற்பாடு செய்துள்ள கடனுக்குப் பாங்கு வட்டி விதிக்கும். இந்த வட்டித் தொகை எவ்வளவோ அந்த அளவுக்குப் பாங்கின் மொத்த வருவாய் (gross income) அதிகமாகும். வாடிக்கைக்காரர்கள் பாங்கில் வைத்திருக்கும் டெபாசிட்டுகளுக்குப் பாங்கு ஒரு குறிப்பிட்ட வட்டி வீதம் கொடுக்கவேண்டியுள்ளது. டெபாசிட்டு வீதம் கடன் வீதத்தை விடக் குறைவாகவே இருக்கும். மேலும், நிர்வாகச் செலவுகளும் பாங்குக்கு ஏற்படுகின்றன. இந்தச் செலவினங்கள் போக, எஞ்சியுள்ள வருவாயே பாங்குக்குக் கிடைக்கக் கூடிய நிகர இலாபமாகும் (net profit).

தம்முடைய பெயரில் பாங்கிலுள்ள 1,000 பவுன்கட்கும் வாடிக்கைக்காரர் வேறு சிலருக்குச் செக்குகள் கொடுக்கின்றார் என்று வைத்துக்கொள்வோம். இதன் பிறகு வாடிக்கைக்காரருக்குப் பாங்கர் இனியும் பொறுப்பாளி (1,000 பவுன் பணத்திற்கு) அல்ல. செக்குகளை யார் யார் வைத்திருக்கின்றனரோ அவர்களுக்கே பாங்கர் பொறுப்பாளி ஆகின்றார். அதாவது, செக்குகளை வைத்திருப்போர் இப்பொழுது பாங்கின்மீது பாத்தியதைகள் உடையவராகத் திகழ்கின்றனர். தங்களிடமுள்ள செக்குகளை இவர்கள் எவ்வாறு பயன்படுத்த விரும்புகின்றார்களோ அதையொட்டியே அடுத்து நிகழக்கூடியவை அமையும்.

பாங்கிடமிருந்து கடன்பெற விரும்பாத ஒரு வியாபாரி உண்டியல் (bill of exchange) முறையைக் கையாண்டு, தமக்குத் தேவைப்படும் பணத்தை ஏற்பாடு செய்துகொள்ள முடியும். கடந்த காலத்தில் வியாபாரிகள் உண்டியல் முறையையே பெரிதும் கடைப்பிடித்தனர். ஆனால், தற்காலத்தில் உண்டியல் பேரங்கள் மிகவும் குறைந்துள்ளன. அயல் நாட்டு வாணிபத்தில் ஈடுபட்டிருக்கும் ஒரு சிலரே தற்சமயம் உண்டியல் முறையை இன்னும் பயன்படுத்தி

வருகின்றனர். எதிர் காலத்தில் ஒரு குறிப்பிட்ட தேதியில் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்துவது குறித்த உறுதிமொழியைத் தாங்கியுள்ள ஒரு பத்திரமே உண்டியலாகும். பெரும்பாலும் ஏதாவது புகழ் வாய்ந்த நிதி அகம் ஒன்று உண்டியலில் குறிக்கப் பெற்றிருக்கும் தொகைக்கு உத்தரவாதம் கொடுத்திருக்கும்.[1] உபரிப் பணம் வைத்திருக்கும் நபர் ஒருவர் உண்டியலைக் 'கழிவு' (discount) செய்ய முன் வரலாம். அதாவது, உண்டியலின் மதிப்பிற்கு ஈடாகத் தற்சமயம் இவர் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்க முன்வரலாம். உண்டியலின் உண்மையான மதிப்பை விட இந்தத் தொகை குறைவாகவே இருக்கும். பாங்குகளும் உண்டியல்களைக் கழிவு செய்கின்றன. பாங்கு ஒன்று உண்டியலைக் கழிவு செய்யும்போது அதற்கு ஒரு சொத்து (asset) கிடைக்கின்றது. உண்டியலின் தற்போதைய மதிப்பிற்குச் சமமாகப் பாங்கு தனது டெபாசிட்டுகளைக் கொடுக்கின்றது. அதாவது உண்டியலை விற்ற வருக்குப் பாங்கு கடனாளி ஆகின்றது. இவ்வாறு, பாங்கின் சொத்து கள் எவ்வளவு அதிகமாகின்றனவோ அதே அளவுக்குப் பாங்கின் பொறுப்புகளும் அதிகமாகின்றன. எனவே, பாங்கின் இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகளும் சொத்துகளும் ஒன்றிற்கொன்று இப்பொழுதும் சமமாகவே அமைந்துள்ளன. ஆனால், பாங்கின் மொத்த வருவாய் அதிகரித்துள்ளது. உண்டியலின் உண்மை யான மதிப்பைவிடக் குறைவான தொகை ஒன்றினைக் கொடுத்தே தற்சமயம் பாங்கு உண்டியலை விலைக்கு வாங்கியுள்ளது. இதுவே அதன் மொத்த வருவாய் அதிகரித்துள்ளதற்கான காரணமாகும் உண்டியலின் உண்மையான மதிப்பிற்கும் தற்போதைய மதிப்பிற் கும் இடையே உள்ள வேறுபாடு 'கழிவு' (discount) ஆகும்.

அரசாங்கப் பத்திரங்களைப் பாங்கு விலைக்கு வாங்கும்போதும், அது பிறருக்குக் கொடுக்கவேண்டிய கடன்கள் அதிகமாகின்றன. தான் விலைக்கு வாங்கும் பத்திரங்கட்கு ஈடாகத் தன்மேல் தானே வரைந்துள்ள செக் ஒன்றினைப் பாங்கு பத்திர விற்பனையாளரிடம் கொடுக்கின்றது.[2] அதாவது பத்திரம் என்ற ஒரு சொத்தினம்

[1] உண்டியல்கள் குறித்த விளக்கமான உரையை அத்தியாயம் மூன்றில் காணலாம்.

[2] தான் மையப் பாங்கில் இருப்பாக வைத்திருக்கும் டெபாசிட்டுகளின்மேல் பாங்கு செக் கொடுக்கலாம். இதனால் நேரக்கூடிய விளைவுகளும் நாம் மேலே குறித்துள்ளவைபோலவே அமையும். ஏனெனில், செக்கைப் பெறுபவர் இந்தப் பாங்கின்மீதான தனது பாத்தியதையைத் தன்னுடைய பாங்கின்மீதான பாத்தியதையாக மாற்ற முயலுவார். அதாவது இந்தச் செக்கை அந்த நபர் தம்முடைய பாங்கிடம் செலுத்திவிடுவார். எனவே, செக்கின் மதிப்பு எவ்வளவோ அந்த அளவுக்குப் பாங்குகளின்மீதான பொதுமக்களின் பாத்தியதைகள் அதிகமாகின்றன. தங்கட்கிடையே நேரக்கூடிய கடன் பேரங்களைப் பாங்குகள் எவ்வாறு தீர்த்துக்கொள்கின்றன என்பது குறித்த விளக்கத்தை அடுத்துவரும் அத்தியாயங்களில் காண்போம்.

பாங்குக் கிடைக்கின்றது; அதற்கு ஈடாகத் தனது பொறுப்புகளாகிய டெபாசிட்டுகளைப் பாங்கு கொடுக்கின்றது. எனவே, பாங்கினுடைய இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகளும் சொத்துகளும் மாற்றமுறுகின்றன. பாங்கின் இருப்புநிலைக் குறிப்பு வருமாறு.

| பொறுப்புகள் | £ | சொத்துகள் | £ |
|---|---|---|---|
| டெபாசிட்டுகள் (அதாவது தன்னுடைய வாடிக்கைக்காரர்களுக்குப் பாங்கு கொடுக்கவேண்டியுள்ள கடன்கள்) | 1,000 | முதலீடுகள் (அரசாங்கப் பத்திரங்கள்) | 1.000 |

பாங்கானது தன்னுடைய அலுவலகங்கட்காக நிலங்களோ அன்றி கட்டடங்களோ வாங்கும்போதும் மேலே குறித்துள்ளது போலவே பாங்கின் பொறுப்புகளிலும் சொத்துக்களிலும் மாற்றங்கள் நேரும்.

பிறிதோர் பாங்கின்மீதான பாத்தியதை ஒன்றினை (பிறிதோர் பாங்கின்மீது வரையப்பட்டிருக்கும் செக் ஒன்றினை) தன்னிடம் கொடுக்கும் நபருக்கும் பாங்கு கடன்படுகின்றது. அதாவது இந்த நபருக்குப் பாங்கானது தனது டெபாசிட்டுகளை அளிக்கின்றது; எடுத்துக்காட்டு ஒன்று காண்போம். ஸ்மித் என்பார் பார்க்லேஸ் (Barclays) பாங்கில் கணக்கு வைத்திருக்கின்றார் என்றும், ஜோன்ஸ் என்பார் மிட்லண்ட் (Midland) பாங்கில் கணக்கு வைத்திருக்கின்றார் என்றும் வைத்துக்கொள்வோம். ஸ்மித் தன்னுடைய பாங்கின்மேல் ஒரு செக் வரைந்து அதை ஜோன்சிடம் கொடுக்க, ஜோன்ஸ் அந்தச் செக்கைத் தமது பாங்கிடம் கொடுத்துவிடுகின்றார் என்றும் வைத்துக்கொள்வோம். இந்த நிலையில் மொத்த டெபாசிட்டுகளில் உயர்வு ஏதும் நேர்ந்துவிடவில்லை. ஒரு பாங்கின் டெபாசிட்டுகள் குறைகின்றன; பிறிதோர் பாங்கின் டெபாசிட்டுகள் அதிகரிக்கின்றன. அதாவது தனது வாடிக்கைக்காரர்கட்கு ஒரு பாங்கு கொடுக்கவேண்டியுள்ள கடன்கள் குறைகின்றன; தனது வாடிக்கைக்காரர்கட்குப் பிறிதோர் பாங்கு கொடுக்கவேண்டியுள்ள கடன்கள் அதிகரிக்கின்றன. மாற்றங்கள் ஏதும் நேர்வதற்கு முன் இந்த இரண்டு பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்புகளும் கீழ்க்கண்டவாறு அமைந்திருந்தன என்று வைத்துக் கொள்வோம்.

மிட்லண்ட் பாங்கு

| பொறுப்புகள் | £ | சொத்துக்கள் | £ |
|---|---|---|---|
| டெபாசிட்டுகள் (ஜோன்ஸினுடையவை) | 1,000 | கழிவு செய்யப்பட்ட உண்டியல்களும் முதலீடுகளும் | 1,000 |

மேலே நாம் குறித்துள்ள நிலை உடனடியாக நேரக்கூடிய விளைவு களையே குறிக்கின்றது. இறுதியில், இரண்டு பாங்குகளினுடைய இருப்புநிலைக் குறிப்புகளும் மேலே குறித்துள்ளவை போன்று அமைந்திருக்காது. ஏனெனில், தமக்கிடையே தற்சமயம் நேர்ந் துள்ள கடன் பேரத்தை இரண்டு பாங்குகளும் தீர்த்துக் கொள்ளவே எண்ணும். இதற்காகப் பார்க்லேஸ் பாங்கு தன்னிடமுள்ள சொத்து கள் சிலவற்றை மிட்லண்டிடம் மாற்றவேண்டியிருக்கும். இதன் விளைவாகப் பார்க்லேஸ் பாங்கின் சொத்துகளில் 500 பவுன் மதிப்புள் ளவை குறையும்; ஆனால், அதே சமயம் மிட்லண்ட் பாங்கின் சொத் துகளின் மதிப்பு முன்பு இருந்ததைவிட 500 பவுன் அதிகமாகும். பார்க்லேஸ் தன்னிடமுள்ள சொத்துகளில் எவ்வெவ்வற்றை மிட் லண்டிற்கு மாற்றும் என்பது குறித்த விளக்கத்தை அடுத்து வரும் அத்தியாயங்களில் காண்போம். எனினும், ஓர் உண்மை நமக்குத் தெற்றென விளங்குகிறது. நாட்டிலுள்ள பண அளிப்பு அதிக மாகவே இல்லை. நாட்டிலுள்ள பண அளிப்பின் தொகுதியில் மட் டுமே மாற்றங்கள் நேர்ந்துள்ளன. மிட்லண்ட் பாங்கின் டெபாசிட் டுகள் (அதாவது மிட்லண்ட் பாங்கு பிறருக்குக் கொடுக்கவேண்டிய கடன்கள்) அதிகரித்துள்ளன; ஆனால், பார்க்லேஸ் பாங்கின் டெபா சிட்டுகள் குறைந்துள்ளன. மேலும், பாங்குகள் ஜோன்சுக்குக் கொடுக்கவேண்டிய கடன் தொகை அதிகரித்துள்ளது; ஆனால், பாங்குகள் ஸ்மித்திற்குக் கொடுக்கவேண்டிய கடன் தொகை குறைந் துள்ளது. முன்பு இருந்ததைவிடத் தற்சமயம் ஜோன்சிடம் அதிக மான பணம் உள்ளது; முன்பு இருந்ததைவிடத் தற்சமயம் ஸ்மித் திடம் குறைவான பணம் உள்ளது. மொத்தப் பண அளிப்பில் எந்த விதமான மாற்றமும் நேரவே இல்லை.

தங்களுடைய டெபாசிட் பொறுப்புகட்கு ஈடாகப் பாங்குகள் மற் றும் ஒரு முக்கியமான சொத்தினத்தைப் பெறுகின்றது. அதுவே ரொக்கமாகும். அரசாங்கம் வெளியிட்டுள்ள பணம் (பிரிட்டனில் தற் சமயம் அரசாங்கம் வெள்ளிக் காசுகள், செம்புக் காசுகள் ஆகிய வற்றை மட்டிலுமே வெளியிட்டு வருகின்றது), மையப் பாங்கின் (மையப் பாங்கானது பாங்குகளுக்கெல்லாம் பாங்காகத் திகழ்கின்றது. இங்கிலாந்தின் மையப் பாங்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்காகும்) பொறுப்புகள் ஆகியவையே நாட்டிலுள்ள ரொக்கங்களாகும். மையப் பாங்கின் பொறுப்புகள் இரு தரத்தனவாகும்—மையப் பாங்கிலுள்ள டெபாசிட்டுகள் ஒரு வகையான பொறுப்புகளாகும்; மையப் பாங்கு வெளியிடுகின்ற நோட்டுகள் மற்றொரு வகையான பொறுப்புகளாகும். நோட்டுகளாகவும் சில்லறைகளாகவும் ஒரு வாடிக்கைக்காரர் பாங்கிடம் 31 பவுன் 17 ஷில்லிங் 9 பென்ஸ் ஆகிய மதிப்புள்ள பணத்தைச் செலுத்துகின்றார் என்று வைத்துக்கொள்வோம். இந்தத் தொகைக்கு

கும். இதன் விளைவாகப் பார்க்லேஸ் பாங்கின் சொத்துகளில் 500 பவுன் மதிப்புள்ளவை குறையும்; ஆனால், அதே சமயம் மிட்லண்ட் பாங்கின் சொத்துக்களின் மதிப்பு முன்பு இருந்ததைவிட 500 பவுன் அதிகமாகும். பார்க்லேஸ் தன்னிடமுள்ள சொத்துகளில் எவ்வெவ்வற்றை மிட்லண்டிற்கு மாற்றும் என்பது குறித்த விளக்கத்தை அடுத்து வரும் அத்தியாயங்களில் காண்போம். எனினும், ஓர் உண்மை நமக்குத் தெற்றென விளங்குகிறது. நாட்டிலுள்ள பண அளிப்பு அதிகமாகவே இல்லை. நாட்டிலுள்ள பண அளிப்பின் தொகுதியில் மட்டுமே மாற்றங்கள் நேர்ந்துள்ளன. மிட்லண்ட் பாங்கின் டெபாசிட்டுகள் (அதாவது மிட்லண்ட் பாங்கு பிறருக்குக் கொடுக்கவேண்டிய கடன்கள்) அதிகரித்துள்ளன; ஆனால், பார்க்லேஸ் பாங்கின் டெபாசிட்டுகள் குறைந்துள்ளன. மேலும், பாங்குகள் ஜோன்சுக்குக் கொடுக்கவேண்டிய கடன் தொகை அதிகரித்துள்ளது; ஆனால், பாங்குகள் ஸ்மித்திற்குக் கொடுக்கவேண்டிய கடன் தொகை குறைந்துள்ளது. முன்பு இருந்ததைவிடத் தற்சமயம் ஜோன்சிடம் அதிகமான பணம் உள்ளது; முன்பு இருந்ததைவிடத் தற்சமயம் ஸ்மித்திடம் குறைவான பணம் உள்ளது. மொத்தப் பண அளிப்பில் எந்த விதமான மாற்றமும் நேரவே இல்லை.

தங்களுடைய டெபாசிட் பொறுப்புகட்கு ஈடாகப் பாங்குகள் மற்றும் ஒரு முக்கியமான சொத்தினத்தைப் பெறுகின்றது. அதுவே ரொக்கமாகும். அரசாங்கம் வெளியிட்டுள்ள பணம் (பிரிட்டனில் தற்சமயம் அரசாங்கம் வெள்ளிக் காசுகள், செம்புக் காசுகள் ஆகியவற்றை மட்டிலுமே வெளியிட்டு வருகின்றது), மையப் பாங்கின் (மையப் பாங்கானது பாங்குகளுக்கெல்லாம் பாங்காகத் திகழ்கின்றது. இங்கிலாந்தின் மையப் பாங்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்காகும்) பொறுப்புகள் ஆகியவையே நாட்டிலுள்ள ரொக்கங்களாகும். மையப் பாங்கின் பொறுப்புகள் இரு தரத்தனவாகும் — மையப் பாங்கிலுள்ள டெபாசிட்டுகள் ஒரு வகையான பொறுப்புகளாகும்; மையப் பாங்கு வெளியிடுகின்ற நோட்டுகள் மற்றொரு வகையான பொறுப்புகளாகும். நோட்டுகளாகவும் சில்லறைகளாகவும் ஒரு வாடிக்கைக்காரர் பாங்கிடம் 31 பவுன் 17 ஷில்லிங் 9 பென்ஸ் ஆகிய மதிப்புள்ள பணத்தைச் செலுத்துகின்றார் என்று வைத்துக்கொள்வோம். இந்தத் தொகைக்கு ஈடாகப் பாங்கு இந்த வாடிக்கைக்காரருக்கு டெபாசிட்டுகளை அளிக்கின்றது. அதாவது, பாங்கு வாடிக்கைக்காரரிடம் 31 பவுன் 17 ஷில்லிங் 9 பென்ஸ்களுக்குக் கடன்பட்டிருக்கின்றது. பாங்கின் இருப்பு நிலைக் குறிப்பில் நாம் கீழே கொடுத்துள்ள இனங்கள் (items) சேர்க்கப்படும்.

| பொறுப்புகள் | ப.ஷி.பெ<br>£ s. d. | சொத்துகள் | ப.ஷி.பெ.<br>£ s. d |
| --- | --- | --- | --- |
| டெபாசிட்டுகள் ... | 31 17 9 | கையிருப்பு ரொக்கம் ... | 31 17 9 |

பாங்கிடம் ஒரு வாடிக்கைக்காரர் பணம் செலுத்தும்போது பாங்கினுடைய இருப்புநிலைக் குறிப்பில் தோன்றக்கூடிய மாற்றங்கள் யாவை என்று மேலே கண்டோம். இதற்கு மாருக, பாங்கிடமிருந்து ஒரு வாடிக்கைக்காரர் (தம்முடைய செக்குக்கோ அல்லது வேருெருவர் செக்குக்கோ) ரொக்கத்தைப் பெற முனையும்போது நிலை முற்றிலும் மாறி விடுகின்றது. பாங்கின் டெபாசிட்டுகள் குறைகின்றன பாங்கின் கையிருப்பு ரொக்கமும் குறைகின்றது. மக்கள் சில சமயங்களில் ரொக்கத்தின்மூலமே பேரங்களைத் தீர்த்துக்கொள்ள விரும்புகின்றனர்; வேறு சில சமயங்களில் செக்குகளைப் பயன்படுத்திப் பேரங்களைத் தீர்த்துக்கொள்ள விரும்புகின்றனர். (இவற்றிற்கான காரணங்களை நாம் ஏற்கெனவே கண்டோம்.) எனவே, பாங்கர்களிடமிருந்து சில சமயங்களில் ரொக்கம் வெளியேறுகின்றது; வேறு சில சமயங்களில் ரொக்கம் பாங்கிடம் போய்ச் சேருகின்றது. சில்லறை வியாபாரிகள் தொடர்ந்து பாங்கிடம் ரொக்கத்தைச் செலுத்திக்கொண்டே இருக்கின்றனர். அதாவது, சில்லறை வியாபாரிகள் தங்களிடமுள்ள ரொக்கத்தைப் பாங்கு டெபாசிட்டுகளாக மாற்றுகின்றனர். தொழிலாளிகளை வேலையில் அமர்த்தியுள்ள தொழிலதிபர்களும் செக் மூலம் தங்களுடைய சம்பளத்தைப் பெறும் நபர்களும் தொடர்ந்து பாங்கிலிருந்து ரொக்கத்தை எடுத்துக்கொண்டே இருக்கின்றனர். அதாவது, இவர்கள் பாங்கு டெபாசிட்டுகளை ரொக்கமாக மாற்றுகின்றனர். டெபாசிட்டுகளை ரொக்கமாக மாற்றும்போதும், ரொக்கத்தை டெபாசிட்டுகளாக மாற்றுபோதும், ஒரு வகையைச் சேர்ந்த பணம் இன்னொரு வகையைச் சேர்ந்த பணமாக மாறுகின்றது. இவற்றின் விளைவாக நாட்டிலுள்ள மொத்தப் பண அளிப்பில் எந்த விதமான மாற்றமுமே நேராது ஆனால், பணத்தின் தொகுதியில் மாற்றங்கள் நேர்கின்றன. பணத்தின் தொகுதியில் குறிப்பிடத்தக்க அளவு மாற்றங்கள் நேருமேயாயின் வேறு சில விளைவுகள் நேரும். இவை குறித்த விளக்கத்தை அத்தியாயம் இரண்டில் காணலாம்.

மையப் பாங்கிலுள்ள டெபாசிட்டுகளும் ஒரு வகையான ரொக்கங்களேயாகும். மையப் பாங்கு அரசாங்கத்திற்குப் பாங்கராகத் திகழ்கின்றது வேறு சில மக்களுக்கும் மையப் பாங்கு பாங்கராகத் திகழ்கின்றது. தாற்காலிகமாக மையப் பாங்கின் இவ்விரு பணிகளையும் மறந்துவிட்டு, மையப் பாங்கு பாங்குகளுக்குப் பாங்கராகத்

திகழும் பணியில் மட்டும் கவனத்தைச் செலுத்துவோம். மையப் பாங்கில் தங்களுடைய டெபாசிட்டுகளில் ஒரு பகுதியை ஏனைய பாங்குகள் இருப்பாக வைத்திருக்கின்றன. இதனுல் அவை பய்னுறுகின்றன. மையப் பாங்கிலுள்ள தங்களுடைய இருப்புகளைப் பயன்படுத்திப் பாங்குகள் தங்களுக்குள் நேரக்கூடிய கடன் பேரங்களை எளிதில் தீர்த்துக்கொள்ளுகின்றன. நாம் மேலே கொடுத்துள்ள மிட்லண்ட்—பார்க்லேஸ் உதாரணத்தில் நேர்ந்ததுபோல ஒரு பாங்குக்கு இன்னொரு பாங்கு கடன்பட்டிருக்கும் நிலை நேரலாம். மையப் பாங்கில் தங்கள் கணக்குகளில் சிறு மாற்றங்களைச் செய்வதன்மூலம் தங்களுக்கிடையே நேர்ந்துள்ள இந்தக் கடன் பேரத்தை இவ்விரு பாங்குகளும் தீர்த்துக்கொள்ள முடியும். மேலே நாம் கொடுத்த உதாரணத்தில் மிட்லண்ட் பாங்குக்கு பார்க்லேஸ் பாங்கு கடன் தர வேண்டியுள்ளது. மையப் பாங்கிலுள்ள பார்க்லேஸ் பாங்கின் டெபாசிட்டுகளைக் குறைத்தும், மையப் பாங்கிலுள்ள மிட்லண்ட் பாங்கின் டெபாசிட்டுகளை இதே அளவுக்கு அதிகரித்தும், இந்தக் கடன் பேரத்தை இவ்விரு பாங்குகளும் தீர்த்துக்கொள்ள முடியும். இவற்றின் விளைவாக மையப் பாங்கிடமுள்ள மொத்த டெபாசிட்டுகளில் எவ்விதமான மாற்றமும் நேரவே நேராது. ஆனுல், மையப் பாங்கிலுள்ள மிட்லண்ட் பாங்கின் டெபாசிட்டுகள் முன்பு இருந்ததைவிட அதிகமாகும். மையப் பாங்கிலுள்ள பார்க்லேஸ் பாங்கின் டெபாசிட்டுகள் முன்பு இருந்ததைவிடக் குறையும்.

பொதுமக்களிடையே நிகழ்கின்ற வர்த்தகங்களையொட்டிப் பாங்குகளிடம் ரொக்கம் போய்ச் சேருவதும், பாங்குகளை விட்டு ரொக்கம் வெளியேறுவதும் சாதாரணமாக எப்பொழுதும் நேர்ந்துகொண்டே இருக்கின்றன. இதையொட்டிப் பாங்குகள் ஒன்றிடம் மற்ருென்று கடன்படுகின்றன. எனவே (மக்களின் பேரங்களையொட்டி), தங்களுடைய சொத்துக்களில் ஒரு பகுதியைப் பாங்குகள் கையிருப்பு ரொக்கமாக (cash in hand) வைத்துள்ளன. (பாங்குகளுக்கிடையே நேர்கின்ற கடன் பேரங்களைத் தீர்ப்பதற்கு.) தங்களுடைய சொத்துக்களில் மற்ருெரு பகுதியைப் பாங்குகள் மையப் பாங்கில் வைத்துள்ளன. (மையப் பாங்கில் பாங்குகள் இருப்பாக வைத்திருக்கக்கூடிய டெபாசிட்டுகள் 'பாங்கர்களின் டெபாசிட்டுகள்' என்ற பெயர் பெறுகின்றன.) மையப் பாங்கிலும் தங்களுடைய கல்லாவிலும் பாங்குகள் வைத்திருக்கும் ரொக்க இருப்புகள், 'ரொக்கக் காப்பு இருப்புகள்' (cash reserve) என்ற பெயரோடு திகழ்கின்றன. பாங்குகளின் ஏனைய சொத்துகள் (ரொக்கம் நீங்கலாக) ஊதியச் சொத்துகளாகும் (earning assets). ஆனுல், ரொக்கம் ஆதாயமில்லாத ஒரு சொத்தினமாகும்.

எனவே, ஏனைய சொத்துக்களைப்போல ரொக்கத்தைப் பாங்குகள் விரும்புவதில்லை. பாங்கர் தம்மிடம் வைத்திருக்கவேண்டிய ரொக்க இருப்புகளின் அளவு இரு விஷயங்களைப் பொறுத்ததாகும். பாங்கு முறைப் பழக்கம் மக்களிடம் அடைந்துள்ள வளர்ச்சியும் பாங்கு முறையின் அமைப்பும் இவ்விரு விஷயங்களாகும்.[1] பொது மக்களில் பெரும்பாலானவர்கள் பாங்கு முறைப் பழக்கங்களை அனுசரிக்கத் தலைப்பட்டால் பாங்கரின் ரொக்க விகிதம் அதிக மானதாக இருக்கவேண்டிய அவசியம் ஏதுமில்லை. தற்கால உலகின் நிலைமை எவ்வாறு உள்ளது என்பதை நாமெல்லோரும் அறிவோம். பாங்கர்கள் பிறரிடம் கடன்படுவதற்கான வாய்ப் புகள் ஏராளமாக உள்ளன. அதாவது பணத்தை உற்பத்தி செய் வதற்கான வாய்ப்புகளைப் பாங்கர்கள் நிறையப் பெற்றுள்ளனர்.

தாங்கள் உற்பத்தி செய்கின்ற பணத்தை எல்லோருக்கும் வழங்குவதற்குப் பாங்குகள் முன் வருவதில்லை. டெபாசிட்டு களுக்கு ஈடாகச் சொத்தினம் ஒன்றினைக் கொடுக்க முன் வருபவர் களுக்கே பாங்கு பணத்தை உற்பத்தி செய்து வழங்குகின்றது. எனவே, தான் விரும்பி ஏற்றுக்கொள்ளக்கூடிய சொத்தினம் ஒன்றினைத் தன்னிடம் ஈடாகக் கொடுக்க முன் வரும் மக்களுக்கே பாங்கு பணத்தை உற்பத்தி செய்து அளிக்கின்றது. பாங்கு பணத்தை உற்பத்தி செய்வதோடு மட்டும் நின்றுவிடுவதில்லை. பணத்தைப் பகிர்வு (distribution) செய்வதிலும் பாங்குகள் பெரும் பங்கு பெருகின்றன. தங்களால் உற்பத்தி செய்யப்பட்ட பணம் சில குறிப்பிட்ட துறைகளைச் சென்றடையுமாறும் பாங்குகள் தங்களுடைய நடவடிக்கைகளை ஒழுங்கு செய்துகொள்கின்றன. எனவே, பணத்தை உற்பத்தி செய்வதால் மட்டுமன்றிப் பணத் தைப் பகிர்வு செய்வதாலும் பாங்குகள் மிகவும் முக்கியத்துவம் உடைய நிறுவனங்களாகத் திகழ்கின்றன. ஒரு குறிப்பிட்ட காலத்தில் நாட்டிலுள்ள பொருள்களும் சேவைகளும் ஒரு குறிப் பிட்ட மொத்த அளவினவாகும். நாட்டிலுள்ள பொருள்கள், சேவைகள் ஆகியவற்றின் மொத்த அளவு பல இனங்களின் கூட்டுத் தொகையால் ஆன ஒன்றாகும். நாட்டிலுள்ள மொத்தப் பண உற்பத்தியில் பாங்குகள் பெரும் பங்கு பெறுவதால், பாங்கு களால் உற்பத்தி செய்யப்பட்ட பணம் நாட்டிலுள்ள பொருள்கள் சேவைகள் ஆகியவற்றின் மொத்த அளவுக்கு ஏற்றதொரு வகையில் அமைந்திருக்கவேண்டும். மேலும், நாட்டிலுள்ள பணப் பகிர்விலும் பாங்குகள் குறிப்பிடத்தக்க பங்கு பெறுவதால், பாங்குகள் செய்யும் பணப் பகிர்வு நாட்டிலுள்ள மொத்தப்

[1] ஒரு குறிப்பிட்ட அளவு ரொக்க இருப்புகளைத் தம்மிடம் பாங்குகள் வைத் திருக்கவேண்டும் என்று சில நாடுகளில் சட்டம் வலியுறுத்துகின்றது.

பொருள்கள், சேவைகள் ஆகியவற்றின் தொகுதிக்கு ஏற்றதொரு வகையிலும் அமைந்திருக்கவேண்டும். பாங்கு முறைபற்றிய விளக்கங்களைத் தருவதே இந்தப் புத்தகத்தின் தலையாய நோக்கமாகும். நாட்டிலுள்ள பொருள்கள், சேவைகள் ஆகிறவற்றின் மொத்த அளவுக்கு ஏற்ற வகையிலும், மற்றும் மொத்தப் பொருள்கள், சேவைகள் ஆகியவற்றின் தொகுதிகளுக்கு ஏற்ற வகையிலும் எவ்வாறு பாங்குகளின் நடவடிக்கைகளை அமைக்கும்படியும் என்பதைப்பற்றி பாங்கு முறை குறித்து நாம் தரவிருக்கும் விளக்கங்கள் நமக்கு அறுவுறுத்தும்.

# 2. வாணிபப் பாங்கு முறை

## 1. பாங்கு அமைப்புபற்றிய விளக்கம்

பாங்கு முறைகள் நாட்டிற்கு நாடு பெருமளவில் வேறுபடு கின்றன. எனினும், கடந்த சில ஆண்டுகளாகப் பாங்கு முறைகள் யாவும் ஒரு குறிப்பிட்ட முறையையொட்டியே அமைந்துள்ளன. இந்த முறையே 'மையப் பாங்கு முறை' யாகும். இங்கிலாந்து நாட்டின் பாங்கு முறை மையப் பாங்கு முறைக்கு ஓர் எடுத்துக் காட்டாக உள்ளது. மையப் பாங்கு முறைகளில் கீழ்க்காணும் மூன்று அங்கங்களைக் காணலாம்: மையப் பாங்கு, வாணிபப் பாங்குகள், மற்றும் ஏனைய நிதி நிறுவனங்கள். (பணத்தைக் கடனுகக் கொடுப்பதும் கடன் பெறுவதுமே இந்த நிதி நிறுவனங் களின் முக்கிய அலுவல்களாகும்.) மையப் பாங்குகளைப்பற்றிய விளக்கத்தை நான்கு, ஐந்து ஆகிய அத்தியாயங்களிலும், வாணிபப் பாங்குகளைப்பற்றிய விளக்கத்தை இந்த அத்தியாயத் திலும், ஏனைய நிதி நிறுவனங்களில் சில முக்கியமான நிறுவனங் களைப்பற்றிய விளக்கத்தை மூன்றும் அத்தியாயத்திலும் காண லாம்.

மையப் பாங்குக்கும் வாணிபப் பாங்குகளுக்கும் இடையே வேறுபாடுகள் உள்ளன. மையப் பாங்கின் நோக்கமும் வாணிபப் பாங்குகளின் நோக்கமும் வெவ்வேருக உள்ளன. இலாபம் ஈட்டு வதே வாணிபப் பாங்குகளின் தலையாய நோக்கமாகும். பொரு ளாதார அமைப்பின் இயக்கத்தில் நாட்டங்கொண்டு, அவ்வப் போது தேவைப்படும்போது பொருளாதார அமைப்பின் நடவடிக் கைகளை ஒழுங்குசெய்வதே மையப் பாங்கின் தலையாய நோக்க மாகும். வாணிபப் பாங்குகள் குறுங்கால நோக்கங்களையே உடையனவாகும். இவ்வாறில்லாது வாணிபப் பாங்குகள் நெடுங் கால நோக்கம் உடையனவாகத் திகழ்ந்தால், உடனடியாகக் கிடைக்கக்கூடிய இலாபங்களை அவை இழக்கவேண்டியிருக்கும்.

வாணிபப் பாங்கு தன்னைப்போன்ற வேறு வாணிபப் பாங்குகளுடன் போட்டியிடவேண்டியுள்ளது. எனவே, தன்னுடன் போட்டியிடும் ஏனைய பாங்குகள் எந்த அளவுக்கு, நீண்டகால நோக்கம் உடையனவாகத் திகழ்கின்றனவோ, அந்த அளவுக்குத் தான் வாணிபப் பாங்கு ஒன்று நீண்டகால நோக்கத்தை உடையதாக இருக்க முடியும். ஏனைய பாங்குகள் பிறருடைய நலத்தில் எவ்வளவு நாட்டங்கொண்டுள்ளனவோ, அந்த அளவுக்குத்தான் வாணிபப் பாங்கு ஒன்றும் பிறருடைய நலத்தில் நாட்டம் கொள்ள முடியும். வாணிபப் பாங்கு பங்குதாரர்களின் உடைமையாகும். பங்குதாரர்களுக்கு இயன்ற அளவு இலாபம் ஈட்டுவதே வாணிபப் பாங்கின் நோக்கமாகும். ஆனால், பொதுவாக மையப் பாங்குகள் அரசாங்கத்தின் உடைமைகளாகவே விளங்குகின்றன. உலகிலுள்ள ஒருசில மையப் பாங்குகளில் பங்குதாரர்களுக்கு இன்னும் பாத்தியதைகள் உள்ளன. தங்களுடைய செலவு போக எஞ்சியிருக்கும் பணத்தில் இந்தப் பங்குதாரர்களுக்கு இத்தன்மைத்தான மையப் பாங்குகள் ஓரளவு இலாப ஈவு (dividend) அளிக்கவேண்டியுள்ளன. வருவாய் ஈட்டுவதோ, நஷ்டத்தைத் தவிர்ப்பதோ மையப் பாங்கின் நோக்கமாகாது. கடந்த காலத்தில் சில மையப் பாங்குகள் நஷ்டத்தைத் தவிர்க்கவேண்டித் தங்களுடைய நடவடிக்கைகளை மாற்றி அமைத்துள்ளன. இந்த மையப் பாங்குகளை விதி விலக்குகளாகவே கருதவேண்டும். மையப் பாங்குக் கொள்கையினின்றும் விலகி நடந்தவைகளாகவே இவற்றை நாம் கருதவேண்டும். சில நாடுகளில் ஒரு சில வாணிபப் பாங்குகள் மட்டிலுமே இருக்கலாம். வேறு சில நாடுகளில் வாணிபப் பாங்குகள் பெருமளவில் இருக்கலாம். வாணிபப் பாங்குகள் பொதுமக்களுடன் பேரங்கள் நடத்துகின்றன. ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு மையப் பாங்கே உள்ளது. பொதுவாக மையப் பாங்குகள் சாதாரணப் பாங்குத் தொழிலில் ஈடுபடுவதே இல்லை. ஒரு வேளை சில மையப் பாங்குகள் சாதாரண பாங்குத் தொழிலில் ஈடுபட்டிருந்த போதிலும் அது மிக மிகக் குறைவாகவே இருக்கும். ஏனைய பாங்குகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதே மையப் பாங்கின் தலையாய நோக்கமாகும்.

இங்கிலாந்தில், நாம் வாணிபப் பாங்குகளைக் கூட்டுப் பங்கு பாங்குகள் (joint-stock bank) என்ற பெயரிட்டே அழைக்கின்றோம். எனவே, இந்தப் புத்தகத்தில் இங்கிலாந்துப் பாங்கு முறையை விளக்கும்போது எந்த இடத்திலாவது 'கூட்டுப் பங்கு பாங்குகள்' என்ற சொற்றொடரைப் பயன்படுத்தினால், அது 'வாணிபப் பாங்குகளை'க் குறிப்பதாகவே கொள்ள வேண்டும். அமெரிக்கப் பாங்கு முறையைப்பற்றி நாம் விளக்கும்போது சில

சமயம் வாணிபப் பாங்குகளைக் குறிக்கும் முகத்தான் 'அங்க பாங்குகள்' (member banks) என்ற சொற்றொடரைப் பயன்படுத்தலாம். இவ்வாறு பயன்படுத்துவது முற்றிலும் சரியானது என்று நாம் கூறமாட்டோம். ஏனெனில், அமெரிக்காவிலுள்ள பல வாணிபப் பாங்குகள் அங்க பாங்குகளே அல்ல (இவற்றுள் சில இராச்சிய சட்டங்களின்கீழ் நிறுவப்பட்டனவேயாகும். இவை இராச்சிய பாங்குகள் என்ற பெயர் பெறுகின்றன). எனினும், இந்த இரண்டு வகையான பாங்குகளும் – அங்க பாங்குகளும், அங்கமல்லாத பாங்குகளும் — ஒரே அதிகாரியின் நடவடிக்கைகளுக்கே கட்டுப்பட்டுள்ளன. எனவே, வாணிபப் பாங்குகளைக் குறிப்பதற்கு அங்க பாங்குகள் என்ற சொற்றொடரைப் பயன்படுத்துவது பெருந் தவறு என்று கொள்ளவேண்டியதில்லை. ஐரோப்பாக் கண்டத்திலுள்ள வாணிபப் பாங்குகளைக் குறிப்பதற்குப் பெரும்பாலும் 'கடன் பாங்குகள்' (Credit Banks) என்ற சொற்றொடரே பயன்படுத்தப்படுகிறது. முதலீட்டுப் பாங்குகளினின்றும் (Investment Banks) வாணிபப் பாங்குகளை வேறுபடுத்திக் காட்டுவதற்காகவே இந்தச் சொற்றொடரை அங்குப் பயன்படுத்துகின்றனர். ஆனால், உண்மையில் ஐரோப்பாக் கண்டத்தில் வாணிபப் பாங்குகளுக்கும் முதலீட்டு பாங்குகளுக்குமிடையே நடைமுறையில் வேறுபாடுகளைக் காண்பது மிகவும் அரிதாகும்.

(உலகிலுள்ள முக்கியமான நாடுகள் யாவற்றிலும் நெடுங் காலத்திற்கு முன்பே கூட்டுப் பங்கு கம்பெனி (Joint Stock Company) முறை சிறந்த முறையில் வேரூன்றிவிட்டது என்று கூறலாம்.) எனவே, பெரும்பாலான நாடுகளிலுள்ள வாணிபப் பாங்குகள் யாவும் மிகப் பெரிய நிறுவனங்களாகவே திகழ்கின்றன. நாடு முழுவதிலுமோ, நாட்டின் பெரும் பகுதியிலோ இந்த பாங்குகள் ஏராளமான கிளைகளை நிறுவியுள்ளன. இத்தகைய பாங்கு முறை 'கிளை பாங்கு முறை' என்று பெயர் பெறுகின்றது. இங்கிலாந்து, கனடா, மற்றும் ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளில் உருவாகியுள்ள பாங்கு முறைகள் கிளைப் பாங்கு முறைக்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றன. உதாரணமாக, இங்கிலாந்தில் நடைபெறுகின்ற மொத்த பாங்குப் பேரங்களில் 'ஐம்பெரும் பாங்குகள்' (The Big Five) பெரும் பங்கு பெறுகின்றன. மிட்லண்ட், வெஸ்ட் மினிஸ்டர், பார்க்லேஸ், லாயிட்ஸ், மற்றும் நேஷனல் புரவின்ஷியல் ஆகியவையே ஐம்பெரும் பாங்குகளாகும். நாட்டில் நடைபெறுகின்ற மொத்த பாங்குப் பேரங்களில் இவை நடத்தும் பாங்குப் பேரங்கள் தவிர, எஞ்சியுள்ளவற்றில் பெரும் பகுதியை மார்டின்ஸ் பாங்கும், டிஸ்டிரிக்ட் பாங்கும் நடத்தி வருகின்றன. இவ்விரு பாங்குகளும் கிளை பாங்குகளை உடை

யவையே யாகும். ஆனால், அமெரிக்காவிலுள்ள பாங்கு முறை இங்கிலாந்திலுள்ள பாங்கு முறையினின்றும் முற்றிலும் மாறுபட்டு விளங்குகிறது. அண்மையில் அமெரிக்க பாங்கு முறையானது ஓரளவுக்கு இங்கிலாந்துப் பாங்குமுறைபோல உருவாகி வருகின்றது என்பது உண்மையே. இருப்பினும் இன்றும் அமெரிக்க பாங்கு முறையும் இங்கிலாந்து பாங்கு முறையும் மாறுபட்டனவாகவே விளங்குகின்றன. அமெரிக்காவில் கடைப்பிடிக்கப்படும் பாங்கு முறை, தனிப் பாங்கு முறை (unit banking) யாகும்.[1] தனிப் பாங்கு முறை கிளைபாங்கு முறைக்கு முற்றிலும் மாறுபட்ட ஒன்றாகும். தனிப் பாங்கு முறைக்கு அமெரிக்காவே தாயகமாகும். தனிப் பாங்கு முறையில் பொதுவாகப் பாங்குகள் யாவும் ஒவ்வொரு அலுவலகம் மட்டிலும் உடையனவாயுள்ளன. குறிப்பிட்ட எல்லைக்குள் ஒரு சில பாங்குகளே கிளைகள் நிறுவக்கூடிய உரிமை பெற்றிருக்கின்றன. பாங்குகள் கிளைகள் நிறுவுவதைத் தடை செய்யும் வகையில் அமெரிக்காவில் சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன. 'பண டிரஸ்ட்டு'கள் (Money Trust) என்றாலேயே, அமெரிக்க மக்கள் வழி வழியாக அஞ்சி வெறுத்து வந்துள்ளனர். மேலும், அமெரிக்காவில் மத்திய மேற்குப் பகுதியிலும், தூர மேற்குப் பகுதியிலும் உள்ள மக்கள், நியூயார்க் நிதியாளர்களின் நடவடிக்கைகளைச் சந்தேகக் கண்கொண்டே நோக்கி வருகின்றனர். பாங்குகள் கிளைகளை நிறுவுவத்தை தடை செய்யும் வகையில் அமெரிக்காவில் இயற்றப்பட்டுள்ள சட்டங்களுக்கு இவையே மூலகாரணங்களாகும். பெரும் பாங்குகளுக்கு எதிராக வழி வழியாக அமெரிக்காவில் நிலவி வருகின்ற கருத்தானது அமெரிக்க மையப் பாங்கு முறையையும் பாதித்துள்ளது. அமெரிக்க மையப் பாங்கானது 12 பாங்குகளின் தொகுதியாலானது. இந்தப் பாங்குகள் ஒவ்வொன்றும் தத்தமக்கென்று வரையறுக்கப்பட்டுள்ள பகுதிகளில் இயங்கிவருகின்றன அமெரிக்காவில் தற்சமயம் உள்ளது போலவே இங்கிலாந்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் தனிப் பாங்குகள் இருந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் செயலாற்றிவந்த தனிப்பாங்குகளுக்கிடையே நெருங்கிய தொடர்புகள் இருந்தன. இது போலவே தற்சமயம் அமெரிக்காவிலுள்ள தனிப் பாங்குகளுக்கிடையே நெருங்கிய தொடர்புகள் ஏற்பட்டுள்ளன. அமெரிக்க பாங்குகளுக்கிடையே நெருக்கமான தொடர்புகள் இருப்பதற்கு முக்கிய காரணம் அங்கு உருவாகியுள்ள 'தொடர்பு பாங்கு முறை'யே (correspondent banking) யாகும். தொடர்பு பாங்கு முறையின் அடிப்படையில் நாட்டுப்புறப் பாங்கு ஒன்று அருகிலுள்ள பெரிய நகரம் ஒன்றில் உள்ள பாங்

1 அமெரிக்க பாங்கு முறைபற்றி பத்தாவது அத்தியாயத்தில் சுருக்கமான விளக்கத்தைத் தந்துள்ளோம,

கிடம் ரொக்கக் காப்பிருப்புகளை வைத்திருக்கின்றது. நியூயார்க், சிக்காக்கோ போன்ற பெரிய நிதி மையங்களிலுள்ள பாங்குகளிடம், இந்த நகரப் பாங்கு தன்னுடைய ரொக்கக் காப்பிருப்புகளை வைத்திருக்கின்றது. நாட்டின் ஒரு பகுதியினின்றும் பிறிதொரு பகுதிக்குப் பணம் அனுப்புவது 'தொடர்பு பாங்குகளின்' மூலம் நடைபெறுகின்றது. பெரிய நிதி மையங்களில் ஒரு நாட்டுப்புறப் பாங்கின் பெயரிலிருந்து பிறிதொரு நாட்டுப்புறப் பாங்கின் பெயருக்குப் பணம் மாற்றப்படுவதையொட்டி, நாட்டின் ஒரு பகுதியினின்றும் பிறிதொரு பகுதிக்குப் பணம் அனுப்பப்படுகிறது. தொடர்பு பாங்குகளுக்கு இடையே பெரும்பாலும் நிலையான ஏற்பாடுகள் சில உள்ளன. குறிப்பிட்ட நபர்களுக்குக் கடன் கொடுப்பதால் நேரக்கூடிய ஆபத்துகள் குறித்து இவை தங்களுக்குள் ஆலோசனைகள் நடத்திக் கொள்கின்றன. இவை சில சமயங்களில் ஒன்று சேர்ந்து கடன் ஏற்பாடுகளைச் செய்துவருகின்றன. தொடர்பு பாங்கு முறையை யொட்டி, அமெரிக்காவிலுள்ள தனிப் பாங்குகளுக்கிடையே நெருக்கமான உறவுகள் ஏற்பட்டிருப்பதால், இந்த பாங்குகளுக்குச் சில நன்மைகள் உண்டாகியுள்ளன. இவை தனி பாங்குகளாக இருப்பினும், கிளை பாங்குகள் பெற்றுவரும் சில நன்மைகளும் இவற்றிற்குக்குக் கிடைத்து வருகின்றன. எனவே, தனிப் பாங்கு முறை, கிளை பாங்கு முறை ஆகியவற்றின் தராதரங்களை ஒப்பிடும்போது, தனிப் பாங்குகள் உண்மையிலேயே தனித்த பாங்குகள் அல்ல, அவை தொடர்பு பாங்கு முறை என்ற சங்கிலியால் பிணைக்கப்பட்டிருக்கின்றன என்ற உண்மையை நாம் கருத்தில் கொள்ள வேண்டியது அவசியமாகும்.

அடுத்து, தனிப் பாங்கு முறை, கிளை பாங்கு முறை ஆகியவற்றின் தராதரங்களை ஒப்பிட்டு, இவற்றால் விளையக் கூடிய நன்மைகளையும் கேடுகளையும் ஆராய்வதே எமது நோக்கம் ஆகும். எனினும், இதற்கு முன்னதாக வாணிபப் பாங்குகள் ஆற்றிவரும் பணிகளை அறிந்துகொள்வது இன்றியமையாதது என்று நாம் கருதுவதால், அவற்றை ஈண்டுச் சுருக்கமாகத் தந்துள்ளோம். பொது மக்களுடன் 'சாதாரண பாங்குத் தொழில்' செய்துவருபவையே வாணிபப் பாங்குகளாகும். 'சாதாரண பாங்குத் தொழில்' என்றால் என்ன, என்ற வினா எழுவது இயற்கையே. தற்சமயம் வாணிபப் பாங்குகள் பலவகையான சேவைகளையும் (services) ஆற்றிவருகின்றன. உதாரணமாக, வாணிபப் பாங்குகள் 'நிறைவேற்றுபவராகவும்' (executor), 'பொருப்பாளர்'களாகவும் (trustee) திகழ்கின்றன. இவ்வாறான சேவைகள் யாவற்றையும் பாங்குகளின் முக்கியப் பணிகளாக நாம் கருத முடியாது. இவை

யாவும் துணைப் பணிகளேயாகும். பாங்குகள் ஆற்றிவருகின்ற சேவைகளை நாம் 'சாதாரண பாங்குத் தொழில்' என்று கருதுவதற்கில்லை. ரொக்கத்தைப் பாங்கு டெபாசிட்டுகளாக மாற்றுவது, பாங்கு டெபாசிட்டுகளை ரொக்கமாக மாற்றுவது, ஒருவர் பெயரிலுள்ள பாங்கு டெபாசிட்டுக்களைப் பிறிதொருவர் பெயருக்கு மாற்றுவது, உண்டியல்கள், அரசாங்கப் பத்திரங்கள், துணையீட்டுடன் கூடிய அல்லது துணையீடின்றி வாடிக்கைக்காரர்களின் உறுதிமொழி ஆகிய சொத்துக்களுக்கு ஈடாகப் பாங்கு டெபாசிட்டுகளை வாங்குவது ஆகியவையே 'சாதாரண பங்குத் தொழில்'களாகும்.

தங்களுடைய வாடிக்கைக்காரர்களுக்குத் தாங்கள் கடன்பட்டிருப்பதைக் குறிக்கும் வகையில் தங்களுடைய ஏடுகளில் வாடிக்கைக்காரர்களின் பெயரில் பாங்குகள் பணத் தொகைகளை வரவு வைக்கின்றன. இவையே பாங்கு டெபாசிட்டுகளாகும். எல்லோராலும் தடையின்றிக் கடன்களைத் தீர்ப்பதற்கு ஏற்றுக் கொள்ளப்படுகின்ற ஒரு சாதனமே பணம் என்றும், பாங்கு டெபாசிட்டுகளும் எல்லோராலும் தடையின்றிக் கடன்களைத் தீர்ப்பதற்கு ஏற்றுக்கொள்ளப்படுகின்றன என்றும், எனவே, பாங்கு டெபாசிட்டுகளும் பணமேயாகும் என்றும், பாங்கு டெபாசிட்டுகளும் பணங்களாகத் திகழ்வதாலேயே அவை முக்கியத்துவம் பெறுகின்றன என்றும் நாம் ஏற்கெனவே முதலாவது அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம். வாடிக்கைக்காரர் கேட்ட மாத்திரத்தில் அவருடைய டெபாசிட்டுகளை வேறுவகையைச் சேர்ந்த பணங்களாக (அதாவது நேரடியாகவோ, மறைமுகமாகவோ, ரொக்கங்களாகவோ) மாற்றக்கூடிய ஆற்றலைப் பாங்கு பெற்றிருக்க வேண்டும். இவ்வாறான ஆற்றலுடையதாக ஒரு பாங்கு திகழ்ந்தாலன்றி, இதனுடைய டெபாசிட்டுவை மக்கள் பணத்திற்கு ஈடானதாகக் கருதமாட்டார்கள். வாடிக்கைக்காரர் கேட்ட மாத்திரத்தில் அவர் விரும்பும்வண்ணம் பாங்கு டெபாசிட்டுகளை ரொக்கமாக மாற்றக்கூடிய பாங்கின் ஆற்றலை உணர்த்தும் சொற்றொடரே 'நீர்மைத் தன்மை' என்ற சொற்றொடராகும்.[1] எனவே, நீர்மைத் தன்மையைப் போற்றிப் பாதுகாக்கும் வகையில் தன்னுடைய நடவடிக்கைகளை ஒழுங்கு செய்ய வேண்டுவது பாங்கின் தலையாய கடனாகும். நீர்மைத்தன்மையைப் போற்றிப் பாதுகாக்க விரும்பும் பாங்கு ஒன்றுக்குச் சில செலவினங்கள் ஏற்படுகின்றன. குறைந்த செலவினங்களோடு எந்த பாங்கால் தன்னுடைய நீர்மைத்

[1] நீர்மைத் தன்மை குறித்த விரிவான விளக்கத்தை அத்தியாயம் எட்டில் காண்க.

தன்மையைக் காத்துக்கொள்ள முடிகின்றதோ, அந்த பாங்கே சிறந்த பாங்கு என்று நாம் கூறலாம். தன்னிடமுள்ள ஊதியச் சொத்துகளைப் (உண்டியல்கள், கடன்கள் போன்றவை) பிறரிடம் மாற்றுமல், தன்னுடைய நீர்மைத் தன்மையை ஒரு பாங்கானது போற்றிப் பாதுகாத்துக்கொள்ள விரும்பினுல், அந்த பாங்கிடம் போதுமான அளவுக்கு ரொக்கக் காப்பு இருப்புகள் இருக்க வேண்டியது அவசியமாகும். ஆனுல், துரதிருஷ்டவசமாக ரொக்கம் ஓர் ஆதாயமற்ற சொத்தாக விளங்குகிறது. ரொக்கத்தினின்றும் பாங்கருக்கு யாதொருவிதமான வருவாயும் கிட்டுவதில்லை. எனவே, தன்னிடமுள்ள ஊதியச் சொத்துகளைப் பிறரிடம் உடனடியாக மாற்றி (விற்று), பாங்கால் தனது நீர்மைத் தன்மையைக் காத்துக்கொள்ள முடியுமேயாயின், தன்னிடம் ஓரளவு ரொக்கத்தை மட்டிலும் (ஆதாயகரமற்ற சொத்தை) பாங்கானது வைத்திருப்பது போதுமானதாகும், இவ்வாறு குறைந்த அளவு ரொக்கத்தையே தன்னிடம் இருப்பாகப் பாங்கு ஒன்று வைத்திருக்குமேயாயின், தன்னுடைய நீர்மைத் தன்மையைப் போற்றிப் பாதுகாப்பதற்கு இந்தப் பாங்குக்கு ஆகக்கூடிய செலவினங்கள் மிக மிகக் குறைவானவையாகவே இருக்கும். எனவே, பாங்கிடமுள்ள ஊதியச் சொத்துக்களில், எந்த எந்த வகையைச் சேர்ந்தவற்றை எளிதில் பிறரிடம் மாற்றிவிட முடியுமோ, அவை யாவும் சிறந்த வகையைச் சேர்ந்த சொத்துகளாகும். தன்னுடைய நீர்மைத் தன்மையைப் போற்றிப் பாதுகாக்கும்போது, மற்றும் ஒரு முக்கியமான விஷயத்தைப் பாங்கு கருத்தில் கொள்ள வேண்டியது அவசியமாகும். நீடித்து வாழ விரும்பும் பாங்கு ஒன்று தனக்கு நேரக்கூடிய இழப்புகளைத் தவிர்க்கக்கூடிய ஆற்றல் பெற்றிருக்கவேண்டும். ஏனெனில், பாங்குக்கு இழப்பு நேருகிறது என்ருல், பாங்கிடமுள்ள சொத்துகளின் மதிப்புக் குறைந்துவிட்டது என்பதே பொருளாகும். சொத்துகளின் மதிப்புக் குறைந்து கொண்டே இருக்கும்போது, பாங்கின்மீது பொது மக்கள் வைத்துள்ள நம்பிக்கை அகன்றுவிடும். அதாவது இந்த பாங்கின் டெபாசிட்டுகளைப் பணத்திற்கு ஈடானவைகளாக மக்கள் கருத மாட்டார்கள். எனவே, நீர்மைத் தன்மையைப் போற்றிக் காக்க விரும்பும் ஒரு பாங்கு தனக்கு இழப்புகள் நேர்ந்துவிடாமல் கண்காணித்து வரவேண்டியது இன்றியமையாததாகும்.

இனி தனி பாங்கு முறையையும் கிளை பாங்கு முறையையும் ஒப்பிட்டு நோக்கி, அவற்ருல் நேரக்கூடிய நன்மைகளையும் கேடுகளையும் ஆராய்வோம். இந்த இரண்டு முறைகளையும் ஒப்பிட்டு நோக்குங்கால் நாம் மேற்குறித்த விஷயங்களை—பாங்குகள் ஆற்றி வரும் பணிகளையும், பாங்குகளின் வெற்றிக்கு உறுதுணையாக

அமையக்கூடிய நீர்மைத் தன்மையையும்—வாசகர்கள் மனத்தில் இருத்திக்கொள்ள வேண்டுவது இன்றியமையாததாகும்.[1] தனிப் பாங்கு முறை 'சிற்றளவு' (small-scale) நிறுவன அமைப்பை ஒக்கும்; கிளைப் பாங்கு முறை 'பேரளவு' (large-scale) நிறுவன அமைப்பை ஒக்கும். எனவே, நாம் தனிப் பாங்கு முறையையும், கிளைப் பாங்கு முறையையும் ஒப்பிடுவது, சிற்றளவு நிறுவன அமைப்பையும், பேரளவு நிறுவன அமைப்பையும் ஒப்பிடுவது போன்றதேயாகும். பேரளவு நிறுவனமான கிளை பாங்குக்குச் சில சிக்கன நலன்கள் (economics) கிட்டுகின்றன. பேரளவு அமைப்பினின்றும் கிடைக்கக்கூடியவையே இந்தச் சிக்கன நலன்கள் ஆகும். இந்தச் சிக்கன நலன்கட்குச் சில வரையறைகளும் உள்ளன. பாங்கர்களுடைய சேவைகட்குரிய மார்க்கெட்டை யொட்டியே இந்தச் சிக்கன நலன்கள் அமைகின்றன. வேலைப் பிரிப்பி (division of labour) னின்றும் கிடைக்கக்கூடிய நன்மைகள் யாவும் கிளை பாங்குகளுக்குக் கிடைத்துவருகின்றன. கிளை பாங்குகளில் வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கும் திறமை வாய்ந்த பணியாட்களிடையே வேலைப் பிரிப்பு சாத்தியமாகும். பாங்கு நிர்வாகம் குறித்த பொதுவான பிரச்சினைகளைத் திறமை வாய்ந்த பணியாட்கள் தங்களுக்குள் பகிர்ந்துகொள்ள முடியும். தங்களுடைய முழு நேரத்தையும் இது போன்ற வேலைகள் செய்வதில் இவர்கள் செலவு செய்ய முடியும். பாங்கின் சொத்துகளை எங்ஙனம் பகிர்ந்து வைத்திருப்பது நல்லது என்ற விஷயத்தை ஒருவர் கவனித்துக் கொள்ளலாம். கடன் வேண்டிப் பாங்கை அணுகக்கூடிய வியாபாரியிடமிருந்து எந்தவிதமான துணையீட்டைப் பெறுவது நல்லது என்பது போன்ற விஷயங்களை இன்னொருவர் கவனித்துக் கொள்ளலாம். ஊழியர்களைப் பாங்கில் வேலைக்கு அமர்த்தும் பணியில் மற்றொருவர் ஈடுபடலாம். இவ்வாறு பாங்கின் அலுவலில் அமர்ந்திருக்கக்கூடிய திறமையான பணியாட்களுக்குக் கிடையே வேலைப் பிரிப்பு ஏற்படுத்திக்கொள்ள முடியும். ஆனால் இந்தப் பணிகளுக்குக் கீழான பணிகளில் வேலைப் பிரிப்பு செய்வதென்பது சாத்தியமில்லை. கீழான பணிகளில் யாவும் தனித் தனியே ஒவ்வொரு கிளையாலும் ஆற்றப்பட்டு வருவதால், வேலைப் பிரிப்புக்கான வாய்ப்புகள் குறைகின்றன என்று கூறலாம். (எனினும், அண்மையில் நேர்ந்துள்ள இயந்திர சாதனக் கணக்

[1] இந்த அத்தியாயத்தில் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலுமுள்ள வாணிபப் பாங்கு முறைகளை மட்டிலும் நாம் ஒப்பிட்டு நோக்கியுள்ளோம். மைய பாங்கு முறைகளைப் பற்றி ஏதும் கூறவில்லை. இவ்விரு முறைகளின் தாரதரத்தைச் சீரிய முறையில் அறிந்துகொள்ள வேண்டுமாயின், இவ்விரு நாடுகளிலுமுள்ள மைய பாங்குகள், வாணிபப் பாங்குகளை நடவடிக்கைகளை எந்த அளவுக்கு ஆற்றலுடன் கட்டுப்படுத்துகின்றன என்பதையும் நாம் ஒப்பிடவேண்டும். இவ்வாறுள விளக்கத்தை 5, 9, 10 ஆகிய அத்தியாயங்களில் ஓரளவுக்குத் தந்துள்ளோம்.

கிட்டு முறைகளின் வளர்ச்சியையொட்டிப் பாங்குக் கிளைகளின் வேலைகளில் பெரும்பாலானவை தலைமை அலுவலகத்திலேயே செறிந்துள்ளன என்பதை நாம் அறிந்து கொள்ளவேண்டும்). கிளை பாங்குகள் குறைந்த அளவு ரொக்கக் காப்பு இருப்புகளைத் வைத்திருப்பதே போதுமானதாகும். போதுமான அளவு ரொக்கக் காப்பிருப்பகளைத் தம்மிடம் பாங்குகள் வைத்திருக்கவேண்டும் என்று மேலே நாம் கண்டோம். எனவே, கிளைப் பாங்குகள் குறைந்த அளவே ரொக்கக் காப்பு வைத்திருக்க வேண்டியதை, ஒரு குறிப் பிடத்தக்க நன்மை என்றே நாம் கருத வேண்டும். பெரிய பாங்கு ஒன்று தன்னுடைய ஒவ்வொரு அலுவலகத்திலும் குறைந்த அளவு ரொக்கக் காப்பிருப்பு வைத்திருப்பதே போதுமானதாகும். ஏனெனில், ஒரு கிளைக்குப் பணத்தேவை ஏற்பட்டால், அது ஏனைய கிளைகளிடமுள்ள ரொக்கங்களைப் பயன்படுத்திக்கொள்ள முடியும். தன்னிடமுள்ள சொத்துகள் சிலவற்றை, ஒரு கிளை யானது பிறிதோர் கிளையிடம் எளிதில் மாற்றிக் கொள்ள முடியும். அல்லது ஒரு கிளையானது ஏனைய கிளைகளிடமிருந்து உடனடி யாகக் கடன் பெற்றுக்கொள்ள முடியும். ஆனால், தனிப் பாங்கு களுக்கு இதுபோன்ற சலுகைகள் இல்லை. தனிப் பாங்கு ஒன்று தன்னிடமுள்ள சொத்துகளை உடனடியாகப் பிறிதொரு தனிப் பாங்கிடம் மாற்றிவிட முடியாது. அல்லது தனிப் பாங்கு ஒன்று உடனடியாகப் பிறிதொரு தனிப் பாங்கினிடம் கடன் பெற முடியாது. எனினும், அமெரிக்காவில் தொடர்பு பாங்கு முறை உருவாகியிருப்பதை யொட்டி, தனிப் பாங்கு மூறையின் இத் தன் மைத்தான கேடு ஓரளவுக்கு அகற்றப்பட்டுள்ளது என்று நாம் கருதலாம். தொடர்பு பாங்கு முறை வளர்ச்சியையொட்டி இந்தக் கேடு ஓரளவுக்கே அகற்றப்பட்டுள்ளது என்பதை நாம் ஈண்டு வலியுறுத்த விரும்புகிறேம். ஏனெனில், தொடர்பு பாங்கில் தனிப் பாங்கு ஒன்ருல் வைக்கப்பட்டுள்ள டெபாசிட்டுகளை மிகவும் ஆதாயகரமானவை என்று நாம் கொள்வதற்கில்லை. கிளை பாங்கு முறையில் ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்திற்குப் பணத்தைக் குறைந்த செலவில் வாடிக்கைக்காரர்களால் அனுப்ப முடியும். இவ்வாறு பணத்தை அனுப்பும்போது பாங்கின் ஓரிடத்திலுள்ள ஒரு கிளையின் செக் பிறிதோரிடத்திலுள்ள அதே பாங்கின் கிளையி லேயே செலுத்தப்படலாம். ஒரே பாங்கின் இரு கிளைகளுக்கிடை யேயும் இவ்வாறு நேரக்கூடிய கொடுக்கல் வாங்கல்களை மிக எளிதில் தீர்த்துக்கொள்ள முடியும். எனவே, குறைந்த செலவில் வாடிக்கைக்காரரால் பணம் அனுப்ப முடிகிறது. அமெரிக்க பாங்கு களும் ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்திற்குப் பணத்தை அனுப்பு வதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகின்றன. இந்தப் பணிக்குத் தொடர்பு பாங்கு முறை உறுதுணையாகத் திகழ்கிறது. எனினும்,

இந்தப் பணியை கிளை பாங்கு முறையானது தனிப் பாங்கு முறையைவிடக் குறைந்த செலவில் ஆற்ற முடிகின்றது.

கிளை பாங்குகள் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் நிறுவப்பெற்றிருப்பதால் நாட்டின் ஒரு குறிப்பிட்ட பகுதியில் உருவாகக்கூடிய மந்த நிலை கிளை பாங்கு முறை முழுவதையுமே பாதித்து விடுவதில்லை. ஒரு குறிப்பிட்ட பகுதி மட்டுமின்றி, நாடு முழுவதுமே மந்த நிலையால் பீடிக்கப்படலாம். இது போன்ற சூழ்நிலைகளில் தனிப் பாங்கு முறை மட்டிலுமன்றிக் கிளை பாங்கு முறையும் பெரிதும் பாதிக்கப்படும். பொதுவான மந்த நிலை உருவாகும்போது கூட, சில சமயங்களில் கிளைப்பாங்கு முறையைவிடத் தனிப் பாங்கு முறையே பெரிதும் பாதிக்கப்படலாம். நாட்டில் மந்த நிலை ஏற்படுவதையொட்டி முதற் கருவிப் பொருள்களைத் தயாரிக்கும் தொழிலகங்களும், நீடித்த நுகர்வுப் பொருள்களைத் தயாரிக்கும் தொழிலகங்களுமே பெரிதும் பாதிக்கப்படுகின்றன. இந்தத் தொழிலகங்கள் யாவும் நாட்டில் ஒரு குறிப்பிட்ட பகுதியிலேயே நிறுவப்பெற்றிருக்கலாம். இந்தப் பகுதியில் தனிப் பாங்குகள் மட்டிலுமே செயலாற்றிவருகின்றன என்று வைத்துக்கொள்வோம். இந்தத் தனிப் பாங்குகள் இந்தத் தொழிலகங்களுக்குப் பெருமளவு கடன் கொடுத்திருக்கும். மந்த நிலையினால் இந்தத் தொழில்களே பெரிதும் பாதிக்கப்படுவதால் தனிப் பாங்குகளும் பெரிதும் பாதிக்கப்படும். பொதுவான மந்த நிலை நேராதபோதும், சில குறிப்பிட்ட தொழில்களில் அவ்வப்போது மந்தநிலை உருவாகலாம். தேவைகளில் ஏற்படும் மாற்றங்களின் விளைவாகவும், புதிய சாதனங்கள் புகுத்தப்படுவதின் விளைவாகவும் சில தொழில்கள் குன்ற நேரலாம் (சில சமயங்களில் இவை பெரிதும் வீழ்ச்சியுற நேரலாம்). இந்தத் தொழில்கள் நாட்டில் ஒரு குறிப்பிட்ட பகுதியிலேயே செறிந்துள்ளன என்று வைத்துக்கொள்வோம், இந்தத் தொழில்களின் வீழ்ச்சியையொட்டி இந்தப் பகுதியில் செயலாற்றி வரக்கூடிய தனிப் பாங்குகள் பெரிதும் பாதிக்கப்படலாம். சில சமயங்களில் தனிப் பாங்குகள் நொடிக்க நேர்ந்தாலும் நேரலாம். இந்தப் பகுதியில் கிளை பாங்கு ஒன்றின் கிளைகள் நிறுவப்பெற்றிருந்தால் இந்தக் கிளைகளும் தொழில்களின் வீழ்ச்சியையொட்டி பாதிக்கப்படும். ஆனால் கிளை பாங்கு பெரிதும் பாதிக்கப்படாது. இந்தப் பகுதியில் நிறுவப்பெற்றுள்ள கிளைகளுக்கு நஷ்டம் நேர்ந்தபோதிலும் நாட்டின் ஏனைய பகுதியில் நிறுவப்பெற்றுள்ள கிளைகள் இலாபம் ஈட்டி வருவதால், கிளை பாங்குமுறை பெரிதும் பாதிக்கப்படுவதில்லை. ஓர் எடுத்துக்காட்டு இக் கருத்தைத் தெற்றென விளக்கும். 1929-க்கு முன்பே நாட்டின் சில பகுதிகளில் அமெரிக்க விவசாயத்தில் மந்த நிலை ஏற்பட்டது. எனினும், அவ்வமயம் அமெரிக்காவில் பொது

வாக வளமான சூழ்நிலையே நிலவி வந்தது, மந்த நிலையால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் விவசாயத்திற்குக் கடன்களை வழங்கியிருந்த பாங்குகள் நூற்றுக்கணக்கில் நொடித்துப்போயின. நாட்டில் பொதுவான பண வீக்க நிலை உலவியிருந்தபோதிலும் இந்த பாங்குகள் — தனிப் பாங்குகள் நூற்றுக்கணக்கில் வாழ்விழந்தன. இதே காலத்தில் இங்கிலாந்தில் லங்காஷயரிலுள்ள துணி ஆலைகளில் மந்த நிலை நேர்ந்ததையொட்டி லங்காஷயர் பகுதியில் அமைந்திருந்த கிளைகள் யாவும் பெரு நஷ்டம் அடைந்துகொண்டிருந்தன. எனினும், இதையொட்டி இங்கிலாந்து பாங்குகள் நொடிந்துபோகவில்லை. லங்காஷயர் பகுதியிலிருந்த கிளைகளின் மூலம் பாங்குகளுக்கு நஷ்டம் நேர்ந்தது உண்மைதான். ஆனால், நாட்டின் ஏனைய பகுதிகளில் நிறுவப்பெற்றிருந்த கிளைகள் இலாபம் ஈட்டிக்கொண்டிருந்தமையால் இங்கிலாந்திலுள்ள கிளை பாங்குகள் பெரிதும் பாதிக்கப்படவே இல்லை. அவ்வமயம் இங்கிலாந்தில் தனிப் பாங்குகளே செயலாற்றி வந்திருக்கும்பட்சத்தில், அவை யாவற்றிற்கும் பெரு இழப்புகள் நேர்ந்திருக்கும்; அவற்றுள் பெரும்பான்மை வீழ்ச்சியுற்றிருக்கும்.

இதுகாறும் தனிப் பாங்கு முறையைவிடக் கிளை பாங்கு முறையே பயனுள்ளது என்று நாம் கூறினோம். எனினும், கிளை பாங்கு முறையிலுள்ள சில கேடுகளையும் நாம் உணரவேண்டியது அவசியமாகும். ஆடம்-ஸ்மித் அவர்களின் பொதுவான கருத்து ஒன்றினை ஈண்டு நினைவுகூர்தல் நன்மை பயக்கும், 'வேலைப் பிரிப்பு, மார்க்கெட்டின் அளவினையொட்டியே சாத்தியமாகும்' என்பது ஆடம் ஸ்மித்தின் கூற்றாகும். பாங்குகள் ஆற்றிவரும் உள்நாட்டுப் பணிகளைப் பொறுத்தவுரையில் ஆடம்-ஸ்மித் அவர்களின் கூற்றுப் பொருந்தும் என்று கொள்வதற்கில்லை. எனினும், வெளி நாடுகளில் கிளைகளைப் பாங்குகள் நிறுவ முனைந்தால் சில கேடுகள் தொடரும் நாட்டிற்கு நாடு மொழி வேறுபடுகின்றது. நாட்டிற்கு நாடு செலாவணி வேறுபடுகின்றது. மற்றும் வர்த்தகச் சட்டங்களும் முறைகளும் நாட்டிற்கு நாடு பெரிதும் வேறுபடுகின்றன. எனவே, அயல் நாடுகளில் கிளைகளை நிறுவ முயலுவதைவிடத் தங்களுடைய நாடுகளிலேயே தங்கள் பாங்குத் தொழிலை ஆற்றிவருவதே பாங்குகளுக்கு நன்மை தரும். பாங்குகளுக்கு அயல் நாட்டுத் தொடர்புகள் இருந்தபோதிலும், இந்த அயல்நாட்டுத் தொழில்களை அங்குள்ள துணைப் பாங்குகளின் உதவியாலேயே பாங்குகள் நடத்திவருகின்றன. இந்தத் துணைப் பாங்குகளைப் பெரும்பாலும் அந்தந்த நாடுகளிலுள்ள பாங்கர்களே சுயமாக நிர்வகித்து வருகின்றனர். பொதுவாக, நாடுகளுக்கு இடையே நேரக்கூடிய பாங்குப் பணிகள் யாவற்றையும் தனித்

திறமை வாய்ந்த நிறுவனங்களே ஆற்றி வருகின்றன. இந்தத் திறமை வாய்ந்த நிறுவனங்கள் அயல்நாட்டுப் பாங்குகள் எனப் படும்.

தனிப் பாங்கு முறைக்கு ஆதரவாகச் சிலர் கீழே தரப்பட்டுள்ள கருத்தை வெளியிடுகின்றனர். உள்நாட்டில் சில குறிப்பிட்ட பகுதிகளில், சில குறிப்பிட்ட பொருள்களுக்கான மார்க்கெட்டுகள் உருவாகியுள்ளன. இதுபோன்ற சூழ்நிலையில் கிளைப் பாங்கு முறையைவிடத் தனிப் பாங்கு முறையே பெரிதும் பயனுடையதாக இருக்கும், தனிப்பாங்கு எந்தப் பகுதியில் நிறுவப்பெற்றிருக்கின்றதோ அந்தப் பகுதியில் நிலவும் வியாபார நிலைமைகளைத் தனிப் பாங்கர் நன்கு அறிந்திருப்பார். வியாபாரிகளைப் பற்றி நேரடியாகவே அறிந்து கொள்ளும் வாய்ப்பு பாங்கருக்குக் கிடைக்கின்றது. எந்த வியாபாரி திறமையானவர், எந்த வியாபாரி திறமை குன்றியவர் என்று தனிப் பாங்கரால் தீர்மானிக்க முடியும். எந்த வியாபாரி நாணயமானவர், எந்த வியாபாரி நாணயமற்றவர் என்றும் தனிப் பாங்கரால் தீர்மானிக்க முடியும். இங்கிலாந்தில் பத்தொன்பதாம் நூற்றுண்டில் நிலவிய தனியார் பாங்கர்கள் இதுபோன்றே நிலைமையை நேரடியாக அறிந்திருந்தனர். தனியார் பாங்கு யாண்டு நிறுவப்பெற்றிருந்ததோ, ஆண்டு வசித்து வந்த குடும்பங்களின் வரலாற்றைப்பற்றித் தனி பாங்கர் நன்கு அறிந்திருந்தார். யாருக்குக் கடன் தருவதால் கேடு இல்லை; யாருக்குக் கடன் தருவதால் கேடு விளையலாம் என்பன குறித்தும் தனியார் பாங்கரால் தீர்மானிக்க முடிந்தது. எனினும், இந்த வாதத்தை நம்மால் மறுத்துரைக்க முடியும். குடும்ப வரலாற்றின் அடிப்படையில் மனிதர்களின் நாணயத்தை எளிதில் தீர்மானித்துவிட முடியாது. ஒரு நல்ல குடும்பத்தோடு பாங்கருடைய தந்தைக்கும் பாட்டனுருக்கும் நெருங்கிய தொடர்பு இருந்திருக்கலாம். எனவே, நாணயக் குறைவான ஒரு நபர்—இந்த நல்ல குடும்பத்தைச் சேர்ந்த நபர்—தன்னை அணுகிக் கடன் கேட்கும்போது மறுத்துரைக்க மனமின்றி அவருக்குப் பாங்கர் கடன் வசதிகளை ஏற்பாடு செய்யவேண்டியதிருக்கும். இந்த விஷயத்தில் கிளை பாங்கு முறையே சிறந்து விளங்குவதாக எமக்குத் தோன்றுகின்றது. இருவகையான கேடுகளையும் கிளை பாங்கரால் தவிர்க்க முடிகின்றது. அதாவது, நாணயக் குறைவானவருக்குக் கடன் தராவிடினும், அவருடன் பாங்கரால் தொடர்புகளை வைத்துக்கொள்ள முடிகின்றது. கிளை பாங்கு மானேஜர்கள் அந்தந்தப் பகுதியில் உள்ள மக்களுடன் நெருங்கிப் பழகவேண்டும் என்பதே கிளை பாங்கரின் ஆவலாகும். கோல்ஃப் மைதானம் போன்ற இடங்களில் அன்னாருடன் கலந்து பழகுவதற்

கான வாய்ப்புகளை உருவாக்கிக்கொள்ளவேண்டும் என்று கருது கின்றனர். இந்த விதத்தில் கிளை மானேஜர்களைக் கிளை பாங்கர்கள் ஊக்குவித்தும் வருகின்றனர். இதன் விளைவாக கிளை மானேஜர் அந்தப் பகுதியிலுள்ள மக்களை நேரடியாகவே அறியும் வாய்ப்புக் கிடைக்கின்றது. தன்னுடைய வாடிக்கைக்காரர்களைப் பற்றியும், அன்னார் தம் குடும்பத்தைப்பற்றியும், கிளை மானேஜரால் நேரடியாக அறிந்துகொள்ள முடியும். கடந்த காலத்தில் தனியார் பாங்கர் எந்த அளவுக்கு இதுபோன்ற விஷயங்களை அறிந்திருந் தாரோ, அந்த அளவுக்குத் தற்சமயம் கிளை மானேஜரால் அறிய முடியும். எனினும், ஒருவருக்குக் கடன் ஏற்பாடுகள் செய்யும் போது கிளை மானேஜர் தம் விருப்பப்படி நடந்துகொள்ள முடிவ தில்லை. நெடுந் தொலைவிலுள்ள தலைமை அலுவலகத்தின் அனுமதி பெறவேண்டியிருக்கும். இதனால், ஒரு நன்மை விளை கின்றது. ஒரு குறிப்பிட்ட வாடிக்கைக்காரர் தன்னை அணுகிக் கடன் கேட்கும்போது கிளை மானேஜர் தலைமை அலுவலகத்துடன் தொடர்புகொள்வார். இந்த வாடிக்கைக்காரரைப்பற்றித் தாம் அறிந்துள்ளவை யாவற்றையும் தலைமை அலுவலகத்திற்கு அறி விப்பார். இவருக்குக் கடன் வசதிகளை அளிப்பது உகந்ததல்ல என்று முடிவு கட்டப்பட்டால், இந்த வாடிக்கைக்காரருடன் தமக் குள்ள தொடர்புகளுக்கு எந்தவிதமான குந்தகமும் ஏற்படாத வகையில், கிளை மானேஜர் கடன் வசதிகளை மறுத்துரைக்க முடியும். தலைமை அலுவலகத்தின்மேல் இந்தப் பொறுப்பைச் சுமத்திவிட முடியும். தனிப் பாங்கு முறையில் இது சாத்திய மில்லை. கிளை பாங்கு முறையில் கிளை மானேஜர் மட்டுமன்றித் தலைமை அலுவலகமும் ஒருங்கே ஆலோசித்தபின் கடன் வசதி களை ஏற்பாடு செய்துவருவதால் இது சாத்தியமாகின்றது.[1]

இதுகாறும் நாம் கூறியவற்றினின்றும் தனிப் பாங்கு முறையை விடக் கிளை பாங்கு முறையே பலவிதத்திலும் சிறந்தது என்பதை உணரலாம். பாங்கு முறை செம்மையாக வளர்ச்சியுற்றிராத நாடு களில் கிளை பாங்கு முறையையொட்டியே பாங்குகள் உருவாகும் என்று நாம் எதிர்பார்க்கலாம். இதுவே இயற்கையான முறை யாகும். அரசியலின் அடிப்படையில் எழுந்த சில தவறான எண்ணங்களும், சட்டத்தின் அடிப்படையில் அமைந்துள்ள சில

[1] தனக்குக் கடன் வசதிகள் கிடைக்காததற்குக் கிளை மானேஜர் பொறுப்பு என்றும், கிளை மானேஜருடனான தன்னுடைய தொடர்புகளைத் துண்டித்துக் கொள்ளவேண்டும் என்றும் வாடிக்கைக்காரர் எண்ணவிடாமல் மட்டும் ஒரு கிளை மானேஜர்—ஒரு சிறந்த கிளை மானேஜர்—கவனித்துக் கொள்ளுவது போதுமான தாகாது. எந்தத் தொழில் முயற்சிக்கு வாடிக்கைக்காரர் கடன் பெற முயலுகின் றாரோ, அந்தத் தொழில் முயற்சி ஆபத்தானது என்றும், அதை அவர் கைவிட்டு விடுவதே உசிதமானது என்றும், வாடிக்கைக்காரர் உணரும் வகையில் ஒரு கிளை மானேஜர்—ஒரு சிறந்த கிளை மானேஜர்—நடந்துகொள்ளவேண்டும்.

தடைகளும், இந்த இயற்கையான முறையின் வளர்ச்சியை அமெரிக்காவில் தடைசெய்துவிட்டன என்றே கூறவேண்டும். இங்கிலாந்திலும் டொமினியன்களிலும் கிளை பாங்கு முறையை யொட்டியே பாங்கு முறைகள் உருவாகியுள்ளன. அமெரிக்கா நீங்கலாகவுள்ள ஏனைய உலக நாடுகளிலும், கிளை பாங்கு முறையையொட்டியே பாங்கு முறைகள் உருவாகி வருகின்றன. எனவே, கிளை பாங்கு முறையைப் பொதுவான விதியாகக் கருதி, அமெரிக்கத் தனிப் பாங்கு முறையை ஒரு விதிவிலக்காகக் கொள்வதில் தவறு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை.

## 2. பாங்கர்களின் செக் தீர்வகம்

வாணிபப் பாங்குகள் ஆற்றிவருகின்ற பணிகள் யாவை என்று மேலே கண்டோம். பாங்கு டெபாசிட்டுகளை ஒரு நபரின் பெயரிலிருந்து பிறிதோர் நபரின் பெயருக்கு மாற்றுவது, வாணிபப் பாங்குகளின் பணிகளுள் ஒன்றாகும் என்று கண்டோம். கிளை பாங்கு முறை உருவாகியுள்ள ஒரு நாட்டில் இது மிக எளிதாக நடக்கக்கூடிய ஒரு செயலாகும். உதாரணமாக ஒரு கிளை பாங்கின் லண்டன் கிளையில் கணக்குவைத்துள்ள ஒரு நபரின் பெயரிலிருந்து, அதே பாங்கின் ஆக்ஸ்ஃபோர்டு கிளையில் கணக்கு வைத்துள்ள பிறிதொரு நபரின் பெயருக்கு டெபாசிட்டுக்களை எளிதில் மாற்றிவிட முடியும். இரண்டு கிளைகளும் ஒரே பாங்கின் கிளைகளாகத் திகழ்வதால் இவ்வாறு பணத்தை ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்திற்கு எளிதில் அனுப்பமுடிகின்றது. தனிப் பாங்கு முறையிலும் இது சாத்தியமாகும். தனிப் பாங்குகள் தொடர்புப் பாங்கு முறையால் இணைக்கப்பட்டிருக்கும் பட்சத்திலேயே இது சாத்தியமாகும். ஒன்றுடன் ஒன்று தொடர்புள்ள இரண்டு தனிப் பாங்குகளுக்கிடையே எளிதில் பணத்தை அனுப்பிவைக்க முடியும். ஆனால், இரு வேறு பாங்குகளுக்கு இடையேயும் யாதொரு விதமான தொடர்பும் கிடையாது என்று நாம் வைத்துக்கொண்டால், இவ்வாறு பணத்தை எளிதில் ஓரிடத்தினின்றும் பிரிதோரிடத்திற்கு அனுப்பமுடியாது. பார்க்லேஸின் வாடிக்கைக்காரர் மிட்லண்டின் வாடிக்கைக்காரருக்கு ஒரு செக் கொடுக்கும்போது, பார்க்லேஸிலிருந்து மிட்லண்டுக்கு டெபாசிட்டுகள் எங்ஙனம் மாற்றப்படுகின்றன என்பதை நாம் அறியவேண்டியது அவசியமாகும்.

பார்க்லேசுக்கும் மிட்லண்டுக்கும் இடையே இவ்வாறான தொடர்புகளை ஏற்படுத்தும் பணியில் பாங்கர்களின் செக் தீர்வகம்

(Bankers clearing house) ஈடுபட்டுள்ளது. பாங்குகளுக்கிடையே நேர்கின்ற கடன்களைத் தீர்த்துவைப்பதே செக் தீர்வகத்தின் பணியாகும். லண்டன் செக் தீர்வகத்தில் இரு பிரிவுகள் உள்ளன. அவை, நகரத் தீர்வு (Town clearing), பொதுத் தீர்வு (General clearing) எனப்படும். லண்டன் மாநகரின் நிதி மாவட்டத்திற்குட்பட்ட பகுதிகளே நகரத் தீர்வின் எல்லைகளாகும். எஞ்சியுள்ள இங்கிலாந்து நாடு பொதுத் தீர்வின் எல்லைகளாகத் திகழ்கின்றது. இவை நீங்கலாகத் தொழிற்சாலைகள் செறிந்துள்ள சில நகரங்களில், மாகாணத் தீர்வுகளும் நடைபெற்று வருகின்றன. அந்தந்தப் பகுதிகளில் தோன்றக்கூடிய செக்குகளைத் தீர்த்துவைக்கும் பொருட்டுப் பாங்குகளே தங்களுக்குள் இவ்வாறான ஏற்பாடுகளைச் செய்துள்ளன. இந்த அத்தியாயத்தில் செக் தீர்வு முறைகளைப் ஏதும் கூறாமல் விடுத்து லண்டன் செக் தீர்வகத்தில் மட்டும் நம் கவனத்தைச் செலுத்துவோம்.[1]

ஒரு பாங்கில் கணக்கு வைத்திருப்பவர்கள், ஏனைய பாங்குகளில் கணக்கு வைத்திருப்பவர்களுக்கு, ஒவ்வொரு நாளும் செக்குகளை அளித்தவண்ணம் இருக்கின்றனர். ஏனைய பாங்குகளின்மீது வரையப்பட்டுள்ள செக்குகள் ஒரு பாங்கிடம் தொடர்ந்து ஒவ்வொரு நாளும் வந்துகொண்டே இருக்கின்றன. ஏனைய பாங்குகளிலுள்ள டெபாசிட்டுகளின் மீது இந்த பாங்கு பெற்றுள்ள பாத்தியதைகளையே இந்தச் செக்குகள் உணர்த்துகின்றன. செக்குகளைப் பெற்றுள்ள இந்த பாங்கு ஏனைய பாங்குகளுக்குக் கடன் ஈவோனுகத் (Creditor) திகழ்கிறது. இதே போல இந்த பாங்கின் மீது வரையப்பட்டுள்ள செக்குகள் ஏனைய பாங்குகளிடம் வந்து சேருகின்றன. தன்மீது வரையப்பட்டுள்ள செக்குகளின் மொத்தத்தொகை எவ்வளவோ அந்த அளவுக்கு இந்த பாங்கு ஏனைய பாங்குகளுக்குக் கடனாளியாகிறது. இந்த பாங்கின் டெபாசிட்டுகளின் மீது ஏனைய பாங்குகளுக்கான பாத்தியதைகளையே இந்தச் செக்குகள் உணர்த்துகின்றன. பாங்குகளிடம் இவ்வாறு வந்து சேர்ந்துள்ள செக்குகள் யாவும் செக் தீர்வகத்திற்கு அனுப்பப் பெறுகின்றன. செக் தீர்வகத்தில் ஒவ்வொரு நாளும் இரண்டு வேளைகளில் செக்குகள் தீர்த்து வைக்கப்படுகின்றன. ஓர் எடுத்துக்காட்டுக் காண்போம். செக் தீர்வகத்தில் ஏனைய பாங்குகள் பார்க்லேஸ் பாங்கின்மீது வரையப்பட்டுள்ள செக்குகளைப் பார்க்லேஸிடமே கொடுக்கின்றன. தன்னிடமுள்ள ஏனைய பாங்குகளின்மீது வரையப்பட்ட செக்குகளை

[1] செக்குகள் பொதுவாக எங்ஙனம் தீர்வு பெறுகின்றன என்று மட்டிலும் ஈண்டுக் குறித்துளேளாம். விரிவான விளக்கம் 'பிற்சேர்க்கை' யில் தரப்பட்டுள்ளது.

பார்க்லேஸ் பாங்கானது இந்த பாங்குகளிடம் கொடுக்கிறது. இந்தச் செக்குகளின் மதிப்புத்தொகைகளை ஒன்ருகக் கூட்டுவர். ஒரு பாங்கானது பிறிதோர் பாங்குக்குக் கடன்பட்டிருக்கும்; அதே சமயம், பிறிதோர் பாங்கானது இந்த பாங்குக்குக் கடன் பட்டிருக்கும். எனவே இவற்றை ஈடுசெய்கின்றனர். ஈடுசெய்த பின்னும் பார்க்லேஸ் பாங்குக்கு, லாயிட்ஸ் பாங்கிடமிருந்து 1 மில்லியன் பவுன்கள் வரவேண்டியுள்ளது என்று வைத்துக் கொள்வோம் பார்க்லேஸின்மீது வரையப்பட்டுள்ள செக்குகளைப் பார்க்லேஸிடமே லாயிட்ஸ் பாங்கு கொடுத்துவிடுகின்றது. இதே போல லாயிட்ஸின் மீது வரையப்பட்டுள்ள செக்குகளை லாயிட் ஸிடமே பார்க்லேஸ் பாங்கு கொடுத்து விடுகின்றது. இவ்வாறு இந்த இரு பாங்குகளும் தன்னிடமுள்ள செக்குகளைப் பரிவர்த்தனை செய்த பின்னும் பார்க்லேஸ் பாங்குக்கு லாயிட்ஸ் பாங்கிடமிருந்து ஒரு மில்லியன் பவுன் வரவேண்டியிருக்கும். இவ்விரு பாங்கு களுக்கும் ஏனைய பாங்குகளுக்கும் இடையே உள்ள கொடுக்கல் களும் வாங்கல்களும் சமமாக அமைகின்றன என்று வைத்துக் கொண்டால், இங்கிலாந்து தலைமைப் பாங்கிலுள்ள தன்னுடைய டெபாசிட்டுகளின்மீது வரையப்பட்ட செக் ஒன்றினை (1 மில்லியன் பவுன் மதிப்புடையது) லாயிட்ஸ் பாங்கானது பார்க்லேஸ் பாங் கிடம் கொடுக்கும். இவ்வாறு லாயிட்ஸ் பாங்கு தன்னுடைய கடனைத் தீர்த்துக்கொள்கிறது. நாம் ஈண்டுக் கொடுத்துள்ள விளக்கம் சிக்கல்கள் ஏதும் புகுத்தப்பெருத எளிதான விளக்க மாகும். உண்மையில் செக்குகள் தீர்வுபெறும் முறை இதைவிடச் சிக்கலான ஒரு முறையேயாகும். எனினும், இந்த விளக்கத்தின் மூலம் ஓர் அடிப்படையான உண்மை நமக்குப் புலனுகிறது. அதாவது, ஏனைய பாங்குகளின்மீது வரையப்பட்ட செக்குகளை ஒரு பாங்கு பெற்றிருந்த போதிலும், இந்த பாங்கின்மீது வரையப் பட்ட செக்குகளும் ஏனைய பாங்குகளிடம் உள்ளன. இந்த இரு வகையான செக்குகளையும் செக் தீர்வகம் ஈடு செய்ய முயலு கின்றது. இவ்வாறு ஈடுசெய்த பின்னும் ஒரு பாங்கு பிறிதொரு பாங்குக்குப் பணம் கொடுக்கவேண்டியதிருந்தால், இந்த பாங்கானது தன்னுடைய பெயரில் இங்கிலாந்துத் தலைமை பாங்கிலுள்ள டெபாசிட்டுகளைப் பயன்படுத்திக் கடனைத் தீர்க் கின்றது.

லாயிட்ஸிடமுள்ள பார்க்லேஸின்மீது வரையப்பட்டுள்ள செக்குகளின் மொத்த மதிப்பைவிட, பார்க்லேஸிடமுள்ள லாயிட் ஸின்மீது வரையப்பட்டுள்ள செக்குகளின் மொத்த மதிப்பு 1 மில்லியன் பவுன்கள் அதிகமானது என்று நாம் மேலே கொடுத் துள்ள உதாரணத்தில் வைத்துக்கொண்டோம். இந்தச் செக்குகள்

யாவும் தீர்வு பெற்ற பின் நேரக்கூடிய விளைவுகள் யாவை என்பதை இனிக் காண்போம். லாயிட்ஸ் பாங்கைப் பொறுத்தவரையில் அதனுடைய டெபாசிட்டிகள் 1 மில்லியன் பவுன்கள் குறைந்திருக்கும் (அதாவது ஏனைய பாங்குகளின் வாடிக்கைக்காரர்களிடமிருந்து தாங்கள் பெற்றுள்ள பணத்தைவிட லாயிட்ஸ் பாங்கின் வாடிக்கைக்காரர்கள் அவர்களிடம் 1 மில்லியன் பவுன்கள் அதிகமாகச் செலுத்தியுள்ளனர்). இதற்கு ஈடாக லாயிட்ஸின் சொத்துக்களும் குறைவுறும். 'இங்கிலாந்துத் தலைமை பாங்கிடமுள்ள ரொக்கம்' என்ற இனம் 1 மில்லியன் பவுன்கள் குறைந்திருக்கும். ஆனால், பார்க்லேஸின் பொறுப்புகள்—அதாவது டெபாசிட்டுகள்—ஒரு மில்லியன் பவுன்கள் அதிகமாகி இருக்கும். இதற்கு ஈடாக பார்க்லேஸின் சொத்துக்களும் அதிகரித்திருக்கும். அதாவது, 'இங்கிலாந்துத் தலைமை பாங்கிடமுள்ள ரொக்கம்' என்ற இனம் 1 மில்லியன் பவுன்கள் அதிகரித்திருக்கும். எனினும் நாட்டிலுள்ள மொத்தப் பாங்கு டெபாசிட்டுகளில் எந்தவிதமான மாற்றமும் நேர்ந்திருக்காது. இதேபோல, 'இங்கிலாந்து தலைமை பாங்கிலுள்ள ரொக்கம்' (இதைப் பொதுவாக 'பாங்கர்களின் டெபாசிட்டுகள்' என்ற பெயராலேயே அழைக்கின்றனர்.) என்ற இனத்தின் மொத்த மதிப்பில் ஒரு சிறிதும் மாற்றம் நேர்ந்திருக்காது. டெபாசிட்டுகள் ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்திற்கு மாற்றப்பட்டுள்ளன; இதற்கு மேலாக வேறொன்றும் நிகழவில்லை. எனவே, நாட்டிலுள்ள பண அளிப்பைப் பொறுத்தவரையில் இந்த மாற்றங்கள் முக்கியத்துவம் உடையவை என்று கருதுவதற்கில்லை. நாட்டில் சாதாரணமாகப் பாங்குகள் ஆற்றிவரும் பணிகளையொட்டி இவ்வாறான மாற்றங்கள் நேர்ந்தவண்ணமேயுள்ளன. இவ்வாறான மாற்றங்கள் சாதாரணமாகக் குறைந்த அளவினதாகத் தாற்காலிகமாகவே நேருகின்றன. ஆனால், பொது மக்கள் தொடர்ந்து குறிப்பிடத்தக்க வகையில் லாயிட்ஸ் பாங்கின் பணிகளைவிட மிட்லண்ட் ப்ாங்கின் பணிகளையே பெரிதும் நாடினால், லாயிட்ஸ் பாங்கின் டெபாசிட் பொறுப்புகள் தொடர்ச்சியாகக் குறைந்துகொண்டே போகும். இதற்கு ஈடாக லாயிட்ஸ் பாங்கின் ரொக்கக் காப்பிருப்புகளும் குறைந்துகொண்டே போகும். டெபாசிட்டுகளும், ரொக்கக் காப்பு இருப்புகளும் சமமாகக் குறைவதையொட்டி லாயிட்ஸ் பாங்கின் ரொக்க விகிதம் பெரிதும் குறையும். இவ்வாறான மாற்றங்கள் குறிப்பிடத்தக்க அளவு நேர்ந்தால், தான் பிறருக்கு ஏற்பாடு செய்துவரும் கடன் வசதிகளை லாயிட்ஸ் பாங்கானது விரைவில் குறைத்துக்கொள்ள வேண்டியது இருக்கும். ரொக்க விகிதத்தின் முக்கியத்துவம்பற்றி அடுத்து விவாதிப்போம்.

## 3. டெபாசிட்டுகளின்மீது பாங்குகளின் பொதுவான கட்டுப்பாடு

தங்கள்மீது பிறர் கொண்டுள்ள பாத்தியதைகளை உணர்த்தும் வகையில் தங்களுடைய ஏடுகளில் பாங்குகள் குறித்துள்ள தொகைகளே பாங்கு டெபாசிட்டுகளாகும். ஏற்கெனவே, இது போன்ற விளக்கத்தை நாம் முதலாவது அத்தியாயத்தில் கொடுத்துள்ளோம். தங்களுடைய பெயரில் பாங்குகளிடமுள்ள டெபாசிட்டுகளைப் பொதுமக்கள் பண இருப்புகளாகவே கருதுகின்றனர். சொத்துகளுக்கு ஈடாகவே பாங்குகள் டெபாசிட்டுகளை உற்பத்தி செய்கின்றன. தங்களிடமுள்ள சொத்துகளில் ஏதேனும் ஒன்றினைப் பொதுமக்கள் பாங்குகளிடம் கொடுக்கின்றனர். இதற்கு ஈடாக பாங்குகள் டெபாசிட்டுகளை உற்பத்தி செய்கின்றன. பாங்கு டெபாசிட்டுகளைப் பயன்படுத்தி, நாட்டிலுள்ள செல்வ வளங்களைப் பயன்படுத்த முடியும். வர்த்தகருக்கும் நுகர்வோருக்கும் பாங்கு டெபாசிட்டுகள் இந்த வகையில் பெரிதும் பயன்படுகின்றன. செல்வ வளங்களைப் பயன்படுத்தி உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை நுகர்வோரிடம் வர்த்தகர் விற்பதற்குத் துணையாகப் பாங்கு டெபாசிட்டுகள் அமைந்துள்ளன. நாட்டிலுள்ள செல்வ வளங்களைப் பயன்படுத்துவதற்குப் பாங்கு டெபாசிட்டுகள் இவ்வாறு பயன்படுவதால், அவை பொருளாதார முக்கியத்துவம் பெற்றுத் திகழ்கின்றன. பாங்கு டெபாசிட்டுகளில் இரண்டு வகைகள் உள்ளன. வருவாய் டெபாசிட்டுகள் (Income Deposits) ஒரு வகையைச் சேர்ந்தவை. வர்த்தக டெபாசிட்டுகள் (Business Deposits) இரண்டாம் வகையைச் சேர்ந்தவையாகும். வருவாய் டெபாசிட்டுகளையும் வர்த்தக டெபாசிட்டுகளையும் ஒருங்கு இணைத்து, அவற்றை 'ரொக்க டெபாசிட்டுகள்' (Cash Deposits) என்ற பெயரிட்டு அழைக்கின்றனர். கடன்களைத் தீர்ப்பதற்குப் பயன்படக் கூடியவை இந்த 'ரொக்க டெபாசிட்டுகளே' யாகும். எனவே, சில ஆசிரியர்கள் ரொக்க டெபாசிட்டுகளுக்கு மட்டிலும் பணம் என்ற பெயரை வழங்க முன்வந்துள்ளனர். ஏனைய டெபாசிட்டுகளைப் பணம் என்று இவர்கள் கருதுவதில்லை. மொத்த டெபாசிட்டுகளில் ரொக்க டெபாசிட்டுகள் தவிர எஞ்சியுள்ளவற்றை மக்கள் வர்த்தகத்திற்கோ, வருமானமாகவோ பயன்படுத்துவதில்லை. இந்த எஞ்சிய பகுதியை முதலீடுகளுக்கோ, சேமிப்புகளுக்கோ மட்டிலும் மக்கள் பயன்படுத்துகின்றனர். இத்தன்மைத்தான டெபாசிட்டுகள் பொதுவாக 'சேமிப்பு டெபாசிட்டுகள்' (Saving Deposits) எனப்படும். தங்களுடைய உடனடியான தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக மக்கள் சேமிப்பு டெபாசிட்டுகளை வைத்திருப்பதில்லை. மக்களுடைய சேமிப்புகளாகவோ,

அன்றித் தனியார்களின் மூலதனமாகவோ சேமிப்பு டெபாசிட்டுகள் திகழ்கின்றன.

ரொக்க டெபாசிட்டுகளைப்பற்றி நன்கு அறிந்தவர்கள், ரொக்க டெபாசிட்டுகளும் சேமிப்பு டெபாசிட்டுகளும் முற்றிலும் வேறுபட்டவை என்று கூறமாட்டார்கள். இவை இரண்டிற்கும் இடையே ஓரளவுக்குத்தான் வேறுபாடுகள் உள்ளன என்று கூறுவார்கள். அவ்வப்போது வரவுகளைவிடச் செலவுகள் அதிகமாக நேரலாம். இது போன்ற காலங்களில் பயன்படுத்தும் நோக்கத்துடனேயே மக்கள் பணத்தை இருப்பாக வைத்துள்ளனர். அடுத்த வாரம் ஒருவேளை நெடுந்தொலைவு ரெயிலில் பயணம் செல்லவேண்டி நேரலாம் என்று கருதி, இதற்காக ஒருவர் சிறிதளவு பணத்தை இருப்பாக வைத்திருக்கலாம். அடுத்த ஆண்டு ஒருவேளை மருத்துவச் செலவு நேரலாம் என்று கருதி, அதே நபர் சிறிதளவு பணத்தை இருப்பாக வைத்திருக்கலாம். இந்த நபரிடமுள்ள இவ் இருவகையான இருப்புகள் முற்றிலும் வெவ்வேருனவை என்று கருதிவிட முடியாது. ரொக்க டெபாசிட்டுகளும், சேமிப்பு டெபாசிட்டுகளும் வெவ்வேறு வகைகளைச் சேர்ந்தவை என்று கருத முடியாவிடினும், இவை இரண்டிற்கும் இடையே பெருமளவு வேறுபாடுகள் உள்ளன. தங்களுடைய வசதிக்காகவே மக்கள் ரொக்க டெபாசிட்டுகள் வைத்துள்ளனர் இது தவிர, வேறு எந்த விதமான பயனையும் மக்கள் ரொக்க டெபாசிட்டுகளினின்றும் எதிர்பார்ப்பதில்லை ஆனால், சேமிப்பு டெபாசிட்டுகளைத் தங்கள் வசதிக்காகவே மக்கள் வைத்திருக்கின்றனர் என்று கொள்வதற்கில்லை, சேமிப்பு டெபாசிட்டுகளின்றும் ஓரளவு வட்டி வருவாயை மக்கள் எதிர்பார்க்கின்றனர். முதலீடு செய்வதற்குச் சிறந்த வாய்ப்புகள் இருக்கும்பட்சத்தில், மக்கள் சேமிப்பு டெபாசிட்டுகளை முதலீடு செய்யவும் முன்வருகின்றனர்.

அன்றாடத் தேவைகளுக்கும் பயன்படுத்தப்படாத டெபாசிட்டுகளே 'சேமிப்பு டெபாசிட்டுகள்' என்று விளக்கம் தரப்படுகின்றது. அன்றாடத் தேவைகளுக்குச் சேமிப்பு டெபாசிட்டுகளை ஒருவர் பயன்படுத்த விரும்பினுல், அவர் தமது சேமிப்பு டெபாசிட்டுகளின் ஒரு பகுதியை ரொக்க டெபாசிட்டுகளாக மாற்றுவார். உதாரணமாக, மருத்துவருக்குப் பணம் தர வேண்டி ஒருவர் தம்முடைய சேமிப்பு டெபாசிட்டுகளில் ஒரு பகுதியை ரொக்க டெபாசிட்டுகளாக மாற்றலாம் அரசாங்கப் பத்திரங்களை விலைக்கு வாங்குவதற்காகவும் இவர் தம்மிடமுள்ள சேமிப்பு டெபாசிட்டுகளில் ஒரு பகுதியை ரொக்க டெபாசிட்டுகளாக மாற்ற முயலலாம். இதே போலத் தம்மிடமுள்ள ரொக்க டெபாசிட்டுகளைத் தாம் விரும்பிய

வண்ணமே மக்கள் சேமிப்பு டெபாசிட்டுகளாக மாற்றிக்கொள்ள முடியும். முதலீடு செய்வதற்குச் சிறந்த வாய்ப்புகள் இல்லாத நிலையில் தம்மிடம் தேவைக்குமேல் பெருமளவு ரொக்க டெபாசிட்டு களையுடைய மக்கள் இந்த ரொக்க டெபாசிட்டுகளில் ஒரு பகுதியைச் சேமிப்பு டெபாசிட்டுகளாக மாற்ற முயலலாம். சேமிப்பு டெபாசிட்டுகளை ஒருவகையில் ஆதாயமற்ற டெபாசிட்டுகள் என்றே கருதவேண்டும். இவற்றைப் 'பதுக்கல்கள்' (hoards) என்றுகூடக் கூறலாம். ஈண்டு ஓர் உண்மையை நாம் நினைவு கூர்தல் அவசியமாகும். டெபாசிட்டுகள் ரொக்க டெபாசிட்டுகளாக இருக்கலாம் அல்லது சேமிப்பு டெபாசிட்டுகளாக இருக்கலாம். இதைத் தீர்மானிப்பது வாடிக்கைக்காரர்களேயன்றிப் பாங்குகள் அல்ல என்பதை மறந்துவிடலாகாது.

இங்கிலாந்திலுள்ள பாங்குகள் டெபாசிட்டுகளை, நடப்புக் கணக்குகள் (Current Accounts) என்றும், டெபாசிட் கணக்குகள் (Deposit Accounts) என்றும் இரண்டாகப் பாகுபாடு செய்துள்ளன. நடப்புக் கணக்குகள் ரொக்க டெபாசிட்டுகட்கும், டெபாசிட் கணக்குகள் சேமிப்பு டெபாசிட்டுகட்கும் இணையானவை என்று கூறலாம். அமெரிக்காவிலுள்ள பாங்குகளும், வேறுசில நாடுகளிலுள்ள பாங்குகளும், டெபாசிட்டுகளை நடப்பு டெபாசிட்டுகள் (Demand Deposits) என்றும் டைம் டெபாசிட்டுகள் (Time Deposits) என்றும் பகுபாடு செய்துள்ளன. நடப்பு டெபாசிட்டுகள் ரொக்க டெபாசிட்டுகட்கும், டைம் டெபாசிட்டுகள் சேமிப்பு டெபாசிட்டுகட்கும் இணையானவை என்று கூறலாம். எனினும், நடப்புக் கணக்குகளும் நடப்பு டெபாசிட்டுகளும், துல்லிதமாக ரொக்க டெபாசிட்டுகட்குச் சமமானவை என்றோ, டெபாசிட் கணக்குகளும் டைம் டெபாசிட்டுகளும் துல்லிதமாகச் சேமிப்பு டெபாசிட்டுகட்குச் சமமானவை என்றோ நாம் கூற முடியாது. எடுத்துக்காட்டு ஒன்று காண்போம். நடப்புக் கணக்கை வாடிக்கைக்காரர் பயன்படுத்துவதற்குப் பாங்கு எந்தவிதமான கட்டணமும் விதிக்காது இருக்க வேண்டுமேயாயின், ஒரு குறைந்த அளவுத் தொகை எப்பொழுதும் நடப்புக் கணக்கில் இருப்புத்தொகையாக இருக்கவேண்டும். நடப்புக் கணக்கைக் கட்டணம் ஏதுமின்றி வாடிக்கைக்காரர் பயன்படுத்துவதோடு, இந்தக் குறைந்த அளவுத் தொகையானது அவருடைய மூலதனமாகவும் திகழ்கின்றது. இந்தக் குறைந்த அளவுத் தொகையை நாம் ரொக்க டெபாசிட்டுகளாகக் கருத முடியாது; உண்மையில் இது சேமிப்பு டெபாசிட்டேயாகும். இதேபோல ஒருவரிடம் தேவைக்கு மேல் பெருமளவு நடப்பு டெபாசிட்டுகள் உள்ளன என்றும், ஆனால், டைம் டெபாசிட்டுகட்குப் பாங்குகள் அளித்துவரும் வட்டி வீதங்கள் மிகவும் குறைவானவை

என்றும் வைத்துக்கொள்வோம். டைம் டெபாசிட்டுகட்கான வட்டி வீதம் குறைவாக இருப்பதால், இவற்றை டைம் டெபாசிட்டு களாக மாற்றுவதால், யாதொரு விதமான நன்மையும் கிடையாது என்று எண்ணி, இந்த நபர் இவற்றை நடப்பு டெபாசிட்டுக ளாகவே வைத்திருக்க விரும்புவார். இவ்வாறு தேவைக்கு மேல் அதிகமாக உள்ள இந்த நபரின் நடப்பு டெபாசிட்டுகளை நாம் உண்மையில் சேமிப்பு டெபாசிட்டுகளாகவே கருதவேண்டும். மற்றும் ஓர் எடுத்துக்காட்டு காண்போம். குறைந்த அளவு வருவாய் ஈட்டும் மக்களால் நடப்புக் கணக்குகள் வைத்துக் கொள்ள முடிவதில்லை. இவர்கள் டெபாசிட் கணக்குகளே வைத் துள்ளனர். எனினும், ஒவ்வொரு மாதமும் இந்த டெபாசிட் கணக்கில் இவர்கள் பணம் போடுவதும், பின் அவற்றைத் திரும்பப் பெறுவதும், சாதாரணமாக எப்பொழுதும் நடக்கக் கூடியவைக ளாகும். இத் தன்மைத்தான டெபாசிட் கணக்குகள் உண்மையில் ரொக்க டெபாசிட்டுகளேயாகும். 1920—29-க்கு இடைப்பட்ட காலத்தில் சில அமெரிக்கப் பாங்குகள் தங்களிடமுள்ள டைம் டெபாசிட்டுகட்குச் சில சலுகைகளை வழங்கி வந்தன. தாங்கள் விரும்பியவண்ணம் எந்தச் சமயத்திலும் டைம் டெபாசிட்டுகளின் மீது செக்குகள் வரையும் உரிமையை வாடிக்கைக்காரர்கட்கு இந்தப் பாங்குகள் வழங்கியிருந்தன. இத் தன்மைத்தான டைம் டெபாசிட்டுகளை உண்மையில் ரொக்க டெபாசிட்டுகளாகவே நாம் கருதவேண்டும். எனினும், பொதுவாக நடப்புக் கணக்குகளும் நடப்பு டெபாசிட்டுகளும், ரொக்க டெபாசிட்டுகட்குச் சமமானவை என்றும், டெபாசிட் கணக்குகளும் டைம் டெபாசிட்டுகளும் சேமிப்பு டெபாசிட்டுகட்கு இணையானவை என்றும் நாம் கொள்ளலாம்.

டெபாசிட்டுகள் ரொக்க டெபாசிட்டுகளாக இருப்பதையோ, சேமிப்பு டெபாசிட்டுகளாக இருப்பதையோ, தீர்மானிக்கக் கூடிய அதிகாரம் பாங்குகட்குக் கிடையாதென்றும், பொதுமக்களுக்கே உண்டு என்றும் மேலே நாம் கண்டோம். வாடிக்கைக்காரர்கள் எவ்வித முயற்சியும் எடுக்காதபோதும், சில சமயங்களில் ரொக்க டெபாசிட்டுகள் சேமிப்பு டெபாசிட்களாகவும், சேமிப்பு டெபா சிட்டுகள் ரொக்க டெபாசிட்டுகளாகவும் மாறலாம் என்றும் கண் டோம். ஆனால், ரொக்க டெபாசிட்டுகள் சேமிப்பு டெபாசிட்டுகளா கவும் சேமிப்பு டெபாசிட்டுகள் ரொக்க டெபாசிட்டுகளாகவும், வாடிக்கைக்காரர்களின் முயற்சியாலேயே பெரிதும் மாற்றமுறு கின்றன. நடப்பு டெபாசிட்டுகள் டைம் டெபாசிட்டுகளாகவும், டைம் டெபாசிட்டுகள் நடப்பு டெபாசிட்டுகளாகவும், மாற்றப்படு வதை யொட்டியே நாம் மேற் குறித்த மாற்றங்கள் நேர்கின்றன. வாடிக்கைக்காரர்களின் விருப்பப்படியே எந்தவிதத் தடையு

மின்றிப் பாங்குகள் ஒருவகையைச் சேர்ந்த டெபாசிட்டுகளைப் பிறிதோர் வகையினவாக மாற்ற முன் வருகின்றன. தங்களுடைய விருப்பப்படியே மொத்த டெபாசிட்டுகளை ரொக்க டெபாசிட்டுகளாகவும் சேமிப்பு டெபாசிட்டுகளாகவும் வாடிக்கைக்காரர்கள் பகிர்ந்துகொள்ள முடியும். ஆனால், டெபாசிட்டுகளின் மொத்த அளவினைப் பாங்குகளே தீர்மானிக்கின்றன. எவ்வளவு சொத்துகளைப் பாங்குகளால் பெறமுடிகின்றதோ, அதையொட்டி டெபாசிட்டுகளின் மொத்த அளவினைப் பாங்குகள் தீர்மானிக்கின்றன. தங்களுடைய டெபாசிட் பொறுப்புகட்கு ஈடாகவே பாங்குகள் தங்களிடம் சொத்துகளை வைத்துள்ளன. கீழே இரண்டு அட்டவணைகள் தந்துள்ளோம். முதலாவது அட்டவணை இங்கிலாந்துப் பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்பையும், இரண்டாவது அட்டவணை அமெரிக்கப் பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்பையும் உணர்த்துகின்றன. இந்த நாடுகளிலுள்ள பெரும்பாலான பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்புகளை இணைத்துக் கீழே தந்துள்ளோம். இந்த நாடுகளிலுள்ள பாங்குகளிடமுள்ள சொத்துக்களின் பொதுவான தன்மைகளை இந்த அட்டவணைகளின்மூலம் நாம் அறியலாம்.

கீழே நாம் தந்துள்ள இங்கிலாந்துப் பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகளும் பொறுப்புகளும் ஈடாக அமையவில்லை. பொறுப்புக்களின் கீழ் பங்குதாரர்களின் மூலதனத்தையும், சொத்துக்களின் கீழ் 'பாங்கு அலுவலகங்கள்' என்ற இனத்தையும் நாம் குறிக்காததே இதற்கான காரணமாகும். அமெரிக்கப் பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்பிலும், இந்த 'இனங்களை' நாம் குறிக்கவில்லை. தொடர்புப் பாங்குமுறை அமெரிக்காவில் தோன்றியுள்ளதையொட்டி அங்கு ஒரு பாங்கு பிறிதொரு பாங்கில் டெபாசிட்டுகள் வைத்திருக்கிறது. இதையும் நாம் கீழே கொடுத்துள்ள அட்டவணையில் குறிக்கவில்லை. கீழேயுள்ள அட்டவணைகளில் நாம் கொடுத்துள்ள சொத்தினங்களின் மதிப்பும், பொறுப்பு இனங்களின் மதிப்பும், காலத்திற்குக் காலம் மாறிக்கொண்டே இருக்கக்கூடியவை. எனவே, நாட்டிலுள்ள பண அளிப்பைப் பொறுத்தவரையில், இந்த 'இனங்கள்' முக்கியத்துவம் உடையனவாகும். 'உடனடியாக மாற்றக்கூடியவை', 'முன்னறிவிப்பின் பேரிலே மாற்றக்கூடியவை' (ரொக்கமாக மாற்றக்கூடிய) என்ற அடிப்படையில் கீழே கொடுத்துள்ள அட்டவணைகளில் டெபாசிட்டுகளைப் பாகுபாடு செய்துள்ளோம். இங்கிலாந்தில் நடப்புக் கணக்குகளையும், அமெரிக்காவில் நடப்பு டெபாசிட்டுகளையும் தங்கள் விருப்பப்படி உடனடியாக வாடிக்கைக்காரர்கள் ரொக்கமாக மாற்றிக்கொள்ள முடியும். இங்கிலாந்தில்

டெபாசிட் கணக்குகளையும், அமெரிக்காவில் டைம் டெபாசிட்டுகளையும் பாங்குகட்கு முன்னறிவிப்புக் கொடுப்பதன் மூலமே வாடிக்கைக்காரர்கள் ரொக்கமாக மாற்றிக்கொள்ள முடியும். சில விஷயங்களை ஆராய்வதற்கு ஏதுவாக இவ்விரு வகையைச் சேர்ந்த டெபாசிட்டுகட்கும் தனித்தனியான கவனம் செலுத்துவதே பொருத்தமுடையது என்று தோன்றுகின்றது. அமெரிக்கப் பாங்கு முறையைப் பொறுத்தவரையில் இது மிகவும் பொருந்தும். எனினும், தாங்கள் விரும்பும் வண்ணம் இந்த டெபாசிட்டுகளின் ஒரு வகையை மற்ற வகையினதாக வாடிக்கைக்காரர்களால் எளிதில் மாற்ற முடியும். பாங்குகளின் விருப்பு வெறுப்பின்றியே இது சாத்தியமாகின்றது. (மொத்த டெபாசிட்டுகளையே பாங்குகள் தீர்மானிக்கின்றன.) எனவே, இந்த அட்டவணைகளையொட்டிய விளக்கத்தில் நாம் இந்த இருவகை டெபாசிட்டுகளின் மொத்த மதிப்பையே கையாண்டுள்ளோம். வாணிபப் பாங்குகளின் நடவடிக்கை நாம் முதன் முதலாக விளக்கும் முகத்தான், இந்த அத்தியாயம் அமைந்திருப்பதால் டெபாசிட்டுகளின் மொத்த மதிப்பை விளக்கங்கட்கு உறுதுணையாகக் கையாண்டுள்ளதில் பெரும் தவறு ஏதுமில்லை என்றே தோன்றுகிறது.[1] அட்டவணைகள் வருமாறு :

### லண்டன் தீர்வுப் பாங்குகளைப்பற்றி புள்ளி விவரங்கள் அடங்கிய சுருக்கம்

### ஜூன் 1959

(மில்லியன் பவுன்களில்)

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| டெபாசிட்டுகள் : நடப்புக் கணக்குகள் | 3,967 | கையிருப்பு ரொக்கமும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கமும் | 550 |
| டெபாசிட் கணக்குகள் | 2,394 | நாள் நிலுவைக் கடன் | 488 |
| மொத்தம் | 6,361 | கழிவு செய்யப்பட்ட உண்டியல்கள் | 1,154 |
| | | அட்வான்சுகள் | 2,603 |
| | | முதலீடுகள் | 1,816 |

[1] எனவே, ஈண்டு நாம் தந்துள்ள விளக்கத்தை முன்னுரையாக அமைந்துள்ள விளக்கம் என்று வைத்துக்கொண்டாலும், முழு அளவில் அமைந்துள்ளது என்று கருதுவதற்கில்லை. இங்கு நாம் குறித்துள்ள கருத்துகள் யாவும் அடுத்துவரும் அத்தியாயங்களில் நாம் கொடுத்துள்ள பாற்றங்கட்கு உட்பட்டவையேயாகும்.

## அமெரிக்க வாணிபப் பாங்குகள் அனைத்திற்குமான புள்ளி விவரங்கள்

1959ஆம் ஆண்டு மே மாதம் 27ஆம் நாள்
(மில்லியன் பவுன்களில்)

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| நடப்பு டெபாசிட்டுகள் | 1,22,000 | கடன்கள் | 1,02,000 |
| டைம் டெபாசிட்டுகள் | 65,000 | முதலீடுகள் | 83,000 |
| | | ரொக்கச் சொத்துக்கள் | 42,000 |

இனி, சொத்துகளின் அடிப்படையில் அமெரிக்கப் பாங்கு முறையையும் இங்கிலாந்துப் பாங்கு முறையையும் ஒப்பிட்டு நோக்குவோம். இங்கிலாந்துப் பாங்குகளின் சொத்துகளில் 'கையிருப்பு ரொக்கமும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கமும்' என்ற ஓர் இனம் இருப்பதைக் காணலாம். அமெரிக்க அட்டவணையில் காணப்படுகின்ற 'ரொக்கச் சொத்துகள்' என்ற இனமும் இந்த இனமும் ஒரே இனமேயாகும். 'ரொக்கச் சொத்துகள்' என்ற இனம் இரு கூறுகளால் ஆய ஒன்றாகும். 'ஐக்கிய ரிசர்வ் பாங்கிலுள்ள ரொக்கம்' ஒரு கூறாகும் (இங்கிலாந்திலுள்ள 'இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கம்' என்ற இனத்தை இது ஒக்கும்). 'நிலவறை ரொக்கம்' (cash in vault) மற்றொரு கூறாகும் (இங்கிலாந்திலுள்ள 'கையிருப்பு ரொக்கம்' அல்லது 'கல்லாப் பணம்' என்ற இனத்தை இது ஒக்கும்). இதையொட்டி இரண்டு பாங்கு முறைகட்கும் இடையே ஒரு வேறுபாடு உள்ளது. ரொக்க விகிதம் என்பது அமெரிக்காவில் பாங்குகள் மையப் பாங்கில் வைத்திருக்கின்ற டெபாசிட் இருப்புகளை மட்டிலும் குறிக்கின்றது. அமெரிக்கப் பாங்குகள் தங்களுடைய டெபாசிட் பொறுப்புகளில் ஒரு பகுதியை மையப் பாங்கில் இருப்பாகக் கட்டாயம் வைத்திருக்க வேண்டும். சட்டம் இதை வலியுறுத்துகின்றது. ஆனால், இங்கிலாந்துப் பாங்குகள் வழி வழியாக நிலவிவருகின்ற பழக்கத்தையொட்டியே மையப் பாங்கில் டெபாசிட் இருப்புகள் வைத்திருக்கின்றன. மேலும், ரொக்க விகிதம் என்பது இங்கிலாந்தில் பாங்குகள் மையப் பாங்கில் வைத்திருக்கின்ற டெபாசிட் இருப்புகளையும், பாங்குகளின் கல்லாப் பணத்தையும் குறிக்கின்றது. பாங்குகளின் ரொக்க விகிதங்கள் பெரிதும் முக்கியத்துவம் உடையவையாகும். அடுத்து வரும் அத்தியாயங்களில் இது குறித்த விளக்கங்களைக் காணலாம். இங்கிலாந்துப் பாங்குகளிடமுள்ள 'கையிருப்பு ரொக்கமும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமுள்ள ரொக்கமும்' என்ற இனமும், அமெரிக்கப் பாங்குகளிடமுள்ள 'ஐக்கிய ரிசர்வ் பாங்கிடமுள்ள ரொக்கம்' என்ற இனமும் ஒன்றே என்று அந்த விளக்கங்களில்

நாம் வைத்துக்கொள்ளவேண்டும். எனினும் இவ்விரு பாங்கு முறைகளின் இலாபம் ஈட்டும் ஆற்றலை ஒப்பிட்டு நோக்குங்கால், அமெரிக்கப் பாங்குகளின் ரொக்க விகிதத்தில் மையப் பாங்கிடமுள்ள ரொக்கத்தோடு பாங்குகளிடமுள்ள நிலவறை ரொக்கத்தையும், கல்லா ரொக்கத்தையும் சேர்த்துக்கொள்ளவேண்டியது அவசியமாகும்.[1]

சொத்துகளைப் பகிர்வு செய்யும் முறையில் இந்த இரு நாடுகட்கிடையேயும் பெருத்த வேறுபாடுகள் உள்ளன. உதாரணமாக, மொத்தச் சொத்துகளில் பலதரப்பட்ட கடன்கள் அமெரிக்கப் பாங்கு முறையைவிட இங்கிலாந்துப் பாங்கு முறையில் பெரும் பங்கு பெறுகின்றன. இதேபோல மொத்தச் சொத்துகளில் ரொக்கம் அமெரிக்கப் பாங்கு முறையைவிட இங்கிலாந்துப் பாங்கு முறையில் குறைவான பங்கே பெறுகின்றன. சொத்துகளில் பகிர்வு இவ்விரு நாடுகட்கிடையேயன்றி, நாட்டிற்கு நாடு பெருமளவு வேறுபடுகின்றது. உதாரணமாக. ஆஸ்திரேலியப் பாங்கு முறைக்கும் கனடாப் பாங்கு முறைக்கும் இடையே பெருமளவு வேறுபாடுகள் உள்ளன. நாட்டிற்கு நாடு பண மார்க்கெட்டின் அமைப்பு வேறுபடுகின்றது. சில நாடுகளில் பண மார்க்கெட்டுகள் உருவாகியுள்ளன. வேறு சில நாடுகளில் பணமார்க்கெட்டுகள் இன்னும் உருவாகவே இல்லை. வர்த்தகர்களின் செல்வ வளமும் நாட்டிற்கு நாடு வேறுபடுகிறது. வர்த்தக அமைப்பும் தொழில் அமைப்பும், நாட்டிற்கு நாடு வேறுபடுகின்றன. இவ்வாறான பல காரணங்களால் சொத்துகளின் பகிர்வு நாட்டிற்கு நாடு பெருமளவு வேறுபடுகின்றது. எனவே, இங்கிலாந்துப் பாங்கு முறையையொட்டி நாம் தரும் விளக்கங்கள் யாவும், ஏனைய பாங்கு முறைகட்கும் பொருந்தும் என்று எண்ணிவிடலாகாது. உரிய மாற்றங்களைச் செய்த பின்பே இந்த விளக்கங்கள் ஏனைய பாங்கு முறைகட்கும் பொருந்துவனவாய் அமையும். பாங்குகள் சொத்துகளைப் பகிர்வு செய்வதையொட்டி நேரக்கூடிய சில முக்கியமான பிரச்சினைகளை எட்டாம் அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம்.

இங்கிலாந்துப் பாங்குகளிடமுள்ள சொத்துகள் குறித்து இனிச் சில விளக்கங்களைக் காண்போம். 'கையிருப்பு ரொக்கம்' என்ற ஓர் இனம் சொத்துகளின்கீழ் அமைந்துள்ளது. வாணிபப் பாங்குகளின் நிலவறை ரொக்கத்தையும், கல்லா ரொக்கத்தையுமே இது குறிக்கின்றது. இது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நோட்டுகளாலும் மற்றும் காசுகளாலும் ஆகிய ஒன்றாகும். 'இங்கிலாந்துத்

[1] சட்ட பூர்வமான ரொக்க விகிதத்தில் நிலவறை ரொக்கத்தையும் சேர்ப்பதற்கான ஏற்பாடுகள் அண்மையில் (1959-ல்) அமெரிக்காவில் நடந்துவருகின்றன.

தலைமைப் பாங்கிடமுள்ள ரொக்கம்' என்ற இனம், மையப் பாங்கிலுள்ள பாங்குகளின் டெபாசிட் இருப்புகளையே குறிக்கின்றது. இந்த ரொக்கமானது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் ஏட்டுக் குறிப்பேயாகும். இந்த இருவகை ரொக்கங்களின் தொகுதியில் ஒரு கூறுகிய காசுகளை ஒரு முக்கியமான இனம் என்று கருத முடியாது. எனவே, இங்கிலாந்திலுள்ள வாணிபப் பாங்குகளிடமுள்ள ரொக்கம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பொறுப்புகளாகவே திகழ்கின்றது அதாவது பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புகள் யாவும் மையப் பாங்கின் ஐ ஓ யு-க் (I O U S's) களாகவே திகழ்கின்றன. அமெரிக்காவிலும் இதுபோன்றதொரு நிலையே பெரிதும் நிலவுகின்றது என்று நாம் கருதலாம். அமெரிக்கப் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புகளில் பெரும் பங்கு இவ்வாறு மையப் பாங்கின் பொறுப்புகளாகவே (ஐ ஓ யு-க்களாகவே) விளங்குகின்றன. சொத்துகளின் கீழ் 'நாள் நிலுவைக் கடன்' என்ற ஓர் இனமும் அமைந்துள்ளது. லண்டன் மாநகரிலுள்ள சில நிறுவனங்கட்குப் பாங்குகள் அளித்துள்ள கடன்களே இந்த 'நாள் நிலுவை'க் கடன்களாகும்.[1] திருப்பிக்கேட்ட மாத்திரத்திலேயே பாங்குகளிடம் இவற்றைச் செலுத்திவிடவேண்டும். இந்த நிறுவனங்களின் வாக்குறுதிகட்கு ஈடாகப் பாங்குகள் கடந்த காலத்தில் இவற்றிற்கு கடன்கள் அளித்து வந்தன. இவையும் திருப்பிக்கேட்ட மாத்திரத்திலேயே செலுத்தப்படவேண்டிய கடன்களேயாகும். இவ்வாறு தாங்கள் கடனாகப் பெற்ற பணத்தை இந்த நிறுவனங்கள் பிறரிடம் செலுத்திவிடுகின்றன. எனவே, இவை தங்களிடம் பெற்றுள்ள கடன்களை உடனடியாகத் திருப்பித் தரவேண்டும் என்று பாங்குகள் கேட்டுக்கொள்ளும்பட்சத்தில், ஏனைய மக்களின் பெயரிலுள்ள டெபாசிட்டுகளை, இந்த நிறுவனங்கள் எவ்விதத்திலாவது பெற முயலவேண்டும். 'கழிவு செய்யப்பட்ட உண்டியல்கள்' என்பது மற்றும் ஒரு சொத்தினமாகும். உண்மையில் இவை ஐ ஓ யு-ப் புரோநோட்டுகளேயாகும். இவற்றைப் பின் தேதியிட்ட செக்குகள் (post-dated cheques) என்றும் கருதலாம். இவற்றைப் பாங்குகள் விலைக்கு வாங்கியுள்ளன. தங்களுடைய டெபாசிட்டுகளை ஈடாக வழங்கி இவற்றைப் பாங்குகள் விலைக்கு வாங்கியுள்ளன. இந்த உண்டியல்களின் கெடுவுக் காலத்தில் உண்டியல்களை வரைந்தவர்கள், உண்டியல்களின் மதிப்பிற்கு ஈடாகப் பாங்கு டெபாசிட்டுகளை அளிக்க முன் வரவேண்டியது அவசியமாகும். எனவே, உண்டியலை ஒருவகையைச் சேர்ந்த வாக்குறுதிப் பத்திரமாகக் கருதலாம். பாங்குகளின் சொத்துகளிலுள்ள 'கழிவு செய்யப்பட்ட உண்டி

[1] இந்த நிறுவனங்களின் பெயர் 'உண்டியல் கழிவகங்கள்' என்பதாகும். இவை குறித்த விரிவான விளக்கத்தை மூன்றாவது அத்தியாயத்தில் காணலாம்.

யல்கள்' என்ற இனமானது, உண்டியல்களை வரைந்தோருக்குப் பாங்குகள் அளித்துள்ள கடன்களையே குறிக்கின்றது என்று கொள்ளலாம். இந்தச் சொத்தினத்தின் பெரும்பகுதி கருவூல உண்டியல்களால் ஆகியதாகும்.[1] 'அட்வான்சுகள்' என்பதும் பாங்குச் சொத்துகளில் ஓர் இனமாகும். சாதாரணமாக நாம் கடன்கள் என்று கூறுவதே 'அட்வான்சுகள்' என்ற பெயருடன் திகழ்கின்றன. அதிகப்பற்று முறையிலேயே இங்கிலாந்துப் பாங்குகள் சாதாரணமாக அட்வான்சுகளை ஏற்பாடு செய்து வருகின்றன. தொழிலதிபர்கள், அலுவல்களில் அமைந்துள்ளோர், மற்றும் ஏனையோருக்கும் வழங்கப்பெறுகின்ற கடன்களே அட்வான்சுகளாகும். வாணிகத்திற்குப் பாங்குகள், குறுகிய காலங்களுக்கே அட்வான்சுகளை ஏற்பாடு செய்கின்றன. 'முதலீடுகள்' என்பதும் ஒரு சொத்தினமாகத் திகழ்கின்றது. இவை பத்திரங்களால் ஆகியவையாகும். பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங்களும், ஏனைய காமன்வெல்த் பத்திரங்களும் சிறப்பான இடம் பெறுகின்றன. கருவூல உண்டியல்களைவிட இவை அதிகமான ஆயுட்காலத்தை உடையனவாகும். புதிய பத்திரம் ஒன்றினைப் பாங்கு விலைக்கு வாங்கும்போது அது அரசாங்கத்தினிடம் அப்பத்திரத்திற்கு ஈடாகத் தன்னுடைய டெபாசிட்டுகளை அளிக்கின்றது. பங்கு மார்க்கெட்மூலம் பழைய பத்திரம் ஒன்றினைப் பாங்கு விலைக்கு வாங்கும்போது, பத்திரத்தைத் தன்னிடம் விற்றவரிடம் பத்திரத்திற்கு ஈடாகப் பாங்கு தன்னுடைய டெபாசிட்டுகளை அளிக்கின்றது.[2]

நாம் மேலே விளக்கியுள்ள சொத்தினங்கள் பலவற்றிலும் ரொக்கம் நீங்கலாக உள்ள ஏனைய சொத்தினங்கள் பாங்குகட்கு

[1] கருவூல உண்டியல்களைப்பற்றிய விரிவான விளக்கம் மூன்றாவது அத்தியாயத்தின் மூன்றாவது உட்பிரிவில் தரப்பட்டுள்ளது.

[2] இதையொட்டிச் சில சமயங்களில் சில சிக்கல்கள் உண்டாகின்றன. எனவே, இதையொட்டி நேரக்கூடிய விளைவுகளைக் கீழே நாம் சுருக்கமாகத் தந்துள்ளோம். லாயிட்ஸ் பாங்கு, பங்கு மார்க்கெட்டின் மூலம் 1,000 பவுன்கள் மதிப்புள்ள ஒரு பத்திரத்தை விலைக்கு வாங்குகின்றது. இதற்கு ஈடாக இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள தன்னுடைய கணக்கின்மீது லாயிட்ஸ் ஒரு செக் கொடுக்கின்றது. பத்திரத்தை விற்றவர் பார்க்லேஸ் பாங்கின் வாடிக்கைக்காரர் என்று வைத்துக்கொள்வோம். இந்த நபர் லாயிட்ஸின் செக்கைப் பார்க்லேஸிலுள்ள தன்னுடைய கணக்கில் செலுத்திவிடுவார். பார்க்லேஸின் டெபாசிட்டுகள் 1,000 பவுன்கள் அதிகமாகின்றன. செக் தீர்வகத்தின்மூலம் லாயிட்ஸின் செக்கைப் பார்க்லேஸானது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் கொடுத்தபின், பார்க்லேஸிடமுள்ள ரொக்கம் 1,000 பவுன்கள் அதிகமாகின்றன. ஆனால், லாயிட்ஸிடமுள்ள ரொக்கம் 1,000 பவுன்கள் குறைகின்றன. லாயிட்ஸின் ரொக்கம் எவ்வளவு குறைந்துள்ளதோ, அதே அளவுக்கு லாயிட்ஸிடமுள்ள முதலீடுகள் அதிகரித்துள்ளன. பத்திரத்தை விலைக்கு விற்றவர் லாயிட்ஸின் வாடிக்கைக்காரராகவே இருக்கும் பட்சத்தில், லாயிட்ஸிடமுள்ள ரொக்கத்தில் யாதொரு விதமான மாறுதலும் நேர்ந்திருக்காது. லாயிட்ஸின் முதலீடுகள் 1,000 பவுன்கள் அதிகமாகி இருக்கும்; மற்றும் லாயிட்ஸின் டெபாசிட்டுகளும் 1,000 பவுன்கள் அதிகமாகி இருக்கும்.

வருவாய் ஈட்டித் தருகின்றன. இவை 'ஊதியச் சொத்துகள்' (earning assets) என்ற பெயர் பெறுகின்றன. எனவே, இலாபங்களை மிகுதியாக ஈட்டவேண்டும் என்ற பேராவலினால் உந்தப்பட்டுப் பாங்குகள் பணத்தின் அளிப்பை வரையறை ஏதுமின்றி அதிகரிக்க முனையலாம் என்று எண்ணத்தோன்றலாம். உண்மையில் பாங்குகள் இதுபோல நடந்துகொள்ள முடியாது. தங்களுடைய வாடிக்கைக்காரர்களின் நன்னம்பிக்கைக்குப் பாத்திரமாகப் பாங்குகள் திகழவேண்டும். இதற்குப் பாங்குகள் ரொக்கத் தன்மையைக் கண் எனக் காக்கவேண்டும். வாடிக்கைக்காரர்கள் விரும்பும்போதெல்லாம், டெபாசிட்டுகளை ரொக்கமாக மாற்றக்கூடிய பாங்கின் ஆற்றலைக் குறிக்கும் சொற்றொடரே 'நீர்மைத் தன்மை'யாகும் என்று நாம் ஏற்கெனவே கண்டோம்.[1] எனவே, ரொக்கம் ஒன்றே 'குறையற்ற நீர்மைத் தன்மை சொத்தாக'த் (perfectly liquid asset) திகழ்கிறது. உடனடியாகப் பெருமளவு இலாபம் பெறவிழையும் பாங்கர், மிகக் குறைந்த அளவு ரொக்கத்தையே இருப்பாக வைத்திருக்க முயல்வார். ஆனால், நீர்மைத் தன்மையைக் கண் எனப் போற்றிக் காக்கும் பாங்கர், (தொடர்ந்து நெடுங் காலத்திற்கு இலாபங்கள் ஈட்டிக்கொண்டிருக்க வேண்டும் என்ற எண்ணத்தில்) தன்னிடம் அதிக அளவு ரொக்கத்தை இருப்பாக வைத்திருக்க முயல்வார். 'பேரளவு இலாபத்தை உடனடியாக ஈட்டுவது', நீர்மைத் தன்மையைக் கண்ணெனக் காப்பது என்ற இரண்டு ஒன்றுக்கொன்று எதிரான சக்திகட்கிடையே சிக்கித் தவித்த இங்கிலாந்துப் பாங்குகள் காலப்போக்கில் ரொக்க விகிதம் குறித்த ஒரு பழக்கத்தை நிறுவினர். 10 அல்லது 11 சதவீத ரொக்க விகித முறையே ரொக்க விகிதமாகும் என்று அவை முடிவுகட்டின. இந்த நூற்றாண்டின் ஆரம்பகாலந்தொட்டு நாற்பதாண்டு காலம்வரை பாங்குகள் இந்த ரொக்க விகிதத்தைக் கடைப்பிடித்தன என்று கூறமுடியாது. 'புறச் சோடனை'யின் (window-dressing) துணைகொண்டு தாங்கள் உண்மை நிலையினைப் பாங்குகள் திரைபோட்டு மறைத்து வந்தன என்றே கூறவேண்டும். ஆனால், 1946ஆம் ஆண்டு முதல் பாங்குகள் நேர்மையுடன் 8 சதவீத ரொக்க விகிதத்தை நிறுவி வழுவாது கடைப்பிடித்து வருகின்றன.[2]

[1] இதே அத்தியாயத்தில் முதலாவது உட்பிரிவில் ஆறாவது பத்தியைக் காண்க.

[2] இந்த 8 சதவீத ரொக்க விகிதம் ஒவ்வொரு வாரமும் புதன்கிழமைகளில் மட்டும் பாங்குகளிடமுள்ள ரொக்க விகிதத்தைக் குறிக்கின்றது. ஏனைய நாட்களில் ரொக்க விகிதம் மாற்றமுறலாம். எனவே, வெள்ளிக்கிழமைகளில் (வேலையாட்கட்குக் கூலி கொடுக்க) தங்களிடமிருந்து வாடிக்கைக்காரர் ரொக்கம் பெறுவதையும், இந்த ரொக்கம் திங்கட்கிழமைகளிலும் செவ்வாய்க்கிழமைகளில் தங்களிடமே திரும்பி வருவதையும் குறித்து, பாங்குகள் கவலை கொள்வதில்லை. ரொக்க

'உடனடியான பேரளவு இலாபம்', 'நீர்மைத் தன்மை' ஆகிய இரண்டுவித சக்திகட்கு இடையிலான போட்டி, பாங்குகளின் ஊதியச் சொத்துகளைப் பொறுத்தவரையில்கூட காணப்படுகிறது. குறைந்த நீர்மைத் தன்மை உடைய சொத்துகளின்மூலமே பாங்குகள் நிறைந்த இலாபம் ஈட்டமுடியும். குறைந்த நீர்மைத் தன்மை உடைய சொத்துகளைச் சுற்றி சில ஆபத்துகள் சூழ்ந்திருந்தபோதிலும், நிறைந்த இலாபம் இந்த ஆபத்துகளை ஈடு செய்து வருகின்றது. எனினும், தன்னுடைய பொதுவான நீர்மைத் தன்மையைக் கண்காணித்துக் கொள்ளவேண்டியது பாங்கரின் தலையாய கடனாகும். எனவே, ரொக்கம் தவிர நீர்மைத் தன்மையில் சிறந்து விளங்கக்கூடிய சொத்துகளை அவற்றின் இலாபமீட்டும் தன்மை குறைவாக விருந்தபோதிலும், தம்மிடம் போதுமான அளவுக்குப் பாங்குகள் வைத்திருப்பதில் கவனம் செலுத்தவேண்டியது அவசியமாகும். பண மார்க்கெட் சொத்துகளான நாள் நிலுவைக் கடனும், கழிவு செய்யப்பட்ட உண்டியல்களும், மிகச் சிறந்த நீர்மைத் தன்மை ஊதியச் சொத்துகளாகும். நாள் நிலுவைக் கடனைப் புதுப்பிக்க மறுத்து, கடனாளியிடமிருந்து பாங்குகள் அவற்றை உடனடியாகத் திரும்பப் பெறமுடியும். (இது போன்ற சூழ்நிலையில் கடனாளிகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கை அணுகி ரொக்கத்தைக் கடனாகப் பெறுகின்றன.) எனவே, நாள் நிலுவைக் கடன் ஒரு சிறந்த நீர்மைத் தன்மைச் சொத்தாகத் திகழ்கிறது. கழிவு செய்யப்பட்ட உண்டியல்களின் கெடுவுக் காலம், பொதுவாக மூன்று மாதமாகும். எனினும், பாங்குகளிடமுள்ள உண்டியல்களில் பெரும்பான்மை, ஒருமாத ஆயுட் காலத்தையே உடையவையாகும். உண்மையிலேயே பணத் தேவை நேரும் காலங்களில், இவற்றை எவ்வித இழப்பும் இன்றி அல்லது மிகச் சிறிதளவான இழப்போடு, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கினிடம் பாங்குகள் விற்று ரொக்கம் பெறமுடியும்.

1940-48-க்கு இடைப்பட்ட காலத்தில், இங்கிலாந்திலுள்ள பாங்குகளின் சொத்துகளில் கருவூல டெபாசிட் ரசீதுகளும் (Treasury Deposit Receipts) ஓர் இனமாகத் திகழ்ந்தன. உண்டியல்களைவிட இவை ஓரளவு குறைந்த நீர்மைத் தன்மை உடையவையேயாகும். இவற்றின் ஆயுட்காலம் ஐந்து, ஆறு அல்லது ஏழு மாதங்களாக இருந்தது. பண மார்க்கெட்டில் இந்தக் கருவூல டெபாசிட் ரசீதுகளை விற்கமுடியாது. பணம்

---

விகிதத்தைக் கணக்கிடும்போது, பாங்குகள் இவற்றைப்பற்றிய சிந்தனையில் ஈடுபடுவதில்லை. ஒவ்வொரு ஆண்டும் ஜூன் 30ஆம் தேதியும் டிசம்பர் 31ஆம் தேதியும், புதன்கிழமைகளாக இல்லாதபொழுது, பாங்குகள் இந்தத் தேதிகளில் 'புறச் சோடனை'யில் ஈடுபடலாம்.

தேவைப்படும்போது, கருவூல டெபாசிட் ரசீதுகளைப் பயன் படுத்திப் பணம்பெற ஒரேயொரு வழிதான் உண்டு. அதாவது, இவற்றை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் கழிவு செய்வதன் மூலமே பாங்குகளால் பணம் பெறமுடிந்தது. எனினும் தலைமைப் பாங்கு இவற்றை அதிகார பூர்வமான பாங்கு வீதத்தில் (Bank Rate) கழிவு செய்வதால், கழிவு செய்யும் பாங்குக்கு நஷ்டங்கள் ஏற்பட்டன. எனவே, தங்களிடமிருந்த பண மார்க்கெட் சொத்து களான நாள் நிலுவைக் கடன், செய்யப்பட்ட உண்டியல்கள் ஆகியவற்றைவிடக் குறைவான நீர்மைத் தன்மை உடைய சொத்துகள் என்றே பாங்குகள் இவற்றைக் கருதின. இரண் டாவது உலகப் போரையொட்டி கண்டுபிடிக்கப்பட்ட ஒரு சாதனமே கருவூல டெபாசிட் ரசீதுகளாகும். கருவூல டெபாசிட் ரசீதுகளின் வெளியீட்டை அரசாங்கம் நிறுத்திய பின், பாங்குகள் 'தொந்தரவு அகன்றது' என்று அகமகிழ்ந்தன. மீண்டும் இவற்றை வெளியிடுவது குறித்து 1956ஆம் ஆண்டு அரசாங்கம் ஆலோசித்தது. ஆனால், இந்த ஆலோசனை மறுக்கப்பட்டது. 1959ஆம் ஆண்டு தங்களுடைய பரிந்துரைகளில், 'கருவூல டெபாசிட் ரசீதுகளை வெளியிடவேண்டியதில்லை' என்றே ரேட்கிளிஃப் (Radcliffe) குழுவினர் கருத்துத் தெரிவித்துள் ளனர்.

'முதலீடுகள்' என்ற இனம் கருவூல டெபாசிட் ரசீதுகளை விடக் குறைவான நீர்மைத் தன்மை உடையதாகும். இவை பெரும்பாலும் அரசாங்கம் பத்திரங்களின் உருவிலேயே அமைந் துள்ளன. எனினும், முதலீடுகள் யாவும் அரசாங்கப் பத்திரங்க ளாகவே திகழ்கின்றன என்று கூறுவதற்கில்லை. இவற்றைப் பங்கு மார்க்கெட்டில் எளிதில் விற்பனை செய்துவிடலாம். எனினும், இவற்றின் விலைகள், பங்கு மார்க்கெட்டில் பெரும் மாற்றங்கட்கு உட்பட்டவை என்பதை நாம் மறந்துவிடலாகாது. இந்தப் பத்திரங்கள் கெடுவுக் காலத்தை அணுகிக்கொண்டிருந்தால் இவற்றின் உண்மையான மதிப்புக்கும் மார்க்கெட் விலைக்கும் பெரு மளவு வேறுபாடுகள் இருக்காது. எனவே, கெடுவுக் காலத்தை அணுகிக்கொண்டிருக்கும் பத்திரங்களைச் சிறந்த நீர்மைத் தன்மை சொத்துகளாக நாம் கருதலாம். தங்களுடைய மொத்த முதலீடு களில் கெடுவுக் காலத்தை அணுகிக்கொண்டிருக்கக்கூடிய பத்திரங் களைப் போதுமான அளவுக்குத் தங்களிடம் வைத்திருப்பதைப் பாங்கர் விரும்புகின்றனர். 'முதலீடுகள்' யாவும் 10 ஆண்டுகட்கு உட்பட்ட கெடுவுக் காலத்தையே உடையனவாகும். இவற்றுள் சுமார் சரிபாதி, 5 ஆண்டுகட்கு உட்பட்ட கெடுவுக் காலத்தை உடையனவாகும். இதுவே தற்சமயம் இங்கிலாந்துப் பாங்குக

ளால் அநுசரிக்கப்பட்டுவரும் பழக்கமாகும்.[1] மொத்த முதலீடுகளில் குறுகியகால ஆயுளை உடைய பத்திரங்கள் (உதாரணமாக 5 ஆண்டுகட்கு உட்பட்ட கெடுவுக் காலத்தை உடைய பத்திரங்கள்) இங்கிலாந்துப் பாங்குகளைவிட அமெரிக்கப் பாங்குகளிடமே அதிகமாகவே உள்ளன.

நீர்மைத் தன்மையைப் பொறுத்தவரையில் அட்வான்சுகள் கடைப்பட்ட சொத்துகளேயாகும். இவற்றை எளிதில் பிறரிடம் மாற்றி (விற்று) விட முடியாது. வாடிக்கைக்காரரின் வாக்குறுதிக்கு ஈடாகவே இவை அளிக்கப்பட்டுள்ளன. துணையீடுகளையும் பாங்கர் பெற்றிருந்தபோதிலும் இவற்றை எளிதில் பிறரிடம் மாற்றிவிட முடியாது. தன்னை அணுகிக் கடன்கேட்கும் ஒரு வாடிக்கைக்காரருக்குப் பாங்குகள் மறுத்துரைக்க விரும்புவதில்லை. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, பாங்குகளின் அட்வான்சுகளை மறுகழிவுக்கு உகந்தவை என்று கருதவில்லை.

பாங்குகள் விரும்புகின்ற (நாம் மேலே விளக்கியுள்ள) ஊதியச் சொத்தினங்கள், இங்கிலாந்தில் போதுமான அளவுக்குக் கிடைக்ககூடியவை. எனவே, தங்களுடைய ரொக்கக் காப்பு இருப்புகட்கு ஏற்றதொருவகையில் பாங்குகள் தங்களுடைய சொத்துகளை அதிகரித்துக்கொள்ள முடியும். பாங்குகளிடமுள்ள ரொக்கக் காப்பு இருப்புகள், மையப் பாங்கின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவையாகும். எனவே, பாங்குகளிடமுள்ள சொத்துக்களின் மொத்த மதிப்பும், டெபாசிட்டுகளின் மொத்த அளவும், மையப்பாங்கின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவையாகும். மையப் பாங்கின் கட்டுப்பாட்டு முறைகள் ஓரிரு வாக்கியங்களில் விளக்கிவிடக்கூடிய அளவு எளிதானவை அல்ல. அவை சிறிது சிக்கல்கள் நிறைந்தவையே யாகும். எனவே. வாணிபப் பாங்குகளிடமுள்ள டெபாசிட்டுகளின் மொத்த அளவினை, மையப் பாங்கு எங்ஙனம் கட்டுப்படுத்துகின்றது என்பதை இந்த அத்தியாயத்திலேயே விளக்கப் புகுவது உகந்தது அல்ல என்று தோன்றுகின்றது.[2] எனினும் நிலையான ரொக்க விகிதத்தை (8 சதவீத ரொக்க விகிதத்தைப்) போற்றிப் பாதுகாக்கும் வகையில் வாணிபப் பாங்குகள் எடுக்கும்

[1] பொதுவாகத் திட்டவட்டமான கெடுவுக்காலம் உடைய பத்திரங்களையோ அடுத்தடுத்துக் கெடுவுக் காலத்தை அடையக்கூடிய பத்திரங்களையோ இங்கிலாந்துப் பாங்குகள் பெரிதும் விரும்புகின்றன. எனவே, திட்டவட்டமான கெடுவுக் காலத்தைப் பெற்றிராத கான்சல்களை (Consois) இங்கிலாந்துப் பாங்குகள் வெறுக்கின்றன. எனினும், கடந்தகாலத்தில் அநேகமாக எல்லாப் பாங்குகளிடமும் கான்சல்கள் இருந்தன என்பதை ஈண்டு நாம் குறிப்பிட விரும்புகிறோம்.

[2] இவை குறித்த விரிவான விளக்கத்தை ஒன்பதாவது அத்தியாயத்தில் காணலாம்.

முயற்சிகள், எங்ஙனம் நாட்டிலுள்ள மொத்தப் பாங்கு டெபாசிட்டு களைத் தீர்மானிக்கின்றன என்பது குறித்த விளக்கத்தைக் கீழே காண்போம்.

வருவாய் ஈட்டவேண்டும் என்ற ஆவலினால் உந்தப்பட்ட பாங்குகள், தங்களிடமுள்ள ஊதியச் சொத்துகளை அதிகரிக்க முயலுகின்றன. இதையொட்டி மொத்த டெபாசிட்டுகளும் அதி கரிக்கின்றன. பாங்குகளிடமுள்ள மொத்த ரொக்க இருப்புகள் மாற்றமுறுவதில்லை. எனினும், பாங்குகளின் ரொக்க விகிதம் டெபாசிட்டுகளின் உயர்வையொட்டிக் குறையும். மொத்த டெபாசிட்டுகள் அதிகரித்திருப்பதையொட்டி, நாட்டில் நேரக் கூடிய விளைவுகளால் ரொக்கவிகிதம் மேலும் பாதிக்கப்படும். மொத்த டெபாசிட்டுகளின் உயர்வையொட்டி விரைவில் விலைவாசி கள் உயரும்; நாட்டிலுள்ள மொத்தப் பேரங்களின் அளவும் உயரும். எனவே, அதிகமான நோட்டுகளைப் பொது மக்கள் புழக்கத்திற்கு விரும்புவர். பாங்குகளிடமுள்ள தங்களுடைய டெபா சிட்டுகளைப் பொது மக்கள் நோட்டுகளாக மாற்ற முயலுவர். எனவே, பாங்குகளிடமுள்ள டெபாசிட்டுகளின் மொத்த அளவு உயர்ந்துள்ளபோதிலும் பாங்குகளிடமுள்ள மொத்த ரொக்கக் காப்பு இருப்புகள் குறைய ஆரம்பிக்கின்றன. இவ்வாறு, பாங்கு களின் ரொக்க விகிதம் இரண்டு காரணங்களால் வீழ்ச்சியுறலாம். டெபாசிட்டுகள் உயருவது ஒரு காரணமாகும். புழக்கத்திலுள்ள ரொக்கம் உயருவது மற்றொரு காரணமாகும். பாங்குகளிடமுள்ள மொத்த ரொக்கக் காப்பிருப்புகள் ஒரு குறிப்பிட்ட அளவினவாகும் என்று நாம் வைத்துக்கொண்டால், ரொக்க விகிதங்கட்கு உட்பட்டு ஒரு குறிப்பிட்ட அளவு மொத்த டெபாசிட்டுகளையே பாங்குகளால் உற்பத்தி செய்ய முடியும். ரொக்க விகிதம் 8 சதவீதம் என்றும், பாங்குகளிடமுள்ள மொத்த ரொக்கக் காப்பிருப்புகள் 80 மில்லியன் பவுன்கள் என்றும் நாம் வைத்துக்கொண்டால் 1,000 மில்லியன் பவுன்கள் மதிப்புள்ள டெபாசிட்டுகளையே பாங்குகளால் போற்றிப் பாதுகாத்துக்கொள்ள முடியும். மொத்த டெபாசிட்டுகளின் மதிப்பு 800 மில்லியன் பவுன்களேயாகும் என்று வைத்துக்கொண் டால் பாங்குகள் மேலும் மேலும் ஊதியச் சொத்துகளை விலைக்கு வாங்கமுடியும். டெபாசிட்டுகளின் மொத்த மதிப்பு 1,000 மில்லியன் பவுன்களாக உயரும்வரைத் தங்களிடமுள்ள சொத்து களைப் பாங்குகளால் அதிகரிக்க முடியும். ஆனால், டெபாசிட்டு களின் மொத்த மதிப்பு ,000 மில்லியன் பவுன்களாக இருக்கும் போது பாங்குகளிடமுள்ள மொத்த ரொக்கம் 72 மில்லியன் பவுன் களேயாகும் என்று நாம் வைத்துக்கொண்டால், தங்களுடைய ரொக்கவிகிதத்தைப் (8 சதவீத ரொக்கவிகிதத்தை) போற்றிப்

# 3. உண்டியல் கழிவு மார்க்கெட்

## 1. உண்டியல் (Bill of Exchange)

லண்டன் மாநகரில் தனித்திறமை வாய்ந்த ஒருசில நிறுவனங்கள் உள்ளன. அவற்றின் தொகுதியே 'உண்டியல் கழிவு மார்க்கெட்' (discount market) என்ற பெயர் பெற்று விளங்குகிறது. இந்த மார்க்கெட் வாணிபப் பாங்குகளுடனும் (வாணிபப் பாங்குகள் இங்கிலாந்து தேசத்தில் மட்டுமன்றி, வெளிநாடுகளிலும், தங்களது தொழிலை உடையவை) இங்கிலாந்துத் தலைமைப் பாங்குடனும் (Bank of England) நெருங்கிய தொடர்பு உடையது. சிலவகையான நிதிச் சொத்துகளே (financial assets) இந்த மார்க்கெட்டின் முக்கியமான வியாபாரப் பொருள்களாகும். இங்குள்ள நிறுவனங்கள் தாற்காலிகமாக—ஆனால், தொடர்ந்து—வாணிபப் பாங்குகளிடமிருந்து கடன் பெற்றுக் கொண்டிருக்கின்றன. உண்டியல் கழிவு அகங்களை (discount houses) வாணிபப் பாங்குகள் தங்களுடைய உபரி ரொக்கத்தை-அதாவது மிகுதியான காப்பு இருப்புகளை—உடனடியாகவும் இலாபகரமாகவும், பயன்படுத்துவதற்கு ஏற்றதொரு சாதனம் என்று எண்ணுகின்றன. உண்டியல்கள், கஜானா உண்டியல்கள், குறுகிய கால ஆயுளை உடைய அரசாங்கப் பத்திரங்கள் ஆகியவையே 'உண்டியல் கழிவு மார்க்கெட்டில்' கையாளப்படும் முக்கியமான நிதிச் சொத்துகளாகும். முதலாவது உலக யுத்தம் ஆரம்பமான காலத்திலிருந்தே 'உண்டியல் கழிவு அகங்கள்' பத்திரங்களைக் கையாள ஆரம்பித்தன; எனினும், 1934-35 முதல்தான் 'உண்டியல் கழிவு அகங்கள்' பத்திரங்களைப் பெருமளவில் கையாள ஆரம்பித்தன. முதலாவது உலக யுத்தத்திற்குப்பின் கஜானா உண்டியல் (Treasury Bill) சாதாரண உண்டியலை (bill of exchange) இருக்கும் இடம் தெரியாமல் செய்துவிட்டது. அதாவது கஜானா உண்டியல், சாதாரண உண்டியலின் முக்கியத்துவத்தைப் பெரிதும் பாதித்துவிட்டது. 'உண்டியல் கழிவு மார்க்கெட்டின்' ஆரம்பகாலத்தில் அதன் வியாபாரம் பெரும்பாலும் சாதாரண உண்டியலின் அடிப்படையிலேயே அமைந்திருந்தது. உண்டியல் கழிவு மார்க்கெட்டின் வழி முறைகளை வகுக்கக் காரணமாக இருந்ததும் இத்தச் சாதாரண உண்டியலே ஆகும். எனவே, கீழே நாம் கொடுக்

களைப் பாங்குகள் போற்றிப் பாதுகாத்துவருவதால் டெபாசிட்டு களின் மொத்த அளவினைத் தீர்மானிக்கும் பொறுப்பு பாங்குகட்குக் கிடையாது என்பது புலனாகும். வேறு ஒரு நிறுவனத்திடமே இந்தப் பொறுப்பு வழங்கப்பெற்றிருக்கின்றது. மையப் பாங்கே இந்த நிறுவனமாகும். நாட்டிலுள்ள ரொக்கத்தின் மொத்த அளிப்பை மையப் பாங்கு கட்டுப்படுத்தி வருகின்றது. மேலும், பொதுமக்கள் புழக்கத்திற்கு விரும்பும் ரொக்கத்தையும் மையப் பாங்கே ஏற்பாடு செய்துவருகின்றது. எனவே, டெபாசிட்டுகளின் மொத்த அளவினைத் தீர்மானிப்பதற்கு மையப் பாங்கு முழு அதிகாரமும் பெற்றுள்ளது. நாட்டிலுள்ள டெபாசிட்டுகளின் மொத்த அளவு, மையப் பாங்கின் விருப்பப்படியே ஒரு குறிப்பிட்ட அளவினதாகக் திகழமுடியும். இந்தக் குறிப்பிட்ட அளவு டெபாசிட்டுகட்கு ஏற்றமுறையில், மையப் பாங்கு ரொக்கத்தை ஒழுங்கு படுத்த வேண்டியிருக்கும். இந்தக் குறிப்பிட்ட அளவு டெபாசிட்டுகட்கு ஏற்ற அளவு ரொக்கத்தை வாணிபப் பாங்குகட்கு ஏற்பாடு செய்ய முன்வருவதோடு, இந்தக் குறிப்பிட்ட அளவு டெபாசிட்டுகட்கு ஏற்ற அளவு ரொக்கத்தைப் புழக்கத்திற்கும், மையப் பாங்கு ஏற்பாடு செய்ய வேண்டியது அவசியமாகும். வாணிபப் பாங்குகள் நிலையான ரொக்க விகிதங்களை வழுவாது போற்றிப் பாதுகாக்கும் என்று நாம் வைத்துக் கொண்டால் மட்டுமே, மையப் பாங்கானது இவ்வாறு டெபாசிட்டுகளைக் கட்டுப்படுத்தமுடியும். டெபாசிட்டு களின் மொத்த அளவினை மையப் பாங்கு அதிகரிக்க விரும்பினால் மையப் பாங்கானது அதிகமான ரொக்கத்தை உற்பத்தி செய்தால் போதுமானதாகும். மையப் பாங்கு விதித்துள்ள வரையறைகட்கு உட்பட்டு, வாணிபப் பாங்குகள் டெபாசிட்டுகளின் மொத்த அளவினை அதிகரித்துவிடும்.

எனவே, நாட்டிலுள்ள பண அளிப்பைக் கட்டுப்படுத்துவதற்கு மையப் பாங்கு பயன்படுத்தும் பல முக்கியமான முறைகளில், ரொக்கவிகிதமும் இடம் பெறுகின்றது. பாங்குகள் நிலையான ரொக்கவிகிதத்தைப் போற்றிப் பாதுகாத்து வரும்பட்சத்தில், மையப் பாங்கால் ஆற்றலுடன் வாணிபப் பாங்குகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த முடியும். நிலையான ரொக்க விகிதங்களை வாணிபப் பாங்குகள் போற்றிப் பாதுகாத்து வரும்போது, வாணிபப் பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தில், மையப் பாங்கு மாற்றங்களைச் செய்தால் மொத்தப் பாங்கு டெபாசிட்டுகள் உடனடியாகப் பாதிக்கப்படும்; மேலும், வாணிபப் பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தில் மையப் பாங்கு எந்த அளவுக்கு மாற்றங்களைச் செய்யுமோ, அந்த அளவுக்கு மொத்தப் பாங்கு டெபாசிட்டுகள் பாதிக்கப்படும். எனினும் இங்கிலாந்தில் தற்சம

யம் மையப் பாங்கு வாணிபப் பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தைக் கட்டுப்படுத்த விரும்புவதாகத் தெரியவில்லை. எனவே, மையப் பாங்கு கடைப்பிடித்து வருகின்ற முறைகள் (மொத்த பாங்கு டெபாசிட்டுகளைக் கட்டுப்படுத்தும் நோக்கத்தோடு கடைப்பிடிக்க வேண்டிய முறைகள்) சிறிது சிக்கல்கள் நிறைந்தவையாக உள்ளன. அடுத்துவரும் அத்தியாயங்களில் இவை குறித்து விரிவான விளக்கம் தந்துள்ளோம். எனினும், தான் விரும்பினால் தற்சமயங்கூட வாணிபப் பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தைக் கட்டுப்படுத்துவதன் மூலம், மையப் பாங்கு நாட்டிலுள்ள மொத்த பாங்கு டெபாசிட்டுகளைக் கட்டுப்படுத்த முடியும்.

# 3. உண்டியல் கழிவு மார்க்கெட்

## 1. உண்டியல் (Bill of Exchange)

லண்டன் மாநகரில் தனித்திறமை வாய்ந்த ஒரு சில நிறுவனங்கள் உள்ளன. அவற்றின் தொகுதியே 'உண்டியல் கழிவு மார்க்கெட்' (discount market) என்ற பெயர் பெற்று விளங்குகின்றது. இந்த மார்க்கெட் வாணிபப் பாங்குடனும் (வாணிபப் பாங்குகள் இங்கிலாந்து தேசத்தில் மட்டுமன்றி வெளிநாடுகளிலும், தங்களது தொழிலை உடையவை) இங்கிலாந்துத் தலைமைப் பாங்குடனும் (Bank of England) நெருங்கிய தொடர்பு உடையது. சிலவகையான நிதிச் சொத்துகளே (financial assets) இந்த மார்க்கெட்டின் முக்கியமான வியாபாரப் பொருள்களாகும். இங்குள்ள நிறுவனங்கள் தாற்காலிகமாக—ஆனால், தொடர்ந்து-வாணிபப் பாங்குகளிடமிருந்து கடன் பெற்றுக் கொண்டிருக்கின்றன. உண்டியல் கழிவு அகங்களை (discount houses) வாணிபப் பாங்குகள் தங்களுடைய உபரி ரொக்கத்தை—அதாவது மிகுதியான காப்பு இருப்புகளை—உடனடியாகவும் இலாபகரமாகவும், பயன்படுத்துவதற்கு ஏற்ற தொரு சாதனம் என்று எண்ணுகின்றன. உண்டியல்கள், கருவூல உண்டியல்கள், குறுகிய கால ஆயுளை உடைய அரசாங்கப் பத்திரங்கள் ஆகியவையே 'உண்டியல் கழிவு மார்க்கெட்டில்' கையாளப்படும் முக்கியமான நிதிச் சொத்துகளாகும். முதலாவது உலக யுத்தம் ஆரம்பமான காலத்திலிருந்தே 'உண்டியல் கழிவு அகங்கள்' பத்திரங்களைக் கையாள ஆரம்பித்தன; எனினும், 1934-35 முதல்தான் 'உண்டியல் கழிவு அகங்கள்' பத்திரங்களைப் பெருமளவில் கையாள ஆரம்பித்தன. முதலாவது உலக யுத்தத்திற்குப் பின் கருவூல உண்டியல் (Treasury Bill) சாதாரண உண்டியலை (bill of exchange) இருக்கும் இடம் தெரியாமல் செய்துவிட்டது. அதாவது கருவூல உண்டியல், சாதாரண உண்டியலின் முக்கியத்துவத்தைப் பெரிதும் பாதித்துவிட்டது. 'உண்டியல் கழிவு மார்க்கெட்டின்' ஆரம்பகாலத்தில் அதன் வியாபாரம் பெரும்பாலும் சாதாரண உண்டியலின் அடிப்படையிலேயே அமைந்திருந்தது. உண்டியல் கழிவு மார்க்கெட்டின் வழிமுறைகளை வகுக்கக் காரண

றது என்று வைத்துக்கொண்டால்) உண்டியலின் தற்போதைய விலை 993 பவுன் 6 ஷில்லிங்குகள் 8 பென்னிகள் ஆக உயர்ந்திருக்கும். நிதியாளரும் தாம் உண்டியலை விற்கும்போது அதில் தமது புறக் குறிப்பைத் தெரிவிக்கவேண்டும். இவ்வாறு அவர் செய்வதால் அவரும் இந்த உண்டியலுக்கு ஓரளவு பொறுப்பாளியாகிருர். அதாவது, உண்டியலில் குறிக்கப்பட்டுள்ள ஏனைய நபர்கள், கெடுவுக் காலத்தில் பணம் கொடுக்கத் தவறும்பட்சத்தில், இந்த நிதியாளர் பணத்திற்குப் பொறுப்பாளியாவார். இம் மாதிரியான அசம்பாவிதம் ஏதும் நேராமல் எல்லாமே ஒழுங்கான முறையில் நடப்பதாக வைத்துக்கொண்டால், நிதியாளரைப் பொறுத்தவரையில் இந்தப் பேரம் முற்றுப்பெற்று விட்டது என்று கொள்ளலாம். நிதியாளர் 990 பவுன் பணத்தை ஒருமாத காலத்திற்குக் கடனாகக் கொடுத்ததற்கு வருஷத்திற்கு 4% வட்டி பெற்றிருப்பார்.

## 2. உண்டியல் கழிவு மார்க்கெட்டின் அமைப்பு முறையும் அது பரம்பரை பரம்பரையாக ஆற்றிவரும் பணிகளும்

பொருள்களில் நடைபெறும் பேரங்கள் முற்றுப்பெறச் சிறிது காலம் ஆகின்றன. அவ்வாருன பேரங்கட்கு நிதிவசதி செய்யும் வகையில், வசதியான முறையில், எளிதில் புரிந்துகொள்ளக்கூடிய சட்டரீதியான பாதுகாப்புகளுடன் அமைந்துள்ள ஒரு சாதனமே வர்த்தக உண்டியலாகும். இங்கிலாந்து இறக்குமதி செய்யும் உணவுப் பொருள்கள், கச்சாப் பொருள்கள் ஆகியவற்றில் நடைபெறும் பேரங்கள் முற்றுப்பெறச் சிறிது காலம் ஆகும். இவ்வகையான பேரங்கள் சிலவற்றிற்குத் தேவையான நிதி வசதிகளை, உண்டியலைக் கழிவு செய்வதன்மூலம் பெறமுடியும். நாடுகட்கிடையே நடைபெறும் வர்த்தகத்தில், ஒரு நாட்டினின்றும் இன்னொரு நாட்டிற்குப் பொருட்கள் வந்து சேருவதற்கு முன்பே, ஏற்றுமதியாளர் தமக்குச் சேரவேண்டிய பணத்தைப் பெறுவதற்கு உண்டியல் வசதி செய்கின்றது. அவ்வாறே இறக்குமதியாளரும், பேரத்தை முடிப்பதற்கான பணத்தை உண்டியல்மூலம் பெறமுடிகின்றது. தாம் வாங்கிய பொருள்களை விற்று, இறக்குமதியாளர் ஏற்றுமதியாளருக்குப் பணத்தைக் கொடுக்கும் முன்பே, ஏற்றுமதியாளர் உண்டியல் கழிவு மார்க்கெட்டின்மூலம் பேரத்திற்கான பணத்தைப் பெற்றுக்கொள்ள முடியும். ஆனல், ஏற்றுமதியாளர் அல்லது இறக்குமதியாளர் ஆகிய இருவரில் யாராவது ஒருவரின் நாணயத்தைப்பற்றி உண்டியல் கழிவு மார்க்கெட் தெரிந்திருந்தால்தான் அது பணம் தரத் தயாராக இருக்கும். உண்மை

நாம் மேற்கூறிய 'பின் தேதியிட்ட செக்கை' 'உண்டியல்' என்று பெயரிட்டு அழைத்தால், அந்தச் செக்கின் 'உரிய காலத்தை'க் 'கெடுவுக்காலம்' (maturity) என்று கூறலாம். கெடுவுக் காலத்திற்கு முன்பாகவே புறக்குறிப்பைத் (endorsement) தெரிவித்து, உண்டியலை விற்று, உடனடியாகப் பணம் பெறும் முறையே 'உண்டியல் கழிவு' (discounting) எனப்படும். இப்பொழுது (அதாவது கெடுவுக் காலத்திற்கு முன்பாகவே) உண்டியலுக்குக் கொடுக்கப்படும் பணத்திற்கும், அதன் உண்மையான மதிப்பிற்கும் (இந்தத் தொகையே கடனாளியால் கெடுவுக் காலத்தில் தரப்படும்), உள்ள வேறுபாட்டிற்குப் பெயர் 'கழிவு' (discount) என்பதாகும். இந்தக் கழிவை 100-க்கு ஓராண்டிற்கு உண்டியலின் உண்மை மதிப்பில் எவ்வளவு விதம் என்று கணக்கிடுவார்கள்.

தாமஸ் என்ற கடனாளி, ஜான் என்ற கடன் ஈவோரிடம் பொருட்களை வாங்குகிறார் என்று வைத்துக்கொள்வோம். கடன் ஈவோர் உடனடியாகப் பணம் வேண்டுமென்கிறார்; ஆனால் பொருட்களை விற்ற பின்தான் தன்னால் பணம் தர இயலும் என்று கடனாளி கூறுகிறார். கடன் ஈவோர் கடனாளியின்மேல் ஒரு மூன்று மாத கால உண்டியலை வரைய ஒப்புக்கொள்வதன் மூலம் அவர்கள் அந்தப் பேரத்தை முடிக்கலாம்.[1] கடன் ஈவோரால் வரையப்படும் உண்டியல் கீழ்க் காணும் உருவில் திகழும்.[2] எனவே, கடன் ஈவோரே உண்டியலை வரைபவர் (Drawer), கடனாளி உண்டியல் வரையப்படுபவர் (Drawee). ஈவோர் கடன் உண்டியலை வரைந்ததும் அதைக் கடனாளிக்கு அனுப்பி வைக்கிறார். கடனாளி தனது பொறுப்புகளை ஒப்புக் கொள்கின்றார். அதாவது, ஓராயிரம் பவுன் பணத்தையும் கெடுவுக் காலத்தில் செலுத்தி விடுவதாக ஒப்புக் கொள்கிறார். ஒப்புக்கொண்டு முகத்தான் அவர் உண்டியலின் மேல் தமது 'ஏற்பை' அல்லது 'ஒப்புகை'(acceptance) தெரிவிக்கின்றார். உண்டியலை ஏற்றுக்கொண்டதும், கடனாளி தாற்காலிக

[1] உண்மையில் லண்டன் மார்க்கெட்டில் நிலவும் உண்டியல்கள் 1 மாத காலத்திலிருந்து 6 மாதகாலம் வரை கெடுவு உடையனவாகத் திகழ்கின்றன. எனினும் 3 மாத காலக் கெடுவினை உடைய உண்டியல்களைத்தான் இந்த அத்தியாயம் முழுவதும் நாம் எடுத்துக் காட்டுகளாகக் கையாண்டுள்ளோம். லண்டன் மார்க்கெட்டிலுள்ள உண்டியல்களில் பெரும்பான்மையானவை 3 மாத காலக் கெடுவு உடையனவேயாகும்.

[2] லண்டன், 1957ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் 27ஆம் நாள் தாமஸ் கடனாளிக்கு,

மூன்று மாதத் தவணைக்குப் பின் தயவுசெய்து ஜான் கடன் ஈவோரிடமோ அல்லது அவருடைய கட்டளையின்படியோ, தாங்கள் பெற்றுள்ள மதிப்புகளுக்கு ஈடாக ஓராயிரம் பவுன் பணம் கொடுக்கவும்.

கையொப்பம்; ஜான் கடன் ஈவோர்

மாக அந்தப் பேரத்திற்கு ஒரு முடிவு கட்டுகின்றூா மூன்று மாதங்கள் கழித்து யாரிடம் உண்டியல் இருக்கின்றதோ அவருக்கு ஓராயிரம் பவுன் பணம் கொடுப்பதற்குக் கடனாளி தம்மைத் தயார் செய்து கொள்ளவேண்டும்

கடன் ஈவோர் மூன்று மாதங்கள் கழித்து ஓராயிரம் பவுன் பணம் பெறுவதைவிட உடனடியாக ரொக்கம் பெறுவதையே விரும்புவார் எனவே அவர் உண்டியலுக்கு ஈடாகக் கடன் கொடுக்கக்கூடிய ஒருவரிடம் அதை எடுத்துச் செல்லுவார் கடன் ஈவோர் இந்த உண்டியலின் அடிப்படையில் கடன் பெற முயலுவதில்லை அவர் இந்த உண்டியலை விற்றுவிடுகிருர் அதாவது இந்த உண்டியலின்மீதுள்ள தனது பாத்தியதைகள் அனைத்தையும் விட்டுவிடுகிருர் கடன் ஈவோர் உண்டியலை விற்கும் போது தனக்கு அந்த உண்டியலில் யாதொரு விதமான பாத்தியதையும் (claim) கிடையாது என்பதை உணர்த்தும் வகையில் தனது புறக்குறிப்பை அதில் தெரிவிக்கவேண்டும் அவர் அவ்வாறு புறக்குறிப்பு இடுவது தற்செயலாக அவரை ஒரு விதப் பொறுப்பில் மாட்டிவைக்கின்றது கடனாளியால் கெடுவுக் காலத்தில் பணம் தரமுடியாது போய்விட்டால் கடன் ஈவோர் பணத்திற்குப் பொறுப்பாளியாவார் கடன் ஈவோர் இந்த உண்டியலை விற்கும்போது அவரிடமிருந்து விலைக்கு வாங்கும் நிதியாளர் (financier) அவருக்கு 1 000 பவுன் பணத்தையும் கொடுக்கமாட்டார் உதாரணமாக 990 பவுன் பணம் கொடுக்கலாம் 1 000 பவுனுக்கும் 990 பவுனுக்கும் வேறுபாடான 10 பவுன் பணம் 990 பவுனுக்கு மூன்று மாதகால அளவினுக்கான வட்டித் தொகையைக் குறிக்கின்றது அவ்வாறாயின் கழிவு வீதம் 4% என்று சொல்லப்படும்[1] தற்பொழுது தன்னிடமுள்ள 990 பவுன் பணத்திற்கு மூன்று மாதங்கள் கழித்து 1 000 பவுன் பணம் ஈடாகும் என்று நிதியாளர் கருதுகிருர் இதற்கு அவர் பெறும் வெகுமதி 10 பவுன் பணம் இப்பொழுது அவர் கைக்கு வந்திருக்கும் உண்டியல் 1,090 பவுனின்மேல் அவருக்குள்ள பாத்தியதையைக் குறிக்கும் சட்டபூர்வமான சான்றாகும்

உண்டியல் மிகவும் வசதியான ஒரு சாதனமாகும் ஏனெனில் அரசாங்கப் பத்திரத்தைப்போலவே இதுவும் தன் ஆயுட் காலத்தில் ஒருவர் கையிலிருந்து இன்னொருவர் கைக்கு எளிதில் மாறக் கூடியது கடன் ஈவோரிடமிருந்து உண்டியலை வாங்கிய

[1] இங்கு கணித நிபுணர் உண்மையான கழிவுக்கும் (True Discount) வாணிகக் கழிவுக்கும் (Commercial Discount) இடையே உள்ள வேறுபாட்டைக் கவனித்திருக்கக்கூடும் கெடுவு காலத்தில் செலுத்தப்படும் பணத் தொகையின் அடிப்படையில் வாணிகக் கழிவு கணிக்கப்படுகின்றது

ஒருமாத காலத்தில், நிதியாளருக்கும் பணம் தேவைப்படுகின்றது என்று வைத்துக்கொண்டால், அவர் இந்த உண்டியலை 'மறுகழிவு' (rediscounting) செய்து பணம் பெறமுடியும் அவர் அவ்வாறு செய்வாரேயானல் இப்பொழுது உண்டியலை விலைக்கு வாங்குவோருக்கு, உண்டியலானது இரண்டு மாத காலம் கழித்து 1,000 பவுனுக்குரிய பாத்தியதையாகத் திகழ்கின்றது. (உரிய வட்டி வீதம் 4% ஆகவே இன்னும் இருக்கின்றது என்று வைத்துக் கொண்டால்) உண்டியலின் தற்போதைய விலை 993 பவுன் 6 ஷில்லிங்குகள் 8 பென்னிகள் ஆக உயர்ந்திருக்கும். நிதியாளரும் தாம் உண்டியலை விற்கும்போது அதில் தமது புறக்குறிப்பைத் தெரிவிக்கவேண்டும். இவ்வாறு அவர் செய்வதால் அவரும் இந்த உண்டியலுக்கு ஓரளவு பொறுப்பாளியாகிருர். அதாவது, உண்டியலில் குறிக்கப்பட்டுள்ள ஏனைய நபர்கள், கெடுக் காலத்தில் பணம் கொடுக்கத் தவறுர் பட்சத்தில், இந்த நிதியாளர் பணத்திற்குப் பொறுப்பாளியாவசர். இம்மாதிரியான அசம்பாவிதம் ஏதும் நேராமல் எல்லாமே ஒழுங்கான முறையில் நடப்பதாக வைத்துக்கொண்டால், நிதியாளரைப் பொறுத்தவரையில் இந்தப் பேரம் முற்றுப்பெற்றுவிட்டது என்று கொள்ளலாம். நிதியாளர் 990 பவுன் பணத்தை ஒருமாத காலத்திற்குக் கடனுகக் கொடுத்ததற்கு வருஷத்திற்கு 4% வட்டி பெற்றிருப்பார்.

## 2. உண்டியல் கழிவு மார்க்கெட்டின் அமைப்பும் முறையும் அது பரம்பரை பரம்பரையாக ஆற்றிவரும் பணிகளும்

பொருள்களில் நடைபெறும் பேரங்கள் முற்றுப்பெறச் சிறிது காலம் ஆகின்றன. அவ்வாருன பேரங்கட்கு நிதிவசதி செய்யும் வகையில், வசதியான முறையில், எளிதில் புரிந்துகொள்ளக்கூடிய சட்ட ரீதியான பாதுகாப்புகளுடன் அமைந்துள்ள ஒரு சாதனமே வர்த்தக உண்டியலாகும். இங்கிலாந்து இறக்குமதி செய்யும் உணவுப் பொருள்கள், கச்சாப் பொருள்கள் ஆகியவற்றில் நடைபெறும் பேரங்கள் முற்றுப்பெறச் சிறிது காலம் ஆகும். இவ்வகையான பேரங்கள் சிலவற்றிற்குத் தேவையான நிதி வசதிகளை, உண்டியலைக் கழிவு செய்வதன்மூலம் பெறமுடியும். நாடுகட்கிடையே நடைபெறும் வர்த்தகத்தில், ஒரு நாட்டினின்றும் இன்னெரு நாட்டிற்குப் பொருட்கள் வந்து சேருவதற்கு முன்பே, ஏற்றுமதியாளர் தமக்குச் சேரவேண்டிய பணத்தைப் பெறுவதற்கு உண்டியல் வசதி செய்கின்றது. அவ்வாறே இறக்குமதியாளரும், பேரத்தை முடிப்பதற்கான பணத்தை உண்டியல்மூலம் பெறமுடி

கின்றது. தாம் வாங்கிய பொருள்களை விற்று, இறக்குமதியாளர் ஏற்றுமதியாளருக்குப் பணத்தைக் கொடுக்கும் முன்பே, ஏற்றுமதியாளர் உண்டியல் கழிவு மார்க்கெட்டின்மூலம் பேரத்திற்கான பணத்தைப் பெற்றுக்கொள்ள முடியும். ஆனால், ஏற்றுமதியாளர் அல்லது இறக்குமதியாளர் ஆகிய இருவரில் யாராவது ஒருவரின் நாணயத்தைப்பற்றி உண்டியல் கழிவு மார்க்கெட் தெரிந்திருந்தால் தான் அது பணம் தரத் தயாராக இருக்கும். உண்மையில் இவர்களின் நாணயத்தைப்பற்றி உண்டியல் கழிவு மார்க்கெட்டால் பெரும்பாலும் அறிந்திருக்க முடியாது. அவ்வாறான நிலையில் பேரும் புகழும் பெற்றிலங்கும் நிறுவனம் ஒன்று, உண்டியலில் குறித்திருக்கும் பணத்திற்கு உத்தரவாதம் அளிக்க முன்வந்தால், இவர்களால் எளிதில் பணம் பெற முடியும் இவ்வாறு உத்தரவாதம் அளிக்கக்கூடிய நிறுவனங்கள் இருக்கும் பட்சத்தில் அவற்றிற்குச் சிறிது கமிஷன் (commission) கொடுப்பதுபற்றிக் கவலை இல்லை. ஏனெனில், உண்டியலில் அன்னாரது உத்தரவாதம் பொறிக்கப் பட்டிருந்தால் உண்டியலைக் குறைந்த கழிவு வீதத்தில் விரைவாகக் கழிவு செய்யமுடியும். இம்மாதிரியான உத்தரவாதங்கள் அளிக்கும் விஷயத்தைப் பொறுத்த வரையில் சில தனித்திறமை வாய்ந்த நிறுவனங்கள் உள்ளன. அவையே 'உண்டியல் ஏற்பு அகங்கள்' (Accepting Houses) ஆகும். இவை உத்தரவாதம் தருவதற்கு ஈடாக இவற்றிற்குச் சிறிது கமிஷன் கொடுக்கவேண்டியிருக்கும். இந்த ஏற்பு அகங்களின் முக்கிய தொழில் உலகிலுள்ள முக்கியமான வர்த்தகர்களுடைய நாணயத்தைப்பற்றி ஆராய்ந்து மதிப்பிடுவதேயாகும். இந்த நோக்குடன், இவை வெளிநாடுகளில் பல முக்கியமான வியாபார கேந்திரங்களில் தங்களுடைய ஏஜென்சிகளை (agenies) நிறுவியுள்ளன. அமெரிக்க இறக்குமதியாளர் ஒருவர், ஏற்பகம் ஒன்றினை அணுகி இம் மாதிரியான வசதிகள் செய்து தருமாறு வேண்டினால், இந்த ஏற்பகம் அவருடைய நாணயத்தைப்பற்றி உறுதி செய்துகொண்டபின் அந்த அமெரிக்க இறக்குமதியாளருக்கு ஓர் 'ஏற்புக் கடனை' (acceptance credit) வழங்கும். இறக்குமதியாளரின் பேரங்களின் அளவு, அவருடைய செல்வ நிலைபற்றி ஏற்பகம் கொண்டுள்ள மதிப்பு ஆகியவற்றைப் பொறுத்து, 'ஏற்புக் கடனின்' அளவு தீர்மானிக்கப்படும். அமெரிக்க இறக்குமதியாளருக்குக் கொடுக்கப் படும் ஏற்புக் கடனின் மதிப்பு 20,000 பவுன் என்று வைத்துக் கொள்வோம். அமெரிக்க இறக்குமதியாளர், இங்கிலாந்து வியாபாரி ஒருவரிடமிருந்து 15,000 பவுன் பெறுமானமுள்ள பொருள்களை விலைக்கு வாங்குகிறார் என்றும், பணத்திற்கு ஈடாக அமெரிக்க இறக்குமதியாளரிடமிருந்து மூன்று மாத தவணைக் காலம் உடைய உண்டியல் ஒன்றினை இங்கிலாந்து வியாபாரி

ஏற்றுக்கொள்ளச் சம்மதிக்கிறார் என்றும் வைத்துக்கொள்வோம். அவ்வாருயின், அமெரிக்க இறக்குமதியாளர் தமக்கு ஏற்பகத்தில் ஏற்புக் கடன் வசதி இருப்பது குறித்து இங்கிலாந்து நாட்டு வியாபாரிக்கு அறிவிப்பார் எனவே, இங்கிலாந்து நாட்டு வியாபாரி உண்டியலை, அமெரிக்க இறக்குமதியாளரின் பெயருக்கு வரைவதில்லை; ஏற்பகத்தின் பெயருக்கே அவர் உண்டியல் எழுதுவார். அமெரிக்கருக்கு 20,000 பவுன்வரை ஏற்பகம் ஏற்புக் கடன் கொடுத்திருக்கின்றது, என்ற உண்மையை நினைவு கூர்தல் அவசியமாகும். எனவே, இங்கிலாந்து நாட்டு வியாபாரி உண்டியலை லண்டனிலுள்ள ஏற்பகத்திற்கு அனுப்பியதும் ஏற்பகம் தனது 'ஒப்புதலை'த் தெரிவிக்கின்றது. இதன்பின் இங்கிலாந்து நாட்டு வியாபாரி, அந்த உண்டியலை எளிதில் கழிவு செய்ய முடியும் முதல் தரமான பிரிட்டிஷ் பெயர் ஒன்றினைத் தாங்கி இருப்பதால் இந்த உண்டியலை மிகவும் குறைவான வீதத்தில் கழிவு செய்ய முடியும். கெடுவு காலத்தில் உண்டியலில் குறிக்கப்பட்டிருக்கும் பணத்தைச் செலுத்த வேண்டியது ஏற்பகத்தின் பொறுப்பேயாகும். அமெரிக்க வியாபாரியிடமிருந்து பணத்தைப் பெறுவதற்கான ஏற்பாடுகளை ஏற்பகமே செய்துகொள்ளும். இவ்வாறு தனது பெயரை உத்தரவாதமாகக் கொடுப்பதற்கு ஈடாக, ஏற்பகம் சிறிது கமிஷன் வசூலிக்கின்றது. இந்தக் கமிஷன்மூலம் கிடைக்கும் வருமானத்தின் உதவியால் வர்த்தகர்களின் நாணயத்தை அறிந்துகொள்ளும் பொருட்டு உலகிலுள்ள முக்கியமான வியாபார கேந்திரங்களில் ஏற்பகத்தால் அலுவலகங்கள் பல நிறுவமுடிகின்றது திருப்பமுடியாத கடன்களால் தங்களுக்கு ஏற்படும் நஷ்டத்தைத் தவிர்ப்பதற்காகவே இவ்வாறு ஏற்பகங்கள், உலகில் பல இடங்களில் தங்கள் அலுவலகங்களை நிறுவியுள்ளன. தாங்கள் ஏற்றுக்கொள்ளும் பொறுப்புகளைச் சிரமமின்றி நிறைவேற்றப் போதுமான அளவு செல்வங்களை உடையவையே ஏற்பகங்கள் என்ற கருத்து லண்டனில் நிலவவேண்டும். இல்லாவிடில், உண்டியல்களில் இவர்கள் பெயர் குறிக்கப்படுவது பொருளற்றதாகவே முடியும் மேலும், அதனால் யாதொரு பயனும் இல்லை.

சில சமயம், கடனாளிக்கும் ஏற்பகத்திற்கும் இடையே இவ்வாறு நேரடியான தொடர்புகள் ஏற்பட வாய்ப்புகள் இல்லாமல் இருக்கலாம். இதுபோன்ற நிலைகளில் கடனாளி தன்னுடைய பாங்குமூலம், ஏற்பகத்தினுடன் தொடர்புகொண்டு இம்மாதிரியான வசதிகளைப் பெறமுடியும். கடனாளி அர்ஜன்டினாவில் இருக்கும் இறக்குமதியாளர் என்று வைத்துக்கொள்வோம். கடனாளி தன்னுடைய நாட்டிலுள்ள தனது பாங்கை அணுகி

லண்டனில தனக்கு ஓர 'ஏறபுக கடன' ஏறபாடு செய்யுமபடி கோருகின்ருர ஆர்ஜனடினு நாட டிலுள்ள பாஙகு அதற்கு ஒப்புக் கொண்டு, (லண்டனிலுள்ள ஏறபகம ஒன்றுடன தொடர்பு கொண்டு) கடனுக்குத தான பொறுப்பு என்று கூறுகிறது தனது நாட்டிலுள்ள தனது வாடிக்கைக்காரரான இறக்குமதியாளரிடம பணம பெறுவதறகான ஏறபாடுகளை பாஙகே செய்துகொள்ளு கினறது இம மாதிரியான ஏறபுக கடனுககு 'ரீ இமபர்ஸ மெணட கடன' (Reimbursement Credit) என்ற பெயர வழங்கு கிறது. ஏறபகஙகளும பாஙகுகளும இதுபோன்ற 'ரீ இமபர்ஸ மெண்ட கடன்' வசதிகளை மிகக குறைநத வீததத்தில (பெரும பாலும் ½ சதவீதம) ஏறபாடு செயகினறன இமமாதிரியான கடன வசதிகளை ஏறபாடு செயயுமபோது ஆர்ஜனடினு நாட்டு இறககு மதியாளரின நாணயததைபபறறி ஏறபகம கவலையுற வேண்டியு தில்லை அவருடைய நாணயததைபபறறி ஏறபகம அறிய முயனருலும எளிதில அறிநது கொள்ள முடியாது ஆர்ஜனடினு நாட்டுப பாஙகின நாணயததைப பறறி ஏறபகம அறிய முயலு வதே போதுமானதாகும இது ஒரு கடினமான விஷயம அலல எனவே இமமாதிரியான கடன வசதிகளை மிகவும குறைந்த வீததத்தில ஏறபாடு செயய ஏறபகஙகள முன வருகினறன ஆர்ஜனடினு நாட்டிலுள்ள பாஙகுதான இமமாதிரியான ஏறபாடு கள செயது தருவதறகாகத தனது வாடிக்கைககாரரிடம ஒரு சிறு கமிஷன தொகையை எதிர்பபார்பபது நியாயமானதேயாகும ஆர்ஜண்டினு பாஙகும ஏறபகமும வியாபாரியின நாணயத்தை அறியும் முயறசியில தஙகளுக்குள 'வேலைப பிரிபபு' (Division of labour) செயது கொளவதால ஏறபுக்கடன ஏறபாடு செயவதற கான மொத்தச செலவு குறையலாம என்று நாம கருத இடம உள்ளது

லண்டனில் சிறந்து விளஙகும ஏற்பகஙகள, தஙகளது இந்த அலுவலோடு வேறு நிதி சம்பந்தபபட்ட அலுவலகளும புரிகினறன உதாரணமாகப பெருஙகொணட தொகைக்கான நெடுங காலக் கடனை எழுபபவிரும்பும கடனாளிகட்கு ஏறபகங்கள உறுதுணை யாக அமைந்துள்ளன இநத ஏறபகஙகள 'வியாபாரப பாஙகர் கள்' (merchant Bankers) என்று பெருமபாலும அழைககபபடு கினறன இநத ஏறபகங்களில சில உலகப புகழவாயந்த நிதி நிறுவனங்களாகும உதாரணமாக பாரிங்ஸ (Barings), ராத சைல்ட்ஸ (Rothschilds) கிளின வோர்ட்ஸ (Kleinworts), எர்லாங்கர்ஸ் (Erlangers), லாசாரஸ (Lazards) மறறும பல. இவை போக, பெரிய வாணிபப பாஙகுகளும, ஏறபுக் கடன வசதிகளை ஏறபாடு செய்யும அலுவலில ஈடுபட்டுள்ளன. பெரிய

வர்த்தக கேந்திரங்களில் தங்களுடைய சாதாரணப் பாங்குத் தொழிலுடன் இதையும் இணைத்துக் கொள்வது பாங்குகட்கு எளிதாகவே தோன்றுகிறது.

ஏற்றுக்கொள்ளப்பட்ட உண்டியல்களை லண்டன் உண்டியல் கழிவு மார்க்கெட்டில் சுலபமாகக் கழிவு செய்யமுடியும். லண்டன் உண்டியல் கழிவு மார்க்கெட் 12 நிறுவனங்களால் ஆகியது. இந்தப் 12 நிறுவனங்களில் 3 நிறுவனங்கள் பெரியவை ஆகும். 9 நிறுவனங்கள் சிறியவையாகும். பெரிய நிறுவனங்கள் மூன்றும் நெடுங்காலம் தொட்டு 'பொதுவரையறுத்த கம்பெனி' (Public Limited Company) களாக இருந்து வருகின்றன. ஒன்பது சிறிய நிறுவனங்களும் அண்மைக்காலம் வரை 'கூட்டு வியாபார' (Partnership) அமைப்புப் பெற்று விளங்கின; இவையும் தற்சமயம் 'பொதுவரையறுத்த கம்பெனி' களாக மாற்றப்பட்டுள்ளன.[1] இவை தவிர மூன்று அல்லது நான்கு சிறிய நிறுவனங்களும் உள்ளன. இவற்றின் பெயர் 'இயக்கத் தரகர்கள்' (Running Brokers) என்பதாகும். இவர்கள் உண்டியல் தரகு அகங்கள் செய்வதைப்போன்ற தொழில்களை ஓரளவு செய்வதுடன், லண்டன் நீங்கலாக உள்ள ஏனைய பகுதிகளிலுள்ள பாங்குகட்கும், வேறு வாடிக்கைக்காரர்கட்கும், ஏஜெண்டுகளாகவும் திகழ்கின்றனர். பாங்குகளினின்றும், வேறு நிறுவனங்களினின்றும், குறுங் காலக் கடன்கள் பெற்று அவற்றின் உதவியால் உண்டியல்களை விலைக்கு வாங்கி அவற்றைத் தம்மிடமே வைத்திருப்பதுதான், உண்டியல் கழிவகங்கள் பரம்பரை பரம்பரையாக ஆற்றிவரும் பணிகளாகும். இங்கிலாந்திலுள்ள சாதாரண வாணிபப் பாங்குகள், அயல்நாட்டுப் பாங்குகள், குடியேற்ற நாட்டுப் பாங்குகள் ஆகியவை உட்பட சுமார் 90 கடன் ஈவோரிடமிருந்து உண்டியல் கழிவகங்கள் தங்கட்குத் தேவைப்படும் பணத்தைக் கடனாகப் பெறுகின்றன.

உண்டியலைத் தம்மிடம் விற்கவரும் நபர்கட்கு உண்டியல் கழிவு அகங்கள், பாங்குகளிடமிருந்து கடன் வாங்கிப் பணம் கொடுக்கின்றன. உண்டியல் கழிவகத்திற்குப் பாங்கு கடன்களைப் ஏற்பாடு செய்கின்றது. உண்டியல் கழிவகம் இவற்றைப் பயன்படுத்தி உண்டியல்களை விலைக்கு வாங்குகின்றது. பாங்குகளின்

[1] இங்குக் குறிப்பிட்டுள்ள 9 உண்டியல் கழிவகங்களும் பெரும்பாலும் 'உண்டியல் தரகர்கள்' என்றே அழைக்கப்படுகின்றன. தற்சமயம் இவையாவும் கூட்டுப் பங்குக் கம்பெனிகளாகும் (ஒவ்வொரு கம்பெனியின் மூலதனமும் குறைந்தது ஒரு மில்லியன் பவுன்களாவது இருக்கும்). எனினும் உண்டியல் கழிவு மார்க்கெட்டின் பரிபாஷையில் 'கம்பெனிகள்' என்ற வார்த்தை, நெடுநாட்களாகக் கம்பெனிகளாகத் திகழ்ந்து வரும் மூன்று கம்பெனிகளை தான் குறிப்பிடுகின்றது. (அவை தி 6 யூனியன், தி நேஷனல், அலெக்ஸாண்டர்ஸ் ஆகியவையாகும்.)

இருப்புநிலைக் குறிப்பில் (Balance Sheet) காணப்படும் 'நாள் நிலுவைக் கடன்' (Money at call) என்ற இனம், பாங்குகள் உண்டியல் கழிவகங்கட்குக் கொடுக்கும் கடன்களையே குறிக்கின்றது. பாங்குகளிடமிருந்து பணத்தைக் கடனாகப் பெறும் போது உண்டியல் கழிவு அகங்கள், பாங்குகட்கு வட்டி செலுத்த வேண்டியுள்ளது; இந்தப் பணத்தைப் பயன்படுத்தி உண்டியல் கழிவகங்கள் உண்டியல்கள் வாங்கும்போது அவற்றிற்குக் கழிவுகள் கிடைக்கின்றன. இந்த வட்டித் தொகைக்கும் கழிவுத் தொகைக்கும் உள்ள வித்தியாசம்தான் உண்டியல் கழிவகங்களுக்குக் கிடைக்கும் இலாபமாகும். உண்டியல் கழிவகங்கள் பாங்குகளிடமிருந்து குறைந்த வட்டி வீதத்தில் கடன் பெறுகின்றன. இவற்றைக்கொண்டு உண்டியல் கழிவகங்கள் அதிக வீதத்தில் உண்டியல்களைக் கழிவு செய்கின்றன. மூன்று மாத காலக் கெடுவுள்ள உண்டியல் ஒன்றினை விலைக்கு வாங்குப்போது, உண்டியல் கழிவகம் பாங்கிடமிருந்து மூன்று மாதகாலத்திற்கு உரிய கடன் ஒன்று வாங்கும் என்று எண்ணிவிடலாகாது. தனது உண்டியல் தொழிலுக்குத் தேவைப்படும் பணத்தை உண்டியல் கழிவகம் பாங்கிடமிருந்து அன்றாடம் கடனாகப் பெற்றுக்கொண்டே இருக்கின்றது.[1] இவ்வாறு பாங்கிடமிருந்து அன்றாடம் பணத்தைக் கடனாகப் பெறுவதால் சில குறைகள் இருக்கின்றன என்பது உண்மைதான். கடன்களை அவ்வப்போது புதுப்பித்துக்கொண்டிருக்க வேண்டியிருப்பதால் தொல்லைகள் ஏற்படலாம் அல்லது கடன்களை அடுத்தடுத்து புதுப்பிக்க இயலாமல் போய்விடலாம். மேலும் இதுபோன்ற வேறு பல குறைகளும் நேரலாம். எனினும் அன்றாடம் கடன் பெறும்பொழுது உண்டியல் கழிவகங்கள் குறைந்த வட்டி வீதத்திற்குப் பாங்குகளிடமிருந்து கடன் வாங்க முடிகின்றது; மேற்குறித்த குறைகள் யாவற்றையும் ஈடு செய்யும் வகையில் இது அமைந்திருக்கின்றது. பாங்குகளிடமிருந்து 3% லிருந்து $3\frac{1}{2}$% வட்டி வீதத்தில் தன்னால் கடன் பெறமுடியும் என்ற நம்பிக்கையில் உண்டியல் கழிவகம் ஒன்று ஒரு உண்டியலை 4 சதவீதத்தில் கழிவு செய்து விலைக்கு வாங்குகின்றது என்று வைத்துக்கொள்வோம். உண்டியல் கழிவகம் இந்த உண்டியலை விலைக்கு வாங்கியபின், பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்பில் மாற்றங்கள் நேருவதால் பாங்குகள் தங்களது குறுங் காலக் கடன்

[1] உண்டியல் கழிவகங்கள் வாங்கும் கடன்களில் பெரும்பாலானவை பெயரளவுக்கு மட்டுமே 'நாள் நிலுவைக் கடன்'களாக உள்ளன. பெரிய பாங்குகளிடமிருந்து உண்டியல் கழிவகங்கள் கடனாகப் பெறும் பணங்கள் உண்மையில் வாரக் கணக்கில் உண்டியல் கழிவகங்களிடமே தங்கிவிடுகின்றன. சில சமயங்களில் மிகக்குறைந்த அளவில் உண்டியல் கழிவகங்கள் தீர்வகப் பாங்குகளிடமிருந்து 'மறுதினக் கடனும்' (overnight money) 'தனிச் சலுகை கடனும்' (privilege money) பெறுகின்றன. இம்மாதிரி பெறப்படும் பணங்களில் பெரும்பகுதியை மறுதினம் காலையிலேயே திரும்பச் செலுத்திவிட வேண்டும்.

களைக் குறைத்துக்கொள்கின்றன என்று வைத்துக்கொள்வோம். இவற்றின் விளைவாக பாங்கிகளின் கடன் வட்டி வீதம் உயர்ந்து விடுகின்றன—உதாரணமாக 5% ஆகவோ அல்லது 6% ஆகவோ உயர்ந்து விடுகின்றன—என்று வைத்துக்கொள்வோம்.[1] இந்த உயர்ந்த வட்டிவீதங்களில் மாற்றங்கள் ஏதும் நேராமல் நெடு நாட்கட்கு வட்டி வீதங்கள் அதே நிலைகளில் அமர்ந்திருக்கின்றன என்றும் வைத்துக்கொள்வோம். அவ்வாறாயின் 4 சதவீதத்தில் கழிவு செய்த உண்டியலால் உண்டியல் கழிவகத்திற்கு நஷ்டமே ஏற்பட்டிருக்கும், எனவே ஒரு உண்டியலைக் கழிவு செய்யும் போது உண்டியல் கழிவகம் 'நாள் நிலுவைக் கடன்' களுக்கான வட்டிவீதம் அந்த உண்டியலின் ஆயுட்காலம் முழுவதும் எவ்வாறு அமைய நேரலாம் என்று மதிப்பிட்டுக் கொள்ளவேண்டியது அவசியமாகும் எனவே, இன்று மார்க்கெட்டில் நிலவும் கழிவு வீதம் இன்று மார்க்கெட்டில் குறுங் காலக் கடனுக்கு விதிக்கப் படும் வட்டிவீதத்தை மட்டிலும் பொறுத்த ஒன்று என்று நாம் எண்ணிவிடலாகாது. அடுத்துவரும் மூன்றுமாத காலத்திலும் நிலவக்கூடிய வட்டி வீதங்களின் அளவுகளையும், இன்றைய கழிவு வீதம் பொறுத்த ஒன்ருகும் என்பதனை நாம் மறந்துவிடலாகாது.

பாங்குகள் யாவும் ஒரு சேரத் தாங்கள் உண்டியல் கழிவு மார்க்கெட்டுக்குக் கொடுத்துள்ள 'நாள் நிலுவைக் கடன்' களை திருப்பிக் கொடுக்குமாறு உத்திரவிட்டால் என்ன நேரிடும்? உண்டியல் கழிவகங்கள் அதிகமான வட்டி வீதங்கள் தருவதற்குத் தயார் என்ருலும் யாரிடம் பணத்திற்கு ஏற்பாடு செய்ய முடியும்? என்ற வினுக்கள் எழலாம். உண்டியல் கழிவகங்களிடமுள்ள உண்டியல்கள் சில கெடுவுகாலத்தை அடைந்து அவ்வமயம் அவற்றின் மூலம் சிறிது பணம் கிடைக்க வாய்ப்புக்கள் ஏற்படலாம்; புதிதாக உண்டியல்கள் ஏதும் வாங்காமல் இருந்தால் இந்த வழியில் சிறிது பணம் திரட்டலாம். இவ்வழிகளில் கிடைக்கும் பணம் பாங்குகளினின்றும் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கப் போதாது. எனவே உண்டியல் மார்க்கெட்டானது இங்கிலாந்துத் தலைமைப்பாங்கை உதவிகோரி அணுகவேண்டியநிலை உருவாகும். பரம்பரை பரம்பரையாக இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு உண்டியல் மார்கெட்டுக்கு உதவி செய்து வந்திருக்கின்றது. ஆனல் உண்டியல் மார்க்கெட் அதிகமான வட்டிவீதம் கொடுக்கத் தயாராக இருக்கவேண்டும். பெரும்பாலும் இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு மார்க்கெட் வீதத்திலேயே கடன்வசதிகள் செய்து தரத் தயாராக உள்ளது. இருப்பினும் தான்விரும்பினல் இங்கி

[1] பாங்கு வீதம் (Bank Rate, பெருமளவு உயர்ந்தால் தான் நாம் இங்கு வைத்துக் கொள்வதுபோலப் பெருமளவு மாறுதல் ஏற்படும்.

லாந்துத் தலைமைப் பாங்கு. அதிகார பூர்வமான பாங்கு வீதத்தில் (Bank Rate) தான், கடன் கொடுக்க முடியும் என்று சொல்லி விடலாம். அல்லது கருவூல உண்டியல்கட்கு ஈடாக 7 நாட்களுக்கு மட்டும் பாங்கு வீதத்தில் கடன் கொடுக்கப்படும் என்று சொல்லிவிடலாம். நெருக்கடியான சூழ்நிலையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் உதவியை நாட வேண்டியிருக்கும் என்ற உண்மையை உண்டியல் கழிவு மார்க்கெட் உணருவதால் (தற்கால முறைகளின் அடிப்படையில் தங்களால் பாங்கு வீதத்திற்கும் குறைந்த வட்டி வீதத்தில் கடன் பெறமுடியும் என்று அறிந்த போதிலும்) அவை தங்களது கழிவு வீதம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒன்ருக இருக்கவேண்டும் என்று எண்ணி, மிகவும் ஜாக்கிரதையாகத் தங்கள் தொழிலை நடத்துகின்றன. பாங்குகள் எல்லாம் கடனைத் திருப்பிக் கேட்கும் காலங்களில் தங்களுக்குத் தேவையான ரொக்கத்தை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து தாங்கள் பெறமுடியும் என்பதை உண்டியல் கழிவு மார்க்கெட் நன்கு அறியும். ஆனல் அவ்வாறு ரொக்கத்தைக் கடனுகப் பெறும்போது இதற்கான வட்டி வீதத்தை இங்கிலாந்துத் தலைமைப் பாங்குதான் தீர்மானிக்க வேண்டும் என்பதையும் உண்டியல் கழிவு மார்க்கெட் நன்கு அறியும். உண்டியல் கழிவு மார்க்கெட்டுக்கும் தனக்கும் உள்ள இவ்வாருன தொடர்புகளால் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் கழிவு வீதங்களைச் (Discount Rates) சிறந்த முறையில் கட்டுப்பாடு செய்ய முடிகின்றது.

எனவே வேறு யாரிடமிருந்தும் பணம் பெற இயலாத நிலையில் உண்டியல் கழிவகங்கள் மையப் பாங்கிடமிருந்து தான் பணம் பெறமுடிகின்றது. மையப் பாங்கு இவ்வாறு 'கடை நிலைக்கடன் ஈவோனுகத்' (lender of lost resort) திகழ்வதானது உண்டியல் கழிவகங்களின் கழிவு வீதத்தை வெகுவாகப் பாதிக்கின்றது. மீட்க முடியாத கடன்களால், தான் நஷ்டமடைந்து விடாமல் தன்னைக் காத்துக் கொள்வதற்காக, மையப் பாங்கு மறு கழிவு செய்யும்போது விதிமுறைகளை அநுசரித்து வருகின்றது. மையப் பாங்கு இவற்றை நெடுநாட்களாக அநுசரித்து வருகின்றது. சில குறிப்பிட்ட வகைகளைச் சேர்ந்த உண்டியல்களைத் தான் மையப் பாங்கு மறு கழிவு செய்கின்றது. அல்லது குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த உண்டியல்களைத்தான், கொடுக்கும் கடன்களுக்கு ஈடாக மையப் பாங்கு ஏற்றுக்கொள்ளச் சம்மதிக்கின்றது. சாதாரண உண்டியல்களைப் பொறுத்த வரையில், நாணயமான பிரிட்டிஷ் காரர்கள் இருவரின் கையொப்பமுடைய உண்டியல்களைத் தான், (மறு கழிவுக்குத் தகுதியுள்ளவை என்று) மையப் பாங்கு கருது

கின்றது. அந்த இரண்டு கையொப்பங்களில் ஒன்று 'ஏற்பவர்' (Acceptor) ஒருவரின் கையொப்பமாக இருக்க வேண்டியது அவசியமாகும். நெருக்கடியான சூழ்நிலையில் தாங்கள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கை உதவி கோரி அணுக நேரிடும் பொழுது இவ்வாறு தகுதியான உண்டியல்களே பயன்படும் என்ற உண்மையை உண்டியல் கழிவகங்கள் நன்கு அறிந்திருப்பதால், இம்மாதிரியான உண்டியல்களையே கழிவகங்கள் பெரிதும் விரும்புகின்றன. இத்தகைய உண்டியல்களை அவை குறைந்த கழிவு வீதத்திலும் வாங்கத் தயாராக இருப்பது ஒன்றே எந்த அளவுக்கு இவற்றை அவை விரும்புகின்றன என்பதைத் தெற்றென விளக்குகிறது. ஏற்பகம் அல்லது பாங்கு ஒன்றினால் ஏற்றுக்கொள்ளப் பட்ட உண்டியல்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு 'மறு கழிவுக்குத் தகுதியான உண்டியல்கள்' என்று கருதுவதால், ஏற்பகத்தின் கையொப்பம் மிக்க மதிப்பு உடையது என்பது கூறாமலேயே விளங்கும்.

சாதாரண வர்த்தக உண்டியலை, (தற்சமயம் மார்க்கெட்டில் கையாளப்படும் இவ்வகையான உண்டியல்களின் மொத்த மதிப்பு சுமார் £ 250 மில்லியன்களாகும்) வியாபாரப் பொருளாக உண்டியல் கழிவகங்கள் கையாளும்போது, அவை மிக இன்றியமையாத சேவைகள் சில புரிகின்றன. உண்டியல்களை வரைபவர் ஒரு சாரார்; வாணிபப் பாங்குகள் இன்னொரு சாரார். இந்த இரு சாராருக்கும் இடையே உண்டியல் கழிவகங்கள் ஒரு இணைப்புப் போலத் திகழ்ந்து, இரு சாராருக்கும் நன்மைகளை ஏற்படுத்துகின்றன. நீர்மைத் தன்மையைக் காத்துக்கொள்ளும் நோக்கத்துடன் தம்மிடம் பல தரப்பட்ட கெடுவுகாலங்களை உடைய உண்டியல்களை இருப்பாக வைத்திருப்பதைப் பாங்குகள் பெரிதும் விரும்புகின்றன. தங்களிடமுள்ள உண்டியல்களில் ஒவ்வொரு வாரமும் சில உண்டியல்களாவது கெடுவுகாலத்தை அடைவனவாக இருக்கும் வகையில் தங்களது உண்டியல்களின் இருப்பைப் பாங்குகள் ஒழுங்கு செய்துவைத்துள்ளன. தங்களுக்குத் தேவைப்படும் உண்டியல்களைக் கொஞ்சம் கொஞ்சமாக அவ்வப்போது வாங்குவது சிரமமானது என்று பாங்குகள் கருதுவதால், பலதரப்பட்ட உண்டியல்கள் பல அடங்கிய 'கட்டுக்களையே' (Parcels) அவை வாங்க விரும்புகின்றன. குறிப்பிட்ட தொகைகளை உடையனவும், குறிப்பிட்ட கெடுவுகாலங்களை உடையனவுமான பல உண்டியல்கள் அடங்கிய 'கட்டுக்களை' வாங்குவதையே பாங்குகள் விரும்புகின்றன. பாங்குகள் விரும்பக் கூடிய உண்டியல்களால் ஆன 'கட்டுக்களை' ஒரு உண்டியல் கழிவகம் தன்னிடத்தே கொண்டுள்ளது என்று வைத்துக்கொண்டால், அவற்றை ஈடாகவைத்துத்

தனக்குத் தேவைப்படும் பணத்தைக் கடனாக வாங்க அந்த உண்டியல் கழிவகம் முயலாது உண்டியல்களால் ஆன அந்தக் கட்டுக்களைப் பாங்கிடம் 'மறுகழிவு' செய்து, பணம் பெறுவதையே அது விரும்பும். அந்தக் 'கட்டுக்களை' அப்படியே பாங்குகளிடம் கொடுத்து விட்டு அவற்றிற்கு ஈடாக உண்டியல் கழிவகங்கள் பணம் பெறுகின்றன. அதாவது அவற்றை உண்டியல் கழிவகம் பாங்கிடமே விற்றுவிடுகின்றது. அந்த உண்டியல்களை விற்கும் போது அவற்றின்மேல் தன்னுடைய 'புறக்குறி' யை (Endorsement) உண்டியல் கழிவகம் இடுகின்றது. எனவே கெடுவு காலத்தில் ஏற்பவர், வரைபவர், இதற்கு முன்பு வைத்திருந்தோர், ஆகியோர் பணம் தரத் தவறினால் உண்டியல் கழிவகம் பணத்திற்குப் பொறுப்பாகும். இந்த ஒரு பொறுப்புத் தவிர அந்த உண்டியல்களின் மீது வேறு எந்தவிதமான பாத்தியதைகளும் இனி உண்டியல் கழிவகத்திற்குக் கிடையாது. மற்றவை மாறாது இருக்கும் பட்சத்தில் (CETERIS PARIBUS) உண்டியல் கழிவகம் அந்த உண்டியல்களைப் பாங்கிடம் எந்தக் கழிவு வீதத்தில் விற்றதோ, அந்தக் கழிவு வீதமானது, மற்றவர்களிடமிருந்து அந்த உண்டியல்களை உண்டியல் கழிவகம் எந்தக் 'கழிவு வீதத்தில் (சராசரி கழிவு வீதம்) வாங்கியதோ அந்தக் (சராசரி) கழிவு வீதத்தைவிடக் குறைவாகவே இருக்கும். எனவே இந்த இரண்டு கழிவு வீதங்கட்கும் இடையே வித்தியாசம் இருக்கும். உண்டியல் கழிவகம் உண்டியல்கள் தன்னிடம் இருந்த காலத்திற்கு வட்டியும் 'ஆபத்துப் பிரிமியமும்' (Risk Premium) எதிர்பார்க்கின்றது. பாங்கு விரும்பிய உண்டியல்களையே அவற்றிடம் கொடுத்ததற்குச் சிறு கமிஷனை (Commission) எதிர்பார்க்கின்றது; மேலும் உண்டியல்களின் கெடுவு காலம்வரை அந்த உண்டியல்களுக்கு உண்டியல் கழிவகமும் ஒரு பொறுப்பாளியாக இருப்பதால் அதற்கு ஈடாக ஒரு சிறு தொகையை எதிர்பார்க்கின்றது—இவை அனைத்தும் நாம் மேலே கண்ட இரண்டு கழிவு வீதங்கட்கும் இடையே உள்ள வித்தியாசத்திற்கு ஈடாகும் என்று உண்டியல் கழிவகம் கருதுகின்றது. மார்க்கெட்டுக்கு விற்பனைக்கு வரும் (உண்டியல்களின் கெடுவு காலம் மதிப்பு, ஆகியவையும்,) உண்டியல்களை வரைந்தோரின் நாணயமும் பல தரத்தனவாக இருக்கும் பட்சத்தில், இந்த இரண்டு வீதங்களுக்கும் இடையே உள்ள வித்தியாசம் அதிகமாக இருக்க நேரலாம். எனவே அம்மாதிரியான காலங்களில் உண்டியல் கழிவகங்களால் அதிக வருமானம் ஈட்டுவதற்குரிய வாய்ப்புக்கள் பெருகும்.

உண்டியல் கழிவகங்களிடம் இருந்து விலைக்கு வாங்கிய உண்டியல்களை, வாணிபப் பாங்குகள் பிறருக்கு விற்பதே இல்லை.[1] வாணிபப் பாங்கின் கைக்குக் கிட்டிய உண்டியல் அதன் கெடுவு காலம்வரை பாங்கிடமே நிலைபெற்று விடுகின்றது. உண்டியல் கழிவு அகங்கள் பாங்குகள் விரும்பக்கூடிய உண்டியல்களைத் தரம் பிரித்துப் பாங்குகளிடம் விற்றுவரும் பழக்கம் வழிவழியாக நிலவி வருகிறது. இம் மாதிரி ஒரு பழக்கம் இல்லாது இருந்தால் பாங்குகள் தாங்களே இது போன்ற வேலைகளைச் செய்யும்; உண்டியல் கழிவகங்களிடம் இந்தப் பொறுப்பைப் பாங்குகள் சுமத்தி இருக்கமாட்டார்கள். கெடுவு காலத்திற்கு இன்னும் இரண்டு மாதங்கள் இருக்கக்கூடிய உண்டியல்களையே பாங்குகள் பெரிதும் விரும்புகின்றன. எனவே உண்டியல் கழிவு அகங்கள் உண்டியல்களைத் தங்களிடம் ஒரு மாத காலத்திற்கு வைத்திருக்கின்றன. காலப்போக்கில் அவை குறுகிய காலக்கெடுவு உடைய உண்டியல்களாக மாறியபின் அவற்றை வாணிகப் பாங்குகளிடம் விற்று விடுகின்றன. சில சூழ்நிலைகளில் குறுகிய காலக் கெடுவினை உடைய உண்டியல்கட்கான தேவை மிக அதிகமாகி விடுகின்றது. எனவே, அவ்வாயம் மூன்று மாத காலக் கெடுவு உடைய உண்டியல்களின் கழிவு வீதத்தைக் காட்டிலும், இரண்டு மாத காலக் கெடுவு உடைய உண்டியல்களின் கழிவு வீதம் குறைவாகவே இருக்கும். இவ்வாறு இந்த இரண்டு கழிவு வீதங்கட்கும் இடையே வித்தியாசம் இருப்பதால், உண்டியல் கழிவகங்கள் தங்களிடமுள்ள இரண்டு மாத காலக் கெடுவு உடைய உண்டியல்களின் பேரில் நல்ல வட்டி வீதம் சம்பாதிக்க முடிகின்றது. இது எவ்வாறு என்பதை ஒரு உதாரணத்தால் — மிகவும் எளிதாக்கப்பட்ட உதாரணத்தால்[2] விளக்குவோம். மூன்று மாதகாலக் கெடுவு உடைய உண்டியலுக்கான கழிவு 5% என்றும் (இரண்டு மாத காலக் கெடுவு உடைய உண்டியலுக்கான கழிவு வீதம் 3% என்றும்) வைத்துக்கொள்வோம். அவ்வாறாயின் ஆரம்பத்தில் உண்டியல் கழிவகத்தால் வாங்கப்பட்ட மூன்று மாத காலக் கெடுவு உடைய உண்டியலின் விலை 987 பவுன் 10 ஷில்லிங்குகளாக இருக்கும். (12 பவுன் 10 ஷில்லிங் 1000த்தில் மூன்று

[1] இம்மாதிரியான பழக்கம் கருவூல உண்டியல்களைப் பொறுத்தவரையிலும் கூட கையாளப்பட்டது. ஆனால் 1938 ஆம் ஆண்டுக்குப் பின் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பாங்குகட்கு உதவும் நோக்கத்துடன் தன்னுடைய 'வெளி மார்க்கெட்' நடவடிக்கைகளை (open market operations) அமைத்துக் கொண்ட நாள் தொட்டு வாணிபப் பாங்குகள் கருவூல உண்டியல்களை விற்பது சாதாரணமாகிவிட்டது.

[2] இங்குத் தரப்பட்டுள்ள எண்கள் யாவும் மிகவும் கற்பிதமானவை. எனினும் வாசகர்கள் சிரமமான மனக் கணக்கைப்போட்டு உழப்ப வேண்டாமே என்று எண்ணத்தில் இம்மாதிரியான எண்கள் கையாளப்பட்டுள்ளன.

மாதங்கட்கு $1\frac{1}{4}\%$ ஆகும். எனவே ஆண்டுக்கு 5% ஆகும்). ஒரு மாத காலம் முடிவுற்றதும் உண்டியல் கழிவகம் அந்த உண்டியலை 995 பவுனுக்கு விற்கின்றது. (ஆண்டுக்கு 3% என்பது இரண்டு மாதங்கட்கு $\frac{1}{2}$ சதவீதத்திற்குச் சமமானது. எனவே £ 1000க்கு $\frac{1}{2}\%$ என்பது 5 பவுனுக்குச் சமமாகும்.) எனவே 987 பவுன் 10 ஷில்லிங் மதிப்புள்ள ஒரு முதலினை உடைய கடன் தொகை ஒரு மாத காலத்தில் 7 பவுன் 10 ஷில்லிங் வட்டி சம்பாதிக்கின்றது. அதாவது ஆண்டிற்கு 9% வட்டி அந்த முதலுக்குக் கிட்டுகிறது. உண்டியல்களை விலைக்கு வாங்கு வதற்காகப் பாங்கிடமிருந்து உண்டியல் கழிவகம் பெற்ற கடனுக் கான வட்டி வீதத்தைக் காட்டிலும், இந்த வட்டி வீதம் அதிக மானதாகவே இருக்க வேண்டும். உண்டியல் கழிவகங்கள் உண் டியலை வாங்கிய முதலாவது மாதத்தில் இந்த வீதங்கள் குறைந்து விட்டால் இன்னும் அதிகமான இலாபம் கிடைக்கும்; ஆனால் உண்டியலை வாங்கிய முதலாவது மாதத்தில் இந்த வீதங்கள் அதிகமாகி விட்டால், இந்த லாபம் குறைய நேரலாம். எனவே கழிவு வீதங்களில் மாற்றங்கள் நேரக்கூடிய சூழ் நிலைகளில் உண்டியல் கழிவு அகங்களின் வருமானம் அதிகரிக்க வாய்ப்புக்கள் ஏராளமாக உள்ளன.

### 3. கருவூல உண்டியல் (The Treasury Bill)

பொருட்கள் ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்தை அடையும் முன்பே அந்தப் பொருட்களுக்கான மதிப்புக்கு ஈடான பணத்தைப் பெற வசதி செய்யும் ஒரு சாதனமே வர்த்தக உண்டியலாகும். வர்த்தகத்தின்போது தான் உண்டியல்கள் வரையப்பட்டுப் பயன் படுத்தப்படுகின்றன என்பது உண்மையல்ல; அதாவது பொருட் களின் பெயர்ச்சி இல்லாமலே நாம் உண்டியலைப் பயன்படுத்த முடியும். பணத்தைக் கடனாகப் பெறுவதற்கு உண்டியலைப் பயன்படுத்தலாம். இம் மாதிரியான உண்டியல்கள் நிதி உண்டியல்கள் (Finance Bill) என்ற பெயர் பெறுகின்றன. நிதி உண்டியல்கள் பல தன்மையின. அவை பல தரத் தனவாயு முள்ளன. அயல் நாட்டுச் செலாவணி மார்க்கெட்டில் கடந்த காலத்தில் மிக முக்கியமானவைகளாக விளங்கிய நிதி உண்டி யல்கள் ஒரு தரத் தனவாகும்; இவை குறையற்ற நிதி உண்டியல்கள் ஆகும். பணத்தேவையால் உந்தப் பட்ட மக்கள் தம் தேவையை நிறைவேற்ற நிதி உண்டியல்களை வரையலாம். இவை இரண்டாம் வகையைச் சேர்ந்த நிதி உண்டியல்களாகும். இந்த இரண்டாம் வகையைச் சேர்ந்த நிதி உண்டியல்களைப் பெரும்பாலும் நாணய மற்ற மனிதர்களே வரைகின்றனர். இந்த

இரண்டு வகைகளும் இரண்டு எல்லைகள் என்று கூறலாம். இவை இரண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் பல ரகமான உண்டியல்கள் உள்ளன. பணத்தேவையால் உந்தப் படும் கடனாளி, இவ்வுண்டியல் முறையைத் தவருன நோக்கங்களுக்கு மிக எளிதில் கையாண்டு பணம் எழுப்ப வாய்ப்பு இருப்பதால் நாட்டில் சிறந்து விளங்கும் நிறுவனங்கள் இவற்றைப் புறக்கணிக்கலாயின. மேலும் அயல் நாட்டுச் செலாவணி மார்க்கெட்டில் சேர்ந்துள்ள மாற்றங்களால் அங்கு நிதி உண்டியல்களைப் பயன்படுத்துவதற்கான வாய்ப்புக்கள் அருகிவிட்டன. இந்த இரு காரணங்களாலும் இம்மாதிரியான சாதாரண நிதி உண்டியல்களைக் காண்பதென்பது மிகவும் அரிதாகிவிட்டது. இருப்பினும் ஒரு குறிப்பிட்ட வகையினவான நிதி உண்டியல்கள் இன்று உண்டியல் கழிவு மார்க்கெட்டில் மிகச் சாதாரணமானவைகளாகத் திகழ்கின்றன; பணத்தேவையால் உந்தப்பட்ட ஒரு கடனாளியே இவற்றை வரைகின்ருர். இவையே கருவூல உண்டியல்கள் ஆகும். கருவூல உண்டியல் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் 'புரோ நோட்டோ' (Promissory note) யாகும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் மக்கள் தருகின்ற டெபாசிட்டுக்களுக்கு ஈடாக 91 நாட்கள் கழித்து (தற்சமயம் 63 நாட்களுக்கான கருவூல உண்டியல்களும் வெளியிடப்படுகின்றன). £5,000[1] தருவதற்கான எழுத்து மூலமான பிரிட்டிஷ் அரசாங்கத்தின் வாக்குறுதியைத் தாங்கி உள்ள உண்டியல்களே கருவூல உண்டியல்களாகும். கருவூல உண்டியலில் கடன் ஈவோரின் (Creditor) பெயரைக் குறிப்பதற்கென்று ஓர் இடம் ஒதுக்கப்பட்டுள்ளது. அந்த இடத்தில் கடன் ஈவோர் பெயர் குறிக்கப்படாதிருந்தால் அந்த உண்டியலுக்கான பணம் கெடுவு காலத்தில் உண்டியலைக் 'கொணர்பவர்' (Bearer) இடம் கொடுக்கப்படும். மார்க்கெட்டில் கையாளப்படும் பெரும்பாலான கருவூல உண்டியல்கள் 'கொணர்பவர் உண்டியல்களே' யாகும். இம்மாதிரியான 'கொணர்பவர் உண்டியல்களை'ச் சாதாரண வர்த்தக உண்டியல்களில் காண முடியாது. வர்த்தக உண்டியலில் உண்டியல் ஒருவர் கைவிட்டு இன்னொருவர் கைக்கு மாற மாற அதற்கான பாதுகாப்பு அதிகமாகிறது என்று கூறலாம். ஆனல் கருவூல உண்டியல் அரசாங்கத்தின் உறுதிமொழியைக் கொண்டது; எனவே பாதுகாப்பைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. எனவே உண்டியல் கழிவு அகங்கள் அல்லது பாங்குக்கு ஆகியவற்றின் கையெழுத்துக்கள் கருவூல உண்டியலில் பொறிக்கப்படுவதால் அதற்குப் புதுமதிப்பு எதுவும் தோன்றிவிட முடியாது. யாராலும் மறுக்க முடியாத

[1] £10,000, £25,000 £50,000 மேலும் £100,000 ஆகிய மதிப்புக்களுக்கும் உண்டியல்கள் வெளியிடப்படுகின்றன.

உத்திரவாதம் உடையவை கருவூல உண்டியல்கள்; எனவே தான் இவை 'கொணர்பவர் உண்டியல்களாக' மார்க்கெட்டில் வலம் வருகின்றன. பணம் வைத்திருப்பவர் யாதொருவிதமான ஐயமும் இன்றி இவற்றை விலைக்கு வாங்கலாம்.

கருவூல உண்டியல்களுக்குக் கடனாளி அரசாங்கம்; இந்தக் கடனாளிக்கு இவற்றால் சில நன்மைகள் உள்ளன. அரசாங்கம் தனது நெடுங்காலக் கடனுக்குக் கொடுக்க வேண்டிய வட்டி வீதத்தைவிட கருவூல உண்டியல்களுக்கான வட்டி வீதம் மிகக் குறைந்ததாகும், கடன் ஈவோர் உண்டியல்கட்கான மதிப்புத் தொகையைக் குறுகிய காலத்தில் திரும்பப் பெறமுடிவதால், இவற்றிற்கான வட்டி வீதம் குறைவாக அமைந்துள்ளது. அரசாங்கத்திடமிருந்து நான் கருவூல உண்டியல் வாங்கிய நாளிலிருந்து சரியாக 3 மாதங்கள்கழித்துத் (அல்லது இரண்டு மாதங்கள் கழித்து) தான் (அரசாங்கத்துக்கு உண்டியல் மூலம்) கடனாகக் கொடுத்த தொகை துல்லிதமாக தனக்குக் கிடைக்கும் என்று கடன் ஈவோர் நன்கு அறிவார். எனவே அவர் அரசாங்கத்திற்குக் கடன் தர முன்வருகிறார், கருவூல உண்டியல்கள் மிகவும் ரொக்கத்தன்மை உடைய சொத்துக்களாக உள்ளன. எனவே நெடுங்காலப் பத்திர முதலீடுகளில் தமது பணத்தை முடக்குவதால் எவ்வளவு வட்டி வீதம் கிடைக்குமோ (நெடுங் காலக்கடன் பத்திரங்களை மாற்ற விரும்பினால் பங்கு மார்க்கெட்டில் அவற்றை விற்பதன் மூலம்தான் சாத்தியமாகும். விற்கும்போது பெருமளவிலான முதல் இழப்பு நேரலாம்) அதைவிடக் குறைவான வட்டி வீதமே கிடைத்த போதிலும் கருவூல உண்டியல்களை வாங்குவதையே கடன் ஈவோர் விரும்புகிறார். கருவூல உண்டியல்கட்கான வட்டி வீதங்கள் நெடுங்காலக் கடன்களுக்கான வட்டிவீதங்களுக்குச் சமமாகவோ அன்றி அவற்றைவிட அதிகமாகவோ இருந்த போதிலும், அரசாங்கம் கருவூல உண்டியல்மூலம் கடன் வாங்குவதே இலாபகரமானது என்று எண்ணுகின்றது. 1956 ஆம் ஆண்டு கருவூல உண்டியல் கட்கான வட்டி வீதம் நெடுங்கால வட்டி வீதத்திற்கு ஈடாக இருந்தபோது கூட அரசாங்கம் உண்டியல் முறையில் பணத்தைக் கடனாகப் பெறுவதே ஆதாயகரமானது என்று கருதியது. நெடுங்காலப் பத்திரங்கட்கு அரசாங்கம் நெடுங்காலத்திற்கு ஒரே மாதிரியான வட்டி வீதம் தர வேண்டியிருக்கின்றது. ஆனால் கருவூல உண்டியலைப் பொருத்த வரையில் இது போன்ற நிலை இல்லை. எனவே பத்திரங்களின் விற்பனையைக் குறைத்துக் கொண்டு, கருவூல உண்டியல்கள் மூலம் கடன் வாங்குவதையே அரசாங்கம் விரும்புகின்றது. கருவூல உண்டியல் உண்மையிலேயே கடனாளிக்கும், கடன்

ஈவோருக்கும், ஒரு வரப் பிரசாதமாகத் திகழ்கின்றது. இரண்டு உலக யுத்தங்களால் அரசாங்கத்தின் கடன் தேவைகள் அதிகரித்துள்ளது. இந்தக் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்யப் பயன்படும் ஒரு சாதகமாக கருவூல உண்டியல்கள் அமைந்துள்ளன. அரசாங்கம் என்ற கடனாளிக்கு மிக்க பயனுள்ளதாய் விளங்குகின்ற இச் சாதனம், உண்டியல் கழிவகம் என்ற கடன் ஈவோருக்கும் ஒரு வரப்பிரசாதமாகத் திகழ்கின்றது. 1929ஆம் ஆண்டு 'முதல் வர்த்தகத்தார்களின்'[1] (வர்த்தக உண்டியல்கள்) அளிப்புநிலை (Supply) மிகவும் சுருங்கி வந்துள்ளது. வர்த்தக உண்டியல்களின் இடத்தைப் பூர்த்தி செய்யும் பணியில் கருவூல உண்டியல் ஈடு பட்டிருக்கின்றது என்று கூறலாம். கருவூல உண்டியல்களை இருப்பதாக வைத்திருப்பதால் மையப் பாங்குக்கும் அநுகூலமேயாகும். மையப் பாங்கின் 'வெளி மார்க்கெட் நடவடிக்கை' (Open market operation) களை பொறுத்த வரையில் விற்கவும் வாங்கவும் தகுதியான மிகச் சிறப்பான ஒரு பத்திரமாகக் கருவூல உண்டியல் திகழ்கின்றது.[2] இது பற்றி ஐந்தாம் அத்தியாயத்தில் விரிவாகக் காணலாம்.

கருவூல உண்டியல்கள் இரண்டு விதமாக வெளியிடப்படுகின்றன. ஒன்று 'டெண்டர்' (Tender) முறையாகும்; மற்றொன்று 'டேப்' (Tap) முறையாகும். தங்களிடம் நிதிகளை உடைய அரசாங்கத்துறைகட்கும், மற்றும் சில அயல் நாட்டுப் பண அதிகாரிகட்கும், 'டேப்' முறையில் கருவூல உண்டியல்கள் விற்கப்படுகின்றன. அரசாங்கத்தின் சாதாரணத் துறைகள், அரசாங்கச் சேமிப்புப் பாங்குகள், சட்டரீதியான இன்சூரன்ஸ் நிதிகள், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் வெளியீட்டுத் துறை (Issue Department), பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு (Exchange Equalisation Account) ஆகியவை அரசாங்கத் துறைகளாகக் கருதப்படுகின்றன. 'டேப்' முறையில் வெளியிடம்படும் உண்டியல்கட்கான கழிவு வீதம் பற்றி நாம் எதுவும் அறிந்துகொள்ள முடிவதில்லை. அறிய வேண்டிய அவசியமுமில்லை. ஏனெனில் அந்தக் கழிவு வீதத்திற்கும் உண்டியல் கழிவு மார்க்கெட்டுக்கும் எந்தவிதமான

[1] 'வர்த்தகத்தார்' என்பது வர்த்தகப் பேரம் ஒன்றின் அடிப்படையில் வரையப்படும் உண்டியல் என்றே லண்டனில் பொருள்படும். இந்தப் பொருளிலேதான இந்த நாம் இந்த வார்த்தையைப் பயன் படுத்தியுள்ளோம். 'அரசாங்கத்தார்' என்பதினின்றும் வேறு படுத்திக் காட்டவே நாம் 'வர்த்தகத்தார்' என் வார்த்தையைப் பயன் படுத்தியுளளோம். நியூயார்க்கிலும் 10– ஆம் அததியாயதிலும் 'வர்த்தகத்தார்' என்பது வேறொரு பொருளைக் குறிக்கின்றது.

[2] அரசாங்கத்திற்குப் பணம் தேவைப்பட்டால் அது கருவூல உண்டியல்களை பெருமளவில் வெளியிட நேரலாம. பாங்குகளைப் பொறுத்த வரையில் கருவூல உண்டியல்கள் மிகவும் நீர்மைத் தன்மை உடைய சொத்துக்களாகும். எனவே மையப் பாங்கு மேற் குறித்தவாறு கருவூல உண்டியல்களில் 'வெளி மார்க்கெட் நடவடிக்கை' புரியும் பொழுது சில இடர்ப்பாடுகள் நேரிடுகின்றன.

தொடர்பும் கிடையாது. லண்டன் பாங்கர்கள் (காமன்வெல்த் பாங்குகளும் அயல் நாட்டுப் பாங்குகளும் உட்பட்டவை), உண்டியல் கழிவகங்கள், தரகர்கள் ஆகியோர் 'டெண்டர்' முறைமூலம் கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்குகின்றனர். இவர்களைத் தவிர வேறுயாராவது 'டெண்டர்' முறையில் உண்டியல்களை வாங்க முயன்றால் அது இவர்களின் மூலமே சாத்தியமாகும். 'டெண்டர்' முறையில் கருவூல உண்டியல்களை வாங்கும் நிறுவனங்கள், (மூன்று மாதங்கள் கழித்து) 100 பவுன் மதிப்புள்ள கருவூல உண்டியல்களைத் தற்சமயம் என்ன விலை கொடுத்து வாங்கத் தயாரா யிருக்கின்றன என்பதை அறியும் நோக்கத்துடன் ஒவ்வொரு வாரமும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அவைகட்கு அழைப்பு விடுகின்றது. தாங்கள் குறித்தனுப்பும் விலையில் தங்களால் எவ்வளவு கருவூல உண்டியல்களை வாங்க முடியுமோ அவற்றிற்கான பணத்தை மறு வாரம் ஏதாவது ஒரு நாளில் இந்த நிறுவனங்கள் செலுத்த வேண்டியிருக்கும். 100 க்கு ஒரு ஆண்டுக்கு 4 பவுன் 10 ஷில்லிங் 8 பென்னிகள் என்ற கழிவு விதத்தில் கருவூல உண்டியல்களை ஒரு உண்டியல் கழிவகம் வாங்கும் விருப்பம் உடையது என்று வைத்துக்கொள்வோம். அவ்வாரமின் வெள்ளிக்கிழமையன்று கருவூல உண்டியல்களுக்கான 'டெண்டர்களை' அது அனுப்புகின்றது. தனக்குத் தேவைப்படும் கருவூல உண்டியல்கட்கான (ஒரு பேரத்தில் குறைந்தது £ 50.000 மதிப்புள்ள கருவூல உண்டியல்களை வாங்க அது தயாராக இருக்க வேண்டும்) விலையை அது குறித்து அனுப்பும். அந்த விலை 100 க்கு 98 பவுன் 17 ஷில்லிங் 4 பென்னிகளாக இருக்கும். அந்த உண்டியல்களை செவ்வாய்க்கிழமையன்று, தான் பெற்றுக் கொள்வதாக அந்த நிறுவனம் அறிவித்திருந்தால், செவ்வாய்க் கிழமையன்று அந்த நிறுவனம் அரசாங்கத்திடம் (இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மூலம்) 49,433 பவுன் 6 ஷில்லிங் 8 பென்னிகள் கொடுக்க வேண்டும். அந்த செவ்வாய்க் கிழமையிலிருந்து 13 வாரங்கள் கழிந்த பின் அந்த உண்டியல் கழிவகம் அரசாங்கத்திடம் கருவூல உண்டியல்களைத் திருப்பிக் கொடுக்கும் பட்சத்தில், அரசாங்கம் அதற்கு £50,000 பணம் கொடுக்கும்.[1]

'டெண்டர்' முறையில் கருவூல உண்டியல்கள் ஒவ்வொரு வாரமும் வெளியிடப்படுகின்றன. ஒவ்வொரு வாரமும் சுமார்

[1] மேற்குறித்த விவரங்கள் யாவும் 91 நாட்கள் கெடுவு காலம் உடைய உண்டியல்களைப் பற்றியவையாகும். ஒவ்வொரு ஆண்டும் இலையுதிர் காலத்தில் 63 நாட்கள் கெடுவுகாலம் உடைய கருவூல உண்டியல்களும் வெளியிடப்படுகின்றன. அவற்றிற்கான கணக்கீடும் மேலே குறிக்கப்பட்டுள்ள கணக்கீட்டைப் போன்றதேயாகும்.

£ 200 மில்லியன்களிலிருந்து £ 300 மில்லியன்கள் மதிப்புள்ள கருவூல உண்டியல்கள் வெளியிடப் படுகின்றன. அரசாங்கத்தின் வரவு செலவு ஆகியவற்றில் நேரக்கூடிய மாற்றங்களை ஈடு செய்யும் வகையில் ஒரு காலம் கருவூல உண்டியல்களின் வெளியீடு அதிகமாக்கப்படலாம் வேறொரு காலம் குறைக்கப் படலாம். உதாரணமாக ஜனவரி மாதத்திலிருந்து மார்ச் மாதம்வரை அரசாங்கத்திற்கு வருவாய் மிகுதியாக வரும் காலமாகும். அச்சமயங்களில் கருவூல உண்டியல்களின் வெளியீடு குறைக்கப்படும். அந்தந்த வாரங்களில் வெளியிடப்படும் புதிய கருவூல உண்டியல்கள், அந்தந்த வாரங்களில் கெடுவு காலத்தை அடையும் பழைய உண்டியல்களை விடக் குறைவாகவே இருக்கும். ஆனால் அரசாங்கப் பத்திரங்கள் பெருமளவில் கெடுவு காலத்தை அடையும் காலங்களிலும், அரசாங்கத்தின் செலவினங்கள் அதிகமாகும் காலங்களிலும், கருவூல உண்டியல்களின் வெளியீடு தாற்காலிகமாக அதிகரிக்கப்படும். அதாவது அந்தந்த வாரங்களில் வெளியிடப்படும் புதிய கருவூல உண்டியல்கள் அந்தந்த வாரங்களில் கெடுவு காலத்தை அடையும் பழைய உண்டியல்களைவிட அதிகமாகவே இருக்கும்.

தற்சமயம் கருவூல உண்டியல்கள் வெளியிடப்படும் முறைகளில் சில மரபுகள் தோன்றியுள்ளன. அரசாங்க அதிகாரிகள், உண்டியல் கழிவகங்கள், பாங்குகள் ஆகியோருக்கு இடையே ஏற்பட்டுள்ள உடன்பாடுகளின்பேரில் இந்த மரபுகள் தோன்றியுள்ளன. தற்சமயம் இங்கிலாந்திலுள்ள சாதாரண வாணிபப் பாங்குகள் தங்கள் பெயரில் 'டெண்டர்' முறையில் தங்களுக்காக கருவூல உண்டியல்களை வாங்குவதில்லை. தமது வாடிக்கைக்காரர்கட்கு மட்டுமே 'டெண்டர்' முறையில் பாங்குகள் உண்டியல்களை வாங்குகின்றன. பாங்குகள் தங்களுக்குத் தேவைப்படும் கருவூல உண்டியல்கள் யாவற்றையும் உண்டியல் கழிவகங்களிடமிருந்தே வாங்கிக் கொள்கின்றன. கருவூல உண்டியல்கள் குறைந்தது ஒருவார காலமாவது உண்டியல் கழிவகங்களிடம் இருந்த பின்புதான், பாங்குகள் அவற்றை விலைக்கு வாங்குகின்றன. உண்டியல் கழிவகங்கள் தங்களுக்குள் ஒரு 'சங்கம்' (Association) ஏற்படுத்தியுள்ளன. சங்கத்தின் அங்கத்தினர் யாவரும் ஒரு முகமாக ஒப்புக்கொண்ட விலைக்கே கருவூல உண்டியல்களுக்குக் கழிவகங்கள் 'டெண்டர்கள்' கொடுக்கின்றன.[1] உண்டியல் கழிவகங்கள் ஒவ்

[1] இம்மாதிரி 'சங்கத்தின்' மூலம் 'டெண்டர்' கொடுக்கும் முறைக்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கும் தனது ஒப்புதலைத் தெரிவித்துள்ளது. இம்முறை 'சிண்டிகேட்டு' (Syndicate) முறை 'டெண்டர்' என்றே பெரும்பாலும் வழங்கி வருகின்றது. 1930—1939 க்கு இடைப்பட்ட காலத்தில் உண்டியல் கழிவகங்களுட் இடையே அடுத்தடுத்து நேர்ந்த பல ஏற்பாடுகளின் அடிப்படையில் இந்தமுறை கைக்கொள்ளப்படுவதால், இந்தப் பெயர்பெற்றது எனலாம். 'சிண்டிகேட்டு'

வொரு வாரமும் 'டெண்டர்' கொடுக்கும் கருவூல உண்டியல்களின் மதிப்புத் தொகையும், ஒவ்வொரு வாரமும் அரசாங்கம் வெளியிடும் கருவூல உண்டியல்களின் மதிப்புத் தொகையும், பெரும்பாலும் சமமாகவே உள்ளன. உண்டியல் கழிவகங்கள் தவிர வேறு நிறுவனங்களும் கருவூல உண்டியல்கட்கு டெண்டர்கள்' கொடுக்கின்றன. அயல் நாட்டுப் பாங்குகள், லண்டன் தீர்வுப் பாங்குகள் நீங்கலாக உள்ள ஏனைய பாங்குகள், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு (இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பிறருக்காகவும் தனக்காகவும் கஜானு உண்டியல்களை வாங்குகிறது. நியூயார்க்கிலுள்ள ஐக்கிய ரிசர்வ் பாங்குக்குத் தான் ஏஜெண்ட் என்ற முறையில் இங்கிலாந்துந் தலைமைப் பாங்கு மேற்படி பாங்குக்குக் கருவூல உண்டியல்களை வாங்குகின்றது. மேலும் தன்னுடைய பாங்குத் தொழில் துறைக்கும் (Banking Dept.) அது கஜானு உண்டியல்களை வாங்குகின்றது) ஆகியவையே அந்த வேறு நிறுவனங்களாகும். இந்த வேறு நிறுவனங்கள் தங்கட்குத் தேவைப்படும் கருவூல உண்டியல்கட்கு 'டெண்டர்' கொடுக்கும்போது குறித்தனுப்பும் விலை, உண்டியல் கழிவகச் சங்கத்தின் விலைக்குச் சமமாக இருக்கலாம் அல்லது ஓரளவு அதிகமாக இருக்கலாம். வேறு நிறுவனங்களின் விலை சங்கத்தின் விலையைவிட அதிகமாக இருக்கும் பட்சத்தில், இந்த நிறுவனங்களின் விலையே கருவூலத்திற்கு உகந்ததாகத் தோன்றும். எனவே வேறு நிறுவனங்களின் 'டெண்டர்கள்' முழுவதும் கருவூலத்தால் ஏற்றுக்கொள்ளப்படும். எஞ்சியுள்ள கருவூல உண்டியல்கள் உண்டியல் கழிவகங்கட்கு விற்பனை செய்யப்படும். (உண்டியல் கழிவகங்களின் விலை, ஏனைய நிறுவனங்களின் விலைகளை விடச் சிறிது குறைவாக இருக்கின்றது. அதாவது உண்டியல் கழிவகங்களின் கழிவு வீதம் ஏனைய நிறுவனங்களின் கழிவு வீதத்தைவிடச் சிறிது அதிகமாக இருக்கின்றது என்பது பொருளாகும்.) தான் எவ்வளவு உண்டியல்கட்கு டெண்டர் கொடுக்குமோ, அவ்வளவு உண்டியல்கள் பெரும்பாலும் உண்டியல் கழிவகத்திற்குக் கிடைக்கின்றது. இருப்பினும் சில சமயங்களில் இந்த அளவுகள் குறையலாம். வேறு சில சமயங்களில் இந்த அளவுகள் கூடலாம். அளவு கூடுவதும் குறைவதும் கருவூல உண்டியல் வெளியீட்டில் ஏனைய நிறுவனங்கள் அதிகமாகவோ அல்லது குறைவாகவோ பெறக்கூடிய பங்கைப் பொறுத்ததாகும். கருவூலம், ஒவ்வொரு வாரமும் தான் உண்டியல்களை விற்ற சராசரி விலையை அறிவிக்கின்றது. ஒரு குறிப்பிட்ட வாரத்தில் வெளியிடப்பட்ட உண்டியல்களில், உண்டியல் கழிவ

---

என்ற சொல்லின் பொருளுக்கு மாறுபாடாக அங்கத்தினரிடையே உண்மையில் பெருமளவு போட்டி நிலவுகின்றது.

கங்களின் பங்கு அதிகமாக இருக்குமேயானல் இந்த சராசரி விலேயும் சங்கத்தின் விலேயும் ஏறக்குறைய ஒன்ருகவே இருக்கும்.

கருவூல உண்டியல், என்று வெளியிடப் படுகின்றதோ (அதாவது இன்னும் மூன்றுமாத காலக்கெடுவு உடையதாயிருக்கும் போது, அன்று அந்த உண்டியலேச் சூடான உண்டியல் (Hot Bill) என்று அழைக்கின்றனர். இந்தச் 'சூடான உண்டியல்' கட்கான தேவை பெரும்பாலும் பாங்குகளின் வாடிக்கைக்காரர் களிடமிருந்தே வருகின்றது. உண்டியல்கள் ஒருவாரகாலம் உண்டியல் கழிவகங்களிடம் இருந்த பிறகு இங்கிலாந்திலுள்ள பெரிய பாங்குகள் அவற்றை வாங்க முற்படும். (அப்பொழுது மார்க்கெட்டில் நிலவும் கழிவு வீதத்தில் பாங்குகள் உண்டியல்களை வாங்கும். உண்டியல் கழிவகங்கள் அவற்றை வாங்கியபோது நிலவிய கழிவு வீதத்தைவிட இந்தக் கழிவு வீதம் குறைவாகவே இருக்கும்). இருப்பினும் உண்டியல் கழிவகங்களிடமே பெரும் பாலான உண்டியல்கள் குறைந்தது மூன்று அல்லது நான்கு வாரகாலங்கட்குத் தங்கிவிடுகின்றன. அதன் பிறகு பாங்குகள் அவற்றை மிகுந்த ஆர்வத்துடன் வாங்க ஆரம்பிக்கின்றன. எந்த உண்டியலும் கெடுவு காலம்வரை உண்டியல் கழிவகத்திடம் தங்குவது மிக அபூர்வமேயாகும். கருவூல உண்டியல்கள் தங்களிடம் தங்கும் காலங்களில் இவற்றை ஈடாக வைத்துப் பாங்குகளிடமிருந்து உண்டியல் கழிவகங்கள் 'நாள் நிலுவைக்கடன்' வாங்குகின்றன. இம்மாதிரியான கடன்களுக்கு உண்டியல் கழிவகங்கள் கொடுக்கவேண்டிய வட்டி வீதம் நாளுக்கு நாள் அல்லது மணிக்கு மணி வேறுபடலாம். எனினும் பொதுவாக இந்தக் கடன் வட்டி வீதங்களின் சராசரியானது கருவூல உண்டியல்களின் கழிவு வீதத்தைவிடக் குறைவாகவே இருக்கும். இவ்வாறு தங்களிடம் தங்குகின்ற கருவூல உண்டியல்களின் உதவியால் உண்டியல் கழிவகங்களால் 'இயக்க இலாபம்' (Running Profit) பெற முடிகிறது.

## 4. குறுங்காலப் பத்திரங்களும் உண்டியல் கழிவு மார்க்கெட்டின் தற்கால நிலேமையும்

1930ஆம் ஆண்டு ஒரு பெரும் மந்தநிலே (Great Depression) உலகில் தோன்றியது. இதையொட்டி உண்டியல் கழிவு மார்க்கெட்டின் ஒரு முக்கியமான வர்த்தகப் பொருளாகத் திகழ்ந்து வந்த வாணிப உண்டியல்களின் அளிப்பு மிகவும் சுருங்கியது. மார்க்கெட்டில் அவ்வமயம் கழிவகங்களிடம் இருந்த உண்டியல்களின் மொத்த மதிப்பு சுமார் 100 மில்லியன் பவுன்களேயாகும்.

மந்தநிலையை யொட்டிக் கருவூல உண்டியல்களும் பாதிக்கப் பட்டன. கருவூல உண்டியல்களினின்றும் கழிவகங்கட்குக் கிட்டிய வருவாய் மிகமிகக் குறைந்தது. உண்டியல் கழிவகங்கட்குக் கருவூல உண்டியல்களினால் நஷ்டங்கள்கூட ஏற்பட்டன. இவ்வா றான சூழ்நிலையில் தங்களுடைய வாழ்வுக்கு வழி தேடவேண்டிய அவசியம் உண்டியல் கழிவகங்கட்கு நேர்ந்தது. எனவே அவை குறுங்காலப் பத்திரங்களிலும் தங்களுடைய கவனத்தைச் செலுத்தலாயின. குறுங்காலப் பத்திரங்கள் பலவகைப்படும். கருவூலப் பத்திரங்கள் (Exchequer Bonds) ஒருவகையைச் சேர்ந் தவையாகும். இவற்றின் ஆயுட்காலம் ஓராண்டாகவோ, ஈராண்டு களாகவோ அன்றி ஐந்தாண்டுகளாகவோ இருக்கலாம். இரண் டாம் வகையைச் சேர்ந்த குறுங்காலப் பத்திரங்கள் உண்மையில் நெடுங்காலப் பத்திரங்களேயாகும். ஆனால் இவை கெடுவு காலத்தை அணுகிக்கொண்டிருப்பவையாகும். எனவே இவற்றை நாம் குறுங்காலப் பத்திரங்கள் என்றே கருதலாம். உதாரணமாக 20 ஆண்டுகள் கெடுவுக்கு வெளியிடப்பட்ட ஒரு பத்திரம் கெடுவு காலத்தை அணுகியிருப்பதால் அதனுடைய எஞ்சியுள்ள ஆயுட் காலம் ஓராண்டாகவோ, ஈராண்டுகளாகவோ இருக்கும்போது இந்தப் பத்திரத்தை நாம் குறுங்காலப் பத்திரமாகக் கருதலாம். நெடுங்காலப் பத்திரங்கள் கெடுவு காலத்தை அணுகி இருக்கும் போது பொதுவாக அவற்றின் விலை ஏனைய பத்திரங்களின் விலை களைவிடச் சிறிது அதிகமாகவே இருக்கும். எனவே முதலீடு செய்ய விரும்பும் மக்கள் இத்தகைய பத்திரங்களை வாங்க முன் வருவதில்லை. புதிய பத்திரங்கள் இவர்களைக் கவருவதைப்போல பழைய பத்திரங்கள் இவர்களைக் கவருவதில்லை. கெடுவு காலத்தை அணுகிக்கொண்டிருக்கும் நெடுங்காலப் பத்திரங்களின் உரிமையாளரில் சிலர் அவற்றைக் கெடுவு காலம்வரை தம்மிடமே வைத்திருக்க விரும்பலாம். ஆனால் பொதுவாகப் பெரும்பாலான பத்திரங்கள், பலவிதமான சூழ்நிலைகளின் விளைவாக, மார்க்கெட் டிற்கு விற்பனைக்கு வந்து சேருகின்றன. பத்திரங்களின் உரிமை யாளர் இறந்துவிடுவதால் சில பத்திரங்கள் விற்பனைக்கு வரலாம்; பத்திரங்களின் உரிமையாளர் திவாலாகிவிடுவதால் சில பத்தி ரங்கள் மார்க்கெட்டை நோக்கி விற்பனைக்கு வரலாம்; மேலும் முதலீடு செய்வதற்கு வேறு இலாபகரமான வாய்ப்புக்கள் தோன்றி யிருந்தால், பத்திரங்களை வைத்திருப்போர் அவற்றை விற்றுவிட எண்ணலாம். இவ்வாறு பலவிதமான சூழ்நிலைகளின் விளைவாகக் கெடுவு காலத்தை அணுகிக்கொண்டிருக்கும் நெடுங்காலப் பத்தி ரங்கள், மார்க்கெட்டில் விற்பனைக்கு வந்து சேருகின்றன. இவ் வகையைச் சேர்ந்த குறுங்காலப் பத்திரங்கள் உண்டியல்களைப் போன்ற ரொக்க நிலைச்சொத்துக்கள் ஆகமாட்டா. இருப்பினும்

குறுகிய காலத்தில் இவற்றினின்றும் உறுதியாக ஒரு குறிப்பிட்ட வருமானம் கிடைக்கும். எனவே, இவற்றை வாங்குவது ஆதாய கரமாக இருக்கும் என்று எண்ணி உண்டியல் கழிவகங்கள் இவற்றை வாங்க முன் வந்தன.[1] தம்மிடமுள்ள குறுங்காலப் பத்திரங்கட்கு ஈடாக உண்டியல் கழிவகங்கள் கடன் பெற்றன. இந்தப் பணத்தைக் கொண்டு குறுங்காலப் பத்திரங்களை இவை விலைக்கு வாங்கின. இவை பெற்ற கடனுக்கான வட்டி வீதம், குறுங்காலப் பத்திரங்களினின்றும் இவற்றிற்குக் கிடைத்த வட்டி வீதத்தைவிடக் குறைவானதேயாகும். இவ்வாறு உண்டியல் கழிவகங்கள் தங்களிடமுள்ள பத்திரங்களின் மூலம் நெடுங்கால மாக 'இயக்க லாபம்' (Running Profit) சம்பாதித்தன.

குறுங்காலப் பத்திரங்களை விலைக்கு வாங்குவதற்குத் தங் கட்குத் தேவைப்பட்ட பணத்தை ஆரம்ப காலத்தில் 'வெளிப் பிரதேச பாங்குகளிட' மிருந்தே உண்டியல் கழிவகங்களால் பெற முடிந்தது. இங்கிலாந்தில் செயலாற்றிக்கொண்டிருந்த அயல் நாட்டுப் பாங்குகளும், குடியேற்ற நாட்டுப் பாங்குகளும், ஏனைய நிதி நிறுவனங்களுமே, இந்த வெளிப் பிரதேசப் பாங்குகளாகும். குறுங்காலப் பத்திரங்களில் உண்டியல் கழிவகங்கள் வர்த்தகப் பேரங்களை நடத்தத் தொடங்கியிருந்த காலங்களில், உண்டியல் கழிவகங்களின் முயற்சி ஆபத்தான ஒரு முயற்சியேயாகும் என்று அதிகாரிகள் கருதினர். ஆனால் காலப்போக்கில் அதிகாரிகள் தங்கள் எண்ணத்தை மாற்றவேண்டிய அவசியம் நேர்ந்தது. 1935ஆம் ஆண்டிற்குப்பின் கடன்களைப் பெருமளவில் அரசாங்கம் எழுப்பவேண்டிய நிலை நேர்ந்தது. உண்டியல் கழிவகங்கள் பத்தி ரங்களையும் வாங்க முன் வந்திருந்தது தங்களுடைய கடன் நட வடிக்கைகுச் சாதகமாக அமையும் என்று அதிகாரிகள் எண் ணினர். தற்காலத்தில் எழுப்பப்படுகின்ற கடன்களுக்கும், எதிர் காலத்தில் எழுப்பக்கூடிய கடன்களுக்கும், உண்டியல் கழிவகங் களின் பத்திரப் பேரங்கள் வாய்ப்பான சூழ்நிலையை உருவாக்க லாம், என்று அதிகாரிகள் எண்ணினர். பத்திரங்கள் உண்டியல் களைவிட நீர்மைத்தன்மை குன்றியவைகளேயாகும். வட்டி வீதங்கள் உயர்ந்துகொண்டிருக்கக்கூடிய காலங்களில் தங்களிட முள்ள பத்திரங்களைக் கெடுவு காலத்திற்கு முன்னதாகவே விற்க வேண்டிய கட்டாய நிலை உண்டியல் கழிவகங்கட்கு ஏற்படுமே

[1] சாதாரண முதலீடு செய்வோர் பத்திரங்கட்குக் கொடுக்க முன் வரும் விலையைவிட உண்டியல் கழிவகம் கொடுக்க முன் வரும் விலை அதிகமானதாகவே இருக்கும். ஏனெனில் உண்டியல் கழிவகத்திற்குக் குறைந்த வட்டி வீதத்தில் நாள் நிலுவைக் கடன்கள் கிடைக்கின்றன. இதுபோன்ற வசதிகள் முதலீடு செய்வோருக்குக் கிடையாது. மேலும் இவர்களின்மீது அரசாங்கம் வெவ்வேறு வீதங்களில் வரி விதிக்கின்றது.

யானல், உண்டியல் கழிவகங்கட்குப் பெருமளவு நஷ்டங்கள் நேரும்.[1] ஆரம்ப காலத்தில் உண்டியல் கழிவகங்கள் பத்திரப் பேரங்களை ஆபத்தானவை என்று அதிகாரிகள் கருதியமைக்கு இதுவே முக்கிய காரணமாகும். காலப்போக்கில் நேர்ந்த மாற்றங்களையொட்டித் தங்கள் எண்ணத்தை அதிகாரிகள் மாற்றிக் கொண்டனர். உண்டியல் கழிவகங்கள் பத்திரத் தொழிலில் தொடர்ந்து ஈடுபடவேண்டுமேயாயின், அவற்றின் வியாபார முதலை அதிகரிக்கவேண்டும் என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அவ்வமயம் எண்ணியது. அவற்றின் வியாபார முதல் அதிகரிப்பட்டு, அவை வரம்பை மீறிவிடாது பத்திரப் பேரங்களில் ஈடுபடுமேயாயின், உண்டியல் கழிவகங்களின் பத்திரப் பேரங்களை முறையானவை என்று கருதலாம் என்று அதிகாரிகள் எண்ணினர். எனவே சின்னஞ்சிறு கழிவகங்கள் ஒன்றுடன் ஒன்று இணைக்கப் பட்டன. தங்களுடைய வியாபார முதலை அதிகரிப்பதில் எல்லாக் கழிவகங்களும் ஆர்வம் காட்டின. தற்சமயம் மொத்தத்தில் (இயக்கத் தரகர்கள் நீங்கலாக) 12 உண்டியல் கழிவகங்கள் உள்ளன. இவை ஒவ்வொன்று குறைந்த பட்சம் ஒரு மில்லியன் பவுன் மூலதனமாவது வைத்திருக்கின்றன.[2] எனவே தற்சமயம்

[1] இதை விளக்கும் வகையில ஒரு கணித உதாரணம் (திருத்தமற்ற கணித உதாரணம்) காண்போம். ஓராண்டுக் கெடுவு காலமும், 1 சதவீத வட்டி வீதமும் உடைய பத்திரம் 100 பவுன்கட்கு வாங்கப்பட்டவுடனேயே வட்டி வீதம் 2 சதவீதமாக உயருகின்றது என்று வைத்துக்கொள்வோம். இதையொட்டி பத்திரத்தின மார்க்கெட் விலை சுமார் 99 பவுன்களாகக் குறைந்திருக்கும். ஓராண்டுக்காலக் கெடுவு முடிவுள்ளதும் பத்திரத்தின மதிப்பு (வருவாய் நீங்கலாக) 100 பவுன்களாகப் பழையபடியும் உயர்ந்துவிடும். கெடுவு காலத்திற்கு முன்னதாகவே (பத்திரம் வெளியிடப்பட்ட ஆரம்ப காலத்தில்) உண்டியல் கழிவகமானது பத்திரத்தை விற்கவேண்டி நேர்ந்தால் இந்தப் பத்திரப் பேரத்தையொட்டி உண்டியல் கழிவகத்திற்கு மூலதன இழப்பு ஏற்படும். பத்திரத்தினின்றும் எவ்வளவு வருவாய் கிட்டியிருக்குமோ, அதைவிட இந்த மூலதன இழப்பு அதிகமானதாகவே இருக்கும். (கெடுவு காலம்வரை பத்திரமானது உண்டியல் கழிவகத்திடமே தங்கிவிட்டால், உண்டியல் கழிவகத்திற்கு எவ்விதமான மூலதன இழப்பும் நேரவே நேராது.) இந்த உதாரணத்தை திருத்தமான கணித உதாரணம் என்று கொள்வதற்கில்லை. ஏனெனில் இலாப நஷ்டங்களைக் கணக்கிடும்போது இலாப ஈவுகளின் தேதிகள் (Dividends Dates), மற்றும் வரி விதிப்புப்பற்றிய சட்டங்கள் ஆகியவற்றையும் நிறுவனங்கள் கவனத்தில் கொள்ளும்.

[2] உண்டியல் கழிவகங்களிடையே தோன்றிய ‘தொழில் கலப்பு’ (amalgamation) இயக்கம் இரண்டு கட்டங்களை உடையதாகும். 1930-லிருந்து 1939-க்கு இடைப்பட்ட காலமே முதலாவது கட்ட காலமாகும். பத்திர வர்த்தகத்திற்குப் பெருமளவு மூலதனம் தேவைப்பட்டதால், அவ்வமயம் பல உண்டியல் கழிவகங்கள் ஒன்றோடொன்று இணைந்தன. அடுத்து, இரண்டாவது உலகப் போரின்போது தொழில் கலப்பு ஏற்பட்டது. போர்க்காலத்தில் பெருமளவு நிதிகளைக் கடனாக எழுப்புவதில் அதிகாரிகள் ஈடுபட்டிருந்தனர். இதற்கு ஏற்ற வகையில் உண்டியல் கழிவகங்கள் திகழவேண்டும் என்று அதிகாரிகள் கருதினர். அதிகாரிகளின் விருப்பத்திற்கேற்ப உண்டியல் கழிவகங்கள் ஒன்றோடொன்று இணையலாயின. இவ்வாறு இரண்டு கட்டங்களில் நேர்ந்த தொழிற் கலப்பு இயக்கத்தை நாம் மேலே ஒன்றாக இணைத்துள்ளோம். தற்சமயம் செயலாற்றி வருகின்ற 12 உண்டியல் கழிவகங்களில் ஒரு உண்டியல் கழிவகம் அதிகாரிகளின் மார்க்கெட் நடவடிக்கையாளராக (operator)த்-திகழ்கின்றது. எனவே ஏனைய உண்டியல் கழிவகங்களைவிட இதனுடைய மூலதனம் குறைவாகவே உள்ளது.

பாங்குகளும் அதிகாரிகளும் உண்டியல் கழிவகங்களின் பத்திரப் பேரங்களை முறையான பேரங்களாகக் கருதுகின்றனர். இலண்டன் தீர்வுப் பாங்குகளும், வெளிப்பிரதேசப் பாங்குகளும், தடையின்றிப் பத்திரங்களின்ஈட்டின்பேரில்உண்டியல்கழிவகங்கட்குக் கடன்களை வழங்கி வருகின்றன. இங்கிலாந்துத் தலைமை பாங்கும் இந்தப் பத்திரங்களை மறு கழிவுக்குத் தகுதியானவை என்றே கருது கின்றது. கடை நிலைக் கடன் ஈவோனாகிய (Lender cf Lost Resort) தன்னை உண்டியல் கழிவகங்கள் உதவி கோரி அணுகும் போது பத்திரங்களின் ஈட்டின் பேரில் அவற்றிற்கு இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு கடன் கொடுத்து வருகின்றது.

சில வரம்புகட்கு உட்பட்டே உண்டியல் கழிவகங்கள் தங்களது பத்திரப் பேரங்களை நடத்த வேண்டும் என்று அதிகாரிகள் எண்ணுகின்றனர். உண்டியல் கழிவகங்கள் இந்த வரம்புகளை மீற நேர்ந்தால் அவைகட்கு அதிகாரிகளின் ஆதரவு கிடைக்காமல் போய்விடும். இந்த வரம்புகள் வருமாறு :—உண்டியல் கழிவ கங்கள் ஒரு குறிப்பிட்ட மொத்தத் தொகைக்கே பத்திரங்களை விலைக்கு வாங்க வேண்டும். உண்டியல் கழிவகங்கள் ஒவ்வொன் றும் தன்னிடமுள்ள மொத்த மூலதனத்தைப்போல எட்டு மடங்குத் தொகைக்கு மட்டிலுமே பத்திரங்களை வாங்கலாம் என்ற வரை யறை இருப்பதாகத் தெரிகின்றது. மற்றொரு வரையறையும் உள்ளது. இது பத்திரங்களின் ஆயுட்காலத்தைக் குறிக்கும் வரை யறையாகும். பிறரிடமிருந்துதான் கடனாக வாங்கியுள்ள பணத் தைக்கொண்டு ஐந்து ஆண்டுகட்கு மேற்பட்ட ஆயுட்காலத்தை உடைய பத்திரங்களை உண்டியல் கழிவகம் விலைக்கு வாங்கக் கூடாது என்பதே இந்த விதிமுறையாகும்.[1] எனினும் தங்களிட முள்ள பத்திரங்களில் ஒரு சில பத்திரங்களின் ஆயுட்காலம் மட் டுமே 5 ஆண்டுகள் அல்லது இதையொட்டிய ஆயுட்காலம் உடையவையாக இருக்குமாறு உண்டியல் கழிவங்ககள் பார்த்துக் கொள்வது நல்லது என்று கருதப்படுகின்றது. உண்டியல் கழிவ கங்களிடமுள்ள பத்திர இருப்புக்களில் பாதிக்கு மேற்பட்டவை இரண்டு ஆண்டுகட்கு உட்பட்ட ஆயுட்காலங்களை உடையவை யாக அமைந்திருப்பது போற்றத்தக்கது என்றும் கருதப்படு கிறது. அரசாங்கப் பத்திரங்கள், மார்க்கெட்டில் விலைக்குக் கிடைக்கக்கூடியதையொட்டி, எஞ்சியுள்ள பத்திரங்களின் ஆயுட்

1 'தான் கடனாக வாங்கியுள்ள பணத்தைக்கொண்டு' என்பதை மீண்டும் வலியுறுத்த விரும்புகிறோம். ஏனெனில் உண்டியல கழிவகமானது தன்னுடைய மூலதனத்தை நெடுங்காலப் பத்திரங்களில் (5 ஆண்டுகட்கு மேற்பட்ட ஆயுட் காலத்தை உடைய பத்திரங்களில்) முதலீடு செய்வது தவறல்ல என்றே கருதப் படுகின்றது.

காலம் (5 ஆண்டு ஆயுட்கால விதிக்கு உட்பட்டு) எவ்வாருயினும் அமையலாம் என்றும் அதிகாரிகள் கருதுகின்றனர்.

உண்டியல் கழிவகங்கள் பத்திரப் பேரங்களில் ஈடுபடுவதை யொட்டி நாடு பெறக்கூடிய பயன்கள் யாவை, பத்திரப் பேரங்களின் மூலம் உண்டியல் கழிவகங்கட்குக் கிடைத்து வருகின்ற வருவாய் சமுதாய நீதிக்குக் கட்டுப்பட்ட ஒன்று என்று கூற முடியுமா, என்பன போன்ற வினுக்கள் எழலாம். இவற்றிற்கான விடைகளை இனி நாம் காண்போம். நெடுங்காலப் பத்திரங்கள் யாவும் காலப்போக்கில் குறுங்காலப் பத்திரங்களாக மாறி அமைகின்றன. முதலீடு செய்வோர் நெடுங்காலத்திற்குத் தங்களிடம் தங்கக்கூடிய பத்திரங்களையே பெரிதும் விரும்புகின்றனர். எனவே கெடுவுகாலத்தை அணுகிக் கொண்டிருக்கும் நெடுங்காலப் பத்திரங்களில் முதலீடு செய்வதை இவர்கள் விரும்புவதேயில்லை. இது உண்மையானல், மார்க்கெட்டில் விற்பனைக்கு வருகின்ற பத்திரங்களை (கெடுவு காலத்தை அணுகிக் கொண்டிருக்கும் நெடுங்காலப் பத்திரங்களை) விலைக்கு வாங்கச் சில நிதி நிறுவனங்கள் முன்வரவேண்டும். அரசாங்கமும் இதைத்தான் விரும்புகின்றது. பங்கு வர்த்தகர்களின் (Jobbers) நடவடிக்கைகளால் பங்கு மார்க்கெட் பயனடைவதுபோல, இந்த நிதி நிறுவனங்களின் நடவடிக்கைகளால் பத்திர மார்க்கெட் பயனுறலாம். மார்க்கெட்டில் அவ்வப்போது தற்காலிகமாகப் பெருமளவில் விற்பனைக்கு வரக்கூடிய பங்குகளைப் பங்கு வர்த்தகர்கள் விலைக்கு வாங்க முன்வருகின்றனர். இதேபோல மார்க்கெட்டில் அவ்வப்போது தற்காலிகமாகப் பெருமளவில் விற்பனைக்கு வரக்கூடிய பத்திரங்களை இந்த நிதி நிறுவனங்கள் விலைக்கு வாங்க முன்வரலாம். மேலும் நிதித் தேவையால் உந்தப்பட்டு அரசாங்கம் அவ்வப்போது குறுகிய ஆயுளை உடைய பத்திரங்களைத் தற்காலிகமாக வெளியிடவேண்டி நேரலாம். இம்மாதிரியான பத்திரங்களை விலைக்கு வாங்கக்கூடிய சில நிதி நிறுவனங்கள் இருக்கும் பட்சத்தில், இவற்றை வெளியிடுவதை ஒரு கொள்கையாகவே அரசாங்கம் கடைப்பிடிக்க முடியும். மேலும் குறுங்கால வட்டி வீதங்கள் குறைவாகவே இருக்க நேர்ந்தால், அரசாங்கம் (குறுங்காலப் பத்திரங்கட்கு) கொடுக்க வேண்டியிருக்கும் வட்டி வீதங்களும் குறைவாகவே அமையும். 1930 லிருந்து 1949 முடிய இது போன்ற ஒரு வாய்ப்பான சூழ்நிலை இங்கிலாந்தில் உருவாகி யிருந்தது. நாம் மேலே விளக்கியுள்ளவை போன்ற சூழ்நிலைகள் நாட்டில் அவ்வப்போது தோன்றலாம் என்பது உண்மையே யனுல், உண்டியல் கழிவு மார்க்கெட் குறுங்காலப் பத்திரப் பேரங்களில ஈடுபடுவதானது தவருகாது. அதனுல் நன்மைகளே கிட்டும். லண்டனில் செய

மாற்றி வருகின்ற இந்த உண்டியல் கழிவு மார்க்கெட், காலப் போக்கிற்கு ஏற்றவாறு தன்னுடைய நடவடிக்கைகளை மாற்றி அமைத்துக் கொள்ளக் கூடிய நெகிழ்ச்சித்தன்மை பெரிதும் உடைய ஒரு நிதி மார்க்கெட்டாகும். பாங்குகளிடமிருந்து தாங்கள் பெற்றுவருகின்ற கடன் பணத்தின் துணை கொண்டு உண்டியல் கழிவகங்கள் பத்திரங்களை விலைக்கு வாங்கி அவற்றைத் தம்மிடம் இருப்பாக வைத்துள்ளன. உண்டியல் கழிவகங்கட்குத் தாங்கள் கொடுத்துள்ள பணமானது நீர்மைத் தன்மை உடையது என்று பாங்குகள் கருதுகின்றன. (இது உண்மையேயாகும்.)

பத்திரப் பேரங்களில் ஈடுபடுவதன்மூலம், உண்டியல் கழிவகங்கள் அரசாங்கத்திற்கும் பத்திர மார்க்கெட்டுக்கும் பயனுள்ளவைகளாக விளங்க முடியும் என்பது உண்மைதான். ஆனால் உண்டியல் கழிவகங்கள் இவ்வாறு அரசாங்கத்திற்கும் பத்திர மார்க்கெட்டுக்கும் பயனுள்ளவைகளாக எக்காலத்தும் திகழ முடியுமா, என்பது ஐயப்பாட்டிற்குரியதொரு விஷயமாகும். 1950-க்கு முன் பண மார்க்கெட்டில் வாய்ப்பான சூழ்நிலைகள் உருவாகி இருந்தன. வட்டி வீதங்களில் பெருமளவு மாற்றங்கள் நேரவே இல்லை எனலாம். நிலையான வட்டி வீதங்களே நெடுங் காலமாக நிலவின. பத்திர இருப்புக்களின் மூலம் உண்டியல் கழிவகங்களால் அதிகமான இயக்கலாபம் ஈட்ட முடிந்தது. பாங்குகளிடமிருந்து உண்டியல் கழிவகங்கள் வாங்கிய நாள் நிலுவைக் கடன்கட்கான வட்டி வீதம், பத்திரங்களினின்றும் உண்டியல் கழிவகங்கட்குக் கிடைத்து வந்த வட்டி வீதத்தைவிட மிகவும் குறைவாகவே இருந்தது. எனவே உண்டியல் கழிவகங்கட்கு அதிகமான இயக்க இலாபம் கிடைத்தது: அவை பத்திரப் பேரங்களில் ஆர்வத்துடன் ஈடுபட்டிருந்தன. ஆனால் 1950-க்குப் பின் நிலைமை அடியோடு மாறியுள்ளது. இதன் விளைவாக உண்டியல் கழிவகங்கள் பெரிதும் பாதிக்கப் பட்டுள்ளன. உண்டியல் கழிவகங்கட்கு இரு வகையிலும் கேடுகள் சூழ்ந்துள்ளன—இவை பத்திரப் பேரங்களில் ஈடுபட முடியாத அளவுக்கு ஒரு சூழ்நிலை உருவாகியுள்ளது; மற்றும் முன்புபோல உண்டியல் கழிவகங்களால் பாங்குகளிடமிருந்து குறைந்த வட்டி வீதத்தில் நாள் நிலுவைக் கடன்கள் பெற முடியவில்லை, பத்திரங்கட்கான வட்டி வீதங்கள் அதிகமாகியிருப்பதனுல் பத்திரங்களின் விலைகள் மிகவும் குறைந்துள்ளன. இவ்வாருன சூழ்நிலையில் உண்டியல் கழிவகம் ஒன்று தன்னிடமுள்ள பத்திரங்களை விற்க முனைந்தால் அதற்கு மூலதன இழப்பு (Capital Loss) நேரும். அல்லது தற்போதைய பத்திர விலைகளின் அடிப்படையில் தங்களுடைய இருப்பு நிலை குறிப்பை உண்டியல் கழிவகங்கள் மதிப்பிடுமேயாயின் தங்கட்

மூலதன நஷ்டம் நேர்ந்துள்ளதை அவை உணரும். மற்ருெரு கேடும் உண்டியல் கழிவகங்களைச் சூழ்ந்துள்ளது. உண்டியல் கழிவகங்கள் பாங்குகளிடமிருந்து அவ்வப்போது வாங்கிக்கொண் டிருக்கின்ற நாள் நிலுவைக் கடன்கட்கான வட்டி வீதங்கள் மிகவும் உயர்ந்துள்ளன. ஏற்கனவே உண்டியல் கழிவகங்களிடம் இருப் பாக உள்ள பழைய பத்திரங்களினின்றும் கிடைக்கக்கூடிய வட்டி வீதத்தைவிட நாள் நிலுவைக் கடன்கட்கான வட்டி வீதங்கள் அதிகமாகியுள்ளன. (உண்டியல் கழிவகங்களிடம் இருப்பாக உள்ள பழைய பத்திரங்களையொட்டி அவற்றிற்கு இயக்க நஷ்டம் (Running Loss) நேர்ந்துள்ளதையே இது உணர்த்துகின்றது.) மேலும் புதிதாக அரசாங்கம் வெளியிடுகின்ற பத்திரங்கட்கான வட்டி வீதமும் நாள் நிலுவைக் கடன்கட்கான வட்டி வீதமும் சமமாகவே அமைந்துள்ளன. (இந்தப் புதிய பத்திரங்களின் மூலம் உண்டியல் கழிவகங்கட்கு இயக்க லாபம் சிறிதளவேனும் கிடைப் பதற்கு வாய்ப்பே இல்லை என்பதையே இது உணர்த்துகின்றது.) இவற்றின் விளைவாக உண்டியல் கழிவகங்கள் பெரிதும் பாதிக்கப் கப்பட்டுள்ளன. பத்திரங்களை வாங்குவதிலும், விற்பதிலும், இவை ஆர்வம் குன்றியவைகளாகக் காட்சியளிக்கின்றன. பங்கு மார்க் கெட்டில் அவ்வப்போது விற்பனைக்குவரக் கூடிய மிகுதியான பங்குகளை பங்கு வர்த்தகர்கள் விலைக்கு வாங்க முன் வருவதுபோல, 1950-க்கு முன்பத்திர மார்க்கெட்டில் அவ்வப்போது விற்பனைக்கு வந்துகொண்டிருந்த மிகுதியான பத்திரங்களை உண்டியல் கழி வகங்கள் விலைக்கு வாங்க முன் வந்தன. ஆனால் 1950-க்குப் பின் நிலைமையில் மாற்றங் கண்டுள்ளது. பங்கு வர்த்தகரைப் போலவே தற்சமயமும் உண்டியல் கழிவகங்கள் பணிபுரிந்து வருகின்றன என்று கொள்வதற்கில்லை. 1951 லிருந்து 1957 முடிய மார்க்கெட்டில் நிலவிய இவ்வாருன சூழ்நிலை வழக்கத்திற்கு விரோதமானவை என்றும், அசாதாரணமானவை என்றும் உண்டி யல் கழிவகங்கள் கருதும் பட்சத்தில், மீண்டும் அவை குறுங் காலப் பத்திர மார்க்கெட்டில் ஆர்வத்துடன் ஈடுபட முன்வரலாம். ஆனல் இவ்வாருன சூழ்நிலை உருவாவதற்குரிய அறிகுறிகளைத் தற்சமயம் கண்கூடாகக் காணமுடியவில்லை. பத்திர மார்க்கெட்டைப் பொறுத்தவரையில் அதிக முன்ஜாக்கிரதையுடன் நடந்து கொள் வதையே உண்டியல் கழிவகங்கள் விரும்புகின்றன என்பதற்கான அறிகுறிகளே தற்சமயம் காணக்கிடக்கின்றன.

குறுங்காலப் பத்திர மார்க்கெட்டை விட்டு உண்டியல் கழி வகங்கள் முற்றிலும் அகன்றுவிட்டால் நேரக்கூடிய விளைவுகள் யாவை? — என்ற வினு எழுவது இயற்கையே. குறுங்காலப் பத்திர மார்கெட்டுடன், தாங்கள் கொண்டுள்ள தொடர்புகள்

யாவற்றையும் உண்டியல் கழிவகங்கள் துண்டித்துக்கொள்ள நேர்ந்தால், குறுங்காலப் பத்திரமார்க்கெட்டில் தாங்கள் தற்சமயம் நிகழ்த்தி வரும் பேரங்களைவிட அதிகமான பேரங்களில் பாங்குகள் ஈடுபடும். எனினும் முழு விருப்புடன் பத்திரப் பேரங்களில் பாங்குகள் ஈடுபடும் என்று கூறுவதற்கில்லை. விருப்ப மின்றியே பாங்குகள் பத்திர மார்க்கெட்டுடன் தொடர்புகள் வைத்துக் கொண்டிருக்கும். பாங்குகள் ஓரளவுக்கே பத்திர மார்க்கெட்டுக்கு ஆதரவு கொடுத்து வரும். எனவே அரசாங்கத்தின் ஓர் அங்கம் என்ற முறையில் மையப் பாங்கு பத்திர மார்க்கெட்டுக்கு முழு அளவிலான ஆதரவு கொடுக்க வேண்டிய திருக்கும். உண்மையில் அமெரிக்காவில் 1940 லிருந்து 1949 முடிய இது போன்ற தொரு நிலை உருவாகி இருந்தது. அவ்வமயம் குறுங்காலப் பத்திரங்களிலும், இடைக்கால பத்திரங்களிலும், ஐக்கிய ரிசர்வ் முறை (Federal Reserve System) பெருமளவிலான பேரங்களை நடத்தியது. வாணிபப் பாங்குகள் பத்திரங்களை விலைக்கு வாங்க முன் வராத காலங்களில் ஐக்கிய ரிசர்வ் முறை முன்வந்து பத்திரங்களைப் பெருமளவில் விலைக்கு வாங்கியது. இதேபோல வாணிபப் பாங்குகள் பத்திரங்களை வாங்குவதில் பெரிதும் ஆர்வம் காட்டிய காலங்களில் ஐக்கிய ரிசர்வ் முறை பத்திரங்களை விற்றதாலும், வாங்கியதாலும், அமெரிக்கப் பத்திர மார்க்கெட்டு நிலையான மார்க்கெட்டாகத் திகழ்ந்தது. லண்டன் (குறுங்கால) பத்திரமார்க்கெட்டை விட, அமெரிக்க (குறுங்கால)ப் பத்திர மார்க்கெட்டே நீடித்து நிற்கும் தன்மையில் அவ்வமயம் மேம்பட்டு விளங்கியது. 1940-49க்கு இடைப்பட்ட காலத்தில் ஐக்கிய ரிசர்வ் முறை கடைப் பிடித்த முறைகளை லண்டனிலும் கடைப் பிடிக்கலாம். இதற்கு இடையூருகப் பெரும் அளவிலான தடைகள் ஏதும் லண்டனில் இருடபதாகத் தெரியவில்லை. தற்சமயம் இருப்பதை விட மேலும் அதிகமாக ஒரு சில தொழில் நுணுக்கம் தெரிந்த திறமைசாலிகளையும், மற்றும் குமாஸ்தாக்களையும் மையப் பாங்கிலும் வாணிபப் பாங்குகளிலும் வேலையில் அமர்த்த வேண்டியிருக்கும்.

பத்திர மார்க்கெட்டுடனுன தங்களுடைய தொடர்புகள் யாவற்றையும் உண்டியல் கழிவகங்கள் முற்றிலும் துண்டித்துக் கொள்ள நேர்ந்த போதிலும், பத்திரமார்க்கெட் பெரிதும் பாதிக்கப்படமாட்டாது என்றும், வாணிபப் பாங்குகளும் மையப் பாங்குகளும் பத்திர மார்க்கெட்டுக்கு ஆதரவு கொடுக்க முன்வரலாம் என்று மேலே கண்டோம். இது போலவே, தற்சமயம் உண்டியல் கழிவு மார்க்கெட் நிகழ்த்தி வரும் கருவூல உண்டியல் பேரங்களிலும் வாணிபப் பாங்குகள் நேரடியாகவே ஈடுபடமுடியும். எனவே

கருவூல உண்டியல் பேரத்திற்குக் கழிவகங்களின் பணி இன்றியமையாததுதானா? என்ற வினா எழுகின்றது. உண்டியல் கழிவகங்களின் பணிகள் இன்றியமையாதவை என்று கருத முடியாது. எனினும் உண்டியல் கழிவகங்கள் செயலாற்றி வருவதையொட்டி வாணிபப் பாங்குகட்கு சில சௌகர்யங்கள் கிடைக்கின்றன. வாணிபப் பாங்குகள், உண்டியல் கழிவகங்கட்கு நாள் நிலுவைத் கடன்கள் கொடுத்து வருகின்றன. மேலும் தாங்கள் விரும்பும் கெடுவு காலங்களையுடைய கருவூல உண்டியல்களை வாணிபப் பாங்குகள், உண்டியல் கழிவகங்களிடமிருந்து சாதாரணமாகப் பெறமுடிகின்றது. இவற்றையொட்டி வாணிபப் பாங்குகட்குச் சில நன்மைகளும் கிட்டுகின்றன. தங்கட்குள் ஏற்படுகின்ற கடன் பேரங்களை வாணிபப் பாங்குகளால் எளிதில் தீர்த்துக் கொள்ள முடிகின்றது. அவ்வப்போது அரசாங்கம் பிறருக்குச் செலுத்தினங்களை அளிக்கின்றது. அல்லது அரசாங்கத்தினிடம் பிறர் பணங்களைச் செலுத்துகின்றனர். இந்த அரசாங்க வரவு செலவுகள் ஒரு ஒழுங்குக்குக் கட்டுப்பட்டவை என்று சொல்ல முடியாது. ஏனெனில் இந்த வரவு செலவுகளில் சில எதிர்பார்க்கக் கூடியவை; வேறு சில எதிர்பாராமலேயே நேருகின்றன. எனவே இவற்றால் வாணிபப் பாங்குகள் ஒருவேளை பாதிக்கப்படலாம். ஆனால் உண்டியல் கழிவகங்களுடன் வாணிபப் பாங்குகள் தொடர்புகளை வைத்திருப்பதனால், இம்மாதிரியான காலங்களில் வாணிபப் பாங்குகளால் நிலைமை சமாளிக்க முடிகின்றது—தங்களுடைய ரொக்க விகிதங்கட்கு எந்தவிதமான குந்தகமும் நேர்ந்துவிடாத அளவுக்கு வாணிபப் பாங்குகளால் நிலையை சமாளிக்க முடிகின்றது. எனினும் சில உண்மைகளை நாம் ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறோம். தக்கட்கு இடையே ஏற்படக்கூடிய கடன் பேரங்களை வாணிபப் பாங்குகள் தீர்த்துக் கொள்வதற்கு உண்டியல் கழிவகங்கள் இன்றியமையாதவை என்று நாம் கருத முடியாது. அமெரிக்காவில் பாங்குகள் கடைப்பிடித்து வருவது போன்றதொரு முறையை இங்கிலாந்திலுள்ள பாங்குகளும் கடைப்பிடித்தால், தங்கட்குள் நேருகின்ற கடன்களை பாங்குகள் எளிதில் தீர்த்துக்கொள்ள முடியும். 'ஐக்கிய நிதிகளை'[1] (Federal Funds)ப் பயன்படுத்தித் தங்கட்குள் ஏற்படுகின்ற கடன்களை அமெரிக்கப் பாங்குகள் தீர்த்துக்கொள்ளுகின்றன. மற்றும் அரசாங்க வரவு செலவுகளில் நேரக்கூடிய ஒழுங்கீனங்களைப் பாங்குகள் சமாளிப்

1 ஐக்கிய ரிசர்வ் முறை விதித்துள்ள ரொக்க விகிதத்தைவிடக் குறைந்த ரொக்கக்காப்பு இருப்புக்களை வைத்திருக்கக்கூடிய பாங்குகள் தேவைக்கு மேல் அதிகமான ரொக்கக் காப்பு இருப்புக்களை வைத்திருக்கக்கூடிய பாங்குகளிடமிருந்து ரொக்கத்தைக் கடன் பெறுகின்றன. இந்தக் கடன்களைப் பாங்குகள் ஒரு தினங்களில் திருப்பிக் கொடுத்து விடுகின்றன. 'இன்றுள்ள ரொக்கம்' 'நாளைக் கிடைக்கக்கூடிய ரொக்கமாக' இந்தக் கடன் பேரத்தில் மாறி அமைகின்றது.

பதற்கும் உண்டியல் கழிவகங்கள் இன்றியமையாதவை என்று கொள்ளமுடியாது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கைத் தாங்கள் நேரடியாக அணுகி உதவிகோருவது தவறு என்று முன்பு பாங்குகளிடையே ஒரு தவருன எண்ணம் நிலவி வந்தது. தற்சமயம் இந்தத் தவருன எண்ணம் அகன்றுவிட்டது. எனவே அரசாங்க வரவு செலவுகளில் நேரக்கூடிய ஒழுங்கீனங்களைச் சமாளிக்கும் நோக்கத்தோடு மையப் பாங்கை நேரடியாகவே அணுகிப் பாங்குகள் உதவிபெற முயலலாம். உண்டியல் கழிவகங்கள் மறைய நேர்ந்தால் பாங்குகளின் நீர்மைத்தன்மை குறைய நேரலாம் என்ற எண்ணம் உதயமாகலாம். முற்றிலும் பொருந்தக் கூடிய ஒரு கருத்து என்று இதை நாம் கொள்ளுவதற்கில்லை. வணிபப் பாங்குகளின் நீர்மைத்தன்மையைப் போற்றிப் பாதுகாக்க வேண்டியது மையப்பாங்கின் ஓர் இன்றியமையாத கடமை என்பதை நாம் நன்கு அறிவோம். எனவே உண்டியல் கழிவகங்கள் மறைய நேர்ந்தாலும், வாணிபப் பாங்குகளின் நீர்மைத்தன்மை சிறிதளவேனும் பாதிக்கப் படமாட்டாது. சுருங்கக்கூறின் எந்தெந்தச் சூழ்நிலைகளையொட்டி உண்டியல் கழிவகங்கள் தோன்றினவோ, அந்தந்தச் சூழ்நிலைகள் பெரும்பாலும் மறைந்தொழிந்து விட்டன என்றே கூற வேண்டும். இருப்பினும் உண்டியல் கழிவகங்கள் செயலாற்றி வருவதையொட்டி வாணிபப் பாங்குகட்குச் சில சௌகர்யங்கள் கிட்டுகின்றன. கருவூல உண்டியல் பேரங்களைப் பொறுத்த வரையில் உண்டியல் கழிவகங்களின் சேவைகள் இன்றியமையாதவைகள் அல்ல என்பது உண்மையேயாகும். இதன் விளைவாக உண்டியல் கழிவகங்கள் மறைந்தொழிந்துவிட நேரினும் பண மார்க்கெட் பெரிதும் பாதிக்கப்படமாட்டாது என்பதும் உண்மையேயாகும். இருப்பினும் உண்டியல் கழிவகங்கள் நீடித்து இருக்க வேண்டியது அவசியமே என்று தோன்றுகின்றது. உண்டியல் கழிவகங்கள் செயலாற்றி வருவதையொட்டிப் பாங்குகட்கு வழிவழியாகச் சில வசதிகள் கிடைத்து வந்துள்ளன. மேலும் காலப்போக்கில் நேர்ந்த மாற்றங்களுக்கு ஏற்பத் தங்கள் நடவடிக்கைகளை உண்டியல் கழிவகங்கள் சீரிய முறையில் மாற்றி அமைத்துக் கொண்டே வந்துள்ளன.

இதுகாறும் லண்டன் தீர்வுப் பாங்குகளின் மீது மட்டும் நம் கவனம் முழுவதையும் நாம் செலுத்தியிருந்தோம் என்று கூறலாம் உண்டியல் கழிவகங்களின் சேவை லண்டன் தீர்வுப் பாங்குகட்கு இன்றியமையாதவைதானு என்பது குறித்து மட்டுமே மேலே நாம் ஆராய்ந்தோம். லண்டன் தீர்வுப் பாங்குகள் மட்டுமேயன்றி 'வெளிப் பிரதேசப் பாங்குகளும்' ('outside banks') லண்டன் பண மார்க்கெட் நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றன. இங்கிலாந்தி

செயலாற்றிவரும் அயல் நாட்டுப் பாங்குகளும் ஏனைய இங்கிலாந்துப் பாங்குகளும் 'வெளிப்பிரதேசப் பாங்குகள்' ஆகும். மேலும் உலகிலுள்ள பாங்குகள் யாவும் லண்டனுடன் தொடர்புகள் வைத்துக்கொண்டிருக்கின்றன. நிதிப் பேரங்களின் மேல் தாங்கள் விதித்திருந்த கட்டுப்பாடுகளை — சிறப்பாக பன்னாட்டு நிதிப்பேரங்களின்மீது தாங்கள் விதித்திருந்த கட்டுப்பாடுகளை — அரசாங்கம் படிப்படியாக அகற்றியுள்ளது. இதையொட்டி வட்டி வீதங்கள் பெருமளவு நெகிழ்ச்சியுடையவைகளாக விளங்குகின்றன. லண்டனில் நிலவுகின்ற வட்டி வீதங்களிலும் நெகிழ்ச்சித்தன்மை தோன்றியுள்ளது. எனவே பண இருப்புக்கள் ஒரு நாட்டினின்றும் பிறிதொரு நாட்டிற்குச் செல்வதும் வருவதும் நிகழ்ந்து வருகின்றன. இதை யொட்டி லண்டன் பணமார்க்கெட் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கின்ற வர்த்தகர்கட்குப் பல புதிய வாய்ப்புக்கள் உருவாகியுள்ளன. உள்நாட்டு இருப்புக்கள் மட்டுமின்றி அயல் நாடுகள் காமன் வெல்த் நாடுகள் ஆகியவற்றின் இருப்புக்களும் பெருமளவு தற்சமயம் கருவூல உண்டியல்களில் முதலீடு செய்யப்படுகின்றன. இதன் விளைவாகக் கருவூல உண்டியலில் விறுவிறுப்பானதும் உணர்ச்சியுள்ளதுமான ஒரு மார்கெட் உருவாகியுள்ளது. உண்டியல் கழிவகங்கள் இந்த மார்க்கெட்டைத் தங்கட்குச் சாதகமாகப் பயன்படுத்தி வருகின்றன. அன்றுட ஸ்டெர்லிங் டெபாசிட்டுக்கள் சம்பந்தப்பட்ட பேரங்களிலும் உண்டியல் கழிவகங்கள் தற்சமயம் ஈடுபட்டுள்ளன. இதுவும் அவைகட்கு ஆதாயகரமான ஒன்றேயாகும். உண்டியல் கழிவகங்கள் இவ்வாறு ஆற்றிவரும் சேவைகளை லண்டன் தீர்வுக்குப் பாங்குகளே செய்ய முடியும். ஆனால் அது விரும்பத்தக்கதல்ல. அதன் விளைவாக தற்சமயம் மார்க்கெட்டில் நிலவிவரும் போட்டி மறைய நேரலாம். இந்தப் போட்டியை யொட்டியே ஆற்றலும் சிறப்பும் வாய்ந்த ஒரு பன்னாட்டு நிதிகேந்திரமாக லண்டன் திகழ்கின்றது. எனவே உண்டியல் கழிவகங்கள் ஆற்றிவரும் மேற்குறித்த சேவைகளை வாணிபப் பாங்குகள் ஆற்ற முன் வரும் பட்சத்தில், லண்டன் பணமார்க்கெட்டின் ஆற்றலும் சிறப்பும் குன்ற நேரலாம்.

வாணிப உண்டியல்களில் ஏற்பட்ட பேரங்களை யொட்டியே உண்டியல் கழிவகங்கள் ஆரம்பத்தில் தோன்றின. உண்டியல் பேரங்களைச் சிறந்த முறையில் நடத்துவதற்கான தகுதிகள் யாவும் உண்டியல் கழிவகங்களே பெற்றிருக்கின்றன. தற்சமயம் மார்க்கெட்டில் (1959-ல்) சுமார் 250 மில்லியன் பவுன் மதிப்புள்ள வாணிப உண்டியல்களில் பேரங்கள் நடந்துவருகின்றன. எதிர் காலத்தில் உண்டியல் பேரங்கள் இன்னும் அதிகமாகலாம் என்ற ஒரு கருத்தும் நிலவுகின்றது. தங்களுடைய உண்டியல் பேரங்களை

யொட்டி உண்டியல் கழிவகங்கள் பண மார்க்கெட்டுக்கு அரிய சேவைகளை ஆற்றிவருகின்றன. ஏற்கனவே இவற்றைப்பற்றி நாம் கூறியுள்ளோம். வாணிபப் பாங்குகளும் உண்டியல் பேரங்களில் நேரடியாகவே ஈடுபடமுடியும். ஆனால் இதை யொட்டி வாணிபப் பாங்குகட்குச் சில புதிய செலவினங்கள் ஏற்படும். உண்டியல் கழிவகங்களின் அலுவல்களில் தற்சமயம் எத்தனை நபர்கள் (தொழில் நுணுக்கம் தெரிந்த திறமைசாலிகளும் குமாஸ்தாக்களும்) ஈடுபட்டுள்ளனரோ, அத்தனை நபர்களை (தொழில் நுணுக்கம் தெரிந்த திறமைசாலிகளையும் குமாஸ்தாக்களையும்) வாணிபப் பாங்குகள் தங்கள் அலுவலகங்களில் வேலையில் அமர்த்த வேண்டி நேரிடும். வாணிப உண்டியல்களிலான பேரங்களில் உண்டியல் கழிவகங்கள் தவிர ஏனைய நிறுவனங்களும் இந்தப் பணிகளைக் குறைந்த செலவில் ஆற்றமுடியுமா, என்பது ஐயப்பாட்டிற்குரிய ஒன்றேயாகும். எனவே வாணிபப் பாங்குகள் உண்டியல் பேரங்களில் நேரடியாக ஈடுபடுவதில்லை. உண்டியல் பேரங்கள் தங்களுடைய முக்கியமான அலுவல்களினின்றும் வேறுபட்டவை என்று வாணிபப் பாங்குகள் கருதுகின்றன. தனித்திறமை வாய்ந்த நிறுவனங்களாகிய உண்டியல் கழிவகங்களின் சேவையைப் பயன்படுத்திக் கொள்வதையே வாணிபப் பாங்குகள் பெரிதும் விரும்புகின்றன. உண்டியல் கழிவகங்களில் தற்சமயம் நூற்றுக்கணக்கான நபர்கள் வேலையில் அமர்ந்துள்ளனர். தட்டச்சர்கள் (Typists), செய்தியாட்கள் (messengers), மானேஜர்கள், மற்றும் தனித்திறமை வாய்ந்த குமாஸ்தாக்கள் ஆகியோரே இந்த நபர்களாவர். உண்டியல்களிலான பேரங்களை நடத்த யாராவது முன்வர வேண்டியுள்ளது. எனவே உண்டியல் கழிவகங்கள் தற்சமயம் ஆற்றிவரும் பணிகட்கு ஈடாக அவை பெறும் சன்மானம் ஒரு செலவினம் என்று கருதமுடியாது. மேலும், பேரும் புகழுமுடைய ஒரு பன்னாட்டு நிதிமையமாக லண்டன் திகழ்ந்து வருவதற்குத் தூண்கள் போல விளங்குவன இந்த உண்டியல் கழிவகங்களேயாகும். எனவே இவை ஆற்றிவரும் பணிகட்கு ஈடாகக் கொடுக்கப்பட்டு வருகின்ற சன்மானம் செலவினமே அல்ல.

# 4 மையப் பாங்கு—அமைப்பு முறை பற்றிய விளக்கங்கள்

## 1. மையப்பாங்கு அரசாங்கத்தின் ஓர் அங்கம்

மையப் பாங்கு அரசாங்கத்தின் ஓர் அங்கமாகும். அரசாங்கத்தின் நிதி நடவடிக்கைகளில் பெரும் பகுதியை இது நிருவகித்து வருகின்றது. இவ்வாறு அரசாங்கத்தின் நிதி நடவடிக்கைகளை நிருவகிப்பதன் மூலமும். வேறு பல வழிகளின் மூலமும் நாட்டிலுள்ள ஏனைய நிதி நிறுவனங்களின் நடவடிக்கைகளை மையப் பாங்கால் மாற்றி அமைக்க முடிகின்றது. இவ்வாறு மாற்றி அமைத்து அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கைக்கு ஆக்கம் தேடும் ஓர் அங்கமாக மையப் பாங்கு திகழ்கிறது. வரலாற்றின் ஏடுகளைத் திருப்பிப் பார்ப்போமேயானுல் இன்று மையப் பாங்கு என்னென்ன கடமைகளை ஆற்றி வருகின்றதோ அவை கடந்த காலத்தில் பெரும்பாலும் வாணிபப் பாங்குகளால் ஆற்றப்பட்டவையே என்ற உண்மையை நாம் அறியலாம். இன்றும் மையப் பாங்கின் நடவடிக்கைகளில் பெரும்பாலும் ஒத்திருக்கின்றன. எனவே 'மையப் பாங்கு' என்ற சொற்ருெடரில் 'பாங்கு' என்ற வார்த்தையும் சேர்க்கப்பட்டிருக்கின்றது. இருப்பினும், மையப் பாங்கு வாணிபப் பாங்குகளினின்றும் சில முக்கியமான விஷயங்களைப் பொறுத்தவரையில் வேறுபட்டதேயாகும். அந்த வேறுபாடுகள் வருமாறு : முதலாவதாக, மையப் பாங்கு அரசாங்கத்தின் வேறு அங்கங்களோடு பெருமளவில் அன்றிச் சிறு அளவில் தொடர்புடையவர்களால் நிருவகிக்கப் படுகின்றது. இரண்டாவதாக இயன்ற அளவு அதிகமான லாபம் சம்பாதிப்பதே வாணிபப் பாங்கின் முக்கிய நோக்கமாகும் ; ஆனுல் மையப் பாங்குக்கு லாபம் தேடவேண்டும் என்ற நோக்கமே கிடையாது என்று கூறலாம். மூன்ருவதாக மையப் பாங்குக்கும் வாணிபப் பாங்குகட்கும் இடையே ஒரு சிறப்பான உறவு நிலவுகின்றது. இதனுல் மையப்

பாங்கு, அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையைச் செயல் படுத்தும்போது வாணிபப் பாங்குகளின் நடவடிக்கைகளை மாற்றி அமைக்க ஏதுவாகின்றது.

மையப் பாங்கு அரசாங்கத்தின் ஓர் அங்கம் என்பதனால், ஏதாவது ஒருவகையில் அது அரசாங்கம் என்ற இயந்திரத்தில் ஒரு பகுதியாகத் திகழவேண்டும்; மேலும் அதனுடைய நடவடிக்கைகள் அரசாங்கத்தின் ஏனைய நிருவாகத்துறைகளுடன் தெளிவான வகையில் இணைக்கப்பட வேண்டும் என்றெல்லாம் எண்ணத் தோன்றுகின்றது. இருப்பினும், பரம்பரை பரம்பரையாக மையப் பாங்கு ஒரு சுதந்திர நிறுவனமாகத் திகழவேண்டும் என்று கருத்து வலியுறுத்தப்பட்டு வருகிறது. அது தனியார் துறை நிறுவனமாக இருக்கவேண்டும் என்றும், அதனுடைய முக்கியமான அதிகாரிகள் நியமனம் செய்யப்படுவதில் அரசாங்கத்திற்கு யாதொரு விதமான பங்கும் இருக்கக்கூடாது என்றுங்கூட சிலர் வலியுறுத்தி வந்துள்ளனர். 1920ஆம் ஆண்டு முதல் 1929 ஆம் ஆண்டு முடிய உள்ள காலத்தில் மையப் பாங்கின் அமைப்பு முறை பற்றிய கோட்பாடு (Theory) நிறுவப்பட்டு, எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது; அவ்வமயம் மையப் பாங்கு சம்பந்தமாக நாம் மேலே குறித்த கருத்துக்கள் பெரிதும் வலியுறுத்தப்பட்டன. அக்காலம் தொட்டு இந்தக் கருத்துக்கள் படிப்படியே மதிப்பிழந்து வந்துள்ளன; ஆனால் முற்றிலும் அவை மறைந்துவிட்டன என்று கொள்வதற்கில்லை. அரசாங்கத்தின் ஏனைய அங்கங்களைவிட, மையப் பாங்குக்கு விசேஷமான அமைப்பு முறையை ஏற்படுத்த வேண்டும் என்று வலியுறுத்தப் படுவதற்குக் காரணங்கள் சில உள்ளன. மையப் பாங்கே நாட்டிலுள்ள ரொக்கங்கள் (cash) யாவற்றையும் தோற்றுவிக்கிறது. எனவே ஊதாரித்தனமான அரசாங்கம் ஒன்று எப்பொழுது விரும்பினாலும், மையப் பாங்கைத் தனக்குச் சாதகமாகத் தவறான வழியில் பயன்படுத்தக் கூடிய வாய்ப்புக்கள் ஏராளமாகும். சுலபமான வழியில் தங்கட்குத் தேவையான பணத்தை மையப் பங்கிடமிருந்து பெறமுடியும். இதனால் அந்த அரசாங்கம் உடனடியாக நன்மை அடையும்; அந்த நன்மை நாம் எளிதில் காணக்கூடிய அளவினதாக அமைந்திருக்கும். ஆனால் இம்மாதிரியான முறையால் நேரக் கூடிய தீமைகளை அவ்வளவு எளிதில் கண்டுகொள்ள முடியாது. காலப் போக்கில் இந்தத் தீமைகள் யாவும் படிப்படியாக ஒன்று சேர்ந்து, இறுதியில் பொருளாதார அமைப்பையே சீர் குலையச் செய்யும். இம்மாதிரியான தீமைகளை நன்கு உணர்ந்தே பெரும்பாலான நாடுகள் (இங்கிலாந்து உட்பட) தங்கள் மையப் பாங்குகளை அரசாங்கத்தின் ஒரு துறை (Department) யாகக் கருதாமல்

அவற்றிற்கென்று ஒரு தனி அமைப்பைக் கொடுத்திருக்கின்றனர். அரசாங்கத்தின் விரிவான பொருளாதாரக் கொள்கையுடன், மையப் பாங்கின் கொள்கையை இணைப்பது இன்றியமையாதது என்ற கருத்தை யாவரும் ஒப்புக் கொள்வர். இருப்பினும், மையப் பாங்கு ஒரு தனி அந்தஸ்துடனேயே திகழ்கின்றது. அதனுடைய அன்றாட தொழில் நுட்பச் சம்பந்தமான நடவடிக்கைகளில் அரசாங்கம் தலையீடு செய்யாமல் இருப்பதால், மைய பாங்கு மிக மிகச் சுதந்திரத்தோடு செயலாற்றுகின்றது என்று நாம் கொள்ளலாம். இவை குறித்து இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் (Bank of England) கவர்னர் ஒருவரின் கூற்றைக் கீழே காணலாம்: 'மையப் பாங்கு அரசாங்கத்திற்கே புத்திமதி கூறும் சிறப்பான உரிமை பெற்றிருக்கின்றது. அரசாங்கத்தின் போக்கில் குற்றங் கண்டால், கண்டித்து, புத்திமதி கூறும் உரிமை பெற்றிருக்கின்றது. இருப்பினும் அது அரசாங்கத்தின் அதிகாரத்திற்குக் கட்டுப் பட்டது என்னும் உண்மையை நாம் மறந்துவிடலாகாது.'

மேற்குறித்த கருத்துகளை எந்த அளவுக்கு வெவ்வேறு நாடுகளும் ஏற்றுக்கொண்டுள்ளன என்பதைப் பிரதிபலிக்கும் வகையில், வெவ்வேறு நாடுகளிலும் நிறுவப்பட்டுள்ள மையப் பாங்குகளின் அமைப்பில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. மையப் பாங்கு குறித்து வெவ்வேறு நாடுகளில் நிலவும் கருத்து வேறுபாடுகளும், எந்தெந்த நிறுவனங்களிடையே மையப் பாங்கு செயலாற்ற வேண்டியுள்ளதோ அவை நாட்டிற்கு நாடு வேறுபட்டிருப்பதும், மையப் பாங்குகளின் அமைப்பு நாட்டிற்கு நாடு வேறுபட்டிருப்பதற்கு ஓரளவு காரணங்களாகும். மேலும் மையப் பாங்குகட்கு எப்பொழுது பட்டயங்கள் (charter) வழங்கப்பட்டனவோ, அல்லது பட்டயங்கள் புதுப்பிக்கப்பட்டனவோ அவ்வமயம் உலகில் எம் மாதிரியான மையப் பாங்குகள் பெருவழக்கில் இருந்தனவோ, அம் மாதிரியே அவையும் அமைக்கப்பட்டன. இன்று பல நாடுகளிலும் உள்ள மையப் பாங்குகளின் அமைப்பில் வேறுபாடுகள் காணப்படுவதற்கு இதுவே முக்கியமான காரணமாகும். சிலசமயம் மையப் பாங்கு பற்றிய சட்டங்கள் அந்தக் காலத்தில் நிலவும் கருத்துகட்கு இயைந்தனவாக இல்லாமல் இருக்கலாம்; எனவே காலத்திற்கு ஏற்றதாக அதைமாற்றும் எண்ணத்தோடு அதன் பட்டயம் (charter) புதுப்பிக்கப்படலாம். இம்மாதிரியான நிலை அமெரிக்காவிலும், வேறு பல நாடுகளிலும் 1930ஆம் ஆண்டு முதல் 1939 ஆம் ஆண்டு முடிய உள்ள கால வரம்பில் நேர்ந்தது. சில வேளைகளில் அரசாங்கம் மையப் பாங்கின் அமைப்பை அக்காலத்தில் நிலவும் கருத்துகட்கு ஏற்றவாறு மாற்றி அமைக்க விரும்பினாலும் 'எழுதப்பட்ட அமைப்பை' (written constitution) மாற்றி அமைக்க

விரும்பாமல், மையப் பாங்கானது 'எழுதப்படாத மரபுகளை'க் (unwritten conventions) கைக் கொள்ளுமாறு, வகை செய்யலாம். இங்கிலாந்தில் 1946க்கு முன்—அதாவது மையப் பாங்கு தேசீயமயமாக்கப் படுவதற்கு முன்—சில ஆண்டுகள் இம்மாதிரியான முறையே கடைப்பிடிக்கப்பட்டது.

## 2. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு (Bank of England)

பிரிட்டனின் மையப் பாங்கின் பெயர் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு[1] என்பதாகும். ஆரம்பத்தில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ஒரு கூட்டு பங்குக் கம்பெனி (Joint-Stock Company) யாக இருந்தது. இது 1694ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட பார்லிமெண்ட் சட்டத்தால் தோன்றியது. 1946ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட இங்கிலாந்து தலைமைப் பாங்குச் சட்டத்தின்படி, நாடு இதனைத் தனது உடைமையாக்கிக் கொண்டது. இதனுடைய நடவடிக்கைகள் ஒரு கவர்னர், ஒரு உதவிக் கவர்னர், மன்னரால் நியமிக்கப்பட்ட 16 இயக்குநர்கள் (Directors) ஆகியோரால் ஒழுங்கு செய்யப்படுகின்றன. கவர்னர், உதவி கவர்னர் ஆகியோரின் பதவிக் காலம் ஐந்து ஆண்டுகளாகும். இயக்குநர்களின் பதவிக்காலம் நான்கு ஆண்டுகளாகும்; அவர்களில் நால்வர் ஒவ்வொரு ஆண்டும் பதவியினின்றும் விலகுவர்; அவர்களில் நான்கு பேருக்கு அதிகப்படாமல் முழுநேர அதிகாரிகள் இருக்கலாம். இந்த அதிகாரிகள் யாவரும் பதவிக் காலம் முடிந்ததும், மீண்டும் பதவியில் அமரும் தகுதி பெற்றவர்கள். கட்டாய ஓய்வு குறித்து யாதொரு குறிப்பும் கிடையாது; இருப்பினும் சாதாரணமாக ஒருவர் அறுபத்தாறு வயதிற்குப் பின் வேலையில் அமர்த்தப்படமாட்டார் என்ற குறிப்புள்ளது. 1946ஆம் ஆண்டுச் சட்டப்படி காமன்ஸ் சபை (House of Commons) அங்கத்தினர்கள், மன்னரின் அமைச்சர்கள், அரசாங்க சிவில் ஊழியர்கள், அயல் நாட்டினர் ஆகியோர் மேற்குறித்த எந்தப் பதவிகட்கும் நியமனம் செய்யப் படுவதற்குத் தகுதியற்றவர்கள் ஆவர். இம்மாதிரியான

[1] இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இங்கிலாந்துக்கு மட்டுமின்றி, ஒருவகையில் கிரேட் பிரிட்டன் வட அயர்லாந்து ஆகிய பிரதேசங்கள் அடங்கிய ஐக்கிய அரசுக்கும் (United Kingdom) மையப் பாங்கு என்று கூறலாம். எனினும் ஸ்காட்லாந்துப் பாங்குகள் உல்ஸ்டர் பாங்குகள் (Ulster banks) ஆகியவற்றின் மேல் தலைமைப் பாங்கின் கட்டுப்பாடு நேரடியானது என்று கூறிவிடமுடியாது. ஸ்காட்லாந்து உல்ஸ்டர் ஆகிய நாடுகள் 'இங்கிலாந்து நீங்கலாக உள்ள ஸ்டெர்லிங் பிரதேசத்தில்' (Rest of the Sterling Area) மறைமுகமான அங்கத்தினர்களை என்றே கருதப்படுகின்றன. இந்த அடிப்படையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கை இங்கிலாந்து தேசத்திற்கு மட்டும் மையப் பாங்கு என்று அழைப்பதில் தவறு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. நமது வசதி குறித்து நாம் இவ்வாறு வைத்துக்கொண்டுள்ளோம் என்பதை ஈண்டு வலியுறுத்த விரும்புகிறோம்.

தடைகள் நீங்கலாக, மன்னர் (மந்திரி சபையின் ஆலோசனையின் பேரில்), எந்தத் தொழிலில் ஈடுபட்டிருப்போரையும், மேற்குறித்த பதவிகட்கு நியமனம் செய்யலாம்.

நடைமுறையில் மையப் பாங்கின் நிருவாகம், கவர்னர், உதவி கவர்னர், முழுநேர அதிகாரிகளான நான்கு நிர்வாக இயக்குநர்கள், ஆகியோரால் கவனிக்கப்பட்டு வருகின்றது. தற்சமயம் இந்தப் பதவிகளை வகித்துக் கொண்டிருப்போரை 'மையப் பாங்கையே தொழிலாகக் கொண்டவர்கள்' என்று கூறலாம். ஏனெனில் இவர்கள் தங்களுடைய வாழ்க்கையில் பெரும் பகுதி மையப் பாங்கில் ஊழியம் செய்வதிலேயே செலவிட்டவர்களாவர். எப்பொழுதும் இந்த அடிப்படையில் தான் அதிகாரிகள் நியமிக்கப் படுவர் என்று எண்ணிவிடலாகாது. இருப்பினும், இன்றுள்ள சூழ்நிலையில் இந்த ஆறு அதிகாரிகளும் மையப் பாங்கோடு நீண்ட நாட்கள் தொடர்புடையவர்களாக இருப்பது மிகவும் அவசிய மானதேயாகும். முழுநேர வேலைபார்க்கும் இயக்குநர்கள் நீங்கலாக எஞ்சியுள்ள 12 இயக்குநர்களையும் நியமனம் செய்யும்போது, இரண்டு உலகப் போர்கட்கும் இடைப்பட்ட காலத்தில் கையாண்ட முறைகளே பெரும்பாலும் அநுசரிக்கப்படுகின்றன. அவ்வமயம் அந்தப் பழைய கோர்ட் (அப்பொழுது அது தனியார் நிறுவனம்) டில் லண்டன் நகர் வியாபாரிகள், வியாபாரப் பாங்கர்கள் ஆகியோர் அங்கத்தினர்களர்களாகத் திகழ்ந்தனர். அங்கத்தினர் கட்குள் தொழில் துறையைச் சார்ந்தவர்கள், வர்த்தகத் துறையைச் சார்ந்தவர்கள் என்ற வேறுபாடுகளும் இருந்தன. சாதாரண பாங்குகளின் பிரதிநிதிகள், இயக்குநர் குழு (Court of Directors) இடம் பெறலாகாது என்ற மரபு நெடுங்காலம் நிலவியது. 1949 ஆம் ஆண்டு இந்த மரபு முறிக்கப்பட்டது: சாதாரண பாங்கு ஒன்றின் பிரதிநிதி அந்த ஆண்டு, உதவித் தலைவராக நியமனம் செய்யப்பட்டார்.

1946–ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட சட்டத்தின்படி, மையப் பாங்கின் நடவடிக்கைகட்கு கோர்ட்டார் அனைவரும் பொறுப்பாளராவர். அன்றாட நடவடிக்கைகளைக் கவர்னரும் அனைவருடைய முழு நேர அதிகாரிகளும் கண்காணித்து வந்தாலும், முக்கியமான விஷயங்களைப் பற்றி முடிவு கட்டும்போது கோர்ட் அங்கத்தினர்கள் எல்லோருடைய இசைவுகளையும் பெற வேண்டியது கவர்னருடைய பொறுப்பாகும். கவர்னருக்கு அவ்வப்பொழுது ஆலோசனை கூறுவதற்கு அவருக்கு அருகிலேயே அமைக்கப்பட்டுள்ள குழுவே 'கருவூலக்' (Committee of Treasury) ஆகும். கவர்னர், உதவிகவர்னர், ரகசிய வாக்கெடுப்பு

மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து இயக்குநர்கள் ஆகியோர் கருவூலக் குழுவினர் அங்கத்தினர்களாவர். நெடுங்காலம் நிலவி வரும் மரபுப்படி இந்தக் கருவூல குழுவே மையப் பாங்கின் தலையாய குழு[1] என்ற பெயருடன் திகழ்கின்றது. கவர்னருக்கு உதவியாக, முழுநேர வேலை பார்க்கும் இயக்குநர்கள் நியமிக்கப் பட்ட நாள்தொட்டு இந்த கருவூலக் குழு ஆற்றல் குன்றியதாக மாறிவிட்டது. மையப் பாங்கு, தற்சமயம் மையப்பாங்கையே தொழிலாகக் கொண்டவர்களால் நிருவகிக்கப்பட்டு வருகின்றது என்பதையே இந்த மாற்றம் சுட்டிக்காட்டுகின்றது. இவ்வாறாக, 1946-ஆம் ஆண்டுச் சட்டத்தின் அடிப்படையில் அமைந்துள்ள மையப்பாங்கின் தற்கால அமைப்பு (constitution) சிறந்த முறையில் பாங்கானது நிருவகிக்கப்படுவதற்கான ஏற்பாடுகளோடு திகழ்கிறது. கவர்னர், 'மையப் பாங்கையே தமது தொழிலாகக் கொண்ட நபர்கள்' ஆகியோரால் பாங்கின் அலுவல்கள் கண்காணிக்கப் படுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. மேலும் பல துறைகளிலும் பெயர் பெற்று விளங்கும் மக்களின் ஆலோசனைப்படி, நிருவாகம் மிகவும் சிறந்த முறையில் அமைவதற்கான ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன.

மையப் பாங்கு இன்னும் ஒரு கூட்டு நிறுவனமாகவே திகழ்கிறது, சாதாரணக் கூட்டுப் பாங்குக் கம்பெனியின் அதிகாரங்கள் 'சங்க அமைப்பு விதிக்குறிப்பு' (memorandum of association) களால் ஒழுங்கு செய்யப்படுவதுபோல், மையப் பாங்கின் அதிகாரங்கள், அதற்கு வழங்கப்பட்டுள்ள பட்டயத் (charter) தின் மூலம் ஒழுங்கு செய்யப்பட்டுள்ளன. பட்டயத்தின் மூலம் இன்று மையப் பாங்கு மிக அதிகமான அதிகாரங்களைப் பெற்றிருக்கின்றது. 1946-ஆம் ஆண்டுக்குமுன் மையப் பாங்கின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்திய தடைகள் யாவும், மையப்பாங்கே தன்மேல் சுமத்திக் கொண்டவை யாகும். வாணிபப் பாங்காக இருந்த அது, மையப் பாங்காக உருவாகிக்கொண்டிருந்த காலங்களில், மையப் பாங்கு மேற்கொண்ட சில மரபு (Convention) களே அந்தத் தடைகளாகும். நீண்ட காலமாக அரசாங்கம், மையப்

[1] இந்தக் கருவூலக்குழு மையப் பாங்கின் ஆரம்ப காலத்திலிருந்தே இருந்து வரும் ஒரு குழுவாகும். ஆரம்பத்தில் இது 'கருவூலக் காப்பாளரை நோக்கி இருக்கும் குழு' (The committee to wait upon the Lord Treasurer) என்ற பெயரோடு திகழ்ந்தது. ஆரம்ப காலத்தில் பாங்கின் மிகப் பெரிய வாடிக்கைக்காரராக அரசாங்கம் திகழ்ந்தபோது, பாங்கின் வேலைகளில் பெரும் பகுதி அரசாங்க வேலை பற்றியதாகவே இருந்தது. எனவே இந்தக் குழு விரைவில் பாங்கின் முக்கிய பிரச்னைகளைத் தானே எடுத்துக்கொண்டு தீர்வு காண ஆரம்பித்தது. கவர்னர், உதவிக் கவர்னர், அவ்வப்போது இயக்குநர்களாக இருந்த மாஜி கவர்னர் ஆகியோர்களே, நெடுங்காலமாக இதில் அங்கத்தினர்களாக விளங்கினர்.

பாங்கின் நடவடிக்கைகளைப் பொறுத்த வரையில், எப்பொழுதும் சிறிதளவாவது செல்வாக்குப் பெற்றே இருந்தது. 1914-ஆம் ஆண்டுக்குப்பின் இந்தச் செல்வாக்குக் குறிப்பிடத் தக்க அளவு அதிகமாகியது. சிறப்பாக 1931-ஆம் ஆண்டுக்குப் பின் இந்தச் செல்வாக்கு மேலும் உயர்ந்தது. 1946-ஆம் ஆண்டுக்கு முன்பே மையப் பாங்கும், கருவூலமும் ஒன்றுக்கொன்று இணைந்து செயலாற்றத் தொடங்கி விட்டன. 1946-ஆம் ஆண்டுச் சட்டத்தின் 4-வது பெரும் பிரிவின் (clause) படி. கருவூலத்திற்கும் மையப் பாங்குக்கும் இடையே இருந்த இணைப்புக்கு, முதல் முறையாக சட்ட ரீதியான அங்கீகாரம் கிடைத்தது என்று கூறலாம். இந்த 4-வது பெரும் பிரிவின் முதல் இரண்டு உட் பிரிகள் (Sub-clauses) வருமாறு :

(1) பொது மக்களுக்கு நன்மை தரக்கூடியது என்று கருதும் பட்சத்தில் மையப் பாங்கின் கவர்னருடன் ஆலோசனைகள் நடத்தியபின், கருவூலமானது மையப் பாங்குக்கு அவைபற்றித் தேவையான கட்டளைகளைப் (Directions) பிறப்பிக்கலாம்.

(2) மேற்படிப் பிறப்பிக்கப்படும் கட்டளைகட்குக் கட்டுப்பட்டு மையப் பாங்குக்குக் கொடுக்கப்பட்டுள்ள பட்டயத்தில், மேற்குறித்தவை பற்றிய ஷரத்துக்கள் ஏதேனும் இருக்குமேயானால், அவற்றை அநுசரித்தும் அல்லது துணைச் சட்டங்கள் ஏதேனும் இருப்பின் அவற்றில் குறிக்கப் பட்டிருக்கும் ஷரத்துக்களை அநுசரித்தும், மையப் பாங்கின் நடவடிக்கைகளை இயக்குநர் குழு நிருவகித்து வரவேண்டும்.

கருவூலம் அம்மாதிரியான கட்டளைகள் பிறப்பிக்குமுன் மையப் பாங்கின் கவர்னருடன் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்ற குறிப்புக் காணப்படுகிறது; ஆனல் அவ்வாருன கட்டளைகளை ரத்து செய்யக்கூடிய அதிகாரம் கவர்னருக்குக் கொடுக்கப்படவில்லை.[1] இறுதியான பொறுப்புக்கள் கருவூலத்தையே சார்ந்தவை. இருப்பினும் 'கவர்னருடன் ஆலோசனை செய்யவேண்டும்' என்ற ஷரத்து சேர்க்கப்பட்டிருப்பதால், மையப் பாங்குத் தொழிலின் நுணுக்கம் தெரிந்த நிபுணர்களின் ஆலோசனைக்குப் பின்தான் அந்த பொறுப்புக்களைக் கருவூலம் கைக்கொள்ளும் என்பது உறுதி செய்யப்படுகின்றது. உண்மையில் கருவூலமும் மையப் பாங்கும் மிக நெருங்கிய உறவு முறையோடு செயல் பட்டுவருவதால், இந்தச் சட்டங்களில் எந்த விதமான பயனுள்ள பொருளும் இல்லை என்று நாம் முடிவு கட்டலாம்.

[1] சுருங்கக் கூறின் 'திரட்நீடில் தெருவின் மூதாட்டி (Old Lady of Threadneedle Street) இன்னும் அரசாங்கத்தின் நடவடிக்கைகளில் குற்றங் கண்டால் சுட்டிக்காட்டி திருத்தும் அதிகாரத்தைப் பெற்றிருக்கிருர்கள் என்பதே பொருளாகும்.

1946-ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட சட்டத்தின் 4-வது பெரும் பிரிவில் மிக முக்கியமான ஒரு 'புதுமை' உள்ளது. வாணிபப் பாங்குகளின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தும் வகையில் சட்டத்தின் அடிப்படையில் தலைமைப் பாங்கு பெற்றுள்ள அதிகாரங்களே அந்தப் 'புதுமை' யாகும். 1946-ஆம் ஆண்டுக்கு முன் வாணிபப் பாங்குகளின் நடவடிக்கைகளை கட்டுப் படுத்தும் வகையில் தலைமைப் பாங்கிற்கு எந்தவிதமான அதிகாரங் களும் கிடையாது; அவைகளின் நடவடிக்கைகளை ஒழுங்கு படுத்தும் நோக்கத்தோடு அவைகளைத் 'தூண்டும் கலை' (Art of persuation) யில் தலைமைப் பாங்கானது தன்னை ஈடுபடுத்த வேண்டி இருந்தது. உலகப் போரின்போது, மையப் பாங்கின் வேண்டுகோளை நிறைவேற்ருவிடில் கருவூலம் போர்க்கால விஷே அதிகாரங்களைப் பயன்படுத்தி, மையப் பாங்கின் துணைகொண்டு கட்டுப்பாட்டு விதிகளை அமுல் செய்யும் என்று வாணிபப் பாங்குகள் நன்கு அறியுமாதலால் அவை மையப் பாங்கின் வேண்டு கோள்கட்கு இணங்கியே நடந்தன. தற்சமயம் வாணிபப் பாங்கு களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதற்குத் தலைமைப் பாங்குக்குச் சட்டபூர்வமான அதிகாரங்கள் வழங்கப்பட்டுள்ளன. 1946 ஆம் ஆண்டுச் சட்டத்தின் 8-வது பெரும் பிரிவில் இது சம்பந்தமாக குறிப்பிடப் பட்டிருக்கும் விஷயங்கள் வருமாறு :

> 'பொதுமக்களுக்கு நன்மை தரக்கூடியது என்று உறுதியாக தம்பினுல் மையப் பாங்கு பாங்குகளிடமிருந்து செய்திகளைத் தருவித்துக் கொளவ துடன் பாங்குகட்குப் பரிந்துரைக்கும் (Recommendations) வகிக்க லாம். கருவூலத்தின் அதிகாரம் பெறறு மேறபடியான செய்திகளைத் தரு வித்தல் பரிந்துரைகள் வழங்கல் ஆகியவற்றை உறுதியுடன் செயல் படுத்தும் நோக்கத்தோடு, மையப் பாங்கு ஏனைய பாங்குகட்குக் கட்டளை கள் பிறப்பிக்கலாம்'

இருப்பினும்,

(a) பாங்கின் எந்த ஒரு தனிப்பட்ட வாடிக்கைக்காரரின் நடவடிக்கைகள் குறித்தும் மையப் பாங்கு எந்தவிதமான வேண்டுகோளும் விட முடியாது; பரிந்துரைகளும் செய்யக்கூடாது,

b) மையப் பாங்குக்கு இம்மாதிரியான அதிகாரங்கள் வழங்குமுன் கருவூலமா னது மேற்படி வேண்டுகோள்கள், பரிந்துரைகள் குறித்து, பாங்கர் அல் லது அவருடைய பிரதிநிதி ஆகியோர் தங்கள் கருததுக்களை வெளியிட விரும்பினுல் அவர்களுக்கு ஒரு வாய்ப்புத் தரவேண்டும்.

இவ்வாறு மையப் பாங்கின் அதிகாரங்கள் இரண்டு தடைகட்குக் கட்டுப்பட்டவையாகும். முதலாவதாக, மையப் பாங்கின் கட்டளை கள் கருவூலத்தின் ஆதரவு பெற்றவைகளாக இருக்கவேண்டும். (கருவூலத்திடம்போய் பாதிக்கப்படும் பாங்கர், தமது கருத்தை வெளியிடும் உரிமை பெற்றிருக்கிருர்). கருவூலம் நிதி அமைச்சர்

மூலம் பார்லிமெண்டுக்கு பொறுப்பாளியாகிறது என்ற உண்மையை நாம் மறந்து விடலாகாது. இரண்டாவதாக, மையப் பாங்கின் கட்டளைகள் வாணிபப் பாங்குகளின் பொதுவான நடவடிக்கைகளையோ, ஒரு குறிப்பிட்ட வகுப்பைச் சேர்ந்த நடவடிக்கைகளையோ சார்ந்தவைகளாக இருக்க வேண்டும். பாங்குகளின் ஒரு குறிப்பிட்ட வாடிக்கைக்காரரின் நடவடிக்கைகள் குறித்துக் கட்டளைகள் பிறப்பிக்கப் பாங்குக்கு அதிகாரம் கிடையாது. பரம்பரை பரம்பரையாக பாங்குக்கும் அதன் வாடிக்கைக்காரர்கட்கும் இடையே நிலவி வரும் இரகசியத் தொடர்புகளைப் பாதுகாக்கும் நோக்கத்தோடு மையப் பாங்கின்மேல் இம்மாதிரியான தடை விதிக்கப்பட்டுள்ளது. பாங்குகளின் பொதுவான நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தக் கூடிய அதிகாரம் பெற்றிருப்பதே, மையப் பாங்கு அதன் பணக் கொள்கையை நிறைவேற்றப் போதுமானதாகும். முதலாவது குறிக்கப்பட்டதடை, மையப் பாங்கு அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்டது என்ற உண்மையை வலியுறுத்தும் வகையில் அமைந்துள்ளது. 1-வது பெரும் பிரிவினைப் போலவே இதுவும் பாதிக்கப்படும் நபரின் கருத்துக்களைத் தெரிந்து கொண்டு தான் கருவூலம் கட்டளைகளைப் பிறப்பிக்கலாம் என்னும் கருத்தை உறுதிப் படுத்துகின்றது. ஏனைய பாங்குகளின்மீது மையப் பாங்கு பெற்றுள்ள அதிகாரங்கள், எந்த அளவிற்கு வரையறுக்கப்பட்டுள்ளன என்பதைவிட, எந்த அளவிற்குப் பரந்துள்ளன என்பதே குறிப்பிடத் தக்கதாகும். ஏனைய நாடுகளில் மையப் பாங்கின் அதிகாரங்கள் குறித்து மிக விளக்கமான வகையில் திட்டவட்டமான சட்டங்கள் உள்ளன; மேலும் சட்டத்தின் மூலம் ஏனையபாங்குகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரமும் மையப் பாங்கு பெற்றிருக்கிறது. குறிப்பாக, வாணிபப்பாங்குகள் ஒரு குறிப்பிட்ட விகிதம் காப்பு இருப்புக்களை (Reserves) மையப் பாங்கில் வைத்திருக்க வேண்டும், என்ற கட்டுப்பாடு ஏனைய நாடுகளில் காணக் கூடிய ஒன்றாகும். இவ்வாறு சட்டத்தின் மூலம் தரப்பட்ட அதிகாரங்கள் போக ஏனைய வகைகளில் வாணிபப் பாங்குகளை மையப் பாங்கு கட்டுப்படுத்த விரும்பினால், அந்த நாடுகளிலுள்ள மையப் பாங்குகள் (இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு 1946-ஆம் ஆண்டுக்கு முன் செய்து வந்ததுபோல) வாணிபப் பாங்குகளைத் தூண்டியோ, அவர்களுடன் ஒத்துழைத்தோ தான் காரியத்தைச் சாதிக்க முடியும். மேலும் தேவை நேர்ந்தால் அரசாங்கம் தங்கள் உதவிக்குவரும் என்ற நம்பிக்கையுடனும் மையப் பாங்குகள் ஏனைய நாடுகளில் செயல்படுகின்றன. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தற்சமயம் இதுபோன்ற தடைகள் ஏதும் இன்றிச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றது. கட்டளைகள் பிறப்பிப்பதன் மூலம் ஒரு குறிப்பிட்ட விகிதம் காப்பு இருப்பை ஏனைய

பாங்குகள் தன்னிடம் வைத்திருக்க வேண்டும் என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கானது கட்டாயப் படுத்தலாம். மேற்படி விகிதத்தை தான் விரும்பினால் தலைமைப் பாங்கு மாற்றி அமைக்கலாம், மேலும் தாங்கள் நடத்தும் பேரங்கட்கு வாணிபப் பாங்குகள் விதிக்கும் வட்டி வீதங்களையும் தலைமைப் பாங்கானது மாற்றி அமைக்கலாம். வாணிபப் பாங்குகள் ஒரு குறிப்பிட்ட தொழில் அல்லது சில குறிப்பிட்ட தொழில்களையோ ஆதரிக்க வேண்டும் என்று மையப் பாங்கு அவற்றைக் கட்டாயப் படுத்தலாம்.[1] இந்த அதிகாரங்கள் யாவற்றையும் பயன் படுத்துவதற்கான முனைப்பை (initiative) மையப் பாங்கே பெற்றிருக்கின்றது. எனினும், கருவூலத்தின் ஆதரவு இல்லாமல் மையப் பாங்கானது கட்டளைகள் பிறப்பிக்க முடியாது. கருவூலத்தின் ஆதரவு மையப் பாங்குக்கு எப்பொழுதும் உண்டு என்று வைத்துக் கொள்வோமேயானால், இங்கிலாந்தின் தலைமைப் பாங்கு பெற்றுள்ள அதிகாரங்கட்கு இணையாக உலகில் வேறு எந்த மையப் பாங்கும் அதிகாரம் பெற்றிருக்கவில்லை என்று நாம் உறுதியாகக் கூறலாம். எனினும், மையப் பாங்கு பிறப்பிக்கும் கட்டளைகட்கும், மையப் பாங்கின் கவர்னர், உதவி கவர்னர் இயக்குநர்கள் ஆகியோரை நியமிப்பது குறித்து மன்னருக்குக் கொடுக்கும் ஆலோசனைகட்கும், நிதி அமைச்சரே பார்லிமெண்டுக்கு பொறுப்பாளியாவர். இது ஒன்றே மையப் பாங்கின் அதிகாரங்களைக் கட்டுப் படுத்தும் முக்கியமான விஷயமாகும்.

சட்ட ரீதியாக மையப் பாங்கின் அதிகாரம் மிகப் பரந்தது என்பது உண்மையானாலும் மையப் பாங்கு இவற்றைப் பெரும்பாலும் பயன் படுத்துவதில்லை. வாணிபப் பாங்குகளுடன் சில சிறப்பான தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டும், அவற்றைத் தூண்டுவதன் மூலமும், மையப் பாங்கு வாணிபப் பாங்குகளின் மேல் தன்னுடைய செல்வாக்குகளைப் பயன்படுத்துகின்றது. பண மார்க்கெட்டின் பல பகுதிகட்கும், மையப் பாங்குக்கும் இடையே தொடர்புகள் வைத்துக்கொள்வதற்கு ஏதுவாக தற்சமயம் அங்கீகாரம் பெற்ற பலவழிகள் உள்ளன. உதாரணமாக தீர்வுப் பாங்குகள் (லண்டனிலுள்ள இந்தப் பாங்குகள், பெரும்பாலும் இங்கி

[1] தேசீய மயமாக்கும் சட்டத்தை நிறைவேற்றும் முன், அதுபற்றிய விவாதம் காமன்ஸ் சபையில் நடந்து கொண்டிருந்தபோது, அவ்வமயம் நிதியமைச்சராய் இருந்தோர் மையப் பாங்கின் அதிகாரங்கள் பற்றி குறிப்பிட்டவை வருமாறு: 'வேலை நிறைவு (Full Employment) ஏற்படுத்தும் நோக்கத்தோடும் ஏற்றுமதி வர்த்தகம் போன்ற முக்கியமான துறைகளை நாட்டில் விரிவாக்கும் நோக்கத்தோடும், சில தொழில்களுக்கு முக்கியத்துவம் கொடுக்கவேண்டும் என்று அரசாங்கம் எண்ணுமேயானால், அந்தச் சூழ்நிலையில் மையப் பாங்கு வாணிபப் பாங்குகளை ஒரு குறிப்பிட்ட முறையில் அவர்களது பணத்தை முதலீடு செய்யும்படி வற்புறுத்தலாம்.'

லாந்திலேயே தங்களுடைய தொழிலை உடையவை. 'ஐம்பெரும் பாங்குகளும்' (The 'Big Five') ஏனைய சில பாகங்களும் தீர்வுப் பாங்குகளாகும்.) இரண்டு குழுக்களை (Committees) ஏற்படுத்தி யுள்ளன. இவற்றில் ஒரு குழு 'தலைவர்களின் குழு' ஆகும்; மற்றொரு குழு 'பொது மானேஜர்களின் குழு' ஆகும். பொதுவாக மையப் பாங்கின் கவர்னர் அவசியம் நேரும்போது, பிரச்னை களின் தராதரங்களை யொட்டித் 'தலைவர்களின் குழு'வுடனோ அல்லது 'பொது மானேஜர்களின் குழு' உடனோ தொடர்பு கொள் வார். இந்த இரண்டு குழுக்கள் நீங்கலாக 'உண்டியல் ஏற்பகக் குழு' ஒன்றும் உண்டியல் கழிவு மார்க்கெட் குழு' ஒன்றும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவற்றின் மூலம் வேறு வகையான நேரடித் தொடர்புகள் மூலமும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு லண்டன் பண மார்க்கெட்டில் அவ்வப்போது நிகழும் நிகழ்ச்சிகளை மிகவும் உன்னிப்பாகக் கவனித்து வரமுடிகின்றது. எனவே சட்ட பூர்வமான நடவடிக்கை ஏதும் எடுக்க வேண்டிய அவசியம் ஏது மின்றியே மையப் பாங்கு நிதி நிறுவனங்களைத் தன்னுடைய வழிக்குக் கொண்டு வரமுடியும். கருவூலத்திற்கும் பணமார்க்கெட் டுக்கும் இடையே நேரடியான தொடர்புகளே கிடையாது; கருவூலம் மையப் பாங்கின் கவர்னர் மூலம்தான் மார்க்கெட்டுடன் தொடர்பு கொள்ளுகின்றது.

மையப் பாங்கின் தற்கால அமைப்பின் கீழ், செய்திக் குறிப்புக் கள் நிரம்ப உடைய ஆண்டு அறிக்கையை வெளியிடவேண்டிய கட்டாயம் அதற்கில்லை. 'தேசியமயமாக்கப்பட்ட தொழில்களில் மையப் பாங்கும் ஒன்று' என்ற வகையில், அது ஆண்டுதோறும் அறிக்கை ஒன்றினை வெளியிடுகின்றது. ஆனால் இந்த அறிக் கைகள் கவர்ச்சி ஏதும் இல்லாதனவாய், படிப்போரைச் சலிப் படையச் செய்யும் வகையில் அமைந்துள்ளன; ஏற்கனவே கிடைக் கக்கூடிய புள்ளிவிவரங்களை அப்படியே கொடுப்பதைவிட அதிக மான விஷயங்கள் எதையும் இந்த அறிக்கைகளில்காணமுடியாது. இந்த வகையில் மையப் பாங்கு ஏனைய தேசியமயமாக்கப்பட்டத் தொழில்களினின்றும் தனித்து விளங்குவதோடு, (ஏனைய தேசிய மயமாக்கப்பட்ட தொழில்கள் சில மிகவும் விரிவான ஆண்டறிக்கை களைப் பிரசுரிக்கின்றன. மேலும் இந்த ஆண்டறிக்கைகளின் பேரில் பார்லிமெண்டில் முழு அளவிலான விவாதங்களும் நடை பெறு கின்றன.) ஏனைய நாடுகளிலுள்ள மையப் பாங்குகளினின்றும் வேறுபட்டு விளங்குகின்றது. குறிப்பாக அமெரிக்கா, கனடா, ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளிலுள்ள மையப் பாங்குகள் வெளி யிடும் ஆண்டறிக்கைள், மிகுந்த செய்திகளைத் தெரிவிப்பனவாக யுள்ளன. மேலும், அவை பொருளாதாரக் கொள்கையின்

தேவைகள் பற்றி மக்களுக்கு எடுத்துரைப்பதில் மிகச் சிறந்து விளங்குகின்றன. இணையில்லாத அறிவாற்றல் பெற்றுத் திகழும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, நாட்டில் நிகழும் நிகழ்ச்சிகளைப் பற்றியும், தன்னுடைய கொள்கைகள் கருத்துக்கள் ஆகியவை பற்றியும் விளக்கம் தரும் வகையில், ஆண்டுதோறும் அறிக்கை ஒன்று வெளியிடாமல் இருக்கும் நிலை மிகவும் வருந்தத் தக்கதே யாகும். 1950 ஆம் ஆண்டு முதல் 1959 ஆம் ஆண்டு முடிய உள்ள காலவரம்பில் பாங்கு வீதத் (Bank Rate) தைப் பயன் படுத்தியும், மற்றும் ஒரு நெகழ்ச்சியான பணக் கொள்கையைச் செயல் படுத்தியும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு சில பரிசோத னைகளைச் செய்தது. மையப் பாங்கானது பூரணமான ஆண்ட றிக்கை ஒன்றினை வெளியிடாமல், பரம்பரை பரம்பரையாக மௌனம் சாதித்து வருவது தீமையானதே என்பதை வலியுறுத் தும் வகையில் இந்தப் பரிசோதனைகளின் விளைவுகள் அமைந் துள்ளன. 'மையப் பாங்கின் நடவடிக்கைகளைப்பற்றிய முழுவிவரங் களையும் உடைய ஒரு அறிக்கையாக, மையப் பாங்கின் ஆண்ட றிக்கையை மாற்றி அமைப்பது மிகவும் இன்றியமையாததாகும்.' என்று ரேட்கிளிஃப் குழுவினர் (Radcliffecommittee 1959) தங்களது பரிந்துரைகளில் மிகவும் வலியுறுத்திக் கூறியுள்ளனர் என்பதை ஈண்டு நாம் குறிப்பிட விரும்புகிறோம்.

## 3. அமெரிக்காவிலும் ஏனைய நாடுகளிலும் உள்ள மையப் பாங்குகள்

அமெரிக்க நாட்டின் மையப் பாங்கானது ஒன்றுடன் ஒன்று தொடர்புடைய 12 பாங்குகளால் ஆகிய ஒரு முறை (System) ஆகும். இந்த 12 பாங்குகளும் ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் (Federal Reserve Banks) என்று அழைக்கப்படுகின்றன. இந்த முறை 1913 ஆம் ஆண்டு நிறுவப்பெற்றது. 1913 ஆம் ஆண்டு முதல் இன்றுவரையுள்ள கால அளவில் மையப் பாங்கு பற்றிய கருத்து களில் பல மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. அவற்றிற்கேற்ப அமெரிக்க மையப் பாங்கின் அமைப்பு மாற்றி அமைக்கப் பட்டுள்ளது. ஆனால் இந்தத் திருந்திய அமைப்பு, வரலாற்றுச் சக்திகளின் அடிப்படையில் தோன்றிய பல முரண்பாடான கருத் துக்களின் கலவையாகக் காட்சி அளிக்கின்றது. அமெரிக்க மையப் பாங்கின் அமைப்பைப் பற்றித் தீர்க்கமாக அறிந்துகொள்ள விரும்பும் வாசகர்கள் வரலாற்று அடிப்படையில் அமைந்துள்ள புத்தகங்களைப் படிப்பது சாலச் சிறந்ததாகும்.[1] நம்முடைய

[1] இது குறித்த மிகச் சிறந்த புத்தகம்: வருமாறு;—E, A, Goldenweiser's American monetary policy (1951).

பொதுவான விவாதத்திற்கு ஏற்றவகையில் அமெரிக்க மையப் பாங்கு முறையைப் பற்றிய ஒரு சிறு குறிப்புமட்டும் ஈண்டு தரப் படும்.

ஐக்கிய ரிசர்வ்முறை (Federal Reserve System) 12 ஐக்கிய ரிசர்வ் பாங்குகளால் ஆகியது. ஒவ்வொரு பாங்கும் ஒரு குறிப்பிட்ட எல்லை உடையதாய், அதற்குள் தத்தம் செயல்களை ஆற்றி வருகின் றன. ரிசர்வ் பாங்குகளின் மூலதனம் அந்தந்த ரிசர்வ் பாங்கு களின் எல்லைக்குள் அமைந்திருக்கும் 'அங்க பாங்குகளால்' (member Banks) அளிக்கப்பட்டவையாகும். சட்டத்தின் கட்டாயத்தின் பேரில் அல்லது வேறுவகையான தூண்டுதல்களின் பேரில் ஐக்கிய ரிசர்வ் முறையுடன் தங்களை இணைத்துக் கொண்டிருக்கும் வாணி பப் பாங்குகளே இந்த 'அங்க பாங்குகள்' ஆகும். அநேகமாக எல்லாப் பெரிய பாங்குகளும் பெரும்பாலான சிறிய பாங்குகளும் அங்க பாங்குகளாக மாறி விட்டன.[1] ஐக்கிய ரிசர்வ் முறையின் நடவடிக்கைகளை அங்கப் பாங்குகள் ஒரு சிறிதளவு கட்டுப் படுத்து கின்றன என்று கூறலாம். எவ்வாறெனில், அந்தந்த ரிசர்வ் பாங்குகளிலுள்ள போர்டுகளில்—அதாவது பிரதேச போர்டுகளில் (Local Boards)-அங்கம் வகிக்கும் சில இயக்குநர்களைத் (Directors) தேர்ந்தெடுக்கும் அதிகாரத்தை அங்க பாங்குகள் பெற்றிருக்கின் றன. எனினும், அமெரிக்காவின் மையப் பாங்கு பற்றிய விவகாரங் கள் அனைத்தையும் கட்டுப்படுத்தக்கூடிய அதிகார ஐக்கிய ரிசர்வ் முறையின் கவர்னர்கள் போர்டினிடமே (Board of Gover- nors) உள்ளது. இங்கு நாம் கவர்னர்கள் போர்டின் அமைப்பைப் பற்றி மட்டும் தெரிந்து கொள்வது போதுமானதாகும். கவர்னர் கள போர்டில் ஏழுபேர் அங்கம் வகிக்கின்றனர். அவர்கள் எல்லோரும், ஜனாதிபதியால், செனட் சபையின் (Senate) சம்மதத் தின்பேரில் நியமிக்கப்படுகின்றனர். அவர்களது பதவிக்காலம் 14 ஆண்டுகளாகும். மேற்குறித்த ஏழுபேரில் ஒருவரைத் தலைவ ராகவும் (chairman), இன்னொருவரை உபதலைவராகவும் (Vice- chairman) செனட் சபையின் சம்மதத்தின்பேரில் ஜனாதிபதி நியமிக்கின்றார். தலைவர் உபதலைவர் ஆகியவர்களின் பதவிக் காலம் நான்கு ஆண்டுகளாகும். ஐக்கிய ரிசர்வ் முறையின் முக் கியமான நடவடிக்கைகளை நேரடியாகக் கட்டுப்படுத்தக்கூடிய அதிகாரங்கள் பெற்றிருப்பதோடு ரிசர்வ் பாங்குகளின் அதிகாரிகளை நியமிக்கும் அதிகாரத்தையும் கவர்னர்களின் போர்ட் பெற்றிருக் கின்றது. இவ்வாறு அமெரிக்க மையப் பாங்கு அரசாங்கத்தால்

[1] நாட்டிலுள்ள வாணிபப் பாங்குகளின் மொத்த டெபாசிட்டுக்களில் 86 சதவீதம் அங்கப் பாங்குகளின் பங்கு ஆகும்.

கிட்டத்தட்ட நீண்ட காலங்கட்கு நியமிக்கப்படுகின்ற நபர்களால் இயக்கப்பட்டு வருகின்றது.

ஐக்கிய ரிசர்வ பாங்குகள் தங்களுடைய இலாபத்தில் ஒரு பகுதியைக் காப்பு மூலதனமாக (Reserve capital) மாற்றித் தம்மிடம் வைத்திருக்கவேண்டும் என்று சட்டம் ஆணையிட்டுள்ளது. பங்குதாரர்கட்கு ஆண்டொன்றுக்கு ஆறு சதவீதம் குவிவு இலாப ஈவு (cumulative Dividend) செலுத்தலாம். எஞ்சியுள்ள இலாபத்தில் ஐக்கிய கருவூலத்திற்கு (Federal Treasury) கொடுக்க வேண்டிய சில்லரை செலுத்தினங்களைக் கொடுத்தபின் மீதமுள்ள இலாபத்தை ரிசர்வ் பாங்குகள் 'உபரி' யாக (Surplus) த்தங்களிடமே வைத்துக் கொள்ளுகின்றன. முன்பு தங்க விலையில் மாற்றங்கள் நேர்வதையொட்டி இலாபத்திலும் அதிகமான மாற்றங்கள் ஏற்படுவதற்கான வாய்ப்புக்கள் இருந்தன; தற்சமயம் கருவூலம் தங்கக்காப்பு (Gold-Reserve) முழுவதையும் தானே வைத்துக் கொண்டிருப்பதால் முன்பு மாதிரி இலாபங்களில் மாற்றங்கள் நேரவாய்ப்புக்கள் இல்லை என்று கூறலாம்.

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கினைப்போலவே 1945-ஆம் ஆண்டுக்கு முன் பிரான்சுத் தலைமைப் பாங்கும் (Bank of France) பங்குதாரர்களின் பாங்காகவே திகழ்ந்தது. இருப்பினும், உண்மையில் பாங்கியின் கவர்னரும் அவரது உதவியாளர்களும் அரசாங்கத்தால் நியமனம் செய்யப்பட்டு அரசாங்கம் விரும்பிய காலம்வரை பதவி வகித்தனர். இயக்குநர்களையும் வேறு முக்கியமான அதிகாரிகளையும் தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பங்குதாரர்கள் பெற்றிருந்தனர். இந்தத் தேர்தல்கள் மூலம் பாங்கின் பங்குதாரர்களான சுமார் இருநூறு குடும்பத்தினர் அதன் நிருவாகத்தில் மிக்க செல்வாக்கு உடையவராகத் திகழ்ந்தனர். சூழ்நிலைகளில் நேர்ந்த மாற்றங்களால் பாங்கின் நடவடிக்கைகளைப் பொறுத்தவரையில் 1939-ஆம் ஆண்டுக்கு முன்பே அரசாங்கத்தின் கட்டுப்பாடுகள் அதிகமாவதற்கான வாய்ப்புக்கள் உருவாகின என்று கூறலாம். எனவே அரசாங்கத்தில் பெருமளவு மாற்றங்கள் நேரும்போதெல்லாம் கவர்னர்களும் மாற்றப்படுவது சாதாரணமாக நேர்ந்து வந்தது. பிரான்சின் 'நான்காவது குடியாட்சி அமைப்பின்' (Fourth Republic) கீழ் பிரான்சின் தலைமைப் பாங்கு முறைப்படி நாட்டின் உடமையாக மாறியது.

இரண்டு உலகயுத்தங்கட்கும் இடைப்பட்ட காலத்தில் நிறுவப்பட்ட மையப் பாங்குகளில் பெரும்பாலானவை சாதாரண பங்குதாரர்களின் உடமைகளாகவே திகழ்ந்தன. வேறு சில மையப் பாங்குகள் வாணிபப் பாங்குகளின் உடமைகளாகத்

திகழ்ந்தன; அதாவது மையப் பாங்குகளின் மூலதனம் வாணிபப் பாங்குகளால் அளிக்கப்பட்டிருந்தது. இவ்வகையான மையப் பாங்குகளின் இலாப ஈவுகள் (Dividends) வரையறைகட்குக் கட்டுப் பட்டவையாகும். வரையறுக்கப்பட்ட இலாப ஈவுகள் நீங்கலாக 'உபரி' லாபம் ஏதும் மிஞ்சினால் அது அரசாங்கத்தையே சாரும்.

சில சந்தர்ப்பங்களில் மையப் பாங்கு விசேஷமான இலாபத்தை அடைய நேரிடலாம் அல்லது நஷ்டமுறை நேரலாம். அம்மாதிரி யான சந்தர்ப்பங்களில் விசேஷ இலாபம் அரசாங்கத்திற்குக் கிட்டும் வகையிலும், விசேஷ நஷ்டத்தை அரசாங்கமே ஏற்றுக் கொள்ளும் வகையிலும் அரசாங்கங்கள் தனிச்சட்டங்கள் நிறை வேற்றி இருக்கின்றன. இதற்குச் சில உதாரணங்கள் கூறமுடியும். 1931 ஆம் ஆண்டு பிரிட்டன் 'பொன் திட்டத்தை'க் (Gold Standard) கைவிட்டது. இதையொட்டி தென் ஆப்பிரிக்காவானது லண்டனில் வைத்திருந்த காப்பு இருப்பின் ஒருபகுதியின் மதிப்பு குறைந்தது. இவ்வாறு நேர்ந்த நஷ்டத்தை அரசாங்கமே ஏற்றுக் கொள்ள வகை செய்யும் நோக்கத்தோடு தென் ஆப்பிரிக்காவில் ஒரு சட்டம் நிறைவேற்றப்பட்டது. மேலும் 1930-ஆம் ஆண்டு முதல் 1939-ஆம் ஆண்டு முடிய உள்ள கால அளவில் பெரும் பாலான நாடுகள் தங்கள் தங்கக்காப்பு இருப்புக்களின் மதிப்பை அதிகமாக்கின. இவ்வாறு கிடைத்த மிகுதியான இலாபங்கள் அரசாங்கத்தையே சேரவழி செய்யும் வகையில் அந்த நாடுகளில் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன.

இரண்டு உலக யுத்தங்கட்கும் இடைப்பட்ட காலத்தில் நிறு வப்பட்ட மையப் பாங்குகள் பொதுவாக சாதாரணப் பங்குதாரர் களின் உடமைகளாகவோ அல்லது வாணிபப் பாங்குகளின் உடமைகளாகவோ அமைந்தன என்று மேலே கண்டோம். இந்தப்பொதுவான விதிக்குப் புறனடைகளாக (Exceptions) அமைந்திருந்த மூன்று மையப் பாங்குகளின் சுவைமிக்க கதைகளை இனிக்காண்போம். அவை கனடாவின் தலைமைப் பாங்கு (Bank of Canada), நியூஸ்லாந்தின் ரிசர்வ் பாங்கு Reserve Bank of New zealand) மற்றும் டியூட்ஜர்லாண்டர் பாங்கு (Bank deutscher Lander) ஆகியவையாகும். இவற்றில் முதலில் குறிக்கப்பட்டுள்ள இரண்டு பாங்குகளும் ஆரம்பத்தில் பொது மக்கள் அளித்த பங்கு மூலதனத்தின் உதவியோடு நிறுவப்பட்ட வையாகும். தீவிரமான கருத்துக்களை உடைய அரசாங்கங்கள் இந்த நாடுகளில் ஆட்சிக்கு வந்ததும் மையப் பாங்கின்மேல் தங்கள் அதிகாரத்தைப் பெருக்கிக்கொள்ள விழைந்தனர். நியூஸ் லாந்தின் அரசாங்கம் கட்டாயப்படுத்தியதால் பொதுமக்கள் தங்க ளிடமிருந்த பங்குகள் யாவற்றையும் அரசாங்கத்திடமே விற்று

விட்டனர். கனடாவில் அரசாங்கமானது புதிய மூலதனத்திற்கான பங்குகளை வெளியிடுமாறு மையப் பாங்கை வற்புறுத்தியது: அந்தப் பாங்குள் யாவற்றையும் அரசாங்கமே வாங்கியது; இந்தப் புதிய மூலதனம் மையப் பாங்கின் பழைய மூலதனத்தை விட அதிகமானதாக இருந்தது; இறுதியில் கனடா அரசாங்கம் பங்குதாரர்களிடம் இருந்த பங்குகளையும் விலைக்கு வாங்கியது. மேற்கு ஜெர்மனியில் ஒவ்வொரு மாகாணத்திலும் ஒவ்வொரு மையப் பாங்கு உள்ளது; அவற்றின் மூலதனம் அந்தந்த மாகாண அரசாங்கங்கட்குச் சொந்தமானவையாகும். எனவே மேற்கு ஜெர்மனியின் மையப் பாங்கு'மாகாண மையப் பாங்குகளின்' உடமை என்று கூறலாம்.

இயக்குநர்களை நியமனம் செய்யும்முறை நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றது. சில நாடுகளில் இயக்குநர்களை நியமனம் செய்வதில் பங்குதாரர்கள் பெருமளவு அதிகாரம் பெற்றிருக்கின்றனர். அம்மாதிரியான நிலையில் 1946-ஆம் ஆண்டுக்கு முன் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் அமைந்திருந்த முறையே பெரும்பாலும் அமையும்—அதாவது பழைய குழுவினர் புதிய உறுப்பினர்களைச் சேர்த்துக் கொண்டு நிருவாகம் செய்யும் முறையே அமையும். சில நாடுகளில் அரசாங்கம் பெருமளவிலோ அல்லது சிறிய அளவிலோ இயக்குநர்களை நியமனம் செய்யும் அதிகாரம் பெற்றிருக்கின்றது, பதவிக் காலத்தைப் பொறுத்தவரையில் 5 ஆண்டுகளும் 7 ஆண்டுகளும் மிகச்சாதாரணமானவை. இயக்குநர்கள் சில குறிப்பிட்ட வகுப்புகளைச் சேர்ந்த மக்கள் தொகைகளிலிருந்தே தேர்ந்தெடுக்கப்படல் வேண்டும் என்னும் குறிப்பை, மையப் பாங்குகளின் பட்டயங்களில் அடிக்கொருமுறை நாம் காணலாம். இத்தனை இயக்குநர்கள் வர்த்தகத் துறையில் ஈடுபட்டிருப்போரின் பிரதிநிதிகளாக இருக்கவேண்டும்; இத்தனைபேர் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளோரின் பிரதிநிதிகளாக இருக்கவேண்டும்; இத்தனைபேர் பொறிவழித்தொழிலில் (manufacturing Industries) ஈடுபட்டிருப்போரின் பிரதிநிதிகளாக இருக்கவேண்டும் என்பதுபோன்ற ஷரத்து எல்லா மையப் பாங்குகளின் பட்டயங்களிலும் மிகச் சாதாரணமாக காணக்கூடிய ஒன்றாகும். ஐக்கிய ரிசர்வ் முறையில் இயக்குநர்கள் நியமனம் பெரும்பாலும் மேற்சொன்னவாறே நடந்து வந்தது; இன்றும் பிரதேச போர்டுகளைப் (Local Boards) பொறுத்தவரையில் இம்முறை ஓரளவுக்குக் கடைப் பிடிக்கப்பட்டு வருவதை நாம் காணலாம்.[1] இயக்குநர்கள் நாட்டின் குறிப்பிட்ட பூகோளப் பகுதி

1 1951 ஆம் ஆண்டில் இந்த பிரதி நிதித்துவ முறை மீண்டும் ஆஸ்திரேலியாவில் புகுத்தப்பட்டுள்ளது.

களின் பிரதிநிதிகளாக இருக்கவேண்டும் என்ற முறையிலும் குறிப்புகள் சில நாடுகளின் மையப் பாங்குப் பட்டயங்களில் காணப்படுகின்றன. 'மையப் பாங்கு தனது திட்டத்தை நிர்ணயம் செய்யும்போது நாட்டில் பல துறைகளிலும் ஈடுபட்டிருப்போருடைய கருத்துகட்கு உரிய மதிப்புத்தர வேண்டும்' என்ற நோக்கத்தை உறுதி செய்வதே மேற்குறித்த ஷரத்துக்களின் முக்கிய குறிக்கோளாகும். இம்மாதிரி நாட்டின் பல துறைகளிலும் ஈடுபட்டிருப்போருக்குப் பிரதி நிதித்துவம் கொடுப்பதால், அந்தத் துறையின் பிரதி நிதிகள் தாங்கள் அந்தந்தத் துறையின் காவலர் என்ற எண்ணம் மீதூர, பிரதிநிதிகட்கிடையே கருத்து வேறுபாடுகட்குத் தீர்வுகாண முடியாத நிலைநேர்த்தது. ஒற்றுமையின்மைக்கான சாத்தியக் கூறுகள் தோன்றலாம் என்று சிலர் கருதுகின்றனர். மையப் பாங்கு அமைப்பில் மாற்றங்கள் செய்யும் நோக்கத்தோடு அமெரிக்காவில் இயற்றப்பட்ட சட்டங்களின் விளைவாக அங்கே பிரதிநிதித்துவமுறை படிப்படியாக குறைந்துள்ளது என்பது கண்டு குறிப்பிடத்தக்க ஒன்றாகும். பிரதிநிதித்துவ முறைப்படி அல்லது சாதாரணமாக இயக்குநர்களை தேர்ந்தெடுப்பதில் சில அநுகூலங்கள் உள்ளன. இந்த முறையின் படியும் இயக்குநர்களைப் பலதுறைகளினின்றும் தேர்ந்தெடுக்கலாம்; ஆனால் இம்மாதிரியான முறையில் தேர்ந்தெடுக்கப்படும் இயக்குநர்களின் உள்ளத்தில் நாம் இந்தத் துறைக்குத்தான் பிரதிநிதித்துவம் வகிக்கின்றோம் என்பது போன்ற எண்ணங்கள் தோன்றாது. மேற்குறித்த முதலாவது துறையில் நேரக்கூடியது போலவே, பலதுறைகளினின்றும் இயக்குநர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் தங்கள் தங்கள் துறையின் நலன்களைமட்டும் கருத்தில் கொண்டவராய் அவற்றையே வலியுறுத்த முயலலாம். இருப்பினும், இரண்டாவதாக நாம் கூறிய முறைப்படி, இயக்குநர் தேர்வு அமையுமேயாயின் ஒன்றிய கருத்து நிலவ அதிகமான வாய்ப்புக்கள் உள்ளன. சில நாடுகளில கருவூலத்தின் காரியதரிசி அவரது 'அலுவலால்' (ex officio) ஒரு இயக்குநராகத் திகழ வேண்டும் என்ற குறிப்பும் காணப்படுகின்றது; இம்மாதிரியான இயக்குநர்கள் பெரும்பாலும் வாக்குரிமை இல்லாதவர்களாகவே இருக்கின்றனர். மேற்கு ஜெர்மனியில் இயக்குநர்களை நியமனம் செய்யும் முறை தனிச்சிறப்பு வாய்ந்த ஒன்றாகும். அந்தமுறை அந்நாட்டின் மையப்பாங்கு அமைப்பின் விசேஷத் தன்மையைப் பிரதிபலிக்கும் வகையில் அமைந்துள்ளது; மேலும் அம்முறை, மையப் பாங்கானது அன்றாட நடவடிக்கைகளைப் பொறுத்த வரையில் சுதந்திரத்துடன் திகழவேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தும் வகையில் அமைந்துள்ளது.

கவர்னரும் உதவிகவர்னரும் பெரும்பாலும் அரசாங்கத்தால் நியமனம் செய்யப்படுகின்றனர். அவர்களின் பதவிக்காலம் பெரும்பாலும் 7 ஆண்டுகளாகவே அமைந்துள்ளது. அரசாங்கத்தால் நியமிக்கப்படாமல் கவர்னரைத் தேர்ந்தெடுக்கப்படும் முறை வழங்கி வந்தால் அந்தத்தேர்வு அரசாங்கத்தின் சம்மதம் பெற்றிருக்க வேண்டும். இந்திய ரிசர்வ் பாங்கின் கவர்னர் நியமனத்தைப் பொறுத்தவரையில் இதுபோன்ற ஒரு சிக்கலான முறை கையாளப்பட்டு வருகின்றது. கவர்னர், அவருடைய உதவி அதிகாரிகள் ஆகியோருக்கும், இயக்குநர்கட்கும் இடையே, அதிகாரம் பகிர்ந்து அளிக்கப்பட்டிருப்பதை யொட்டியும் மையப் பாங்குகட்கிடையே வேறுபாடுகள் நிலவுகின்றன. பொதுவாக கவர்னரே பெரும்பாலான அதிகாரங்கள் உடையவராக் இருக்கின்றூர். இயங்குநர்கள் பல்வேறு வகையான துறைகளினின்றும் தேர்ந்தெடுக்கப்படுவதால் அவர்கள் ஒன்றிய கருத்தினை உடையோராகத் திகழமுடியாத நிலை இதற்குக் காரணம் இருக்கக்கூடும். பொதுவாக நாட்டின் பல பகுதிகளினின்றும் இயக்குநர்கள் தெரிவு செய்யப்படுவதே கவர்னர் மிகுந்த அதிகாரம் பெற்றுத் திகழ்வதற்குரிய முக்கிய காரணமாக இருக்கவேண்டும். இது போன்ற பிரச்னைகளைத் தீர்க்கும் வகையில் இந்தியாவில் டெல்லி, கல்கத்தா, பம்பாய், சென்னை ஆகிய நகரங்களில் இயக்குநர்களின் பிரதேச போர்டுகள் அமைக்கப்பட்டுள்ள. ஆனால் இந்த போர்டுகளுக்கிடையே இயக்கும் குழுவால் ஒருவித பிணைப்பை ஏற்படுத்த முடியாதுபோனால், கவர்னரும் அவருடைய முழுநேர வேலையுடைய அதிகாரிகளும் அதிகமான அதிகாரங்களைப் பெற்றுத் திகழும்படி நேரலாம். கவர்னர்கள் அரசாங்கங்களால் நியமனம் செய்யப்பட்டு, இயக்குநர்கள் அரசாங்கங்களால் நியமனம் செய்யப்படாத ஒரு நிலையில், கவர்னர்கள் அதிகமான அதிகாரங்களோடு திகழ நிறைய வாய்ப்புக்கள் உள்ளன. பொதுவாக பிரிட்டன் உட்பட பெரும்பாலான நாடுகளில் கவர்னரும் அவருடைய முழுநேர வேலையுடைய அதிகாரிகளும் மிகுந்த அதிகாரங்கள் பெற்று வருவதை நாம் நன்கு உணரலாம். இவ்வாறு இவர்களின் அதிகாரங்கள் மிகுந்து வருவதால் இயக்குநர்களின் அதிகாரங்கள் குறைய ஆரம்பித்துள்ளன; இயக்குநர்கள் பெரும்பாலும் வெறும் ஆலோசகர்கள் என்ற நிலை உருவாகி வருவதை நாம் நன்கு உணரலாம்.

# 5. மைய பாங்கின் உள்நாட்டு நடவடிக்கைகள்

## 1. இங்கிலாந்துத் தலைமை பாங்கு—ஒரு மைய பாங்கு

ஏனைய நிறுவனங்கள் எவ்வெவற்றைச் செய்யலாம் எவ்வெவற்றைச் செய்யக்கூடாது என்று கட்டளையிடுவது மையப் பாங்கின் ஒரு முக்கியமான வேலையாகும். ஏனைய நிறுவனங்களை மையப் பாங்கு 'கட்டுப்பாடு' (Control) செய்யக்கூடிய வகையில் இத்தகைய வேலைகள் அமைந்துள்ளன. வேறு சில நிறுவனங்களைப் பொறுத்த வரையில் (பெரும்பாலும் அரசாங்கத்தின் பல துறைகளையும் பொறுத்த வரையில் அவை எவ்விதத்தில் நடந்து கொள்ளவேண்டும் என்பது பற்றி மையப் பாங்கு அவ்வப்போது ஆலோசனைகள் கூறிவருகின்றது. இது மையப் பாங்கின் வேறு சில வேலைகளாகும். இங்குக் குறிக்கப்பட்டுள்ள இந்த இருவகையான வேலைகளும் மிகவும் இன்றியமையாதனவாகும். இந்த இரண்டுவகையான வேலைகளும் மையப் பாங்கின் முக்கிய நடவடிக்கையாகிய மார்க்கெட்டில் செயல்படுவதைச் சார்ந்து அமைபவையாகும். மையப் பாங்கு மார்க்கெட்டில் தனது நடவடிக்கைகளைச் செயல்படுத்தும்போது அது பொதுத் துறைக்கும் (மையப் பாங்கும் பொதுத்துறையைச் சேர்ந்த ஒரு நிறுவனமேயாகும்) தனியார் துறைக்கும் இடையே ஒரு இணைப்புப் போல விளங்குகின்றது. நாட்டில் புழக்கத்தில் இருக்கும் ரொக்கப் பணம் யாவும் மையப் பாங்கின் பொறுப்புக்ளே (இவை மையப் பாங்கின் வாக்குறுதிகளைக் குறிப்பனவாகும்) யாகும். இந்த ரொக்கப் பணத்தின் அடிப்படையில்தான் நாட்டிலுள்ள பாங்கு அமைப்பு முழுவதும் சுழன்றுகொண்டிருக்கின்றது. இந்த உண்மைதான் மையப் பாங்கு மார்க்கெட்டில் திறப்படச் செயல்படும் ஆற்றலுக்கான அடிப்படையாகத் திகழுகின்றது. உள்

நாட்டிற்குள் நடைபெறும் பேரங்களைத் தீர்த்துவைக்கும் வகையில், மையப் பாங்கு ஏனையோருக்குத் தனது செலுத்தினங்களை (Payments) ரொக்கத்திலேயே கொடுக்கின்றது; அதேபோல ஏனையோரிடமிருந்தும் மையப் பாங்குக்கு ரொக்கம் கிடைக்கின்றது. இம்மாதிரிமான உள்நாட்டுப் பேரங்களை நாம் இந்த அத்தியாயத்திலேயே விவாதிப்போம். தனியார்களும் நிறுவனங்களும் வேறு நாடுகளுடன் கொண்டுள்ள வியாபாரத்தொடர்பின் அடிப்படையில் நேரும் பேரங்கள் சம்பந்தமாக, மையப் பாங்கு ஏனைய நாடுகளினின்றும் சில சமயம் ரொக்கப் பணம் பெறுகின்றது; வேறு சிலசமயம் அந்த வேற்று நாடுகட்கு மையப் பாங்கு ரொக்கம் கொடுக்க வேண்டியிருக்கின்றது. இம்மாதிரியான அயல் நாடுகள் சம்பந்தப்பட்ட அல்லது அயல்நாட்டுச்செலாவணி சம்பந்தப்பட்ட பேரங்களைப்பற்றி அடுத்த அத்தியாயத்தில் விவாதிப்போம். மேலே குறிக்கப்பட்டுள்ள இருவகைப் பேரங்களின் விளைவாலும் மையப் பாங்கிடம் ரொக்கம் வந்தடைவதோடு மையப் பாங்கிடமிருந்து ரொக்கம் வெளியேயும் செல்லுகின்றது. இவ்வாறான ரொக்க வரவுகளையும் செலவுகளையும் மாற்றி அமைப்பதன்மூலம்—எனவே பாங்குத் தொழில் முறைக்கு அடிப்படையான ரொக்கத்தை மாற்றி அமைப்பதன்மூலம்—மையப் பாங்கால் பாங்குகளின் நடவடிக்கைகளையும் ஏனையநிதி நிறுவனங்களின் நடவடிக்கைகளையும் மாற்றி அமைக்க முடிகின்றது. எனவே முதற்கண் ரொக்கத்தின் தன்மை பற்றியும், ரொக்கத்தைப் பொறுத்தவரையிலான மையப் பாங்குகளின் நடவடிக்கைகள் பற்றியும், நாம் மிக உன்னிப்பாக ஆராயவேண்டியது அவசியமாகிறது. இனி இந்த அத்தியாயம் முழுவதும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நடவடிக்கைகளை யொட்டியே மையப் பாங்குகளின் பொதுவான நடவடிக்கைகள் விளக்கப்படும். இவ்வாறு நாம் செய்வதற்குக் காரணம் இருக்கின்றது. மையப் பாங்குத் தொழிலுக்கான வாய்ப்புக்கள் யாவும் சீரிய முறையில் வளர்ச்சி பெற்றுள்ள நாடு ஒன்று இருக்கின்றது எனருல், அது இங்கிலாந்தேயாகும், பின்னுல் வரக்கூடிய அத்தியாயங்களில் அமெரிக்க நாட்டு மையப் பாங்குத் தொழிலின் சில தன்மைகள் பற்றியும் வளர்ச்சியுருத நிலையிலிருக்கும் நிதி நிறுவனங்களையுடைய வேறு நாடுகளில் செயலாற்றி வரும் மையப் பாங்குகளின் தன்மைகள் பற்றியும் நாம் விவாதிப்போம்.

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பிரசுரிக்கும் 'கணக்கு விபரப் பட்டியலில்' (Statement of Account) காணப்படும் சில முக்கியமான 'இனங்களின்' (Items) அடிப்படையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் முக்கியமான நடவடிக்கைகள் ஈண்டு விவாதிக்

கப்படும். இந்தக் 'கணக்கு விவரப்பட்டியல்' சட்ட ரீதியாக அமைந்துள்ள ஒரு நமூனு (Form) ஆகும். இதன் பெயர் 'பாங்கு விவர அறிக்கை' (Bank Return) என்பதாகும். இந்தப் 'பாங்கு விவர அறிக்கை' விந்தையான முறையில் இரண்டு 'இருப்பு நிலைக் குறிப்புக்கள்' (Balance sheets) இணைக்கப்பட்டதாக அமைந்துள்ளது. 1844-ஆம் ஆண்டு நிலவிய மையப் பாங்கு பற்றியகருத்துக்களின் அடிப்படையில் இம்மாதிரியாக இரண்டு வகையான இருப்பு நிலை குறிப்புக்கள் தயாரிக்கப்படுகின்றன. ஆனால் தற்காலத்தில் நிலவும் மையப் பாங்குத் தொழில் பற்றிய கருத்துக்கட்கும் இம்மாதிரி இரண்டு வகையான இருப்பு நிலைக்குறிப்புக்கள் பிரசுரிப்பதற்கும் இடையே எந்தவிதமான தொடர்புகளும் கிடையா. மையப் பாங்கின் 'கணக்கு விவரப் பட்டியலில்' பல 'இனங்கள்' (Items) இருக்கின்றன என்று ஏற்கனவே சொன்னேம். இவற்றுள் 'பாங்கர்களின் டெபாசிட்டுகள்' (Bankers Deposits) என்ற 'இனமும்' ஒன்ருகும். லண்டனிலுள்ள தீர்வுப் பாங்குகள் (Clearing Banks) இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் வைத்திருக்கும் இருப்புகளை (Balances) குறிப்பவையே இந்தப் பாங்குகளின் டெபாசிட்டுக்கள்' ஆகும். ஒரு தனிப்பட்ட நபர் தன்னுடைய பாங்குக் கணக்கினின்றும் பணத்தை எப்படி இன்னெருவருக்கு மாற்ற முடியுமோ, அதேபோலப் பாங்குகளும் மையப் பாங்கில் தங்களுடைய கணக்கிலுள்ள பணத்தை மற்றவர்கட்கு மாற்றமுடியும். மேலும் தனிப்பட்ட நபர் தன்னுடைய பாங்குக் கணக்கை எவ்வாறு நோட்டுக்களும் காசுகளும் (Coins) பெறுவதற்குப் பயன் படுத்த முடியுமோ அவ்வாறே பாங்குகளும் மையப் பாங்கில் உள்ள தங்களுடைய கணக்கை நோட்டுக்களும் (notes) காசுகளும் பெறுவதற்குப் பயன் படுத்தமுடியும். இரண்டாவது 'இனம்' 'பொதுத் துறைகளின் டெபாசிட்டுகள் (Public Deposits) என்பதாகும். இவை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் இருக்கும் அரசாங்க இருப்புக்களாகும். அரசாங்கத்தின் முக்கியமான பாங்கு அலுவல்கள் அனைத்தையும் மையப் பாங்கே புரிந்து வருகின்றது. மையப் பாங்கில் உள்ள அரசாங்கத்தின்கணக்கு, பொதுத் துறைக்கும் தனியார் துறைக்கும் இடையே ஒரு வாயில் போலத் திகழ்கின்றது. (பொது மக்கள் அரசாங்கத்திற்குப் பணம் கொடுக்க வேண்டியதிருந்தால் 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' என்ற இனத்திலிருந்து 'பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள்' என்ற இனத்திற்குப் பணம் மாற்றப்படுகின்றது. அதுபோல அரசாங்கம் மக்களுக்குப் பணம் கொடுக்கவேண்டியதிருந்தால் 'பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள்' என்ற இனத்தினின்றும் 'பாங்கர்களின் டெபாசிட்டுகள்' என்ற இனத்திற்குப் பணம் மாற்றப்படுகின்றது.) மூன்ருவது 'இனம்' 'ஏனைய டெபாசிட்டுக்

கள்; ஏனைய கணக்குகள்' ('other Deposits: other Accounts') என்பதாகும். இவை மேலே குறிக்கப்பட்ட வாடிக்கைக்காரர்கள் (பாங்குகளும் அரசாங்கமும்) தவிர வேறு வாடிக்கைக்காரர்கள் மையப் பாங்கிடம் வைத்திருக்கும் இருப்புக்களைக் குறிப்பனவாகும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தனிப்பட்ட நபர்களுக்கு இன்னும் சாதாரணப் பாங்கு வசதிகளைச் செய்து வருகின்றது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள இந்தத் தனிப்பட்ட நபர்களின் டெபாசிட்டுக்கள் இந்த மூன்றாவது இனமான 'ஏனைய டெபாசிட்டுக்கள்' என்ற இனத்தில் ஒரு பகுதியாகத் திகழ்கிறது. மேலும் காமன் வெல்த் நாடுகள் அயல் நாட்டுப் பாங்குகள் இவைபோன்ற சில அதிகாரபூர்வமான நிறுவனங்கள் ஆகியவற்றின் இருப்புக்களும் இந்த மூன்றாவது இனத்தில் முக்கிய இடம் வகிக்கின்றன. இவ்வகையான இருப்புக்களில் நேரக்கூடிய மாற்றங்கள் இங்கிலாந்தின் வெளிநாட்டுப் பேரங்களை யொட்டி ஓரளவுக்கு இன்றியமையாதனவாகும். இருப்பினும், இந்த இருப்புக்களில் மாற்றங்கள் நேரும் போது அவற்றிற்கு ஈடாக உள்நாட்டில் கருவூல உண்டியல்களில் பேரங்கள் நடைபெறுவதால், இவை இரண்டும் ஒன்றிற்கு ஒன்று சமமாகிவிடுகின்றன. எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் உள்நாட்டு நடவடிக்கைகளைப்பற்றி நாம் ஆராயும்போது மூன்றாவது இனமான 'ஏனைய கணக்குகள்' என்ற தலைப்பில் அடங்கியுள்ள பகுதிகளைப்பற்றி கவலைப்பட வேண்டியதில்லை.

மையப் பாங்கின் பொறுப்புக்களில் இன்னும் ஒரு முக்கியமான 'பொறுப்பு' (Liability) இனம் உள்ளது. இது மையப் பாங்கு வெளியிடும் 'நோட்டுக்களை' (Notes) யொட்டிய பொறுப்பாகும். புழக்கத்தில் நாம் காணும் 5 பவுன் 1 பவுன் 10 ஷில்லிங் நோட்டு வகைகளையும், புழக்கத்தில் நாம் காணமுடியாத பெருந்தொகைக்கான நோட்டுக்களையும் இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு வெளியிடுகின்றது. இந்த நோட்டுக்களின் வெளியீடு 1954-ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட 'நாணயங்களும் நோட்டுக்களும் பற்றிய சட்டத்திற்குப் (currency and Bank NotesAct of 1954)' கட்டுப்பட்டதாகும். தற்சமயம் (அதாவது 1959ஆம் ஆண்டு ஜூலைமாதம்) புழக்கத்தில் இருக்கும் நோட்டுக்களின் 'நம்பிக்கை வெளியீடு' (Fiduciary Issue) £ 2,150 மில்லியன்களுக்குச் சமமாகும். 'பாங்கு விவர அறிக்கை'யில் இந்த 'நம்பிக்கை வெளியீட்டு முறை'யில் வெளியிடப்பட்ட நோட்டுக்கள் 'வெளியீட்டுத் துறை' (Issue Dept.) யின் பொறுப்புக்களாகத் திகழ்கின்றன. இருப்பினும், இவற்றுள் ஒரு சிறிய பகுதி (1959-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 1 ஆம் தேதி இதன் மதிப்பு £ 27 மில்லியன்களாகும்.) பாங்கு 'விவர அறிக்கை' யில் 'பாங்குத் தொழில் துறை'

(Banktng Dept.) யினுடைய சொத்தாகத் திகழ்கின்றது. புழக்கத்தில் இருக்கும் பணத்தை அதிகரிக்கவோ, தங்களது உபயோகத்திற்காகவோ, தீர்வுப் பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கை அணுகி ரொக்கம் கேட்கும்பொழுது அவைகளின் தேவையைப் பூர்த்திசெய்யும் முகத்தான 'பாங்குத் தொழில் துறை' இதுபோல ஓரளவு நோட்டுகளைத் தன்னிடம் இருப்பாக வைத்திருக்கின்றது. 'பாங்குத் தொழில் துறை' யில் இருக்கும் நோட்டுக்கள் நீங்கலாக மீதமுள்ள நோட்டுக்கள் யாவும் மக்களிடையே புழக்கத்தில் இருக்கின்றன.

'பாங்கு விவர அறிக்கை' யில் குறிக்கப்பட்டுள்ள 'பொறுப்புக்களுக்கு' ஈடாக இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் 'சொத்துக்கள்' உள்ளன. 'வெளியீட்டுத்துறை' வைத்திருக்கும் அரசாங்கப் பத்திரங்களும், 'பாங்குத் தொழில்துறை' வைத்திருக்கும் பலரகப்பட்ட சொத்தினங்களும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் மொத்த சொத்துக்களாகும். 'பாங்குத் தொழில்துறை' வைத்திருக்கும் பலரகப்பட்ட சொத்துக்களில் சில 'அரசாங்கப் பத்திரங்கள்' (Govt. Securities) என்ற பெயருடன் வழங்குகின்றன. கருவூல உண்டியல்கள், சாதாரணப் பாங்குகளின் இருப்பு நிலைக் குறிப்பில் முதலீடுகள்' என்ற தலைப்பில் சேர்க்கப்படும் வகையைச் சேர்ந்த அரசாங்கப்பத்திரங்கள், அரசாங்கத்திற்குச் சாதாரண காலங்களில் தாற்காலிகமாகக் கொடுக்கப்படும் 'வழிவகைக் கடன்கள்' Ways and Means Advances) ஆகியவை 'அரசாங்கப் பத்திங்ரகள்' என்ற தலைப்பின் கீழுள்ள இனங்களாகும். தன்னிடமுள்ள இத்தகைய 'அரசாங்கப் பத்திரங்களின்' மொத்த மதிப்பை மையப் பாங்கு தன்னிச்சைப்படி அதிகரித்துக்கொள்ள முடியும். கருவூலத்திடமிருந்து கருவூல உண்டியல்களை வாங்குவதன் மூலமோ, உண்டியல் கழிவு மார்க்கெட்டிலிருந்து ('பின்புற வழியில்') கருவூல உண்டியல்கள் வாங்குவதன் மூலமோ மையப் பாங்கானது அவற்றின் இருப்பை அதிகரித்துக் கொள்ளமுடியும்.

சொத்துக்களின் பகுதியில் காணக்கூடிய இன்னொரு முக்கியமான இனம் 'ஏனைய பத்திரங்கள்' (other securites) என்ற தலைப்புடன் விளங்குகின்றது. இந்த 'ஏனைய பத்திரங்கள்' என்ற இனத்தை இரு கூறுகளாகப் பிரித்துள்ளனர்—ஒன்று 'கழிவுகளும் அட்வான்சுகளும்' (Discounts and Advances) என்ற பிரிவாகும்; மற்றொன்று 'பத்திரங்கள்' (securities) என்ற பிரிவாகும். 'கழிவுகளும் அட்வான்சுகளும்' என்ற பிரிவில் மூன்று இனங்கள் உள்ளன. இந்த மூன்று இனங்களின் தனித்தனியான மதிப்பு எவ்வளவு என்பது பற்றி நாம் அறிந்து கொள்ள வாய்ப்புக்கள் இல்லை. எனவே இந்த மூன்று இனங்களில் ஏதாவது ஒன்று ஒருகாலத்தில் மையப்

பாங்கிடம் இல்லாமல்கூட இருக்கலாம். முதல் இரண்டு இனங்களும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கும் புரிந்துவரும் சாதாரண பாங்குத் தொழிலின் அடிப்படையில் எழுவனவாகும். மையப் பாங்கு தனது சாதாரண வாடிக்கைக்காரர்கட்காகக் கழிவு செய்யும் உண்டியல்களின் மதிப்பைக் குறிப்பது ஓர் இனம். மையப் பாங்கு தனது சாதாரண வாடிக்கைக்காரர்கட்கு 'அதிகப் பற்று' (overdraft) மூலமோ, 'கடன்'கள் மூலமாகவோ கொடுக்கும் அட்வான்சுகள் இரண்டாவது இனமாகும். மையப் பாங்கு உண்டியல் கழிவு அகங்கட்காகக் கழிவு செய்யும் உண்டியல்களின் மதிப்பும், அவற்றிற்கு மையப் பாங்கு ஏற்பாடு செய்யும் அட்வான்சுகளும் மூன்றாவது இனமாகத் திகழ்கின்றன. இந்த மூன்றாவது இனம், முதல் இரண்டு இனங்களைப் போன்றதல்ல. அதாவது மையப் பாங்கு உண்டியல் கழிவகங்கட்குச் செய்யும் வசதிகளும் மையப் பாங்கு தனது சாதாரண வாடிக்கைக்காரர்கட்குச் செய்யும் வசதிகளும் வேறுபட்டவைகளாகும். 'கடைநிலைக்கடன் ஈவோன்' (Lender of last resort) என்ற முறையில் மையப் பாங்கு உண்டியல் கழிவகங்கட்குச் செய்துவரும் வசதிகளையே இந்த மூன்றாவது இனம் குறிப்பிடுகின்றது [1] இவ்வாறு நாம் 'சாதாரண வாடிக்கைக்காரர்கள்' 'உண்டியல் கழிவகங்கள்' என்று பாகுபாடு செய்வதின் அடிப்படையில் 'உண்டியல் கழிவகங்கள்' எந்தவகையிலும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கு வாடிக்கைக்காரர்கள் அல்லர் என்று முடிவுகட்டி விடக்கூடாது. உண்மையில் உண்டியல் கழிவகங்கள், மையப்பாங்கிடம் கட்டாயம் கணக்குவைத்திருக்க வேண்டிய நிலையில் உள்ளன. இங்கிலாத்துத் தலைமைப் பாங்குக்கும் அதனுடைய சாதாரண வாடிக்கைக்காரர்கட்கும் (தனி நபர்கள் நிதி நிறுவனங்களல்லாத ஏனைய நிறுவனங்கள் ஆகியவர்களே இவர்கள். இவர்கட்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ஒரு சாதாரண வாணிபப் பாங்கு செய்யும் பணிகளைச் செய்துவருகின்றது) இடையே நிலவும் தொடர்பைவிட இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிற்கும், உண்டியல் கழிவுமார்க்கெட்டிற்கும் இடையே நிலவும் தொடர்பு முற்றிலும் வேறுபட்டு விளங்குவதோடு மிகவும் இன்றியமையாததாகவும் திகழ்கின்றது.

'ஏனைய பத்திரங்கள்' என்ற பொதுவான இனத்தின் இரண்டாவது பகுதி 'பத்திரங்கள்' என்ற பெயர் பெறுகின்றது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் சுய முயற்சியிலேயே அதற்குக் கிடைத்துள்ள வேறு அரசாங்கங்களின் உண்டியல்களும் பத்திரங்களும்

[1] அதிகாரபூர்வமான பாங்கு வீதத்தில் (BankRate) வழங்கப்படும் வசதிகள்.

இந்த இரண்டாவது பகுதியில் இடம் பெறுகின்றன. மையப் பாங்கு உண்டியல் கழிவகங்களிடமிருந்து விலைக்கு வாங்கியுள்ள உண்டியல்கள் பல நிறைந்த 'கட்டுக்களின்'[1] (Parcels) மதிப்பும், இந்த இரண்டாவது பகுதியில் இடம் பெருகின்றது. உண்டியல் கழிவகங்கள் கையாளும் உண்டியல்களில் கருவூல உண்டியல்கள் நீங்கலாக உள்ள ஏனைய பல வகையான உண்டியல்கள் பல அடங்கியதே இந்தக் 'கட்டுக்கள்' ஆகும்.[1] இரண்டு உலக யுத்தங்கட்கும் இடைப்பட்ட காலத்தில் நாட்டின் தொழில் வளர்ச்சியிலும் புனருத்தாரணத்திலும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, (பெரும் பங்கு வகித்தபோது அது வாங்கிய பங்குகள்), டிபென்ஜர்கள் (Debentures) ஆகியவற்றின் இருப்புக்களும், 'பத்திரங்கள்' என்ற தலைப்புடைய இனத்தின் கீழ்வருவனவாம்.

## 2. இங்கிலாந்து தலைமைப் பாங்கே ரொக்கத்திற்கு மூலாதாரம்

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பொறுப்புக்கள், சொத்துக்கள் ஆகியவற்றின் முக்கியத்துவமானது பாங்கு முறைக்கு ஆதாரமாக அமைந்திருக்கும் ரொக்கத்தோடு இவற்றிற்குள்ள சம்பந்தத்தைப் பொறுத்ததாகும். வாணிபப் பாங்குகளின்மேல் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு செலுத்தக்கூடிய அதிகாரங்கள் கீழே தரப்பட்டிருக்கும் இரண்டு உண்மைகளின் அடிப்படையில் அமைந்துள்ளன: (1) தங்களுடைய முக்கியமான நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்தும்போது வாணிபப் பாங்குகள் தங்களிடமுள்ள ரொக்கக் காப்புகளுக்கு (CashReserves) முக்கியத்துவம் கொடுக்கின்றன. (2) இங்கிலாந்துத் தலைமைப் பாங்கே ரொக்கத்திற்கு மூலாதாரமாகும். முதலாவது உண்மையைப் பற்றிய விளக்கம் ஏற்கனவே இரண்டாவது அத்தியாயத்தில் தரப்பட்டுள்ளது; மேலும் இது குறித்த விவாதத்தை ஒன்பதாம அத்தியாயத்தில் காணலாம். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு நாட்டிலுள்ள ரொக்க அளிப்பு நிலையை எவ்வாறு ஒழுங்கு செய்ய முடிகின்றது? என்பது பற்றி விவாதிக்கும்முன், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கே ரொக்கத்திற்கு மூலாதாரம் என்பதை நாம் விளக்க வேண்டுவது அவசியமாகும். இவ்வாறான விளக்கத்தை நான்கு படிகளாக அமைத்துக்

[1] இம்மாதிரியான ஏற்பாடு நீண்ட காலமாக நடைமுறையில் இருந்து வருகின்றது. உண்டியல் ஏற்பகங்களும் இலண்டனிலுள்ள வேறு ஏற்பாளர்களும் ஈடுபடும் உண்டியல் பேரங்கள் குறித்த நடவடிக்கைகளின் தரத்தை இவ்வாறு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கண்காணித்து வர முடிகின்றது.

கொள்ளலாம். முதலாவதாக, ரொக்கம் என்றால் என்ன? என்பது பற்றிய விளக்கம் காண முயலவேண்டும். மேலும் ரொக்கத்தை நோட்டுக்கள் (Notes) என்றும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கினிடமுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' என்றும், நாம் வகைப்படுத்திக் காட்டவேண்டும். இரண்டாவதாக, மேற்குறித்த இரண்டு வகையான ரொக்கங்கட்கும் இடையேயுள்ள தொடர்புகளைப் பற்றிக் குறிப்பிடவேண்டும். இத்துடன் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ஒரு பாங்கராகவும் (ஏனைய பாங்குகள் அதன் வாடிக்கைக்காரர்களாகவும்) திகழ்கின்றது என்றும், விளக்கப்படவேண்டும். (மூன்றாவதாக நோட்டு வெளியீடு எவ்வாறு ஒழுங்கு செய்யப்படுகின்றது என்று நாம் அறியவேண்டும்). இறுதியாக, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு எவ்வாறு ஒரு 'கடைநிலைக் கடன் ஈவோனாகத்' திகழ்கின்றது என்பது விளக்கப்படவேண்டும். இவற்றையெல்லாம் அறிந்தபின் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் ரொக்கத்தின் அளிப்பு நிலையை எவ்வாறு கட்டுப்படுத்த முடிகின்றது என்றும், அவ்வாறு கட்டுப்படுத்த முடிவதால் மையப் பாங்கு என்னென்ன அதிகாரங்கள் பெற்றுத் திகழ முடிகின்றது என்பதும் தெரியவரும்.

ரொக்கம் என்பதுதான் என்ன, என்ற வினா எழுகின்றது. இதற்கான விடையை இனிக் காண்போம். ரொக்கம் இருவகைப்படும். எல்லோராலும் தடையின்றி ஏற்றுக்கொள்ளப்படும் வகையில் அமைந்துள்ள பணம் முதல் வகையைச் சேர்ந்த ரொக்கமாகும். ஓரளவுக்கே மக்களால் விரும்பி ஏற்றுக்கொள்ளப்படும் வகையில் அமைந்துள்ள பாங்கு டெபாசிட்டுக்களை மக்கள் இந்த முதல் வகையைச் சேர்ந்த ரொக்கமாக மாற்ற விரும்பலாம். டெபாசிட்டுக்களை முதல் வகையைச் சேர்ந்த ரொக்கமாக மாற்றக்கூடிய பாங்குகளின் ஆற்றலையே நாம் பாங்குகளின் நீர்மைத் தன்மை என்று கூறுகிறோம். வாணிபப் பாங்குகள் எவ்வெவற்றை முதல் வகையைச் சேர்ந்த ரொக்கத்திற்குச் சமமான நீர்மைத் தன்மை (Liquid) உடையவை என்று கருதுகின்றனவோ, அவை யாவும் இரண்டாவது வகையைச் சேர்ந்த ரொக்கமாகும். மேற்குறித்த, ரொக்கத்தைப் பற்றிய விளக்கங்கள், மிகவும் கடினமானவையாகத் தோன்றலாம். எனினும் தற்காலச் சூழ்நிலையைப் பற்றிய பொதுவான வாசமாக நமது விளக்கங்கள் அமைந்துள்ளன என்று நாம் நம்புகிறோம் இந்தப் பொதுவான விளக்கங்களின் அடிப்படையில் நாம் இங்கிலாந்தில் நிலவும் நிலைகளை விளக்கப் புகுந்தால், நாம் மேலே கொடுத்துள்ள விளக்கங்கள் மிகவும் எளிதாகத் தோன்றும். சட்டச் செலாவணிகளான (Legal Tender Money) வெள்ளிக் காசுகள், செப்புக் காசுகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு வெளி

யிட்டுள்ள நோட்டுகள் யாவும் முதல் வகையைச் சேர்ந்த ரொக்கங்களாகும். இவை எல்லோராலும் தடையின்றி ஏற்றுக்கொள்ளப்படும் பணமாகும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' இரண்டாம் வகையைச் சேர்ந்த ரொக்கமாகும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தன்னிடமுள்ள டெபாசிட்டுக்களை நோட்டுக்களாக எப்பொழுதும் மாற்றக் கூடிய ஆற்றல் பெற்றிருக்கின்றது. இதனால் தலைமுறை தலைமுறையாக மக்கள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் மிகுந்த நம்பிக்கை வைத்துள்ளனர். எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நோட்டுக்கள் எவ்வளவு பயனுள்ளவையோ அந்த அளவுக்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள தங்களுடைய டெபாசிட்டுக்களும் பயனுள்ளவை என்று பாங்குகள் கருதுகின்றன.

மேற்குறித்த விளக்கங்களின் அடிப்படையில் நாம் ரொக்கத்தை வேறொரு விதமாகவும் பாகுபாடு செய்யலாம். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் விருப்பப்படி நாணயச்சாலை (Mint) யால் உருவாக்கப்படும் வெள்ளிக் காசுகளும் செப்புக் காசுகளும் ஒரு வகையின. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் சில பொறுப்புக்கள் இரண்டாம் வகையின. பாங்கு நோட்டுக்களும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களும்' இந்த இரண்டாம் வகையைச் சேர்ந்தவையாகும். இந்த இரு வகைகளிலும் முதலாம வகையைச் சேர்ந்தவை முக்கியத்துவம் ஏதும் இல்லாதவையாகும். ஏனெனில் இவற்றின் தொகை மிகக் குறைந்த அளவிலேயே மாறுபடுகின்றது. இவை பண வகைகளிலேயே பருமனானவையாக இருப்பதால், பாங்குகளும் பொது மக்களும் இவற்றை மிகக் குறைந்த அளவிலேயே வைத்திருக்க விரும்புகின்றனர். எனவே வெள்ளிக்காசுகள், செப்புக் காசுகள் ஆகியவற்றின் அளிப்பு நிலையை மாற்றி அமைத்து, பணத்தின் மொத்த அளிப்பு நிலையில் குறிப்பிடத்தக்க மாற்றங்களை ஏற்படுத்த முடியாது. ஆனால் இரண்டாம் வகையைச் சேர்ந்த பாங்கு நோட்டுக்கள், பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் ஆகியவற்றைப் பொறுத்தவரையில் நிலைமை முற்றிலும் மாறானதாகும். இவற்றின் அளிப்பு நிலை அதிகமாக்கப்பட்டால், பணத்தின் மொத்த அளிப்பு நிலையில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்படும். வாணிபப் பாங்குகள் சொத்துக்களை வாங்கும் பொழுதும், அதை யொட்டிப் பாங்கு டெபாசிட்டுக்களை உருவாக்கும் பொழுதும், தங்களிடமுள்ள ரொக்கக் காப்பு இருப்பைக் கவனத்தில் வைத்துக் கொள்ளுகின்றன. பாங்குகளிடமுள்ள நோட்டுக்கள் உயர்வதாலோ, பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் இருப்பாக வைத்திருக்கும் ரொக்கம் அதிகமாவதாலோ பாங்கு டெபாசிட்டுக்களின்

மொத்த மதிப்பு அதிகமாகின்றது. இவை குறைந்தால் டெபாசிட்டுக்களின் மொத்த மதிப்பும் குறைகின்றது. எனவே, பாங்குகளின் கல்லாப் பணத்தையும் (Till Money) தன்னிடமுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களையும்' இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் கட்டுப்படுத்த முடியுமேயானால், நாட்டிலுள்ள மொத்த பாங்கு டெபாசிட்டுக்களையும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் கட்டுப்படுத்த முடியும்.[1]

இன்றைய பாங்கு முறையைப் பொறுத்தவரையில், பாங்கு நோட்டுக்கள் வெள்ளிக் காசுகள், செப்புக் காசுகள் ஆகியவற்றைப் போல சிறிய சிறிய செலுத்தினங்களுக்கே பயன்படுகின்றன என்று நாம் கொள்ளலாம். தன்னுடைய நடவடிக்கைகளால் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு வாணிபப் பாங்குகள் வைத்திருக்கும் நோட்டுக்களை நேரடியாக ஒரு போதும் அதிகப்படுத்துவதில்லை. பொது மக்கள் தங்கள் பாங்குகளினின்றும் பாங்கு டெபாசிட்டுக்களை மாற்றி நோட்டுக்கள் பெறுகின்றனர். அல்லது பாங்குகளிடம் நோட்டுக்களைக் கொடுத்துத் தாங்கள் பாங்குகளில் வைத்திருக்கும் டெபாசிட்டுக்களை அதிகமாக்கிக் கொள்கின்றனர். இதே முறையில் வாணிபப் பாங்குகள் தங்கள் விருப்பம்போல இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள தங்களது டெபாசிட்டுக்களை நோட்டுக்களாக மாற்றுகின்றன. அல்லது நோட்டுக்களை மையப் பாங்கிடம் கொடுத்துவிட்டு தாங்கள் மையப் பாங்கில் வைத்திருக்கும் டெபாசிட்டுக்களை அதிகமாக்கிக் கொள்கின்றன. வாணிபப் பாங்குகள் விரும்பும் வகையில் தன்னிடமிருந்து அவை நோட்டுக்களை எடுத்துக் கொள்ளவும் தன்னிடம் நோட்டுக்களை அவை செலுத்தவும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அனுமதிக்கின்றது. வாணிபப் பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து நோட்டுக்களை எடுக்கும்போது, 'பாங்கு விவர அறிக்கை' (Bank Return) யில் 'பொறுப்புக்கள் பக்கம்' (Liabilities Side) 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' என்ற இனத்தின் மதிப்பு குறைவதையும், சொத்துக்கள் பக்கம் (Assets Side) 'நோட்டுக்கள்' என்ற இனத்தின் மதிப்புக் குறைவதையும் நாம் காணலாம். இதே போல வாணிபப் பாங்குகள் இங்கிலாந்துத் தலைமை பாங்கிடம் நோட்டுக்களைச் செலுத்தும்போது, 'பாங்குவிவர அறிக்கை'யில் 'பொறுப்புக்கள் பக்கம்' 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' என்ற இனத்தின் மதிப்புக் கூடுவதையும் 'சொத்துக்கள் பக்கம்' 'நோட்டுக்கள் என்ற இனத்தின் மதிப்புக் கூடுவதையும் நாம் காண முடியும்.

[1] இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நடவடிக்கைகட்கும் பாங்கு டெபாசிட்டுகளின் மொத்த அளவுக்கும் இடையேயுள்ள தொடர்புகளைப் பற்றி மேலும் அறிய விரும்புபவர் அத்தியாயம் ஒன்பதினைப் பார்க்கவும்.

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் தாங்கள் வைத்திருக்கும் டெபாசிட்டுகள் பாங்குகட்கு எப்படி ஒரு ஆதாயமற்ற சொத்தாக விளங்குகின்றதோ, அவ்வாறே பாங்கு நோட்டுக்களும் பாங்குகட்கு ஆதாயமற்ற சொத்துக்களேயாகும். பொது மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்தல், போதுமான அளவு 'கல்லாப்பணம்' (Till money) வைத்துக் கொள்ளுதல், ஆகியவற்றிற்காக மட்டுமே பாங்குகள் நோட்டுக்களை விரும்புகின்றன. எனவே வழக்கமாகப் பாங்குகள் தங்களுடைய டெபாசிட் பொறுப்புகளில் சுமார் 4 சதவீதத்தையே தங்களிடம் நோட்டுக்களாக வைத்துக் கொள்கின்றன. எனவே இம்மாதிரியான நிலையில் பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலிருந்து அதிகமான நோட்டுக்கள் எடுத்தால், பொது மக்கள் புழக்கத்திற்கு அதிகமான நோட்டுக்களை விரும்புகின்றனர் என்பதையே அது குறிக்கும் அல்லது பாங்குகளின் டெபாசிட் பொறுப்புக்கள் உயர்ந்துவிட்டன என்பதைக் குறிக்கும். தாற்காலிகமாகப் பொது மக்களின் தேவைகளில் எவ்விதமான மாற்றங்களும் இல்லை என்று வைத்துக் கொள்வோம். அவ்வாறுயின் பாங்குகளின் டெபாசிட் பொறுப்புக்கள், சொத்துக்களைச் சேகரிப்பதற்குத் பாங்குகள் எடுக்கும் நடவடிக்கைகளால் தீர்மானிக்கப்படும். தங்களுடைய ரொக்கக்காப்பு இருப்புக்கள் அதிகரித்தால்தான் பாங்குகளால் தங்களுடைய சொத்துக்களை அதிகரிக்க முடியும்; எனவே டெபாசிட்டுக்களையும் அதிகரிக்க முடியும். பாங்குகளின் டெபாசிட்டுகள் உயரும்போது அவற்றின் கையிலுள்ள நோட்டுக்களின் இருப்பு 4% விகிதத்தைவிடக் குறைந்துவிடும். இதனுல் அவற்றின் ரொக்கக் காப்பு இருப்பில் மற்ெருரு பகுதி, அதாவது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் உள்ள, பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' மொத்த அளவினைத் தீர்மானித்து, அந்த அளவுக்கு ஏற்றுற்போல நோட்டுக்களின் அளிப்பு நிலையைக் கட்டுப்படுத்த முடியுமேயானுல், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் வாணிபப் பாங்குகளின் பொதுவான நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த முடியும்.

இவ்வாறன்றி வாணிபப் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புக்களில் ஏற்படும் மாற்றங்கள் பொது மக்களின் நடவடிக்கைகளால் ஏற்படுகின்றன என்று வைத்துக் கொள்வோம். இதனுல் அடுத்தடுத்து நேரக்கூடிய நிகழ்ச்சிகள் மேற்கூறிய உதாரணத்தில் நேர்ந்ததைவிட ஓரளவுக்கு மாறுபட்டனவாகவே இருக்கும். இருப்பினும் இதனுல் விளையக்கூடிய மாற்றம் மேலே கூறிய உதாரணத்தில் நேர்ந்த மாற்றத்தையொத்தே அமைந்திருக்கும். உதாரணமாக பொது மக்கள் புழக்கத்திற்கு அதிகமான நோட்டுக்களை விரும்புகின்றனர் என்று வைத்துக் கொள்வோம். அவ்வாருயின் அவர்கள் உடனே பாங்குகளிடமிருந்து நோட்டுக்களைப்

பெற முயற்சிப்பர். இதன் விளைவாகப் பாங்குகளிடமுள்ள பொது மக்களின் டெபாசிட்டுக்கள் குறையும்; பொது மக்களிடம் உள்ள நோட்டுக்களின் இருப்பு அதிகமாகும். வாணிபப் பாங்குகளின் நிலைமை இதற்கு முற்றிலும் மாறுபட்டதாக அமைந்திருக்கும். அதாவது வாணிபப் பாங்குகளின் டெபாசிட்டுப் பொறுப்புக்கள் குறைந்துவிடும். எனவே அதே அளவுக்கு வாணிபப் பாங்குகளின் ரொக்கக காப்பு இருப்புக்களும் குறைந்துவிடும். இதனுல் ரொக்க விகிதம் (Cash Ratio) வழக்கமான நிலையினின்றும் குறைந்துவிடும். அதாவது டெபாசிட்டுக்களுக்கான நோட்டுக்களின் விகிதம் முன்பு இருந்ததைவிடக் குறைவாக இருக்கும். வாணிபப் பாங்குகளின் டெபாசிட் பொறுப்புக்கள் குறைந்தாலும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள அவைகளின் டெபாசிட்டுக்களில் மாற்றங்கள் ஏதும் நேராதிருப்பதால், ரொக்க விகிதத் தாழ்வு ஓரளவுக்கு ஈடு செய்யப் படும். இவ்வாருன நிலையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்காதிருக்கும் பட்சத்தில் வாணிபப் பாங்குகள் தங்கள் ரொக்கக் காப்பு இருப்புக்களைச் சரி செய்யும் நோக்கத்துடன் தங்களுடைய சொத்துக்களைக் குறைத் துக் கொள்ள முனையும். சொத்துக்கள் குறைக்கப் படுவதை யொட்டி டெபாசிட்டுக்கள் மேலும் குறையும். தங்களிடம் தற் போதுள்ள மொத்த ரொக்கத்திற்கு ஏற்றவாறு வாணிபப் பாங்கு கள் சொத்துக்களையும் அதனுல் டெபாசிட்டுக்களையும் குறைக்க நேரிடும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கினின்றும், பாங்குகள் சிறிது நோட்டுக்கள் எடுக்க வேண்டிய நிலை நேரிடும். இதனுல் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் இருப்பிலுள்ள 'பாங்கர்கள் டெபாசிட்டுக்கள்' என்ற பொறுப்பு இனமும், 'நோட்டுக்கள்' என்ற சொத்து இனமும் ஒன்று போலக் குறையும். இவ்வாறு இறுதியில் வாணிபப் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புக்கள் போதுமான அளவுக்கு உயர்ந்து சாதாரண நிலையை மீண்டும் அடைகின்றன. நாம் மேலே குறிப்பிட்டுள்ள இந்த உதாரணத்தில் அடுத்தடுத்து நேருகின்ற நிகழ்ச்சிகளைக் கீழே ஒரு கணித உதாரணத்தின் அடிப்படையில் விஷயச் சுருக்க அட்டவணைகள் மூலம் விளக்கியுள்ளோம் :

## நிலை I

(எல்லா எண்களும் £ மில்லியன்களில் கொடுக்கப்பட்டுள்ளன)

**இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பாங்குத் தொழில் துறை**

| | | | |
|---|---|---|---|
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் | ... 240 | வெளியீடு செய்யப்படாத நோட்டுக்கள் | ... 70 |
| ஏனைய பொறுப்புக்கள் | ... 130 | ஏனைய சொத்துக்கள் | ... 300 |
| | 370 | | 370 |

வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | ... 6,000 | இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கம் ... | 240 |
| | | கல்லாவிலுள்ள ரொக்கம் ... | 240 |
| | | சொத்துக்கள் ... | 5,520 |
| | 6,000 | | 6,000 |

மொத்த ரொக்கத்திற்கும் டெபாசிட்டுக்களுக்கும் உள்ள விகிதம் ... சுமார் 8%

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கத்திற்கும் டெபாசிட்டுகட்கும் உள்ள விகிதம் } .. சுமார் 4%

கல்லாவிலுள்ள ரொக்கத்திற்கும் டெபாசிட்டுகட்கும் உள்ள விகிதம் } ... சுமார் 4%

## நிலை II

(பொது மக்கள் புழக்கத்திற்காக £ 50 மில்லியன்கள் மதிப்புள்ள நோட்டுக்களை எடுத்தபின்)

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பாங்குத் தொழில் துறை

| | | | |
|---|---|---|---|
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் ... | 240 | வெளியீடு செய்யப்படாத நோட்டுக்கள் ... | 70 |
| ஏனைய பொறுப்புக்கள் ... | 130 | ஏனைய சொத்துக்கள் ... | 300 |
| | 370 | | 370 |

வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | ... 5,950 | இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கம் ... | 240 |
| | | கல்லாவிலுள்ள ரொக்கம் ... | 190 |
| | | சொத்துக்கள் ... | 5,520 |
| | 5,950 | | 5,950 |

மொத்த ரொக்கத்திற்கும் டெபாசிட்டுகட்கும் உள்ள விகிதம் ... சுமார் 7%

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கத்திற்கும் டெபாசிட்டுகட்கும் உள்ள விகிதம் } ... சுமார் 4%

கல்லாவிலுள்ள ரொக்கத்திற்கும் டெபாசிட்டுக்கட்கும் உள்ள விகிதம் } ... சுமார் 3%

## நிலை III

(வாணிபப் பாங்குகள் ரொக்கக் காப்பு இருப்பு நிலையைச் சரி செய்த பின் உள்ள நிலை)

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பாங்குத் தொழில் துறை

| | | | |
|---|---|---|---|
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் | ... 215 | வெளியீடு செய்யப்படாத நோட்டுக்கள் | ... 45 |
| ஏனைய பொறுப்புக்கள் | ... 130 | ஏனைய சொத்துக்கள் | ... 300 |
| | 345 | | 345 |

### வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | ... 5,375 | இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் உள்ள ரொக்கம் | ... 215 |
| | | கல்லாவிலுள்ள ரொக்கம் | ... 215 |
| | | சொத்துக்கள் | ... 4,945 |
| | 5,375 | | 5,375 |

மொத்த ரொக்கத்திற்கும் டெபாசிட்டுகட்கும் உள்ள விகிதம் ... சுமார் 8%

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கத்திற்கும் டெபாசிட்டுகட்கும் உள்ள விகிதம் } ... சுமார் 4%

கல்லாவிலுள்ள ரொக்கத்திற்கும் டெபாசிட்டுகட்கும் உள்ள விகிதம் } ... சுமார் 4%

வாணிபப் பாங்குகள், நிலை IIIஐ அடையவேண்டிய கட்டாயம் நேராது போகலாம். தங்களிடமிருந்து மக்கள் எடுத்துச் சென்றுள்ள நோட்டுக்கள் யாவும் திரும்பவும் தங்களிடமே வந்து சேர்ந்து விடும் என்று வாணிபப் பாங்குகள் உறுதியாக நம்பினால், அவை தங்களுடைய சொத்துக்களை விற்க முயற்சிக்கமாட்டா. பாங்குகள் எதிர்பார்த்த வண்ணமே பொது மக்கள் நோட்டுக்களை பாங்குகளிடமே திரும்பச் செலுத்தி விட்டால் வாணிபப் பாங்குகள் நாம் மேலே குறித்துள்ள நிலை I ஐ மீண்டும் அடைந்துவிடும். ஒவ்வொரு நாளும் பாங்குகள் தங்கள் தொழிலினை ஆரம்பிக்கும் போது இந்த நிலை ஓரளவுக்கு ஏற்படும். ஒவ்வொரு நாளும் தங்கள் தேவைகளைப் பூர்த்தி செய்யக் காலையில் மக்கள் பாங்குகளிடமிருந்து நோட்டுக்களை எடுக்கின்றனர். அவர்கள் இந்தப் பணத்தைச் செலவிடுவதால் நோட்டுக்கள் யாவும் வர்த்தகர்களிடம் போய்ச் சேருகின்றன வர்த்தகர்களின் காஷியர்கள் பகல் சுமார் 3 மணி அளவில் பாங்குகளிடம் நோட்டுக்களைத் திரும்பச் செலுத்தி விடுகின்றனர். இவ்வாறு செலுத்தப்படாமல்

ஏதாவது நோட்டுக்கள் இருந்தால் அவை வர்த்தகர்களின் இரும்புப் பெட்டிகளில் பத்திரமாக இருக்கும். இவையும் மறுநாள் காலை பாங்குகளிடமே செலுத்தப்படும். எனவே ஒவ்வொரு நாளும் பெரும்பாலும் பாங்குகள் $10\frac{1}{2}$ மணி அளவில் நிலை I ஐ அடைகின்றன என்றும், பிற்பகல் $2\frac{1}{2}$ மணி வரை நிலை IIஐ நோக்கிப் போய்க் கொண்டிருக்கின்றன என்றும், மறுநாள் காலை பாங்குகள் திறக்கப்பட்ட சிறிது நேரத்தில் அவை மீண்டும் நிலை I ஐயே அடைகின்றன என்றும் நாம் கருத இடம் உள்ளது. வாரத்தின் இறுதி நாட்களிலும் இது போன்ற நிலையே ஏற்படுகின்றது. வெள்ளிக்கிழமை பிற்பகல் தொழிலதிபர்களின் காஷியர்கள் (Cashiers) பாங்கர்களிடமிருந்து நோட்டுக்களை எடுத்து வருகின்றனர். அன்றையதினம் மாலையிலோ, சனிக்கிழமையன்று காலையிலோ தொழிலாளர்கட்கு கூலி (Wage) கொடுப்பதற்காக அந்த நோட்டுக்கள் பயன்படுத்தப்படும். ஊதியம் பெற்ற தொழிலாளர்கள் சனிக்கிழமை அந்தப் பணத்தை வந்தவர்களிடமிருந்து பொருட்கள் வாங்குவதற்குப் பயன்படுத்துவர்; திங்கட்கிழமை தாங்கள் குடியிருக்கும் வீட்டிற்கு வாடகை கொடுப்பர். இவ்வாறு நோட்டுக்கள் வர்த்தகர்களிடமும் வாடகை வசூலிப்பவர்களிடமும் போய்ச் சேருகின்றன. இவர்கள் இருவரும் திங்கட்கிழமை காலையிலேயே பாங்குகளிடம் நோட்டுகளைத் திரும்பச் செலுத்திவிடுவர். இவ்வாறு நோட்டுக்கள் மீண்டும் பாங்குகளையே வந்து அடைகின்றன. வெள்ளிக்கிழமை காலையிலும் செவ்வாய்க் கிழமை காலையிலும் பாங்குகள் நிலை I ஐ அடைந்திருக்கும். ஆனால் சனிக்கிழமை பாங்குகள் யாவும் நிலை II ஐயே அடைந்திருக்கும். இவ்வாறு பாங்குகள் நிலை I ஐ அடைவதும், பின் நிலை II ஐ அடைவது மீண்டும் நேர்ந்து கொண்டேயிருக்கும்.

கடந்த சில பத்திகளில் ' நோட்டுக்கள் ' என்ற பதத்தை நாம் பாங்கு நோட்டுக்களைக் குறிப்பதற்கு மட்டுமின்றி வெள்ளிக் காசுகளையும் செப்புக் காசுகளையும் குறிப்பதற்காகப் பயன்படுத்தியுள்ளோம் என்ற உண்மையைப் புத்தி கூர்மையுள்ள வாசகர்கள் அறிந்திருப்பர் என்று நாம் எண்ணுகிறோம். மேலே கொடுத்துள்ள கணித உதாரணத்தைப் பொறுத்த வரையிலும்கூட இது உண்மையாகும். வெள்ளிக் காசுகளும், செப்புக் காசுகளும் மொத்தப் பணத்தில் மிகக் குறைந்த பங்கே பெறுகின்றன. எனவே அவை மிகச் சிறிய அளவிலேயே பயன்படுகின்றன. வாணிபப் பாங்குகளின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகப் போதுமான அளவு நோட்டுக்களும், காசுகளும் தன்னிடம் எப்பொழுதும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கானது வைத்திருக்கின்றது. இதுபற்றி விவரமாக 'நோட்டு வெளியீடு' பற்றி விவாதிக்கும்போது அறிய

வருவோம். பாங்குகள் நோட்டுக்களையும், காசுகளையும் ஒரே மாதிரியானவை என்றே கருதுகின்றன. நோட்டுக்களும் சிறிய செலுத்தினங்கட்கும் பயன்படக் கூடிய சாதனங்களே என்பது பாங்குகளின் கருத்தாகும்.

நிலை III ல் குறிக்கப்பட்டுள்ள மாற்றங்களைச் செய்யும் முன், தங்களுடைய ரொக்க விகிதம் குறைந்திருப்பது தாற்காலிகமாக நிலவக்கூடிய ஒன்று அல்லது அப்படியே நிலைத்துவிடக் கூடிய ஒன்று என்று பாங்குகள் தீர்மானிக்க வேண்டும். நிலை III ல் குறிக்கப்பட்டிருக்கும் மாற்றங்களைச் செய்ய வேண்டிய அவசியம் நேராமலேயே பாங்குகளால் ரொக்க விகிதத்தைப் பழைய அளவுக்கு உயர்த்தக் கூடிய வாய்ப்புக்கள் தோன்றலாம். பாங்குகளிடமிருந்து தங்கட்குத் தேவைப்படும் அதிகமான ரொக்கத்தை மக்கள் எடுத்த பின்பும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு எத்தவிதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை என்றே இதுகாறும் நாம் வைத்துக் கொண்டோம். ஆனல் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தன்னிடமுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை' நிலைமைக்கு ஏற்றவாறு அதிகரிக்க முடியுமேயாயின், பாங்குகள் தங்களுடைய ரொக்க விகிதத்தைக் காத்துக்கொள்ள முடியும். இவ்வாறு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு செய்தால், வாணிபப் பாங்குகளின் ரொக்கத்தின் தொகுதி வழக்கத்திற்கு மாருக மாறியிருக்கும்—அதாவது கல்லாப் பணம் (Till money) குறைவாகயிருக்கும். எனினும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள் தங்களுடைய டெபாசிட்டுக்களை பயன்படுத்துவதன் மூலம் தங்களுடைய கல்லாப் பணத்தை போதுமான அளவுக்கு அதிகமாக்கிக் கொள்ள முடியும். இவ்வாறு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை' அதிகரித்தபின் ஏற்படும் நிலை, கீழே குறிக்கப்பட்டுள்ளது :

## நிலை III A

(இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு அதிக ரொக்கத்திற்கு ஏற்பாடு செய்த பின் நிலவும் நிலை)

(£ மில்லியன்களில்)

**இங்கிலாந்துத் தலைமைப்பாங்கின் பாங்குத் தொழில் துறை**

| | | | |
|---|---|---|---|
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் | ...238 | வெளியீடு செய்யம்படாத நோட்டுக்கள் | — 22 |
| ஏனைய பொறுப்புக்கள் | ...130 | ஏனைய சொத்துக்கள் | ...346 |
| | 368 | | 368 |

வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | ...5950 | இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் உள்ள ரொக்கம் | 238 |
| | | கல்லாவிலுள்ள ரொக்கம் | ... 238 |
| | | சொத்துக்கள் | ...5,474 |
| | 5,950 | | 5,950 |

(ரொக்க விகிதங்கள்-நிலை I நிலை III ஆகியவற்றில் இருந்தது போலவே அமையும்)

நிலை I லிருந்து, நிலை III A ஐப் பாங்குகள் எந்தவிதமான மாற்றமும் இன்றி அடைந்துவிட்டன என்று கொள்வதற்கில்லை. நிலை I-ல் இருந்ததைவிட நிலை III A-ல் பாங்குகளிடமுள்ள டெபாசிட்டுகள் £ 50 மில்லியன்கள் குறைவாக உள்ளன. மக்கள் பாங்குகளிடமிருந்து தங்கள் தேவையைப் பூர்த்தி செய்ய எடுத்துச் சென்ற நோட்டுக்களின் மதிப்பே இந்த £ 50 மில்லியன்களாகும். எனினும், நாட்டிலுள்ள எல்லா வகைகளையும் சேர்ந்த பணத்தின் மொத்த அளிப்பு நிலை சிறிதளவேனும் மாறவில்லை என்பதை நாம் உணரவேண்டும்—பாங்குகளிடம் உள்ள டெபாசிட்டுக்கள் என்ற ஒருவகைப் பணம் £ 50 மில்லியன்கள் குறைவுற்றபோதிலும், நோட்டுக்கள் என்ற இன்னொருவகைப் பணம் மக்களிடத்தே £ 50 மில்லியன்கள் அதிகமாகியுள்ளன. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இம்மாதிரியான நிலையை ஒருவேளை விரும்பலாம். எனினும் வாணிபப் பாங்குகளின் சொத்துகள் எவ்விதத்திலும் பாதிக்கப்படாத நிலையையே இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு மிகவும் விரும்பும். வாணிபப் பாங்குகளின் சொத்துக்கள் பாதிக்கப்படாதிருக்க வேண்டுமானால், 'பாங்கர்களின் டெபாசிட்டுகள்' ஆரம்பத்தில் இருந்ததுபோல £ 240 மில்லியன்களாக உயர்த்தப்படவேண்டும்; இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு மேலும் £ 2 மில்லியன்கள் பெறுமானமுள்ள நோட்டுக்களை வாணிபப் பாங்குகளிடம் கொடுக்க வேண்டும். இவ்வாறு செய்தால், ஆரம்ப நிலையான நிலை I.ஐ வாணிபப்பாங்குகள் அடைந்துவிடும். ஆனால் இங்கிலாந்துத் தலைமைப்பாங்கின் நிலை, ஆரம்ப நிலையினின்றும் சிறிது வேறுபட்டிருக்கும். இந்தப் புதிய நிலை கீழ்க்கண்டவாறு அமைந்திருக்கும்:

## நிலை III B

(£ மில்லியன்களில்)

இங்கிலாந்துத் தலைமைப்பாங்கின் பாங்குத் தொழில் துறை

| | | | |
|---|---|---|---|
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் | ...240 | வெளியீடு செய்யப் படாத நோட்டுக்கள் | ... 20 |
| ஏனைய பொறுப்புகள் | .. 130 | ஏனைய சொத்துக்கள் | ...350 |
| | 370 | | 370 |

வாணிபப் பாங்குகளின் நிலை—நிலை I ல் இருந்ததுபோல அமையும்.

இதுகாறும் பொதுமக்கள் பாங்குகளிடமிருந்து நோட்டுக்களை எடுப்பதனால் நேரக்கூடிய விளைவுகளைப்பற்றி ஆராய்ந்தோம். பொதுமக்கள் பாங்குகளிடம் நோட்டுக்களைச் செலுத்தும்போது நேரக்கூடிய விளைவுகளைப்பற்றி அறிய விரும்பும் வாசகர்கள் மேலே குறித்துள்ள அட்டவணைகளில் தேவைப்படும் மாற்றங்களைச் செய்து தாங்களாகவே புதிய அட்டவணைகளை அமைத்துக் கொண்டு விளைவுகளை எளிதில் அறிந்துகொள்ளலாம்.

மக்கள் பாங்குகளிடம் பணம் செலுத்துவது, பாங்குகளிடமிருந்து பணம் எடுப்பது ஆகிய செயல்களின் அடிப்படையான நோக்கம் எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம். இது குறித்து நாம் கவலை கொள்ளவேண்டியதில்லை. ஆனால் ஒரு உண்மையை மட்டும் நாம் மறந்துவிடலாகாது. இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு தன்னிடமுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை'த் தன்னிச்சைப் படி மாற்றி அமைக்க முடியுமேயானால், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் நிலைமையைக் கட்டுப்படுத்த முடியும். 'பொதுமக்களின் ரொக்கத் தேவை எந்த அளவினதாக இருந்தாலும், பாங்குகளின் டெபாசிட்டுப் பொறுப்புக்களின் மொத்த அளவு இங்கிலாந்துத் தலைமைப்பாங்கிலுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுகளை'யே பொறுத்ததாகும்' — என்ற உண்மையைச் சுட்டிக்காட்டும் எண்ணத்தோடுதான் நாம் மேலே குறிப்பிட்டுள்ள உதாரணங்கள் யாவும் அமைந்துள்ளன. எனவே, இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு தன்னிடமுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை' எங்ஙனம் கட்டுப்படுத்த முடியும், என்ற வினா எழுகின்றது.

மேலே நாம் குறித்துள்ள நிலை I-க்கும், நிலை III-B க்கும் இடையே ஒரு குறிப்பிட்ட வேறுபாடு உள்ளது. இந்த வேறுபாடு நாம் மேலே எழுப்பியுள்ள வினாவிற்கான பதிலைக் குறிப்பாக உணர்த்தி நிற்பதை வாசகர்கள் ஒருவேளை அறிந்துகொண்டிருக்கலாம். நிலை I-ல் இருந்தது போலவே நிலை III-B யிலும் வாணிபப் பாங்குகள் மாற்றம் ஏதுமின்றி அமைந்திருக்கின்றன. இங்கிலாந்துத் தலைமைப்பாங்கின் 'பொறுப்புக்களைப்' பொறுத்த வரையில் அவை நிலை I-ல் இருந்ததைப் போலவே நிலை III-B யிலும் அமைந்துள்ளன. ஆனால் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் சொத்துக்களின் தொகுதியில் மாற்றம் நேராதிருக்கின்றது என்பதை நாம் உணரவேண்டும். நிலை I-ல் இருந்ததைவிட நிலை III B-ல் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள நோட்டுக்கள் £ 50 மில்லியன்கள் குறைந்துள்ளன. அதாவது, பொதுமக்களின் மிகுதியான தேவையைப் பூர்த்தி செய்வதற்காக, வாணிபப் பாங்குகள் மூலம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலிருந்து £ 50 மில்லியன்கள் மதிப்

புள்ள நோட்டுக்கள் வெளியே சென்றுள்ளன. இதற்கு ஈடாக 'ஏனைய சொத்துக்கள்' என்ற இனத்தின் மதிப்பு, நிலை I-ல் இருந்ததைவிட நிலை III B-ல் £ 50 மில்லியன்கள் அதிகமாகியுள்ளது. அதாவது, பொதுமக்களின் மிகுதியான ரொக்கத் தேவையைப் பூர்த்தி செய்யும் நோக்கத்தோடு இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு தன்னிடமுள்ள சொத்துக்களின் மதிப்பை £ 50 மில்லியன்கள் அதிகப்படுத்தியுள்ளன. 'ஏனைய சொத்துக்கள்' 'என்ற தலைப்பின் கீழ்' அரசாங்கப் பத்திரங்களும் வேறு இரண்டு வகையான பத்திரங்களும் இடம் பெறுகின்றன. எனவே, மார்க்கெட்டில் பத்திரங்களை விலைக்கு வாங்குவதன் மூலம் இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு மக்களுக்குத் தேவைப்படும் மிகுதியான ரொக்கத்திற்கு ஏற்பாடு செய்ய முடியும். இம்மாதிரியான மாற்றம், கீழ்க் கண்ட முறையில் வாணிபப் பாங்குகளின் மூலம் ஏற்படலாம். உதாரணமாக வாணிபப் பாங்குகள் பண மார்க்கெட்டிற்குத் தாங்கள் கொடுத்துள்ள கடன்களைத் திருப்பிச் செலுத்தும்படி உத்தரவிடலாம்—வேறு எங்கும் கடன் பெற வாய்ப்புக்கள் இல்லாததால் உண்டியல் கழிவகங்கள், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் உதவியை நாடலாம்—எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் இருப்பு நிலைக்குறிப்பில் 'கழிவுகளும் அட்வான்சுகளும்' என்ற இனம் அதிகமாகும். இவ்வாறன்றி, 'மார்க்கெட்டில் இதுபோன்ற இக்கட்டான நிலை ஏதும் நேரக்கூடாது, ஆனால் அதே சமயம் பொதுமக்கள் விரும்பும் மிகுதியான ரொக்கத்தை எவ்வித சிரமும் இன்றி வாணிபப்பாங்குகள் கொடுக்கக்கூடிய நிலையில் இருக்க வேண்டும்,' என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு எண்ணுவதாக வைத்துக்கொள்வோம். இந்த எண்ணம் நிறைவேற வேண்டுமாயின் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அரசாங்கப் பத்திரங்களை விலைக்கு வாங்க வேண்டும். அரசாங்கப் பத்திரங்களை, இம்மாதிரியான நோக்கத்தோடு, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு விலைக்கு வாங்கும்போது, அது 'வெளி மார்க்கெட் நடவடிக்கைகளில்' (open market operations) ஈடுபட்டிருக்கின்றது என்று சொல்லப்படும். 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை'க் குறைக்கும் நோக்கத்தோடு இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு பத்திரங்களை விற்பனை செய்வதையும், நாம், 'வெளி மார்க்கெட் நடவடிக்கைகள்' என்றே குறிப்பிடவேண்டும், இம்மாதிரியான நடவடிக்கைகளில்[1] ஈடுபடும் முன் எந்த விலையில் கருவூல உண்டியல்களை வாங்குவது அல்லது விற்பது உசிதமானது என்பதைத் தீர்மானிக்க வேண்டியது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கேயாகும். விலையை நிர்ணயம் செய்த பின், தான் தீர்மானித்துள்ள மார்க்கெட் வீதம் பாராமல் இருப்ப

[1] இந்த நடவடிக்கைகளைப்பற்றிய விளக்கத்தை இதே அத்தியாயத்தில் நான்காம் உட்பிரிவில் காணலாம்.

தற்கு எவ்வளவு ரொக்கம் தேவைப்படுமோ அதை வெளியிடும் நோக்கத்தோடு இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு மார்க்கெட்டில் கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்கும். இதே போல, தான் தீர்மானித்துள்ள மார்க்கெட் வீதம் (market rate) மாறுமல் இருப்பதற்கு வசதியாக எவ்வளவு ரொக்கம் அகற்றப்படவேண்டுமோ, அதை அகற்றும் நோக்கத்தோடு இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு கருவூல உண்டியல்களை மார்க்கெட்டில் விற்கும்.

தங்களுடைய டெபாசிட்டுகட்கு ஈடாகப் பலவகையான சொத்துக்களையும் பெறுவதன் மூலம் வாணிபப் பாங்குகளால் தங்களுடைய டெபாசிட் பொறுப்புக்களைக் கட்டுப்படுத்த முடிகின்றது. இதே முறையில் இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு தன்னுடைய சொத்துக்களின் அளவுகளைக் கட்டுப்படுத்துவதன் மூலம் தன்னுடைய பொறுப்புக்களின் அளவுகளைக் கட்டுப்படுத்துகின்றது. தங்களை நாடிவரும் வாடிக்கைக்காரருக்கு 'அதிகப்பற்று' (overdraft) வசதிகள் செய்து கொடுக்கும்போது, வாடிக்கைக்காரர்கள் தங்களிடம் நோட்டுக்களைச் செலுத்தும்போதும், வாணிபப் பாங்குகள் தங்களுடைய சொத்துக்களை ஒரு இனத்திலிருந்து இன்னொரு இனமாக மாற்றிக்கொள்ள முடிகின்றது. இதே முறையில் எந்தவிதமான நடவடிக்கைகளையும் தானுகவே எடுக்காதபோதுங்கூட இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் சொத்துக்களில் சிலசமயம் மாற்றம் நேருகின்றது. உதாரணமாக உண்டியலைக் கழிவு செய்யும் எண்ணத்துடன் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கை ஒருவர் அணுகும்போது, தலைமைப்பாங்கு தனது சொத்துக்களை ஒரு இனத்தினின்றும் இன்னொரு இனமாக மாற்றிக் கொள்ள முடிகின்றது. பாங்குகள் தாமாக எந்தவிதமான நடவடிக்கைகளும் எடுக்காதபோது அவற்றின் சொத்துக்கள் மாற்றமுறலாம், என்று இதுகாறும் கண்டோம். இதற்கு மாறுபட்ட நிலையிலும்—அதாவது பாங்குகளின் நடவடிக்கைகளாலும்—அவற்றின் சொத்துக்கள் மாற்றமுறலாம். பங்கு மார்க்கெட்டில் அரசாங்கப் பத்திரங்களை விலைக்கு வாங்கும் பொழுதும், தங்களுடைய புதிய அலுவலகங்கட்குத் தேவைப்படும் கட்டிடங்களை வாங்கும் பொழுதும், வாணிபப் பாங்குகளின் சொத்துக்கள் ஓர் இனத்தினின்றும் இன்னொரு இனமாக மாறுகின்றன. இதேபோல மார்க்கெட்டில் பத்திரங்களையோ, வேறுவகையான சொத்துக்களையோ இங்கிலாத்துத் தலைமைப்பாங்கு விலைக்கு வாங்கும்பொழுது, அதனுடைய சொத்துக்கள் ஓர் இனத்தினின்றும் இன்னொரு இனமாக மாறுகின்றன.

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தன்னுடைய சொத்துக்களைக் கட்டுப்படுத்தும்போது தன்னுடைய பொறுப்புக்களையும்

கட்டுப்படுத்த முடிகின்றது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுகள்' என்ற இனம் ஒன்று மட்டும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் 'பொறுப்பு' என்று எண்ணிவிடலாகாது. இது தலைமைப் பாங்குக்கு வேறு 'பொறுப்புக்களும்' உள்ளன. அவை 'பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள்' ('ஏனைய கணக்குகள்') என்னும் இனங்களாகும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் மொத்த சொத்துக்களில் எந்த விதமான மாற்றங்களும் நேராமல் (எனவே மொத்த பொறுப்புக்களிலும் மாற்றங்கள் ஏற்படாது) அதனிடம் உள்ள அரசாங்கத்தின் இருப்புக்கள் அதிகமாகும் பட்சத்தில், இங்கிலாந்துந் தலைமைப் பாங்கிடம் உள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுகள் குறைந்திருக்க வேண்டும். அரசாங்கத்தினிடம் செலுத்தும் ஒவ்வொரு செலுத்தினமும் தாமாகவே இவற்றிற்கு மாறுபட்ட விளைவுகளை ஏற்படுத்தும். அதேபோல் அரசாங்கத்தால் செலுத்தப்படும் ஒவ்வொரு செலுத்தினமும் தாமாகவே இவற்றிற்கு மாறுபட்ட விளைவுகளை ஏற்படுத்தும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் சொத்துக்களில் மாற்றங்கள் ஏதும் நேராதபோது, அரசாங்கத்திடம் செலுத்தப்படும் செலுத்தினங்கள், அரசாங்கம் செலுத்தும் செலுத்தினங்களை விட அதிகமாக இருக்கும் பட்சத்தில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள்' என்ற இனம் அதிகமாகும்; ஆனால் அதே சமயம் 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' என்ற இனம் குறையும். இவ்வாறு பாங்கர்களின் ரொக்க விகிதம் குறையும். இம்மாதிரியான மாற்றங்கள் நிலையானவை என்று பாங்குகள் உணர்ந்தால், அவை தங்களுடைய இருப்பு நிலைக்குறிப்பில் பொருத்தமான மாற்றங்களைச் செய்யும். இதன் விளைவாக இறுதியில் ஓரளவுக்குப் பாங்குச் செலாவணி குறைய நேரிடும். 'ஏனைய டெபாசிட்டுகள்' என்ற இனத்தில் நேரும் மாற்றங்களும், 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களில்' நேரும் மாற்றங்களைப் போலவே அமையும். இருப்பினும் இந்த, ஏனைய டெபாசிட்டுக்களில்' நேரும் மாற்றங்கள் பொதுவாகப் பெருமளவில் ஏற்படுவதில்லை; மேலும் இந்த மாற்றங்கள் நீடித்திருப்பதும் இல்லை. தன்னுடைய பொறுப்புக்களின் தொகுதியில் மாற்றங்கள் நேருவதை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு உணருகின்றது என்றும், இவ்விதமான மாற்றங்களால் வாணிபப் பாங்குகளின் நடவடிக்கைகள் எவ்விதத்திலும் பாதிக்கப்படக் கூடாதென்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு விரும்புகின்றது என்றும், வைத்துக்கொள்வோம். அவ்வாறாயின் 'பொதுத் துறைகளின் டெபாசிட்டுக்களில்'நேர்ந்துள்ள மாற்றங்கள் ஏற்படுவதைத் தடுக்கும் வகையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, தன்னுடைய மொத்தச் சொத்துக்களை (எனவே அதனுடைய மொத்தப் பொறுப்

புக்களை மாற்றி அமைக்க வேண்டியிருக்கும்; உதாரணமாக, மக்கள் அதிகமான வரிச் செலுத்தினங்களைச் செலுத்துவதால் 'பொதுத் துறைகளின் டெபாசிட்டுகள்' உயரும்போது, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தன்னுடைய மொத்த சொத்துக்களின் அளவினை அதிகரிக்கின்றது என்றும் 'பொதுத்துறை டெபாசிட்டுக்கள்' எந்த அளவுக்கு உயர்ந்தனவோ அதே அளவுக்கு தனது மொத்தப் பொறுப்புக்களையும் அதிகரிக்கின்றது என்றும் வைத்துக்கொண்டால், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' எத்த விதத்திலும் பாதிக்கப்படமாட்டாது. எனவே, வாணிபப் பாங்குகள் தங்களுடைய சொத்துககளில் எந்த விதமான மாற்றங்களையும் செய்யவேண்டிய அவசியம் ஏற்படாது. இதுகாறும் கூறியவற்றினின்றும் நமக்கு ஒரு உண்மை புலப்படுகின்றது—'இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தனனுடைய மொத்த சொத்துக்களை மாற்றி அமைக்கக் கூடிய ஆற்றல் பெற்றிருக்குமேயானல், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் 'பாங்கர்களின் டெபாசிட்டுககளை'ப் பூரணமாகக் கட்டுப்படுத்த முடியும். 'பாங்கர்களின் பொறுப்புக்கள்' தவிர இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிற்கு வேறுவகையான பொறுப்புக்களும் உள்ளன என்பதை நாம் அறிவோம். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இவ்வாறு வேறுவகையான பொறுப்புக்களையும் உடையது என்பது உண்மையேயாயினும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை'க் கட்டுப் படுத்தும்போது இந்த வேறுவகையான பொறுப்புக்கள் தலைமைப் பாங்கின் ஆற்றலுக்கு இடையூருக அமையவில்லை, என்ற உண்மையினை நாம் அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும்.

இதுகாறும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு வாணிபப் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புக்களை எவ்வாறு கட்டுப் படுத்த முடிகின்றது என்பது குறித்துப் பொதுவான முறையில் விளக்கம் கண்டோம். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு எவ்வாறு தன்னிடமுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களைக் க்ட்டுப் படுத்த முடியும். என்ற வினவிற்கு நாம் அளித்துள்ள பதிலும் பொதுவான முறையிலேயே அமைந்துள்ளது. அதாவது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தன்னுடைய மொத்த சொத்துக்களை அதிகரித்தும், குறைத்தும், தன்னிடமுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை'க் கட்டுப்படுத்த முடியும். இந்தப் பொதுவான விடையோடு அடைத்துவிடாமல் நாம் இது குறித்த விரிவான விளக்கங்களை இதே அத்தியாயத்தில் 4-ஆவது 'உட் பிரி!விலும் 3-ஆம் அத்தியாயத்திலும் கொடுத்துள்ளோம். இவற்றை விரிவாக விளக்கப் புகும் முன், இதுகாறும் நமது விவாதத்தில் பட்டும் படாமலும்

சொல்லப்பட்ட ஒரு முக்கியயமான செய்தி குறித்து விரிவாக ஆராய வேண்டும். தன்னிடம் ஒரு குறிப்பிட்ட அளவு 'பாங்கர் களின் டெபாசிட்டுக்கள்' இருப்பதை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு விரும்பினுல், அதற்கு ஆதரவாக ஒரு குறிப்பிட்ட அளவு நோட்டுக்களை வெளியிடக் கூடிய ஆற்றலை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பெற்றிருக்க வேண்டும். அதாவது தன்னிட முள்ள பாங்கர்களின் டெபாசிட்டுக்களின் அடிப்படையில் பாங்கு கட்குக் கல்லாவில் வைத்துக் கொள்வதற்கு எவ்வளவு நோட் டுக்கள் தேவைப்படுமோ அவற்றையும், புழக்கத்திற்குப் பொது மக்கள் எவ்வளவு நோட்டுக்களை விரும்புவார்களோ அவற்றையும் வெளியிடக் கூடிய ஆற்றலை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பெற்றிருக்க வேண்டும். நாம் மேலே கொடுத்துள்ள 'விஷயச் சுருக்க அட்டவணை' உதாரணங்களில், தன்னிடத்தே இங்கிலாந் துத் தலைமைப் பாங்கு போதுமான அளவுக்கு நோட்டுக்கள் வைத் திருக்கின்றது என்று வைத்துக்கொண்டோம். எனவே, உடனடி யாக நோட்டுக்களின் அளிப்பு நிலை எவ்வாறு ஒழுங்கு செய்யப் படுகின்றது என்பது குறித்து நாம் ஆராய வேண்டியது அவசிய மாகின்றது.

## 3. நோட்டு வெளியீடு ஒழுங்கு செய்யப்படும் விதம்

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள தங்களுடைய டெபாசிட்டுக்கள் அதிகமாகும் பொழுது, பாங்குகள் தங்களது மொத்தச் சொத்துக்களை அதிகரிக்க எண்ணுகின்றன. இதைத் தொடர்ந்து மொத்த பாங்கு டெபாசிட்டுக்களும் அதிகமாகின்றன. இவ்வாறு மொத்தச் சொத்துக்களும் மொத்த டெபாசிட்டுக்களும் அதிகரிக்கும்போது, பாங்குகள் தங்களிடமுள்ள கல்லாப் பணத் திற்கும், தங்களின் மொத்த டெபாசிட் பொறுப்புக்களுக்கும் இடையே உள்ள விகிதம் மாறுவதை விரும்பாவிட்டால், அவை தங்களிடமுள்ள கல்லாப் பணத்தை அதிகரிக்க வேண்டும், கல்லா பணத்தை அதிகரிக்க வேண்டுமானுல் பாங்குகள் இங்கி லாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள தங்களுடைய டெபாசிட்டுக் களில் ஒரு பகுதியை நோட்டுக்களாக மாற்றவேண்டும். (இதற்கு மாறுபட்ட நிலையில்—அதாவது டெபாசிட்டுக்கள் குறையும் போது-பாங்குகள் தங்களிடமுள்ள நோட்டுக்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் கொடுத்து அவற்றை 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களாக' மாற்றும்.) பாங்குகளிடமுள்ள டெபா சிட்டுக்கள் அதிகமாகும்போது நாட்டில் விலை உயர்வு ஏற்படுவ தோடு பொருளாதார நடவடிக்கைகளும் அதிகமாகும். எனவே பொதுமக்கள் தங்களிடையே புழக்கத்திற்கு அதிகமான அளவு

நோட்டுக்களை விரும்புவர். இதற்காகப் பாங்குகளை அணுகுவர். இதனால் பாங்குகள் தங்களுடைய கல்லாவிலுள்ள நோட்டுக்களை இன்னும் அதிகரிக்க வேண்டிய கட்டாய நிலை ஏற்படுகின்றது. எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தன்னிடமுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை' ஒழுங்கு செய்யும்போது—அதாவது டெபாசிட்டுக்களின் அளவினை மாற்றி அமைக்கும்போது—தன்னுடைய நடவடிக்கையினால் பொது மக்களுக்கு மேலும் அதிகமான நோட்டுக்கள் தேவைப்படும் என்பதை உணரவேண்டியது அவசியமாகும். எனவே கோட்பாடு (Theoretically) ரீதியாக நோக்குங்கால், இங்கிலாந்துத் தலைமை பாங்கு, நோட்டுக்களை வெளியிட எத்தகைய ஆற்றல் பெற்றிருக்கின்றதோ, அந்த ஆற்றலின் அடிப்படையில் தான் அது சாதாரணப் பாங்கு டெபாசிட்டுக்களைக் கட்டுப்படுத்த முடியும்.

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலிருந்து நோட்டுக்கள் வெளியே செல்வது, நோட்டுக்கள் அதனிடம் வந்துசேர்வது, ஆகிய நிகழ்ச்சிகளைப் பொறுத்த வரையில் என்னென்ன விஷயங்கள் உண்மையோ அவையாயும், வெள்ளிக்காசுகளும் செப்புக் காசுகளும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கினின்றும் வெளியே செல்வது தலைமைப் பாங்கினிடம் வந்து சேருவது ஆகிய நிகழ்ச்சிகளைப் பொறுத்தவரையிலும் கூட உண்மையாகும். 'பாங்கர்களின் டெபாசிட்டுகட்கு' ஈடாக இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு எப்பொழுதும் வெள்ளிக்காசுகளும், செப்புக்காசுகளும் வழங்குவதற்குத் தயாராக இருக்கவேண்டும். மையப் பாங்கு இவ்வாறு செய்ய முடிந்தால்தான், பொது மக்கள் தாங்கள் வாணிபப் பாங்குகளிடம் வைத்திருக்கும் டெபாசிட்டுகட்கு ஈடாக வெள்ளிக்காசுகளும் செப்புக்காசுகளும் பெறவிரும்பும்போது வாணிபப் பாங்குகளால் அவர்கட்கு அவற்றை வழங்கமுடியும். எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பாங்கர்களின் டெபாசிட்டுக்களை ஒழுங்கு படுத்திதான் எதிர்பார்க்கும் விளைவுகளை ஏற்படுத்த அதனிடம் எப்பொழுதும் போதுமான அளவுக்கு வெள்ளிக் காசுகளும் செப்புக் காசுகளும் இருக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். இதற்கு ஏற்றாற்போல் இங்கிலாந்தில் துணைக்காசுகள் (Subsidiary-Coins) தயாரிக்கும் முறை அமைந்துள்ளது. (பொருளாதார நிபுணர்கள் வெள்ளிக் காசுகளையும், செப்புக் காசுகளையும் துணைக்காசுகள் என்றே வருணிக்கின்றனர்.) அரசாங்கத் துறையில் ஒன்றான ராஜீய நாணயச்சாலை (Royal mint) காசுகளை உற்பத்திச் செய்கிறது. இந்த நாணயச்சாலை உலோக மார்க்கெட்டில் உலோகங்களை விலைக்கு வாங்கிக் கூலியாட்களையும் ஏனைய சாதனங்களையும் வேலையில் ஈடுபடச்செய்து,

உலோகங்களைக் காசுகளாக மாற்றுகிறது. உலோகங்களை வாங்குவதற்குச் செலவாகும் பணம் தொழிலாளர்கள் ஏனைய சாதனங்கள் ஆகியவற்றை வேலையில் ஈடுபடுத்தும்போது செலவாகும் பணம் ஆகியவற்றை (ஏனைய அரசாங்கத் துறைகளைப் போலவே) இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள்'ல் இருந்து நாணயச்சாலை பெறுகின்றது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு விரும்பும்போதெல்லாம் நாணயச் சாலை புதிய நாணயங்களை அதற்கு வழங்க முடிகின்றது. தன்னிடமுள்ள வெள்ளி நாணயங்களின் காப்பு இருப்பு குறைந்து வருவதை (வாணிபப் பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து வெள்ளிக் காசுகளை அதிகமாக எடுப்பதால் இவ்வாறு நேரும்) இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு உணரும் போதெல்லாம் தனக்குத் தேவைப்படும் காசுகளை நாணயச் சாலையினின்றும் விலைக்கு வாங்கிக் கொள்ளலாம். இவ்வாறு வாங்கும் காசுகளின் மதிப்பிற்கு ஈடான தொகையை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தன்னிடமுள்ள அரசாங்கத் துறையின் இருப்புக்களில் வரவுவைக்கின்றது. எனவே 'பொதுத் துறையினரின் டெபாசிட்டுக்கள்' அதிகமாகின்றது. தன்க்குத் தேவைப்படும் கச்சாப் பொருட்களை விலைக்கு வாங்கும்போது தொழிலாளர்களுக்கு ஊதியம் கொடுக்கும்போது, நாணயச்சாலை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில், தன்னுடைய பேரில் இருக்கும் இருப்புக்களை (இது 'பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள்' என்ற இனத்தில் ஒரு பகுதியாகும்) தனிப்பட்ட நபர்கட்கு மாற்றுகிறது. இவ்வாறு எந்த வகையான அரசாங்கச் செலவினமும் 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை' அதிகரிப்பதுபோல, நாணயச் சாலையின் செலவினமும் 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை' அதிகரிக்கும் — பொது மக்களின் தேவையைப் பூர்த்தி செய்யும் நோக்கத்தோடு வாணிபப் பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள தங்களுடைய டெபாசிட்டுகளில் ஒரு பகுதிக்கு ஈடாகக் காசுகள் பெற்றபொழுது, எந்த அளவுக்கு 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' குறைந்திருக்குமோ ஏறக்குறைய அதே அளவுக்கு நாணயச் சாலையின் தற்போதைய செலவினங்களால் 'பாங்கர்களின் 'டெபாசிட்டுக்கள்' அதிகமாகிவிடும். காசுகளின் அளிப்பு நிலைமையைப் பொறுத்த வரையில் கட்டுப்பாடுகள் எதுவும் கிடையாது. எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களை' மாற்றி அமைக்கும்போது, பாங்குகட்குத் தேவைப்படும் காசுகளைத் தன்னால் ஏற்பாடு செய்ய முடியுமா அல்லது முடியாதா என்பது குறித்து சிந்திக்கவேண்டிய அவசியமே கிடையாது. காசுகளைப் பொறுத்த வரையிலும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தன் விருப்பம்படி நடந்துகொள்ளலாம்.

காசுகளை வெளியிடும்போது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தடைகளின்றிச் செயலாற்ற முடிவதுபோல நோட்டுக்களை வெளியிடும்போது அது தடையின்றிச் செயலாற்ற முடியாது. வாணிபப் பாங்குகள் தன்னிடம் காசுகள் கொண்டு வந்து தருவதையும், காசுக்களைத் தன்னிடத்திலிருந்து எடுத்துச் செல்வதையும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அனுமதிப்பது போலவே, அவை நோட்டுக்களை எடுத்துச் செல்வதையும் நோட்டுக்களைக் கொண்டுவந்து தருவதையும் அது அனுமதிக்கின்றது. இந்த இரண்டு வகையான பேரங்களிலும் நோட்டுக்கள் அல்லது காசுகள் 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களாக' மாற்றப்படுகின்றன; அல்லது 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' நோட்டுக்களாகவோ அல்லது காசுக்களாகவோ மாற்றப்படுகின்றன. ஆனால், காசுக்களைப் பொறுத்தவரையில், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, விரும்பும் அளவு நாணயச்சாலையிலிருந்து பெற்றுக்கொள்ள முடியும். உண்மையில் இந்த விஷயத்தில் நாணயச்சாலை ஒரு வற்றாத ஊற்றாகவே விளங்குகின்றது. ஆனால் நோட்டுக்களைப் பொறுத்த வரையில் இம்மாதிரியான 'காமதேனு' ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. நாணயச் சாலையைப்போல நோட்டுக்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு விரும்பும் வண்ணம் அளிக்கக்கூடிய நிறுவனம் ஏதும் கிடையாது. நோட்டு வெளியீட்டைப் பொறுத்த வரையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கே பொறுப்பாகின்றது; இதற்காக தலைமைப் பாங்கில் 'வெளியீட்டுத்துறை' ஒன்று செயலாற்றி வருகின்றது. இந்த 'வெளியீட்டுத் துறை' (Issue Dept) தடைகள் ஏதுமின்றி தான் விரும்பியவண்ணம் நோட்டுக்களை வெளியிட முடியாது. 1954-ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட செலாவணியும் பாங்கு நோட்டுகளும் பற்றிய சட்டம் (Currency and Bank Notes Act of 1954), 'வெளியீட்டுத் துறை' யின் மேல் சிலவரையறைகளை விதித்துள்ளது. அதிகார பூர்வமான மார்க்கெட் விலையில் கணக்கிடப்பட்ட தங்கத்தின் மதிப்புக்கு ஈடாக வெளியீட்டுத் துறை' நோட்டுக்களை வெளியிடலாம். உண்மையில் இந்த ஷரத்து பயனற்ற ஒன்றேயாகும்; ஏனெனில் தற்சமயம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் தங்க இருப்பே கிடையாது. தங்க ஈடு இல்லாமலேயே நோட்டுக்கள் வெளிடக் கூடிய அதிகாரமும் கொடுக்கப்பட்டுள்ளது. தங்க ஈடு ஏதும் இன்றி £ 1,575 மில்லியன்களுக்கு நோட்டுக்கள் வெளியிடலாம். இருப்பினும் கஜானாவின் அனுமதி பெற்று £ 1,575 மில்லியன்களுக்கு அதிகமான தொகைக்கும் கூட இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் நோட்டுக்கள் வெளியிட முடியும். இந்த அதிக அளவுக்கும் தங்க ஈடு தேவை இல்லை. நம்பிக்கை வெளியீடான' (Fiduciary Issue) £ 1,575 மில்லியன்கட்கு அதிகமாக நோட்டுக்களை வெளியிட அனுமதி வழங்குமுன்,

கஜானு பார்லிமெண்டுக்கு இது குறித்து அறிவிக்க வேண்டியது அவசியமாகும். தற்சமயம் (அதாவது 1959-ஆம் ஆண்டின் மத்திய பகுதியில்) வெளியிடப்பட்டுள்ள நோட்டுக்களின் மதிப்பு £ 2,150 மில்லியன்களாகும். அதாவது 'பாங்கு விவர அறிக்கையில்' (Bank Return) தன்னுடைய நோட்டுக்கள் சம்பந்தமான பொறுப்பு £ 2,250 மில்லியன்கள் என்று 'வெளியீட்டுத் துறை' குறித்துள்ளது. 'வெளியீட்டுத் துறை' யின் பொறுப்புக்களான இந்த £ 2,150-ல் ஒரு சிறு பகுதி (1959-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 1 ஆம் தேதி இதன் மதிப்பு £ 27 மில்லியன்களாகும்) 'பாங்குத் தொழில் துறை' யின் சொத்தினமாக மாறி அமைந்திருப்பதை நாம் காணலாம். இந்தச் சிறு பகுதி காலத்திற்குக் காலம் மாறக்கூடியது. இதுபோக மீதமுள்ள நோட்டுக்கள் யாவும் புழக்கத்தில் இருக்கின்றன.

நோட்டு வெளியீட்டைப் பொறுத்த வரையில் மையப் பாங்கு "முற்றுரிமை" (mynopoly) பெற்று விளங்கவேண்டும் என்ற கருத்து வலியுறுத்தப்படுகின்றது. இவ்வாறு வலியுறுத்துவோரின் வாதம் வருமாறு—நாட்டின் பாங்குத் தொழிலை மையப் பாங்கு கட்டுப்படுத்த வேண்டுமானால், மையப் பாங்கே நாட்டிலுள்ள ரொக்கம் யாவற்றிற்கும் மூலாதாரமாகத் திகழ வேண்டும். வாணிபப் பாங்குகள் தாங்கள் விரும்பும் வண்ணம் நோட்டுக்களை அச்சிட்டுக் கொள்ளும் உரிமை பெற்றிருந்தால், அவை தங்களுக்குத் தேவை ஏற்படும் போதெல்லாம் தாங்களாகவே ரொக்கத்திற்குரிய ஏற்பாடுகளைச் செய்து கொள்ள முடியும். எனவே மையப் பாங்கின் கட்டுப்பாட்டு நடவடிக்கைகள்யாவும் முறியடிக்கப் பட்டுவிடும். தனிப்பட்ட பாங்குகள் வெளியிடும் நோட்டுக்கள் ரொக்கத்திற்குச் சமம் என்று மக்கள் ஏற்றுக் கொள்ளும் பட்சத்தில், நாம் மேலே குறிப்பிட்டுள்ள வாதம் முற்றிலும் பொருத்தமானதாகும். ஆனால் தனிப்பட்ட பாங்குகள் வெளியிடும் நோட்டுக்கள் ரொக்கத்திற்குச் சமம் ஆகா என்று மக்கள் எண்ணத் தலைப்பட்டால், மையப் பாங்கு நோட்டு வெளியீட்டைப் பொறுத்தவரையில், 'முற்றுரிமை' பெற்றிருப்பதும் பெருதிருப்பதும் ஒன்றுதான்.

மையப் பாங்கின் நோட்டுக்கள், மற்றும் மையப் பாங்கிலுள்ள வாணிபப் பாங்குகளின் டெபாசிட்டுக்கள்—ஆகியவையே மையப் பாங்கினின்றும் உற்பத்தியாகும் ரொக்கங்களாகும். வாணிபப் பாங்கு ஒன்று நோட்டுக்கள் வெளியிடும் அதிகாரம் பெற்றிருக்கின்றது என்றும், அது வெளியிடும் நோட்டுக்கள் ஏனைய ரொக்கவகைகட்கு ஈடாகக் கருதப் படுகின்றன என்றும் நாம் வைத்துக் கொண்டால், இந்த வாணிபப் பாங்கு மையப் பாங்கின் கட்டுப்பாடுகளால் தடை செய்யப்படாமல் தன்னிச்சைப்படி தன்னுடைய

சொத்துக்களை அதிகரித்துக் கொள்ளமுடியும் (எனவே நாட்டிலுள்ள மொத்த பாங்குப் பணத்தின் அளிப்பில் இந்த வாணிபப் பாங்கின் பங்கு அதிகரிக்கும்) இந்த வாணிபப் பாங்கின் நோட்டுக்கள் வேறுவகையான ரொக்கங்கட்குச் சமமானது என்று தாம் கூறுவது, நாடு முழுவதிலும் மக்கள் இந்த வாணிபப் பாங்கின் நோட்டுக்களை மையப் பாங்கின் நோட்டுகளுக்குச் சமமானவை என்று கருதுவதைக் குறிக்கின்றது; மேலும் செக்குத் தீர்க்வகத்தின் மூலம் பாங்குகள் தங்களுக்கிடையே உள்ள கடன்களைத் தீர்க்கும் போது மையப் பாங்கிலுள்ள இந்த வாணிபப் பாங்கின் இருப்புகட்குப்பதில், அதனுடைய நோட்டுக்களை ஏனைய வாணிபப் பாங்குகள் விரும்பி ஏற்றுக் கொள்கின்றன என்பதையும் இது குறிக்கின்றது. ஆனால் இவ்வாறு மக்களும் ஏனைய வாணிபப் பாங்குகளும் அதன் நோட்டுக்களை வேறுவகையான ரொக்கங்கட்குச் சமமானது என்று கருதவில்லை என்று வைத்துக் கொள்வோம். இதுபோன்ற சூழ்நிலையில்தான் வெளியிட்டுள்ள நோட்டுக்களின் அடிப்படையில் இந்த வாணிபப் பாங்கு தன்னிடமுள்ள சொத்துக்களை அதிகரிக்குமேயானால், விரைவில் இந்தப் பாங்குக்குப் பாத்தியதையான வேறுவகையைச் சேர்ந்த ரொக்க காப்பு இருப்புக்கள் (மையப் பாங்கின் நோட்டுக்களும் மையப் பாங்கிலுள்ள இந்தப் பாங்கின் டெபாசிட்டுகளும்) பெருமளவில் மக்களிடமும் ஏனைய பாங்குகளிடமும் போய்ச் சேர்ந்துவிடும். தங்களுக்குச் சேரவேண்டிய செலுத்தினங்கட்கு இந்த வாணிபப் பாங்கின் நோட்டுக்களை ஏற்றுக் கொண்ட பொதுமக்களும், பாங்குகளும், உடனடியாக, இந்த நோட்டுக்களை எல்லோராலும் மிகவும் விரும்பி ஏற்றுக் கொள்ளப்படும் வேறு வகையைச் சேர்ந்த சொத்துக்களாக இந்த வாணிபப் பாங்கினிடமே மாற்ற முயலுவதால் இதுபோன்ற ஒரு நிலை உருவாகும். 'பிரதேசப் பாங்கு' (Local Bank) ஒன்று (19-ஆம் நூற்றாண்டில் பெருமளவில் நிறுவப்பட்ட நாட்டுப்புறப் பாங்குகளைப் போன்றது இது) நோட்டு வெளியிடும் அதிகாரம் பெற்றிருந்தாலும், அது மையப் பாங்குக்கு எந்த வகையிலும் கட்டுப்படாமல் இருக்க முடியும் என்று நாம் எண்ணிவிட முடியாது. ஏனெனில் இந்தப் பிரதேசப் பாங்கு, தான் வெளியிட்டுள்ள நோட்டுக்களின் அடிப்படையில் விரைவில் தனது சொத்துக்களை அதிகப்படுத்தினால், இந்தப் பிரதேசப் பாங்கு தன்னுடைய வேறுவகையான ரொக்கக் காப்பு இருப்புக்களில் பெரும் பகுதியை இழக்க வேண்டிய நிலை ஏற்படும்.[1] ரொக்கம் மிகுதியாகக் கிடைக்கக் கூடிய நிலையில்

[1] பிரதேசப் பாங்கு தன்னுடைய செலாவணியை அதிகரிப்பதற்கும், இதைத் தடைசெய்யும் வகையில் மக்களின் ரொக்கத்தேவை உயர்வதற்கும் இடையே சிறிது காலம் ஆகும் என்று சிலர் விவாதிக்கின்றனர். 19-ஆம் நூற்றாண்டின் முதல் பகுதியில் இங்கிலாந்து நாட்டின் பாங்குத் தொழிலைப் பற்றி புத்தகங்கள் எழுதியுள்ள பல ஆசிரியர்கட்கிடையே இந்தப் பிரச்னை சம்பந்தமாக காரசாரமான

வாணிபப் பாங்குகள் ஒன்றோடொன்று இணங்கி டெபாசிட்டுக்களை அதிகமாக்குவதுபோல, நாடுமுழுவதிலுமுள்ள பல வாணிபப் பாங்குகள்—நோட்டு வெளியிடும் உரிமை பெற்றவை — ஒன்றோடு ஒன்று இணங்கி நோட்டுக்களின் வெளியீட்டை விரிவாக்கினால், இவற்றின் நடவடிக்கைகளை மையப் பாங்கால் அவ்வளவு எளிதில் கட்டுப்படுத்த முடியாது என்றே தோன்றுகிறது. இவ்வாறு பல பாங்குகள் ஒரு சேர நோட்டுக்களின் வெளியீட்டை விரிவாக்கும் போது, இந்தப் பாங்குகள் மையப் பாங்கில் வைத்திருக்கும் ரொக்க விகிதம் குறையும். தங்களுக்குள் ஏற்படும் கடன்களைச் செக்குத் தீர்வகத்தின் மூலம் தீர்த்துக் கொள்ளும்போது பயன் படுத்துவதற்காகவே பாங்குகள், ரொக்கக் காப்பு இருப்புக்களை மையப் பாங்கிடம் வைத்திருக்கின்றன. ஆனால் தங்களுக்குள் ஏற்படும் கடன்களைத் தீர்த்துக்கொள்வதற்காக ஒரு பாங்கு மற்ற பாங்கின் நோட்டுக்களை ஏற்றுக்கொள்ளுமேயாயின், இந்தப் பாங்குகள் மையப் பாங்கில் வைத்திருக்கும் ரொக்கக் காப்பு இருப்புக்கள் குறைய நேர்ந்தாலும் அதனால் இந்தப் பாங்குகட்கு யாதொரு கேடும் நேராது. இம்மாதிரியான நிலைகளில் மையப் பாங்கு வாணிபப் பாங்குகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த முடியாமல் ஒரு இக்கட்டான சூழ்நிலை உருவாகலாம். வாணிபப் பாங்குகள் வெளியிட்டுள்ள நோட்டுக்களுக்கும் மையப் பாங்கிலுள்ள வாணிபப் பாங்குகளின் டெபாசிட்டுக்களுக்கும் இடையே சட்டத்தின் துணைகொண்டு (அல்லது சட்டம் போன்ற ஆற்றலுடைய சம்பிரதாயங்களின் துணைகொண்டு) மையப் பாங்கால் ஒரு வேறுபாட்டினை—செயற்கையான வேறுபாட்டினை—ஏற்படுத்த முடியுமேயானால், மையப் பாங்கு தனக்கு இம்மாதிரியான ஒரு இக்கட்டான சூழ் நிலை நேராமல் தடுத்துக்கொள்ள முடியும். வாணிபப் பாங்குகளிடமுள்ள டெபாசிட்டுக்கள், வாணிபப் பாங்குகள் வெளியிடும் நோட்டுக்கள், ஆகியவற்றின் மொத்த மதிப்பில் ஒரு குறிப்பிட்ட பகுதியை மையப் பாங்கில் வாணிபப் பாங்குகள் இருப்பாக வைக்க வேண்டும் என்று சட்ட ரீதியாகவோ, சம்பிரதாயத்தின் அடிப்படையிலோ ஒரு கட்டுப்பாட்டை ஏற்படுத்தினால், மையப் பாங்கு தனது நடவடிக்கைகளைத் தடையின்றிச் செயல்படுத்த முடியும். பாங்குத் தொழிலை ஒழுங்கு செய்யும் வகையில் பல நாடுகளிலும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. தற்கால சட்ட திட்டங்களில் இது போன்ற ஷரத்து பொதுவாகக் காணக்கூடிய ஒன்றாகும். இம்

விவாதங்கள் நடைபெற்றன. இவ்வாறு நிலவிய மாறுபட்ட கருத்துக்களைத் தெரிந்து கொள்ள விரும்பும் வாசகர்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ள புத்தகங்களைப் படிக்கலாம்:—VINER, Studies in the Theory of International trade, pp 164—65 and in wood, EngliSh Theories of Central Banking Control, 1819-58 Pressnell, Country Banking in the Industrial Revolution.

மாதிரியான கட்டுப்பாடுகள் எந்தெந்த நாடுகளில் உள்ளனவோ, அங்கெல்லாம், 'வாணிபப் பாங்குகட்கு நோட்டுக்களை வெளியிடும் அதிகாரம் வழங்கக்கூடாது' என்று வாதிடுவோரால் தமது வாதத்தை நிறுவ முடியாது.[1]

கட்டுப்பாடுகள் ஏதுமின்றி வாணிபப் பாங்குகள் நோட்டுக்கள் வெளியிடும் அதிகாரம் பெற்றிருந்தால் மையப் பாங்கின் ஆற்றல் பாதிக்கப்படும் என்ற எண்ணம் நிலவினால், வாணிபப் பாங்குகளின் நோட்டு வெளியிடும் அதிகாரத்தைச் சட்ட பூர்வமாகக் கட்டுப்படுத்தி பெருமளவில் நோட்டு வெளியிடுவதற்கான உரிமையை மையப் பாங்குக்கே அளிக்கலாம்.[2] வாணிபப் பாங்குகள் ஒரு குறிப்பிட்ட அளவுக்கே நோட்டுக்களை வெளியிடக் கூடிய வகையில் கட்டுப்பாடுகள் விதிக்கலாம், இவ்வாறு செய்வதால் இருவகையான நன்மைகள் ஏற்படுகின்றன. வாணிபப் பாங்குகள் வெளியிடும் நோட்டுக்களின் மூலம் அவற்றிற்கு வருமானம் கிடைக்கும். அதே சமயம் மையப் பாங்கின் கருத்துக்கு மாறுபட்டு வாணிபப் பாங்கு நடந்து கொள்ள வாய்ப்பு இல்லை. ஏனெனில் வாணிபப் பாங்குகள் ஒரு குறிப்பிட்ட அளவு தான் நோட்டுக்களை வெளியிட முடியும். வாணிபப் பாங்குகளின் தேவை இந்த அளவுக்கு அதிகமானால், அவற்றின் தேவைகளை மையப் பாங்கால் மட்டும் தான் பூர்த்தி செய்ய முடியும். இவ்வாறு மையப் பாங்கு நாட்டின் மொத்த நோட்டு வெளியீட்டைத் தீர்மானிப்பதோடு தான் விரும்பியவண்ணமே மொத்த ரொக்கத்தையும் தீர்மானிக்க முடியும்; 'நோட்டு வெளியீட்டால் கிடைக்கக் கூடிய வருமானம் யாவும், வாணிபப் பாங்கிடமிருந்து மையப் பாங்குகள் மாற்றப்படுவது சரியல்ல;[3] ஆனால் அதே சமயம் தடைகள் ஏதுமின்றி வாணிபப் பாங்குகளை மையப் பாங்கு கட்டுப்படுத்துவது சாத்தியமாகவேண்டும்' என்று நாட்டின் சட்டசபை விரும்புகின்றது என்று வைத்துக் கொண்டால், மேலே நாம் குறித்த ஏற்பாடு—வாணிபப் பங்குகட்கும் மையப் பாங்குகட்கும் உடன்பாடாக இருக்கக்கூடிய ஏற்பாடு—மிகச் சிறப்பானதாக அமையும் என்று தோன்றுகிறது. 1844-ஆம் ஆண்டுச் சட்டத்

1 சரிவர வளர்ச்சியடையாத பாங்கு முறைகளையுடைய நாடுகளில் வாணிபப் பாங்குகட்கு நோட்டு வெளியிடும் உரிமையை வழங்குவது சரியல்ல. இந்த நாடுகளில மொத்தபண அளிப்பில் (Total money supply) பாங்கு டெபாசிட்டுகளின் பங்கு மிகக் குறைவேயாகும்.

2 குறிப்பிட்ட சில காலங்களில் நிர்ணயிக்கப்பட்டுள்ள அளவைவிடச் சிறிது அதிகமாக—அதனால் கேடு ஏதும் நேராத வகையில்—வாணிபப் பாங்குகளை நோட்டுக்களை வெளியிட அநுமதிப்பதில் தவறு ஒன்றும் இல்லை.

3 நோட்டுக்களை வெளியிடுபவர் நோட்டுக்களின் மூலம் வருமானம் பெற வாய்ப்பு உள்ளது. ஏனெனில் (டெபாசிட்டுக்களைப் போலவே) நோட்டுக்களுக்கு ஈடாகவும் சொத்துக்களைப் பெறமுடியும்.

தின் விளைவாக இங்கிலாந்திலுள்ள நாட்டுப்புறப் பாங்குகளின் நோட்டு வெளியீட்டு உரிமைகள் படிப்படியாக குறைக்கப்பட்டு இறுதியில் நீக்கப்பட்டன. இடைக்காலத்தில் மேலே குறித்துள்ளது போன்ற ஒரு உடன்பாட்டை பீல் (Peel) அவர்கள் அவ்வமயம் ஏற்படுத்தினுர்கள். அண்மையில் கனடா நாட்டில் இம்மாதிரியான ஒரு முறை கடைப் பிடிக்கப்பட்டது. ஸ்காட்லாந்தில் இன்னும் இம்மாதிரியான ஒரு முறையே அநுசரிக்கப்பட்டு வருகின்றது.

## 4. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு—ஒரு கடை நிலைக் கடன் ஈவோன்

மையப் பாங்கு நாட்டின் பண நிலையை (Monetary Situation) மிகச் சிறந்த முறையில் கட்டுப்படுத்த வேண்டுமானுல், அது மக்கள் விருப்பத்திற்கு ஏற்றவகையில், நோட்டுக்களின் உருவில் ரொக்கத்தை வெளியிடும் அதிகாரம் மட்டும் பெற்றிருப்பது போதாது. பொதுமக்களும் பாங்குகளும் அதிகமான நீர்மை நிலையை விரும்பும்போதும், இதனுல் நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளில் விரும்பத்தகாத இடையூறுகள் சில நேரலாம் என்ற சூழ்நிலை நிலவும்போதும், மக்களுடைய தேவைகளையும் பாங்குகளுடைய தேவைகளையும் பூர்த்தி செய்யும் வகையில் அதிகமான ரொக்கத்தை உருவாக்க வேண்டியதும் மையப் பாங்கின் கடமையாகும். இதையே எளிதில் புரியக்கூடிய முறையில் சொல்வதென்ருல்—நாட்டின் பண நெருக்கடி தோன்றும்போது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தடைகள் ஏதுமின்றிக் கடன் கொடுக்கத் தயாராக இருக்கவேண்டும். இது மையப் பாங்கின் ‘கடை நிலைக்கடன் ஈவோன்’ என்ற கடமையைக் குறிக்கின்றது. வாணிபப் பாங்குகள் நிலையான ரொக்கவிகிதத்தின் அடிப்படையில் தங்களுடைய நடிவடிக்கைகளை அமைத்துக் கொள்ள விரும்பினுல், மையப் பாங்கு ஒரு கடை நிலைக்கடன் ஈவோனுகத் திகழ வேண்டும், எனவே மையப் பாங்கு கடை நிலைக்கடன் ஈவோனுகத் திகழ்ந்தால், மையப்பாங்கின் கட்டுப் பாட்டுக் கொள்கையை எவ்வித சிரமும் இன்றி எளிதில் செயல் படுத்தமுடியும். பீதி அடைந்துள்ள மக்களின் அதிகமான தேவைகளைப் பூர்த்தி செய்யும் பொருட்டு ரொக்கத்திற்கு ஏற்பாடு செய்யவேண்டிய நிலையில் பாங்குகள் இருந்தால் நிலைமை மிகவும் மோசமாகிக் கொண்டிருக்கும்போது பாங்குகள் தங்களுடைய ரொக்க விகிதங்களை மேலும் மேலும் அதிகரிக்க வேண்டியிருக்கும். இவ்வாறன்றி அமைதியான சூழ்நிலை நாட்டில் உலவி, பாங்குகளிடம் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கை மேலும் மேலும் வளரும்போது,

பாங்குகள் தங்களுடைய ரொக்க விகிதங்களைக் குறைக்கவே எண்ணும். ஏனெனில் இவ்வாறு செய்வது அவர்களுடைய லாபங்களை அதிகமாக்கும். இருப்பினும், இக்கட்டான சூழ்நிலையில் நல்ல முறையில் நிறுவகிக்கப்படும் நிறுவனங்களுக்கு மையப் பாங்கு உதவி செய்ய முன்வரும் என்று வாணிபப் பாங்குகள் உறுதியாக நம்பினால், ஆபத்தான சூழ்நிலை தங்களை அச்சுறுத்தினாலும் வாணிபப்பாங்குகள் அஞ்சமாட்டா. தங்களது ரொக்க விகிதத்தை அதிகரிக்கும் வகையில் எந்தச் செயலிலும் ஈடுபடமாட்டா. குறைந்த விகிதமானாலும், அது தங்களுடைய சௌகர்யத்திற்கும் கண்ணியத்திற்கும் ஏற்ற ஒன்று என்று பாங்குகள் கருதினால், அதே ரொக்க விகிதத்தையே அவை நிலையாக அமைத்துக் கொள்ளும். மார்க்கெட்டில் வாய்ப்பான சூழ்நிலை உருவாகி உறுதியான நம்பிக்கையோடு கூடிய மனோ நிலையுடையவையாகப் பாங்குகள் விளங்கினாலும் கூடப் பாங்குகள் இந்த நிலையான ரொக்க வீதத்தைக் குறைக்க விரும்புவதில்லை. சுருங்கக் கூறின், அந்நிலையிலும் பாங்குகள் நிலையான ரொக்க விகிதத்தின் அடிப்படையிலேயே தங்களுடைய நடவடிக்கைகளை அமைத்துக் கொள்ளும். இந்த நிலையான ரொக்கவிகிதம் செக்குத்தீர்வகத்தில் நடைபெறும் பேரங்களைத் தீர்ப்பதற்கும், பொது மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கும், போதுமானதாக இருக்கும். மேலும் இந்த நிலையான ரொக்க விகிதம் மக்களின் உள்ளத்தில் நம்பிக்கை ஊட்டுவதற்கும் போதுமானதாக அமைந்திருக்கும்.

நாம் மேலே குறிப்பிட்டுள்ள நிலையான ரொக்க விகிதம் தற்சமயம் இங்கிலாந்திலுள்ள பாங்குகளால் அநுசரிக்கப்பட்டு வரும் ஒரு விகிதமாகும். ஏனைய நாடுகளிலும் பாங்குகள் இது போன்ற நிலையான ரொக்க விகிதத்தைக் காத்து வருகின்றன என்று கொள்வதற்கில்லை. ரொக்க விகிதங்கள் ஏனைய நாடுகளில் காலத்திற்கு ஏற்றாற்போலச் சிறிய அளவிலோ, பெரிய அளவிலோ மாறிக்கொண்டே இருக்கின்றன. இவ்வாறு ரொக்க விகிதங்கள் நிலையற்று இருப்பதால், இந்த நாடுகளிலுள்ள மையப் பாங்குகள் ஒரு சங்கடமான நிலையில் செயல்பட வேண்டியிருக்கின்றது.[1] பண நெருக்கடி நேருங்காலங்களில் தடைகள் ஏதுமின்றிப் பாங்குகட்கு உதவி செய்ய வேண்டுவது தன்னுடைய முக்கியமான பொறுப்பு என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கருதுகின்றது.

[1] முந்திய பத்தியில் நடுப்பகுதியில் குறித்திருக்கும் சங்கடமான நிலையையே யாம்ஈண்டுக் குறிப்பிடுகிறோம். இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கும் ஒரு சங்கடமான நிலை—மேற்குறித்ததை விட முற்றிலும் மாறுபட்டது—தோன்றியுள்ளது. கடை நிலைக்கடன் ஈவோனாக மையப் பாங்கு தடையின்றிச் செயலாற்றும்போது ரொக்கக் காப்பு இருட்பு பாங்குகளின் நடவடிக்கைகட்குத் தடையாக அமையாது இது குறித்து மேலும் 9-ஆம் அத்தியாயத்தில் 2ஆவது உட்பிரிவில் விவாதித்துள்ளோம்.

பல ஆண்டுகளாக இதே முறையில் அது செயல்பட்டு வந்திருக்கின்றது. இதனால் இங்கிலாந்திலுள்ள பாங்குகளால் நிலையான ரொக்க விகிதத்தை அநுசரிக்க முடிகின்றது. மேலும் இங்கிலாந்து நாட்டுப் பாங்கு அமைப்பில் வேறு எந்த நாட்டிலும் காணமுடியாத ஒரு சிறப்பு உள்ளது. மையப் பாங்குக்கும் வாணிபப் பாங்குக்கும் இடைப்பட்ட நிலையில் உண்டியல் கழிவு மார்க்கெட் செயல்பட்டு வருவதே இந்தச் சிறப்பான அமிசமாகும். இவ்வாறு உண்டியல் கழிவு மார்க்கட் ஒரு இடைப்பட்ட நிலையில் அமைந்திருப்பதும் நிலையான ரொக்க விகிதத்திற்கு ஏற்றதொரு காரணமாகும்.

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பொதுவான வரலாற்றினை விளக்காமலேயே அது எவ்வாறு கடை நிலக்கடன் ஈவோன் என்ற நிலையை அடைந்தது என்று நாம் கூற முடியும். ஆரம்ப நிலையில் அரசாங்கத்தின் நிதி சம்பந்தமான நடவடிக்கைகள் யாவற்றையும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கே நிறுவகித்து வந்தது. இவ்வாறு அது ஏனைய பாங்குகள் பெருத ஒரு தனி உரிமையை உடைய கம்பெனியாகத் திகழ்ந்தது. எனவே அவ்வப்போது நேரும் பண நெருக்கடியால் இலண்டனின் நிதி அமைப்பு சீர்குலைந்து வந்ததைக் கண்டு, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் இதைத் தடுக்காமல் இருக்க முடியவில்லை. தடைகள் ஏதுமின்றிக் கடன் கொடுப்பதே நெருக்கடி நிலையைமாற்றி அமைக்கப் பயன்படக் கூடிய சரியான மருந்து என்று அது அநுபவ வாயிலாக—கசப்பான அநுபவங்களின் வாயிலாக - அறிய வந்தது. பாங்குகளிடமுள்ள ரொக்கத்திற்குச் சொந்தக்காரர்கள் அனைவரும் ஒரே காலத்தில் ரொக்கத்தைப் பாங்குகளிடமிருந்து பெற முனையவில்லை—இந்த உண்மையின் அடிப்படையில்தான் பாங்குகள் ஏற்பாடு செய்யும் கடன் வசதிகள்யாவும் அமைந்திருந்தன. இந்த உண்மையை வறிதே விளக்கும் வகையில் மட்டுமின்றி, வலியுறுத்தும் வகையிலும் இலண்டனின் நிதி அமைப்பு அவ்வமயம் சிக்கலான ஒரு அமைப்பாக மாறிக்கொண்டிருந்தது. இலண்டனின் நிதி அமைப்புக்கு ஆக்கம் தேடும் வகையில், தான் கடை நிலக்கடன் ஈவோனாக மாறவேண்டிய அவசியத்தை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு படிப்படியாக—ஆனால் மிகவும் நிதானமாக—உணர ஆரம்பித்தது. இருப்பினும் பலமுறை நெருக்கடியான நிலை நேர்ந்தபோது கூட இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ஏனைய நிதி நிறுவனங்களுக்கு உதவ முன் வரவில்லை. 19-ஆம் நூற்றாண்டின் மத்திய பகுதியில் இங்கிலாந்தில் மூன்றுமுறை நெருக்கடி நிலை நேர்ந்தது. இதன்பின் இங்கிலாந்துத் தலைமைப் பாங்குதான் முழு அளவில் கடை நிலக்கடன் ஈவோனாகமாற வேண்டியதன் அவசியத்தை நன்கு உணர்ந்தது. இந்த

நெருக்கடி நிலைகட்குப் பின் வால்டர்பேஜட் (Walter Bagehot) என்பார். 'லொம்பார்டு தெரு' (Lombard Street) என்ற ஒரு சிறிய—ஆனால் முதல்தரமான—புத்தகத்தை வெளியிட்டார். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கடை நிலைக்கடன் ஈவோனாகத் திகழ வேண்டியதன் அவசியத்தை அவர் இந்நூலில் தெளிவு படுத்தியுள்ளார். வால்டர் பேஜட் இவ்வாறு தெளிவு படுத்திய பின், 'இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கடை நிலக்கடன் ஈவோனாகத் திகழவேண்டியது அவசியம்' என்ற கருத்தை யாரும் மறுத்துரைக்கவே இல்லை என்றும் கூறலாம். நெருக்கடியான நிலை நேர்ந்திருக்கும்போது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு நிதி நிறுவனங்கட்குக் கட்டாயம், கடன் கொடுப்பதோடு யாதொரு விதமான தடைகளும் இன்றிக் கடன் கொடுக்க வேண்டும்—என்ற கோட்பாடு யாவருக்கும் உடன்பாடான ஒன்றாகவே திகழ்கின்றது.

காலப்போக்கில் இந்தக் கோட்பாடு இங்கிலாந்துப் பாங்கர்களின் 'இரத்தத்திலேயே ஊறிவிட்டது' என்று கூறலாம். இந்தக் கோட்பாட்டின் செல்வாக்கு அவர்களுடைய நடவடிக்கைகளில் நன்கு படிந்திருப்பதை நாம் காணலாம். 'மையப் பாங்கு ஓர் கடை நிலைக்கடன் ஈவோன் என்று நிலவிவரும் மரபைப் (Tradition) பண்படுத்தும் வகையில் இங்கிலாந்தில் உண்டியல் கழிவகங்கள் அமைந்துள்ளன. இங்கிலாந்தில் உண்டியல் கழிவகங்கள் மையப் பாங்குக்கும், வாணிபப் பாங்குகட்கும் இடையே நடுநாயகமாகத் திகழ்கின்றன. நெருக்கடியான சூழ்நிலையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கடன் கொடுக்கவேண்டியது அவசியம்; அதில் எள்ளளவேனும் ஐயமில்லை. ஆனால் யாருக்குக் கடன் கொடுக்கவேண்டும், என்றவினா எழுகின்றது. நெருக்கடியான சூழ்நிலை ஒன்றில் பொதுமக்கள் பாங்குகளிடமிருந்து பெருமளவில் ரொக்கத்தைத் திரும்பப் பெறமுனையும்போது, வாணிபப் பாங்குகள் தங்களுடைய ரொக்கக் காப்பு இருப்புக்களை அதிகரிக்க வேண்டிய நிலையிலுள்ளன. எனவே கடன் கொடுக்கப்பட வேண்டியது வாணிபப் பாங்குகட்கே என்பது மிகத் தெளிவாகத் தோன்றுகின்றது. இவ்வாறான சூழ் நிலைகளில் வாணிபப் பாங்குகட்கு நேரடியாக மையப் பாங்குகள் கடன் கொடுக்கவேண்டும்—என்று ஏனைய நாடுகளின் சட்ட திட்டங்களில் வெளிப்படையாகவே கூறப்பட்டுள்ளது. ஆனால் பரம்பரை பரம்பரையாக பாங்கர்கள் இன்னொரு பாங்கரிடம் போய் தமக்குத் தேவையான பணத்தைக் கடனாகப் பெறுவதை விரும்புவதில்லை என்று தெரிய வருகின்றது. இன்னொரு பாங்கரிடம் போய் தமக்குத் தேவையான பணத்தைக் கடனாகப் பெறுவது தங்களுடைய பலஹீனத்தையே காட்டும் என்று பாங்கர்கள் கருதுகின்றனர்.

பாங்குகளின் ஆற்றல் குறித்து மையப் பாங்கு பாராட்டுத் தெரிவித்திருந்த போதிலும், அவை மையப்பாங்கைக் கடன்பெறும் நோக்கத்தோடு அணுக விருப்பமின்றியே இருந்தன. பாங்கர்கள் இவ்வாறு ஒரு மரபை ஏற்படுத்தியிருப்பது மையப் பாங்கு கடை நிலைக்கடன் ஈவோன் என்ற முறையில் செய்யும் நடவடிக்கைகளைப் பெரிதும் பாதித்தது. அமெரிக்காவில்கூட இதே நிலை நிலவியது. இதன் விளைவாக வாணிபப் பாங்குகளின் நடவடிக்கைகளை மையப் பாங்கால் திருப்திகரமாகக் கட்டுப்பாடு செய்ய முடியவில்லை. இலண்டனைப் பொறுத்தவரையில் இம்மாதிரியான பிரச்னைகள் இல்லை எனலாம். இலண்டனில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கும், வாணிபப் பாங்குகட்கும் இடையே, நடுநாயகமாக உண்டியல் கழிவகங்கள் அமைந்துள்ளன. இவை உடனடியாக எளிதில் மாற்றக்கூடிய சொத்துக்களை வைத்திருக்கின்றன. வாணிபப் பாங்குகளிடமிருந்து பெற்ற நாள் நிலுவைக் கடனின் உதவியால் இவை இம்மாதிரியான சொத்துக்களை வைத்திருக்க முடிகின்றது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு உண்டியல் கழிவகங்கட்குக் கடன் கொடுக்கலாம்; இவ்வாறு தாம் பெற்ற கடனைக் கொண்டு உண்டியல் கழிவகங்கள் வாணிபப் பாங்குகளிடமிருந்து தாங்கள் வாங்கியுள்ள நாள் நிலுவைக் கடனைத் திருப்பிக் கொடுத்து விடமுடியும். எனவே தங்கட்குத் தேவைப்படும் அதகமான ரொக்கத்தை வாணிபப் பாங்குகள் மையப்பாங்கிடமிருந்து நேரடியாகப் பெறவேண்டிய அவசியம் ஏதுமின்றி உண்டியல் கழிவகங்களின் மூலம் பெறமுடியும். பழையகாலத்தில் வாணிபப் பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து கடன் வாங்கவிரும்பவில்லை. ஆனால் தாங்கள் உண்டியல் கழிவகங்கட்குக் கொடுத்துள்ள கடன்களைத் திரும்பப் பெறுவதை மிகவும் விரும்பின. பணத்தை அவற்றினிடமிருந்து கட்டாயம் பெறமுடியும் என்று பாங்குகள் நன்கு அறியும். ஏனெனில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து உண்டியல் கழிவகங்கள் எப்பொழுது வேண்டுமானாலும் பணம்பெற முடியும். எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கைப் பொறுத்த வரையில் அது மறைமுகமாகக் கடை நிலைக்கடன் ஈவோனாக விளங்கியது என்று கூறலாம். வேறுநாடுகளிலில்லாத சிறப்பான நிறுவனங்களின் அமைப்போடு இலண்டன் திகழ்ந்ததால் இவ்வாறு மையப் பாங்கு மறைமுகமாகத் தனது கடமையை ஆற்றமுடிந்தது.

பாங்குகள் யாவற்றிற்கும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு உண்டியல் கழிவு மார்கெட்டின் மூலமாகவே கடை நிலைக்கடன் ஈவோனாகத் திகழ்வதால், இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு தனது சாதாரண வாடிக்கைக்காரர்களோடு நடத்தும் பேரங்களும்,

தான் உண்டியல் கழிவகங்களோடு நடத்தும் பேரங்களும் வெவ்வேறு வகையின என்று கருதுகின்றது. எனவே உண்டியல் கழிவகங்கட்கு மட்டிலும் பொருந்தக் கூடிய சில பொதுவான சட்ட திட்டங்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு வகுத்திருக்கின்றது. இவ்வகையான சிறப்பான சட்ட திட்டங்கள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு நாட்டின் மையப் பாங்கு என்ற முறையில் புரிந்துவரும் பணிகட்கு இன்றியமையாதனவாகத் திகழ்கின்றன. உண்டியல் கழிவகங்கள், மறுகழிவு செய்வதற்கோ, தாங்கள் வாங்கும் கடனுக்கு ஈடாக வைக்கவோ, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் எடுத்துச் செல்லும் உண்டியல்கள் பிரிட்டனைச் சேர்ந்த—நாணயத்திற்குப் பேர்போன—இருவரின் கையொப்பங்களோடு திகழ வேண்டும். இந்த இருகையொப்பங்களில் ஒன்று 'ஏற்பவரின்' கையொப்பமாக இருக்கவேண்டும். இவ்வகையான உண்டியல்களை மட்டுமின்றி, கருவூல உண்டியல்கள் மூலமாகவும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து உண்டியல் கழிவகங்கள் பணம் பெறமுடியும். இவ்வாறு எடுத்துச் செல்லப்படும் உண்டியல்களின் நிகர கெடுவுகாலம் மூன்று மாதங்கட்கு மிகாமல் இருக்க வேண்டும் என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு வரையறை செய்துள்ளது. ஆனல் சாதாரண காலங்களில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கடன் கொடுக்கும்போதும், மறு கழிவு செய்யும் போதும், கெடுவு காலத்திற்கு இன்னும் ஒரு சில வாரங்களை உடைய உண்டியல்களை மட்டுமே ஏற்றுக்கொள்கின்றது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு குறுகிய ஆயுளை உடைய பத்திரங்கட்கு ஈடாகவும் கடன் கொடுக்கின்றது. எந்தெந்த வகையைச் சேர்ந்த பத்திரங்களை உண்டியல் கழிவகங்கள் இருப்பாக வைத்திருக்கலாம் என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கட்டுப்பாடுகள் சிலவற்றை விதித்துள்ளது. இந்த வகையான பத்திரங்கட்கு ஈடாக மட்டும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அவற்றிற்குக் கடன் கொடுக்கின்றது[1] உண்டியல் கழிவகங்கட்குத் தேவைப்படும் பணத்திற்கு ஏற்பாடு செய்யும்போது, தான் விதிக்கும் வட்டிவீதம் அல்லது கழிவு வீதம் ஆகியவற்றைப் பொறுத்த வரையில், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இரண்டு முறைகளை அநுசரித்து வருகின்றது—பரம்பரை பரம்பரையாக அநுசரிக்கப்பட்டுவரும் பாங்கு வீத (Bank Rate) முறை ஒருமுறையாகும். அண்மையில் சில ஆண்டுகளாக அநுசரிக்கப்பட்டுவரும் மிகவும் எளிதான முறை மற்ருென்ருகும். தான் பிரசுரிக்கும் பாங்கு வீதத்தில் (இயக்குநர்களின் குழுவினல் இந்த வீதம் ஒவ்வொரு வாரமும் வியாழக்கிழமை

1. எவ்வகையான பத்திரங்கள் மையப் பாங்கால் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன என்பது குறித்து அறிய விரும்புவோர் மூன்ரும் அத்தியாயத்தில் நான்காம் உட்பிரிவினை நோக்கவும்.

நிச்சயிக்கப்படுகின்றது) உண்டியல் கழிவு அகங்கட்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மறுகழிவு செய்து வருவதும், அட்வான்சுகள் கொடுப்பதும், (அட்வான்சுகள் 7 நாட்களுக்குக் குறையாமல் கொடுக்கப்படும்) பரம்பரை பரம்பரையாக நிலவி வரும் முறையாகும். இந்தப் 'பாங்கு வீதம்' சாதாரணமாக வெளி மார்க்கெட்டில் நிலவக் கூடிய கழிவு வீதங்களைக் காட்டிலும் அதிக மானதாகவே (சில சமயங்களில் மிக அதிகமானதாகவே) இருந்தது; இப்பொழுதும் 'பாங்குவீதம்' மார்க்கெட் வீதங்களைவிட அதிகமாகவே இருக்கின்றது. எனவே பாங்கு வீதத்தில் உண்டியல் கழிவகங்கள் உண்டியல்களை மறு கழிவு செய்வதற்கும் அவற்றிற்கு ஈடாக அட்வான்சுகள் பெறுவதற்கும் கொடுக்க வேண்டியுள்ள வட்டி வீதம் 'தண்டனை வீதமாக' (Penal Rate) அமைந்துள்ளது. மையப் பாங்கிடமிருந்து பாங்கு வீதத்தில் உண்டியல்கள் கழிவகங்கள் பணத்தைக் கடனாகப் பெறும்பொழுது அவை நஷ்டமடைவதால் இந்த வீதம் 'தண்டனை வீதம்' என்ற பெயர்பெறுகின்றது. இவ்வாறு, மார்க்கெட்டில் நிலவும் வீதங்களை விட அதிகமான வீதத்திலேயே தாங்கள் கடன் பெறமுடிவதால் உண்டியல் கழிவகங்கள் புதிய உண்டியல்களைக் கழிவு செய்யும் போது அவற்றிற்கான கழிவு வீதத்தை உயர்த்தி விடுகின்றன. இதுபோன்ற சமயங்களில், 'பண மார்க்கெட் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் சென்றுள்ளது' என்றும், (அதாவது உண்டியல் கழிவகங்கள் தாற்காலிகமாக இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் உதவி பெறுகின்றன) அதன் விளைவாக மார்க்கெட் வீதங்கள் உயர்ந்துள்ளன என்றும் மக்கள் கூறுவர். 'பண மார்க்கெட்' இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து வாங்கியுள்ள கடன்களைத் திருப்பிக் கொடுத்தபின், மார்க்கெட் வீதங்கள் பாங்கு வீதத்தைவிடக் குறையும்.

இரண்டாவது முறையை நாம் 'திறந்த பின்புற வழிமுறை (open back door method) என்று வருணிக்கலாம். பாங்கு வீதத்தில் பேரங்களை நடத்தும் முறையை அநுசரிப்பதோடு, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, உண்டியல் கழிவகங்கட்கும் வாணிபப் பாங்குகட்கும், நேரடியாகவும்[1] (இது 1940-49க்கு இடைப்பட்ட காலத்தினின்றும் அநுசரிக்கப் பட்டுவரும் புதுமையான முறை

[1] இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கும் வாணிபப் பாங்குகட்கும் இடையே இவ்வாறு நேருகின்ற நேரடியான பேரங்களைப் பத்திரிக்கைகள் 'மறைமுகமான உதவி' என்று குறிப்பிடுகின்றன. இதற்குக் காரணம் இருக்கின்றது. பத்திரிக்கைகளின் நிருபர் இந்தப் பேரத்தை உண்டியல் கழிவகங்களின் கண்ணோட்டத்தினின்றும் நோக்குகிறோம். (ஆனால் நாம் இந்தப் பேரத்தை வாணிபப் பாங்குகளின் ரொக்கக்காப்பு இருப்புக்களின் கண்ணோட்டத்திலின்றும் நோக்குகின்றோம்.)

யாகும்) பின்புற வழியில் மிகக்குறுகிய காலங்கட்குக் கடன்களை வழங்குகின்றது. (இம்மாதிரியான கடன்கள், மார்க்கெட்டிலுள்ள இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் 'தரகர்' மூலம் ஏற்பாடு செய்யப் படுகின்றன.) மார்க்கெட்டில் நிலவும் ஏனைய வீதங்கள் எந்த வகையிலும் பாதிக்கப் படாத முறையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இந்த 'பின்புற வழி'க் கடன்களை ஏற்பாடு செய்கின்றது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு எப்பொழுதும் மார்க்கெட் நிலவரங்களைக் கண்காணித்தே வருகின்றது. தற்காலிகமாக நிலவக் கூடிய நெருக்கடி நிலையை உண்டியல் கழிவகங்கள் சமாளிப்பதற்கான வழிவகைகளையும் செய்து தருகின்றது. அம்மாதிரியான காலங்களில் கஜானு உண்டியல்களைத் தன்னிடம் கொண்டு வந்து கொடுத்துப் பணம் பெற்றுச் செல்லுமாறு உண்டியியல் கழிவகங்கட்கு அது அறிவிக்கின்றது. 'மார்க்கெட் வீதம்' என்றுதான் தீர்மானிக்கும் வீதத்தில் அவ்வமயம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கருவூல உண்டியல்களை மறு கழிவு செய்யும். இவ்வாறு உண்டியல்களை மறுகழிவு செய்யும்போது (அதாவது ரொக்கத்தை வெளியிடும்போது) இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மிகக்குறுகிய காலத்தில் காலாவதி ஆகக்கூடிய கருவூல உண்டியல்களையே பெரிதும் விரும்புகின்றது. ஒரு குறிப்பிட்ட கெடுவு காலத்தை உடைய கருவூல உண்டியல்களையே, தான் விரும்புவதாக அறிவிக்கும். தன்னுடைய பொறுப்புக்களைத் தீர்ப்பது சம்பந்தமாக அரசாங்கம் எந்த நாளில் அதிகமான பணத்தைப் (குறுகிய கால எல்லைக்குள்) பட்டுவாடா செய்யும் என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அறிய வருகிறதோ, அந்த நாளில் காலாவதியாகும் கருவூல உண்டியல்களையே அது பெரிதும் விரும்பும். இதை விளக்கும் வகையில் ஒரு உதாரணம் காண்போம். 1950-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் சில தினங்களில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு உண்டியல் கழிவகங்கட்கு இம்முறையில் உதவி செய்ய வேண்டியிருந்தது என்று வைத்துக்கொள்வோம். பிப்ரவரி 15ஆம் நாள் கருவூலப் பத்திரங்கள் (Exchequer Bonds) பெருமளவில் கெடுவு காலத்தை அடைவதால், அன்றைய தினம் அரசாங்கத்தால் மார்க்கெட்டில் அதிகமான ரொக்கம் பட்டுவாடா செய்யப் படும் என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அறியவந்தது என்றும் வைத்துக் கொள்வோம். எனவே, அது பிப்ரவரி 15ஆம் நாள் கெடுவு காலத்தை அடையும் கருவூல உண்டியல்களையே தான் விரும்புவதாக அறிவிக்கும். இவ்வாறு கருவூலப் பத்திரங்கள் பெருமளவில் கெடுவு காலத்தை அடையும் பிப்ரவரி 15-ஆம் நாளிலேயே கெடுவு காலத்தை முன்பாகவே எந்த அளவுக்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மார்க்கெட்டிலிருந்து அகற்றிவிட முடியுமோ, அந்த அளவுக்கு பிப்ரவரி 15-ல் மார்க்கெட்டில்

குழப்பநிலை குறையும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இவ்வாறான சந்தர்ப்பங்களில் குறுகிய காலத்தில் காலாவதியாகக்கூடிய (பெரும்பாலும் ஒரு மாதத்திற்குள்) கருவூல உண்டியல்களையே விரும்புகின்றது. இவ்வாறு மையப் பாங்கு விரும்புவதால் மீண்டும் விரைவில் மார்க்கெட்டுக்குப் பணத்தேவை ஏற்படும். அவ்வாறான சூழ்நிலையில் மார்க்கெட் மிகவிழிப்பாக நடந்து கொள்ளும்; எனவே மையப் பாங்கு மேற்கொண்டு எந்தவிதமான விசேஷமான நடவடிக்கையும் எடுக்கவேண்டிய அவசியம் நேராது. கருவூல உண்டியல்கள் அவை வெளியிடப்பட்ட சிறிது காலத்திற்கே உண்டியல் கழிவகங்களில் தங்குகின்றன. அதன் பின் கெடுவு காலத்தை நெருங்க நெருங்க அவையாவும் வாணிபப் பாங்குகளிடம் விற்பனை செய்யப்படுகின்றன.[1] எனவே கெடுவு காலத்தை நெருங்கிக்கொண்டிருக்கும் கருவூல உண்டியல்களில் பெரும்பகுதி வாணிபப் பாங்குகளிடம் தான் இருக்கும். மார்க்கெட்டிற்கு உதவி செய்யும் நோக்கத்தோடு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, கெடுவு காலத்தை அணுகிக் கொண்டிருக்கும் கருவூல உண்டியல்களை வாங்க விரும்பும் காலங்களில் அவை பெருமளவில் வாணிபப் பாங்குகளுக்கே சொந்தமானவைகளாக இருக்கும். மார்கெட்டின் தேவையைப் பூர்த்தி செய்வதற்கு இன்னும் £ 2 மில்லியன்கள் பணம் வேண்டியிருக்கும் என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கேள்விப்பட்டு, உடனே அது 'பிப்ரவரி 15 ஆம் நாள் காலாவதியாகும் £ 2 மில்லியன்கள் மதிப்புள்ள கருவூல உண்டியல்களை நாம் வாங்கப் போகிறோம்' என்று அறிவிக்கின்றது என்றுவைத்துக் கொள்வோம். பிப்ரவரி 15 ஆம் நாள் காலாவதியாகக்கூடிய கருவூல உண்டியல்கள் ஏதும் உண்டியல் கழிவகங்களிடம் இல்லை என்றும், இரண்டு மூன்று வாரங்கட்கு முன்பே அவற்றை உண்டியல் கழிவகங்கள் வாணிபப் பாங்குகளிடம் விற்றுவிட்டன என்றும் வைத்துக்கொள்வோம். இது போன்ற ஒரு சூழ்நிலையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு வாணிபப் பாங்குகளிடமிருந்தே நேரடியாக கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்குகின்றது. இதன் விளைவாக வாணிபப் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புக்கள் £ 2 மில்லியன்கள் அதிகமாகின்றன; தாங்கள் திருப்பித் தரும்படி உண்டியல் கழிவகங்கட்கு உத்தரவிட்ட கடன் தொகையான £ 2 மில்லியன்களைத் தற்சமயம் திருப்பித்தர வேண்டியதில்லை என்று கூறி உண்டியல் கழிவகங்கள்

[1] இவ்வாறான ஒரு சம்பிரதாயம் (இலண்டன் தீர்வுப் பாங்குகள் கருவூல உண்டியல்கள் வெளியிடப்பட்ட முதல் வாரத்தில் அவற்றைத் தம்மிடம் வைத்திருக்க விரும்புவதில்லை) 1930-39க்கு இடைப்பட்ட காலத்தில் தோன்றியது அவ்வமயம் உண்டியல் கழிவு அகங்களின் நீடித்த வாழ்விற்கு ஆக்கம் தேடும் வகையில் பாங்குகட்கும் உண்டியல் கழிவகங்கட்கும் இடையே ஏற்பட்ட உடன்பாட்டின் அடிப்படையில் இந்தச சம்பிரதாயம் அநுசரிக்கப்பட்டுவருகின்றது.

அவற்றைப் பயன்படுத்தவும் வாணிபப் பாங்குகள் அநுமதிக்கின்றன.[1] பாங்குகள் இவ்வாறு செய்வதால் உண்டியல் கழிவகங்கள் தங்களுடைய பற்று—வரவுக் கணக்கை ஒழுங்கு செய்யமுடிகின்றது. இதனால் உண்டியல் கழிவகங்கட்கு அதிகமாக எந்தவிதமான ரொக்கமும் கிடைக்கவில்லை என்பதை மறந்துவிடலாகாது. எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நடவடிக்கையால், அதனிடமுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' £ 2 மில்லியன்கள் அதிகமாயிருக்கும். அதாவது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள வாணிபப் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புக்கள் £ 2 மில்லியன்கள் அதிகமாகி இருக்கும். இதுவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நடவடிக்கையினால் நேர்ந்துள்ள நிகர விளைவாகும். மார்க்கெட்டிற்கு உதவ முன்வரும்போது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கெடுவு காலத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் கருவூல உண்டியல்களையே பெரிதும் விரும்புவதாலும், இத்தகைய கருவூல உண்டியல்கள் பெருமளவில் வாணிபப் பாங்குகளிடம் இருப்பதாலும், தற்சமயம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கும் வாணிபப் பாங்குகட்கும் இடையே மேலே நாம் குறித்துள்ள நேரடியான தொடர்பு சாதாரணமாக நிலவுகின்றது.

'மார்க்கெட்டில் மிகப் பெருமளவில் ரொக்கம் புழங்குவது மார்க்கெட் வீதங்களைக் குறைத்து விடும்' என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு எண்ணினால், அது கஜானா உண்டியல்களை, அவ்வமயம் மார்க்கெட்டில் நிலவும் விலையில் விற்கத்தயாராக இருக்கின்றது. (இவ்வாறு விற்பனை செய்வதின் நோக்கம் மிகப் பெரும் அளவில் மார்க்கெட்டில் புழக்கத்தில் இருக்கும் ரொக்கத்தைக் குறைப்பதற்கேயாகும்.) இருப்பினும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மார்க்கெட்டிற்கு உதவி செய்யும் காலங்களில் கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்கும்போது, எந்தெந்தக் கெடுவு காலங்களை உடைய கருவூல உண்டியல்களை வாங்குவது உகந்தது என்று ஆராய்ந்து மிக ஜாக்கிரதையாக செயலாற்றுவதால், இது போல மார்க்கெட்டில் கருவூல உண்டியல்களை விற்பனை செய்யவேண்டிய சந்தர்ப்பங்கள் மிகக்குறைவாகவே ஏற்படுகின்றன. மார்க்கெட்டில் கருவூல உண்டியல்களை வாங்குவதன் மூலமும், விற்பதன்மூலமும், தான் விரும்பிய வண்ணம் மார்க்கெட் வீதங்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் நிலைப்படுத்த

[1] இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் நேரடியாக உண்டியல்களை விற்றபின் பாங்குகள் தாங்கள் உண்டியல் கழிவகங்கட்கு பிறப்பித்திருந்த உத்தரவுகளை—கடனைத் திருப்பித் தரும்படி பிறப்பித்திருந்த உத்தரவுகளை—ரத்து செய்கின்றன. தங்களுடைய ரொக்க இருப்பில் பற்றாக்குறை நேர்ந்தால் உண்டியல் கழிவகங்கட்குப் பாங்குகள் உத்தரவு பிறப்பித்தன. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு உண்டியல்களை விலைக்கு வாங்கியதால் பாங்குகட்குத் தேவைப்பட்ட ரொக்கம் கிடைத்தது; பற்றாக்குறை அகன்றது.

முடியும். 1951-ஆம் ஆண்டுக்குடன் சில ஆண்டுகள் இது போன்ற நடவடிக்கைகளில் தலைமைப் பாங்கு ஈடுபட்டிருந்தது. அவ்வமயம் மார்க்கெட்டில் எந்த விதம் நிலவவேண்டும் என்று தலைமைப் பாங்கு விரும்பியதோ, அந்த வீதத்தில் அதனிடம் கருவூல உண்டியல்களைக் கொடுத்துவிட்டு ரொக்கத்தை ஈடாகப் பெற முடிந்தது; அல்லது ரொக்கத்தைக் கொடுத்துவிட்டுக் கருவூல உண்டியல்களை ஈடாகப்பெற முடிந்தது. தன்னுடைய 'பின்புறவழி முறையில் (Back door method) இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, 'மாறி மாறி செயல்படக்கூடிய ஒரு இயந்திரத்தை'ப் பொருத்தி யுள்ளதோ என்று மக்கள் வியக்கும் அளவுக்கு அது கருவூல உண்டியல்களை ரொக்கமாகவும், ரொக்கத்தைக் கருவூல உண்டியல்களாகவும் மாற்றிய வண்ணமே இருந்தது.

இந்தத் 'திறந்த பின்புற வழி' (Open back door) இயந்திரம் எவ்வாறு செயல்படுகின்றது என்று நாம் ஒரு எடுத்துக் காட்டின் மூலம் விளக்குவோம். அரசாங்கத்தின் செலுத்தனங்களைவிட அரசாங்கத்தின் வரவுகள் அதிகமாகும்போது, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களில்; இருந்து 'பொதுத் துறைகளின் டெபாசிட்டுக்களுக்கு'ம் பணம் மாற்றப்படுவதால் என்னென்ன விளைவுகள் நேருகின்றன என்பதே நாம் ஈண்டு ஆராய வேண்டியதாகும். நம் ஆராய்ச்சிக்குச் சாதகமாக, இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கு வந்துசேரும் ஏனைய வரவுகள் அதனிடமிருந்து வெளியேறும், ஏனைய செலவுகள் ஆகியவை எதுவும் நிகழவில்லை என்று நாம் வைத்துக் கொள்வோம். அரசாங்கத்திடம் மக்கள் கொடுக்கும் நிகர செலுத்தினங்களால் ஏற்படக் கூடிய விளைவுகளை ஆராய்வதே நமது நோக்கமாகும். வாணிபப் பாங்குகளிடம் கணக்குக்களை வைத்திருக்கும் தனிப்பட்ட நபர்கள் தங்களுடைய பாங்குகளின் மேல் £ 25 மில்லியன்களுக்குச் செக்குக்கள் வரைந்து அரசாங்கத்திடம் கொடுக்கின்றனர் என்று வைத்துக்கொள்வோம். கருவூல அதிகாரிகள் இந்தச் செக்குகளை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் செலுத்தி விடுகின்றனர். தலைமைப் பாங்கு இந்தத் தொகையை அரசாங்கத்தின் கணக்கில் வரவுவைக்கின்றது. எனவே அதனிடமுள்ள 'பொதுத் துறைகளின் டெபாசிட்டுக்கள்; £ 25 மில்லியன்கள் அதிகமாகின்றன. வாணிபப் பாங்குகளின் வாடிக்கைக்காரர்கள் வரைந்த செக்குகள், இவ்வாறு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் சொத்துக்களில் ஒன்றாக சேர்ந்து விடுகின்றன. இவை யாவும் வாணிபப் பாங்குகளின் மேல் இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கு உள்ள பாத்தியதைகளைக் குறிக்கின்றன, இந்தச் செக்குக்கள் யாவற்றையும் வாணிபப் பாங்குகளிடம் கொடுத்துவிட்டு

அவற்றிற்கு ஈடாகத் தன்னிடமுள்ள வாணிபப் பாங்குகளின் இருப்புக்களிலிருந்து இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு £ 25 மில்லியன்களைக் குறைத்து விடுகின்றது. அதாவது 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' £ 25 மில்லியன்கள் குறைகின்றன. இதன் விளைவாக வாணிபப் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புக்கள் £ 25 மில்லியன்கள் குறைந்து விடுகின்றன. இதற்கு ஈடாக வாணிபப் பாங்குகளின்பொறுப்புக்களும் குறைகின்றன. தங்கள் மேல் செக்குகளை வரைந்த வாடிக்கைக்காரர்கள், தங்களிடம் வைத்துள்ள இருப்புக்களில் £ 25 மில்லியன்களை வாணிபப் பாங்குகள் குறைத்துவிடுவதால் சொத்துக்களுக்கு ஈடாக பொறுப்புக்களும் குறைகின்றன. ஆரம்ப நிலை கீழே குறித்துள்ளவாறு அமைந்திருந்திருக்கும்.

## நிலை I

(£ மில்லியன்கள்)

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பாங்குத் தொழில் துறை

| | | | |
|---|---|---|---|
| பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள் | 10 | அரசாங்கப் பத்திரங்களும் ஏனைய பத்திரங்களும் | 255 |
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் | 240 | நோட்டுக்கள் | 50 |
| ஏனைய பொறுப்புக்கள் | 55 | | |
| | 305 | | 305 |

### வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | 6,000 | கையிருப்பு ரொக்கமும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கமும் | 480 |
| | | சொத்துக்கள் | 5,520 |
| | 6,000 | | 6,000 |

அரசாங்க வரவினங்கள் அரசாங்கச் செலுத்தினங்களைவிட £ 25 மில்லியன்கள் அதிகமாகத் திகழ்கின்றன. இதன்பிறகு ஏற்படும் நிலையைக் கீழே காணலாம்.

## நிலை II

(£ மில்லியன்களில்)

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பாங்குத்தொழில் துறை

| | | | |
|---|---|---|---|
| பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள் | 35 | அரசாங்கப்பத்திரங்களும் ஏனைய பத்திரங்களும் | 255 |
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள். | 215 | நோட்டுக்கள் | 50 |
| ஏனைய பொறுப்புக்கள் | 55 | | |
| | 305 | | 305 |

வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | 5,975 | கையிருப்பு ரொக்கமும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கமும் | 455 |
| | | சொத்துக்கள் | 5,520 |
| | 5,975 | | 5,975 |

நிலை II வரை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கினிடம் உள்ள சொத்துக்களில் மாற்றம் எதுவுமே நேரவில்லை என்பதை அறியவும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இன்னும் எந்தவித மான திட்டவட்டமான நடவடிக்கையும் எடுக்க முனையவில்லை. அதனுடைய மொத்தப் பொறுப்புக்களிலும் மாற்றம் ஏதும் நேர்ந்து விடவில்லை—ஒருவகையான பொறுப்புக்கள் குறைந்து, அதே அளவுக்கு இன்னொரு வகையான பொறுப்புக்கள் அதிகரித்துள்ளன. வாணிபப் பாங்குகளைப் பொறுத்தவரையில் அவற்றின் நிலையான 8% ரொக்க விகிதம் சிறிது குறைந்துள்ளது. இந் நிலையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு வாணிபப் பாங்குகளின் உதவிக்கு வராவிட்டால், இவை தங்களுடைய சொத்துக்களின் அளவினைக் குறைப்பதைத் தவிர வேறு வழியில்லை. இவ்வாறு வாணிபப் பாங்குகள் சொத்துக்களைக் குறைக்கும் பட்சத்தில், நாட்டில் புழக்கத்திலுள்ள பணமும் குறைய நேரிடும். 8% ரொக்க விகித அளவினை மீண்டும் நிலை நிறுத்தப் பாங்குகட்கு இன்னும் £ 23 மில்லியன்கள் ரொக்கம்[1] தேவைப்படுகின்றது. எனவே வாணிபப் பாங்குகள் உடனடியாகத் தாங்கள் உண்டியல் கழிவகங்கட்குக் கொடுத்துள்ள நாள் நிலுவைக் கடன்களில் £ 23 மில்லியன்களைத் திரும்பப் பெறமுனையும். வாணிபப் பாங்குகட்குப் பணத்தைத் திரும்பச் செலுத்த வேண்டியிருப்பதால், உண்டியல் கழிவகங்கள் தங்களிடமுள்ள கருவூல உண்டியல்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் விற்கும். 'பின்புற வழி' முறையில் கருவூல உண்டியல்களை விற்று தங்களுக்குத் தேவையான பணத்தை உண்டியல் கழிவகங்கள் பெறுகின்றன என்று வைத்துக் கொண்டால் உண்டியல் கழிவு மார்க்கெட்டின் நடவடிக்கையால் மார்க்கெட்டில் நிலவும் வீதங்கள் எந்த வகையிலும் பாதிக்கப்பட

[1] தேவைப்படும் ரொக்கம் £ 23 மில்லியன்களேயன்றி, £ 25 மில்லியன்கள் அல்ல. ஏனெனில் வாணிபப் பாங்குகளின் டெபாசிட் பொறுப்புக்கள் £ 25 மில்லியன்கள் குறைந்தபின் பாங்குகட்குத் தேவைப்படும் ரொக்கம் £ 25 மில்லியன்கள் அல்ல £ 25 மில்லியன்களில் 8%. (= £ 2 மில்லியன்கள்) போக மீதமுள்ளதே பாங்குகட்குத் தேவைப்படும் ரொக்கமாகும்.

மாட்டா. 'பின்புற வழி' முறையிலன்றி 'முன்புற வழி' (The front door) முறையில் அதிகார பூர்வமான பாங்கு வீதத்தில் உண்டியல் கழிவகங்கள் பணம் புரட்ட வேண்டிய கட்டாயம் நேர்ந்தால், மார்க்கெட் வீதங்கள் சிறிது அதிகமாகும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கினிடமிருந்து தாங்கள் பெறும் பணத்திற்கு மார்க்கெட் வீதங்களைவிட அதிகமான வீதத்தை உண்டியல் கழிவகங்கள் கொடுக்க வேண்டியிருப்பதால் இதுபோன்ற ஒரு சூழ்நிலை உருவாகியது.

'பின்புற வழி' முறையில் மார்க்கெட்டுக்கு உதவினாலும், அல்லது 'முன்புற வழி' முறையில் மார்க்கெட்டுக்கு உதவினாலும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் இருப்பு நிலைக்குறிப்பில் ஏற்படும் விளைவுகள் ஒன்றாகவே அமைந்திருக்கும். வாணிபப் பாங்குகள் தாங்கள் உண்டியல் கழிவகங்கட்குக் கொடுத்துள்ள நாள் நிலுவைக் கடன்களில் £ 23 மில்லியன்களைத் திரும்பப் பெற முனையும் போது, உண்டியல் கழிவகங்கள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் கருவூல உண்டியல்களை விற்கின்றன. இதனால் தாற்காலிகமாக இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பாங்குத் தொழில் துறையில் நேரக்கூடிய மாற்றங்களைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள நிலை III குறிக்கின்றது.

(£ மில்லியன்களில்)

| | | | |
|---|---|---|---|
| பொதுத் துறைகளின் டெபாசிட்டுக்கள் | 35 | அரசாங்கப்பத்திரங்களும் ஏனைய பத்திரங்களும் | 278 |
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் | 215 | நோட்டுக்கள் | 50 |
| ஏனைய பொறுப்புக்கள் (இதில் உண்டியல் கழிவகங்களின் கணக்குகளும் அடங்கும்) | 78 | | |
| | 328 | | 328 |

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இவ்வாறு £ 23 மில்லியன்களுக்கு கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்கியுள்ளது. (இதனால் அதனுடைய 'அரசாங்கப் பத்திரங்களும் ஏனைய பத்திரங்களும்' என்ற இனத்தின் மதிப்பு £ 255 மில்லியன்களிலிருந்து £ 278 மில்லியன்களாக உயர்ந்துள்ளது). தன்னிடமுள்ள உண்டியல் கழிவகங்களின் கணக்கில் இந்தத் தொகையை—அதாவது £ 23 மில்லியன்களை—தலைமைப் பாங்கு வரவு வைக்கின்றது. (இதனால் அதனுடைய 'ஏனைய பொறுப்புக்கள்' என்ற இனம் £ 55

மில்லியன்களிலிருந்து £ 78 மில்லியன்களாக உயர்ந்துள்ளது.) இதன் பின் உண்டியல் கழிவகங்கள் £ 23 மில்லியன்களுக்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் மேல் செக்குக்களை வரைந்து அவற்றை வாணிபப் பாங்குகளிடம் கொடுக்கின்றன. வாணிபப் பாங்குகள் (செக்குத் தீர்வகத்தின் மூலம்) இந்தச் செக்குகளை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் செலுத்துகின்றன. தன்னிடமுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' என்ற இனத்தின் கீழ் இந்தத் தொகையை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு வரவு வைக்கின்றது. இதற்கு ஈடாக 'ஏனைய டெபாசிட்டுக்கள்' என்ற இனம் குறைக்கப்படுகின்றது. இவ்வாருக நேரும் மாற்றங்களைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள நிலை IV விளக்குகின்றது.

இதற்குப்பின், தங்களுடைய கல்லாப் பணமும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள தங்களுடைய ரொக்க இருப்புக்களும், ஒன்றுக்கொன்று ஆரம்பத்தில் எந்த விகிதத்தில் அமைந்திருந்தனவோ, அதே விகிதத்தில் அவற்றை மாற்றி அமைக்கும் முயற்சியில் வாணிபப் பாங்குகள் ஈடுபடும். தங்களிடமுள்ள நோட்டுக்களில் £ 1 மில்லியனை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் வாணிபப் பாங்குகள் செலுத்தி விடுவதால், பழைய விகிதத்தை மீண்டும் நிலைநிறுத்த முடியும். இந்த ஏற்பாட்டால் வாணிபப் பாங்குகளின் இருப்பு நிலைக் குறிப்பில் எந்தவிதமான மாற்றத்தையும் காணமுடியாது. ஆனல் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' £ 1 மில்லியன் அதிகமாகும். இதற்கு ஈடாக 'பாங்குத் தொழில்துறையில் "நோட்டுக்கள்' என்ற இனத்தின் மதிப்பு £ 1 மில்லியன் உயரும்.

## நிலை IV

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பாங்குத் தொழில் துறை

| | | | |
|---|---|---|---|
| பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள் | 35 | அரசாங்கப்பத்திரங்களும் ஏனைய பத்திரங்களும் | 278 |
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் | 239 | நோட்டுக்கள் | 51 |
| ஏனைய பொறுப்புக்கள் | 55 | | |
| | 329 | | 329 |

**வாணிபப் பாங்குகள்**

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | 5,975 | கையிருப்பு ரொக்கமும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கமும் | 478 |
| | | சொத்துக்கள் | 5,497 |
| | 5,975 | | 5,975 |

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்கியமையால், வாணிபப் பாங்குகள், தங்களுடைய ரொக்க விகிதத்தை 8% ஆக நிலை நிறுத்த முடிகின்றது. கல்லாவிலுள்ள ரொக்கம், (இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள ரொக்கம்) ஆகிய இருவகையான ரொக்கங்கட்கும் இடையே தங்களுக்குச் சொந்தமான ரொக்கத்தைப் பாங்குகள் தாங்கள் விரும்பும் வண்ணம் பகிர்ந்து கொள்ளமுடிகின்றது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் பரம்பரை பரம்பரையாக அநுசரிக்கப்பட்டு வரும் பாங்குவீத முறை கைக்கொள்ளப்பட்டாலும் அல்லது தற்காலத்தில் மையப் பாங்கு கண்டு பிடித்துள்ள 'பின்புற வழி' முறை, கைக்கொள்ளப் பட்டாலும் நேரக்கூடிய விளைவு ஒன்றுதான்—அதாவது, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நடவடிக்கையால் தங்களுடைய பொறுப்புகளுக்குப் போதுமான அளவு ரொக்கத்தை வாணிபப் பாங்குகளால் பெற முடிகின்றது—பொதுமக்கள் சில சமயங்களில் வழக்கத்திற்கு விரோதமாக வாணிபப் பாங்குகளிடமிருந்து பெருமளவில் நோட்டுக்களை எடுத்துக்கொள்ள முயலும் காலங்களிலும், ரொக்கத்திற்கு மூலாதாரமாகத் திகழும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கை அணுகித் தங்களிடமுள்ள கருவூல உண்டியல்களை விற்று, வாணிபப் பாங்குகள் தங்களுடைய நிலையான ரொக்க விகிதமாகிய 8%ஐ மீண்டும் நிறுவமுடியும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கடை நிலைக்கடன் ஈவோனாகத் திகழ்வதனால் எந்த வகையான சூழ் நிலையிலும், தங்களது தொழிலை இடையூறு இன்றி நடத்தத் தேவைப்படும் ரொக்கத்தை வாணிபப் பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து உறுதியாகப் பெற முடிகின்றது. நாம் இதுகாறும் விவாதித்த இரண்டு முறைகட்கும்—'முன்புற வழி முறை' 'பின்புற வழிமுறை' ஆகிய இரண்டிற்கும்—இடையே ஒரே ஒரு வேறுபாடு (அதுவும் முக்கியமான வேறுபாடு) இருக்கின்றது. 'முன்புற வழிமுறை'யை அநுசரித்து இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மார்க்கட்டுக்கு உதவும்போது—அதாவது தான் ஒரு கடை நிலைக் கடன் ஈவோன் என்ற முறையில் உதவுபபோது—மார்க்கெட்டில் நிலவும் குறுங்கால

வட்டி வீதங்கள் பாதிக்கப்படுகின்றன—அவை சிறிது உயருகின்றன. ஆனால் 'பின்புற வழிமுறை'யில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்குதான் என்பதை நாம் மறந்துவிடலாகாது. இவ்வாறு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ரொக்கத்திற்கு மூலாதாரமாகத் திகழ்வதால், அது மார்க்கெட்டிற்கு உதவி செய்யும்போது தான் விரும்பும் வட்டிவீதத்தில் கடன் கொடுத்து மார்க்கெட்டில் நிலவும், வட்டிவீதங்களைத் தான் விரும்பும் வண்ணம் மாற்றி அமைக்க முடியும்.

## 5. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் ஏனைய வெளி மார்க்கெட் நடவடிக்கைகள்

எந்த நோக்கத்துடன் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கடைநிலைக்கடன் ஈவோனகச் செயல்படத் தொடங்கியதோ, அந்த நோக்கம் சீரியமுறையில் நிறைவேற்றப்பட்டு விட்டது என்று நாம் கருத இடம் உள்ளது.—தற்சமயம் வாணிபப் பாங்குகள் ஒரு நிலையான ரொக்க விகிதத்தின் அடிப்படையில் தங்கள் நடவடிக்கைகளை ஒழுங்கு செய்கின்றன. இந்த நிலையான ரொக்க விகிதம் 8%ஐ யொட்டியதாக அமைந்துள்ளது. வாணிபப் பாங்குகள் இந்த நிலையான ரொக்க விகிதத்தை 8% விகிதத்தை – காக்கத் தேவைப்படும் ரொக்கத்தை எந்த நிலையிலும் தன்னிடமிருந்து அவை பெறுவதற்கான வழிகளை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ஏற்படுத்தியுள்ளது. இதன் விளைவாக உண்டியல் கழிவு மார்க்கெட்டின் மூலமும்தான் குறிக்கும் ஒரு வட்டி வீதத்திலும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ரொக்கத்தை வழங்கி வருகின்றது. எனவே மேற்போக்காக நோக்குங்கால், 'வாணிபப் பாங்குகள் தங்கள் விருப்பப்படி மொத்த டெபாசிட்டுக்களைத் தாங்களே நிர்ணயித்துக் கொள்ளமுடியும். ஏனெனில் இவ்வாறு அவை நிர்ணயம் செய்யும் மொத்த டெபாசிட்டுக்களுக்கு ஈடாக வைத்திருக்கத் தேவைப்படும் ரொக்கத்தை, வாணிபப் பாங்குகள் தடையின்றி இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து பெற முடியும், என்றவாறெல்லாம் எண்ணத் தோன்றும். மேலும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கடை நிலைக் கடன் ஈவோனகத் திகழுவதால், நாட்டின் பண அளிப்பு நிலையைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தைத் துறந்துவிட்டது போலும்—என்றும் எண்ணத் தோன்றுகின்றது. இவை தவறான முடிவுகள் என்பதை ஏற்கனவே நாம் ஓரளவுக்குக் குறிப்பால் உணர்த்தியுள்ளோம். மார்க்கெட்டுக்குப் பண உதவி செய்யும்போது, தான் விரும்பிய கழிவு வீதத்திலேயே (அதாவது குறுங்காலக் கடன்களுக்கான வட்டி வீதம்) இங்கி

லாந்துத் தலைமைப் பாங்கு உதவி செய்ய முன்வருகின்றது என்ற உண்மையை, நாம் ஏற்கனவே அறிவோம். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு நாட்டிலுள்ள பண அளிப்பு நிலையை இந்த ஒரு முறையிலேதான் கட்டுப்படுத்த முடியும் என்று முடிவு கட்டிவிடக் கூடாது. தலைமைப் பாங்கு வேறு பல வழிகளிலும் கட்டுப்படுத்த முடியும். அந்த வேறு பல வழிகள் குறித்து நாம் இதுகாறும் ஏதும் கூறவில்லை. இனிக் கூறுவோம்.

இதே அத்தியாயத்தின் முந்திய 'உட்பிரிவில்' நாம் கொடுத்துள்ள 'விஷயச் சுருக்க அட்டவணை' உதாரணத்தை வாசகர்கள் மீண்டும் ஒருமுறை உற்று நோக்கவேண்டும். அந்த அட்டவணைகளின் அடிப்படையில், 'இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, மார்க்கெட்டிற்கு உதவிசெய்யும்போது, மார்க்கெட்டில் நிலவும் கருவூல உண்டியல் கழிவு வீதத்தை அது மாற்றி அமைக்கமுடியும்' என்ற முடிவுக்கு நாம் வரமுடியும். மேலும் மார்க்கெட்டில் முன்பு நிலவிய நிலை இப்பொழுது இல்லை என்பதையும் முன்பிருந்த நிலையில் சிறிது மாற்றங்கள் நேர்ந்துள்ளன என்று அறியலாம். முந்திய உட்பிரிவில் நாம் கொடுத்துள்ள உதாரணத்தில், இறுதி நிலையில் இரண்டு குறிப்பிடத்தக்க நிகர விளைவுகள் நேர்ந்துள்ளதை நாம் காணலாம்—முதலாவதாக, ஆரம்பத்தில் இருந்ததைவிட மொத்தப் பாங்கு (சாதாரண) டெபாசிட்டுகள் (பொது மக்களிடமுள்ள பணத்தின் அளிப்பு நிலை) £ 25 மில்லியன்கள் குறைந்திருப்பதை உணரலாம்; இரண்டாவதாக, ஆரம்பத்தில் இருந்ததைவிட, வாணிபப் பாங்குகளின் பணமார்க்கெட் சொத்துக்கள் £ 23 மில்லியன்கள் குறைந்திருக்கின்றன என்பதையும் அறியலாம். நாம் மேலே குறித்த உதாரணத்தில் வாணிபப் பாங்குகளின் சொத்தினங்களாகிய முதலீடுகள், (Investments) அட்வான்சுகள் ஆகியவற்றின் அளவுகள் வெவ்வேறு நிலைகளிலுங்கூட எந்த விதமான மாற்றமும் அடையவில்லை என்றும், அவை குறிப்பிட்ட அளவின என்றும், வைத்துக் கொண்டோம். எனவே, பண மார்க்கெட் சொத்துக்களின் வீழ்ச்சி வீதத்தை மொத்த டெபாசிட்டுக்களின் வீழ்ச்சி வீதத்தோடு நாம் ஒப்பிட்டால், பணமார்க்கெட் சொத்துக்களின் வீழ்ச்சி வீதம் மிக அதிகமானது என்று அறிந்துகொள்ளலாம். மேற்குறித்த இரண்டு நிகர விளைவுகளில், முதலாவது மாற்றத்தால்—அதாவது மொத்தப் பாங்கு (சாதாரண) டெபாசிட்டுக்கள் குறைவதால்—பொதுமக்களின் நீர்மைத்தன்மை குறைந்து விடுகின்றது. இரண்டாவது மாற்றத்தால்—அதாவது வாணிபப் பாங்குகளிடமுள்ள பணமார்க்கெட் சொத்துக்கள் குறைவதால்—பாங்குகளின் நீர்மைத்தன்மை குறைந்து விடுகின்றது. இத்தகைய மாற்றங்கள் பெருமளவில் நேர்ந்து நீடித்துக்கொண்டே

இருந்தால், பொதுமக்களும் பாங்குகளும் தங்களுடைய நீர்மைத் தன்மையைச் சீர்செய்வதில் ஈடுபடுவர். பொது மக்களும் பாங்குகளும் மூலதன மார்க்கெட்டில் (Capital market) அரசாங்கப் பத்திரங்களை விற்கமுனைவர் அல்லது புதிய பத்திரங்களை வெளியிட்டுப் பணம் திரட்டுவதில் ஈடுபடுவர். இவ்வாறு அதிக அளவில் மூலதன மார்க்கெட்டில் பத்திரங்கள் விற்பனை செய்யப் படுவதால் பொதுவாக வட்டி வீதங்கள் உயர ஆரம்பிக்கும். வட்டி வீதங்களின் உயர்வால் நாட்டில் பணச் சுருக்கத்திற்கு (Deflation) உரிய அறிகுறிகள் தோன்ற ஆரம்பிக்கும்—விலைகள் குறையும் வேலை வாய்ப்புக்கள் அருகும். இவ்வாறு பணச் சுருக்க விளைவுகள் ஏற்படுவதைக் தடுக்க விரும்பினால் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு திட்ட வட்டமான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். நடவடிக்கைகளின் நோக்கம், பாங்கு (சாதாரண) டெபாசிட்டுக்களின் வீழ்ச்சியைச்சரிக்கட்டும் வகையில் அமைய வேண்டும். இந்த நோக்கத்தை நிறைவேற்றத் 'திறந்த குறுக்கு வழி' முறைமட்டிலும் போதுமானதாகாது.

பாங்கு (சாதாரண) டெபாசிட்டுக்களின் வீழ்ச்சியைச் சரி செய்யும் நோக்கத்துடன், முதலீடு செய்யும் பொதுமக்களிட மிருந்து இடைக்காலப் (Medium term) பத்திரங்களையும் நெடுங் காலப் பத்திரங்களையும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு விலைக்கு வாங்கவேண்டும். நாம் மேலே கொடுத்துள்ள உதாரணத்தின்படி தலைமைப் பாங்கு £ 25 மில்லியன்களுக்குப் பத்திரங்கள் வாங்க வேண்டியிருக்கும் ஆரம்பத்திலிருந்த நிலையை மீண்டும் அடை வதற்கு, நிலை IVன் பிரகாரம், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மார்க்கெட்டில் (பாங்குகளிடமும் உண்டியல் கழிவகங்களிடமும்) £ 23 மில்லியன்களுக்குக் கருவூல உண்டியல்களை விற்கவும் வேண்டும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கருவூல உண்டியல் களைப் 'பின்புற வழி' யில் (அது பத்திரங்களை வாங்குபோது கொடுக்கும் செலுத்தினங்களால் தற்செயலாக நேரக்கூடிய விளைவுகளை யொட்டி) விற்றுவிட முடியும். பத்திரங்களை வாங்கு வதும் கருவூல உண்டியல்களை விற்பதும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் ஒருங்கே நிகழ்த்தப்படும் செயல்கள் என்பது உண்மை யானாலும், நம்முடைய வசதி கருதி இந்த இரண்டு வகையான செயல்களும் ஒன்றிற்குப்பின் மற்றொன்றாக நேருகின்றன என்று வைத்துக்கொள்வோம். மேலே குறித்துள்ள நிலை IVக்குப்பின், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு முதலீடு செய்யும் மக்களிட மிருந்து £ 25 மில்லியன்களுக்கு அரசாங்கப் பத்திரங்களை (கருவூல உண்டியல்கள் நீங்கலாக உள்ள அரசாங்கப் பத்திரங்களை)

விலைக்கு வாங்குகின்றது என்று வைத்துக்கொள்வோம்.[1] தான் விலைக்கு வாங்கும் பத்திரங்கட்கு ஈடாக இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு டிராப்டுகளைக் (Drafts) கொடுக்கின்றது. டிராப்டுகளைப் பெற்ற மக்கள் அவற்றைத் தத்தம் பாங்குகளிடம் செலுத்திவிடுவர். வாணிபப் பாங்குகள் இந்த டிராப்டுகளை (செக்குத் தீர்வகத்தின் மூலம்) இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் அனுப்பிவைக்கின்றன. தலைமைப் பாங்கு இந்தத் தொகையை வாணிபப் பாங்குகளின் கணக்கில் வரவு வைக்கின்றது. எனவே 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' £ 25 மில்லியன்கள் அதிகமாகின்றன. இவற்றால் நேர்ந்துள்ள மாற்றங்களைக் கீழ்க்காணும் அட்டவணை விளக்குகின்றது.

## நிலை V

(£ மில்லியன்களில்)

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பாங்குத் தொழில் துறை[2]

| | | | |
|---|---|---|---|
| பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள் | 35 | அரசாங்கப் பத்திரங்களும் ஏனைய பத்திரங்களும் | 303 |
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் | 238+25=263 | | |
| ஏனைய பொறுப்புக்கள் | 55 | நோட்டுக்கள் | 50 |
| | 353 | | 353 |

1 இதுவும் நமது வசதி குறித்து எளிதாக்கப்பட்ட ஒரு ஏற்பாடேயாகும். இவ்வாறு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பத்திரங்களை விலைக்கு வாங்குவதானது உண்டியல் கழிவகங்களைப் பாதித்தாலும் பாதிக்கலாம். இடைக்காலப் பத்திரங்கட்கும் நெடுங்காலப் பத்திரங்கட்கும் மார்க்கெட்டில் உண்டியல் கழிவகங்கள் ஆதரவாக (அத்தியாயம் 3 லுள்ள உட்பிரிவு 4ல் விளக்கப்பட்டுள்ளதுபோல்) அமைந்துள்ளன. உண்டியல் கழிவகங்கள் தங்களிடமுள்ள பத்திரங்களை விற்றவுடன், தங்களிடமுள்ள கருவூல உண்டில்களின் இருப்பை அதிகரிக்க விரும்பலாம். அவ்வமயம் உண்டியல் கழிவகங்கட்குத் தேவைப்படும் கருவூல உண்டில்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு 'திறந்த பின்புற வழி' மூலம் ஏற்பாடு செய்யவேண்டியிருக்கும் (குறைந்த அளவிலுள்ள கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்கப் பலர் விரும்பிப் போட்டி ஏற்பட்டு அதனால் கருவூல உண்டியல்களின் மார்க்கெட் கழிவு வீதம்தான் விரும்பும் வீதத்தைவிடக் குறைந்து விடாமல் இருப்பதற்காக இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இவ்வாறு செய்யும்) இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அதிகமான அளவு கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்கியிருந்தால் என்ன நேருமோ அதேபோல இந்த நடவடிக்கையால் பாங்கு டெபாசிட்டுக்களிலும் ரொக்கக் காப்பு இருப்புக்களிலும் ஏற்படக்கூடிய விளைவுகள் சரிசெய்யப்படும். ஆனால் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அரசாங்கப் பத்திரங்களை விலைக்கு வாங்குவதால் (கருவூல உண்டியல்களை வாங்கும்போது நேர்ந்ததற்குமாறாக) பத்திரங்களின் விலை உயரும். (அதாவது உண்டியல் கழிவகங்கள் அரசாங்கப் பத்திரங்கட்கு ஆதரவாக அமைந்துள்ள படியால் பத்திரங்களை விற்க எண்ணும்; ஆனால் இவை விலைகள் உயரும்போது தான் விற்கும். இவ்வாறான விலை உயர்வு பொது மக்களையும் படிப்படியாகப் பத்திரங்களை விற்கத்தூண்டும். இவர்கள் தங்களிடமுள்ள பத்திரங்களை உண்டியல் கழிவகங்களிடம் விற்பர். இவ்வாறு உண்டியல் கழிவகங்கள் தங்களுடைய பத்திர இருப்பை மீண்டும் நிரப்பும்போது, தங்களிடமுள்ள கருவூல உண்டியல்களை மீண்டும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமே விற்கின்

**வாணிபப் பாங்குகள்**

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | 5,975+25=6,000 | கையிருப்பு ரொக்கமும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கினிடமுள்ள ரொக்கமும் | 503 |
| | | ஊதியச் சொத்துக்கள் (Earning Assets) | 5,497 |
| | 6,000 | | 6,000 |

வாணிபப் பாங்குகளின் டெபாசிட் பொறுப்புக்கள் இப்பொழுது £ 6,000 மில்லியன்களாகும். தங்களுடைய டெபாசிட் பொறுப்புக்களுக்கு ஈடாக அமைய எவ்வளவு ரொக்கம் தேவைப்படுமோ அதைவிட அதிகமான ரொக்கம் தங்களிடம் இருப்பதை வாணிபப் பாங்குகள் உணருகின்றன. தங்களிடமுள்ள மிகுதியான ரொக்கத்தைக் குறைத்துவிட்டு, £ 480 மில்லியன்கள் மட்டும் (£ 6,000 மில்லியன்களில் 8% £ 480 மில்லியன்களாகின்றது) ரொக்கமாக வைத்திருக்க விரும்புகின்றன. எனவே கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்கும் நோக்கத்துடன் பாங்குகள் உண்டியல் கழிவகங்களை அணுகுகின்றன. உண்டியல் கழிவகங்கட்குத் தற்சமயம் பணமுடை எதுவும் கிடையாது; மேலும் வாணிபப் பாங்குகளின் கருவூல உண்டியல் தேவையைப் பூர்த்தி செய்ய இயலாத நிலையில் அவை உள்ளன. எனவே மார்க்கெட்டில் புழக்கத்திலிருக்கும் உபரி ரொக்கத்தை அகற்றும் நோக்கத்துடன் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தன்னுடைய மாரக்கெட் நடவடிக்கையாளர் (market operator) மூலம் £ 23 மில்லியன்களுக்கு கருவூல உண்டியல்களை விற்கின்றது. இவ்வாறாகக் கீழே கொடுக்கப்பட்டிருக்கும் நிலை VI ஐ நாம் அடைகிறோம்.

---

றன. நாம் மேலே கொடுத்துள்ள உதாரணத்தில் இவ்வாறு அடுத்தடுத்து நேரும் நிகழ்ச்சிகளையெல்லாம் சுருக்கிக்கொண்டு பொது மக்கள தங்களிடமுள்ள பத்திரங்களை முதற்கண் விற்க முனைகின்றனர் என்று வைத்துக் கொண்டுள்ளோம்.

[2] இம்மாதிரியான நடவடிக்கைகளை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் 'பாங்குத் தொழில் துறை' மேற்கொள்கின்றது என்று இங்கு நாம் வைத்துக் கொண்டுள்ளோம். இது நமது வசதி குறித்து எளிதாக்கப்பட்ட ஒரு ஏற்பாடாகும். ஏனெனில் உண்மையிலேயே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தன்னிடமுள்ள இடைக்காலப் பத்திரங்களையும், நெடுங்காலப் பத்திரங்களையும் தனது 'வெளியீட்டுத் துறை'யிலேதான் வைத்திருக்கின்றது. 'வெளியீட்டுத் துறை' பத்திரங்களை விலைக்கு வாங்க எண்ணினால் அது தன்னிடமுள்ள கருவூல உண்டியல்களை 'பாங்குத்தொழில் துறை'க்கு மாற்றுவதன் மூலமே சாத்தியமாகும். இதன் பிறகு நாம் மேலே விளக்கியுள்ள முறைபபடி 'பாங்குத்தொழில் துறை' பத்திரங்களைத் தன்னிடம் விற்றவருக்குப் பணம் கொடுக்கும்.

## நிலை VI

(மில்லியன்களில்)

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பாங்குத் தொழில் துறை

| | | | |
|---|---|---|---|
| பொதுத்துறைகளின் டெபாசிட்டுக்கள் | 35 | அரசாங்கப் பத்திரங்களும் ஏனைய பத்திரங்களும் | 303-23[2]=280 |
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் | 263[1]—23=240 | | |
| ஏனைய பொறுப்புக்கள் | 55 | நோட்டுக்கள் | 50 |
| | 330 | | 330 |

### வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | 6,000 | கையிருப்பு ரொக்கமும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் உள்ள ரொக்கமும் | 503—23[1]=480 |
| | | ஊதியச் சொத்துக்கள் | 5,497+23[3]=5,520 |
| | 6,000 | | 6,000 |

நிலை VI ஐ நிலை I னுடன் இனி ஒப்பிட்டு நோக்குவோம். நிலை VI க்கும் நிலை I க்கும் இடையே ஒரே ஒரு மாற்றம்தான் காணமுடிகின்றது. இந்த மாற்றம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் நேர்ந்துள்ளது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள அரசாங்கப் பத்திரங்கள் முன்பிருந்ததைவிட இப்பொழுது £ 25 மில்லியன்கள் அதிகரித்துள்ளன, இதற்கு ஈடாக இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள அரசாங்கத்தின் இருப்புக்கள் £ 25 மில்லியன்கள் அதிகமாகியுள்ளன. இவ்வாறு அரசாங்க வரவு அதிகமானதை ஒட்டி நேர இருந்த பணச் சுருக்க நிலையை, அரசாங்கப் பத்திரங்களை (கருவூல உண்டியல்கள் நீங்கலாக உள்ள ஏனைய அரசாங்கப் பத்திரங்களை) விலைக்கு வாங்கியதன் மூலம், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தடை செய்துவிட்டது.

1 இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து (உண்டியல் கழிவகங்களின் மூலம்) வாணிபப் பாங்குகள் வாங்கிய கருவூல உண்டியல்களுக்காக £ 23 மில்லியன்கள் 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களில்' இருந்து குறைக்கப்பட்டிருக்கின்றது.

2 இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் மார்க்கெட்டில் விற்கப்பட்ட கருவூல உண்டியல்களின் மதிப்பே இந்த £ 23 மில்லியன்களாகும்.

3 இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து (உண்டியல் கழிவகங்களின் மூலம்) கருவூல உண்டியல்களை வாணிபப் பாங்குகள் விலைக்கு வாங்கியதால், அவற்றின் 'ஊதியச் சொத்துக்கள்' (Earning assets) முன்பு இருந்ததைவிட £ 23 மில்லியன்கள் அதிகமாகியுள்ளன.

நாம் மேலே விவரித்துள்ள வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் இரண்டாவது உலகயுத்தத்திற்குப் பிற்பட்ட காலத்தில் தான் பெருமளவில் வளர்ச்சியடைந்துள்ளன. எனவே தற்சமயம் மையப் பாங்கின் ஏனைய நடவடிக்கைகளைவிட வெளிமார்க்கெட் நடவடிக்கைகள் பெரிதும் வலியுறுத்தப்படுகின்றன. தேசீயக் கடனை நிருவகிக்கும் பணியில் முன்பு எப்பொழுதும் கண்டிராத அளவுக்குப் புதிய பிரச்னைகளை அரசாங்கத்தின் பாங்கர் என்ற முறையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு சமாளிக்க வேண்டியுள்ளது. முப்பது ஆண்டுகளுக்குள் இரண்டு மாபெரும் யுத்தங்கள் தொடுக்கப்பட்டதால் பெருமளவுக்கு அரசாங்கப் பத்திரங்களை வெளியிட வேண்டிய கட்டாயநிலை நேர்ந்தது. இவ்வாறு வெளியிடப்பட்ட பத்திரங்களில் சிறிதளவாவது ஒவ்வொரு ஆண்டும் கெடுவு காலத்தை அடைவதால் அவற்றிற்கான பணத்தைப் பட்டுவாடா செய்ய வேண்டியுள்ளது. இவ்வாறு ஒவ்வொரு ஆண்டும் கெடுவு காலத்தை அடையும் பத்திரங்களுக்கான பணத்தைத் திரும்பச் செலுத்துவதற்கும், தேசியமயமாக்கப்பட்டுள்ள தொழில்களுக்கான மூலதனத்தின் ஒரு பகுதியை ஏற்பாடு செய்வதற்கும், ஏற்றவகையில் ஆண்டுதோறும் அரசாங்கம் புதிய புதிய பத்திரங்களை வெளியிட்டுப் பணம் திரட்ட வேண்டியிருக்கின்றது. அரசாங்கத்தின் பாங்கு என்ற முறையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கெடுவு காலத்தை அடையும் பத்திரங்களுக்கான பணத்தைப் பட்டுவாடா செய்ய வேண்டியுள்ளது ; புதிய பத்திரங்களை வெயிடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியுள்ளது ; மேலும் இவ்வாறு வெளியிடப்படும் புதிய பத்திரங்களை விலைக்கு வாங்குவோர் தரும் பணத்தையும் ஏற்றுக்கொள்ள வேண்டியிருக்கின்றது. இதை ஒட்டி ஏற்படும் செலுத்தினங்கள் வரவினங்கள் ஆகியவையாவும் இறுதியில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பொதுத்துறைகளின் டெபாசிட்டுகட்கும்' 'பாங்கர்களின் டெபாசிட்டுகட்கும்' இடையிலேயேதான் தீர்வு பெறவேண்டியிருக்கும்—அதாவது நாம் மேலே கண்ட முறைப்படி 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களி' லிருந்து பணத்தைப் 'பொதுத்துறையினரின் டெபாசிட்டுக்களுக்கு' மாற்ற வேண்டியிருக்கும் அல்லது 'பொதுத்துறையினரின் டெபாசிட்டுக்களி' லிருந்து பணத்தைப் 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களுக்கு' மாற்றவேண்டியிருக்கும். இவ்வாறான பேரங்கள் பெருமளவில் நிகழுவதால் இவற்றால் நேரும் விளைவுகளை மட்டுப்படுத்தும் நோக்கத்தோடு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தனது நடவடிக்கைகளை—கருவூல உண்டியல்கள் அரசாங்கப் பத்திரங்கள் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகளை—ஏற்றவகையிம் அமைத்துக்கொள்ள வேண்டியிருக்கின்றது அரசாங்கம் மார்க்கெட்டில் கடன் எழுப்பும்போது இதற்குச் சாதகமான ஏற்பாடுகளைச் செய்யவேண்டியது

இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் கடமையாகும். அதே சமயம் அரசாங்க நிதி நடவடிக்கைகளால் அவ்வப்போது நேரக்கூடிய ஒழுங்கீனமான இடையூறுகளினின்றும் நாட்டின் பாங்குத் தொழிலைக் காக்கவேண்டிய கடமையும் இங்கிலாந்தின் தலைமைப் பாங்கையே சாரும். இவ்விரு காரணங்களாலும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பெருமளவில் இடையீடின்றித் தொடர்ந்து வெளி மார்க்கெட் நடவடிக்கைகளில் ஈடுபட்டுக்கொண்டே இருக்க வேண்டிய சூழ் நிலை உருவாகியுள்ளது.

அரசாங்கப் பத்திரங்களை வெளியிடுவதிலும் அவற்றை மீட்பதிலும் (Redemption) ஒரு புதியமுறை கையாளப்பட்டு வருகின்றது. ஒரு குறிப்பிட்ட தேதியில் சில நூற்றுக் கணக்கான மில்லியன்களுக்குப் பெருமளவில் பத்திரங்களை வெளியிடும் முறை இன்னும் நடைமுறையில் இருந்து வருகிறது. பத்திரங்களை மீட்பதிலும் இந்தப் பழக்கம் கையாளப்படுகிறது. ஆனால் இந்த இருமுறைகளும்—அதாவது பத்திர வெளியீடும் பத்திர மீட்பும்—உண்மையில் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. புதிதாகப் பத்திரங்களை வெளியிடும்போது பொதுமக்கட்கும், முதலீடு செய்யும் நிறுவனங்கட்கும், மொத்த வெளியீட்டில் ஒரு சிறு பகுதிதான் விற்பனை செய்யப் படுகின்றது. எஞ்சியுள்ள பத்திரங்கள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் 'வெளியீட்டுத்துறை'யைப் போய்ச் சேர்கின்றன. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இவற்றைப் படிப்படியாகச் சிறிது சிறிதாகப் பங்கு மார்க்கெட்டில் விற்கின்றது. இம்மாதிரியான விற்பனை அடுத்த சில மாதங்கள் வரையோ, அடுத்த சில ஆண்டுகள் வரையோ நீடிக்கலாம். இதேபோல, ஒரு குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த பத்திரங்கள் கெடுவு காலத்தை நெருங்கும் போது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அவற்றைப் பங்கு மார்க்கெட் மூலம் படிப்படியாகச் சிறிது சிறிதாக விலைக்கு வாங்குகின்றது. இவ்வாறு செய்வதால் கெடுவு நாளன்று மீட்கப்பட வேண்டிய பத்திரங்கள் ஒரு சிறு அளவினதாகவே இருக்கும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு புதிதாக 'வெளியிடப் பட்ட' பத்திரங்களையும் கெடுவுகாலத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் பத்திரங்களையும் தன்னிடம் வைத்திருககின்றது, இவற்றைப் 'பாங்கு விவர அறிக்கை' (Bank Return) யின் 'வெளியீட்டுத் துறை' என்ற பகுதியில் 'அரசாங்கப் பத்திரங்கள்' என்ற தலைப்பில் காணலாம். பங்கு மார்க்கெட்மூலம் அரசாங்கப் பத்திரங்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மேற் கூறியவாறு விற்பதும் வாங்குவதும். நாம் இதே அத்தியாயத்தில் முந்திய உட்பிரிவில் விளக்கிய வண்ணம், பாங்குகளின் நீர்மைத் தன்மையைப் பாதிக்கும்—பத்திர விற்பனை பாங்குகளின் நீர்மைத்

தன்மையைக் குறைக்கும்; பத்திரங்களை வாங்குவது பாங்குகளின் நீர்மைத்தன்மையை அதிகரிக்கும்.

இவ்வாறு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, பங்கு மார்க்கெட்டில் நடத்தும் பத்திரம் பற்றிய நடவடிக்கைகள் அது உண்டியல் கழிவு மார்க்கெட்டில் எடுக்கும் நடவடிக்கைகளைப் பலவிதத்திலும் ஒத்திருக்கின்றன. உண்டியல்கழிவு மார்க்கெட்டில், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நடவடிக்கைகளால் கருவூல உண்டியல்கள் ரொக்கமாக மாற்றப்படுகின்றன; ரொக்கம் கருவூல உண்டியல்களாக மாற்றப்படுகின்றது. உண்டியல் கழிவு மார்க்கெட்டில் இவ்வாறு நடவடிக்கைகள் எடுப்பதால், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ரொக்கத்தை ஒழுங்கு படுத்திக் கருவூல உண்டியல் வீதத்தையும், தான் விரும்பும் வண்ணம் மாற்றி அமைக்கின்றது. கருவூல உண்டியல்கள் ரொக்கமாக மாற்றப்படுவது, ரொக்கம் கருவூல உண்டியல்களாக மாற்றப்படுவது ஆகிய நிகழ்ச்சிகள் இந்தக் கருவூல உண்டியல் வீதத்திலேயே நடைபெறுகின்றன. (கருவூல உண்டியல் வீதங்களைப் பொறுத்தவரையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மிகுந்த செல்வாக்கு உடையதாகத் திகழ்கிறது) இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் 'வெளியீட்டுத்துறை'யின் அதிகாரப் பூர்வமான பங்கு மார்க்கெட் நடவடிக்கைகளைப் பொறுத்தவரையில், நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களின் அளிப்பு நிலையை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் ஒழுங்கு படுத்தமுடிகின்றது. உண்மையில் பங்கு மார்க்கெட்டில் அரசாங்கப் பத்திரங்கள், பாங்குகளின் நீர்மைத் தன்மை சொத்துக்களாக மாறுகின்றன என்று கூறலாம். தனது பங்கு மார்க்கெட் நடவடிக்கைகளால் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு நெடுங்கால பத்திரங்களின் வட்டி வீதங்களின் மேல் ஓரளவுக்குத் தனது செல்வாக்கைப் பிரயோகிக்க முடிகின்றது. (நெடுங்காலப் பத்திரங்கள் நீர்மைத் தன்மை சொத்துக்களாக மாற்றப்படுவதும் நீர்மைத் தன்மை சொத்துக்கள் நெடுங்காலப் பத்திரங்களாக மாற்றப்படுவதும் இந்த நெடுங்கால வட்டி வீதங்களிலே நடைபெறுகின்றன.) ஆனால் நெடுங்கால வட்டி வீதங்களைப் பொறுத்த வரையில், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கே பெருமளவு செல்வாக்குப் பெற்றிருக்கின்றது என்று கொள்ளமுடியாது. எதிர்காலம் பற்றிய மக்களின் கருத்துக்களே, நெடுங்கால வட்டி வீதங்களைத் தீர்மானிக்கும் ஆற்றலுடைய சக்திகளாகத் திகழ்கின்றன. இருப்பினும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நடவடிக்கைகளின் செல்வாக்கும் இன்றியமையாததாகவே விளங்குகின்றது. குறிப்பாக 1958-ஆம் ஆண்டின் அநுபவம் இக்கருத்தை வலியுறுத்துகின்றது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் பத்திரங்கள் சம்பந்தப்பட்ட நடவடிக்

கைகள், அதனுடைய கருவூல உண்டியல்கள் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகளின் அளவுக்குத் தற்சமயம் வளர்ந்து விட்டன என்று கூறலாம். எனவே, மையப் பாங்கின் ஏனைய நடவடிக்கைகளைக் காட்டிலும், அதனுடைய வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் பெரிதும் வலியுறுத்தப் படுகின்றன. மையப் பாங்கின் உள் நாட்டுப் பணிகளைப் பொறுத்த வரையில் தேசீயக் கடனை நிருவகிக்கும் பணியையே தலையாய பணியாகக் கருதவேண்டும் என்று ரேட்கிளிஃப் குழுவினர் கருத்துத் தெரிவித்துத்துள்ளனர். குறுங்கால அரசாங்கப் பத்திரங்களின் அடிப்படையிலும், நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களின் அடிப்படையிலும், மையப் பாங்கு எடுக்கும் நடவடிக்கைகள் நாட்டிலுள்ள நிதி நிறுவனங்களின் நீர்மைத் தன்மையைப் பெரிதும் மாற்றி அமைக்கின்றன; மேலும்நாட்டில் நிலவும் வட்டி வீதங்களின் அளவுகளும் மாற்றி அமைக்கப்படுகின்றன. நீர்மைத்தன்மையையும் வட்டி வீதங்களையும்மாற்றி அமைப்பதின் மூலம் மையப் பாங்காய் நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளின் போக்கை மாற்றி அமைக்க முடிகின்றது.

# 6. வெளிநாட்டுப் பேரங்களும் பாங்கு முறையும்

## 1. வெளிநாட்டுச் செலுத்தினங்களும் (Payments) வரவுகளும் (Receipts)

கடைசியாக நாம் விளக்கிய நான்கு அத்தியாயங்களிலும் நாம் பெரும்பாலும் வெளி உலகத்தைப் புறக்கணித்து விட்டோம் என்றே சொல்லவேண்டும்; பாங்கின் பேரங்கள் (Transactions) யாவும் ஒரு நாட்டின் எல்லைக்குள் அடங்கியவை என்று வைத்துக்கொண்டோம். கடன்களைத் தீர்ப்பதற்காகப் பாங்கு டெபாசிட்டுக்கள் ஒருவரிடமிருந்து இன்னொருவருக்கு மாற்றப்படுகின்றன என்றும், கடனாளி (Debtor) தன்னிடம் வாங்கிய கடனைத் திருப்பித் தரும் போது கடன் ஈந்தவர் (creditor) பாங்கு டெபாசிட்டுக்களே போதுமானவை என்று மன நிறைவு கொள்கின்றார் என்றும் வைத்துக் கொண்டோம். சிறு சிறு செலுத்தினங்கட்குத் தேவைப்படும் ரொக்கப் பணம் (cash) தவிர, ஏனையவற்றை மக்கள் டெபாசிட்டுக் களாகவே வைத்திருக்க விரும்புகின்றனர் என்றும் நாம் வைத்துக் கொண்டோம். கடனாளியும் கடன் ஈவோரும் ஒரே நாட்டைச் சேர்ந்தவர்கள் என்று கொண்டாலன்றி மேற்குறித்த எடுகோள்கள் (Assumptions) பொருந்தாது. உண்மையில், பல பேரங்கள் நாட்டின் எல்லைக்குள் மட்டும் அமைந்து விடுவதில்லை ; நாட்டு எல்லைகளைத் தாண்டி வெளி நாடுகளுடனும் தொடர்பு உடையனவாக இருக்கின்றன. பொருள்கள் இறக்குமதி ஏற்றுமதி செய்யப்படுகின்றன; யாத்திரீகர்கள் ஒரு நாட்டினின்றும் மற்றொரு நாட்டிற்கு வியாபார நிமித்தமோ, ஓய்வு நாட்களைச் செலவிடும் நோக்கத்தோடோ செல்லுகின்றனர். அன்னார் வெளி நாடுகளில் தங்கள் நாட்டுப் பணத்தின் மூலம் செலுத்தினங்கள் செய்ய முடியாது; அந்தந்த நாட்டுப் பணத்தினைக்கொண்டுதான் செலுத்தினங்கள் செய்ய முடியும். உள்நாட்டில் நாம் பிறருக்குக் கொடுக்க வேண்டிய

கடனைத் தீர்த்துக்கொள்வதற்குப் பாங்கில் நமது கணக்கில் இருக்கும் டெபாசிட்டுக்களைப் பயன்படுத்துகிறோம்; ஆனால் வெளிநாடுகளில் உள்ள மக்களுக்கு நாம் கொடுக்கவேண்டிய கடனைத் தீர்ப்பதற்காக நம்முடைய நாட்டில் நமது கணக்கிலுள்ள டெபாசிட்டுக்களைப் பயன்படுத்த முடியாது. கடல் வாணிபத்தில் சிறந்து விளங்கும் நாடுகள் தங்களது வெளிநாட்டுக் கப்பல் பணிகள் மூலம் வருவாய்களைப் பெறுகின்றன. இந்தப் பணிகளைப் பயன்படுத்துவோருக்குச் செலவு இனங்கள் ஏற்படுகின்றன. இவ்வாறான பேரங்களில் வரவினங்களும், செலுத்தினங்களும் (Payments) கடன் ஈவோருக்கும், கடனாளிக்கும் இடையில் ஒரே நாட்டுப் பணத்தினால் தீர்வு பெறுவதில்லை. வேறொரு நாட்டு மக்களுக்குத் தாங்கள் செய்யும் சேவை (Service) கட்கும், ஒரு நாட்டுமக்கள் செலுத்தினங்கள் (Payments) பெறுகின்றனர். உதாரணமாக, பிரிட்டிஷ் மக்கள் கண்டு களிக்கும் அமெரிக்கத் திரைப்படங்கட்குப் பிரிட்டன் உரிமை ஊதியம் (Royalty) அளிக்கவேண்டியுள்ளது. நாடுவிட்டு நாடு குடியேற விரும்புபவர் தாம் குடியிருந்த நாட்டில் சேமித்து வைத்துள்ள பணம் யாவற்றையும், தாம் குடியேறப்போகும் நாட்டிற்குக் கொண்டு செல்லவே விரும்புவார். எனவே தமது சேமிப்புக்களைத் தாம் குடியேறப்போகும் நாட்டின் பணமாக அவர் மாற்றவேண்டியிருக்கிறது. வெளிநாட்டில் குடியேறிய பின் அங்கிருந்து கொண்டே தமது உறவினர்கட்கு (தனது தாய் நாட்டில் இருப்பவர்கட்கு) பண உதவி செய்யலாம். 'வெளிநாட்டுப் பேரங்கள்' என்ற தலைப்பின் கீழ் மற்றொரு 'இன'த்தையும் நாம் காணலாம். அது பன்னாட்டு மூலதனம் (International capital) ஒரு நாட்டினின்றும், மற்றொரு நாட்டினை நோக்கிச் செல்வதைப்பற்றியதாகும். உதாரணமாக, மத்திய கிழக்கு நாடு ஒன்றில் எண்ணெய்க் குழாய் அமைப்பு வேலையில் ஈடுபட்டிருக்கும் அமெரிக்க நிறுவனம் ஒன்று, அந்த நாட்டில் பெருமளவு பணம் செலவிடவேண்டி நேரிடும். ஓர் அரசாங்கம் மற்றொரு நாட்டு அரசாங்கத்திற்குக் கடனுதவி செய்யும்போதும், இது போன்றதொரு நிலையே ஏற்படுகின்றது. கடன் கொடுக்கும் நாட்டின் பணம்தான், கடன்பெறும் நாட்டில் கடன் தொகையாகப் போய்ச் சேரும் என்று எண்ணிவிடக்கூடாது; கடன் கொடுக்கும் நாட்டினதல்லாத வேறு நாட்டின் பணமே இறுதியில் கடன் வாங்கும் நாட்டிற்குக் கடன் தொகையாகப் போய்ச் சேரும், (கடன் கொடுக்கும் நாட்டில் பொருள்கள் வாங்குவதற்காகவே மேற்படிக் கடன் பெறப்படுகின்றது என்று வைத்துக் கொண்டால், இம்மாதிரியான ஒரு நிலை ஏற்படாது) அயல்நாட்டினின்றும் வாங்கிய கடனுக்கு வட்டி கொடுக்கும்போதும், வெளிநாடுகளினின்றும் வாங்கிய பழைய கடனைத் திரும்பக் கொடுக்கும், அயல்நாட்டுப் பங்குதாரர்களுக்கு இலாப ஈவு (Dividend) கொடுக்

கும்போதும், ஒரு குறிப்பிட்ட நாட்டுமக்கள், வெளிநாட்டு மக்களுக்குச் செலுத்தினங்கள் (Payments) கொடுக்க வேண்டியதிருக்கலாம். வெளிநாட்டு மக்கள் இந்தச் செலுத்தினங்களைப் பெறும்போது, செலுத்தும் நாட்டிலுள்ள பாங்கு டெபாசிட்டுக்கள் அல்லது ரொக்கப் பணத்தை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள்.

பாங்குமுறை மேற்குறித்த 'வெளிநாட்டுப் பேரங்களை'ப் பொறுத்தவரையில் எந்த அளவுக்கு உதவியாக இருக்க முடியும் என்பதுபற்றியும், வெளிநாட்டுப் பேரங்களால் பாங்குமுறை எவ்வாறு பாதிக்கப்படுகின்றது என்பது பற்றியும், விளக்கங்கள் காண முயலுவதே இந்த அத்தியாயத்தின் முக்கிய நோக்கமாகும். வெளிநாட்டுப் பேரங்களின் அளவு எவ்வளவு? அவை எவற்றால் ஆகியவை? அவை காலத்திற்குக் காலம் ஏன் மாறுபடுகின்றன?— என்பனபோன்றவை குறித்து நாம் கவலைகொள்ள வேண்டியதில்லை. பாங்கு முறைகளை ஆராய்வதையே முக்கிய நோக்கமாகக் கொண்டுள்ள இந்தப் புத்தகத்திற்கும், அவற்றிற்கும், யாதொரு விதமான தொடர்பும் கிடையாது. 'பன்னாட்டு வாணிபக் கோட்பாடு' (Theory of International Trade) என்ற தனித்த பாடப் பகுதியில், அவற்றைப் பற்றி விவரமாகத் தெரிந்துகொள்ளலாம். வெளிநாட்டுப் பேரங்கள் தொடர்ச்சியாக நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன என்றும், அவற்றிற்கான செலுத்தினங்களை நாம் நாடுகட்குக் கொடுக்கவேண்டும் என்றும் நாம் தெரிந்துகொள்வது போதுமானதாகும். வெளிநாட்டுச் செலுத்தினங்களைப் (Payments) பொறுத்தவரையில் தமது வாடிக்கைக்காரர்கட்குப் பாங்குமுறையானது எந்த அளவுக்கு உதவி செய்ய முடியும் என்பதைப்பற்றி ஆராயவேண்டியதே நம்முடைய தலையாய குறிக்கோளாகும். மேலே நாம் 'உதவி செய்ய முடியும்' என்ற சொற்றொடரைப் பயன்படுத்தியிருப்பது மிகவும் பொருத்தமானதாகும். ஏனெனில், உள்நாட்டில் கடன்களைத் தீர்ப்பதற்குத் தாம் ஏற்பாடு செய்யும் வசதிகளைச் சிறிது விரிவாக்குவதன் மூலம் வெளிநாட்டுப் பேரங்களில் பெரும்பாலானவற்றைத் தீர்ப்பதற்குப் பாங்குகளால் உதவ முடிகின்றது. இரண்டு நாடுகள், இரண்டு எளிய உலோகப் பணமுறைகளைக் (metallic monetary systems) கைக்கொண்டுள்ளன என்று வைத்துக்கொள்வோம். அந்த உலோகம் தங்கம் என்றும் வைத்துக்கொள்வோம். அவ்வாறாயின் அந்த இரு நாடுகட்கும் இடையே நடைபெறும் பேரங்களை எளிதாக அந்த உலோகத்தின் துணைகொண்டு—அதாவது தங்கத்தின் துணைகொண்டு—எளிதில் தீர்த்துக்கொள்ள முடியும். அவ்வாறான நேரங்களில் கிடைக்கக்கூடிய தங்கத்தை, அந்தந்த நாடுகள் தங்கள் நாட்டின் செலாவணிகளாக மாற்றிக்கொள்ளும். இது

போலல்லாது தனித்தனியான பாங்கு முறைகளை உடைய இரண்டு நாடுகள் இருக்கின்றன என்று வைத்துக்கொள்வோம். அதாவது இந்த இரண்டு பாங்கு முறை களும் தனித்தனியே இயங்குவதால், ஒரு பாங்கு மற்றப் பாங்கின் டெபாசிட்டுக்களை ஏற்றுக்கொள்வதில்லை என்று நாம் வைத்துக்கொள்வோம். அவ்வாருயின் வெளிநாட்டுப் பேரங்களைத் தீர்த்துக்கொள்ள ஒரு பொதுவான—இரண்டு நாடுகளும் ஏற்றுக்கொள்ளக் கூடிய—உலோகம் ஒன்று தேவைப்படும். அந்த உலோகம் தங்கம் என்று நாம் வைத்துக்கொண்டால், பேரங்களினின்றும் கிடைக்கும் தங்கத்தை, நாட்டின் சட்டதிட்டங்கட்கு ஏற்ப அந்தந்த நாடுகள் தத்தம் நாட்டின் செலாவணிகளாக மாற்றிக்கொள்ளும். மேற் குறித்த இந்த இரண்டு உதாரணங்களிலும் பாங்கு முறை எந்த விதமான வசதிகளையும் ஏற்பாடு செய்ய வேண்டிய அவசிய மில்லை. இந்த இரண்டு முறைகளே கையாளப்படும் பட்சத்தில், பாங்கு முறையைப்பற்றிய விளக்கத்தில் வெளிநாட்டுப் பேரங்களைப் பற்றிச் சிறப்பாக எந்தவிதமான விளக்கமும் சேர்க்கப்பட வேண் டிய அவசியம் ஏதும் இல்லை. ஏனெனில் இந்த வெளிநாட்டுப் பேரங்கள் பாங்கு முறையை நேரடியாகப் பாதிப்பதில்லை. நாட்டி லுள்ள ரொக்க இருப்பைப் பாதிப்பதன் மூலம்தான் இந்த வெளி நாட்டுப் பேரங்கள் பாங்கு முறையைப் பாதிக்கமுடியும்.

வெளிநாட்டுப் பேரங்கட்குப் பாங்கு முறைகள் எந்த அளவுக்கு உதவி செய்ய முடியும் என்பது, வெளிநாடுகளில் அவை ஏற்படுத்தி யிருக்கும் கிளைகள் பரவலாக அமைந்திருப்பதையும் பொறுத்த தாகும். இவற்றைப் பொறுத்து வெளிநாட்டுப் பேரங்களில் பாங்கு முறைகளின் பங்கு நாட்டிற்கு நாடு வேறுபடுகின்றது. இங்கிலாந்து நாட்டுப் பாங்கு முறையின் வெளிநாட்டுத் தொடர்புகள், ஏனைய நாட்டு முறைகளைவிட, மிகவும் பலம் பொருந்தியவையாகவும், மிகப் பரவலாகவும் அமைந்துள்ளன. எனவே, வெளிநாட்டுப் பேரங்களைத் தீர்வுசெய்ய வேறுநாடுகள் கைக்கொள்ளும் முறை களில் காணப்படும் சிக்கல்களை விட இங்கிலாந்தில் கைக்கொள்ளப் படும் முறை மிகச் சிக்கல்கள் வாய்ந்ததாக உள்ளது. இந்த அத்தியாயத்தில் இங்கிலாந்தில் கைக்கொள்ளப்படும், சிக்கல்கள் மிக நிறைந்த முறையே விவரிக்கப்படும். சிக்கல்களின் தன்மைகள் முழுமையும் விவரிக்கப்படும் என்று எண்ணிவிடலாகாது ; இங்கி லாந்தில் கையாளப்படும் முறையின் சில முக்கியமான அம்சங்களே ஈண்டு ஆராயப்படும். சிக்கலான இங்கிலாந்து முறையினை ஒரு வர் புரிந்துகொள்ள முடியுமேயானுல், வேறு நாடுகளில் கையாளப் படும் எளிதான முறைகளைப்பற்றி அவர்களே யாதொரு துன்பமு மின்றி அறிந்துகொள்ள முடியும்.

இங்கிலாந்து வியாபாரி ஒருவர், பரேடேரியா (Barataria) நாட்டில் வசிக்கும் வெளிநாட்டு வியாபாரி ஒருவருக்குப் பணம் கொடுக்க வேண்டியிருக்கின்றது என்றும்,[1] இங்கிலாந்து வியாபாரி தனது நாட்டில் மிட்லண்ட் பாங்கில் (the Midland Bank) கணக்கு வைத்திருக்கின்றார் என்றும், அந்த அயல்நாட்டு வியாபாரி தனது நாட்டிலுள்ள ஜம்ப்லி கிரம்ப்லி (Jumbly—Crumbly) என்ற ஊரிலுள்ள 'மேற்கு பரேடேரியா பாங்கில்' (The Bank of Western Barataria) கணக்கு வைத்திருக்கின்றார் என்றும் வைத்துக்கொள்வோம். இங்கிலாந்து நாட்டின் வியாபாரி, தனது நாட்டுப் பணமான ஸ்டெர்லிங்கைக் கொண்டோ, வேறு ஏதாவது ஒரு நாட்டின் செலாவணியைக் கொண்டோ, (வேறு நாட்டில் இங்கிலாந்து வியாபாரிக்குப் பாங்குக் கணக்கு இருப்பின் இது சாத்தியமாகும்.) அந்த அயல்நாட்டு வியாபாரிக்குக் கொடுக்க வேண்டிய கடனைத் தீர்க்கலாம். ஸ்டெர்லிங்கைப்பயன்படுத்தியே இங்கிலாந்து வியாபாரி தமது கடனைத் தீர்க்கின்றார் என்று வைத்துக்கொள்வோம். அந்த அயல்நாட்டு வியாபாரி ஸ்டெர்லிங்கைத் தனது நாட்டில் பேரங்களைத் தீர்த்துக்கொள்ளப்பயன்படுத்த முடியாது; எனவே அவர் தமது பாங்கான மேற்கு பரேடேரியா பாங்கிடம் ஸ்டெர்லிங்கை விற்றுவிட முனைவார். ஸ்டெர்லிங் மதிப்பிற்கு ஈடாகப் பாங்கு தனது டெபாசிட்டுக்களை வியாபாரிக்கு வழங்கும். ஸ்டெர்லிங் இவ்வாறு கைமாறியதும், இங்கிலாந்திலுள்ள மிட்லண்ட் பாங்கின் கணக்குப் புத்தகங்களில் சில மாறுதல்கள் நேரும். கடன் தொகை, X ஸ்டெர்லிங் என்று வைத்துக்கொள்வோமாயின், இங்கிலாந்து நாட்டின் வியாபாரியின் மிட்லண்ட் கணக்கில் X ஸ்டெர்லிங்குகள் குறைக்கப்படும்; மேற்கு பரேடேரியா பாங்கின் மிட்லண்ட் கணக்கில் X ஸ்டெர்லிங்குகள் கூட்டப்படும். இவ்வாறாக மேற்குப் பரேடேரியா பாங்கின் சொத்துக்கள் உயருகின்றன; ஆனால் தன்னிடம் ஸ்டெர்லிங்கை விற்றவாடிக்கைக்காரருக்கு ஸ்டெர்லிங்கின் மதிப்பிற்கு ஈடாக, உள்நாட்டில் டெபாசிட்டுக்களைக் கொடுத்திருப்பதால் மேற்கு பரேடேரியா பாங்கின் பொறுப்புக்களும் (Liabilities) உயருகின்றன; இவ்வாறு உயரக்கூடிய பொறுப்பு X ஸ்டெர்லிங்குகட்குச் சமமானதாகும். இந்தப் பேரத்தால் இங்கிலாந்தின் பாங்கு முறையில் எவ்விதமான மாற்றமும் ஏற்பட நியாயமில்லை. ஏனெனில்,

1 'வெளிநாடு' என்று நாம் இங்குக் குறிப்பிட்டது, பிரிட்டனுக்குச் சொந்தமான கடல்கடந்த குடியேற்ற நாடுகளையும், ஏனைய அயல் நாடுகளையும் குறிப்பாகக் கருத வேண்டும். 'அயல் நாட்டு வாணிபம்' என்று நாம் குறிக்கும்போது அது பிரிட்டனுக்குச் சொந்தமான குடியேற்ற நாடுகள், டொமீனியன்கள் ஆகியவற்றையும்' ஏனைய நாடுகளையும் குறிப்பதாகக் கொள்ளுவதே வசதியாக இருக்கும் என்று எமக்குத் தோன்றுகின்றது. எனவே இந்த அத்தியாயத்தில் எஞ்சியுள்ள பகுதிகளில் இந்தப் பொருளே கையாளப்படுகின்றது.

இப்பேரத்தால் இங்கிலாந்திலுள்ள பாங்குகளின் ரொக்கப் பண இருப்பு, அவைகளின் டெபாசிட்டுகள், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் நிலை—ஆகியவை ஒரு சிறிதும் பாதிக்கப்படவில்லை. அதாவது மிட்லண்ட் பாங்கின் ஒரு வாடிக்கைக்காரரின் கணக்கிலிருந்து மற்றொரு வாடிக்கைக்காரரின் கணக்குப் பணம் மாற்றப்பட்டுள்ளது; இது தவிர வேறு ஒன்றும் நிகழவில்லை. மிட்லண்டில் கணக்கு வைத்திருக்கும் இங்கிலாந்து வியாபாரியின் பாங்குக் கணக்கில் X ஸ்டெர்லிங் குறைக்கப்பட்டு, மேற்குப் பரேடேரியா பாங்கின் கணக்கில் அந்தத் தொகை அதிகரிக்கப்படுகின்றது. அதாவது இங்கிலாந்து வியாபாரிக்கு X ஸ்டெர்லிங் கடன் பட்டிருந்த மிட்லண்ட் பாங்கு, இப்பொழுது மேற்குப் பரேடேரியா பாங்குக்கு X இலண்டனில் தனது கிளை ஒன்று உடையதாக இருக்கின்றது என்றோ, மிட்லண்ட் பாங்கில் கணக்கு வைத்திராமல் வேறு ஒரு இலண்டன் பாங்கில் கணக்கு வைத்திருப்பதாகவோ நாம் வைத்துக்கொண்டால், நேரிடும் விளைவுகள் யாவை என்பது பற்றி இனிக் காண்போம் மிட்லண்ட் பாங்கு, அம்மாதிரியான சூழ்நிலையில், X ஸ்டெர்லிங்குகளை அந்த வேறொரு பாங்குக்குக் கொடுக்கவேண்டியிருக்கும். மிட்லண்ட் பாங்கின் டெபாசிட்டுக்கள் X ஸ்டெர்லிங் கூடும். செக்குத் தீர்வக முறையில் இந்தக் கொடுக்கல் வாங்கல் விவகாரம் தீர்த்துவைக்கப்படும் பட்சத்தில், இங்கிலாந்துத் தலைமைப்பாங்கின் கணக்குகளில் சில மாறுதல்கள் நேரும். அதாவது மையப் பாங்கிலுள்ள மிட்லண்ட் பாங்கின் கணக்கில் X ஸ்டெர்லிங் குறைந்து, அந்த வேறொரு பாங்கின் கணக்கில் X ஸ்டெர்லிங் கூடும்.

மேற்கொண்டு என்னென்ன நிகழும் என்பது பரேடேரியா 'ஸ்டெர்லிங் பிரதேசத்'திற்குள் (Sterling Area) இருக்கின்றதோ அல்லது வெளியில் இருக்கின்றதோ என்பதைப் பொறுத்ததாகும். பரேடேரியா 'ஸ்டெர்லிங் பிரதேச'த்திற்கு வெளியில் இருக்கின்றது என்று வைத்துக்கொண்டால், மேற்கொண்டு என்ன நிகழும் என்பது இங்கிலாந்து நாட்டின் பண அதிகாரிகட்கும், இடையே செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகளைப் பொறுத்ததாகும். பரேடேரியா 'ஸ்டெர்லிங் பிரதேச'த்திற்கு உட்பட்ட நாடாக இருப்பின், இங்கிலாந்து நாட்டின் பண அதிகாரிகள் இந்தப் பேரத்தைப்பற்றிக் கவலைகொள்ள வேண்டியதில்லை. ஆனால் பரேடேரியா ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு வெளிப்பட்ட நாடாக இருந்தால் நிலைமையே வேறாகும். இந்தப் பேரத்திற்கு முன்பாகவே இங்கிலாந்து வியாபாரி அயல்நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாட்டு நிறுவனத்தின் (Foreign Exchange Control) அநுமதி பெற்றிருக்க வேண்டும். இந்த நிறுவனம் பரேடேரியாவுக்கு எந்த முறையில்

செலுத்தினங்கள் (Payments) கொடுக்கப்படவேண்டும் என்று தெளிவான முன்னேற்பாடுகள் செய்யும். எனவே ஸ்டெர்லிங் பிரதேசத்திற்குப் பரேடேரியா வெளிப்பட்ட நாடாக இருக்கும் பட்சத்தில் அயல்நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாட்டு நிறுவனம் இந்தப் பேரத்தின் எல்லா அமிசங்களையும் விரிவாக ஆராயும். ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு உட்பட்ட பேரங்கள், ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு வெளிப்பட்ட பேரங்கள் ஆகிய இரண்டிற்கும் இடையே, மிகப் பெருமளவில் மாற்றங்கள் உள்ளன. ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு வெளிப்பட்ட பேரங்களையே உண்மையில் அயல் நாட்டுச் செலாவணி பற்றிய பேரங்கள் என்று கருதுவது பொருந்தும் என்று பலர் எண்ணுகிறார்கள். இவ்வாறு எண்ணுவதில் ஓரளவு உண்மை இருக்கின்றது. ஏனெனில், ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு இலண்டன் ஒரு பாங்கர் போலத் திகழ்வதும், ஸ்டெர்லிங் பிரதேசத்திற்குள் இருக்கும் நாடுகட்கிடையே ஏற்படும் கொடுக்கல் வாங்கல்களைத் தீர்த்து வைப்பதற்கு, ஸ்டெர்லிங் தடையின்றிப் பயன்படுத்தப்படுவதும், ஸ்டெர்லிங் பிரதேசத்தின் சாரமாகவுள்ளது. ஒரு பாங்கருக்கும் அவரது வாடிக்கைக் காரருக்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்பு இருக்குமோ, அது போல ஸ்டெர்லிங் பிரதேசத்திற்குள் இருக்கும் பல நாடுகளின் பண முறைகட்கு இடையிலும் நெருங்கிய தொடர்பு உள்ளது. அயல் நாட்டுச் செலாவணி கட்டுப்பாட்டு நிறுவனத்தின் அதிகாரிகள், ஸ்டெர்லிங் பிரதேசத்திற்குள் நடைபெறும் பேரங்களைப்பற்றி எந்தவிதமான கவலையும் கொள்ளாமல் இருப்பதற்கு இதுவே காரணமாகும். இம்மாதிரியான உறவு நிலவுவதற்கு ஏதுவான பாங்கு முறை யாது என அறிய விரும்பினால், ஸ்டெர்லிங் பிரதேசத்தின் தன்மைகள் யாவை? அதன் அடிப்படை யாது?— என்பவை பற்றி அறிய வேண்டியது அவசியமாகும்.

## 2. ஸ்டெர்லிங் பிரதேசம் Sterling Area)

ஸ்டெர்லிங் பிரதேசம் பலநாடுகளின் தொகுப்பால் ஆகிய ஒரு அமைப்பு. இந்தப் பல நாடுகள் முறைப்படி தங்களுக்குள் செய்து கொண்ட ஏற்பாடுகளின் அடிப்படையிலோ, ஏதோ ஒரு திட்டத்தின் விளைவாகவோ 'ஸ்டெர்லிங் பிரதேசம்' தோன்றியது என்று தவறாக எண்ணிவிடலாகாது. ஸ்டெர்லிங் பிரதேசம் டாப்சியைப் போலத் (Topsy) தானாகவே வளர்ச்சியுற்றிருக்கிறது. பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளே இதில் அங்கம் வகித்துள்ளன என்று எண்ணிவிடக்கூடாது ; ஏனைய நாடுகளும் இதில் அங்கம் வகித்திருக்கின்றன. தற்சமயம் பெரும்பாலும் காமன்வெல்த் நாடுகளே அங்கம் வகிக்கின்றன (கனடா, காமன் வெல்த் நாடாயினும்

அங்கம் வகிக்கவில்லை; தென் ஆப்பிரிக்கா இன்னும் ஒரு திட்ட வட்டமான முடிவுக்கு வரவில்லை) இருப்பினும் கடந்த காலத்தில் அர்ஜெண்டினு, டென்மார்க் போன்ற காமன் வெல்த் அல்லாத நாடுகள்கூட அங்கம் வகித்திருக்கின்றனை. எந்தெந்த நாடுகள் தங்களுக்கிடையே உள்ள செலுத்தினங்களைத் (Payments) தீர்த்துக் கொள்வதற்காக ஸ்டெர்லிங் நாணயத்தைத் தடையின்றிப் பயன்படுத்துகின்றனவோ, மேலும் எந்தெந்த நாடுகள் இதையொட்டி இலண்டனைத் தங்கள் பாங்கராகக் கருதுகின்றனவோ, அவற்றையெல்லாம் உள்ளடக்கித் திகழும் ஒரு அமைப்புத்தான் 'ஸ்டெர்லிங் பிரதேசம்' ஆகும். மேற்குறித்த செலுத்தினங்கள் யாவும் நாடுகட்கிடையே திகழ்கின்றன. இவை வர்த்தகர்கள், யாத்ரீகர்கள் ஆகியோர் செய்யும் செலுத்தினங்களாக இருக்கலாம் அல்லது பாங்கர்களே (உதாரணமாக மூலதனப் பேரங்கள் சம்பந்தமாக) செய்யக்கூடிய செலுத்தினங்களாக இருக்கலாம். சில சமயங்களில் இந்தச் செலுத்தினங்கள் அரசாங்கங்கள் கொடுக்க வேண்டியவைகளாகவும் கூட இருக்கலாம்.

உள் நாட்டைப் பொறுத்தவரையில் கொடுக்கல் வாங்கல் விஷயங்கட்குப் பாங்கு டெபாசிட்டுக்கள் அநுகூலமாக இருப்பதனுலும், பாங்குகள் தரும் கடன் வசதிகள் அநுகூலமாக இருப்பதனுலும், பாங்குமுறைப் பழக்க (Banking Habit) மக்களிடம் வெகுவாகப் பரவியுள்ளது. பாங்கு முறைப் பழக்கம் பெருகப் பெருக, மக்கள் பாங்கில் இருப்புத் தொகை (Balance) வைக்கும் பழக்கமும் அதிகமாகின்றது. உள்நாட்டில் மக்கள் தங்களுக்கு இடையே நேரும் கொடுக்கல் வாங்கல் விவரங்களை எளிதில் தீர்த்துக் கொள்ளும் பொருட்டுப் பாங்கில் இருப்புத் தொகை வைத்திருப்பது போல, தங்களுக்கிடையே நேரும் கொடுக்கல் வாங்கல் விவகாரங்களை எளிதில் தீர்த்துக்கொள்ளும் நோக்கத்தோடு நாடுகள் இலண்டனில் ஸ்டெர்லிங் இருப்புத் தொகை வைத்திருக்கின்றன. 'நாடுகள் இலண்டனில் ஸ்டெர்லிங் இருப்புத் தொகை வைத்திருக்கின்றன' என்று நாம் கூறுவது, 'அரசாங்கங்கள் இருப்புத் தொகை வைத்திருக்கின்றன' என்பதற்கு ஈடானது என்று எண்ணிவிடலாகாது. (அரசாங்கங்கள் இவ்வாருன இருப்புக்களை வைத்திருந்தால் அவற்றை விதிவிலக்காகக் கொள்ளவும்). வெளி நாடுகளில் தங்கள் முக்கிய அலுவல்களையுடைய பாங்குகள் (சிறப்பாக மையப் பாங்குகள்) இவ்வாறு இலண்டனில் இருப்புக்கள் வைத்திருக்கின்றன. இம்மாதிரியான பாங்குகளில் பல, வெளிநாடுகளில் ஆங்கிலேயக் கம்பெனிகள் என்று பதிவு செய்யப்பட்டுள்ளன; ஆனுல் இவற்றின் தலைமை அலுவலகங்கள் இலண்டனில் உள்ளன. இவை 'பன்னுட்டுப் பாங்குகள்' (International Banks)

'ஏகாதிபத்தியப் பாங்குகள்' (Imperial Banks) என்ற பெயர்களுடன் விளங்குகின்றன. இவை குறிப்பாக 1860-ஆம் ஆண்டுக்குப்பின் பெருமளவில் நிறுவப்பட்டன என்று கூறலாம்[1] இவற்றின் பெரும்பாலான கிளைகள் வெளிநாடுகளிலேயே அமைந்துள்ளன. எனவே இவற்றின் பெரும்பாலான அலுவல்களை வெளிநாடுகளிலுள்ள கிளைகளே கவனித்து வருகின்றன. இவற்றின் வெளிநாட்டுக் கிளைகட்கும், இலண்டனுக்கும் இடையே நடைபெறும் அலுவல்கள் குறிப்பிடத்தக்க முக்கியமான அலுவல்களாகும். வெளிநாடுகளில் தங்களுடைய வாடிக்கைக்காரர்கட்குக் கொடுத்திருக்கும் கடன்களே இவர்களது முக்கியமான இலாபம் ஈட்டக்கூடிய சொத்துக்களாகும்; இருப்பினும், இவற்றின் ரொக்கக் காப்பு நிதியும் (Reserves of cash) ஏனைய ரொக்கத்தன்மை சொத்துக்களும் (liquid of assets) இலண்டனில்தான் உள்ளன.

மற்ற வாணிபப் பாங்குகள் தங்கள் தலைமை அலுவலங்களையும் பெரும்பான்மையான கிளைகளையும், வெளி நாடுகளிலேயே கொண்டுள்ளபோதிலும், இலண்டனில் கிளைகள் நிறுவியுள்ளன. உதாரணமாக, ஆஸ்திரேலியாவிலுள்ள சில பாங்குகள் இம்மாதிரி அமைந்துள்ளன. இலண்டனில் தலைமை அலுவலகங்களை உடைய பாங்குகளும் ஆஸ்திரேலியாவில் உள்ளன. இலண்டனில் தலைமை அலுவலகம் இல்லாது கிளையே இருப்பினும், அந்தக் கிளை மிக இன்றியமையாத கிளையாகத் திகழ்கின்றது. தங்களுடைய வாடிக்கைக்காரர்களுடைய பன்னாட்டுப் பேரங்களைத் தீர்த்துவைப்பதற்கு ஏற்றவகையில் பாங்குகள் இலண்டனில் உள்ள தங்கள் கிளைகளில் ரொக்க பணமும், வேறு ரொக்கத் தன்மை சொத்துக்களையும் வைத்திருக்கின்றன. பன்னாட்டுப் பேரங்களைத் தீர்க்கும் வகையில் தங்கள் வாடிக்கைக்காரர்கட்குப் பாங்கு பண உதவி செய்வதற்கு, இந்த இலண்டன் சொத்துக்கள் மிகவும் இன்றியமையாதனவாகும்.

கடந்த முப்பதாண்டுகளில், இங்கிலாந்து நீங்கலாக உள்ள ஏனைய ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளிலும் மையப் பாங்குகள் தோன்றியுள்ளன. (அதிகாரிகள் இங்கிலாந்து நீங்கலாக உள்ள ஏனைய ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளைக் குறிக்கும் வகையில் R. S. A. (Rest of the Sterling Area) என்ற சுருக்கத்தைப் பயன்படுத்துகின்றனர். இவ்வாறு ஏற்படுத்தப்பட்டுள்ள மையப் பாங்குகள் தங்களுடைய கட்டுப்பாட்டு முறைகளைச் சிறந்த முறையில் செயல்படுத்தும் நோக்கத்தோடு, வாணிபப் பாங்கு

[1] இந்தப் பாங்குகளின் வளர்ச்சிபற்றி அறிய விரும்புவோர் கீழே தரப்பட்டுள்ள இரண்டு பயனுள்ள புத்தகங்களைப் படிக்கலாம்: The Imperial Banks (London 1929) and The International Banks (London 1935) buth by A. S. J. BASTER.

களின் இலண்டன் இருப்புக்களில் சிலவற்றைத் தாங்களே வாங்கிக் கொண்டுள்ளன ; வாணிபப் பாங்குகள் இலண்டனில் சொத்துக்களில் 'மாறுந்தன்மை உடைய பகுதிகளை' (Variable part) மையப் பாங்குகள் வாங்கிக்கொண்டன. வாணிபப் பாங்குகள் இன்றும் இலண்டனில் நடைமுறை இருப்புக்களை (Working balances) வைத்திருக்கின்றன. ஆனால் இலண்டனிலுள்ள காப்பு இருப்புக்கள் (Reserves) யாவற்றையும் மையப் பாங்குகளே வைத்திருக்கின்றன.

இலண்டனிலுள்ள இந்த இருப்புக்கள் தாம் R. S. A. நாடு களின் பன்னாட்டுக் காப்பு இருப்பாகத் (International Reserves) திகழ்கின்றன. ஒருவருக்கு ஒருகாலத்தில் அவரது செலவுகள் வரவை மிஞ்சும்போது பாங்கில் அவர் வைத்திருக்கும் இருப்புத் தொகை பயன்படுகிறது. அதுபோல R. S. A. நாடுகளின் வெளி நாட்டுச் செலவுகள் வெளிநாட்டு வரவுகளை மிஞ்சும்போது, அவைகளால் இலண்டனில் சேகரித்து வைத்துள்ள இருப்புத் தொகைகள் பயன்படுகின்றன. இலண்டனில் வைத்துள்ள காப்பு இருப்பு நீங்கலாக, R.S.A. நாடுகள் வேறு எந்தவிதமான காப்பு இருப்புக்களையும் வைத்திருக்கவில்லை. இதற்கான காரணம் யாது என்பது போகப்போக நமது விவாதத்தினின்றும் விளங்கும். ரொக்கப்பணம் (பெரும்பாலும் இவை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் டெபாசிட்டுக்களால் ஆனவை. சிறுபான்மை நோட்டுக் களால் ஆனவை. நோட்டுக்கள் (Till money) 'கல்லாப் பண மாக'த் திகழ்கின்றன.) உண்டியல் தரகு அகதிகட்குக் கொடுக்கப் பட்டுள்ள குறுங்காலக் கடன்கள், கருவூல உண்டியல்கள், இலண்டன் மார்க்கெட்டில் மறுகழிவுக்குத் தகுதியான ஏனைய உண்டியல்கள்—ஆகியவற்றின் உருவில் R. S. A. நாடுகளின் இலண்டன் இருப்புக்கள் அமைந்துள்ளன.[1] இலண்டன் இருப்புக் களை மிகுதியாக உடைய இந்தியா, ஆஸ்திரேலியா போன்ற நாடு களின் இருப்புக்களின் பெரும் பகுதி, அந்தந்த நாட்டின் மையப் பாங்குகளின் பேரில் இலண்டனில் உள்ளன. இலண்டனில் அலு வலகங்கள் அல்லது ஏஜெண்டுகளையுடைய இந்தநாடுகளின் வாணிபப் பாங்குகள் மிகக் குறைவான நடைமுறை இருப்புக்

[1] சில நாடுகளின் பாங்குகள் அல்லது பண அதிகாரிகள், ரொக்க நிலைச் சொத்துக்கள்போக, விரைவில் விற்றுவிடக் கூடிய பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங் களையும தங்கள்பேரில் இலண்டனில் வைத்திருக்கின்றனர். அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை (Balance of Payments) யில் நேரும் மாற்றஙகளைச சரி செய்வதற்கு வைத்திருக்கப்படும் இருப்பாக இவற்றை இந்நாடுகள் கருதுவ தில்லை. இவற்றைக் காப்பு இருப்புக்களாகவே கருதுகின்றனர். எனினும், காப்பு இருப்புக்கள் வைத்திருப்பதும், பயன்படுத்தப்படுவதற்கே என்ற உண்மையை நாம் மறந்துவிடலாகாது. எனவே இலண்டனைப் பொறுத்த வரையில் இந்தப் பத்திரங்கள் யாவும், இலண்டனின் பொறுப்புக்களில் ஒரு பகுதியே என்பதையும் நாம் மறந்துவிடலாகாது.

களையே (Working balances) வைத்திருக்கின்றன. இலண்டனில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் வைத்திருக்கும் தங்கள் இருப்புக்களில் பெரும்பகுதியை R. S. A. நாடுகள், கருவூல உண்டியல்களாகவே வைத்திருக்கின்றன; [1] எஞ்சியவற்றை மையப் பாங்கில் சாதாரண டெபாசிட்டுக்களாக வைத்துள்ளன. எனவே, ஸ்டெர்லிங் பிரதேச நாடு ஒன்று, மற்றொரு நாட்டிற்குப் பணம் செலுத்தும்போது, செலுத்தும் நாட்டின் வாணிபப் பாங்கி அல்லது மையப் பாங்கின் பேரில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் உள்ள கணக்கிலிருந்து செலுத்தப்படும் நாட்டின் பாங்கு ஒன்றின் பேருக்கு அந்தத் தொகை மாற்றப்படும். இம்மாதிரியான மாற்றம் ஒரு நாடு மற்றொரு நாட்டிற்குப் பணம் செலுத்தும்போது ஏற்படும் உடனடியான மாற்றமாகும். ஆனால் பெருமளவில் தொடர்ந்து ஒரு நாடு வேறொரு நாட்டுக்கு நிகரச் செலுத்தினங்களைக் (Net Payments) கொடுக்க வேண்டி இருந்தால், செலுத்தும் நாடு தனது மையப் பாங்கின் பேரில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் வைத்திருக்கும் கருவூலப் பத்திரங்களை விற்பனை செய்ய வேண்டிய நிலை நேரிடும்.

பெரும்பாலான ஏனைய நாடுகட்கும் இலண்டன் பாங்கராகத் திகழ்வதே ஸ்டெர்லிங் பிரதேசத்தின் சாராம்சம் ஆகும், உள் நாட்டில், ஒருவர் இன்னொருவருக்குச் செக்குமூலம் பணம் செலுத்தும்போது பாங்கிடம் செலுத்துபவருக்குள்ள பாத்தியதை (Claim) செலுத்தப் படுவோருக்கு மாற்றப் படுகின்றது. அதுபோல ஸ்டெர்லிங் பிரதேசத்திலுள்ள ஒரு நாடு இன்னொரு நாட்டிற்குப் பணம் செலுத்தும்போதும் இலண்டனின் மீது செலுத்தும் நாட்டிற்குள்ள பாத்தியதை செலுத்தப்படும் நாட்டிற்கு மாற்றப்படுகின்றது. மேலும், வரவு செலவு ஆகிய இனங்களில் மாற்றம் நேர்ந்து, செலவானது வரவை மிஞ்சிவிடும் நிலையில் யாதொரு துன்பமும் இன்றி நாம் நிலைமையைச் சமாளிக்கும் நோக்கத்தோடு பாங்கில் டெபாசிட்டுக்கள் வைத்திருக்கிறோம். அதேபோல, இம்மாதிரியான ஒரு நோக்கத்தோடு, ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் இலண்டனில் நடைமுறை இருப்புக்கள் (Working Balances) வைத்திருக்கின்றன. ஸ்டெர்லிங் பிரதேசம் பற்றிய வேறு பல அமிசங்களையும், 'இலண்டன் ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் அனைத்திற்கும் பாங்கர் ஆகும்' என்ற அடிப்படையான உண்மையிலிருந்து நாம் எளிதில் பெறமுடியும்.

[1] R.S.A. நாடுகளின் மையப் பாங்குகட்காக ஒவ்வொரு வாரமும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, கருவூல உண்டில்களை விலைக்கு வாங்குகின்றது. கெடுவு காலம் முடிந்த கருவூல உண்டியல்களின் இடத்தை நிரப்புவதற்கே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இவ்வாறு செய்கின்றது. மூன்றாம் அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ள 'சங்கம்' முறையில் இவை வாங்கப்படுவன அல்ல.

இலண்டன், ஸ்டெர்லிங் பிரதேச நாடுகட்குப் பாங்கராக இருந்து ஆற்றிவரும் கடமைகளைச் சரிவரத் தெரிந்து கொள்ள விரும்பினால் இலண்டன் எவ்வாறு ஸ்டெர்லிங் பிரதேசத்தில் உள்ள நாடுகட்குப் பாங்கர் என்ற இடத்தை அடைந்தது என்பதைப் பற்றி நாம் ஆராய வேண்டுவது அவசியமாகும்.[1] பத்தொன்பதாம் நூற்றுண்டில் நிதி நிலையில், இலண்டன் சீர்பெற்று விளங்கியமைக்கு இரண்டு காரணங்கள் உள்ளன. ஒன்று அந் நூற்றுண்டில் இலண்டன் உலக வர்த்தகத்திற்கு ஒரு மையமாகத் திகழ்ந்தது. இரண்டாவதாக, அந்நூற்றுண்டில் இலண்டன் உலக நாடுகட்குக் கடன் கொடுக்கும் ஒரு பெரிய வெற்றிகரமான நிறுவனமாகவும் திகழ்ந்தது. ஏனெனில், 'ஸ்டெர்லிங் எப்பொழுதும் பயனுள்ளது' 'ஸ்டெர்லிங் எப்பொழுதும் கிடைக்கக் கூடியது என்ற நிலை பத்தொன்பதாம் நூற்றுண்டில் நிலவியது. இதுவே இலண்டன் பன்னுட்டு நிதி மையமாகத் (International financial centre) திகழ்ந்ததற்குக் காரணமாகும். சாதாரணப் பாங்கு டெபாசிட்டு பயனுடையது, எளிதில் கிடைக்கக் கூடியது என்று நாம் எண்ணுவதாலேயே அதை நாம் விரும்புகிறோம். தங்களுடைய பாங்குகளின் மேல் வரையப்பட்ட செக்குகளைத் தங்களது கடன் ஈவோர் (Creditors) ஏற்றுக் கொள்ளுகின்றனர் என்று பொதுமக்கள் அறிய வருவதினால், அவர்கள் பாங்குகளில் கணக்குகள் வைத்திருக்கின்றனர். மேலும் பொருள்கள், சேவைகள் (Services) ஆகியவற்றை விற்றோ, பாங்கிடமிருந்து கடன் வாங்கியோ தாங்கள் பாங்கில் இருப்புக்களை வைத்திருக்க முடியும் என்று பொதுமக்கள் நன்கு அறிவதாலும், அவர்கள் பாங்குகளில் கணக்கு வைத்திருக்கின்றனர். இதேபோல், வரலாற்று ரீதியாகப் பார்க்கும்போது, ஸ்டெர்லிங் பிறரால் ஏற்றுக் கொள்ளக் கூடியதாய் எளிதில் சேகரிக்கக்கூடியதாய் இருந்ததால், அது ஒரு பன்னுட்டுச் செலாவணியாகத் (International currency) திகழ்ந்தது. 19-ஆம் நூற்றுண்டில் ஸ்டெர்லிங் எப்பொழுதும் பயனுள்ளதாகவே திகழ்ந்தது—உலகிலேயே மிகப் பெரிய சந்தை (Market) யான இங்கிலாந்திலிருந்து பொருள்களை வாங்க ஸ்டெர்லிங் பயன்பட்டது; இங்கிலாந்திலிருந்து வாங்கிய கடனுக்கான வட்டியைச் செலுத்த ஸ்டெர்லிங் பயன் பட்டது; உலகின் எந்தப் பகுதிக்கும் சரக்குகள் ஏற்றிச் செல்வதற்கு இங்கிலாந்தின் கப்பல்களைப் பயன்படுத்த ஸ்டெர்லிங் உதவியாக இருந்தது. இரண்டாவதாக, ஸ்டெர்லிங் எப்பொழுதும் கிடைக்கக் கூடியதாக இருந்தது. ஏனைய நாடுகளில் தயாரிக்கப்

1 இங்குத் தரப்பட்டிருக்கும் விளக்கம் கீழே தரப்பட்டிருக்கும் சிறப்பான கட்டுரையைப் பெரிதும் சார்ந்ததாகும்—'Sterling as an International Currency' by Prof B Tew in the Economic Journal, June 1948.

பட்ட உணவுப் பொருள்கட்கும், கச்சாப் பொருட்கட்கும், இங்கிலாந்தில் நல்ல தேவை இருந்ததால் இங்கிலாந்தில் அவற்றை விற்பதற்கான வாய்ப்புக்கள் அதிகமாக இருந்தன, எனவே இங்கிலாந்தில் பொருள்களை விற்பதன் மூலம் இந்த நாடுகள் ஸ்டெர்லிங்கை எளிதாகப் பெறமுடிந்தது. மேலும் இலண்டனில் கடன் வாங்குவதன் மூலமும் ஸ்டெர்லிங்கை எளிதாகப் பெறமுடிந்தது—பெருமளவில் ஸ்டெர்லிங் தேவைப்பட்டால் லண்டன் மார்க்கெட்டில் நெடுங்காலக் கடன் எழுப்பலாம்; தற்காலிகமாக நெடுங்காலக் கடன்களை எழுப்புவதற்கான வாய்ப்பான சூழ்நிலை இல்லாவிட்டாலும், குறுகிய காலக்கடன் வசதிகளை இலண்டனிலேயே ஏற்பாடு செய்து கொள்ளலாம். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு படிப்படியாகக் 'கடை நிலைக்கடன் ஈவோன்' (Lender of last resort) என்ற நிலையை அடைந்த நாள்தொட்டு இலண்டனில் சிறிது அதிகமான வட்டி வீதத்தில்தான் பணத்தைக் கடனாகப் பெறமுடியும் என்ற ஒரு சூழ்நிலை உருவாகியது. இந்த வட்டிவீதம் சில சமயங்களில் மிக அதிகமானதாக இருக்கலாம், இருப்பினும், ஏதாவது ஒரு வட்டி வீதத்தில் கடன்பெற வாய்ப்பு இருந்தது என்ற உண்மையினை மறந்து நாம் மறந்துவிடலாகாது. மேலும் இலண்டன் பண மார்க்கெட்டில் சுமுகமான சூழ்நிலை நிலவும் போது அதிக வட்டி வீதத்தில் வாங்கிய குறுகிய காலக்கடனைக் குறைந்த வட்டி வீதமுடைய நெடுங்காலக் கடனாக மாற்றிக் கொள்ளலாம்.

பிரிட்டன் 19-ஆம் நூற்றாண்டில் தொழில் முன்னேற்றத்தைப் பொறுத்தவரையில் தலையாய இடம் வகித்து வந்தது. மேலும் தனக்குத் தேவையான உணவுப் பொருள்கள் ஏனைய பொருள்கள் ஆகியவற்றைப் பிரிட்டன் மிகவும் குறைந்த விலைகளில் வெளி நாடுகளின்றும் வாங்குவது சாத்தியமாக இருந்தது. இதனால் இங்கிலாந்தின் 'அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை' (Balance of Payments) மிகச் சீராக அமைந்திருந்தது—'லண்டன் பன்னாட்டு நிதிமையம்' என்ற நிலையைத் தாங்கி வந்த காலம் முழுவதும், அதன் 'அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை' சீராகவே இருந்தது. இம்மாதிரியான சாதகக் கூறுகள் நிலவினதால் இலண்டனால் தொடர்ந்து வெளி நாடுகட்குக் கடன் வசதிகள் செய்து கொண்டே இருக்க முடிந்தது. இலண்டன் இவ்வாறு வெளி நாடுகட்குக் கடன் கொடுப்பதற்கு ஆற்றல் பெற்றிருந்ததால், 'ஸ்டெர்லிங், பன்னாட்டுச் செலாவணியே' என்ற நிலை உறுதி செய்யப்பட்டது.

ஸ்டெர்லிங் பன்னாட்டுச் செலாவணியாகத் திகழ்ந்தமைக்கு இலண்டனின் கடன் தரக்கூடிய ஆற்றலே இன்றியமையாத

காரணம் என்று எண்ணிவிடலாகாது. ரெயில்வேக்கள் துறை முகங்கள் ஆகியவற்றின் வளர்ச்சியைத் தொடர்ந்து, உலகில் பல பாகங்களிலும் குடியேற்றம் மிகவும் சாத்தியமானதாக விளங்கியது; இதனால் உணவுப் பொருள்கள் கச்சாப் பொருள்கள் ஆகியவை தயாரிக்கும் பகுதிகள் பெருகின; எனவே முன்பைவிட இப்பொழுது முதலீடு செய்வதற்கான வாய்ப்புக்கள் வெளிநாடு களில் அதிகமாக ஏற்பட்டன எனலாம். கடன் வாங்கியவர்கள் தங்களுடைய பொருள்களைச் சுலபமாக இலண்டனில் விற்றுப் பணம் திரட்டித் தாங்கள் வாங்கிய கடனைத் திரும்பச் செலுத்துவது சாத்தியமானதாக இருந்தது. எனவே இலண்டன் பிற நாடுகட்கு மேலும் மேலும் தடையின்றிக் கடன் கொடுத்து வந்தது. மேலும் இந்த நாடுகளில் பிரிட்டிஷ் மூலதனத்தின் உதவியினால் உணவுப் பொருள்கள் கச்சாப் பொருள்கள் ஆகியவற்றின் உற்பத்தியைப் பெருக்க முடிந்தது. இந்தப் பொருட்களை இங்கிலாந்திலும் ஏனைய நாடுகளிலும் மிக எளிதில் பெருமளவில் விற்க முடிந்தது. எனவே இந்த நாடுகள் தாங்கள் இங்கிலாந்தினின்றும் வாங்கிய கடன்களை எளிதில் திருப்பித் தர முடிந்தது.

19-ஆம் நூற்றாண்டில் உலகில் நிலவிய வர்த்தக நிலை, பெரு மளவில் வெளிநாட்டுக்கு இங்கிலாந்தானது பொருள்களை ஏற்றுமதி செய்வதற்கு ஏற்றதாக அமைந்திருந்தது. ஏனைய நாடுகள் விரும்பிய பொருள்களையும், நிதிகளையும் பிரிட்டன் அவற்றிற்குக் கொடுத்து வந்தது. ஏனைய நாடுகளினின்றும் தனக்குத் தேவை யான உணவுப் பொருள்களையும் ஏனைய பொருள்களையும் பிரிட்டன் பெற்றுக் கொண்டது. இம்மாதிரியான வாய்ப்பான சூழ்நிலை உலவியதால் 'இலண்டன் ஒரு பன்னாட்டு நிதிமையம்' என்ற நிலை உறுதி செய்யப்பட்டது. மேலும் தக்கசமயத்தில் பண நிறுவனங் களும் இவற்றிற்குச் சாதகமாக பிரிட்டனில் உருவாயின. பொன் திட்டத்தைப் (Gold standard) பிரிட்டன் ஏற்றுக் கொண்டது இரண்டாவதாகவே முக்கியத்துவம் பெற்றது. ஆனால் மிகவும் முக்கியமான காரணம் என்னவென்றால், வர்த்தகம், லேவாதேவி ஆகியவை காரணமாக ஸ்டெர்லிங் எப்பொழுதும் பயனுள்ள தாகவும், கிடைக்கக்கூடியதாகவும் இருந்ததுதான்.

ஸ்டெர்லிங் பிரதேசம் தோன்றுவதற்குச் சாதகமான மேற் கூறிய வரலாற்று ரீதியான காரணங்களை மனத்தில் இருத்திக் கொண்டு, 'ஸ்டெர்லிங் பிரதேசத்தை உருவாக்கிய பூகோள ரீதியான காரணங்கள் யாவை'? 'இலண்டன் தங்களுக்குப் பாங்கர் என்ற வகையில் ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் இலண்டனிட மிருந்து எதிர்பார்த்த சேவைகள் யாவை'?—என்பவை பற்றி இனி

நாம் ஆராய்வோம். ஸ்டெர்லிங் பிரதேசத்தின் பரப்பானது, காலப்போக்கில் நாடுகளுக்கு என்னென்ன வசதிகள் தேவைப் பட்டனவோ அதைப் பொருத்தே அமைந்தது. இங்கிலாந்துக்கும் அதன் குடியேற்ற நாடுகட்கும் இடையே நிகழ்ந்த பேரங்களைத் தீர்ப்பதற்கேயன்றி, இங்கிலாந்து எந்த விதத்திலும் தொடர்பு கொள்ளாத பேரங்களைத் (இங்கிலாந்து நாட்டு வர்த்தகர்கள் எந்த விதத்திலும் சம்பந்தப்படாத பேரங்களையும்) தீர்ப்பதற்கும், ஸ்டெர்லிங், பன்னாட்டுச் செலாவணியாகப் பயன்படுத்தப் பட்டது. எல்லா நாடுகளும் ஸ்டெர்லிங்கைச் செலாவணியாகப் பயன்படுத்தினர் என்பது உண்மையானாலும், அவை ஸ்டெர்லிங் கைத்தான் பயன்படுத்த வேண்டும் என்ற கட்டாயம் ஏதுமில்லை; அதாவது ஸ்டெர்லிங்கைப் பன்னாட்டுச் செலாவணியாகப் பயன் படுத்துவது குறித்து நாடுகட்கிடையே எந்தவிதமான உடன்பாடு களும் இருந்ததில்லை. எனவே, சிலர் பேரங்களைத் தீர்ப்பதற்கு ஸ்டெர்லிங்கை அதிகமாகப் பயன்படுத்தினர்; வேறு சிலர் குறைவாகப் பயன்படுத்தினர். தங்களுக்குத் தேவையான பொருட்களுக்குப் பிரிட்டனையே நம்பி இருந்த நாடுகளும், தங்களுடைய பொருள்களை விற்பனை செய்யப் பிரிட்டிஷ் மார்க்கெட்டையே நம்பி இருந்த நாடுகளும், பிரிட்டனிட மிருந்து கடன் வாங்கிய நாடுகளும், பிரிட்டனிடமிருந்து வாங்கியுள்ள கடனுக்கான வட்டியையும் முதலையும் திருப்பித் தர வேண்டிய நாடுகளும்—சுருங்கக் கூறின், பிரிட்டனுடன் நெருங்கிய வர்த்தக உறவுகளை உடைய நாடுகள் யாவும்—ஸ்டெர்லிங்கை மிகுதியாகப் பயன்படுத்திய நாடுகளாகும். பிரிட்டனின் குடியேற்ற நாடுகள், டொமீனியன் நாடுகள், தென் அமெரிக்கா, சிறுபான்மை ஏனைய நாடுகள்—ஆகியவற்றின் வர்த்தகர்கள், பாங்கர்கள், அரசாங்கங்கள் ஆகியோர் மேற்குறித்தவாறு ஸ்டெர்லிங்கை மிகுதியாகப் பயன்படுத்தியவர்களாவர். ஒரு நாடு, பிரிட்டனுடன் எந்த அளவுக்கு நெருங்கிய தொடர்புடையதாக இருந்ததோ, அந்த அளவுக்கு அது ஸ்டெர்லிங்கை மிகுதியாக அல்லது குறைவாகப் பயன்படுத்தியது; மேலும் அந்த அளவுக்கு அது ஸ்டெர்லிங்கை மிகுதியாக அல்லது குறைவாகப் பன்னாட்டுக் காப்பு இருப்பாகத் தன்னிடம் வைத்திருந்தது. ஸ்டெர்லிங் பிரதேசத்தின் ஆரம்ப காலத்தில் ஒரு குறிப்பிட்ட வீதத்தில் ஸ்டெர்லிங்கைத் தங்கமாக மாற்ற முடியும். (அதாவது ஸ்டெர்லிங், பொன் திட்டத்துடன் (Gold standard) இணைக்கப் பட்டிருந்தது.) இது ஸ்டெர்லிங் பிரதேசம் விரிவடைவதற்கு ஏதுவான ஒரு காரணமாக விளங்கியது. மேலும் ஸ்டெர்லிங் தங்கத்தைவிடப் பயனுள்ளதாகக் கருதப்பட்டது—தங்கத்தை இருப்பாக வைத்திருப்பதால் எந்த விதமான ஆதாயமும் கிடைக்க

வாய்ப்பில்லை; ஆனால் ஸ்டெர்லிங்கை இருப்பாக வைத்திருந்தால் வட்டி கிடைக்கும். எனவே பன்னாட்டு பேரங்களைத் தீர்ப்பதில் ஈடுபட்டிருந்த வாணிபப் பாங்குகள் தங்கத்தைக் காப்பு இருப்பாக வைத்திருப்பதைவிட ஸ்டெர்லிங்கைக் காப்பு இருப்பாக (Reserve) வைத்திருப்பதையே பெரிதும் விரும்பின.

ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு வெளியிட்ட நாடுகளுடனான பேரங்களைத் தீர்த்துக்கொள்ள வேறு வழியில்லாத சமயம் தங்கத்தைப் பயன்படுத்திப் பேரங்களைத் தீர்த்துக் கொள்ளலாம். எனவே தங்கம் பயனுள்ளதாகக் கருதப்பட்டது. இலண்டன் மார்க்கெட்டில் தங்கத்தை எளிதில் விலைக்கு வாங்க முடியும். இது மட்டுமன்று. எந்த நாட்டின் செலாவணியையும் இலண்டனில் எளிதில் விலைக்கு வாங்க முடியும். உலகிலேயே மிகப் பெரிய அயல் நாட்டுச் செலாவணி மார்க்கெட் இலண்டனில் அமைந்திருந்தது. எந்த நாட்டுச் செலாவணியையும் எந்த நேரத்திலும் ஒரு குறிப்பிட்ட விலையில் இலண்டனில் வாங்குவதும் விற்பதும் சாத்தியமாகும். எனவே ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு வெளிப்பட்ட நாடுகட்குப் பணம் கொடுக்க வேண்டியதிருந்தால் அவை தங்கள் பேரில் இலண்டனில் இருக்கும் ஸ்டெர்லிங் இருப்பைப் பயன்படுத்தி, அந்த வேற்று நாடுகளின் நாணயத்தை இலண்டன் மார்க்கெட்டிலேயே வாங்க முடியும். உதாரணமாக, ஸ்டெர்லிங் பிரதேசத்திற்குட்பட்ட நாடு ஒன்று அமெரிக்க ஏற்றுமதியாளருக்குக் கடன் பட்டிருந்தால், அமெரிக்க நாட்டுச் செலாவணியை இலண்டனில் விலைக்கு வாங்க முடியும். அமெரிக்க ஏற்றுமதியாளருக்குக் கடன் கொடுக்க வேண்டியவர் இங்கிலாந்து நாட்டினராக இருக்கும் பட்சத்தில், அவர் தனது பாங்கின் மூலம் இலண்டனில் அமெரிக்க டாலர்களை வாங்கிக் கொள்ளலாம். அமெரிக்க ஏற்றுமதியாளருக்குக் கடன் கொடுக்க வேண்டியவர் ஆஸ்திரேலிய நாட்டு இறக்குமதியாளர் என்று வைத்துக்கொண்டால், அவர் ஆஸ்திரேலியாவிலுள்ள தமது பாங்கை டாலர்கள் வாங்கித் தருமாறு கேட்பார். ஆஸ்திரேலியப் பாங்கு இலண்டனில் தன்னுடைய கணக்கிலுள்ள ஸ்டெர்லிங் இருப்புக்களைப் பயன்படுத்தி, இலண்டன் மார்க்கெட்டிலேயே டாலர் வாங்கிவிடும். இவ்வாறு, பிரிட்டிஷ் மக்களுடைய அயல் நாட்டுச் செலாவணித் தேவைகளை மட்டுமின்றி, ஸ்டெர்லிங் பிரதேசத்திற்குட்பட்ட நாடுகளின் அயல் நாட்டுச் செலாவணித் தேவையையும் இலண்டன் அயல்நாட்டுச் செலாவணி மார்க்கெட் பூர்த்தி செய்து வந்தது.

இதுபோல, அமெரிக்க இறக்குமதியாளர் ஒருவர் ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு உட்பட்ட நாடு ஒன்றிற்குக் கொடுக்கவேண்டிய கடனும் இலண்டனிலேயே தீர்வு பெறும். பணம் செலுத்தப்பட்ட நாட்டின் வர்த்தகர் தாம் பெற்ற டாலர்களைத் தம்முடைய பாங்கு மூலம் இலண்டனிலேயே விற்பதற்கான ஏற்பாடுகளைச் செய்வார். இந்தப் பாங்கானது, இங்கிலாந்து நாட்டுப் பாங்காக இருக்கலாம், அல்லது ஆஸ்திரேலிய நாட்டுப் பாங்காக இருக்கலாம், அல்லது ஐஸ்லாந்து நாட்டுப் பாங்காக இருக்கலாம், அல்லது ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு உட்பட்ட வேறு எந்த நாட்டின் பாங்காகவோ இருக்கலாம். சுருங்கக் கூறின், இந்தப் பாங்கு ஸ்டெர்லிங் பிரதேசத்தில் எந்த நாட்டில் அமைந்திருந்தாலும் அது இலண்டனிலேயே டாலர்களை விற்க முனையும். இவ்வாறு ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளின் அயல் நாட்டுச் செலாவணி வரவுகள் யாவும் இலண்டனையே போய்ச் சேரும்; அதுபோல் ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளின் அயல் நாட்டுச் செலாவணித் தேவைகள் யாவற்றையும் இலண்டனே பூர்த்திச் செய்ய வேண்டியிருக்கும். இலண்டனில் தாங்கள் வைத்திருக்கும் ஸ்டெர்லிங் இருப்புக்களைப் பயன்படுத்தி நாடுகள் இவ்வாறு பிறநாட்டுச் செலாவணிகளை வாங்க முடிகின்றது. மேலே கூறியவற்றினின்றும் ஒரு முக்கியமான உண்மை அறியக்கிடக்கின்றது. இங்கிலாந்தின் அயல் நாட்டுச் செலாவணிக்காப்பு இருப்புக்களைத் (Foreign Exchange Reserves) தீர்மானிப்பது இங்கிலாந்து நாட்டின் 'அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை' (Balance of Payments) மட்டுமன்று; ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு உட்பட்ட எல்லா நாடுகளின் 'அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை'களும், இங்கிலாந்தின் அயல் நாட்டு செலாவணிக் காப்பு இருப்புக்களைத் தீர்மானிக்கின்றது. இங்கிலாந்து தான் செலவிடுவதை விட அதிகமான அயல் நாட்டுச் செலாவணிகளை ஈட்டமுடிந்தாலும் R. S. A. நாடுகள் ஏனைய உலக நாடுகளுடன் 'பாதகமான அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை' (Adverse Balance of Payments) உடையனவாக இருப்பின், இங்கிலாந்தின் 'அயல் நாட்டுச்செலாவணிக் காப்பு இருப்புக்கள்' குறைந்துவிடும். இவ்வாறான ஒரு சூழ்நிலையில் R. S. A. நாட்டினர் தங்கள் பேரிலிருக்கும் இலண்டன் இருப்புக்களை மிகுதியாகப் பயன்படுத்துவர்; எனவே அவைகளுக்குச் சொந்தமான இங்கிலாந்து நாட்டுக் கருவூல உண்டியல்கள் மிகவும் குறைந்துவிடும். இதுபோலவே, இங்கிலாந்து நாட்டில் பாதகமான அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை நேர்ந்திருந்த போதிலும், R. S. A. நாடுகள் தாங்கள் செலவிடுவதை விட அதிகமான அயல்நாட்டுச் செலாவணிகளை ஈட்டினால், இங்கிலாந்தின் 'அயல் நாட்டுச் செலாவணிக் காப்பு இருப்புக்கள்' எந்த விதத்திலும் பாதிக்கப்படமாட்டா. அவ்

வாருன சூழ்நிலையில் தனது அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையைச் சரி செய்வதற்காகப் பிரிட்டன் R. S. A. நாடுகளிடம் அதிகமாகக் கடன் பட நேரிடும். இதன் விளைவாக R. S. A. நாடுகளின் இலண்டன் இருப்புக்கள் மிகுதியாகும்.

நாம் மேலே குறிப்பிட்டவை, இரண்டாவது உலகப்போர் நடந்த காலத்தில் ஒரு சமயம் நேர்ந்த நிலையை ஓரளவுக்கு விளக்கும் வகையில் அமைந்துள்ளது. ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் அனைத்திற்கும் வேண்டி இருந்த நிகர அயல் நாட்டுச் செலாவணித் தேவைகள், (இவை பெரும்பாலும், அமெரிக்க டாலர், கனடா டாலர் ஆகியவற்றிற்கான தேவைகளாகும்) அமெரிக்கா, கனடா ஆகிய நாடுகளின் உதவித் திட்டங்களாலும், பிரிட்டன் அமெரிக்காவில் பத்திரங்களை விற்றதன் மூலம், நிறைவேற்றப் பட்டன. எனவே பிரிட்டனிடம் இருந்த மிகக் குறைவான டாலர், தங்கம் ஆகிய காப்பு இருப்புக்கள் குறையாமல் இருந்தன. ஆனால் R. S. A. நாடுகள் மிகுந்த அளவு அயல் நாட்டுச் செலாவணிகளை ஈட்ட முடிந்ததால், அவற்றின் இலண்டன் இருப்புக்கள் பெருமளவு—அதாவது அசாதாரணமான அளவுக்கு—உயர்ந்தன.[1] இவ்வாறு அவை சேகரித்த இருப்புக்களை உலகயுத்தம் முடிவுற்றதும், பொருள்கள் (பெரும்பாலும் அமெரிக்க நாட்டினின்றும்) வாங்குவதற்கு விரையில் அந்த நாடுகள் பயன்படுத்த விரும்பின. இதுவே, ஸ்டெர்லிங் பிரதேசம் உலகப் போர் முடிவுற்றபின் சில ஆண்டுகள் அநுபவித்த வேதனைகட்கு மூல காரணமாகும். R. S. A. நாடுகள் இந்த அசாதாரணமான இருப்புக்களை அசாதாரணமான போர்க்கால அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையின் மூலம் சேகரிக்க முடிந்தது; இருப்பினும், அவற்றைச் சேகரித்த முறை சாதாரணமானதேயாகும். அதாவது, ஸ்டெர்லிங் பிரதேசத்தில் இயங்கி வரும் சாதாரணமான பாங்கு முறையின் மூலம் R. S. A. நாடுகளால் மேற்படி ஸ்டெர்லிங் இருப்புக்களை அதிகமாக்க முடிந்தது.

அயல் நாட்டு விவகாரங்கட்கு பாங்கராக விளங்கும் இலண்டனின் நிலையினுல், மற்ருெரு முக்கியமான அமிசம் தற்காலத்தில் தோன்றியது. அதுவே டாலர் திரட்டு (Dollar Pool) ஆகும். இலண்டன், ஸ்டெர்லிங் பிரதேசத்தின் தங்கம், டாலர் ஆகியவற்றின் காப்பு இருப்புக்களைத் தன்னிடத்தே வைத்திருக்கின்றது.

[1] ஸ்டெர்லிங் இருப்புக்கள் சம்பந்தமாக எழுந்துள்ள பிரச்னைகளைக் குறித்து இங்குக் கொடுக்கப்பட்டிருக்கும் விளக்கம் மிகச் சுருக்கமான விளக்கமேயாகும். முழு விளக்கமும் ஈண்டுதரப்படவில்லை. முழு விவரமும் தெரிந்துகொள்ள விரும்பும் வாசகர்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ள புத்தகத்தைப் படிக்கலாம். —Chapter IX of Sayers, Financial Policy 1939—1945.

ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் தாங்கள் சேகரிக்கும் டாலர்களை 'டாலர் திரட்டி' (டமே கொடுத்துவிடுகின்றன; அது போலவே தங்களுக்கு வேண்டியிருக்கும் டாலர் தேவைகளை டாலர் திரட்டி') லிருந்தே பெறுகின்றன. இது நெடுநாட்களாகக் கைக்கொள்ளப் பட்டு வரும் பழக்க வழக்கங்களின் தொடர்ச்சியேயாகும். எனவே 'டாலர் திரட்டு', இலண்டனால் செயற்கையாக வன்முறையாக நிறுவப்பட்ட ஒன்று, அன்று ; இலண்டன், ஸ்டெர்லிங் பிரதேச நாடுகட்குப் பாங்கர் என்ற முறையில் ஆற்றிவரும் தொண்டின் அடிப்படையில் இயற்கையாக வளர்ச்சியுற்றுள்ள ஒன்றாகும். 1940-ஆம் ஆண்டு முதல் 1949-ஆம் ஆண்டு முடிய உள்ள கால வரம்பில் ஸ்டெர்லிங் பிரதேசத்தில் நேர்ந்த புதுமை 'டாலர் பற்றுக்குறை' நேர்ந்ததேயாகும். இதன் விளைவாக டாலரின் தேவைகளைக் கட்டுப்படுத்தும் நோக்கத்தோடு அயல் நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாட்டினை நிறுவ வேண்டிய கட்டாயம் நேர்ந்தது. இந்தக்கட்டுப்பாடு இங்கிலாந்தை மட்டும் சார்ந்த ஒன்றாக அமையவில்லை ; ஸ்டெர்லிங் பிரதேசம் முழுவதையும் சார்ந்த ஒன்றாக அமைந்தது. ஸ்டெர்லிங் பிரதேசத்தின் டாலர் களின் காப்பு இருப்புக்குக் காவலன் என்ற முறையில், டாலருக் கான தேவைகளைக் குறைத்துக் கொள்ளுமாறு R. S A. நாடுகளை இலண்டன் கேட்டுக்கொள்ள வேண்டிய நிலை நேர்ந்தது.

ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளின் வெளிநாட்டுப் பேரங்கள் யாவும் (ஸ்டெர்லிங் பிரதேச நாடுகட்கு இடையே நேருவனவும் ஸ்டெர்லிங் பிரதேச நாடுகட்கும் இடையே நேருவனவும்) இலண்டன் மூலமே தீர்வு பெறுகின்றன—என்பதை ஏற்கனவே கண்டோம். இதனால் இலண்டன் பவுனுக்கும் மற்ற நாடுகளின் செலாவணிகட்கும் (உதாரணமாக இந்திய ரூபாய் ஆஸ்திரேலியப் பவுன் போன்றவற்றிற்கும்) இடையே உள்ள 'நாணய மாற்று வீதம்' (Rate of Exachange) பற்றிய பிரச்சனைகள் மிக இன்றியமை யாதன வாகின்றன. நாணயமாற்று வீதங்களில் பெருமளவு 'நிலைத் தன்மை' (Stability) ஏற்பட்டிருந்த காலங்களில் ஸ்டெர்லிங் பிரதேசம் வளர்ச்சியுற்றது. எனவே ஸ்டெர்லிங் பிரதேச நாடு களின் செலாவணிகட்கிடையே நாணயமாற்று வீதங்களில் கட்டா யமாக ஒரு 'நிலைத்த தன்மை' இருக்க வேண்டுவது அவசியம் என்று சிலர் கருதுகின்றனர். இதுபோன்ற 'நிலைத் தன்மை'களை ஏற்படுத்தக் கூடிய பலம் வாய்ந்த சக்திகள் ஸ்டெர்லிங் பிரதேச அமைப்பில் காணக் கிடைக்கின்றன என்பது உண்மையானாலும், கட்டாயமாக 'நிலைத்த தன்மை' நிலவ வேண்டும் என்ற கூற்று பொருந்தாத ஒன்றாகும். இங்கிலாந்துக்கும், மற்றொரு ஸ்டெர்லிங் பிரதேச நாட்டிற்கும் இடையே மிக நெருக்கமான உறவுகள் இருப்

பதால், ஸ்டெர்லிங்குக்கும் அந்த வேறொரு நாட்டின் செலாவணிக்கும் இடையே 'நாணய மாற்று வீதத்தில்' 'நிலைத்த தன்மை' நிலவுமேயாயின் இந்த இரண்டு நாடுகட்கும் அநுகூலமாக இருக்கும் வகையில் ஏற்றுமதி விலைகளும் இறக்குமதி விலைகளும் 'நிலைத்த தன்மை' உடையனவாக இருக்கும். மூலதனப் பேரங்களைப் பொறுத்த வரையிலும் இது பொருந்தும். இங்கிலாந்திடம் கடன் வாங்கியதால் அதற்கு வட்டியும் முதலும் திரும்பக் கொடுக்க வேண்டிய நிலையிலுள்ள மற்றொரு ஸ்டெர்லிங் பிரதேச நாடு, தனது செலாவணிக்கும் ஸ்டெர்லிங்குக்கும் இடையே உள்ள 'நாணய மாற்று வீதத்தை'க் குறைத்தால், அந்த நாடு தனக்குத் தானே ஊறு தேடிக் கொள்வதற்குச் சமமானதாகும். மேலும், நாடுகள் வசதி கருதி இலண்டனிலுள்ள தங்களது காப்பு இருப்புக்களை ஸ்டெர்லிங் நாணயத்திலேயே வைத்துள்ளன. எனவே, தங்களுடைய செலாவணிக்கும் ஸ்டெர்லிங்குக்கும் இடையே உள்ள 'நாணயமாற்று வீதம்' மாற்றமுறாமல் 'நிலைத்த தன்மை' உடையதாக இருந்தால்தான், இலண்டனிலுள்ள அந்த நாடுகளின் இருப்புக்களை அந்தந்த நாடுகளின் உள்நாட்டுச் செலாவணிகளைக் கொண்டு மதிப்பிடும்போது அவை மதிப்புக் குன்றாமல் இருக்கும். எனவே ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளின் செலாவணிகளுக்கு இடையே 'நாணயமாற்று வீதம்' மாறவே மாறாது என்று கொள்வது பொருந்தாது என்பது உண்மையாயினும், ஸ்டெர்லிங் பிரதேசத்திலுள்ள நாடுகளின் செலாவணிகட்கு இடையே 'நாணயமாற்று வீதத்தை'ப் பொறுத்த வரையில் போதுமான அளவு 'நிலைத்த தன்மை' உள்ளது என்பது உண்மையகும். உதாரணமாக, ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு வெளியே 1820—1929 முடிய உள்ள கால வரம்பின் ஆரம்பத்திலும் 1930-1939 முடிய உள்ள கால வரம்பின் ஆரம்பத்திலும் 'நாணயமாற்று வீதம்' நிலையற்ற தன்மையை உடையதாக இருந்த போதிலும், அவ்வமயம் ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளின் செலாவணிகட்கு இடையே போதுமான அளவுக்கு நிலைத்த தன்மை இருந்தது.

ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு உட்பட்ட நாடுகளின் செலாவணிகட்கும்; ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு வெளிப்பட்ட நாடுகளின் செலாவணிகட்கும் இடையே உள்ள 'நாணய மாற்று வீதம்' (ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளின் செலாவணிகட்கு இடையே நிலையான நாணய 'மாற்று வீதம்' ஏற்பட்டுள்ளது என்று வைத்துக் கொள்வோமேயாயின்) ஸ்டெர்லிங் நாணயத்திற்கும் ஏனைய வெளிப் பிரதேச நாடுகளின் நாணயங்கட்கும் இடையே உள்ள 'நாணயமாற்று வீதத்தைப் பொருத்ததாகும். எனவே, ஸ்டெர்லிங், டாலர் ஆகிய இரு நாணயங்கட்கும் இடையே உள்ள

'நாணய மாற்று வீதம்' மாற்றமுற்றால், ஸ்டெர்லிங் பிரதேசத்தைச் சேர்ந்த எல்லா நாடுகளின் அல்லது பெரும்பாலான நாடுகளின் செலாவணிகளின் மாற்று வீதங்களும் அதற்கேற்றாற்போல் ஸ்டெர்லிங்குடன் இணைந்து மாற்றமுறும். இவ்வாறு நேர்வதற்குக் காரணம் உள்ளது. ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் நாணயங்களின் மதிப்பை டாலருடனே, வேறு செலாவணிகளுடனே நிலையாக இணைத்துக் கொள்வதைவிட ஸ்டெர்லிங்குடன் நிலையாக இணைத்துக் கொள்ளுமேயானால் அவைகட்கு இதனால் பல சௌகரியங்கள் இருக்கின்றன.[1] இம்மாதிரியான மாற்றங்கள்—அதாவது ஸ்டெர்லிங்குக்கும் வெளிப்பிரதேச நாடுகளின் செலாவணிகட்கும் இடையே நேரும் மாற்றங்களையொட்டி ஸ்டெர்லிங் பிரதேச நாடுகள் தங்கள் நாணயங்களின் மதிப்பை ஸ்டெர்லிங்கையொட்டி மாற்றி அமைப்பது-1920-29 முடிய உள்ள கால வரம்பின் ஆரம்பத்திலும், 1930-39 முடிய உள்ள கால வரம்பின் ஆரம்பத்திலும் பெருமளவு நேர்ந்தன. இவ்வித மாற்றங்களால் ஸ்டெர்லிங் பிரதேசம் பெருமளவில் பாதிக்கப்படவில்லை; எனவே ஸ்டெர்லிங் பிரதேசத்தின் தொடர்ச்சியான வாழ்விற்கு இம்மாதிரியான மாற்றங்களால் பெருமளவு ஊறு நேராது என்று நாம் முடிவு கட்டலாம். ஆனால் இம்மாதிரியான மாற்றங்களால் ஸ்டெர்லிங்கின் உபயோகப்படும் தன்மை குறைந்துவிடும். வெளிப்பிரதேச நாடு ஒன்றுடன் பெருமளவிலான பேரங்களை உடைய நாடுகளைப் பொறுத்த வரையில் இது மிகவும் முக்கியமான ஒன்றாகும். இந்த வகையில் குறிப்பிடத்தக்க உதாரணமாகக் கனடா திகழ்ந்தது. கனடா, அமெரிக்காவுடன் நெருக்கமான வர்த்தகம், நிதி ஆகிய தொடர்புகளை உடைய நாடு. எனவே 1920-29 முடிய உள்ள கால வரம்பின் ஆரம்ப காலத்தில் ஸ்டெர்லிங்கின் நிலைத்த தன்மை குறைந்து அதன் மதிப்பு மாறிக் கொண்டிருந்தபோது, கனடா ஸ்டெர்லிங் பிரதேசத்தில் தொடர்ந்து அங்கம் வகிப்பதா அல்லது அதிலிருந்து விலகிக் கொள்வதா என்று எண்ணியவாறு உறுதியில்லாமல் இருந்தது. 1930-1939 முடிய உள்ள காலவரம்பில் கனடா ஸ்டெர்லிங் பிரதேசத்தைவிட்டு விலகியது. ஸ்டெர்லிங்குக்கும் ஏனைய முக்கியமான வெளிப்பிரதேச செலாவணிகட்கும் இடையே 'நாணய மாற்று வீதத்தில்' அடிக்கொருமுறை மாற்

[1] உதாரணமாக 1949ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் பாகிஸ்தான் ரூபாயைத் தவிர ஏனைய R. S. A நாடுகளின் செலாவணிகளின் மதிப்புக்கள் மாற்றப்பட்டன. பாகிஸ்தான் தனித்து நின்றது. பாகிஸ்தானின் பனாட்டு வர்த்தக உறவுகளைப் பொறுத்தவரையில் அவ்வமயம் அமெரிக்க டாலருடன் பாகிஸ்தான் ரூபாயின் மதிப்பை நிலைப்படுத்துவதே நன்மையென்று பாகிஸ்தான் எண்ணியது. ஆனால் இந்தியாவின் செலாவணிக்கும் பாகிஸ்தானின் செலவாணிக்கும் இடையே 'நாணய மாற்று வீதத்தில்' பிளவு ஏற்பட்டதால் சில அசௌகரியங்கள் தோன்றின. எனவே விரைவில் பாகிஸ்தானும் தனது ரூபாயின் மதிப்பைக் குறைத்தது. (Devalued)

றங்கள் நேருவதால், ஸ்டெர்லிங் பிரதேசத்தில் அங்கம் வகித்துக் கொண்டு அதனுடன் குறைந்த தொடர்புகளும் வெளிப் பிரதேச நாடுகளுடன் மிகுந்த தொடர்புகளும் உள்ள நாடு—அதாவது ஸ்டெர்லிங் பிரதேசத்தின் 'விளிம்பில்' உள்ள நாடு—மிகவும் பாதிக்கப்படும். எனவே இம்மாதிரியான நாடுகள், இவ்வித மாற்றங்கள் அடிக்கடி நேர்ந்தால் ஸ்டெர்லிங் பிரதேசத்தை விட்டு விலகிவிடும்; இவ்வாறு, ஸ்டெர்லிங் பிரதேசத்தின் எல்லைகள் குறுகுவதற்கு வாய்ப்புக்கள் நேருகின்றன.

தற்சமயம் ஸ்டெர்லிங்கை வேறு செலாவணிகளாக மாற்ற இயலாத நிலை நேர்ந்துள்ளது; இதனால் ஸ்டெர்லிங்கின் பயன்படும் தன்மை வெகுவாக பாதிக்கப்பட்டுள்ளது; எனவே ஸ்டெர்லிங் பிரதேசத்தில் அங்கம் வகித்துக் கொண்டு ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளுடன் குறைவான தொடர்புகளையும், வெளிப்பிரதேச நாடு களுடன் குறைவான தொடர்புகளையும், வெளிப்பிரதேச நாடு களுடன் மிகுந்த தொடர்புகளையும் உள்ள நாடுகள்—அதாவது 'ஸ்டெர்லிங் பிரதேசத்தில்' 'விளிம்பில்' உள்ள நாடுகள் ஸ்டெர்லிங் பிரதேசத்தை விட்டு விலக ஒரு வாய்ப்பான சூழ்நிலை உருவாக ஏதுவாகின்றது. 1930 ஆம் ஆண்டுக்குப்பின் இருபது ஆண்டுகள் அர்ஜெண்டினா நடந்து கொண்டவிதம் இதற்கு ஒரு தெளிவான எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது. 1930—1939 முடிய உள்ள காலவரம்பில் அமெரிக்காவிற்கும், அர்ஜெண்டினா விற்கும் இடையே வர்த்தகம் பெருகிக் கொண்டிருந்தபோதிலும், இந்த இரு நாடுகட்கிடையே நிதி உறவுகள் வலுப்பெற்ற போதிலும், டாலர் ஸ்டெர்லிங் ஆகிய நாணயங்களின் மாற்று வீதம் மாற்றமடைந்த போதிலும், அர்ஜெண்டினா தொடர்ந்து ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு உள்ளேயே பெரும்பாலும் செயலாற்றி வந்தது. ஆனால் 1940—1949 முடிய உள்ள காலவரம்பில் ஸ்டெர்லிங்கை டாலராக உடனடியாக மாற்ற முடியாத நிலை நேர்ந்தது; அரசாங்கங்கட்குள் உடன்பாடு ஏற்பட்டு விசேஷ ஏற்பாடுகள் மூலம்தான் ஸ்டெர்லிங்கை டாலராக மாற்ற முடியும் என்ற நிலை உருவாகியது. மேலும் இதே காலத்தில் பிரிட்ட னிடமிருந்தே பொருள்களை வாங்கப் பயன் குறைந்ததாக ஸ்டெர்லிங் மாறியது. எனவே அர்ஜெண்டினாவுக்கு ஓர் இக் கட்டான சூழ்நிலை நேர்ந்தது—ஸ்டெர்லிங்கைப் பயன்படுத்திப் பிரிட்டனில் ரயில் எஞ்சின்கள் வாங்க முடியவில்லை; அதே சமயம் அமெரிக்காவில் ரயில் எஞ்சின்களை வாங்க ஸ்டெர்லிங்கை டாலராக மாற்ற முடியவில்லை. எனவே அர்ஜெண்டினா முன்பு போல ஸ்டெர்லிங்கை விரும்பி ஏற்றுக் கொள்ளவில்லை. அதாவது அர்ஜெண்டினா ஸ்டெர்லிங் பிரதேசத்தை விட்டு விலகியது.

இவ்வாறு, கடந்த ஐம்பது ஆண்டுகளில் நேர்ந்துள்ள அயல் நாட்டுச் செலாவணித் தொல்லைகள், ஸ்டெர்லிங் பிரதேசத்தின் எல்லைகளைக் குறுக்கிவிட்டன. ஸ்டெர்லிங் பிரதேசத்தின் ஆரம்ப கால ஆற்றலுக்கு பிரிட்டனின் சாதகமான 'வாணிபக் கொடுப்பல் நிலை' (Balance of Trade) உறுதுணையாக இருந்தது, மேலும் பிரிட்டன் உலக நாடுகட்குக் கடன்தரும் நிறுவனமாக மட்டும் அமைந்து விடாது, அவற்றைக் கடனைத் திருப்பித்தரும் ஆற்றலுள்ளவர்களாகவும் மாற உதவி செய்ததும் ஸ்டெர்லிங் பிரதேசத்தின் ஆரம்பகால உறுதிக்குக் காரணமாகும். எங்ஙனம், சாதகமான வாணிபக் கொடுப்பல் நிலை ஆரம்ப காலத்தில் ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு ஆக்கம் தேடித் தந்ததோ, அதேபோல அண்மையில் ஏற்பட்டுள்ள தீராத பாதகமான வாணிபக் கொடுப்பல் நிலை ஸ்டெர்லிங் பிரதேசத்தின் அஸ்திவாரத்தைப் பெரிதும் பாதித்திருக்கின்றது. ஸ்டெர்லிங்குக்கும் ஏனைய நாடுகட்கும் இடையே உள்ள 'நாணய மாற்று வீதம், பெருமளவில் மாறிக் கொண்டிருக்கின்றது; மேலும் முன்போல ஸ்டெர்லிங்கைத் தற்சமயம் எளிதாக உடனடியாக வேறு நாட்டின் செலாவணியாக மாற்ற முடிவதில்லை. இந்த இரண்டு காரணங்களும் ஸ்டெர்லிங் பிரதேசத்தின் 'விளிம்பில்' உள்ள நாடுகள் இதைவிட்டு அகலத் தூண்டுகோலாகத் திகழ்கின்றன. எனவே இன்றைய காமன் வெல்த் நாடுகள் அனைத்தும் ஸ்டெர்லிங் பிரதேசத்தில் அங்கம் வகிக்கவில்லை. எனினும் நாடுகட்கிடையே ஏற்படும் செலுத்தினங்களைப் (Payments) பொறுத்த வரையில் தடைகள் ஏதுமில்லாத ஒரு பெரிய பிரதேசம் ஒன்று உலகில் உள்ளது என்றால் அது ஸ்டெர்லிங் பிரதேசமே யாகும். ஸ்டெர்லிங் பிரதேச நாடுகளின் வெளிநாட்டுப் பேரங்களின் நிகர விளைவுகள் யாவும், இலண்டன் பாங்குகளின் வெளிநாட்டுக் கிளைகள் மூலம் இலண்டன் பணமார்க்கெட்டை வந்து அடைகின்றன. எனவே இம்மாதிரியான பேரங்களால் இலண்டன் எவ்வாறு பாதிக்கப் படுகின்றது என்பது பற்றிக் குறிப்பிடாத இங்கிலாந்து நாட்டின் பாங்குமுறை பற்றிய விளக்கம் பூரணமானது என்று கொள்வதற்கில்லை.

## 3. ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கு வெளியே நடைபெறும் பேரங்கள்—'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு'

## (The Exchange Equalization Account.)

பிரிட்டனுக்கும், ஸ்டெர்லிங் பிரதேசத்திற்கும் வெளியேயுள்ள நாடுகட்கும் இடையே நிகழும் பேரங்களை அயல்நாட்டுச்

செலாவணி மார்க்கெட் மூலம் தான் தீர்த்துக் கொள்ள முடியும். ஓர் எடுத்துக்காட்டு இதைத் தெற்றென விளக்கும். இங்கிலாந்து நாட்டுப் பொருள்கள் பிரான்ஸிடம் விற்கப்படுகின்றன என்று வைத்துக் கொள்வோம் பிரான்ஸின் நாணயமான பிராங்குகள் (Francs) மூலம் இங்கிலாந்து வியாபாரிக்குப் பணம் கிடைக்கும். இங்கிலாந்து வியாபாரி பிராங்குகளை விரும்பமாட்டார்; அவர் விரும்புவது அவர் நாட்டு நாணயமான ஸ்டெர்லிங்கையே யாகும். எனவே தனது பாங்கிடம் பிராங்குகளை விற்றுவிடுமாறு கொடுப்பார். ஆனால் இங்கிலாந்திலிருந்தும் பிரான்சுக்கு ஏற்றுமதி செய்யும் பொருள்களின் மதிப்பை 'வழிப் பட்டியலில்' (Invoice) ஏற்றுமதியாளர் ஸ்டெர்லிங் நாணயத்தில் குறிக்கின்றார் என்று வைத்துக்கொண்டால், பிரான்ஸ் நாட்டு இறக்குமதியாளர் தம்மிடமுள்ள பிராங்குகளை ஸ்டெர்லிங்காக மாற்றிக் கணக்கைத் தீர்ப்பார். இதுபோலவே, பிரான்சிலிருந்து இங்கிலாந்திற்குப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டால் பிராங்குகளுக்கான தேவை ஏற்படுகின்றது. பிரான்ஸ் நாட்டு ஏற்றுமதியாளர் தமது வழிப் பட்டியலில் பிராங்குகளிலேயே தொகையைக் குறித்திருப்பாரேயானால், இங்கிலாந்து நாட்டு இறக்குமதியாளர் ஸ்டெர்லிங்குகளைப் பிராங்குகளாக மாற்றி கணக்கை முடிக்க வேண்டியிருக்கும். பிரான்சு நாட்டு ஏற்றுமதியாளர் வழிப் பட்டியலில் ஸ்டெர்லிங்கில் தொகையைக் குறித்திருந்தால் ஸ்டெர்லிங்கை அவர் விற்றுவிட்டு அதற்கு ஈடாக பிராங்குகள் பெற முயலுவார். இவ்வாறு 'அயல் நாட்டுச் செலாவணிகள்' மூலம் நடைபெறும் எல்லாப் பேரங்களும் அயல் நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாட்டின் கீழ் வருவனவாகும். அயல் நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாடானது (Foreign Exchange control) சட்ட ரீதியான ஒரு கட்டுப்பாட்டு அமைப்பாகும்; இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கருவூலத்தின் துணையுடன் இந்தக் கட்டுப்பாட்டை நிருவகித்து வருகின்றது. பிரிட்டிஷ் மக்கள் எந்தெந்தக் காரணங்கட்காக அயல் நாட்டுச் செலாவணிகள் வாங்க முடியும் என்பது வரையறை செய்யப்பட்டுள்ளது. மேலும் பிரிட்டிஷ் மக்களுக்குக் கிடைக்கக்கூடிய (உதாரணமாக பொருள்களை ஏற்றுமதி செய்வதன் மூலம்) அயல் நாட்டுச் செலாவணிகளை அவர்கள் பயன்படுத்துவது குறித்தும் சில வரையறைகள் செய்யப்பட்டுள்ளன.

அயல் நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாட்டு அதிகாரிகள், மக்கள் விரும்பும் அயல் நாட்டுச் செலாவணிகளைத் தாங்களே விற்க முன் வருவதில்லை; அதேபோல மக்களுக்குக் கிடைக்கக் கூடிய அயல் நாட்டுச் செலாவணிகளை அதிகாரிகளே விலைக்கு வாங்கிக் கொள்வதில்லை, அயல் நாட்டுச் செலாவணிகளை வாங்கு

வதற்கோ, விற்பதற்கோ பிரிட்டிஷ் கட்டுப்பாட்டு அதிகாரிகளால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு வர்த்தகரிடம் போகவேண்டும். இந்த வர்த்தகர்களிடம் ஒருசாரார் அயல் நாட்டுச் செலாவணிகளை விலைக்கு வாங்க வருகின்றனர்; மற்றொரு சாரார் அயல் நாட்டுச் செலாவணிகளை விற்க வருகின்றனர். எனவே தங்களது வாடிக்கைக்காரர்களின் தேவைகளில் பெரும் பகுதியை இந்த வர்த்தகர்கள் இவ்வாறு ஒரு சாராரிடமிருந்து வாங்கி மற்றொரு சாராருக்கு விற்பது மூலம் பூர்த்தி செய்ய முடிகின்றது. ஆனால் இவ்வாறான தேவைகளும் அளிப்புக்களும் தாமாகவே சமநிலை அடைந்துவிடும் என்று எண்ணிவிடலாகாது. சில நாட்களில் விற்பனைக்கு வரும் அயல் நாட்டுச் செலாவணிகள் அவற்றிற்கான தேவைகளை விட அதிகமாக இருக்கலாம்; வேறு சில நாட்களில் விற்பனைக்கு வரும் அயல் நாட்டுச் செலாவணிகளை விட அவற்றிற்கான தேவைகள் அதிகமாக இருக்கலாம். தேவைகள் அதிகமாகும்போதும், விற்பனைக்கு வரும் அயல் நாட்டுச் செலாவணிகள் அதிகமாகும்போதும், அந்த அதிகமான தேவைகளையும் அளிப்புக்களையும் சமாளிப்பதற்கு வர்த்தகர்கட்கு ஆதரவாக 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு' (Exchange Equalisation Account) அமைக்கப்பட்டுள்ளது இந்த 'பரிவர்த்தனைச் சமன் காப்பு கணக்கு' இங்கிலாந்தின் தலைமைப் பாங்கால் நிருவகிக்கப்பட்டு வருகின்றது. இந்தக் 'கணக்கு' தங்கம் அயல் நாட்டுச் செலாவணி ஆகியவற்றிற்கு நிலைக்களனாக—அதிகார பூர்வமான நிலைக்களனாகத் திகழ்கிறது. எந்தெந்த நாடுகளின் செலாவணிகள் தனக்குத் தேவைப் படுகின்றனவோ, அந்தந்த நாடுகளின் பண அதிகாரிகளிடமிருந்தே பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கானது அவற்றை (உதாரணமாக அமெரிக்க டாலர்கள்) தங்கத்திற்கு ஈடாகப் பெற முடியும். எனவே, 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு' தன்னிடம் தங்க இருப்புக்களை வைத்திருக்கின்றது. மார்க்கெட்டில் அவ்வப்போது தோன்றும் மிகுதியான தேவைகள் அல்லது மிகுதியான அளிப்புக்கள் ஆகியவற்றை இந்தப் 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு' சமாளிக்கத் தயாராக இருக்கின்றது. எனவே ஸ்டெர்லிங்குக்கும் ஏனைய செலாவணிகட்கும் இடையே உள்ள 'நாணய மாற்று வீதம்' பன்னாட்டுச் செலாவணி நிதியினால் (I.M. F. International monetary Fund) நிர்ணயித்துள்ள வரம்புகளைக் கடந்துவிடாமல், 'காப்புக் கணக்கால்' கண்காணித்து வர முடிகின்றது.

ஸ்டெர்லிங்கை வேறு அயல் நாட்டுச் செலாவணியாக மாற்றுவது பற்றிய பல பேரங்கள் மார்க்கெட்டில் நடைபெறுகின்றன. மார்க்கெட்டிலுள்ள மிகுதியான தேவை அல்லது மிகுதியான

அளிப்பு ஆகியவற்றைப் பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு அகற்ற விரும்புவதைப் பொறுத்தே இந்தப் பேரங்கள் யாவும் அமைகின்றன. இது பிரிட்டிஷ் மக்கள் ஈடுபடும் பேரங்களைப் பொறுத்த வரையிலேயே உண்மை என்று எண்ணிவிடலாகாது; ஸ்டேர்லிங் பிரதேசத்தில் வேறு பகுதிகளில் ஆரம்பமாகும் பேரங்களைப் பொறுத்த வரையிலும் இது உண்மையே யாகும். ஆஸ்திரேலியக் கம்பள ஏற்றுமதியாளர் ஒருவர், ஆஸ்திரேலியாவிலுள்ள தமது பாங்கிடம் பிராங்குகளைப் (Francs) விற்றால், அந்த ஆஸ்திரேலியாப் பாங்கி, பிராங்குகளை ஸ்டேர்லிங்குகட்கு ஈடாக இலண்டனில் விற்கும். இது போலவே, அமெரிக்காவினின்றும் தான் இறக்குமதி செய்துள்ள இயந்திர சாதனங்கட்கு ஆஸ்திரேலியா பணம் கொடுக்க வேண்டியிருப்பதால், அமெரிக்க டாலர்கட்கான தேவை ஏற்படும். ஆஸ்திரேலியப் பாங்கு ஆஸ்திரேலியாவின் பேரில் இலண்டனில் உள்ள ஸ்டேர்லிங் இருப்புக்களைப் பயன்படுத்தி இலண்டனிலேயே டாலர்கள் வாங்க ஏற்பாடு செய்யும். இவ்வாறு, 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு' பிரிட்டனுக்கேயன்றி ஸ்டேர்லிங் பிரதேசம் முழுவதற்கும், தங்கம், அயல் நாட்டுச் செலாவணிகள் ஆகியவற்றின் நிலைக்களனாகத் திகழ்கிறது. ஸ்டேர்லிங்கை ஏனைய நாட்டுச் செலாவணிகளை ஸ்டேர்லிங்குகளாக மாற்றுவது அல்லது ஏனைய நாட்டுச் செலாவணிகளை ஸ்டேர்லிங்குகளாக மாற்றுவது ஆகிய இரண்டனுள் ஒன்றினையே 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு' தன்னுடைய ஒவ்வொரு நடவடிக்கையிலும் செய்கிறது. 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு' தன்னிடமுள்ள அயல்நாட்டுச் செலாவணிகளில் பெரும் பகுதியைத் தங்கமாகவே மாற்றி வைத்திருக்கின்றது. தன்னிடமுள்ள ஸ்டேர்லிங் இருப்புக்கள் யாவற்றையும் அது கருவூல உண்டியல்களாக மாற்றி வைத்திருக்கின்றது. எனவே 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கின் வியாபார இருப்புக்கள் (Stock-in-trade) பெரும்பாலும் தங்கத்தாலும், கருவூல உண்டியல்களாலும் ஆகியவையேயாகும். எனவே பன்னாட்டுக் கொடுப்பல் நிலையானது (International Balance of Payments) ஸ்டேர்லிங் பிரதேச நாடுகள் அனைத்திற்கும் சாதகமாக அமைந்திருக்கும் பட்சத்தில், 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கின்' தங்க இருப்பு அதிகமாகும்; அதன் கருவூல உண்டியல்களின் இருப்புக் குறையும், ஆனால் பன்னாட்டுக் கொடுப்பல் நிலை ஸ்டேர்லிங் பிரதேசம் முழுவதற்கும் பாதகமாக அமைந்திருந்தால் 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கின்' தங்க இருப்புக் குறையும்; அதன் கருவூல உண்டியல்களின் இருப்பு அதிகமாகும். தங்க இருப்புக்களேயன்றி போதுமான அளவு டாலர்களையும் 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு' நடைமுறை

இருப்புக்களாக (Working Balance) வைத்திருக்கின்றது, டாலர்கள் தேவைப்படும் போதெல்லாம் அமெரிக்க அதிகாரிகளிடமிருந்து தங்கத்திற்கு ஈடாக டாலர்களைப் பெற முடியும். எனவே 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கின்' பேரங்களால் இங்கிலாந்தின் நிதி முறையில் (English Financial system) ஏற்படக் கூடிய விளைவுகள் யாவும் பிரிட்டிஷ் கருவூல உண்டியலை அமெரிக்க டாலர்களாக மாற்றுவதை யொட்டி நேரக்கூடியவைகளேயாகும்.

'பரிவர்த்தனைச் சமன் காப்புக்' கணக்கு கருவூல உண்டில்களை டாலர்களாக மாற்றுகின்றது. டாலர்களைக் கருவூல உண்டில்களாக மாற்றுகின்றது. ஸ்டெர்லிங்கின் அயல்நாட்டுச் செலாவணி மதிப்பை குறிப்பிட்ட வரம்புகட்குள் கட்டுப்பாடாக வைத்திருப்பதே இந்தப் பேரங்களின் நோக்கமாகும். பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கின் நடவடிக்கைகளால் உள்நாட்டு நிதி முறைகளும் பாதிக்கப்படுகின்றன. எனவே இதனால் உள்நாட்டில் ஏற்படக்கூடிய விளைவுகள் யாவை என்பது குறித்து இனி ஆராய்வோம். இங்கிலாந்து நாட்டு மக்கள் வேறு நாடுகட்குப் பணம் செலுத்த வேண்டிய நிலையில் உள்ளனர் என்றும், அந்த வேற்று நாட்டினர் விரும்புவது தங்கம் அல்லது டாலர்கள் தாம் என்றும் வைத்துக் கொள்வோம். அவ்வாறுயின் இங்கிலாந்து நாட்டு மக்கள் தங்கள் பாங்குகளை அணுகுவர்; பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் மூலம் பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கிடமிருந்து டாலர்களை விலைக்குவாங்கும். பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கானது டாலர்கட்கு ஈடாகப் பாங்கின் டெபாசிட்டுக்களைப் பெறும். அதாவது இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுக்களினின்றும்' (Bankers' Deposits) 'பொதுத்துறைகளின் டெபாசிட்டுகட்'குப் (Public Deposits) பணமானது மாற்றப்படும். இவ்வாறு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் தன்னுடைய கணக்கிலுள்ள டெபாசிட்டுக்கள் அதிகமானதும், 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு', மார்க்கெட்டில் கருவூல உண்டியல்களை வாங்க ஆரம்பிக்கின்றது இதனால் இங்கிலாந்து நாட்டின் பாங்குகள் தங்களுடைய ரொக்க விகிதத்தை அதிகரிக்க முடிகின்றது; ஆனால் அவற்றின் பண மார்க்கெட் சொத்துக்கள் குறைகின்றன. இம்மாதிரி அடுத்தடுத்து நேரும் நிகழ்ச்சிகளை நமது வழக்கமான விஷயச் சுருக்க அட்டவணைகள் மூலம் கீழே குறித்துள்ளோம் :—

# நிலை I

(£ மில்லியன்களின்)

## இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு

| | | | |
|---|---|---|---|
| பாங்கர்களின் டெபாசிட்டுகள் + வாணிபப பாங்குகட்குக் கொடுக்க வேண்டிய நோட்டுவகையைச் சார்ந்த பொறுப்புக்கள் | 80 | அரசாங்கப் பத்திரங்கள் | 180 |
| பொதுத்துறைகளின் டெபாசிட்டுகள் | 100 | | |
| | 180 | | 180 |

## வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | 1000 | கையிருப்பு ரொக்கமும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் உள்ள ரொக்கமும் | 80 |
| | | பணமார்க்கெட்டில் வாங்கப்பட்ட சொத்துக்கள் | 200 |
| | | ஏனைய சொத்துக்கள் | 720 |
| | 1000 | | 1000 |

ரொக்கப் பணவிகிதம் = 8% பணமார்க்கெட் சொத்துக்கள் விகிதம் = 20%.

# நிலை II

(தங்கள் பாங்கு டெபாசிட்டுக்களில் £ 40 மில்லியன்களைப் பயன்படுத்தி டாலர்கள் வாங்குமாறு மக்கள் பாங்குகளைக் கேட்டுக் கொள்ளுகின்றனர். பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் தங்கள் கணக்கில் உள்ள டெபாசிட்டுக்களை இதற்குப் பயன்படுத்துகின்றன. எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் 'பாங்கர்களின் டெபாசிட்டுக்கள்' என்ற இனத்திலிருந்து £ 40 மில்லியன் குறைக்கப்பட்டு 'பொதுத் துறையினரின் டெபாசிட்டுக்கள்' என்ற இனத்தின் கீழ் வரவுவைக்கப்படும். இவையாவும் நேர்ந்தபின் ஏற்படும் நிலையைக் கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணை குறிக்கின்றது.)

## இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு

| | | | |
|---|---|---|---|
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் + வாணிபப பாங்குகட்குக் கொடுக்க வேண்டிய நோட்டுவகையைச் சார்ந்த பொறுப்புக்கள். | 40 | அரசாங்கப் பத்திரங்கள் | 180 |
| பொதுத் துறையினரின் டெபாசிட்டுக்கள் (பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்குகான £ 40 மில்லியன்கள் உட்பட) | 140 | | |
| | 180 | | 180 |

### வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | 960 | கையிருப்பு ரொக்கமும் இங்கிலாந்துத் தலைமைப் பாஙகில் உள்ள பணமும். | 40 |
| | | பணமார்க்கெட் சொத்துக்கள் | 200 |
| | | ஏனைய சொத்துக்கள் | 720 |
| | 960 | | 960 |

ரொக்கப் பணவிகிதம்=சுமார் 4% பணமார்க்கெட் சொத்துக்களின் விகிதம்=சுமார் 21%

## நிலை III

(வாணிபப் பாங்குகள் தங்களது ரொக்கப் பண விகிதத்தை 8% ஆக செம்மை செய்வதற்குத் தங்களுடைய பண மார்க்கெட் சொத்துக்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடம் விற்கின்றன. ஆனால் பரிவர்த்தனைச் சமன காப்புக் கணக்கு, தனது அதிகரித்துள்ள டெபாசிட்டுக்கான £ 40 மில்லியன்களை இன்னும் பயன் படுத்தவில்லை. இந்த நிலையையே கீழே கொடுக்கப்பட்டிருக்சம் அட்டவணை குறிக்கின்றது.)

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு

| | | | |
|---|---|---|---|
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் + வாணிபப் பாங்குகட்குக் கொடுக்க வேண்டிய நோட்டு வகையைச் சார்ந்த டெபாசிட்டுக்கள் | 77 | அரசாங்கப் பத்திரங்கள் (180+மார்க்கெட்டில் 'குறுக்கு வழியில்' வாங்கப் பட்ட 37) | 217 |
| பொதுத்துறையினரின் டெபாசிட்டுக்கள் | 140 | | |
| | 217 | | 217 |

### வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெட்பாசிட்டுக்கள் | 960 | ரொக்கப் பணம் | 77 |
| | | பணமார்க்கெட் சொத்துக்கள் | 163 |
| | | ஏனைய சொத்துக்கள் | 720 |
| | 960 | | 960 |

ரொக்கப்பண விகிதம்=8% பணமார்க்கெட் சொத்துக்கள் விகிதம்—சுமார் 17%

இதன்பின் 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு'த் தன்னுடைய இருப்புத் தொகையைப் பயன்படுத்தி மார்க்கெட்டின் கருவூல உண்டியல்கள் வாங்கமுனையும். உண்டியல் கழிவு அகங்களும் பாங்குகளும் தங்களிடம் உள்ள கருவூல உண்டியல்களை விற்கும் நோக்கம் உடையவர்களாகத் தோன்றவில்லை—பாங்கு

களைப் பொறுத்த வரையில், அவர்களுடைய ரொக்க நிலை சுமுக மாக இருந்தால் எவ்வளவு பணமார்க்கெட் சொத்துக்கள் வைத் திருக்கின்றன. இம்மாதிரியான நிலையில் பணமார்க்கெட்டில் 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு' கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்க முயன்றால், அது கழிவு வீதத்தை (Discount Rate) மிகவும் பாதிக்கும் என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கருத லாம். எனவே இங்கிலாந்துத் தலைமை பாங்கு பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கிற்குத் தேவைப்படும் கருவூல உண்டியல் களைத்தானே விற்க முன் வருகின்றது. இதனால் மையப் பாங்கிட முள்ள கருவூல உண்டியல்களின் இருப்பு குறைகின்றது. இதற்கு ஈடாகப் பொறுப்புக்களும் குறைகின்றன. அதாவது 'பொதுத் துறையினரின் டெபாசிட்டுக்கள்' குறைகின்றன. எனவே கீழே காணக்கூடிய நிலை உண்டாகின்றது.

## நிலை IV

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு

| | | | |
|---|---|---|---|
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் மற்றும் பிற | 77 | அரசாங்கப் பத்திரங்கள் | 177 |
| பொதுத்துறையினரின டெபாசிட்டுக்கள் | 100 | | |
| | 177 | | 177 |

(வாணிபப் பாங்குகளைப் பொறுத்தவரையில் நிலை III நிலவும்)

நிலை III லிருந்து நிலை IVக்கு மாற்றம் நேருவதை நிதி நிறுவ னங்கள் எதுவும் உணராமல் இருக்க வாய்ப்பு உண்டு. அதாவது அந்த மாற்றத்தால் 'உண்டியல் கழிவு அகங்கள்' யாதொரு விதத் திலும் பாதிக்கப்படாமலிருக்க வாய்ப்பு உண்டு. இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கு 'டேப் வெளியீடு' ('Tap' Issue) மூலம் கொடுக்கப்படும் கருவூல உண்டியல்களைக் குறைத்துக்கொண்டு 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு'க்கு அந்த அளவுக்கு 'டேப் வெளியீட்டை' அதிகரித்தால் 'உண்டியல் கழிவு அகங்கள்' எவ்விதத்திலும் பாதிக்கப்படமாட்டா. அன்றி இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்குக்குத் தன்னிடமுள்ள கருவூல உண்டியல்களை விற்றாலும், உண்டியல் கழிவு அகங்கள் எவ்விதத்திலும் பாதிக்கப்படமாட்டா.

நாம் மேலே குறித்துள்ள நிலை IVல் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்குக்குக் 'குறுக்கு வழியின்' மூலம் கருவூல உண்டியல்களை விற்பதற்கான ஏற்பாடுகள்

செய்ததால் பணமார்க்கெட் வட்டி வீதங்கள் எவ்விதத்திலும் பாதிக்கப்படவில்லை என்பதை நாம் இங்கு வலியுறுத்த விரும்பு கிறோம். எனவே பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு, அயல் நாட்டு நாணயங்களை விற்ற தொகையைக் கொண்டு கருவூல உண்டியல்கள் வாங்கும் பழக்கத்தை உடையது என்று வைத்துக் கொண்டால், வாணிபப் பாங்குகள், பண அளிப்பு நிலையை எந்த விதத்திலும் பாதிக்காத வகையில், தங்கள் ரொக்க பண விகிதத்தை நிலையாக வைத்திருக்க முடியும். மேலே நாம் குறித் துள்ள நிலை IVக்கும் நிலை Iக்கும் இடையே இரண்டு முக்கியமான வேறுபாடுகள் இருப்பதைக் காணலாம். நிலை Iல் இருந்ததைவிட நிலை IVல் பொதுமக்கள் வாணிபப் பாங்குகளில் வைத்திருந்த டெபாசிட்டுக்கள் £ 40 மில்லியன்கள் குறைந்துள்ளன. மேலும் நிலை Iல் வாணிகப் பாங்குகளின் பணமார்க்கெட் சொத்துக்களின் விகிதம் 20% ஆக இருந்தது ; நிலை IVல் 17% ஆக குறைந் துள்ளது. இதனால் பொதுமக்கள் பாங்குகள் ஆகியோரின் ரொக்க நிலை முன்பு இருந்ததைவிடக் குறைவாக இருக்கும். இம்மாதிரி யான ரொக்க நிலை மாற்றம் பெருமளவில் நேருமேயாயின் வட்டி வீதங்கள் உயருவதற்கான சூழ்நிலை ஏற்படும். வட்டி வீதங் களின் உயர்வை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தடுக்க எண்ணினால், அது மார்க்கெட்டில் பத்திரங்களை விலைக்கு வாங்க வேண்டும். அவ்வாறு மையப் பாங்கு பத்திரங்களை விலைக்கு வாங்கும் பட்சத்தில், வாணிபப் பாங்குகளின் ரொக்கக் காப்புக்கள் (Cash Reserves), சொத்துக்கள், டெபாசிட்டுக்கள் ஆகியவை அதிகமாகும்.

இவ்வாறு பாதகமான அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையால் (Adverse Balance of Payments) நாட்டில் பணச் சுருக்கத்திற்கான (Deflation) அறிகுறிகள் தோன்றும். ஆனால் அதேசமயம் அர சாங்கம் வரவுக்கு மிஞ்சி செலவு செய்யவேண்டிய நிலை நேர்ந்தால் நாட்டில் பண வீக்கத்திற்கான ((Inflation) அறிகுறிகளும் தோன்றும். இவ்வாறு பணச் சுருக்கத்திற்கான அறிகுறிகளும் பணவீக்கத்திற்கான அறிகுறிகளும் நாட்டில் ஒரு சேரத்தோன்று வதால், அவை ஒன்றிற்கொன்று ஈடாக அமைந்து நிகர விளைவுகள் ஏதும் நேராமல் இருக்க வாய்ப்பு உண்டு. இதுகாறும் பாதக மான அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை இங்கிலாந்தில் மட்டும் நேர்ந்தது என்று வைத்துக் கொண்டோம். அவ்வாறன்றி R.S.A. நாடுகளில் பாதகமான அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை தோன்று வதாக வைத்துக் கொண்டால், அந்த நாடுகளின் பாங்குகள் தங்கள் நாடுகளின் பேரில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள கருவூல உண்டியல்களை விற்று அயல் நாட்டுச் செலாவணிகள்

வாங்கமுயலும், இந்தக் கருவூல உண்டில்களைப் பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கே விலைக்கு வாங்கிக் கொள்ளும். எனவே இம்மாதிரிப் பேரங்களால் இங்கிலாந்து நாட்டின் பாங்குத் தொழில் முறைகள் எந்த விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை. மேலும் இங்கிலாந்தில் எந்தவிதமான பணச் சுருக்க விளைவுகளும் நேராது. (எனினும் R. S. A. நாடுகளில் பணச் சுருக்க விளைவுகள் ஏற்படும்.

மேற் குறித்தவற்றிற்கு மாறுபட்ட நிலையில்—அதாவது இங்கிலாந்து நாட்டு மக்களிடம் அதிகமான அயல் நாட்டுச் செலாவணி இருக்கும்போது—என்ன விளைவுகள் நேரும் என்பதுபற்றி இனிக் காண்போம். இங்கிலாந்து நாட்டுமக்கள் தங்கள் பாங்குகளிடம் அந்த அயல் நாட்டுச் செலாவணியை விற்று விடுவர். பாங்குகள் அவற்றைப் 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கிடம்' விற்று விடும். பாங்குகட்குப் பணம் கொடுப்பதற்காகப் 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கு', தன்னிடமுள்ள கருவூல உண்டியல்களை விற்கும். முன்பு குறித்த 'நிலை Iஐ ஆரம்பமாகக்கொண்டு, 'பரிவர்த்தனைச் சமன் காப்புக் கணக்கி'டம் விற்பனைக்கு வந்துள்ள அயல் நாட்டுச் செலாவணிகளின் மதிப்பு £ 40 மில்லியன்கள் என்று கொண்டால், நாம் மேலே கண்ட நிலை IVக்கு மாறுபட்ட நிலையைக் காணலாம். அது வருமாறு :—

## நிலை IV A

(£ மில்லியன்களில்)

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு

| | | | |
|---|---|---|---|
| பாங்கர்களின் டெபாசிட்டுக்கள் மற்றும் பிற | 83 | அரசாங்கப் பத்திரங்கள் | 183 |
| பொதுத்துறையினரின் டெபாசிட்டுக்கள் | 100 | | |
| | 183 | | 183 |

### வாணிபப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுக்கள் | 1,040 | ரொக்கப் பணம் | 83 |
| | | பணமார்க்கெட் சொத்துக்கள் | 237 |
| | | ஏனைய சொத்துக்கள் | 720 |
| | 1,040 | | 1,040 |

ரொக்கப் பண விகிதம்=8% பணமார்க்கெட் சொத்துக்கள்=23%

மேலே காணும் நிலை IVA ல் பாங்குகளில் ரொக்கப் பண விகிதத்தில் மாற்றம் ஏதும் நேரவில்லை. ஆனால் பணமார்க்கெட்

சொத்துகளின் விகிதம் உயர்திருக்கின்றது. இதைப் பாங்குகள் விரும்புவதில்லை. எனவே, அவை கஜானா உண்டியல்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கினிடம் விற்றுவிட்டு அந்தப் பணத்தைக் கொண்டு மேலும் ஆதாயகரமான நீண்டகாலப் பத்திரங்களை வாங்குவதில் ஆர்வம் காட்டும். இதைப்போலப் பொதுமக்களும் தங்களிடமுள்ள பண இருப்புக்கள் £ 1,000 மில்லியன்களாக உயர்ந்திருப்பதை விரும்புவதில்லை. எனவே மில்லியன்களிலிருந்து £ 1040 இவர்களும் உபரிப்பணத்தை நெடுங்காலப் பத்திரங்கள் வாங்குவதில் பயன்படுத்த முனைவர். இவ்வாறு பாங்குகள் பொதுமக்கள் ஆகியவர்களின் நீர்மைத் தன்மை உயருவதால் வட்டி வீதம் குறைய நேரிடலாம். நிலைமைதானாகவே திருந்திவிடும் என்று அதிகாரிகள் ஏதும் நடவடிக்கைகள் எடுக்காமல் இருக்கும் பட்சத்தில், நாட்டில் கட்டாயம் பணவீக்க நிலைக்கான அறிகுறிகள் தோன்றும். இருப்பினும் அதே சமயம் நாட்டில் பணச் சுருக்கத்திற்கான அறிகுறிகளும் (அரசாங்கத்தின் வரவுகள் செலவுகளைவிட அதிகமாக இருப்பதாலோ. தனிப்பட்ட நபர்களின் சேமிப்புக்கள் அவர்களின் முதலீடுகளைவிட அதிகமாக இருப்பதாலேஇம்மாதிரி நேரலாம்) தோன்றலாம். இவ்வாறு, பண வீக்கத்திற்கான அறிகுறிகளும் (பணச் சுருக்கத்திற்கான அறிகுறிகளும்) நாட்டில் ஒரு சேரத் தோன்றுவதால், அவை ஒன்றுக்கொன்று ஈடாக அமைந்து நிகர விளைவுகள் ஏதும் நேராமல் இருக்க வாய்ப்பு உண்டு.

இதுகாறும் நாம் கூறிய விளக்கங்காளல் நமக்கு ஒரு உண்மை புலனாகின்றது—அதாவது பாதகமான அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை (Adverse Balance of payment) உள்நாட்டில் பணச் சுருக்க நிலையை தோற்றுவிக்கும்; அதேபோல சாதகமான அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை (Favourable Balance of payments) உள்நாட்டில் பண வீக்க நிலையை ஏற்படுத்தும். இவ்வாறு நேரக்கூடிய பண வீக்க நிலை, பணச் சுருக்க நிலை ஆகியவற்றின்மீது செயல்படுவதே மையப் பாங்கின் வேலைகளில் ஒரு முக்கியப் பகுதியாகும். ஒரு குறிப்பிட்ட காலத்தில் எந்த நிலை நிலவுகின்றது—பணச் சுருக்க நிலையா அல்லது பண வீக்க நிலையா—என்பது பற்றி அதிகாரிகள் ஆராய்ந்து சரியான முடிவுக்கு வரவேண்டியது இன்றியமையாததாகும்.[1] நாட்டில் பணச்சுருக்க நிலை அல்லது

[1] நாட்டின் பொருளாதார அமைப்பில் மாற்றம் நேர்ந்து கொண்டிருக்கும் போதே அதிகாரிகள் அவை பற்றி தீர்க்கமாக ஆராய்வது, நடைமுறையில் பயன்படுத்தக்கூடிய கொள்கைகளை வகுப்பது மிகவும் இன்றியமையாததாகும். நிலைமை குறித்து எல்லா விஷயங்களும் அடங்கிய புள்ளிவிவரங்கள் கிடைக்கும் வரை அதிகாரிகள் காத்திருக்க முடியாது.

பண வீக்க நிலை தோன்றும் போது, அதிகாரிகள் நாட்டில் நிலவும் வேறு சூழ் நிலைகளையும் மனத்தில் கொண்டு சுருக்கத்தை அல்லது வீக்கத்தைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியந்தானா, இல்லையா, என்பது குறித்து முடிவு கட்டவேண்டும். வட்டிவீத அமைப்பில் நேரும் மாற்றங்களை அதிகாரிகள் விழிப்புடன் கண் காணிக்க வேண்டியதன் அவசியம்தான் என்ன? ஏன் அவற்றை நாம் 'பண வீக்கநிலை' என்றும், 'பணச் சுருக்க நிலை' என்றும் பெயரிட்டு அழைக்கின்றோம்? இவற்றிற்கான பதில்களை அத்தி யாயம் ஏழில் காணலாம்.

# 7. வட்டி விதம், கடன் தரும் நிதிகளின் அளிப்பு நிலை, பொருளாதார நடவடிக்கை ஆகியவற்றிற்கு இடையே யுள்ள தொடர்பு

## 1. குறுங்கால வட்டிவீதமும் சரக்குகளை இருப்பு வைத்தலும்.

பொருளாதார நடவடிக்கைகளைத் தங்களால் மாற்றி அமைக்க இயலாது என்றும் தங்களை நாடிவரும் நாணயமான வர்த்தகர் கட்குத் தாற்காலிகமாக நிதி உதவி செய்வதே தங்களது தலையாய பணி என்றும் பாங்கர்கள் சில சமயம் கருதுகின்றனர். தனிப்பட்ட ஒரு பாங்கர் இவ்வாறு எண்ணுவது ஓரளவுக்குப் பொருந்தும் என்று கொண்டாலும், பாங்கு முறையைப் பொறுத்தவரையில் இந்தக் கருத்தை ஏற்றுக்கொள்ள முடியாது. பாங்கு முறை நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளை மாற்றி அமைக்கும் ஆற்றல் பெற்று விளங்குகின்றது. நேரடியாக, உடனே பொருளாதார நடவடிக்கைகளின் வேகத்தைப் பாங்கு முறையால் மாற்றி அமைக்க முடியும். எந்தெந்த (மறைமுகமான) வழிகளின் மூலம் பாங்குகள் பொருளாதார நடவடிக்கைகளின் வேகத்தை மாற்றி அமைக்கமுடியும் என்பதைப்பற்றி ஆராய்வதே இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும்.

பொருளாதார நடவடிக்கைகளின் வேகம், தொழில் அதிபர்கள் உற்பத்திக்குச் செல்வ வளங்களைத் துணிவுடன் ஆற்றலுடனும் பயன்படுத்துவதைப் பொறுத்ததாகும். பாங்குகளால் தொழிலதிபர்களின் மேற்குறித்த துணிவையும் ஆற்றலையும் மாற்றி அமைக்கமுடியும். இவ்வாறு தொழிலதிபர்களின் துணிவையும்

ஆற்றலையும் மாற்றி அமைப்பதன் மூலம் பாங்குகள் பொருளாதார நடவடிக்கைகளை மாற்றி அமைக்கின்றன. இருப்பினும், பாங்கு அமைப்பிற்குச் சிறிதளவேனும் கட்டுப்படாத வேறு பல காரணிகளும் (Factors) தொழில் அதிபர்களின் நடவடிக்கைகளை மாற்றி அமைக்கக் கூடும் என்பதை நாம் மறந்துவிடலாகாது, எனவே ஏனைய காரணிகளோடு ஒப்பிடும்போது பாங்கு அமைப்புத் தொழில் அதிபர்களின் நடவடிக்கைகளை மாற்றி அமைக்கும் பணியில் என்ன பங்கு பெறுகின்றது என்பதைப் பற்றியும் அறிய வேண்டுவது அவசியமாகும். ஏனைய காரணிகள், தொழிலதிபர்களின் நடவடிக்கையை மாற்றியமைப்பதில் சக்தி வாய்ந்தவையாக இருக்கலாம் அல்லது சக்தி அற்றவையாக இருக்கலாம். ஆனால் பாங்கு அமைப்பு, தொழில் அதிபர்களின் நடவடிக்கைகட்கு ஓரளவாவது காரணமாகும் என்பதை யாரும் மறுக்க முடியாது. தொழில் அதிபர்களின் நடவடிக்கைகளின் வேகத்தைக் கட்டுப்படுத்துவதன் மூலம் பாங்குகள் நாட்டின் வேலை நிலை, விலைவாசிகள், வருமானம் ஆகியவற்றைத் தீர்மானிக்கின்றன. பாங்கு முறை கீழே கொடுக்கப்பட்டுள்ள மூன்று வழிகளின் மூலம் மூன்று தொழில் அதிபர்களின் நடவடிக்கைகளை மாற்றி அமைக்க முடியும்.

(1) குறுங்கால வட்டி வீதத்தின் மூலம், இது வர்த்தகர்கள் தாற்காலிகமாகச் சரக்குகளை இருப்புவைக்கும்போது அவர்களுக்கு ஆகக்கூடிய செலவினங்களை முக்கியமாகப் பாதிக்கின்றது.

(2) நெடுங்கால வட்டி வீதத்தின் மூலம் இது நிலை முதல் பொருட்களுக்கான (Fixed Capital) மார்க்கெட்டை முக்கியமாகப் பாதிக்கின்றது.

(3) கடன்தரும் நிதிகள் கிடைக்கக்கூடிய வாய்ப்புக்கள் மூலம் வர்த்தகர்களின் செல்வ வளங்களை வாங்குவதற்கான ஆற்றலை இது நேரடியாகப் பாதிக்கின்றது. ஈண்டுச் செல்வ வளங்கள் என்றது வினைமுடிந்த பொருள்கள், (Finished goods) உழைப்பு, உற்பத்தி செய்யப்பட்டுக் கொண்டிருக்கும் பொருள்கள்—ஆகியவற்றைக் குறிக்கும்.

பாங்கர்கள் வர்த்தகர்கட்குக் குறுகிய காலக்கடன் வசதிகளையே பெரும்பாலும் ஏற்பாடு செய்கின்றனர். இதற்கான காரணங்களை விரிவாக ஒன்பதாம் அத்தியாயத்தில் காண்போம். வினை முடிந்த பொருள்களையோ, (Finished goods) எளிதில் விற்பனை செய்யக் கூடிய மூலப் பொருள்களையோ வர்த்தகர்கள்

குறுகிய காலத்திற்கு இருப்புவைப்பது உண்டு. இவற்றை இருப்பு வைப்பதற்குச் சாதகமாகக் குறுகிய காலத்திற்கு வர்த்தகர்கட்குப் பண உதவி செய்வதையே பாங்கர்கள் விரும்புகின்றனர். வர்த்தகர் ஒருவரின் இருப்பு நிலைக்குறிப்பு (Balance sheet) அவர் எளிதில் விற்பனை செய்யக்கூடிய பொருள்களைத் தேக்கிவைத்திருக்கின்றார் என்று பாங்கு அறிய வந்தால், அவருக்குப் பாங்கு பணஉதவி செய்யும்போது அவருடைய லாபம் ஈட்டக்கூடிய ஆற்றலைப் பற்றிக்கூட கவலைப்படுவதில்லை. எனவே வர்த்தகர்கட்குப் பாங்கர் கடன் தர விரும்பும் நிலையும் விரும்பாத நிலையும் வர்த்தகர்களின் நடவடிக்கைகளை நேரடியாகப் பாதிக்கின்றன என்று கூற முடியும்; குறிப்பாகக் குறுங்காலக் கடனுக்கான வட்டிவீதங்கள் வர்த்தகர்களின் நடவடிக்கைகளை நேரடியாகப் பாதிக்கின்றன என்று கூறலாம். வர்த்தகர்கட்கும், பாங்கருக்கும் இடையே நிலவும் இம்மாதிரி உறவு பாங்கர்கள் பொருளாதார நடவடிக்கைகளின் வேகத்தை மாற்றியமைப்பதற்குச் சாதகமான முக்கியமான காரணமாகும் என்று சில பொருளாதார நிபுணர்கள் கருதுகின்றனர். அவர்களுள் சிறப்பாக சர் ரால்ஃப் காட்ரி[1] (Sir Ralph Hawtrey) என்பார் இதை மிகவும் வலியுறுத்துகிறார். திரு. காட்ரி அவர்களது கூற்று வருமாறு பெரும்பாலான வியாபாரங்களில் வர்த்தகர்கள் சரக்கை இருப்பு வைக்கும் பழக்கம் உடையவராக இருக்கின்றனர். பொருள்களுக்கான தேவைகளில் மாற்றங்கள் நேரலாம்; சில சமயம் பொருள்களின் அளிப்பு நிலையிலும் (Supply of materials) தடைகள் நேரலாம். இது போன்ற சூழ்நிலைகளைச் சமாளிக்கும் நோக்கத்தோடுதான் வர்த்தகர்கள் சரக்கை இருப்புவைக்கின்றனர். சரக்குகளை இவ்வாறு இருப்பு வைப்பதில் வர்த்தகர்கட்குச் சில ஆதாயங்கள் இருக்கின்றன; ஆனால் அவர்களுக்குச் சில செலவினங்களும் நேருகின்றன. எனவே ஆதாயம், செலவினங்களைவிட அதிகமாக உள்ளதா அல்லது குறைவாக உள்ளதா என்று தீர்மானித்தே வர்த்தகர் சரக்குகளை இருப்புவைக்கிறார். சரக்கு வாங்குவதற்கும் இருப்பு வைப்பதற்கும் தேவையான பணத்தை வர்த்தகர்கள் பெரும்பாலும் பாங்குகளிடமிருந்தே கடனாகப் பெறுகின்றனர். எனவே பாங்குக் கடனுக்கு வர்த்தகர் கொடுக்கவேண்டிய வட்டித் தொகை, செலவினங்களுள் ஒன்றாகும் (கடன் வாங்க வேண்டிய அவசியம் ஏதுமின்றி வர்த்தகர் தம்முடைய பணத்தையே பயன் படுத்தினால் அந்தப் பணத்தை வேறொருவருக்குக் கடனாகக்

[1] இந்தக் கோட்பாட்டை சர் ரால்ஃப் காட்ரியானவர் தம்மால் எழுதப் பட்டுள்ள 'செலாவணியும கடனும்' (Curency and Credit ) 'மையப் பாங்குக் கலை' (the art of Centrel Banking , 'ஒரு நூற்றாண்டு காலம் நிலவிய பாங்கு வீதம்' A century of Bank Rate) ஆகிய நூல்களில் விளக்குகின்றார்.

கொடுத்திருந்தால் எவ்வளவு வட்டி கிட்டுமோ அதைத் தமது தற்போதைய செலவினமாகக் கருதுவார்.) எனவே வட்டிவீதம் அதிகமாகும் பட்சத்தில் செலவினங்கள் அதிகமாகும். செல வினங்கள் அதிகமாகும்பொழுது இருப்புச் சரக்கைக் குறைக்கவே வர்த்தகர் முயல்வார். விற்பனையை அதிகமாக்கி வாங்குவதைக் குறைத்து வர்த்தகர் இருப்புச் சரக்கைக் குறைக்க முடியும். பொருள்களைக் கொடுத்துவிட்டு ரொக்கத்தை வர்த்தகர்கள் ஈடாகப் பெறமுனைவர். ரொக்கத்தைக் கொண்டு தங்களது கடன் களைத் தீர்க்கமுனைவர். எல்லா வர்த்தகர்களும் பெருமளவில் இவ் வாறு செய்ய ஆரம்பித்தால் தயாரிப்பாளர்களின் விலை குறையும். விலையைக் குறைத்தல் அல்லது உற்பத்தியைக் குறைத்தல் ஆகிய இரண்டில் ஏதாவது ஒன்றையோ, இரண்டையுமோ தயாரிப் பாளர்கள் கைக்கொள்ள வேண்டிவரும். இவ்வாறுக நாட்டில் பணச்சுருக்கத் (Deflation) திற்குரிய அறிகுறிகளான விலைவாசிக் குறைவு உற்பத்திக் குறைவு ஆகியவை தோன்றும். இதுகாறும் வட்டிவீத உயர்வால் நேரக்கூடிய விளைவுகளை ஆராய்ந்தோம். இனி வட்டிவீதம் குறைவதால் என்ன விளைவுகள் நேரிடும் என்பதைக் காண்போம். வட்டி வீதம் குறைந்தால் சரக்கை இருப்புவைக்க ஆகும் செலவினங்கள் குறையும். எனவே அதிக மான சரக்குகளை இருப்புவைப்பதை வர்த்தகர்கள் விரும்புவர். தங்களது விற்பனையைவிடக் கொள்முதலை அதிகப்படுத்துவதால் வர்த்தகர்கள் தங்களிடமுள்ள இருப்பை அதிகரிக்க முடியும். தயாரிப்பாளர்களின் சரக்குகளுக்கான தேவை அதிகரிக்கும். எனவே அவர்கள் உற்பத்தியைப் பெருக்குவர். உற்பத்தி பெருகும் போது வேலை நிலையும் பண வருமானமும் நாட்டில் பெருகும். சுருங்கக் கூறின் வட்டிவீதங்களின் வீழ்ச்சியால் பணவீக்கத் (Inflation) திற்குரிய அறிகுறிகள் தோன்றும்.

வர்த்தகர்கள் சரக்குகளை அதிகமாக இருப்பு வைக்கும் பொழுதும் குறைவாக இருப்பு வைக்கும்பொழுதும் வட்டி வீதங் கட்கும் எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கின்றனர் என்பதை நம்மால் அறிய முடியுமேயானல் திரு. காட்ரி அவர்களின் வாதத்தின் முக்கியத்துவத்தை நாம் உறுதி செய்ய முடியும். சரக் கை இருப்பு வைக்கும் பொழுது வர்த்தகருக்கு வட்டிவீதம் தவிர ஏனைய செலவினங்களும் நேருகின்றன. கிடங்கு சம்பந்தமான செல வினங்கள் நேரலாம். பொருள்கள் இன்சூரன்ஸ் செய்வதால் சில செலவினங்கள் நேரலாம் மேலும் சரக்கை இருப்பாக வைத்திருக் கும்போது ஒருவேளை அவை அழிந்து விட நேரலாம் அல்லது விலை வாசி குறைந்து வர்த்தகர் நஷ்டமடைய நேரலாம். இம்மாதிரி யான எதிர்பாராத நிலைமைகளைக் குறிக்கும் வகையில் ஒரு சிறு

தொகையைச் செலவினங்கள் பொருளுக்குப் பொருள் மாறுபடு கின்றன. இந்தச் செலவினங்கள் பெரும்பாலும் அதிகமாகவே இருப்பதால், வட்டி வீதமாற்றமே வர்த்தகர்களின் இருப்பைப் பாதிக்கும் என்று கொள்ளமுடியாது. வட்டி வீதத்தில் பெருமளவு மாற்றம் நேருவதை நாம் இங்கு விதிவிலக்காகக் கொள்ள வேண்டும். ரேட்கிளிஃப் குழுவினர் சேகரித்துள்ள சான்றுகள் இந்தக் கருத்தையே உறுதிப் படுத்துகின்றன. இருப்புவைக்கும் நோக்கத்தோடு வர்த்தகர்கள் செய்யும் வட்டி வீதமாற்றங்களால் கொள்முதல் பெருமளவு பாதிக்கப்படுவதில்லை என்பதே அவர் களின் உறுதியான எண்ணமாகும். இங்கிலாந்தில் 19-ஆம் நூற்றுண்டில் முதற்பகுதியில் தற்காலத்தில் இருப்பதைவிடக் கடந்த காலத்தில் பொருளாதார நிலைகள் முற்றிலும் மாறுபட்டன வாக அமைந்திருக்கலாம். எனவே அம்மாதிரியான சூழ்நிலையில் வர்த்தகர்கள் இருப்புவைக்கும் நோக்கத்தோடு செய்யும் கொள் முதலை வட்டிவீதம் வெகுவாகப் பாதித்திருக்கலாம். மேலும் இன்று கூட சில வர்த்தக அமைப்புகளில் வட்டிவீதம் இருப்பு நிலையைப் பாதிக்கும் அளவுக்கு ஆற்றல் பெற்று விளங்கலாம். எனினும், குறுகிய காலக்கடன்களுக்கான வட்டி வீதங்களை மாற்றி அமைப் பதன் மூலம் பாங்கர்கள் பொருளாதார நடவடிக்கைகளையும் மாற்றி அமைக்கமுடியும் என்ற கருத்து தற்காலப் பொருளாதார அமைப் புக்களைப் பொறுத்தவரையில் பொருந்தாத கருத்து என்றே தோன்றுகிறது.

மேற்குறித்த முடிவின் அடிப்படையில் பாங்குகளின் நடவடிக் கைகளில் எதுவுமே வர்த்தகர்கள் வைத்திருக்கும் இருப்புக்களின் அளவை ஒரு சிறிதும் பாதிக்காது என்று எண்ணவிடலாகாது. பாங்குச் செலாவணி கிடைப்பது அரிதாக இருந்தால் வர்த்தகர் களின் நடவடிக்கைகள் ஒரு வேளை பாதிக்கப்படலாம். வட்டிவீத உயர்வையொட்டிப் பாங்கர்கள் கடன் வசதிகளை ஏற்பாடு செய் வதில் பெரிதும் ஆர்வம் இல்லாமல் இருந்தால் (எனவே கடன் பெறுவது கடினமானதாக இருந்தால்) தம்முடைய நிதி நிலையைச் சரிசெய்து கொள்வதற்காகத் தமது இருப்புச் சரக்கைக் குறைத்துக் கொள்வதே சுலபமான வழி என்று எண்ணி வர்த்தகர் தம்மிட முள்ள சரக்குகளின் இருப்பைக் குறைக்கலாம். இம்மாதிரியான ஒரு கட்டாய நிலை வர்த்தகர் பாங்குக் கடனுக்கு மிகுதியான வட்டி கொடுக்க வேண்டிய சூழ்நிலையில் (Dear Credit) நேராது, பாங்குக் கடன் கிடைப்பது மிக மிக அரிது என்ற ஒரு நிலையிலேயே (Tight Credit) மேற்படி கட்டாய நிலை—அதாவது இருப்புச் சரக்கை விற்க வேண்டிய நிலை—நேரிடும்.

## 2. குறுங்கால வட்டி வீதத்திற்கும் நெடுங்கால வட்டி வீதத்திற்கும் உள்ள தொடர்பு

பாங்குக் கொள்கையினால் பெரும்பாலும் குறுங் காலக்கடன்களுக்கான வட்டி வீதங்களே நேரடியாகத் தீர்மானிக்கப் படுகின்றன. இருப்பினும் பாங்கர்களின் நடவடிக்கைகளினால் குறுங்கால வட்டி வீதமேயன்றி நெடுங்கால வட்டி வீதமும் ஓரளவுக்கு நிர்ணயிக்கப்படுகின்றது. குறுகிய கால வட்டி வீதத்திற்கும் நெடுங்கால வட்டி வீதத்திற்கும் இடையேயுள்ள நெருக்கமான தொடர்பே இதற்குரிய காரணமாகும். குறுகிய கால வட்டி வீதத்தில் நேரும் குறிப்பிடத் தக்க மாற்றம் எப்பொழுதும் நெடுங் கால வட்டி வீதத்தை ஓரளவாவது பாதிக்கும். எனவே பாங்குக் கொள்கை குறுகிய கால வட்டி வீதத்தைச் சார்ந்திருக்கும் வர்த்தகங்களையே யன்றி, நெடுங்கால வட்டிவீதத்தைச் சார்ந்திருக்கும் தொழில்களையும் மாற்றி அமைக்கும் ஆற்றல் உடையதாகும். பாங்குகளின் கொள்கையால் பொருளாதார நடவடிக்கை எவ்வாறு பாதிக்கப்படுகின்றது என்று நாம் அறிய விரும்பினால், குறுகிய கால வட்டிவீதத்தில் எவ்வப்போது மாற்றங்கள் நேருகின்றனவோ அவ்வப்போது நெடுங்கால வட்டி வீதத்திலும் மாற்றங்கள் நேருகின்றன என்பதை மட்டும் நாம் அறிந்து கொள்வது போதாது. குறுகிய கால வட்டி வீதங்களில் பெருமளவு மாற்றங்கள் ஏற்படும் போது ஏன் நெடுங்கால வட்டி வீதங்களிலும் அதே திசையில் மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பதையும் நாம் ஆராய வேண்டுவது அவசியமாகும்.

வட்டி வீதம் ஒரு விலையே ஆகும். தற்சமயம் நம் கையிலுள்ள பணத்தை மற்றொருவரிடம் கடனாகக் கொடுத்து பிறிதொரு காலத்தில் அதைத் திரும்பப் பெறுவதற்காக நாம் குறிக்கும் விலையே வட்டி வீதமாகும். ஒவ்வொரு விலைக்கும் தனித் தனி மார்க்கெட்டு உண்டு. எனவே குறுகியகால வட்டி வீதம் என்ற விலைக்கும் நெடுங்கால வட்டிவீதம் என்ற விலைக்கும் இடையே உள்ள தொடர்பை அறிய வேண்டுமாயின், குறுகிய கால மூலதன மார்க்கெட்டுக்கும் (இந்த மார்க்கெட்டில் பாங்குகட்கும் அவர்களுடைய வாடிக்கைக் காரர்கட்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது) நெடுங்கால மூலதன மார்க்கெட்டுக்கும் இடையே உள்ள தொடர்பை ஆராய வேண்டுவது அவசியமாகும் (நம்முடைய வசதிக்காக இவ்வாறு மூலதன மார்க்கெட்டைப் பகுத்திருக்கின்றோம். சிக்கல்கள் கீழே விளக்கப்படும்) குறுகிய கால மூலதன மார்க்கெட்டுக்கும் நெடுங்கால மூலதன மார்க்

கெட்டுக்கும் இடையே என்னென்ன தொடர்புகள் உள்ளன, என்ற வினுவிற்குரிய பதிலை இனிக்காண்போம்.

இந்த வினுவிற்குரிய பதில் இரு பகுதிகளால் ஆகியதாகும், பாங்குகளின் வாடிக்கைக்காரர்கள் மேலே குறிப்பிட்ட இரண்டு வகையான மார்க்கெட்டுக்களிலும் தொடர்பு உடையவர்கள். (வாடிக்கைக்காரர்கள் இரண்டு மார்க்கெட்டுக்களிலும் தங்களது பொறுப்புக்களையும் சொத்துக்களையும் எவ்வாறு மாற்றி அமைக்க விரும்புகின்றனரோ, அவ்வாறு மாற்றி அமைக்க வாய்ப்புகள் உண்டு.) மேலும் இரண்டு வகையான மார்க்கெட்டுக்களுக்கும் பாங்குகட்கும் தொடர்பு உண்டு—பாங்குகள் குறுகிய கால மார்க்கெட்டிலேயன்றி நெடுங்கால மார்க்கெட்டிலும் பேரங்கள் நடத்துகின்றன. (அதாவது பாங்குகள் நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களிலும் பேரங்கள் நடத்துகின்றன.) குறுகிய கால வட்டி வீதத்தைப் பெருமளவு உயர்த்துவது என்று அதிகாரிகள் தீர்மானித்து விட்டனர் என்று வைத்துக்கொள்வோம். அவ்வாருயின் பாங்குகளின் வாடிக்கைக்காரர்களும் பாங்குகளும் எவ்வாறு பாதிக்கப்படுகின்றனர் என்றும், அதனுல் நெடுங்கால வட்டி வீதங்கள் எவ்வாறு அதிகமாகின்றன என்றும் காண்போம்.

அதிகாரிகள் குறுங்கால வட்டி வீதத்தை உயர்த்தியதும் (இது பாங்கு வீத உயர்வையொட்டி ஏற்படும்) பாங்குகள் யாவும் தங்களுடைய வட்டி வீதங்களை உயர்த்துகின்றன என்று வைத்துக் கொள்வோம்—அதாவது தாங்கள் கொடுக்கும் கடன்கள் அதிகப் பற்றுகள் ஆகியவற்றிற்கு விதிக்கும் வட்டி வீதங்களையும் டைம் டெபாசிட்டுகளுக்குத் தாங்கள் கொடுக்கும் வட்டி வீதத்தையும் பாங்குகள் உயர்த்துகின்றன. தங்களுடைய ரொக்கத் தன்மை சொத்துக்களை (நடைமுறை இருப்பாக வைத்திருக்கும் பணம்போக தனியார்களும் நிறுவனங்களும் இந்தச் சொத்துக்களையும் வைத்திருக்கின்றன) டைம் டெபாசிட்டுக்கள்,[1] நெடுங்காலப் பத்திரங்கள் ஆகியவற்றிற்கிடையே தனியார்களும் நிறுவனங்களும் பகிர்வு செய்திருப்பார்கள். அவர்களுக்குச் சில பொறுப்புக்களும் (liabilites) உண்டு. அவை குறுகிய காலப் பொறுப்புக்கள் நெடுங்காலப் பொறுப்புக்கள் என்று இருதிறத்தன. பாங்குகளிலிருந்து அவர்கள் கடனுகப் பெற்றிருக்கும் தொகைகள் அவர்

[1] பெரிய நிறுவனங்கள் கருவூல உண்டியல்களை வைத்திருப்பது அண்மையில் (1956) மிகவும் சாதாரண நிலை ஆகிவிட்டது. இவற்றினின்றும் கிட்டும் வருவாய் குறுகியகால வட்டி வீதத்தைக் குறிப்பதாகும். 'நெடுங்கால வட்டி வீதங்களை இது பாதிக்கும் விதம், டைம் டெபாசிட்டுக்கள் நெடுங்கால வட்டி வீதங்களை பாதிப்பதைப் போன்றதே ஆகும். டைம்டெபாசிட்டுக்கள நெடுங்கால வட்டி வீதங்களை எவ்வாறு பாதிக்கின்றன என்பது பற்றிய விளக்கத்தை இந்தப் பகுதியிலேயே காணலாம்.

களுடைய குறுகிய காலப் பொறுப்புக்களாகும். டிபென்ஜர்கள், (Debentures) மற்றும் அடமானங்கள் (mortgages) ஆகியவை அவர்களின் நெடுங்காலப் பொறுப்புக்களாகும். தனிப்பட்ட நபர் ஒருவர் அல்லது நிறுவனம் ஒன்று நாம் மேலே குறிப்பிட்டுள்ள எல்லாவகைச் சொத்துக்களையும் மற்றும் பொறுப்புக்களையும், தன்னிடம் வைத்திருப்பார் என்று கருத முடியாது. உதாரணமாகப் பாங்கு ஒன்றிற்கு அதிகப் பற்றுக் கொடுக்கவேண்டிய ஒரு நிறுவனம், அதே காலத்தில் ஒரு டைம் டெபாசிட்டை உடையதாக இருக்கும் என்பது பொருத்தமில்லாத ஒன்றுகும். இருப்பினும், ஓரளவுக்கு ஒருவகையான சொத்து அல்லது பொறுப்பை மற்றொரு வகையான சொத்தாகவோ அல்லது பொறுப்பாகவோ ஒவ்வொரு வியாபார அலுவலகமும் ஓரளவுக்கு மாற்ற முடியும். வட்டி வீதங்களில் ஏற்படும் மாற்றங்களைத் தங்கட்கு இலாபகரமானதாக ஆக்கிக்கொள்ளவேண்டும் என்ற நோக்கத்துடனேயே தங்கள் சொத்துக்கள் பொறுப்புக்கள் ஆகியவற்றின் பகிர்வை வியாபார அலுவலகங்கள் மாற்றி அமைக்கின்றன.

பாங்குகள் குறுகிய காலக்கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதையே விரும்புகின்றன. எனினும் தனது குறுகிய காலப் பணத்தேவையைப் பூர்த்தி செய்ய எண்ணும் ஒரு வியாபார அலுவலகம் பாங்கிடம் போய்த்தான் கடன் வாங்கவேண்டும் என்ற கட்டாய நிலை ஏதுமில்லை. தன்னிடமுள்ள நெடுங்காலப் பத்திரங்களை விற்றும் அந்த வியாபார அலுவலகம் தனக்குத் தேவையான பணத்தைப் பெறலாம். அல்லது 'டிபன்ஜர்'களை வெளியிட்டுத் தனக்குத் தேவையான பணத்தைத் தானே அந்த அலுவலகம் ஏற்பாடு செய்துகொள்ளலாம். எனவே வட்டி வீதம் உயரும்பொழுது, பங்கு மார்க்கெட்டில் விலை வாசிகள் பெரிதும் பாதிக்கப்படாமலிருந்தால் பாங்கின் கடன்களுக்கான வட்டி வீதம் அதிகமாக இருப்பதால், பாங்கிடமிருந்து கடன் வாங்குவதைத் தவிர்க்க எண்ணும் நிறுவனங்கள் தம்மிடமுள்ள நெடுங்காலப் பத்திரங்களைப் பெருமளவில் விற்கமுயலும். பத்திரங்களின் விலைகளில் தான் மாற்றங்களைச்செய்யாவிடில் என்ன நேரிடும் என்று பங்கு மார்க்கெட் நன்கு அறியுமாதலால், உடனடியாகப் பத்திரங்களின் விலைகளை அது குறைக்கின்றது. நெடுங்காலப் பத்திரங்களின் விலை வீழ்ச்சி அவற்றினின்றும் கிடைக்கும் வருவாயை அதிகரிக்கும். இவ்வாறு நெடுங்கால வட்டி வீதம் அதிகமாகிறது.

பாங்குகளின் நடவடிக்கைகளால் நெடுங்கால வட்டி வீதங்களின் வீழ்ச்சி மேலும் வலுப்பெறலாம். குறுங்கால வட்டி வீதங்கள் அதிகரிக்கும்போது குறுங்கால ரொக்கத் தன்மைச் சொத்

துக்களே பாங்கர்கட்குக் கவர்ச்சியாகத் தோன்றுகின்றன. மையப் பாங்கு குறுகிய கால வட்டி வீதங்களை உயர்த்தியதற்குக் காரணம் என்னவாக இருக்கலாம் என்று பாங்குகள் எண்ணத் தொடங்கு கின்றன. நெடுங்கால வட்டி வீதங்கள் கூடுமேயன்றிக் குறை யாது. அதாவது பத்திரங்களின் விலைகள் குறையுமேயன்றிக் கூடாது என்று பாங்குகள் கருதுகின்றன. மூலதன இழப்பைத் தவிர்க்கவேண்டுமானால், பத்திரங்களை வாங்கக்கூடாது என்றும், அவற்றின் விலைகள் குறையும் முன்பு அவற்றை விற்றுவிட வேண்டும் என்றும், பாங்குகள் எண்ணுகின்றன. குறுகிய கால வட்டி வீதம் உயரும்போது தங்களது நிலைமையை இவ்வாறு மிக்க நீர்மைத் தன்மை உடையதாக மாற்றிக்கொள்ளப் பாங்கர்கள் விரும்புவர். அதாவது குறுகியகாலச் சொத்துக்களை விரும்பி நெடுங்காலச் சொத்துக்களை விற்றுவிட அவர் விரும்புவர். பெரு மளவில் பத்திரங்கள் வியாபாரிகள் விற்க முயன்றபோது பங்கு மார்க்கெட்டுகள் எவ்வாறு பாதிக்கப்பட்டனவோ, அதேபோலப் பாங்குகளின் நடவடிக்கைகளாலும், பங்கு மார்க்கெட்டுகள் பாதிக்கப்படும். பழைய விலைக்குத் தங்களிடமுள்ள பத்திரங்களை விற்றுவிட வேண்டும் என்ற ஆவலில் பெருமளவு பத்திரங்களைப் பாங்குகள் விற்க முனையும்போது, இம் மாதிரியான நெருக்கடி நிலையை முன் கூட்டியே எதிர்பாத்துப் பங்கு மார்க்கெட் விலை களைக் குறைத்துவிடும். அதாவது நெடுங்கால வட்டி வீதங்கள் உயர்ந்துவிடும்.

இனி, குறுகியகால வட்டி வீதங்கள் குறைக்கப்படுகின்றன என்று வைத்துக்கொள்வோம். பங்கு மார்க்கெட்டில் பத்திரங் களின் விலைகள் உயராமல் இருக்கும் பட்சத்தில், தங்களிடமுள்ள பத்திரங்களை வியாபாரிகள் விற்க முன் வரமாட்டார்கள். தங்களுக் குத் தேவைப்படும் தற்காலிக நிதி உதவிகளைப் பாங்குகளிட மிருந்தே வியாபாரிகள் பெற விரும்புவர். நெடுங்காலப் பத்திரங் களை விற்பதைவிடத் தங்களிடம் வைத்திருப்பதே இலாபகரமானது என்று பாங்குகளும் எண்ணும். இவ்வாறு வியாபாரிகளும் முதலீடு செய்வோரும் நெடுங்காலப் பத்திரங்களை விற்க முயலாமல் தங்க ளிடமே வைத்துக்கொள்வதாலும், பாங்குகளும் ஏனைய நிதி நிறுவனங்களும் குறுகிய காலச் சொத்துக்களைவிட நெடுங்காலச் சொத்துக்களையே பெரிதும் விரும்புவதாலும், பங்கு மார்க்கட்டில் பத்திரங்களின் விலைகள் உயரும்; அதாவது நெடுங்கால வட்டி வீதங்கள் (நெடுங்காலப் பத்திரங்களின் வருவாயும்) குறைந்து விடும்.

எனவே, தங்கள் நடவடிக்கைகளைக் குறுகிய கால வட்டி வீதங்களைப் மாற்றுவதோடு சுருக்கிக்கொண்டாலும், மார்க்கெட்

சக்திகள் (market forces) நெடுங் கால வட்டிவீதங்களிலும் மாற்றங்களை உண்டுபண்ணிவிடும். அதாவது குறுகிய கால வீதங்கள் எந்தத் திசையைநோக்கி மாறுகின்றனவோ, அதே திசையில் நெடுங்கால வீதங்களும் மாறிவிடும். மார்க்கெட்டின் ஒரு பகுதியினின்றும் மற்றொரு பகுதிக்கு மூலதனத்திற்கான தேவையும் அளிப்பும் சென்றடைவதைப் பொறுத்தே மார்க்கெட் சக்திகள் அமைகின்றன. இதனால் நெடுங்கால வட்டிவீதம் எந்த அளவுக்கு மாற்றம் அடையும் என்பது பெரும்பாலும் எதிர்காலம்பற்றி மார்க்கெட்டில் நிலவும் கருத்துக்களைப் பொறுத்ததாகும். எதிர்காலத்தில் நெடுங்கால வட்டிவீதங்கள் எவ்வாறு அமைந்திருக்கும் என்பது பற்றிய பொதுமக்களின் கருத்துக்கள் மிகவும் சக்திவாய்ந்தவைகளாகும். குறுகிய கால வட்டி வீதங்கள் குறைக்கப்படுவதால் மட்டும் பொதுமக்களின் கருத்துக்களை மாற்றிவிடமுடியாது. குறுங் கால வட்டி வீதங்கள் குறைக்கப்பட்டாலும் பொதுமக்களின் கருத்துக்கள் மாருமல் இருக்கும் பட்சத்தில் நெடுங்கால வட்டி வீதங்களில் எந்தவிதமான மாற்றங்களும் நேரா. பொதுமக்களின் கருத்துக்கள் மாருமல் இருக்கும்போது, நெடுங்கால மார்க்கெட்டில் பெரும் அளவில் தங்கள் பேரங்களை அதிகாரிகள் நிகழ்த்தினலும் நெடுங்கால வட்டி வீதத்தை அவர்களால் மாற்றி அமைக்க முடியாது.

தனியார்களின் முதலீட்டை ஊக்குவிப்பதும், தடை செய்வதும் பொருளாதாரக் கொள்கையின் நோக்கங்களாகும். நாட்டின் பொருளாதாரக் கொள்கையைப் பொறுத்த வரையில் மக்களின் அபிப்ராயங்கள் மிகவும் இன்றியமையாதனவாகும்; அவை மிகவும் சக்தி வாய்ந்தவையாகும். தக்களுடைய அபிப்ராயங்களின் சக்தியை நன்கு புலப்படுத்த நாம் ஒரு கணித எடுத்துக்காட்டின் துணையை நாடுவோம். உதாரணத்தில் சிக்கலில்லாத எண்களே பயன்படுத்தப் பட்டுள்ளன. நெடுங்கால வட்டிவீதம் இன்னும் சுமார் ஓராண்டுக் கால அளவில் 5% ஆக இருக்கும் என்று பொது மக்கள் கருதுகின்றனர் என்று வைத்துக்கொள்வோம். இவ்வாருன சூழ்நிலையில் குறுகிய கால வட்டிவீதங்கள் எவ்வளவு குறைக்கப்பட்டாலும் நெடுங்கால வட்டி வீதம் 5%ஐ விடக் குறையாது. உதாரணமாக, மீட்க முடியாத (irredeemable) பத்திரங்களாகிய கான்சல் கடன் பத்திரங்களின் (consols) வட்டி வீதம் $2\frac{1}{2}\%$ என்று வைத்துக்கொள்வோம். ஓராண்டுக்கால அளவில் கான்சல்களின் வட்டிவீதம் 5% ஆக இருக்கும் என்று பொதுமக்கள் கருதுகின்றனர் என்று வைத்துக்கொள்வோம். அவ்வாருயின் ஓராண்டுக் கழித்துக் கான்சல்களின் விலை 50 பவுன்களாக இருக்க வேண்டும். தற்பொழுது 50 பவுன்களுக்கு அதிகம்

கொடுத்து ஒருவர் கான்சல்களை விலைக்கு வாங்கினாரேயானால் அடுத்த ஆண்டு அல்லது இரண்டாம் ஆண்டு கட்டாயம் அவருக்கு மூலதன நஷ்டம் ஏற்படும். ஆகவே தற்சமயம் கான் சல்களில் முதலீடு செய்யாமல் பணத்தை ரொக்கமாகவே வைத் திருப்பது சாலச் சிறந்ததாகும். பணத்தை ரொக்கமாக வைத் திருப்பது ஆதாயகரமானது அன்று என்பது உண்மைதான். எனினும் இப்பொழுதே கான்சல்களை விலைக்கு வாங்குவதால் கிடைக்கக்கூடிய வட்டித் தொகையைவிட எதிர் காலத்தில் நேர இருக்கும் மூலதன இழப்பு மிகுதியாக இருக்கும். எனவே கான்சல் களின் விலை 62 பவுனாகக் குறைந்திருந்த போதிலும், பணத்தை ரொக்கமாக வைத்திருப்பதும் அல்லது குறுகிய காலப் பண மார்க் கெட்டில் மிகக் குறைந்த வட்டிக்குக் கடன் கொடுப்பதும்தான் சிறந்த வழி என்று தோன்றுகின்றது. இது எவ்வாறு என்று காண்போம்; 620 பவுன் பணம் உடைய ஒருவர் (முதலாம் ஆண்டிலேயே) கான்சல்களின் விலை 62 பவுன்களாக இருக்கும் போது அவற்றை விலைக்கு வாங்கினால், ஆண்டொன்றுக்கு அவருக்கு 25 பவுன் நிலையான வருமானம் கிட்டும். அவர் மூன்றும் ஆண்டு வரை பொறுத்திருப்பாரேயானால், அதே தொகைக்குக் கான்சல்களை விலைக்கு வாங்கும் பட்சத்தில், அவருக்கு ஆண்டொன்றுக்கு 31 பவுன் வருமானம் கிடைக்கும். இதை வேறு ஒரு வழியிலும் கூறமுடியும். மூன்றும் ஆண்டு 500 பவுன் பணத்தைக் கொண்டு கான்சல்கள் வாங்கினால் ஆண்டொன் றுக்கு 25 பவுன் வருவாய் கிட்டும். மேலும் 120 பவுன் மூலதன மும் மிஞ்சுகிறது. இரண்டு ஆண்டுகட்கு முன்பே 620 பவுனுக்குக் கான்சல்கள் வாங்கி இருந்தால் அந்த இரண்டு ஆண்டுகட்கும் கான்சல்களிலிருந்து எவ்வளவு மொத்த வட்டி கிடைக்குமோ அதைவிட இந்த 120 பவுன் அதிகமானதேயாகும். கான்சலின் விலை 50 பவுனுக்கு வந்து விடும் என்று மார்க்கெட்டில் யாவரும் கருதும் பட்சத்தில், முதலாம் ஆண்டு யாவரும் 62 பவுன் கொடுத்துக் கான்சல்கள் வாங்கமாட்டார்கள்; தங்களிடமுள்ள கான்சல்களை எல்லோரும் விற்கவே முனைவர். இவ்வாறு கான்சல் கட்கான தேவைகளைவிட விற்பனைக்கு வரும் கான்சல்கள் மிகுதி யாக இருப்பதனால் கான்சல்களின் விலை குறையும். நம் எடுகோள் களின்படி (assumptions) கான்சல்களின் விலை பவுன் அல்லது 52 பவுனாகக் குறைந்துவிடும். கான்சல்களின் துல்லியமான விலை, குறுகிய கால வட்டி வீதத்தைப் பொறுத்து அமையும். இவ்வாறு, மக்களின் கருத்துக்கள் நெடுங்கால வட்டி வீதங்களை வெகுவாகப் பாதிக்கின்றன. எனவே குறுங்கால வட்டி வீதங்களில் மாற்றங்கள் செய்வது மட்டும் போதாது; எதிர்காலம் பற்றிய மக்களின் கருத்துக்களை இந்த வட்டி வீத மாற்றங்கள் மாற்றக்கூடிய ஆற்றல்

பெற்றிருக்க வேண்டும். அவ்வாறு இல்லாவிடில் குறுங் கால வீதங்களில் ஒரு பெரிய மாற்றத்தை அதிகாரிகள் செய்த போதிலும் நெடுங்கால வீதங்களில் மிகச் சிறிய மாற்றமே நேரும்.

எதிர்கால நெடுங்கால வட்டி வீதங்கள் பற்றிய மார்க்கெட்டில் நிலவும் கருத்துக்கள் எவ்வளவு முக்கியமானவை என்பதை இலண்டன் மார்க்கெட்டில் 1930 ஆம் ஆண்டுக்கும் 1949 ஆம் ஆண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கொண்டு தெளிவாகப் புரிந்துகொள்ளமுடியும். அதிகாரிகள் பண மலிவுக் கொள்கையைக் (cheap money policy) கடைப்பிடிக்க விரும்பினால் நெடுங்கால வட்டி வீதங்கள் குறையப்போகின்றன என்ற எண்ணத்தை மார்க்கெட்டில் உருவாக்க வேண்டுவது அவசியமாகும். 1932 ஆம் ஆண்டு குறுங்கால வட்டி வீதங்களை அதிகாரிகள் பெருமளவு குறைத்தனர். ஆனால் குறுங்கால வட்டி வீதங்கள் குறைந்த அளவு, நெடுங்கால வட்டி வீதங்கள் குறைய வில்லை; போர்க்காலத்தில் தான் வாங்கிய கடனை அரசாங்கம் மாற்ற முனைந்த பொழுதுதான் நெடுங்கால வட்டி வீதங்கள் பெருமளவு குறையலாயின. நெடுங்கால வட்டி வீதங்களைக் குறைப்பதற்கு அதிகாரிகள் தகுந்த முன்னேற்பாடுகள் செய்ய வேண்டி இருந்தது. மக்கள் மனத்தில் பதியும் வகையில் விளம்பரங்கள் செய்வதில் அதிகாரிகள் ஈடுபட்டனர். தற்பொழுது நிலவி வரும் $4\frac{1}{2}\%$, $5\%$ வட்டி வீதங்கள் 1920-29 ஆகிய ஆண்டுகளில் நிலவிய சூழ்நிலைக்குப் பொருத்தமானவையாக இருந்திருக்கலாம். ஆனால் தற்சமயம் நிலைமை முற்றும் மாறிவிட்டபடியால் $4\frac{1}{2}\%$, $5\%$ வட்டி வீதங்கள் பொருந்தாதவை என்று மக்கள் மனத்தைத் தொடுமாறு அதிகாரிகள் விளம்பரம் செய்தனர். இதன் விளைவாக நீண்டகால வட்டி வீதங்கள் மிகவும் குறைந்தன. பின் படைக்கலன்களை அரசாங்கம் திரட்ட ஆரம்பித்த காலத்தில் குறுகிய கால வட்டி வீதங்களில் பெருமளவு மாற்றங்கள் ஏதுமின்றியே நெடுங்கால வட்டி வீதங்கள் உயரலாயின. 1937 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் நெடுங்காலப் பத்திரங்களின் விலைகளில் பெரும் வீழ்ச்சி நேர்ந்ததால் நெடுங்கால வட்டி வீதங்கள் 3 சதவீதத்திற்கும் மேலாக உயர்ந்தன. படைப் பெருக்கத்திற்கு அரசாங்கம் பெருமளவில் கடன் எழுப்பப் போகின்றது என்று பொதுமக்கள் கருதியதால் இவ்வாறு நெடுங் கால வட்டி வீதங்கள் உடனடியாக உயர்ந்தன. இம் மாதிரியான சூழ்நிலையில் பங்கு மார்க்கெட்டும், முதலீடு செய்வோரும் தேவையில்லாத அளவுக்குப் பீதியுற்றவர்போல நடந்துகொண்டனர். 'தி டைம்ஸ்' பத்திரிகையின் இலண்டன் ஆசிரியர், அவ் வமயம் மார்க்கெட் நிலவரங்களைப் பிரதிபலிக்கும் வகையில் தம்முடைய

பத்திரிகையில் ஒரு கட்டுரை வரைந்தார். நெடுங்கால வட்டி வீதம் 3½ சதவீதமாக உயர்ந்தபின் மார்க்கெட்டில் நிலவிய பரபரப்பான சூழ்நிலை மாறி வருவதாக அவர் எழுதினர். அவர் அவ்வாறு எழுதியது மார்க்கெட் வட்டி வீதங்கள் அந்த அளவுக்கு (3½%) உயர்ந்தே ஆக வேண்டும் என்ற மக்களின் கருத்தைச் சுட்டிக் காட்டும் வகையில் அமைந்திருந்தது. 3%லிருந்து 3½% ஆக வட்டி வீதம் உயருவதற்குச் சாதகமாகப் பண மார்க்கெட்டிலும் பொருளாதாரச் சூழ் நிலையிலும், புரட்சிகரமான மாற்றம் ஏதும் நேராதிருப்பினும் வட்டி வீதம் 3லிருந்து 3½ சத வீதத்தை ஒட்டி உயர்ந்தே ஆகவேண்டும் என்றதொரு நிலை உருவாகியது.

1946—1947 ஆகிய ஆண்டுகளில் டால்டன் கடைப்பிடித்த கொள்கை தோல்வியுற்றது. மக்களுடைய கருத்துக்களின் சக்தியை உணர்த்தக்கூடிய வகையில் அமைந்துள்ள மற்றும் ஓர் எடுத்துக் காட்டாகத் தோல்வியை நாம் கருதலாம். தங்களிடமுள்ள பெருவாரியான அரசாங்கப் பத்திரங்களை மார்க்கெட்டில் விற்பனை செய்ய மக்கள் எப்பொழுதும் தயாராக இருப்பதால், நெடுங்கால வட்டி வீத உயர்வை அவர்களால் கட்டுப்படுத்த முடிகின்றது. டால்டன் கடைப்பிடித்த கொள்கையின் தோல்வி இந்த உண்மையை நன்கு தெளிவுபடுத்துகிறது. 1930 ஆம் ஆண்டு முதல் 1932ஆம் ஆண்டு முடிய உள்ள காலவரம்பில் பண மலிவுக் கொள்கையை அதிகாரிகள் வெற்றிகரமாகக் கடைப்பிடித்தனர். இதை ஒட்டி 1939—1945 முழுவதும் அவர்களால் 3% வட்டி வீதத்தை நிறுவ முடிந்தது. பின் 1946—1947 ஆகிய ஆண்டுகளில், (அத்தியாயம் 9-ல் விளக்கப்பட்டுள்ள முறை ஒன்றினை முழுதும் பயன்படுத்தியும் நிதி அமைச்சர் பெரும் பங்கு பெற்ற பிரச்சார ஏற்பாடுகள் மூலமும்) வட்டி வீதத்தை 2½ சதவீதமாக அதிகாரிகளால் தற்காலீகமாகக் குறைக்க முடிந்தது. ஆனால் இந்த முயற்சி விரைவில் தோல்வியுற்றது. ஏனெனில் அவ் வமயம் நிலவிய பொருளாதாரச் சக்திகளின் அடிப்படையில் 2½% வட்டி வீதம் பொருந்தாத ஒன்று என்று மக்கள் உறுதியாக நம்பினர். முதலீட்டிற்கு அவ் வமயம் மிகுந்த மூல தனத் தேவைகள் இருந்ததோடு செல்வ வளங்களில் பற்றுக்குறையும் நேர்ந்திருந்ததால் 2½% வட்டி வீதம் இயற்கைக்கு மாறுனது என்று மக்கள் கருதினர். இந்த 2½% வட்டி வீதம் நிலைத்திருக்க முடியாது என்று மக்கள் கருதினர். பத்திரங்களின் விலை குறையும் என்றும் மக்கள் எண்ணினர். எனவே அரசாங்கப் பத்திரங்களை விலைக்கு வாங்குவது இலாபகரமானதன்று என்று அவர்கள் முடிவு கட்டினர். அரசாங்கப் பத்திரங்களின் விலைக்கு அதிகாரிகள்

அவ் வமயம் ஆதரவு கொடுத்து வந்தனர். பத்திரங்களின் விலை இயற்கைக்கு மாருக அதிகமாக இருப்பதற்கு அதிகாரிகள் கொடுத்துவந்த ஆதரவே காரணமாகும் என்று மக்கள் கருதினர். அதிகாரிகளின் நடவடிக்கை ஒரு ஏமாற்று வித்தையேயாகும் என்றும், பத்திரங்களின் விலைகள் கட்டாயம் குறையவேண்டும் என்றும் அரசாங்கப் பத்திரங்களை வைத்திருந்தவர்கள் எண்ணத் தலைப்பட்டனர் தங்களிடம் இருந்த பத்திரங்கள் அனைத்தையும் அவர்கள் விற்கமுயன்றனர்: தங்களுடைய நடவடிக்கைகளால் பணப்புழக்கம் மிகுந்து வருவதை அதிகாரிகள் நன்கு உணர்ந்தனர். பத்திரங்களின் விலை சரியாமல் இருப்பதற்குத் தாங்கள் இன்னும் எந்த அளவுக்குப் பத்திரங்களை வாங்க வேண்டியிருக்கும் என்று அறிய வந்ததும் அதிகாரிகள் பீதி அடைந்தனர். எனவே பத்திரங்களின் விலைகளுக்குத் தாங்கள் கொடுத்து வந்த ஆதரவை அதிகாரிகள் நிறுத்தினர். உடனடியாகப் பத்திரங்களின் விலைகள் சரிந்தன. நெடுங்கால வட்டி வீதம் 3%க்கும் மேலாக உயர்ந்தது. பலவகையான அரசாங்கக் கட்டுப்பாடுகள் இருந்தபோதிலும் 3 சதவீதத்திற்கு மேற்பட்ட வட்டி வீதம் முறையானதே என்று மக்கள் எண்ணியதால் நெடுநாட்களுக்கு மார்க்கெட்டில் அதே வட்டி வீதம் நிலவியது

நெடுங்கால வட்டி வீதத்தைப் பொறுத்தவரையில் மக்களின் கருத்தே சக்தி வாய்ந்தது என்று வலியுறுத்தும் வகையில், மற்றும் ஓர் உதாரணம் கூறமுடியும். இதனை இரண்டாவது உலக மகா யுத்தத்தின்போது ஜெர்மானியரின் பிடியில் டென்மார்க் நாடு சிக்கி இருந்தபோது அங்கு நேர்ந்த சில நிகழ்ச்சிகளால் அறியலாம். விஞ்ஞான ஆய்வுக்கூடங்களில் நடத்தப்படும் பரிசோதனைகள் எவ்வாறு உண்மையை எளிதில் உணர்த்தக் கூடியனவாக உள்ளனவோ, அது போல இந்த டென்மார்க் உதாரணமும் மக்கள் கருத்துக்களின் சக்தியைத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது.[1] டென்மார்க்கில் அவ்வமயம் நேர இருந்த முதலீட்டு வீக்கத்தைக் (boom) கடுமையான விலைவாசிக் கட்டுப்பாடும் வேறு காரணங்களும் தடை செய்தன. இருப்பினும் பணப் புழக்கத்தை ஜெர்மானியர் மேலும் மேலும் அதிகரித்த வண்ணமே இருந்தனர். தங்களிடமுள்ள இருப்புநிதிகளைப் பயன்படுத்தித் தனியார்களும் நிறுவனங்களும் பெருமளவில் பத்திரங்களை விலைக்கு வாங்கியதால் வட்டி வீதங்கள் குறைந்தன.

1 இந்தப் பத்தியில் தரப்பட்டுள்ள விளக்கங்கள் கெ. ஜல்ட் பிலிப் (Kjeld Philip) என்பார் 'ரெவ்யூ ஆஃப் எகானமிக் ஸ் டீஸ்' (Review of Economic Studies) என்ற சஞ்சிகையில் Vol. XVI (2) No. 40-ல் எழுதியுள்ள மிக அருமையான ஒரு கட்டுரையின் அடிப்படையில் அமைந்துள்ளன.

உலகயுத்தம் ஆரம்பமாவதற்குப் பல ஆண்டுகட்கு முன்பே டென்மார்க்கில் $4\frac{1}{2}\%$ லிருந்து 5% வரை வட்டி வீதங்கள் நிலவி வந்தன. எனவே இந்த எல்லைகளை வட்டி வீதம் தாண்ட நேரிட்டால் அது இயற்கைக்கு மாறுபட்ட தென்றும் நீண்டகாலம் அந்த வீதம் நிலவமுடியாது என்றும் மக்கள் கருதினர். பொது மக்கள் பெருமளவில் பத்திரங்களை வாங்க முயன்றதால் பத்திரங்களின் விலை உயர்ந்ததும் நெடுங்கால வட்டி வீதம் குறைந்ததும் உண்மை தான். எனினும், நெடுங்கால வட்டி வீதம் 4 சதவீதத்திற்குக் குறையவில்லை. $4\frac{1}{2}\%$ லிருந்து 5%க்கு ஏற்ற முறையில பத்திரங்களின் விலை எதிர்காலத்தில் குறையலாம் என்று மக்கள் கருதியதால், தற்சமயம் பத்திரங்களை வாங்குவதைவிடப் பணத்தை ரொக்கமாக (ஆதாயம் ஏதும் இல்லாவிடினும்) வைத்திருப்பதே உசிதமானது என்று அவர்கள் எண்ணினர். உலகயுத்தம் முடிவுற்றதும் தாங்கள் எதிர்பார்ப்பதுபோலப் பத்திரங்களின் விலைகள் குறையும் என்று மக்கள் உறுதியாக நம்பினர். எல் ஆலமீன் (El Alamein) ஸ்டாலின் கிரேட் (Stalingrad) ஆகிய இடங்களில் நேச நாடுகள் பெற்ற வெற்றியானது பத்திர விலைகளில் ஒரு சரிவை ஏற்படுத்தியது. அந்த வெற்றிகளை ஒட்டி வட்டி வீதங்கள் இயற்கையான தாங்கள் எதிர் பார்த்த அளவுக்கு உயர்ந்துவிடும் என்று மக்கள் கருதினர். எனவே பத்திர விலைகள் குறைந்தன.

## 3. நெடுங்கால வட்டி வீதம், மூலதன நிதிகளின் கிடைக்கக்கூடிய தன்மை (Availability of Capital Funds), நிலை முதற் பொருட்களில் முதலீடு—ஆகியவற்றிற்கு இடையே உள்ள தொடர்பு :

எனவே தாங்கள் நெடுங்கால வட்டி வீதத்தில் மாற்றங்கள் செய்ய விரும்பும்போது பண அதிகாரிகள் பொதுமக்களின் கருத்துக்கட்குக் கட்டுப்படவேண்டி இருக்கின்றது. விளம்பரம், அதிகாரிகட்கு உதவியாக இருக்கும்; ஆனல் விளம்பரம் முதலீடு செய்வோரின் கருத்தைக் கவரும் வகையில் அமையாவிட்டால் நிலைமை மேலும் மோசமாகலாம் (1947ஆம் ஆண்டு நேர்ந்தது போல). வட்டி வீத மாற்றங்களால் நேரக்கூடிய விளைவுகளை ஒட்டியே பணக் கொள்கையின் ஆற்றல் அமைந்திருப்பதால், அது ஒரு சிறிய நூலிழையில் தொங்கிக்கொண்டிருப்பதாவே நாம் கருதவேண்டியிருக்கிறது. இருப்பினும், மேலே குறிப்பிட்டதைப் போல் நிலைமை அவ்வளவு மோசமாக இல்லை என்பதையும் ஓரளவு நம்பிக்கையூட்டக் கூடியதே என்பதையும் நாம் உணர

வேண்டும். அரசாங்கப் பத்திரங்களின் விலை உயர்வை ஒட்டி வேறு எல்லாவிதப் பத்திரங்களின் (பொது வசதிக் கம்பெனிகள், தொழில் நிறுவனங்கள் ஆகியவற்றின் பத்திரங்கள் உட்பட) விலை களும் உயருகின்றன. எனவே முதலீடு செய்வோர் மிக்க விருப்பத் துடன் புதிய பத்திரங்களை விலைக்கு வாங்குகின்றனர். இதன் விளைவாக நிலை முதல் பொருட்களை (Fixed Capital) வாங்க விரும்பும் தொழிலதிபர்கள் உடனடியாகத் தமக்குத் தேவைப்படும் மூலதன நிதிகளை எளிதில் பெறுவது சாத்தியமாகின்றது.

முந்திய பகுதியில் அரசாங்கப் பத்திரங்களின் விலைகளைப்பற்றி யும் அவற்றினின்றும் கிடைக்கக்கூடிய வருவாய்களைப் பற்றியும் கண்டோம். அரசாங்கப் பத்திரங்கள் நீங்கலாக வேறு வகையான பத்திரங்களும் உள்ளன. தொழிலகங்கள் தங்கட்குத் தேவையான கடன்களை எழுப்புவதற்குப் பயன்படுவனவே இந்த வேறு வகை யான பத்திரங்களாகும். அவை வருமாறு: பொது வசதிக் கம்பெனிகள் (Public Utilities) வெளியிடும் பத்திரங்கள், டிபன்ஜர்கள் (debentures), சலுகைப் பங்குகள் (preference shares), மற்றும் பலதரப்பட்ட வர்த்தக நிறுவனங்களும், தொழில் நிறுவனங் களும் வெளியிடும் சாதாரணப் பங்குகள் (ordinary shares). இந்தப் பத்திரங்களைப் பல தரத்தனவாகப் பாகுபாடு செய்ய முடியும். பலதரப்பட்ட பத்திரங்களில் முதலீடு செய்வோர் எவ்வெவற்றை மிகுதியாக விரும்புகின்றனர், எவ்வெவற்றை அவ்வாறு விரும்புவதில்லை என்று காட்டும் வகையில், இவற்றின் விலைகட்கிடையே ஒருவிதத் தொடர்பு அமைந்துள்ளது. முதலீடு செய்வோர் இவ்வாறுன விருப்புவெறுப்புக்களை உடையவர்கள் என்று வைத்துக்கொள்வோமாயின், ஒரு குறிப்பிட்ட இனத்தைச் சேர்ந்த பத்திரங்களின் விலைகள் உயர நேர்ந்தால் (உதாரணமாக அரசாங்கப் பத்திரங்களின் விலைகள் உயரநேர்ந்தால்) வேறு வகைகளைச் சேர்ந்த பத்திரங்களின் விலைகளும் கட்டாயம் அதிக மாகும். உதராணமாக, பண அதிகாரிகள் குறுகியகால வட்டி வீதத்தைக் குறைக்கின்றனர் என்றும் இதன் விளைவாக நெடுங் கால அரசரங்கப் பத்திரங்களின் விலைகள் அதிகமாகின்றன (அதாவது அவற்றின் வருவாய்கள் குறைகின்றன) என்றும் வைத்துக்கொள்வோம். நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களின் விலைகளும் கட்டாயம் அதிகமாகும். பலவகையான சொத்துக் களினிடையே சிலவகைகளை விரும்பி, சிலவகைகளை விரும்பாமல் பொதுமக்கள் தங்கள் பணத்தைப் பங்கீடு செய்யும் பட்சத்தில், ஒரு வகையான பத்திரங்களின் விலைகளில் ஏற்படும் மாற்றம் ஏனைய வகைகளைச் சேர்ந்த பத்திரங்களின் விலைகளையும் பாதிக்கும். இதற்கு விதிவிலக்கு இல்லாமல் இல்லை. உதாரண

மாக, சாதாரணப் பங்குகளைப் பொது மக்கள் மிக விரும்பி வாங்கிக் கொண்டிருக்கும்போது நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களின் விலை குறைய நேர்ந்தாலும், சாதாரணப் பங்குகளின் விலைகள் பாதிக்கப்படாமல் இருக்கலாம். சாதாரணப் பாங்குகளை மக்கள் மிகவும் விரும்பி வாங்கிக் கொண்டிருப்பதால் நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களின் விலை குறையும்போது உண்மையில் சாதாரணப் பங்குகளின் விலைகள் கூடினாலும் கூடலாம். இருப் பினும், அரசாங்கப் பத்திர விலைகள் குறையாமல் இருந்தால், சாதாரணப் பங்குகள் எந்த விலைக்கு விற்றிருக்குமோ, அதைவிட இப்பொழுது அவைகளின் விலை குறைவாகவே இருக்கும். எனவே, அரசாங்கப் பத்திரங்களின் விலை குறையாமல் இருந்தால் முதல் வளர்ச்சிக்குத் தேவைப்படும் பணம் தொழில் அதிபர்கட்கு எவ்வளவு சாதகமான சூழ்நிலையில் கிடைத்திருக்குமோ, அதே போன்ற சாதகமான சூழ்நிலை அரசாங்கப் பத்திர விலைகளின் வீழ்ச்சிக்குப் பின் கட்டாயம் நிலவாது.

புதிய மூலதன வளர்ச்சிக்குத் (capital development) தேவைப் படும் பணம் குறைந்த வட்டி வீதங்களில் கிடைக்கக்கூடிய வாய்ப் புக்கள் இருக்குமேயானால், புதிய முதலீடுகள் மிகச் கவர்ச்சி கரமாகத் தோன்றும். மூலதன விரிவைப்பற்றி ஒரு நிறுவனம் ஆலோசித்துக் கொண்டிருக்கும்போது (புதிய இயந்திரம் வாங்குவது பற்றியதாகவோ, தண்டவாளங்களை இரண்டாக்குவது பற்றியதாகவோ, விமான நிலையத்தில் விமானம் ஓடி இறங்கவும் ஏறவும் மற்றுமொரு கெட்டியான பாதை அமைப்பது பற்றிய தாகவோ, சுரங்கத்தின் உள்ளே செல்வதற்குப் பயன்படும் செங்குத்தான மற்றொரு வழி அமைப்பது பற்றியதாகவோ, இந் திட்டம் இருக்கலாம்) அந்த நிறுவனம் பல துறைகளின் அடிப் படையில் ஒரு முடிவுக்கு வர வேண்டி இருக்கிறது. அத் துறை களில் ஒரு சில, தொழில் நுணுக்கம் பற்றிய வையாகும். ஏனை யவை, பொருளாதாரம் பற்றியவை ஆகும். மூலதன விரிப்புத் திட்டத்தால் உற்பத்தி எவ்வளவு அதிகரிக்கும்; எவ்வளவு சுலபமாக விரிப்புத் திட்டத்தை இணைக்கமுடியும் என்பன போன்றவை தொழில் நுணுக்கத்துள் அடங்கும் விரிப்புத் திட்டத் தினால் உற்பத்தி செய்யப்படும் அதிகமான பொருள்களை எந்த விலையில் விற்க முடியும், புதிய சாதனங்களை நிறுவுவதற்காகத் தேவைப்படும் பணத்தை எந்த வட்டி வீதத்தில் கடன் வாங்க முடியும் என்பன போன்றவை பொருளாதாரம் பற்றியவையாகும். தொழில் நுணுக்கம் பற்றிய விஷயங்கள் ஏற்கெனவே தீர்மானிக்கப் பட்டுவிட்டன என்றும், புதிய இயந்திரத்தைப் பயன்படுத்துவதால் நிறுவனத்திற்குக் கிடைக்கக்கூடிய வருவாய்களும் தீர்மானிக்கப்

பட்டுவிட்டன என்று நாம் கொண்டால், மூலதன விரிப்புத் திட்டம் கைக்கொள்ளப்படுவது அன்றிக் கைவிடப்படுவது. அந்தத் திட்டத்தை நிறைவேற்றத் தேவைப்படும் பணம் எந்த வட்டி வீதத்தில் கிடைக்கும் என்பதைப் பொறுத்ததாகும் வட்டி வீதம் மிகக் குறைவாக இருந்தால் விரிப்புத் திட்டம் இலாபகரமாகத் தோன்றும்; எனவே அந்த நிறுவனம் பெரும்பாலும் திட்டத்தை நிறைவேற்றும். ஆனால் வட்டி வீதம் மிக அதிகமாக இருந்தால், எந்த வகையான விவரிப்புத் திட்டமும் கவர்ச்சிகரமாகத் தோன்ருது.

இரண்டு எடுத்துக்காட்டுகளால் மேற்குறித்த கூற்றை விளக்கமாக அறிய முயலுவோம். ஓர் அச்சகம் இன்னும் ஓர் இயந்திர சாதனம் வாங்குவது பற்றி ஆலோசித்துக் கொண்டிருப்பதாகக் கொள்வோம். இயந்திரத் தயாரிப்பளர், அவ் வியந்திரத்தின் விலே 1000 பவுன்கள் என்று கூறுவதாகவும் கொள்வோம். இயந்திரத்தை வாங்கும் இவ் வச்சகம் அந்த இயந்திரம் 20 ஆண்டுகள் உழைக்கும் என்று கருதுவதாகவும் கொள்வோம். பழுது பார்ப்பதற்காக ஒதுக்கும் செலவினங்கள், தேய்மானத்திற்காக ஒதுக்கும் செலவினங்கள், எதிர்காலத்தில் தொழிலாளர் கூலி உயரலாம் என்று கருதி அதற்காக ஒரு தொகையை ஒதுக்கும் செலவினங்கள் ஆகியவற்றிற்கு ஒரு குறிப்பிட்ட தொகையை அந்த நிறுவனம் தள்ளுபடி (allowance) செய்கின்றது என்று வைத்துக்கொள்வோம். இயந்திரம் வாங்குவதற்குப் பயன்படுத்தும் மூலதனத் தொகைக்குக் கொடுக்க வேண்டிய வட்டி வீதத்திற்கு எந்த விதமான தள்ளுபடி நாம் செய்யவில்லே என்பதை மறந்துவிடலாகாது. மேற்சொன்ன தள்ளுபடிகள் செய்தது போக அந்த நிறுவனத்திற்கு 50 பவுன்கள் மொத்த இலாபம் (gross profit) கிடைக்கும் என்று வைத்துக்கொள்வோம். இம்மாதிரி நிலேயில் அந்த நிறுவனம் 20 ஆண்டு காலங்கட்கு 1000 பவுன் பணத்தை 5 சதவீத வட்டிக்கும் குறைவாகக் கடன் வாங்க முடியுமேயானல் அந்த இயந்திரத்தைப் பொறுத்துவதனல் அந்த நிறுவனத்திற்கு ஒரு குறிப்பிட்ட அளவு நிகர இலாபம் (net profit) கட்டாயம் கிடைக்கும். (ஏனெனில் 100 பவுனுக்கு 5 சதவீத வட்டியின் பேரில் ஓராண்டுக்குக் கிடைக்கக் கூடிய வட்டித் தொகை 50 பவுன்கள் ஆகும்.) அவ்வாறன்றி வட்டி வீதம் 5% ஆக இருக்கின்றது என்று வைத்துக்கொள்வோமாயின், அந்த இயந்திரத்தை வாங்குவதால், அந்த நிறுவனத்திற்கு இலாபமும் இல்லே, நஷ்டமும் இல்லே; அவ் வியந்திரம் அந்த நிறுவனத்தின் இறுதி நிலே (marginal) முதலீடாகக் கருதப்படும். வட்டி வீதம் 5 சதவீதத்திற்கும் அதிகமாக இருக்கும் பட்சத்தில்,

அந்த இயந்திரத்தை விலைக்கு வாங்குவதனுல் நிறுவனத்திற்கு நஷ்டமே ஏற்படும். இந்த நிறுவனம் ஏற்கெனவே முதலீடு செய்திருக்கும் மூலதனத்தினின்றும் இலாபம் அல்லது நஷ்டமடைவது குறித்துக் கவலையுற வேண்டியதில்லை. (புதிய முதலீட்டுக்குத் தேவைப்படும் மூலதனத்தை அந்த நிறுவனம் கடனுக வாங்கும் போது கொடுக்க வேண்டியிருக்கும் வட்டி வீதத்தை இது ஒரு வேளை பாதிக்கலாம்.) புதிய இயந்திரத்தை வாங்குவதால் அந்த நிறுவனத்தின் வருவாய் எவ்வளவு அதிகமாகலாம் என்பதையே நாம் இப்பொழுது அறிய விரும்புகிறோம். எனவே நிறுவனத்தின் மொத்த வருவாயைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை.

மற்றும் ஓர் எடுத்துக்காட்டு காண்போம். ஒரு புகைவண்டி நிலையத்தார் தங்களுடைய அமைப்பு முழுவதையும் அல்லது ஒரு பகுதியையோ மின்சார சாதனங்கொண்டு இயக்கத் தீர்மானித்திருக்கின்றனர் என்று கொள்வோம். அவ்வாருயின், 'மின்சார மயமாக்கும் திட்டத்'தினுல் நேரக்கூடிய விளைவுகள் குறித்து அந்த நிலையத்தின் அதிகாரிகள் சில மதிப்பீடுகள் போட வேண்டியதிருக்கும். 'மின்சார மயமாக்கும் திட்டத்'தால் போக்குவரத்தின் மொத்த அளவு எவ்வாறு பாதிக்கப்படும்; தொழிலாளருக்குக் கூலி கொடுப்பதால் நேரக்கூடிய செலவினங்கள் எவ்வளவு அதிகமாகும், மின்சாரச் செலவினங்கள் எவ்வளவு அதிகமாகும் என்பன போன்றவை குறித்து அதிகாரிகள் மதிப்பீடுகள் போடவேண்டி இருக்கும். மின்சார மயமாக்கும் திட்டத்தால் முதலீட்டுச் செலவுகள் 20 மிலியன் பவுன்கள் ஆகும் என்றும், மொத்த இலாபம் ஆண்டு ஒன்றுக்கு 1 மில்லியன் பவுன்கள் அதிகமாகக் கிடைக்கும் (அல்லது மொத்த நஷ்டங்கள் அந்த அளவுக்குக் குறையும்) என்றும் அதிகாரிகள் மதிப்பிடுகின்றனர் என்றும் கொள்வோம். முன்பு இந்த நிறுவனம் இலாபம் அல்லது நஷ்டம் அடைந்திருப்பினும், இந்தத் திட்டத்தை நிறைவேற்றத் தேவைப்படும் மூலதனமான 20 மிலியன் பவுன்களை 5 சதவீதத்திற்கும் குறைந்த வட்டியில் அந்த நிறுவனத்தால் கடனுகப் பெறமுடியுமேயானுல் அத்திட்டத்தை நிறைவேற்றுவது அந்த நிறுவனத்திற்கு இலாபகரமானதாக அமையும். அங்ஙனமின்றி வட்டிவீதம் 5 சதவீதத்திற்கும் அதிகமாக இருக்குமேயானுல் அத்திட்டம் கைவிடப்படும். அந்த நிறுவனத்தின் அதிகாரிகள் போட்டுள்ள மதிப்பீடுகள் சாதகமான வகையில் மாற நேர்ந்தாலோ, திட்டத்தின் மதிப்பிடப்பட்ட செலவினங்கள் எதிர்பாராத விதத்தில் குறைய நேர்ந்தாலோ, வட்டி வீதம் 5%க்கு மேலாக இருந்தபோதிலும் திட்டம் ஒரு வேளை நிறைவேற்றப்படலாம்.

களின்மேல் சிலருக்கு அவநம்பிக்கை ஏற்பட்டிருப்பதற்குரிய முக்கிய காரணம். உடனடியான விளைவுகளை எதிர்ப்பார்க்கும் சந்தர்ப்பங் களில் இந்த உண்மையை நினைவு கூர்தல் இன்றியமையாததாகும் இருப்பினும், தொடர்ந்து நிலவிவரும் தேவைகளின் உயர்விஞலோ, தொடர்ந்து நிலவிவரும் வேலை யில்லாத் திண்டாட்டத்தாலோ நாட் டில் தொடர்ந்து 'சலனநிலை' (disequilibrium) நிலவுமேயானல், ஏனைய முறைகளோடு பண முறைகளையும் கையாள வேண்டுவது அவசியமேயாகும்.[1]

தற்காலத்தில் இருப்பதைவிடக் கடந்த காலத்தில் சில சமயங் களில்பணக் கொள்கை மிக்க ஆற்றல் பெற்றுத் திகழ்ந்தது என்று சிலர் கருதுகின்றனர். உண்மையிலேயே பணக்கொள்கை தற்காலத்தில் இருப்பதைவிடக் கடந்த காலத்தில் மிக்க சக்திவாய்ந்ததாக இருந் திருக்கலாம். எனவே இந்த அத்தியாயத்தில் நாம் இதுகாறும் விவாதித்த கருத்துக்கள் யாவும் அப்படியே எந்தவித மாற்றமும் இன்றி எந்தக் காலத்திற்கும் எந்த இடத்திற்கும் பொருந்தக்கூடிய உண்மை கள் என்று தவருக எண்ணிவிடலாகாது. பணமுறைகளான 'பண மலிவுக்கொள்கை' (cheap money policy), அரும் பணக் கொள்கை (dear money policy) ஆகியவை எக் காலத்தும் எவ்விடத்தும் ஒரேமாதிரி யான விளைவுகளை ஏற்படுத்தின என்று யாராவது நிரூபிக்க முடியுமே யானல், உண்மையில் அது ஆச்சரியப்படத்தக்க ஒன்ருகவே இருக்கும். பொருளாதார வாதங்களின் முடிவுகள் நிறுவனங்களைப்பற்றி நாம் வைத்துக்கொள்ளும் எடுகோள்களைப் (assumption) பொறுத்தவை யாகும். இந்த எடுகோள்கள் எவ் விடத்தும் எக்காலத்தும் மாருதவை என்று கொள்வதற்கில்லை. எனவே, பணமுறைகள் பயனுள்ளவையா அல்லது பயனற்றவையா என்று மதிப்பிட முனையும்போது அந்தந் தத் தலைமுறைகளில் நிலவும் சூழ்நிலையின் அடிப்படையிலேயேதான் அவற்றை மதிப்பிட வேண்டும்; அதேபோல அந்தந்த நாடுகளில் நிலவும் அமைப்புக்களைக் கொண்டுதான் அவற்றை மதிப்பிட வேண்டும். எனினும், 'பணமுறை உருவாக்கும் சூழ்நிலை நாட்டின் பொருளாதாரக் கொள்கைக்கு ஏற்றதாக அமையவேண்டும்' என்னும் கருத்து எக் காலத்திற்கும் எந் நாட்டிற்கும் பொருந்தக் கூடியதாகும். எனவே, 'ஜன நாயக அரசாங்கத்திற்கும் பணிந்து போகக்கூடிய ஒரு நிறுவனமாக மையப்பாங்கு அமைய வேண்டும்' என்னும் கருத்து நியாயமானதாகவே தோன்றுகிறது.

[1] இந்த அத்தியாயத்தில் விவாதிக்கப் பட்டுள்ள விஷயங்களைப்பற்றி அண்மை யில் பிரிட்டனின் அநுபவம் யாது? என்ற விஞவுக்குரிய பதிலை 'ரேட் கிளிப் அறிக்கை, 1959' (Report of the Committee on the Working of the Monetary System)-ல் நான்காம் அத்தியாயத்தில் வாசகர்கள் விளக்கமாகக் காணலாம்.

# 8. வாணிகப் பாங்குகளின் ரொக்க நிலையும் அவற்றின் கடன்தரும் கொள்கையும்

## 1. சொத்துக்களைப் பகிர்வு செய்வதன் பொருளாதார முக்கியத்துவம்

நாட்டின் பொதுவான பொருளாதார நிலையை மாற்றியமைக்கும் வல்லமை தங்கட்குக் கிடையாது என்று பாங்கர்கள் எண்ணுகின்றனர். இந்த எண்ணத்தை அவர்கள் இவ்வாறு வெளியிடுகின்றனர்: 'நாட்டிலுள்ள மொத்தப் பாங்குச் செலாவணியையே பங்குமுறை தீர்மானிக்க முடியும். ஆனால் அவற்றைப் பயன்படுத்தும் வகையைத் தீர்மானிப்பது பொதுமக்களே யாவர்.' மேலே குறிக்கப்பட்டுள்ள பாங்கர்களின் கருத்து முன்னுக்குப் பின் முரணானது என்பதை நாம் ஏற்கெனவே அத்தியாயம் ஒன்றில் கண்டோம். இவ்வாறு நாம் கருதுவதற்குக் காரணங்கள் உள்ளன. ஒரு குறிப்பிட்ட பண இருப்பானது (money balance) பாங்கர்கட்குக் கவர்ச்சியற்றதுதான் என்று நாம் வைத்துக்கொண்டாலும், பண அளிப்பு நிலை (supply of money) யைப் பாங்கர்களால் கட்டுப்படுத்த முடியும் என்பது உண்மையாகும். பண அளிப்பு நிலையைப் பாங்குகளால் கட்டுப்படுத்த முடியுமேயானால் பணத்தைச் செலவிடும் முறையையும் பாங்குகளால் கட்டுப்படுத்த முடியும். இதற்கு முந்திய அத்தியாயங்களில் பாங்கர்கள் பண அளிப்பு நிலையைக் கட்டுப்படுத்துவதன்மூலம் வட்டி வீதங்களை மாற்றி அமைக்கக்கூடிய ஆற்றல் பெற்றுத் திகழ்கின்றனர் என்றும், வட்டி வீதங்களைக் கட்டுப்படுத்துவதன்மூலம் பணத்தைச் செலவு செய்யும் முறையையும் அவர்களால் மாற்றி அமைக்க முடிகின்றது என்றும் கண்டோம். இதே கருத்தை வேறொரு முறையிலும் கூற முடியும்; பாங்குகள் மக்களுடன் சொத்துக்களைப் பரிவர்த்தனை (exchange) செய்துகொள்ளும்போது நாட்டின் பொருளாதாரச் சூழ்

இருப்பார்கள். எனவே வட்டி வீதங்கள் பெருமளவு குறைய நேரிட்டாலும், அவர்கள் புதிய மூலதன வளர்ச்சித்திட்டங்களைக் கைக்கொள்ளமாட்டார்கள். இதுபோலவே பொருளாதார வீக்கம் (boom) நாட்டில் பரவியிருக்கும் பொழுது எதிர்காலத்தைக் குறித்துத் தொழில் அதிபர்கள் மிகுந்த நம்பிக்கையோடு இருப்பார்கள். எனவே முதலீடு செய்வதற்கு அவர்கட்குத் தேவைப்படும் பணத்திற்குத் தொழிலதிபர்கள் கொடுக்க வேண்டியிருக்கும் வட்டி வீதம் சிறிது உயர நேர்ந்தாலும், புதிய முதலீட்டு முயற்சிகளில் அவர்கள் துணிவுடன் ஈடுபடுவர். புதிய முதலீடுகள் தோல்வியுற வாய்ப்பே இல்லை என்று அவ்வமயம் அவர்கள் எண்ணுவர்.

தனியார் துறை முதலீடுகளைப் போலவே பொதுத்துறை முதலீடுகளும் மேலே நாம் கண்ட எதிர்காலம்பற்றிய கருத்தால் எளிதில் பாதிக்கப்படுகின்றன. பொதுத்துறை முதலீடுகள் என்று நாம் இங்குக் குறித்தது, மத்திய அரசாங்கம் ஸ்தல ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் துறைகள், நேரடியாகச் செய்யும் முதலீடுகளையே ஆகும். உதாரணமாக ஒரு நகராட்சி அமைப்பு, பொதுமக்களுக்குப் பயன்படக்கூடிய 'குளிக்கும் அறைகளை'க் கட்டத் தீர்மானித்திருக்கின்றது என்று வைத்துக்கொள்வோம். வட்டி வீதம் மிக அதிகமாக இருந்தால் அவர்கள் எழுப்பும் கடனை நிர்வகிக்க அவர்கட்கு ஆகும் செலவினங்கள் அதிகமாகும். எனினும், வட்டி வீதம் உயர்வால் பொதுத்துறை அதிகாரிகள் அதிகமாகப் பாதிக்கப்படுவதில்லை என்ற உண்மையைக் கடந்த கால அநுபவம் நமக்கு உணர்த்துகின்றது. 'குளிக்கும் அறைகள்' கட்டும் முன்பு அதிகாரிகள் வட்டி வீதத்தைப்பற்றிப் பெரிதும் அக்கறை காட்டுவதில்லை. எதிர்காலத்தில் அந்த நகரம் வளமானதாகத் திகழுமா? எதிர்காலத்தில் அந்த நகர மக்கள் அந்தக் கடனைத் திருப்பித்தரக்கூடிய நிலையில் இருப்பார்களா? என்பவற்றின் அடிப்படையிலேயே 'குளிக்கும் அறைகள்' கட்டுவதைப்பற்றி அவர்கள் ஒரு தீர்மானமான முடிவுக்கு வருவார்கள்.

வட்டி வீதங்களின் வீழ்ச்சியையொட்டி முதற்கருவிப் பொருள்களின் (capital goods) தேவை எந்த அளவுக்குத் தூண்டப்படலாம் என்று நாம் ஆராயுங்கால், மேற்கூறிய எதிர்காலம்பற்றிய தொழிலபர்களின் கருத்தின் ஆற்றலை நாம் கருத்தில் இருத்த வேண்டுவது அவசியமாகும். இம் மாதிரியான கருத்து வெவ்வேறு சந்தர்ப்பங்களில் வெவ்வேறு வகையான ஆற்றலோடு திகழும் என்பதையும் நாம் அறியவேண்டும். உதாரணமாகப் பெரும்பாலான 'பொறிவழித் தொழில்களில்' (manufacturing

industries) தொடர்ந்து 'புத்தாக்கங்கள்' (inventions) நேர்ந்து கொண்டிருப்பதால் அவைகளில் 'வழக்கொழிவுத் தள்ளுபடி' (obsolescence allowance) மிகவும் அதிகமாகவே இருக்கும். இவ்வாறு 'வழக்கொழிவுத் தள்ளுபடி' அதிகமாக இருப்பதால் இந்தத் தொழிற்சாலைகளை வட்டி வீத மாற்றங்கள் பெரும்பாலும் பாதிப்பது இல்லை. வேறு சில தொழிற்சாலைகளைப் பொறுத்த வரையில் இதற்கு முற்றிலும் மாறுபட்ட நிலைகளை நாம் காண முடியும். மண் வேலைகள் (earth works) செய்தல், நிரந்தரச் சாலைகள் அமைத்தல் ஆகியவற்றிற்குப் பொது வசதிக் கம்பெனிகள் (public utilities) பெருமளவில் மூலதனச் செலவுகள் செய்கின்றன. இந்த மண் வேலைகளும் நிரந்தரச் சாலைகளும் நெடுங்காலத்திற்கு நீடித்து நிற்கக்கூடியவையாகும். மேலும் குறுகிய காலத்தில் இவற்றை உடனடியாக அகற்றிவிட்டு வேறு சாதனங்களைப் பொருத்துவதென்பது சாத்தியமில்லை. எனவே இதுபோன்ற தொழில்கட்கான தேய்மானத் தள்ளுபடியும், வழக்கொழிவுத் தள்ளுபடியும் மிகவும் குறைவானவையே யாகும். தள்ளுபடி வீதங்கள் மிகக் குறைவாக இருக்கின்ற காரணத்தால் இம் மாதிரிப் பணிகளில் ஈடுபடும்போது நிறுவனங்களும் பொதுத்துறையினரும் வட்டி வீதத்தை ஒரு முக்கியமான காரணியாகக் கருதுவர். நாம் குடியிருக்கும் வீடுகட்கான வாடகையில் பெரும்பகுதி வீடுகட்டு வதற்குச் செலவிடப்பட்ட முதலுக்கு உரிய வட்டி வீதத்தையே குறிப்பதாகும். எனவே வட்டி வீத மாற்றங்களால் வீடுகட்டும் தொழில் எளிதில் பாதிக்கப்படக் கூடியது என்று நாம் முடிவு கட்டலாம். இதுகாறும் கூறியவற்றால் ஒரு பொதுவான உண்மை புலனாகின்றது. ஒரு முதற்கருவிப் பொருள் நீண்ட ஆயுளை உடையதாக இருந்து, அதனுடைய உற்பத்தித் திறனைப் பொறுத்த வரையில் நிலையின்மை (uncertainty) மிகக் குறைவானது என்று மதிப்பிடப்படும் பட்சத்தில், அந்த முதற்கருவிப் பொருளுக்கான தேவை வட்டி வீதமாற்றங்களால் எளிதில் பாதிக்கப்படக் கூடியதாக அமைந்திருக்கும். நீடித்த ஆயுளையுடைய முதற் கருவிப் பொருளில் (உதாரணமாக வீடுகள் ரெயில்வேக்கள் ஆகியவற்றில் செய்யப்படும் முதலீடுகளில் பெருமளவு கடந்த இருபது ஆண்டுக் காலங்களில் அரசாங்கத்தின் நேரடியான கட்டுப்பாட்டின்கீழ் வந்திருக்கின்றன. எனவே முதலீடுகள் பற்றிய முடிவுகள் பெரும்பாலும் அரசாங்கத்தின் பொதுவான கொள்கையினையே சார்ந்து விளங்குகின்றன; வட்டி வீதங்களில் மாற்றங்களால் முதலீடுகள் உடனடியாகப் பாதிக்கப்படுவதில்லை.

இவ்வாறு முதற் கருவிப் பொருள்கட்கான தேவைகள் வட்டி வீதத்தால் பெரிதும் பாதிக்கப்படாதிருப்பதால் பணக்காரணிகள்

(monetary factor) நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளைத் தீர்மானிப்பதில் மிகக் குறைந்த பங்கே பெற்றிருக்கின்றன என்று எண்ணத் தோன்றுகின்றது. எனினும், பண அதிகாரிகள் (monetary authorities) வட்டி வீதத்தில் மாற்றங்கள் செய்யும் போது மூலதன நிதிகளின் 'கிடைக்கக் கூடிய நிலை'யிலும் (availability) மாற்றங்கள் நேருகின்றன. மூலதன நிதிகளில் கிடைக்கக் கூடிய நிலை'யில் மாற்றம் நேருவது வட்டி வீத மாற்றத் திற்கு உறுதுணையாக அமைகின்றது. வட்டி வீதம் உயரலாம் என்றும், எனவே அரசாங்கப் பத்திரங்களை வைத்திருப்பதைவிடப் பணத்தை வைத்திருப்பதே உசிதமானது என்றும் ஓர் எண்ணம் நிலவுமேயாயின், நாட்டிலுள்ள நிறுவனங்களும் தனிப்பட்ட நபர் களும் தங்கள் தேவைக்கு அதிகமான பண இருப்புத் தொகைகள் (money balance) வைத்திருப்பதையே விரும்புவர். இவர்களின் பணத்தேவையை நிறைவேற்றுவதே 'பண மலிவுக் கொள்கை'யின் (cheap money policy) நோக்கமாகும். எனவே பண மலிவுக் கொள்கையின் விளைவாகப் புழக்கத்திலுள்ள பணம் மேலும்மேலும் அதிகமாகும்போது, அதிகாரிகளால் வட்டி வீதத்தைக் குறைக்க முடிகின்றது. இந்த நிலையில் நிதி நிறுவனங்களும் தொழிலகங் களும் தேவைக்கு மேற்பட்ட இருப்புக்களைத் தம்மிடம் வைத்திருக் கும். அரசாங்கப் பத்திரங்களை விலைக்கு வாங்கும் விருப்பமே இவைகட்கு இராது. இதுபோன்ற சூழ்நிலைகளில் அவர்கட்கு வேறு சில எண்ணங்கள் தோன்றும். பணத்தை ஆதாயமின்றி ரொக்கமாக வைத்திருக்க இவை விரும்ப மாட்டா. வேறு ஏதாவது ஓர் ஆதாயகரமான ஊக வாணிகத்தில் (speculation) பணத்தை முதலீடு செய்யும் ஆவலுடையவையாகவே இவை இருக்கும். தங்களுடைய இருப்புப் பணத்தில் ஒரு பகுதியை யாவது ஊக வாணிகத்தில் பயன்படுத்துவதையே இவை பெரிதும் விரும்பும். குறிப்பாகத் தொழிலகங்கள் இவ்வாறு எண்ணும். தொழிலகங்களின் நீர்மைத் தன்மை (liquidity) மிகுந்திருப்பதே அவை இம்மாதிரி எண்ணுவதற்கான காரணமாகும். புதிய தொழில்களை ஆரம்பிப்பதற்கான பணத்திற்குப் பாங்குகளையே அணுகவேண்டும். தங்களுடைய சொத்துக்களில் பெரும்பகுதி யைப் பாங்குகளிடம் அடைமானம் வைக்கவேண்டும் என்பன போன்ற நிலைகள் ஏதும் தற்சமயம் கிடையா. தங்கட்குத் தேவைப் படக்கூடிய பணத்தைச் சிரமமின்றி எளிதில் இன்ஷூரன்ஸ் கம்பெனிகளிடமிருந்தோ, வேறு நிதி நிறுவனங்களிடமிருந்தோ பெறுவதற்கான வாய்ப்புக்கள் ஏராளமாக உள்ளன. கட்டடத் தொழிலிலும் இதுபோன்ற நிலையே உருவாகியுள்ளது வட்டி வீதங்கள் குறைந்திருக்கின்ற இவ்வாறான சூழ்நிலையில் தங்களிடம் ரொக்க நிதிகள் மிகுந்திருப்பதைக் கட்டடச் சங்கங்கள் (Building

Societies) உணருகின்றன. எனவே தங்களுடைய கடன் கொடுக்கும் தொழிலை விரிவுபடுத்தும் நோக்கத்துடன் அடைமான வட்டி வீதங்களை அவை குறைக்கின்றன. இது தவிர வேறு பல முறைகளையும் அவை கைக்கொள்ளுகின்றன. தாங்கள் தவணைக் கடன்களை ஏற்பாடு செய்யும்போது வாடிக்கைக்காரர்கள் உடனடியாகச் செலுத்த வேண்டியுள்ள 'முதல் தவணைச் செலுத்தினங்களைக்' (down payments) கட்டிடச் சங்கங்கள் குறைக்கலாம். உதாரணமாக 'முதல் தவணைச் செலுத்தினங்களை' 20 சத வீதத்திலிருந்தும் 10 சதவீதமாகவோ, 5 சதவீதமாகவோ அவை குறைக்கலாம். மற்றும் மொத்தத் தவணைக் காலத்தை அவை அதிகரிக்கலாம். உதாரணமாக தவணைக் காலத்தை 15 ஆண்டுகளிலிருந்து 20 ஆண்டுகளாகவோ, 25 ஆண்டுகளாகவோ உயர்த்தலாம். இவ்வாறு கட்டடச் சங்கங்கள் செய்வதால் ஏழை மக்கள்கூட வீடுகளை விலைக்கு வாங்க முன் வரலாம்.[1] எனவே மூலதன நிதிகள் எளிதில் கிடைக்கக்கூடியவைகளாக இருந்தால், பண மார்க்கெட்டில் எளிதாகக் கடன்கள் கிடைக்கக் கூடிய வாய்ப்புக்கள் பெருகுகின்றன. இதனால் குறைந்த வட்டி வீதத்தில் கடன் பெறுவது சாத்தியமாகின்றது. மேலும் இதற்கு முன் பணத்தைக் கடனாகப் பெற முடியாதவர்களும் முன்பு தங்கட்கு உகந்த நிபந்தனைகளின் பேரில் கடன்பெற முடியாதவர்களும் இப்பொழுது தாங்கள் விரும்பியவண்ணமே தங்களுடைய முதல் வளர்ச்சிக்குத் தேவையான பணத்தைக் கடனாகப் பெறமுடிகிறது.

இவ்வாறு நிதிகள் கிடைப்பது வட்டி வீத மாற்றத்திற்கு உறுதுணையாக அமைகின்றது. எனவே பண மலிவுக் கொள்கையை கடைப்பிடிப்பதை ஒட்டி, முதற் கருவிப் பொருள்களுக்கான தேவைகள் அதிகரிக்கின்றன. புதிய இயந்திரங்கட்கான தேவை அதிகமாகின்றது; தொழில் விரிவுத் திட்டங்கள் வகுக்கப்படுகின்றன. இதன் விளைவாகக் கச்சாப் பொருள்களுக்கும் (raw materials) தொழிலாளர்களுக்கும் தேவைகள் அதிகரிக்கின்றன. கச்சாப் பொருள்களுக்கான தேவைகள் அதிகமாகும்போது கச்சாப்பொருள்களைத் தயாரிப்பவர்கள் உற்பத்திக் காரணிகளை (factors of production) மிகுதியாகப் பயன்படுத்துகின்றனர். தேவைகள் உயர ஆரம்பித்த காலத்தில் தங்களிடமுள்ள இருப்புச் சரக்கைக் கொண்டு அதிகரித்துள்ள தேவைகளை இவர்களால்

1 பிரிட்டனில் பண மலிவுக் கொள்கை கடைப்பிடிக்கப்பட்டபோது 1930-39க்கு இடைப்பட்ட காலத்தில் கட்டடச் சங்கங்கள் இதுபோன்ற ஏற்பாடுகளைச் செய்தன. இதன் விளைவாக வீடுகட்டும் தொழில் ஒரு பொருளாதார வீக்கம் உருவாகியது. பிரிட்டனில் நிலவிவந்த மந்தநிலை அகன்றது. 1955-57க்கு இடைபட்ட காலத்தில் பிரிட்டனில் வட்டி வீதங்கள் அதிகரித்ததால் தங்களுடைய கடன்களுக்கான நிபந்தனைகளைக் கட்டடச் சங்கங்கள் மிகவும் இறுக்கமானவைகளாக மாற்றின.

சமாளிக்க முடியும்; ஆனால் விரைவில் உற்பத்தியைப் பெருக்கு வதற்கான ஆயத்தங்களை இவர்கள் செய்தே ஆகவேண்டும். வேலையில் அமர்த்தப்படாத காரணிகள் பெருமளவு நாட்டில் இருக்குமேயானால், வேறு தொழில்களில் வேலையில் அமர்ந்துள்ள காரணிகளை ஈர்க்கவேண்டிய அவசியம் ஏதுமில்லை. உதாரண மாக, முதற் கருவிப் பொருள்கள் தயாரிக்கும் தொழில்கள், தங்களுடைய வளர்ச்சிக்காக நுகரும் பொருள்கள் (consumption goods) தயாரிக்கும் தொழிலில் ஏற்கெனவே வேலையில் அமர்ந் திருக்கும் காரணிகளை ஈர்க்கவேண்டிய அவசியம் இல்லை. எனவே காரணிகளுக்குக் கொடுக்கவேண்டிய ஊதியம் (remuneration) பெருமளவு அதிகரிக்காது. இவ்வாறில்லாது, எல்லாக் காரணி களும் (தொழிலாளர், சாதனங்கள் உட்பட) ஏறக்குறைய முழுவதும் வேலையில் அமர்ந்திருந்தால், ஏனைய தொழில்களில் ஈடுபட்டுள்ள காரணிகளுக்கு அதிகமான ஊதியம் கொடுத்து அவைகளை ஈர்ப்பதன்மூலமே முதற் கருவிப் பொருள்களைத் தயாரிக்கும் தொழில்கள் தங்களுடைய செல்வ வளங்களைப் பெருக்கமுடியும். மேற்குறித்த இரு நிலைகளிலும் எந் நிலை நாட்டில் நிலவிய போதும், முதற் கருவிப் பொருள்கள் தயாரிக்கும் தொழில் களின் வளர்ச்சியால் நாட்டில் மக்களின் பண வருமானம் (money income) அதிகமாகும். பழைய ஊதிய வீதத்தில் அதிகமான பேருக்கு வேலை கிடைப்பதாலோ, ஏற்கெனவே வேலையில் அமர்ந்திருப்போர் இப்போது முன்பைவிட அதிகமான ஊதியம் பெறுவதாலோ பண வருமானம் அதிகமாகின்றது. (சாதாரணமாக இந்த இரண்டு வகையான விளைவுகளும் விரைவில் நேரும் இருப்பினும், பணவீக்கத்தின் இறுதி நிலைகளிலேயே ஏற்கெனவே வேலையில் இருப்போர் அதிகமான ஊதியம் பெறுவது நேரும்). இந்த அதிகமான வருமானத்தின் ஒரு பகுதி சேமிக்கப்படும்; எஞ்சிய பகுதி நுகர்வுப் பொருள்களை அதிகமாக வாங்குவதற்குப் பயன்படுத்தப்படும். நுகர்வுப் பொருள்களின் தேவை எந்த அளவுக்கு அதிகரிக்கின்றதோ, அந்த அளவுக்கு நுகர்வுப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்க வேண்டியிருக்கிறது. எனவே காரணிகளுக்கான (factors) தேவை அதிகமாகும். பொருள்களின் விலை உயர்ந்துகொண்டே போவதாலும், சாதகமான சூழ்நிலை நிலவுவதாலும், நுகர்வுப் பொருள்களைத் தயாரிக்கும் தொழில்களில் பயன்படுத்தப்படும் நடைமுறை முதலும் (working capital), நிலை முதற் பொருள்களும் (fixed capital) அதிகரிக்கப்படும். இவ்வாறு சாதகமான சூழ்நிலை நிலவும்போது பொதுப்பணித் துறையினரும், பல பொதுப்பணி வேலைகளில் ஆர்வத்துடன் ஈடுபடுவர். தனியார் மூலதன விரிவுத் திட்டங்களால் ஏற்கெனவே புதிய சாலைகள், மின்சாரக் கடல்

தந்திகள், வடிகால் திட்டங்கள் ஆகியவற்றிற்கான தேவைகள் மிகுந்திருக்கும். எனவே பொதுப்பணித் துறையினர் பெருமளவில் பொதுப்பணி வேலைகளில் ஈடுபட வாய்ப்புக்கள் ஏற்பட்டுள்ளன. இவ்வாருகப் பொருளாதார நடவடிக்கைகள் மிகவும் ஆக்கம் பெற்று மேலும் மேலும் உயர்நிலையை நோக்கிச் சென்று கொண்டிருக்கும்.

பொருளாதார நடவடிக்கைகள் பெருமளவில் நடந்து கொண்டிருக்கும் வேளையில் வட்டி வீதங்கள் குறைவாக இருப்பதாலும், நிதிகள் கிடைக்கக் கூடியவையாக (availability) இருப்பதாலும், நுகர்வோருக்குத் தவணைக் கடன் வசதிகள் எளிதாகவும் குறைந்த செலவிலும் கிடைப்பதற்கான வாய்ப்புக்கள் பெருகுகின்றன. நீடித்த நுகர்வுப் பொருள்களின் (consumer's durabie goods) அதிக உற்பத்திக்குத் தவணைக் கடன் வசதிகள் உறுதுணையாக அமைகின்றன. எனவே, இவ்வாறு தவணைக் கடன் வசதிகள் எளிதாகக் குறைந்த செலவில் கிடைப்பதை ஒட்டி, நீடித்த நுகர்வுப் பொருள்களின் உற்பத்தியை மேலும் மேலும் பெருக்க வாய்ப்புக்கள் உருவாகின்றன. இவற்றின் விளைவாக, பொருள்கள் (goods), சேவைகள் (services) ஆகியவற்றிற்கான மொத்த தேவைகள் மேலும் மேலும் உயருவதற்குச் சாதகமான சூழ்நிலை ஏற்படுகின்றது.

வட்டி வீதங்கள் அதிகமாகி, நிதிகளின் கிடைக்கக்கூடிய தன்மையில் மாற்றங்கள் நேர்ந்தால் என்ன விளைவுகள் நேரும் என்று இனி ஆராய்வோம். வட்டி வீதம் உயர்வதை ஒட்டி மூலதன நிதிகள் எளிதில் கிடைக்காத நிலை உருவாகும். எனவே மூலதன விரிவுத் திட்டங்கள் ஆதாயகரமாகத் தோன்ரு. இம் மாதிரித் திட்டங்களுக்கான பணத்தை எளிதில் கடனுகப் பெறுவதற்கான வாய்ப்புக்களும் இல்லை. ஒரு நிறுவனத்தின் தொழில் நுட்பப் பணியாளர் (technician) சிறந்த திட்டம் ஒன்றைத் தயாரித்து அளித்தாலும், இயக்குநர் (director) அதைச் செயல்படுத்த முடியாத நிலையில் இருக்கிருர். எனவே முதற் கருவிப் பொருள்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகளில் வேலை வாய்ப்புக்கள் மிகவும் குறையும். இதைத் தொடர்ந்து நாட்டில் மொத்தப் பண வருமானமும் குறையும். மாறிவரும் சூழ்நிலைகட்கு ஏற்ப நுகர்வோரும் தம்முடைய நடவடிக்கைகளை மாற்றி அமைத்துக்கொள்கின்றனர். தங்களது சேமிப்பைக் குறைக்கின்றனர் (தனி நபர்களைப் பொறுத்தவரையில் பெரும்பாலும் ஏற்கெனவே சேகரிக்கப்பட்டுள்ள சேமிப்புக்களைப் பயன்படுத்தும் நிலையே மிகுதியாக காணப்படும்); நுகர்வுக்குச் செலவிடும் செலவினங்களையும் குறைக்கின்றனர். கார்கள், குளிரவைக்கும் பெட்டி (refrigerator)

கள் போன்ற பொருள்களைத் தவணைக் கடன் முறையில் வாங்குவது அவ்வளவு சுலபமானதன்று; மேலும் அதிக வட்டி வீதங்கள் கொடுக்கவேண்டியிருக்கும். நுகர்வுப் பொருள்களைத் தயாரிக்கும் தொழில்களில் உற்பத்தி குறையும்; வேலை வாய்ப்புக்களும் குறையும். இத் தொழில்களில் செய்யப்படும் முதலீடு மிகச் சுருங்கிவிடும். நுகர்வுப் பொருள்களைத் தயாரிக்கும் தொழில்களை விட முதற் கருவிப் பொருள்களைத் தயாரிக்கும் தொழில்கள் மிகவும் பாதிக்கப்படும். இவ்வாறு பொருளாதார நடவடிக்கைகள் மேலும் மேலும் சுருங்கிக்கொண்டே போகும்.

எனவே நாட்டிலுள்ள பணத்தின் அளிப்பை ஒழுங்கு செய்வதன் மூலம் குறுங்கால வட்டி வீதங்கள், நெடுங்கால வட்டி வீதங்கள் மூலதன நிதிகளின் 'கிடைக்கக் கூடிய நிலை', மூலதனப் பொருள்களின் வளர்ச்சி ஆகியவைகட்கு இடையேயுள்ள தொடர்புகளைப் பண அதிகாரிகள் தங்கட்குச் சாதகமானவையாக அமைத்துக்கொள்ள முடியும். இதையொட்டி நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளை அதிகாரிகள் மாற்றி அமைக்க முடியும். பணக் கொள்கையின் ஆற்றலைச் சிலர் மிகைப்படுத்திக் கூறுகின்றனர். ஆனால், வேறு சில பொருளாதார நிபுணர்கள் நாட்டின் பொருளாதார நடவடிக்கைகளைத் தூண்டவும் கட்டுப்படுத்தவும் பணக்கொள்கையைவிடச் சிறந்த வேறு சில நேரடியான முறைகளைக் கையாளுவதே சாலச் சிறந்தது என்று வலியுறுத்திக் கூறுகின்றனர். எனினும், 'பணக்கொள்கை எந்த அளவு ஆற்றலைப் பெற்றிருப்பினும் கவலை இல்லை; அதை நாட்டின் அரசாங்கக் கொள்கையின் நோக்கங்கட்கு அரணாக அமைப்பதே சாலச் சிறந்தது' என்னும் கருத்தினைப் பணக் கொள்கையைப் பற்றி அவநம்பிக்கை உடையோரும் ஒப்புக்கொள்வர் என்று நாம் கருதலாம்; அரசாங்கம் கடைப்பிடிக்கும் பொருளாதாரக் கட்டுப்பாட்டுக் கொள்கை சில சமயம் 'பண வீக்க வடிப்பு' (disinflation) என்ற பெயர் பெறுகின்றது. பொருளாதாரக் கட்டுப்பாட்டுக் கொள்கைக்குப் பணக் கட்டுப்பாட்டுக் கொள்கையின் உதவி அவசியம் தேவை. பண முறைகளின் தீர்மானமான பங்கு மிகச் சிறிய அளவே இருக்கலாம். எனினும் அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கைக்கு (பொருளாதாரக் கொள்கையின் நோக்கம் 'கட்டுப்பாடு' செய்ய வேண்டும் என்பதாக இருக்கலாம் அல்லது 'தூண்டுகோலாகத்' திகழவேண்டும் என்பதாக இருக்கலாம்) ஏற்றதொரு வாய்ப்பான சூழ்நிலையைப் பணக்கொள்கையால் ஏற்படுத்த முடியும் என்ற கருத்தை யாரும் மறுக்க முடியாது. பணமுறைகளைக் கையாண்டு உடனடியான மாற்றங்களை ஏற்படுத்த எண்ணினால், அது முடியாத காரியமாகும். இதுவே, பண முறைகளின்மேல் சிலருக்கு அவநம்பிக்கை ஏற்பட்டிருப்பதற்

குரிய முக்கிய காரணம். உடனடியான விளைவுகளை எதிர்பார்க்கும் சந்தர்ப்பங்களில் இந்த உண்மையை நினைவு கூர்தல் இன்றியமையாததாகும் இருப்பினும், தொடர்ந்து நிலவிவரும் தேவைகளின் உயர்வினாலோ, தொடர்ந்து நிலவிவரும் வேலையில்லாத் திண்டாட்டத்தாலோ நாட்டில் தொடர்ந்து 'சலனநிலை' (disequilibrium) நிலவுமேயானால், ஏனைய முறைகளோடு பண முறைகளையும் கையாள வேண்டுவது அவசியமேயாகும்.[1]

தற்காலத்தில் இருப்பதைவிடக் கடந்த காலத்தில் சில சமயங்களில் பணக் கொள்கை மிக்க ஆற்றல் பெற்றுத் திகழ்ந்தது என்று சிலர் கருதுகின்றனர். உண்மையிலேயே பணக்கொள்கை தற்காலத்தில் இருப்பதைவிடக் கடந்த காலத்தில் மிக்க சக்தி வாய்ந்ததாக இருந்திருக்கலாம். எனவே இந்த அத்தியாயத்தில் நாம் இதுகாறும் விவாதித்த கருத்துக்கள் யாவும் அப்படியே எந்தவித மாற்றமும் இன்றி எந்தக் காலத்திற்கும் எந்த இடத்திற்கும் பொருந்தக்கூடிய உண்மைகள் என்று தவறாக எண்ணிவிடலாகாது. பணமுறைகளான 'பண மலிவுக் கொள்கை' (cheap money policy), அரும் பணக் கொள்கை (dear money policy) ஆகியவை எக்காலத்தும் எவ்விடத்தும் ஒரே மாதிரியான விளைவுகளை ஏற்படுத்தின என்று யாராவது நிரூபிக்க முடியுமேயானால், உண்மையில் அது ஆச்சரியப்படத்தக்க ஒன்றாகவே இருக்கும். பொருளாதார வாதங்களின் முடிவுகள் நிறுவனங்களைப்பற்றி நாம் வைத்துக்கொள்ளும் எடுகோள்களைப் (assumption) பொறுத்தவையாகும். இந்த எடுகோள்கள் எவ்விடத்தும் எக்காலத்தும் மாறாதவை என்று கொள்வதற்கில்லை. எனவே, பணமுறைகள் பயனுள்ளவையா அல்லது பயனற்றவையா என்று மதிப்பிட முனையும்போது அந்தந்தத் தலைமுறைகளில் நிலவும் சூழ்நிலையின் அடைப்படையிலேதான் அவற்றை மதிப்பிட வேண்டும்; அதேபோல அந்தந்த நாடுகளில் நிலவும் அமைப்புக்களைக் கொண்டுதான் அவற்றை மதிப்பிட வேண்டும். எனினும், 'பணமுறை உருவாக்கும் சூழ்நிலை நாட்டின் பொருளாதாரக் கொள்கைக்கு ஏற்றதாக அமையவேண்டும்' என்னும் கருத்து எக்காலத்திற்கும் எந் நாட்டிற்கும் பொருந்தக் கூடியதாகும். எனவே, 'ஜனநாயக அரசாங்கத்திற்கும் பணிந்து போகக்கூடிய ஒரு நிறுவனமாக மையப்பாங்கு அமைய வேண்டும்' என்னும் கருத்து நியாயமானதாகவே தோன்றுகிறது.

1 இந்த அத்தியாயத்தில் விவாதிக்கப் பட்டுள்ள விஷயங்களைப்பற்றி அண்மையில் பிரிட்டனின் அநுபவம் யாது? என்ற வினாவுக்குரிய பதிலை 'ரேட்கிளிப் அறிக்கை, 1959, (Report of the Committee on the Working of the Monetary System)-ல் நான்காம் அத்தியாயத்தில் வாசகர்கள் விளக்கமாகக் காணலாம்.

# 8. வாணிகப் பாங்குகளின் நீர்மைத் தன்மையும் அவற்றின் கடன்தரும் கொள்கையும்

## 1. சொத்துக்களைப் பகிர்வு செய்வதன் பொருளாதார முக்கியத்துவம்

நாட்டின் பொதுவான பொருளாதார நிலையை மாற்றியமைக்கும் வல்லமை தங்கட்குக் கிடையாது என்று பாங்கர்கள் எண்ணுகின்றனர். இந்த எண்ணத்தை அவர்கள் இவ்வாறு வெளியிடுகின்றன: 'நாட்டிலுள்ள மொத்தப் பாங்குச் செலாவணியையே பாங்குமுறை தீர்மானிக்க முடியும். ஆனால் அவற்றைப் பயன்படுத்தும் வகையைத் தீர்மானிப்பது பொது மக்களே யாவர்.' மேலே குறிக்கப்பட்டுள்ள பாங்கர்களின் கருத்து முன்னுக்குப்பின் முரணானது என்பதை நாம் ஏற்கெனவே அத்தியாயம் ஒன்றில் கண்டோம். இவ்வாறு நாம் கருதுவதற்குக் காரணங்கள் உள்ளன. ஒரு குறிப்பிட்ட பண இருப்பானது (money balance) பாங்கர்கட்குக் கவர்ச்சியற்றதுதான் என்று நாம் வைத்துக்கொண்டாலும், பண அளிப்பு நிலை (supply of money)யைப் பாங்கர்களால் கட்டுப்படுத்த முடியும் என்பது உண்மையாகும். பண அளிப்பு நிலையைப் பாங்குகளால் கட்டுப்படுத்த முடியுமேயானால் பணத்தைச் செலவிடும் முறையையும் பாங்குகளால் கட்டுப்படுத்த முடியும். இதற்கு முந்திய அத்தியாயங்களில் பாங்கர்கள் பண அளிப்பு நிலையைக் கட்டுப்படுத்துவதன்மூலம் வட்டி வீதங்களை மாற்றி அமைக்கக்கூடிய ஆற்றல் பெற்றுத் திகழ்கின்றனர் என்றும் வட்டி வீதங்களைக் கட்டுப்படுத்துவதன் மூலம் பணத்தைச் செலவு செய்யும் முறையையும் அவர்களால் மாற்றி அமைக்க முடிகின்றது என்றும் கண்டோம். இதே கருத்தை வேறொரு முறையிலும் கூற முடியும்; பாங்குகள் மக்களுடன் சொத்துக்களைப் பரிவர்த்தனை

(exchange) செய்துகொள்ளும்போது நாட்டின் பொருளாதாரச் சூழ்நிலையில் பாங்குகளால் மாற்றங்களை ஏற்படுத்த முடியும். அதாவது டெபாசிட்டுக்களை மக்களுக்குக் கொடுத்துவிட்டு, அவற்றிற்கு ஈடாக ரொக்கம், உண்டியல்கள், அரசாங்கப் பத்திரங்கள், வியாபாரியின் வாக்குறுதிகள் ஆகிய சொத்துக்களைப் பெறுவதன் மூலம் பாங்குகள் நாட்டின் பொருளாதாரச் சூழ்நிலையில் மாற்றங்களை ஏற்படுத்த முடியும். மக்கள் தங்கள் செல்வங்களைப் (wealth) பலவிதமான சொத்துக்களில் பகிர்ந்து வைத்திருக்கின்றனர்; ஒரு குறிப்பிட்ட காலத்தில் தங்கள் செல்வங்களை ஒரு குறிப்பிட்ட வகையில் பலவிதமான சொத்துக்களிலும் பகிர்ந்து வைத்திருப்பதைவிட வேறு ஒரு குறிப்பிட்ட வகையில் பகிர்ந்து வைத்திருப்பதையே மக்கள் பெரிதும் விரும்புகின்றனர்.[1] மக்கள் தங்கள் கையில் அதிகமான பாங்குச் செலாவணிகளையும் (bank money) குறைந்த அளவுக்கு வேறு வகையான சொத்துக்களையும் வைத்திருக்கும் வகையில் பாங்குகளால் சொத்துக்களின் பகிர்வை (distribution) மாற்றி அமைக்க முடியுமேயானால், அந்த மாற்றம் பொருளாதார அமைப்பு முழுவதையும் பாதிக்கக்கூடிய விளைவுகளைக் கட்டாயம் ஏற்படுத்தும்.[2] பொருளாதார அமைப்பு முழுவதையும் பாதிக்கக்கூடிய மேற்படி விளைவுகள் எத் தன்மைத்தானவை என்பதை ஏற்கெனவே ஆறும் அத்தியாயத்தில் ஆராய்ந்துள்ளோம். அந்த அத்தியாயத்தில் இங்கிலாந்திலுள்ள வாணிகப் பாங்குகள் கடைப்பிடிக்கும் முறைகளின் அடிப்படையிலேயே நாம் விளக்கங்கள் தந்தோம். ஆனால் இங்கிலாந்தில் தற்சமயம் கையாளப்பட்டு வரும் முறைகட்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன என்று எண்ணிவிடலாகாது. மேலே குறிப்பிடப்பட்ட விளைவுகள் எந்த அளவுக்கு வெவ்வேறு பாங்கு முறைகட்கும் ஏற்ப மாறி அமைகின்றன என்று அறிய விரும்பினால், வெவ்வேறு நாடுகளிலும் கைக்கொள்ளப்படும் வாணிகப் பாங்கு முறைகளைப்பற்றி அறிய வேண்டுவது அவசியமேயாகும். சொத்துக்களின் பகிர்வு முறையைப் பாங்குகள் மாற்றி அமைப்பதால் சில விளைவுகள் நேருகின்றன. டெபாசிட்டுகட்கு ஈடாக எந்த வகையான சொத்துக்களைப் பாங்குகள் பெற விரும்புகின்றன என்பதைப் பொறுத்தே இந்த விளைவுகள் அமைகின்றன. வெவ்வேறு வகையான சொத்துக்களை வெவ்வேறு

1 மக்கள் சில குறிப்பிட்ட வகையான சொத்துக்களை மிகவும் விரும்புகின்றனர்; ஏனையவற்றை அவ்வாறு விரும்புவதில்லை. பல சொத்துக்களுக்கும் பல வாறான வட்டிவீதங்கள் அமைந்திருப்பது மக்களின் இவ்வாறான விருப்பு வெறுப்பையே புலப்படுத்துகின்றது.

2 மேலே கொடுக்கப்பட்டுள்ள விளக்கம் வால்ராஸ் (Walras) அவர்கள் கையாண்ட 'பொது சமநிலை பகுத்தாய்வு முறையை (General Equilibrium Analysis) அடிப்படையாகக் கொண்டது.

விதமாக வாணிகப் பாங்குகள் விரும்புவதற்கான காரணம் யாது ? பாங்குகளின் இம்மாதிரியான விருப்பு வெறுப்புக்களை எந்த அளவுக்கு மாற்றி அமைக்கமுடியும் ? இந்த விருப்பு வெறுப்புக் களால் மையப் பாங்கின் ஆற்றல் எவ்வாறு பாதிக்கப்படுகின்றது ? வாணிகப் பாங்குகளின் எதிர்காலம்பற்றி இவற்றின் மூலம் அறியக் கிடப்பவை யாவை ? என்பன போன்ற வினாக்கட்கு இனி விடை காண முயலுவோம்.

## 2. பாங்கர்களுடைய சொத்துக்களின் நீர்மைத் தன்மை

பங்குதாரர்கட்கு (shareholders) இலாபம் ஈட்டித்தருவதே வாணிபப் பாங்கின் தலையாய நோக்கமாகும். பொதுமக்கள் தங்க ளிடம் கொடுக்கும் சொத்துக்களுக்கு ஈடாகவே பாங்குகள் அவர் களுடைய பெயரில் டெபாசிட்டுக்களை வரவு வைக்கின்றன. இவ்வாறு கிடைக்கும் வருவாயே பாங்குகள் ஈட்டுகின்ற இலாபங் களாகும். பாங்குகளிடமுள்ள சொத்துக்களின்மூலம் கிடைக்கும் வருவாய் அதிகமானால் பாங்குகள் ஈட்டும் இலாபங்களும் அதிக மாகும். ஆனால் பாங்குகளிடமுள்ள சொத்துக்களின் மதிப்பு குறைந் தால், பாங்குகட்கு நஷ்டம் ஏற்படும். இவ்வாறு பாங்குகள் நஷ்ட முறும் போதுகூட, பொதுமக்கள் பாங்குகளின்மேல் வைத்திருக் கும் நம்பிக்கை சிறிதளவேனும் மாறாதிருக்கும் பட்சத்தில், பாங்கு களின்மேல் நடவடிக்கைகள் பாதிக்கப்படமாட்டா. அதாவது தங்களுடைய சொத்துக்கள் பாங்குகளிடமே இருக்கட்டும் என்று பொதுமக்கள் கருதினால், பாங்குகள் எவ்விதத்திலும் (சொத்துக் களின் மதிப்பு குறைந்ததை ஒட்டி) பாதிக்கப்படமாட்டா. தங்க ளுடைய சொத்துக்கள் பாங்குகளிடமே இருக்கட்டும் என்று பொது மக்கள் எண்ணினால்தான், பாங்கர்களால் இலாபம் ஈட்ட முடியும். பொது மக்கள் பாங்குகளை முற்றிலும் நம்ப வேண்டும்; அவற்றின் நடவடிக்கைகளில் பொது மக்கட்கு எந்தவிதமான ஐயமும் தோன்றக்கூடாது. பாங்குகளிடமுள்ள தங்களுடைய டெபாசிட்டுக்கள் ரொக்கத்திற்குச் சமமானவை என்றும் தங்கள் பாங்கிடம் இருப்பாக வைத்திருக்கும் டெபாசிட்டுக்களுக்கு ஈடாக எந்த நேரமும் பாங்குகளிடமிருந்து ரொக்கம் பெற முடியும் என்றும் வாடிக்கைக்காரர்கள் நம்புகின்றனர். எனவே, வாடிக்கைக்காரர் களின் டெபாசிட்டுக்களை எப்பொழுதும் ரொக்கமாக மாற்றப் பாங்குகள் தயாராக இருக்கவேண்டும்; இதுவே பாங்குகள் இலாபம் ஈட்ட முடிவதற்கு ஆதாரமான காரணமாகும்.

தங்களுடைய வாடிக்கைக்காரர்கள் விரும்பிய மாத்திரத்தில் டெபாசிட்டுக்களை ரொக்கமாக மாற்றக்கூடிய ஆற்றலைப் பாங்குகள் பெற்றிருக்கவேண்டும், தங்களுடைய இந்த ஆற்றலைக் குறிக்கப் பாங்குகள் பயன்படுத்தும் சொல் நீர்மைத் தன்மை' (liquidity) என்பதாகும். பாங்கர் பொதுமக்களின் நம்பிக்கைக்குப் பாத்திர மாகத் திகழவேண்டும்; அவ்வாறு திகழ்ந்தால்தான் பாங்கரால் இலாபங்களை ஈட்டிமுடியும். போதுமான அளவுக்கு நீர்மைத் தன்மை சொத்துக்களைப் பாங்கர் வைத்திருந்தால்தான் அவர் பொதுமக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக முடியும். 'ரொக்கம்' (cash) ஒன்றே 'குறையற்ற நீர்மைத் தன்மை சொத்தாகும்' (Perfectly Liquid Asset). பாங்கரிடம் பெருமளவு ரொக்கம் இருக்க நேர்ந்தால் எவ்வித சிரமமும் இன்றி அவர் டெபாசிட்டுக் களை ரொக்கமாக மாற்ற முடியும்; ஆனால் ரொக்கம் ஓர் ஆதாய மற்ற சொத்தாகும். ரொக்கம் வருவாயைத்தராத சொத்தாகும். எனவே பாங்கரிடமுள்ள சொத்துக்கள் யாவும் 'குறையற்ற நீர்மைத் தன்மை சொத்துக்களாக' இருந்தால், பாங்கரால் இலாபம் ஏதும் ஈட்டமுடியாது. பாங்கரிடமுள்ள சொத்துக்களில் ஒரு சில சொத்துக்களாவது 'குறையுள்ள நீர்மைத் தன்மைச் சொத்துக் களாக' (Imperfectly Liquid Assets) இருந்தால்தான் அவரால் இலாபம் ஈட்ட முடியும்.[1] 'குறையுள்ள நீர்மைத் தன்மைச் சொத்துக்களின்' தன்மைகள் யாவை? என்ற வினா எழுகின்றது. இந்த வினாவுக்குத் திட்டவட்டமான பதிலைப் பாங்கர்களால் இது காறும் தர முடியவில்லை. டெபாசிட்டுக்களை ரொக்கமாக மாற்ற விரும்பும் வாடிக்கைக்காரர்களின் ஆவலைப் பாங்கு நிறைவேற்ற வேண்டும். இதற்கு ஏதுவாகத் தன்னிடமுள்ள சொத்துக்களை உடனடியாக ரொக்கமாக மாற்றக்கூடிய ஆற்றலைப் பாங்கு பெற்றிருக்கவேண்டும். எவ்வளவு டெபாசிட்டுக்களை வாடிக்கைக் காரர்கள் ரொக்கமாக மாற்ற விரும்புகின்றனரோ, அவை முழு வதையும் ரொக்கமாக மாற்றக்கூடிய ஆற்றலைப் பாங்கு பெற்றிருக்க வேண்டும். இதற்கு ஏதுவாகத் தன்னிடமுள்ள சொத்துக்களை நஷ்டம் ஏதும் இன்றி ரொக்கமாக மாற்றக்கூடிய ஆற்றலைப் பாங்கு பெற்றிருக்கவேண்டும். நீர்மைத் தன்மையில் பாங்கர் ஒருவர் கருத்தைச் செலுத்தம்போது அவர் மேற்குறித்துள்ள இரண்டு வகைத்தன்மைகளும் உடைய சொத்துக்களையே வாங்க விரும்புகின்றார். (இரண்டு விதத் தன்மைகள்—சொத்துக்களை

1 பொதுமக்களுக்கிடையே ஏற்படும் கடன்களைத் தீர்ப்பதற்கு ஏதுவாக உடனடியாக மாற்றக்கூடிய சொத்துஒன்றினை அரசாங்க நிறுவனம் ஒன்று உற்பத்தி செய்யலாம். பொதுமக்கள் எவ்வளவு பணத்தை இந்த முறையில் பயன்படுத்துகின்றனரோ, அதற்கு ஏற்ற வகையில் அவர்களிடமிருந்து தீர்வை வசூலிப்பதன் மூலம் இந்த ஏற்பாடுகட்கு ஆகக்கூடிய செலவுகளை ஈடுகட்டலாம். தனியார் துறை நிறுவனம் இம்மாதிரியான ஏற்பாடுகளைச் செய்ய முடியாது என்றே தோன்றுகிறது.

உடனே ரொக்கமாக மாற்றக்கூடிய பாங்கரின் ஆற்றல்; சொத்துக்களை நஷ்டம் ஏதுமின்றி ரொக்கமாக மாற்றக்கூடிய பாங்கரின் ஆற்றல்.)

பாங்குகள் பயன்படுத்தும் 'நீர்மைத் தன்மை' என்ற சொற்றொடருக்குத் திட்டவட்டமான பொருள் ஏதும் இல்லை என்று நாம் ஏற்கெனவே கூறினோம். நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களைப் பொறுத்தவரையில் இது மிகவும் உண்மையாகும். உதாரணமாக, பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங்கள் நீர்மைத் தன்மை உடையவையா அன்றி நீர்மைத் தன்மையற்றவையா என்பதை எளிதில் தீர்மானித்துவிட முடியாது. அரசாங்கப் பத்திரங்களைப் பங்கு மார்க்கெட்டில் எளிதில் விற்று ரொக்கமாக மாற்றிவிட முடியும். அதாவது அரசாங்கப் பத்திரங்களை நிறுவனங்களும், தனிப்பட்ட நபர்களும், பாங்குகளும் தடையின்றி விலைக்கு வாங்கிக்கொள்வர். ஆனால் பத்திரங்களை அவற்றின் உரிய விலைக்கு உடனடியாக விற்க முடியாது. மார்க்கெட்டில் நிலவும் விலையிலேதான் பத்திரங்களை விற்க முடியும். இந்த விலை பத்திரங்களின் உண்மையான மதிப்பைவிட அதிமானதாக இருக்கலாம்; அன்றிக் குறைவாக இருக்கலாம். பத்திரங்களை உடனடியாக விற்கவேண்டிய அவசியம் ஏதும் நேராமல், கெடுவு காலம் வரை அவற்றை வைத்திருந்தால் பத்திரங்களின் உண்மையான மதிப்பைக் கட்டாயம் பெறமுடியும். அரசாங்கப் பத்திரங்களை எளிதில் பிறரிடம் மாற்றி ரொக்கம் பெறமுடியும்; கெடுவு காலம் வரை காத்திருந்தால் எந்த விதமான நஷ்டமும் ஏற்படாது. எனவே, பத்திரங்களைப் பாங்கர்கள் விரும்புகின்றனர், ஆனால் கெடுவு காலத்திற்கு முன்பே அரசாங்கப் பத்திரங்களைப் பாங்கு விற்க நேரிடும் போது பாங்கருக்கு மூலதன இழப்பு ஏற்படலாம். இந்த வகையில் அரசாங்கப் பத்திரங்களை பாங்கருக்குக் கவர்ச்சியற்றவையாகத் தோன்றுகின்றன. அரசாங்கப் பத்திரங்களை உடனடியாகப் பிறரிடம் மாற்றி (அதாவது பிறரிடம் விற்று) ரொக்கம் பெறமுடியும். இதை யாரும் மறுக்கமுடியாது. கெடுவு காலத்தில் பத்திரத்தின் உண்மையான மதிப்புத் தொகையைப் பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து உறுதியாகப் பெறமுடியும். இதையும் யாரும் மறுக்கமுடியாது. இருப்பினும் அரசாங்கப் பத்திரங்களைக் குறையற்ற நீர்மைத்தன்மை' (perfect liquidity) உடைய் சொத்துக்கள் என்று பாங்கு கருதுவதில்லை.

சொத்தினம் ஒன்று 'மாற்றக்கூடிய தன்மை' (shift ability) பெற்றிருந்த போதிலும் அதை ரொக்கமாக மாற்ற முனையும்போது பாங்குக்கு மூலதன இழப்பு நேரலாம் என்று நாம் மேலே

கண்டோம். இக்கருத்தை விளக்கும் முகத்தான் மற்றும் ஓர் உதாரணம் காண்போம். பாங்கு ஒன்றின் சொத்தினங்களில் இம்பீரியல் கெமிக்கல் தொழிற்சாலையின் (Imperial Chemical Industries) சாதாரணப் பங்குகளும் (ordinary shares) இடம் பெறுகின்றனஎன்று வைத்துக் கொள்வோம். இந் நிறுவனம் சிறந்ததொரு நிறுவனம் என்பதை யாவரும் அறிவர். எனவே இதன் பாங்குகளைப் பங்கு மார்க்கெட்டில் தடையின்றி மக்களுக்கு நிறுவனங்களும் விலைக்கு வாங்குவர். நினைத்த மாத்திரத்தில் இக் கம்பெனியின் பங்குகளைப் பங்கு மார்க்கெட்டில் பாங்கானது விற்று ரொக்கமாக மாற்ற முடியும். இவற்றைப் பாங்கு விற்பனை செய்ய முயலும்போது தான் வாங்கிய விலைக்கே விற்பனை செய்ய முடியாது. இவற்றை விற்பதால் ஒரு வேளை பாங்கு நஷ்டமுறலாம். எனவே, மாற்றக்கூடிய தன்மையில் இப் பாங்குகள் சிறந்து விளங்கினுல், இவற்றை நீர்மைத் தன்மையற்ற சொத்துக்கள் என்றே பாங்கு கருதுகின்றது. இதற்கு மாருக, சில சொத்தினங்கள் ஆதாயமுள்ளவையாக இருப்பினும், அவை மாற்றக்கூடிய தன்மை அற்றவையாகத் திகழ்கின்றன. இதற்கு ஓர் எடுத்துக் காட்டுக் காண்போம். கோபிப் பாலைவனத்தை ஆராய விரும்பும் ஒரு யாத்ரீகருக்குப் பாங்கு ஒன்று கடன் கொடுக்கின்றது என்றும், கடனுளி மிகவும் நாணயமானவர் என்பதைப் பாங்கு நன்கறியும் என்றும், கடனுளி கடன் தொகைக்கு ஈடாகத் தன்னுடைய பெயருக்கு ஓர் இன்சூரன்சு பாலிசி எடுத்து அதைப் பாங்கிடமே கொடுத்திருக்கிருர் என்றும் வைத்துக்கொள்வோம். எனவே இந்த யாத்ரீகருக்குக் கடன் கொடுப்பதனுல் பாங்குக்கு எந்த விதமான நஷ்டமும் ஏற்பட வாய்ப்பே இல்லை. இருப்பினும் யாத்ரீகர் தன்னை அணுகிக் கடன் கேட்கும்போது பாங்கு அவருக்கு உடனடியாகத் தடையேதுமின்றி கடனை வழங்கிவிடாது ; பாங்கு சிறிது தயக்கத்துடனேயே கடன் கொடுக்க முன்வரும். இதற்குக் காரணம் இருக்கின்றது. யாத்ரீகர் பாங்கிடமிருந்து கடன் பெற்றுக் கோபிப் பாலைவனத்தில் தம்முடைய ஆராய்ச்சிகளை நடத்திக் கொண்டிருக்கும்போது, பாங்குக்குப் பணம் தேவைப்படுகின்றது என்று வைத்துக் கொள்வோம். அவ்வமயம் பாங்கு இந்தச் சொத்தைப் (யாத்ரீகருக்குப் பாங்கு கொடுத்திருக்கும் கடனை) பிறரிடம் எளிதில் மாற்றி (விற்று) ரொக்கம் பெறமுடியாது. அதாவது இச் சொத்தால் பாங்கருக்கு எந்தவிதமான நஷ்டமும் ஏற்படாது என்பது உண்மையானுலும், தான் நினைத்த மாத்திரத்தில் பாங்கரால் சொத்தை ரொக்கமாக மாற்ற முடியாது. எனவே பாங்கர் இச் சொத்தை நீர்மைத் தன்மையற்ற சொத்தாகவே கருதுவார். வியாபாரிகட்குப் பாங்கு ஏற்பாடு செய்யும் கடன் வசதிகளில் பெரும்பாலானவை இந்த ரகத்தைச் சேர்ந்தவையேயாகும். தன்னிடம் கடன் வாங்கும் வியாபாரி நாணயமானவர் என்றும்,

தன்னிடம் அவர் வாங்கும் கடன் தொகைக்கு அதிகமாகவே அவரிடம் சொத்துக்கள் இருக்கின்றன என்றும் பாங்கு நன்கு அறியும் என்று வைத்துக் கொண்டாலும், தான் நினைத்தமாத்திரத்தில் சொத்தைப் (வியாபாரிக்குப் பாங்கு கொடுத்திருக்கும் கடனை) பாங்கு, பிறரிடம் எளிதில் மாற்றி (விற்று) ரொக்கம் பெறமுடியாது. இது தவிர, வியாபாரிகட்குப் பாங்கு ஏற்பாடு செய்யும் கடன்களில் ஒரு சிலவற்றைப் பொறுத்த வரையில் வேறு வகையான ஆபத்துக்களும் உள்ளன. (உதாரணமாகக் கடன் பெற்ற வியாபாரி பணத்தைத் திருப்பிச் செலுத்தத் தவறுவது.) எனவே வியாபாரிகட்குத் தான் ஏற்பாடு செய்யும் அதிகப் பற்றுக் கடன்களைப் பாங்கு நீர்மைத் தன்மையற்ற சொத்களாகக் கருதுகின்றது.

எளிதில் மாற்றக்கூடிய தன்மை' (shiftability) நஷ்டமின்மை ஆகிய இரண்டு குணாதிசயங்களையும் உடைய சொத்துக்களே ரொக்கத் தன்மை உடைய சொத்துக்களாகும். ஒரு சொத்தினம் இந்த இரு தன்மைகளையும் பெற்றிருக்க முடியும் என்பதைப் புத்திக் கூர்மையுள்ள வாசகர்கள் நாம் மேலே கொடுத்துள்ள பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங்கள் உதாரணத்தினின்றும் அறிந்து கொண்டிருக்கலாம். கெடுவு காலம் வரை பாங்கர் பொருத்திருக்க முடியுமேயாயின் பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங்களினால் பாங்கருக்கு எந்தவிதமான நஷ்டமும் ஏற்படாது. எனவே 'மாற்றக்கூடிய தன்மையும்' மாற்றப்படும்போது 'நஷ்டமின்மை'யும் ஒருங்கே அமையப்பெற்ற சொத்துக்களைப் போதுமான அளவு பாங்கு வைத்திருந்தால், உடனடியாக மாற்றக்கூடிய தன்மையும் மாற்றுமல் தன்னிடம் வைத்திருந்தால் நஷ்டம் ஏற்பட வாய்ப்பு இல்லாதவையுமான சில சொத்துக்களைப் பாங்கர் தம்மிடம் வைத்திருப்பதால் அவருக்கு எவ்வித கேடும் நேராது. இதுபோலவே சிறந்த நீர்மைத் தன்மைச் சொத்துக்களைப் போதுமான அளவுக்குப் பாங்கர் தம்மிடம் வைத்திருந்தால், நஷ்டம் ஏற்பட வாய்ப்பு இல்லாததும் ஆனால் மாற்ற இயலாததும் ஆகிய சில சொத்துக்களைப் பாங்கர் தம்மிடம் வைத்திருப்பதால் அவருக்கு யாதொரு விதமான கேடும் நேராது. சுருங்கக் கூறின், நீர்மைத்தன்மையின் இரு குணாதிசயங்காளாகிய 'மாற்றக் கூடிய தன்மை'யையும் 'நஷ்டமின்மை'யையும் தம் இரு கண்களைப் போலப் பாங்கர் பாவிக்க வேண்டும். இவ்விரு தன்மைகளும் ஒருங்கே அமைந்துள்ள சொத்துக்கள் சிலவற்றைத் தன்னிடம் பாங்கு எப்பொழுதும் வைத்திருக்கவேண்டும். மேலும், 'மாற்றக்கூடிய தன்மை' உடையவையும் மாற்றுமல் தம்மிடம் வைத்திருந்தால் நஷ்டம் ஏற்பட வாய்ப்பு இல்லாதவையும் ஆன சில சொத்துக்களையும் பாங்கு

தன்னிடம் வைத்திருக்கவண்டும். இவைபோக எஞ்சியுள்ள சொத்துக்கள் எளிதில் மாற்றக் கூடிய தன்மை பெற்றிராவிடினும் பாங்கருக்கு நஷ்டம் ஏற்படுத்தாதவையாக இருக்கவேண்டும். நாம் இங்குக் குறிப்பிட்டுள்ளவை சிறந்த பாங்கு முறைக்கு ஆதாரமாக அமையக் கூடிய சில இன்றியமையாத விதிகளாகும்.

நீர்மைத்தன்மையின் ஓர் இன்றியமையாத குணாதிசயமான 'மாற்றக் கூடிய தன்மை'யைப்பற்றி இன்னும் சற்று விரிவாகக் காண்போம். தன்னுடைய சொத்துக்களில் ஒரு பகுதியைத்தான் நினைத்த மாத்திரத்தில் ஒரு பாங்கு ஏனைய பாங்குகளிடமோ, வேறு நிறுவனங்களிடமோ உடனடியாக மாற்ற முடியும். இப் பாங்கு ஏனைய பாங்குகட்கு (செக்குத் தீர்வகத்தின் மூலம்) கடன் கொடுக்கவேண்டியிருக்கும் காலங்களிலும், இந்த ஒரு பாங்குக்கு மட்டிலும் நெருக்கடி நிலை நேர்ந்திருக்கும் காலங்களிலும், இப் பாங்கால் தன்னிடமுள்ள சொத்துக்களை ஏனைய நிறுவனங்களிடம் மாற்ற முடியும்; ஆனால் நாட்டில் இதைவிட மோசமான நிலை ஏற்படலாம். நெருக்கடி நிலை ஒரு பாங்கையே பாதிப்பதோடு நின்றுவிடாமல் பாங்குகள் அனைத்தையும் பாதிக்கலாம். வாணிகப் பாங்குகட்கிடையே நெருங்கிய உறவு நிலவுங்கால் நெருக்கடி நிலை எல்லாப் பாங்குகளையும் ஒருங்கே பாதிக்க மிகுந்த வாய்ப்பு உள்ளது ; அமெரிக்காவில் தனிப் பாங்குகள் ஏராளமாக இருந்த போதிலும், அவற்றிற்கிடையே பெருமளவு தொடர்புகள் ஏற்பட்டிருப்பதால் ஒரு பாங்குக்கு நேரக்கூடிய நெருக்கடி நிலை எளிதில் ஏனைய பாங்குகளையும் பாதிக்கலாம். ஒரு சில பெரும் பாங்குகளை மட்டிலும் உடைய ஒரு நாட்டில், ஒரு பெரும் பாங்குக்கு மட்டும் நெருக்கடி நிலை நேர்ந்தபோதிலும், நாட்டின் பொருளாதார அமைப்பு பாதிக்கப்படும்; இவ்வாறு பொருளாதார அமைப்பு பாதிக்கப் படுவதால் நாட்டிலுள்ள ஏனைய பெரும் பாங்குகட்கும் நெருக்கடி நிலை நேரலாம். இதுபோன்ற நெருக்கடி காலங்களில் அதாவது பாங்குகள் யாவும் ஒருங்கே பாதிக்கப்பட்டுள்ள நெருக்கடிக் காலங்களில் சொத்துக்களை ஒரு பாங்கு பிறிதொரு பாங்கிடம் மாற்ற (விற்க) முடியாது. பாங்குகள் யாவும் தங்கள் சொத்துக்களை மையப் பாங்கிடமே மாற்ற முடியும். மையப் பாங்கே நாட்டிலுள்ள ரொக்கங்கள் யாவற்றிற்கும் மூலாதாரமானது; மையப் பாங்கே பாங்குகட்குக் கடை நிலைக் கடன் ஈவோனாகத் (Lender of Last Resort) திகழ்கின்றது. எனவே ஒரு சொத்தினம் 'மாற்றக் கூடிய தன்மை' பெற்றிருக்கின்றதா என்று நாம் அறிய முயலும்போது, அந்தச் சொத்தினம் மையப் பாங்குக்கு 'மாற்றக் கூடிய தன்மை' பெற்றிருக்கின்றதா என்பதை நாம் அறியவேண்டியது அவசியமாகும். தன்னை அணுகி உதவி கோரி

வரும் பாங்குகள் கொண்டு வரும் எல்லா வகையான சொத்துக்களையும் மறுகழிவுக்கு ஏற்றவையாக மையப் பாங்கு கருதுவதில்லை. தான் ஏற்படுத்தியுள்ள 'தகுதி விதிகட்கு'க் (eligibility rule) கட்டுப்படக் கூடிய சொத்துகட்கு ஈடாகவே மையப் பாங்கு ரொக்கத்தை வழங்க முன்வருகின்றது. எனவே வாணிகப் பாங்குகளின் நீர்மைத் தன்மை, மையப் பாங்கின் 'பாங்கு விதிகட்கு'க் கட்டுப்பட்டது என்று நாம் கூறலாம்.

ஒரு சொத்தினம் மிகுதியான அளவு 'மாற்றக் கூடிய தன்மை பெற்றிருக்கின்றது என்று கூற வேண்டுமானல், அச் சொத்தினம் மையப் பாங்கிடம் மாற்றச்கூடியதாக இருக்கவேண்டும் மையப் பாங்கின் 'தகுதி விதி'கட்குக் கட்டுப்பட்ட சொத்துக்களே மையப் பாங்கிடம் மாற்றக் கூடிய சொத்துக்களாகும். கருவூல உண்டியல்கட்கும் சில நிபந்தனைகட்கு உட்பட்ட சாதாரண உண்டியல்கட்கும் ஈடாகவே பொதுவாக மையப் பாங்கு கடன் வசதிகளை ஏற்பாடு செய்து வருகின்றது. இச் சொத்துக்களை மட்டும் மறுகழிவுக்குத் தகுதியான சொத்துக்கள் என்று மையப் பாங்குகள் கருதுவதற்கான காரணங்களை இதே அத்தியாயத்தில் அடுத்த உட்பிரிவில் காண்போம். மையப் பாங்கு தடையின்றி மறுகழிவுக்கு ஏற்றுக்கொள்ளும் சொத்தினங்கள் யாவும் மையப் பாங்கின் 'தகுதி விதி'கட்குக் கட்டுப்பட்டவை என்பதை மட்டும் நாம் இப்பொழுது அறிந்துகொள்வது போதுமானதாகும். எனவே. பாங்குகளிடம் உள்ள எல்லாவகைச் சொத்தினங்களிலும், கருவூல உண்டியல்களும், நீர்மைத் தன்மையில் சிறந்து விளங்கும் ஊதியச் சொத்துக்களாகும் (earning assets). இது பொதுவான உண்மையாகும்; இலண்டன் இதற்கு விலக்காகும். லண்டனைப் பொறுத்த வரையில் இக் கருத்து முற்றிலும் பொருந்தக் கூடிய ஒன்று என்று நாம் கொள்ளமுடியாது. மையப் பாங்கிடம் மறுகழிவுக்குத் தகுதியான உண்டியல் மாற்றக்கூடிய தன்மையை மிகுதியாகப் பெற்றிருப்பதால் அது பெரிதும் விரும்பப்படுகின்றது. மேலும் உண்டியல்களின் ஆயுட்காலம் பெரும்பாலும் 3 மாதங்களாகவே இருப்பதால் அவற்றை மறுகழிவு செய்ய நேரும்போது மூலதன இழப்பு குறைந்த அளவாகவே இருக்கும். உண்டியலை எக்கழிவு வீதத்தில் வாணிகப் பாங்குகள் விலைக்கு வாங்கினவோ அதைவிட மையப் பாங்கின் மறுகழிவு வீதம் அதிகமாக இருக்கும் பட்சத்தில், உண்டியலை மறுகழிவு செய்வதால் பாங்குக்கு மூலதன நஷ்டம் ஏற்படும்.[1] உண்டியல் எவ்வளவுக் கெவ்வளவு குறுகிய கால ஆயுளை உடையதாக உள்ளதோ, அவ்வளவுக் கவ்வளவு

1 மூலதன நஷ்டம் எவ்வாறு ஏற்படக்கூடும் என்பதை அறிய விரும்புவோர் இரண்டாம் அத்தியாயத்தில் உட்பிரிவை உற்று நோக்கவும்.

அதை மாற்றும்போது நேரக்கூடிய (மறுகழிவு செய்யும்போது நேரக் கூடிய) மூலதன நஷ்டம் குறைவாகவே இருக்கும். எனவே பாங்குகள் குறுகிய ஆயுட்காலங்களை உடைய உண்டியல்களையே பெரிதும் விரும்புகின்றன. மையப் பாங்கின் 'தகுதி விதி'கட்கு உட்பட்ட உண்டியல் மாற்றக் கூடிய தன்மை பெரிதுமுடைய உண்டியலாகும். உண்டியல் அதன் கெடுவு காலத்தை நெருங்க நெருங்க அதை மாற்றும்போது நேரக்கூடிய நஷ்டம் குறைந்து கொண்டே போகிறது. லண்டனில் உண்டியல் கழிவு மார்க்கெட் மிகச் சிறந்தமுறையில் வளர்ச்சியடைந்துள்ளது. மேலும் லண்டனில் வாணிகப் பாங்குகட்கும், மையப்பாங்குக்கும் இடையே நேரடித் தொடர்புகள் கிடையா. இவற்றை ஒட்டி லண்டனிலுள்ள பாங்குகட்கு உண்டியல்களைக் காட்டிலும் மிகுதியான நீர்மைத்தன்மையுடைய ஒரு சொத்தினம் கிடைத்திருக்கிறது. உண்டியில் கழிவங்கட்கு உண்டியல்களின் ஈட்டின் பேரில் வாணிகப் பாங்குகள் கொடுக்கும் நாள் நிலுவைக் கடன்களே இந்தச் சொத்தினமாகும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு உண்டியல் கழிவங்கட்கு உண்டியல்களின் ஈட்டின்பேரில் தடையின்றிக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்து வருகின்றது. லண்டனில் வாணிகப் பாங்குகட்கு ரொக்கம் தேவைப்பட்டால் தாங்கள் உண்டியல் கழிவகங்கட்குக் கொடுத்துள்ள நாள் நிலுவைக் கடன்களை அவை திரும்பப் பெற முனையும். பாங்குகள் உண்டியல் கழிவகங்கட்கு எவ்வளவு தொகையைக் கடனாகக் கொடுத்திருந்தனவோ, அவ்வளவு தொகையையும் அவற்றிற்கான வட்டித் தொகையோடு உடனடியாக அவை திரும்பப் பெற முடியும். இவ்வாறு தாங்கள் உண்டியல் கழிவகங்கட்குக் கொடுத்துள்ள நாள் நிலுவைக் கடன்களைத் திரும்பப் பெற முனையும்போது வாணிகப் பாங்கட்கு எந்த விதமான நஷ்டமும் நேருவதில்லை. எனவே லண்டனில் ரொக்கத்திற்கு அடுத்து, நாள் நிலுவைக் கடன்களே நீர்மைத் தன்மை மிகுதியாக உடைய சொத்துக்களாகத் திகழ்கின்றன. நாள் நிலுவைக் கடன்களை அடுத்துக் கருவூல உண்டியல்களும், கருவூல உண்டியல்களை அடுத்துச் சாதாரண உண்டியல்களும், லண்டனில் நீர்மைத்தன்மை உடைய சொத்துக்களாகத் திகழ்கின்றன. ஆனால் ஏனைய பாங்கு முறைகளில் ரொக்கத்திற்கு அடுத்துக் கருவூலங்களும், நீர்மைத்தன்மை உடைய சொத்துக்களாக விளங்குகின்றன. (உண்டியல்களிலும் கெடுவுகாலத்தை நெருங்கிக் கொண்டிருப்பனவற்றைவிட அதிகமான ஆயுளை உடையவற்றைக் குறைந்த நீர்மைத்தன்மை உடையவையாகவே கருத வேண்டும்.) சாதாரண உண்டியல்கள் பொதுவாகக் கருவூல உண்டியல்கட்கு அடுத்த நிலையிலேயே நீர்மைத்தன்மை உடைய

வையாகக் கருதப்படுகின்றன. சாதாரண உண்டியல் ஒருவரிடமிருந்து மற்றொருவர் கைக்கு மாறி வரும்போது அதில் பலருடைய புறக்குறிப்புக்கள் (endorsements) பொறிக்கப் பெற்றிருக்கும். எனவே உண்டியலுக்கு இவர்கள் எல்லோரும் ஒருவேளை உண்டியலுக்கான பணத்தைத் திருப்பித்தர முடியாமல் போய்விட நேரலாம் என்ற ஓர் அற்பமான காரணத்தின் அடிப்படையிலேயே சாதாரண உண்டியல்கள் கருவூல உண்டியல்கட்கு அடுத்த நிலையிலுள்ள நீர்மைத்தன்மைச் சொத்துக்களாகப் பாங்குகளிடமுள்ள சொத்தினங்கள் யாவற்றிலும் கருவூல உண்டியல்களும் சாதாரண உண்டியல்களும் மாற்றக்கூடிய தன்மை பெரிதும் உடையவை. (அதாவது மறுகழிவுக்குத் தகுதியானவை). மையப் பாங்கு முறை சீரிய முறையில் வளர்ச்சி பெற்றுள்ள நாடுகளிலெல்லாம் நீர்த்தன்மை சொத்துக்களின் விகிதம்) ரொக்க விகிதங்கட்கு அதிகமான ரொக்கம் கிடைத்த போதிலும், நீர்மைத்தன்மை சொத்துக்கள் கிடைப்பது அரிதாக இருந்தால், ரொக்க உயர்வை ஒட்டித் தங்கள் நடவடிக்கைகளை விரிவுபடுத்த எண்ணும் பாங்குகளின் ஆவல் தடையுற நேரலாம்.

## 3. சுய தீர்வு பெறும் பத்திரங்கள் பெரிதும் விரும்பப்பெறுவது ஏன் ?

மையப் பாங்கிடம் மறுகழிவு செய்வதற்குத் தகுதிவாய்ந்த சொத்துக்களையே வாணிகப் பாங்குகள் பெரிதும் விரும்புகின்றன என்று நாம் கண்டோம். மையப் பாங்குகள் ஒரு குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த சொத்துக்களையே மறுகழிவுக்கு தகுதியானவை என்று வழிவழியாகக் கருதிவருவதற்கான காரணம் தான் என்னை ? என்ற வினவுக்கான விடையை இனிக் காண்போம். இந்த வினவிற்குத் தரப்படும் சில விடைகள் மேலெழுந்தவாரியாக உள்ளன ; எனவே அவை பொருத்தமானவையாகத் தோன்றவில்லை. நாம் இங்குக் குறிக்கப்போவதே உண்மையான காரணமாகும். தங்களுக்கு நஷ்டம் ஏற்படுவதினின்றும் தங்களைக் காத்துக்கொள்ள மையப் பாங்குகள் விரும்புகின்றன ; மேலும் முறையில்லாதனவும், பொருந்தாதனவுமான பாங்கு முறைகளைத் தடை செய்யவும் மையப் பாங்குகள் விரும்புகின்றன. இந்த இரண்டு குறிக்கோள்களையும் நிறைவேற்றும் முகத்தான் ஒரு சில சொத்துகளையே – சிறந்த பாங்கு முறைக்கு ஆதாரமாக அமையக் கூடியவை என்று தாம் கருதும் ஒரு சில சொத்துக்களையே— மையப் பாங்குகள் மறுகழிவு செய்ய விரும்புகின்றன. அமெரிக்கப் பாங்கு முறையை உற்று நோக்கினாலும் சரி, இங்கிலாந்துப் பாங்கு முறையை உற்று நோக்கினாலும் சரி, அன்றி வேறு

பல நாடுகளிலும் உள்ள பாங்கு முறைகளை உற்று நோக்கினாலும் சரி, இந்த உண்மையை நாம் அறியமுடியும். உண்டியல்கள் (மற்றும் உண்டியல்களின் ஈட்டின் பேரில் நாணயமான நிறுவனங்கட்குக் கொடுக்கப்படும் கடன்களும்) சிறந்த பாங்கு முறைக்கு ஆதாரமாக அமையக்கூடிய சொத்துக்கள் என்று ஏன் கருதப்படுகின்றன என்ற வினாவுக்கான விடையை இனிக் காண்போம்.

உண்டியல்களைப்பற்றிப் பாங்கர்கள் கொடுத்துள்ள விளக்கங்களின் அடிப்படையிலேயே இந்த வினாவிற்கான விடையை நாம் அறிய முடியும். உண்டியல் ஒரு 'சுய தீர்வுபெறும் பத்திரம்' (Self-liquidating Paper) என்று பாங்கர்கள் கருதுகின்றனர். இச் 'சுய தீர்வு பெறும் உண்டியல்கள் உண்மையான வாணிக பேரத்தை ஒட்டியே தோன்றுகின்றன. உதாரணமாக ஆஸ்திரேலிய நாட்டு ஏற்றுமதியாளர் இங்கிலாந்து நாட்டு இறக்குமதியாளருக்குக் கோதுமை ஏற்றுமதி செய்வதை ஒட்டி உண்டியல் வரையப் படலாம். எந்த வர்த்தக பேரத்தை ஒட்டி இந்த உண்டியல் வரையப்படுகின்றதோ, அந்த வர்த்தகப் பேரம் முற்றுப் பெற்றவுடன் கடனாளிக்கு வர்த்தகத்தின் மூலம் பணம் கிடைக்கும். இந்தப் பேரம் மிகக் குறுகிய காலத்திலேயே முற்றுப்பெற்றுவிடும். உதாரணமாக, இந்த வர்த்தகப் பேரம் மூன்று மாத காலத்தில் முற்றுப்பெற நேரலாம். கடனாளி நாணயமானவர் என்றும், கெடுவு காலத்தில் கடனாளி எவ்விதச் சிரமமுமின்றி உண்டியலில் குறிக்கப் பட்டிருக்கும் தொகையைச் செலுத்த முடியும் என்றும் உண்டியலில் ஏற்பகம் ஒன்றின் புறக் குறிப்பு பொறிக்கப் பெற்றுள்ளது என்றும், பாங்கர் அறிய நேர்ந்தால் அவர் உண்டியலை விலைக்கு வாங்குவார். பாங்கர் நெடுங்காலம் காத்திருக்க வேண்டியிராது. ஆஸ்திரேலியாவினின்றும் கோதுமை இங்கிலாந்தை வந்து சேரும் வரைதான், பாங்கர் காத்திருக்க நேரிடும். இக் கோதுமைப் பேரம் முடிவுற்றதும் வியாபாரிக்குப் பணம் கிடைக்கும்; இந்தப் பணத்தை பயன்படுத்தி உண்டியல் கடனை வியாபாரி செலுத்திவிடுவார். உண்டியல்களை விலைக்கு வாங்கும்போது அவை சுய தீர்வு பெறக் கூடிய உண்டியல்கள் தாமா என்று பாங்குகள் உற்று நோக்கு கின்றன. வியாபாரிட்குக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்யும் போதும் 'சுய தீர்வுக் கோட்பாடே' பாங்கரின் உள்ளத்தில் மேலோங்கி நிற்கின்றது. எனவே, தனது சர்வகலாசாலைப்பட்டப் படிப்பை முடிப்பதற்குத் தேவைப்படும் பணத்தைக் கடனாகப் பெறுவதற்குப் பாங்கை அணுகும் ஒரு மாணவருக்குக் கடன் கொடுப்பதை விடத் தனது வாடிக்கைக்காரர்கள் விரும்பும் பொருள்களைத் தயாரித்து அளிக்கக் கச்சாப் பொருள்கள் வாங்கு வதற்குத் தேவைப்படும் பணத்தைக் கடனாகப் பெறுவதற்குப்

பாங்கை அணுகும் ஒரு வியாபாரிக்கே கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதைப் பாங்கு பெரிதும் விரும்புகின்றது. உண்டியல்களை வாங்கும்போதும், வியாபாரிகட்குக் கடன்களை ஏற்பாடு செய்யும் போதும். பாங்குகள் 'சுய தீர்வுக்கோட்பாட்டின்' அடிப்படையி லேயே செயலாற்றினுலும், உண்டியல் கட்கும் வியாபாரக் கடன் கட்கும் இடையே ஒரு முக்கியமான வேறுபாடு உள்ளது. உண்டி யல் ஒரு சட்டரீதியான செலாவணிப் பத்திரமாகும். (Negotiable Legal Instrument - சட்டரீதியான செலாவணிப் பத்திரம் நோட்டுக்களைப் போல ஒருவர் கையினின்றும் மற்ருெருவர் கைக்குச் சாதாரணமாக மாறி மாறிச் செல்லக்கூடியதாகும்.) ஆனல், வியாபாரக் கடனுக்கு ஈடாகச் சட்டரீதியான செலாவணிப் பத்திரம் ஒன்று தோன்ற வாய்ப்பில்லை. எனவே, வியாபாரக் கடன்களைவிட உண்டியல்கள் 'மாற்றக் கூடிய தன்மை' பெரிதும் உடையவை ஆகும். (அதாவது பிறரிடம் எளிதில் விற்று விட முடியும்.) உண்டியல்கள் 'சுய தீர்வு பெறும் பத்திரங்களாக'த் திகழ்வதால் பாங்கர்கள் அவற்றைப் பெரிதும் விரும்புகின்றனர். அவற்றிற்கு நல்ல மார்க்கெட்டும் உள்ளது. உண்டியல்கள் சட்டரீதியான செலாவணிப் பத்திரமாகத் திகழ் வதாலும். அவற்றிற்கான மார்க்கெட்டுகள் விரிவடைய வாய்ப் புக்கள் தோன்றுகின்றன: இது காறும் நாம் கூறியவற்றினின்றும் ஓர் உண்மை அறியக்கிடக்கின்றது. ஒரு சொத்தினம் சுய தீர்வு பெறும் சொத்தினமாகத் திகழவேண்டுமேயாயின், உண்டியல் என்ற ஒரு சட்டரீதியான பத்திரம் உருவாக வேண்டும் என்ற அவசியம் ஏதுமில்லை. ஏனெனில் வர்த்தக பேரங்கட்குப் பயன்படும் வகையில் வியாபாரிகட்குப் பாங்குகள் ஏற்பாடு செய்யும் கடன் களில் பெரும்பாலானவை 'சுய தீர்வு பெறும் சொத்தினங்களே' யாகும்.

எனவே, கடனாளிகள் தம்மிடம் வாங்கிய கடன்களை உறுதி யாகத் திருப்பித் தந்துவிடுவார் என்று பாங்கர் கருதும் கடன்களே 'சுய தீர்வு பெறும் கடன்களா'கும். ஏனெனில் வியாபாரி உண்மை யிலேயே ஒரு வர்த்தக பேரத்தில் ஈடுபட்டிருக்கின்ருர் என்பதற்குச் சான்றுகள் (உதாரணமாகக் கப்பல் பத்திரங்கள் அல்லது கிடங்கு ரசீதுகள் உள்ளன. இந்தப் பேரம் முடிவுற்றதும் வியாபாரிக்குக் கட்டாயம் பணம் கிடைக்கும். இப்பணத்தைப் பயன்படுத்தி வியாபாரி தன்னுடைய கடனைச்செலுத்திவிடமுடியும். முந்திய பத்தியில் ஆஸ்திரேலியா ஏற்றுமதியாளர் ஒருவர் இங்கிலாந்து இறக்குமதியாளர் ஒருவருக்குக் கோதுமை ஏற்றுமதி செய்கின்ருர் என்று ஓர் உதாரணம் கண்டோம். கோதுமை இங்கிலாந்து வந்து சேர்ந்துவிட்டது என்று வைத்துக்கொள்வோம். கோதுமையை

விற்பதன் மூலம் தனது உண்டியல் கடனைச் செலுத்துவதற்குத் தேவைப்படும் முழுத்தொகையும் இங்கிலாந்து இறக்குமதி யாளருக்குக் கிடைக்குமா என்ற வினா எழுகின்றது. இந்த வினாவுக்கான பதில் இங்கிலாந்தில் அவ்வமயம் நிலவும் கோதுமை விலையைப் பொறுத்ததாகும். கோதுமை விலை ஒரு சிறிதளவே குறைந்திருந்தால் இறக்குமதியாளர் பெரிதும் பாதிக்கப்பட மாட்டார். கோதுமையை விற்ற பணத்திலிருந்தே உண்டியல் கடனை அவரால் தீர்க்க முடியும். ஏனெனில் உண்டியலின் மதிப்பு, கோதுமையை விற்று இறக்குமதியாளர் திரட்டக் கூடிய பணத்தின் மதிப்பை விட ஓரளவு குறைந்ததேயாகும். ஆனால் கோதுமை விலையில் ஒரு பெரும் சரிவு ஏற்பட்டிருக்கிறது என்று வைத்துக் கொண்டால், இறக்குமதியாளர் பெரிதும் பாதிக்கப்படுவார். கோதுமையை விற்று அவரால் உண்டியல் கடனைத் தீர்க்கமுடியும் என்று நாம் உறுதியாகக் கூறமுடியாது.[1] விலையில் இது போன்ற பெரும் மாற்றங்கள் நேராவண்ணம் எங்ஙனம் தடுக்க முடியும் என்ற வினா எழுவது இயற்கையே. நாட்டிலுள்ள பண அளிப்பு நிலையில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏதும் நேராமல், பண அளிப்பு நிலை குறையாது இருந்தால் விலைவாசிகளில் பெரும் சரிவுகள் ஏற்பட வாய்ப்பில்லை. பாங்கர் யாவரும் தங்களிடமுள்ள சொத்துக்களை ரொக்கமாக மாற்றி, தங்களிடமுள்ள ரொக்கத்தை உயர்த்த விரும்புகின்றனர் என்று வைத்துக்கொள்வோம். (நெருக்கடி நிலை நேராத போது கூடத் தவறான செய்திகளின் அடிப்படையில் பாங்கர் பரபரப்பு அடைந்து இவ்வாறு செய்ய முனையலாம்.) தங்களிடமுள்ள உண்டியல்களின் கெடுவுகாலம் எப்பொழுது வரும் என்று பாங்கர்கள் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பர். புதிய உண்டியல்களை விலைக்கு வாங்க மாட்டார்கள். இதன் விளைவாக நாட்டிலுள்ள பண அளிப்பு பெருமளவு குறையும். இதை ஒட்டி விலைகளில் ஒரு பெரும் சரிவு ஏற்படும். வர்த்தகப் பேரங்களினின்றும் வியாபாரிகட்குக் கிடைக்கும் பணம் மிகவும் குறையும். தங்களிடமுள்ள பொருள்களை விற்று அதன் மூலம் கிடைக்கும் பணத்தைப் பயன்படுத்தித் தாங்கள் பாங்குகளிடமிருந்து வாங்கிய கடன்களைத் திருப்பித் தரமுடியும் என்று எண்ணிய வியாபாரிகளின் நோக்கம் முற்றிலும் நிறைவேறாது. எனவே தங்களிடமுள்ள சொத்துக்களின் 'சுய தீர்வு பெறும் தன்மை'யைப் போற்றிக்

[1] விலைவாசி மாற்றங்களால் தான் பாதிக்கப்படாதிருக்க வேண்டி இங்கிலாந்து நாட்டு இறக்குமதியாளர், 'நட்டத்தடை பேரம்' hedging) ஒன்றினை முன்னேற்பாடாகச் செய்திருக்கலாம். இச் சிக்கலை நாம் ஈண்டு புகுத்த விரும்பவில்லை. இருப்பினும் நட்டதடைப்பேரம் என்ற சிக்கலை நம்முடைய உதாரணத்தில் புகுத்தி, அதனோடு தொடர்புடைய வேறு சிக்கல்களையும் நாம் உடன் புகுத்தினால் நம்முடைய முடிவு எவ்விதத்திலும் பாதிக்கப்படமாட்டாது என்பதை 'நட்டத் தடைப் பேரம்' குறித்துத் தெரிந்திருக்கும் வாசகர்கள் அறிவார்கள் என்று நாம் நம்புகிறோம்.

காக்க விரும்பினால், பாங்கர்கள் தங்களிடமுள்ள சொத்துக்களின் அளவினைக் குறைக்க முயலக் கூடாது, ஏனெனில் வியாபாரிகட்குத் தேவைப்படும் குறுங்காலக் கடன்களை ஏற்பாடு செய்வதில் பாங்குகள் பெரும் பங்கு பெருகின்றன. புதிய புதியக் கடன்களை ஏற்பாடு செய்வதில் பாங்கர்கள் ஆர்வம் காட்டினாலன்றி, தாங்கள் ஏற்கெனவே வாங்கியுள்ள கடன்களை வியாபாரிகளால் தீர்க்கமுடியாது. புதிய புதிய குறுங்காலக் கடன்களை வியாபாரிகட்குப் பாங்கர்கள் ஏற்பாடு செய்தால்தான், தங்களுடைய பழைய கடன்களைத் தீர்ப்பதற்குப் போதுமான அளவு பணம் வியாபாரிகட்குக் கிடைப்பதற்கான வாய்ப்புகள் பெருகும். உண்டியல்களை கெடுவு காலம் வரை பாங்குகள் தம்மிடம் வைத்திருந்தால் எந்தவிதமான நஷ்டமும் பாங்குகட்கு நேராது என்று நாம் ஏற்கெனவே கூறினோம். இது ஒரு முக்கியமான நிபந்தனைக்குக் கட்டுப்பட்டதாகும். பாங்குகள் தங்களுடைய வாடிக்கைக்காரர்கட்குக் கொடுத்துக்கொண்டிருக்கும் கடன்களைச் சுருக்கிவிடக் கூடாது. இந்த நிபந்தனை நிறைவேற்றப்பட்டால்தான் கெடுவு காலம் வரை பாங்கர்களிடம் தங்குகின்ற உண்டியல்களால் பாங்கர்கட்கு எந்த விதமான நஷ்டமும் நேராது. பாங்குகள் யாவும் தாங்கள் ஏற்பாடு செய்யும் கடன்களைப் பொதுவாகச் சுருக்கிக் கொண்டே போகும் காலங்களில் அதிகாரிகள் எந்தவிதமான நடவடிக்கைகளும் எடுக்காவிட்டால், சிறந்த முறையில் நிர்வகிக்கப்பட்டு வரும் பாங்கு கூடப் பெருமளவு பாதிக்கப் பெறலாம். கடன்களைப் பெருமளவு சுருக்காத அளவுக்குத் தங்களது நடவடிக்கைகளைப் பாங்குகள் ஒழுங்குப் படுத்திக் கொண்டால் நெருக்கடி நிலை நேராது; வியாபாரிகட்குப் பணம் கிடைப்பது அரிதாக இராது; பாங்கர்களிடமிருக்கும் உண்டியல்கள் நிச்சயமாகக் கெடுவு காலத்தில் 'சுய தீர்வு' பெறும்.

வியாபாரிகட்குத் தாங்கள் ஏற்பாடு செய்யும் குறுங்காலக் கடன்களைப் பாங்குகள் குறைத்துவிடாமல் செயலாற்றி வந்தால் தங்களுடைய குறுங்காலச் சொத்துக்களின் நீர்மைத் தன்மையைப் பாங்குகளால் உறுதி செய்ய முடியும் என்று இதுகாறும் கண்டோம். நெடுங்காலப் பத்திரங்களைப் (சொத்துக்களை) பொறுத்த வரையிலும்கூடப் பாங்கர்கள் இதுபோல நடந்து கொண்டால் அவற்றின் நீர்மைத் தன்மையை அதிகரிக்க முடியும் என்று எண்ணத் தோன்றுகிறது. அதாவது நெடுங்காலப் பத்திரங்களின் விலைகட்குப் பாங்குகள் ஆதரவு கொடுத்து வந்தால், அவற்றையும் உண்டியல்கட்குச் சமமான நீர்மைத் தன்மைச் சொத்துக்களாக மாற்ற முடியும் என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால், இந்த வாதம் பொருந்தாத ஒன்றாகும்.

இந்த வாதத்திற்கு எதிராக இரண்டு முக்கியமான மறுப்புக்கள் உள்ளன. முதலாவது மறுப்பு வருமாறு: நெடுங்கால வட்டி வீதங்கள் உயருவதையே மையப் பாங்கு விரும்பலாம். இந்த நோக்கத்தை நிறைவேற்றும் முகத்தான் மையப் பாங்கு ரொக்கத்தை அதிகரிக்க விரும்பாது இருக்கலாம் எனவே, நெடுங்காலப் பத்திர விலைகட்கு ஆதரவு கொடுப்பதற்குத் தங்கட்குத் தேவைப்படும் ரொக்கத்தை வாணிகப் பாங்குககள் பெறமுடியாத நிலையில் இருக்கலாம். மேலும் நெடுங்கால வட்டி வீதங்கள் உயரும்போது மார்க்கெட்டில் பத்திரங்களின் விலைகள் குறைகின்றன. இதை ஒட்டிப் பத்திரங்களின் மூலதன மதிப்புக் குறைகின்றது. அதாவது பாங்குகட்கு முதல் இழப்பு நேருகின்றது. குறுங்கால வட்டி வீத உயர்வு ஏற்படுவதை ஒட்டிப் பங்குகளிடமுள்ள குறுங்காலச் சொத்துக்களின் மதிப்புக் குறையும் என்பது உண்மைதான். ஆனால் நெடுங்கால வட்டி வீதங்களின் உயர்வால் பாங்கர்கட்கு ஏற்படக்கூடிய இழப்பானது குறுங்கால வட்டி வீதத்தால் பாங்கர்கட்கு ஏற்படக்கூடிய மூலதன இழப்பைவிட மிகவும் அதிகமானதாகும். எனவே, பாங்குகள் பத்திரங்களைப் பெருமளவில் தம்மிடம் வைத்திருக்க நேர்ந்தால், மூலதன இழப்புக்களும் பெருமளவில் ஏற்பட வாய்ப்புக்கள் உள்ளன. பத்திரங்களின் கெடுவு காலம் முடிந்ததும் அரசாங்கத்திடமிருந்து தவருமல் நிச்சயமாகப் பத்திரங்களுக்கான பணம் முழுவதையுமே பாங்குகள் பெறமுடியும். இதை யாரும் மறுக்க முடியாது. இருப்பினும் பத்திரங்கள் பாங்குகளிடம் தங்கி இருக்கும் காலங்களில் வட்டி வீத உயர்வை ஒட்டிப் பாங்கர்கட்குப் பெருமளவு மூலதன இழப்புக்கள் ஏற்பட நிறைய வாய்ப்புக்கள் உள்ளன.[1]

நெடுங்கால வட்டி வீதங்கள் நிலையாக்கப் பெற்றுவிட்டன என்றும், எனவே பத்திர விலைகள் குறைவதற்கான வாய்ப்புக்கள் ஏதும் இல்லை என்றும் வைத்துக்கொண்டபோதிலும், நெடுங்காலச் சொத்துகட்குப் பாங்கர்கள் ஆதரவு கொடுக்கவேண்டும் என்ற கருத்து சரியன்று என்றே தோன்றுகின்றது. நாம் இங்குத் தரப் போகும் இரண்டாவது மறுப்பு இதைத் தெற்றென விளக்கும். வர்த்தகர்கட்கும், தொழிலதிபர்கட்கும் நெடுங்காலக் கடன்களைப்

[1] நிலையான வட்டி வீதக்கொள்கையை வெற்றிகரமாக-நெடுங்காலமாக-மையப் பாங்கு கடைப்பிடித்து வந்ததேயானால், நேசமுடையவாதம் குறையுள்ள வாதமாகிவிடும். தங்களிடமுள்ள நெடுங்காலப் பத்திர இருப்புக்களை மிக்க விருப்பத்துடன் பாங்கர்கள் அதிகரித்துக் கொள்வர். 1945 – 51க்கு இடைப்பட்ட காலத்தில் இதுபோன்றதொரு சூழ்நிலை அமெரிக்காவில் உருவாகியது. அவ்வமயம் கருவூலத்தின் வேண்டுகோளுக்கு இணங்க ஒரு நிர்ணயிக்கப்பட்ட விலையில் நெடுங்காலப் பத்திர மார்க்கெட்டுக்கு ஐக்கிய ரிசர்வ் முறை ஆதரவு கொடுத்தது.

பாங்குகள் ஏற்பாடு செய்வது முறையன்று என்ற கருத்தின் அடிப்படையிலே இந்த இரண்டாவது மறுப்பு அமைந்துள்ளது. வர்த்தகர்கட்குக் குறுங்காலக் கடன் வசதிகளையே ஏற்பாடு செய்வது பாங்கர்களின் தலையாய கடமை என்ற கருத்து நெடு நாட்களாக நிலவி வருகின்றது. இவவாறு குறுங்காலக் கடன்களை வர்த்தகருக்கு ஏற்பாடு செய்யப் பாங்கு முன்வரும்போது கடனாளியாகிய வர்த்தகரின் நாணயம், நேர்மை ஆகியவற்றை ஆராய்வதோடு வர்த்தகரின் 'இருப்பு நிலைக் குறிப்பையும்' (Balance-sheet) பாங்கர் உற்று நோக்குகின்றார். வர்த்தகர் நாணயமானவர் என்றும், எளிதில் விற்பனை செய்யக்கூடிய பொருள்களே அவருடைய வியாபாரப் பொருள்கள் என்றும் பாங்கர் அறிய நேர்ந்தால், தன்னிடம் பெறவிரும்பும் கடனை வர்த்தகர் உறுதியாகத் திருப்பிக் கொடுத்து விடுவார் என்று பாங்கர் நம்புவார். அவருக்குக் கடன் தருவதற்குப் பாங்கர் முன் வருவார். இவ்வாறன்றி நெடுங்காலக் கடன் வசதியை வர்த்தகருக்கு ஏற்பாடு செய்ய விரும்புகின்றது என்று வைத்துக்கொள்வோம். வர்த்தகரின் 'இருப்புநிலைக் குறிப்பை' மட்டும் பாங்கர் ஆராய்வது போதுமானதாகாது. எதிர்காலத்தில் நீண்ட காலத்திற்கு வர்த்தகரால் ஆற்றலுடன் பொருள் ஈட்ட முடியுமா என்றே பாங்கர் ஆராய முனையவேண்டும். வர்த்தகரின் குறுகிய காலத் திறமையை எளிதில் பாங்கரால் ஆராய முடிவதுபோல, வர்த்தகரின் நீண்டகாலத் திறமையையும் பாங்கரால் எளிதில் ஆராய்ந்து விட முடியாது. நீண்ட காலத்தில் மார்க்கெட்டில் என்னென்ன மாற்றங்கள் நேரலாமோ, அவற்றை எல்லாம் பாங்கர் கணக்கிட வேண்டியது அவசியமாகும். நீண்ட காலத்தில் வர்த்தகர் பயன்படுத்தும் கச்சாப் பொருள்களுக்கான மார்க்கெட் எவ்வாறு அமையலாம் ; வர்த்தகர் தயாரிக்கும் பொருள்களுக்கான மார்க்கெட் எவ்வாறு அமையலாம் ; உற்பத்திச் சாதன முறைகளில் என்னென்ன மாற்றங்கள் நேரலாம் ; தொழிலாளர்களின் சேவையை எளிதில் பெறமுடியுமா, வர்த்தக நிறுவனம் சிறந்த முறையில் நிர்வகிக்கப்படுமா—என்பன போன்ற பல விஷயங்களையும் பாங்கர் ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வரவேண்டியிருக்கும். பாங்கர் எளிதில் இவற்றைக் குறித்து ஒரு முடிவுக்கு வரமுடியாது. தொழிற்சாலைக்குத் தொழிற்சாலை நிலைமைகள் மாறுபடுகின்றன. எனவே ஒவ்வொரு தொழிற்சாலையின் எதிர்காலம் பற்றியும் அறிந்துகொண்டிருக்கக்கூடிய தனித் திறமை வாய்ந்த நிபுணர்களாலேயே இது போன்ற விஷயங்களைத் தீர்க்கமாக ஆராயமுடியும். நீண்ட காலக் கடன் வசதிகள் கோரித் தம்மை அணுகும் தொழிற்சாலைகளின் எதிர்காலம்பற்றி மதிப்பிடும் பணியில் பாங்கின் மானேஜர் திறம்பட ஈடுபடமுடியாது;

அவருக்கு அந்தக் தகுதி கிடையாது. மூன்றுமாதகால அளவில் அமையக் கூடிய வர்த்தகர்களின் நடவடிக்கைகளை ஆராய்ந்து அறிவதற்குத் தேவைப்படும் திறமையும், 20 ஆண்டுக்கால அளவில் அமையக்கூடிய ஒரே ஒரு வர்த்தகரின் நடவடிக்கைகளை ஆராய்ந்து அறிவதற்குத் தேவைப்படும் திறமையும் வெவ்வே றுனவை யாகும். வழி வழியாகக் குறுங்காலக் கடன்களையே பாங்குகள் ஏற்பாடு செய்து வருவதற்கு இதுவே அடிப்படையான காரணமாகும். வாடிக்கைக்காரர்கட்குக் கடன் வசதிகளைப் பாங்குகள் ஏற்பாடு செய்யும்போது அவை முன்போலத் தற்சமயம் 'சுயதீர்வுக் கோட்பாட்டை' வலியுறுத்துவதில்லை. இதில் தவறு ஏதுமில்லை என்று பாங்குகள் கருதினாலும், நெடுங்காலக் கடன் கட்கும் குறுங்காலக் கடன்கட்கும் இடையே உள்ள (நாம் மேலே சுட்டிக்காட்டியுள்ளது) வேறுபாட்டைப் பாங்கர்கள் மறந்து விடலாகாது. பாங்கர்களின் சொத்துக்கள் யாவற்றையும் தற்சமயம் நேரடியாகவோ, மறைமுகமாகவோ மையப் பாங்கிடம் மாற்றிவிட முடியும். இந்த உண்மையின் அடிப்படையில், தங்களுடைய சொத்துக்கள் யாவுமே 'நீர்மைத் தன்மை சொத்துக்கள்' என்று பாங்குகள் கருதிவிடலாகாது. நீர்மைத் தன்மை இரண்டு குணுதிசயங்களால் ஆயது என்று நாம் ஏற்கெனவே கண்டோம். அவை 'நஷ்டம் இன்மையும், மாற்றக் கூடிய தன்மையும் ஆகும். (தங்கள் சொத்துக்களைப் பிறருக்கு) மாற்றக்கூடி தன்மையிலேயே பாங்குகள் கவனம் செலுத்துவது போதுமானதாகாது. தங்களுடைய சொத்துக்களால் தங்கட்கு நஷ்டம் ஏற்படாமல் பார்த்துக்கொள்ளவேண்டியதும் பாங்கர்களின் தலையாய கடனே யாகும். வர்த்தகர்களின் ஆற்றலை எந்த அளவுக்குத் தம்மால் தீர்மானிக்கமுடியுமோ, அது சம்பந்தமான நடவடிக்கைகளிலேயே பாங்கு மானேஜர் ஈடுபட்டால் நஷ்டம் ஏற்படுவதைப் பெரும்பாலும் தவிர்க்கலாம்.

## 4. பன்னுடுகளிலுமுள்ள பாங்குகள் கடைப்பிடித்துவரும் சில முறைகள்

சிறந்த பாங்கு முறைக்கு ஆதாரமாக விளங்கக்கூடிய கருத்துக் கள் சிலவற்றை முந்திய உட்பிரிவில் நாம் கண்டோம். இக் கருத்துக்கள் யாவும் கடந்த இருநூறு ஆண்டுகளாகப் பெரும் பாலும் இங்கிலாந்து நாட்டில் வளர்ச்சியுற்று வந்துள்ளவையாகும். பாங்குகள் கடைப்பிடிக்கவேண்டிய அடிப்படைக் கருத்துக்களைப் பொறுத்தவரையில் எல்லா நாடுகளிலும் பெரும்பாலும் ஒருமித்த கருத்துக்களே நிலவுவதை நாம் காணமுடியும். இருப்பினும்

சொத்துக்களின் அமைப்பைப் பொறுத்தவரையில் பல்வேறு நாடுகளிலும் உள்ள வாணிகப் பாங்குகள் ஒன்றுடன் ஒன்று மாறுபட்டு விளங்குகின்றன. இத்தகைய வேறுபாடுகள் சிலவற்றை இவ்வுட்பிரிவில் காண்போம்.

சொத்துக்களின் அமைப்பைப் பொறுத்தவரையில் பல்வேறு நாடுகளிலுமுள்ள வாணிகப் பாங்குகள் ஒன்றுடன் ஒன்று வேறுபட்டு விளங்குவதற்கான அடிப்படைக் காரணங்கள் இரண்டாகும். பாங்குகள் நீங்கலாக எஞ்சியுள்ள மூலதன மார்க்கெட் நாட்டிற்கு நாடு வேறுவிதமாக அமைந்துள்ளது. இது முதலாவது காரணமாகும். மேலும் சிறந்த பாங்கு முறைக்கு ஆதாரமானவை என்று வழிவழியாக நிலவிவரும் கருத்துக்களைக் கடைப்பிடித்துவரும் முறையிலும் நாட்டிற்கு நாடு வேறுபாடுகள் உள்ளன. இதுவே இரண்டாவது காரணமாகும். இவ்விரு காரணங்களிலும் முதலாவது காரணமே முக்கியமான காரணமாகும். இரண்டாவது காரணத்தைப் பொறுத்தவரையில், சிறந்த பாங்கு முறைக்கு ஆதாரமான கருத்துகட்கு மூலாதாரமாக எக்காலத்தும் இங்கிலாந்தே விளங்கி வருகின்றது என்று கருத முடியாது. சில பன்னாட்டுப் பாங்குகள் (International Banks) தங்களுடைய கிளைகளைப் பின்தங்கிய நாடுகளிலும் நிறுவியுள்ளன. இவற்றின் மூலம் சிறந்த பாங்கு முறைக்கு ஆதாரமான கருத்துக்கள் பின்தங்கிய நாடுகளிலும் பரவியுள்ளன. எனவே சொத்துக்களின் அமைப்பைப் பொறுத்தவரையில் பல்வேறு நாடுகளிலுமுள்ள வாணிகப் பாங்குகள் ஒன்றுடன் ஒன்று வேறுபட்டு விளங்குவதற்கு நாம் மேலே குறித்துள்ள இரண்டு காரணங்களிலும் முதலாவது காரணமே முக்கியமான காரணமாகும். இங்கிலாந்தில் தாராளமாகக் கிடைக்கக்கூடிய சில சொத்துக்களை ஏனைய நாடுகளிலுள்ள பாங்குகளிடம் காணமுடிவதில்லை. இந்த ஏனைய நாடுகளிலுள்ள பாங்குகள் தங்களுடைய வாடிக்கைக்காரர்களின் வற்புறுத்தல்கட்கு இணங்க ஏற்பாடு செய்துவரும் சிலவகையான கடன் வசதிகளை இங்கிலாந்தில் காணமுடியாது. பாங்குச் சொத்துக்களின் பகிர்வு இங்கிலாந்திற்கும் வேறு பல நாடுகட்கும் இடையே வேறுபட்டுத் திகழ்வதற்குரிய முக்கிய காரணங்கள் இவையேயாகும். ஓர் எடுத்துக்காட்டுக் காண்போம்: இங்கிலாந்திலுள்ள வாணிகப் பாங்குகள் உண்டியல் கழிவகங்கட்கு நாள் நிலுவைக் கடன்களை அளித்துவருகின்றன. இவை நீர்மைத் தன்மையில் மிகச் சிறந்து விளங்குகின்றன. நாள் நிலுவைக் கடன்கட்கும் ரொக்கத்திற்கும் இடையே பெருமளவு வேறுபாடு கிடையாது. இந்த விஷயத்தைப் பொறுத்தவரையில் ஏனைய நாடுகள் இங்கிலாந்திநின்றும் வேறுபடுகின்றன. இந் நாடுகளில்

உண்டியல் கழிவு மார்க்கெட்டே கிடையாது எனலாம். இந்த நாடுகளில் நீர்மைத் தன்மையில் மிகவும் சிறந்து விளங்கக்கூடிய சொத்துக்கள் கிடைப்பது மிகவும் அரிதாகவே இருக்கின்றது. ஆனால் இந்த நாடுகளில் அரசாங்கப் பத்திரங்கள் பெருமளவு உள்ளன; அவை எளிதில் கிடைக்கக்கூடியவையாக உள்ளன. ஆனால் தென் அமெரிக்காவிலுள்ள பாங்குகள் அரசாங்கப் பத்திரங்களை விரும்புவதே இல்லை. தென் அமெரிக்க நாடுகளின் அரசியலில் நிலைத்த தன்மை ஏற்படாததே இதற்குக் காரணமாகும். தென் அமெரிக்காவிலுள்ள பாங்குகள் தங்களிடம் வேற்று நாட்டு அரசாங்கம் வெளியிட்டுள்ள பத்திரங்களை வைத்திருக்க முயலலாம். ஆனால் இவ்வாறு செய்வதிலும் ஓர் ஆபத்து உள்ளது. அயல்நாட்டுச் செலாவணி மாற்று வீதத்தில் மாற்றங்கள் நேர்ந்தால், அயல்நாட்டு அரசாங்கப் பத்திரங்களை விலைக்கு வாங்கிய தென் அமெரிக்கப் பாங்கு பாதிக்கப்படலாம். உண்டியல் கழிவகங்கட்கு வாணிகப் பாங்குகள் கொடுத்து வருகின்ற நாள் நிலுவைக் கடன்கள் இங்கிலாந்தில் எவ்வளவு அதிகமாகத் திகழ்கின்றனவோ, அந்த அளவு தென் அமெரிக்காவில் பாங்குகளிடமுள்ள அரசாங்கப் பத்திரங்கள் குறைவாகத் திகழ வாய்ப்புக்கள் உள்ளன. ஆனால் இங்கிலாந்தில் நாள் நிலுவைக் கடன்கள் எவ்வளவு அதிகமாகத் திகழ்கின்றனவோ, அந்த அளவு இந்தியாவில் பாங்குகளிடமுள்ள அரசாங்கப் பத்திரங்கள் அதிகமாகத் திகழ வாய்ப்புகள் உள்ளன. நாணயமான அரசாங்கங்கள் ஏற்பட்டுள்ள நாடுகளிலெல்லாம் பாங்குகளிடம் பெருமளவு அரசாங்கப் பத்திரங்கள் உள்ளன என்று எண்ணிவிடலாகாது. உதாரணமாக ஆஸ்திரேலியாவிலுள்ள பாங்குகளிடம் மிகக் குறைந்த அளவே அரசாங்கப் பத்திரங்கள் உள்ளன. ஆஸ்திரேலியாவிலுள்ள பாங்குகளிடமுள்ள அரசாங்கப் பத்திரங்களின் மதிப்பு தென் அமெரிக்க நாடுகளிலுள்ள சில பாங்குகளிடமுள்ள அரசாங்கப் பத்திரங்களின் மதிப்பைவிட மிகக் குறைவேயாகும். தாம் விரும்பிய வண்ணம் தங்களிடமுள்ள நிதிகளை முதலீடு செய்வதற்கான வாய்ப்புகள் ஆஸ்திரேலியாவில் ஏராளமாக இருப்பதால் பாங்குகள் அரசாங்கப் பத்திரங்களில் பெருமளவு முதலீடு செய்வதில்லை.

போதுமான அளவு ரொக்கமும், போதுமான அளவு நீர்மைத் தன்மைச் சொத்துக்களும் பாங்குகளிடம் உள்ளன என்று வைத்துக் கொண்டால், பாங்குகள் யாவும் பெரிதும் விரும்பக்கூடிய ஒரு சொத்தினம் உள்ளது. பாங்குகள் வியாபாரிகட்குக் கொடுக்கும் கடன்களே இச் சொத்தினமாகும். வியாபாரிகட்குக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்யும்போது பாங்குகள் இரண்டு முறை

களைக் கையாளுகின்றன. அதிகப் பற்றுக் கடன் ஒரு முறையாகும். உண்டியலைக் கழிவு செய்வது மற்றொரு முறையாகும். இலண்டனில் (ஓரளவுக்கு வேறு சில நாடுகளிலும்) உள்ள உண்டியல் கட்கும் வேறு நாடுகளில் வரையப்படும் உண்டியல்கட்கும் இடையே பெருத்த வேறுபாடுகள் உள்ளன. இலண்டனில் உள்ள உண்டில்யகளில் பெரும்பாலும் ஏற்பகம் ஒன்றின் புறக் குறிப்பைக் காணமுடியும். உண்டியல்களில் திகழும் ஏற்பகத்தின் புறக் குறிப்புகள் கடனுளியின் நாணயத்தை உறுதி செய்யும் வகையில் அமைந்துள்ளன ஆனால், வேறு நாடுகளில் உண்டியல் முறைக்கும், சாதாரணப் பாங்கு அட்வான்சுகட்கும் இடையே, பெரிதளவில் வேறுபாடு ஏதும் கிடையாது. சில நாடுகளில் உண்டியல் முறை பெரிதும் வழங்கி வருகின்றது; வேறு சில நாடுகளில் பாங்கு அட்வான்சுகள் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன. சில நாடுகள் உண்டியல் முறையையும், சில நாடுகள் பாங்கு அட்வான்சுகளையும் பெருமளவில் பயன்படுத்துவதற்குக் காரணம், வழிவழியாக அந்தந்த நாடுகளில் நிலவிவரும் பழக்கமேயாகும். இருப்பினும், இந்த நாடுகளில் மையப் பாங்குகள் நிறுவப்பட்டபின் அவை உண்டியல் முறையையே ஊக்குவித்து வருகின்றன. இதற்கொரு காரணம் உள்ளது. உண்டியல் சட்ட ரீதியான ஒரு பத்திரமாகும். எனவே உண்டியல் ஒருவர் கையினின்றும் மற்றொருவர் கைக்கு எளிதில் மாறமுடியும். ஆனால் அட்வான்சுகளைப் பொறுத்தவரையில் இது சாத்தியமில்லை. இருப்பினும் பாங்குகள் அட்வான்சுகளைப் பெரிதும் விரும்புகின்றன. பாங்குகளிடமுள்ள சொத்துக்கள் பலவற்றிலும் அட்வான்சுகளே மிகவும் இலாபகரமானவையாகும். அட்வான்சுகளை ஏற்பாடு செய்வதில் பாங்குகளாயினும் சரி, முதலீடு செய்யும் வேறு நபர்களாயினும் சரி, அவர்கட்கு ஒரு சில இழப்புகள் ஏற்பட வாய்ப்புகள் உள்ளன. ஆனால் முதலீடு செய்யும் வேறு நபர்களைவிடப் பாங்குகள் ஒரு விதத்தில் சிறந்து விளங்குகின்றன. அட்வான்சுகள் பெறும் வியாபாரிகளின் நாணயத் தன்மையை அறுதியிடப் பாங்குகட்குப் பல வசதிகள் உள்ளன. ஆனால் முதலீடு செய்யும் வேறு நபர்கட்கு இம்மாதிரியான வசதிகள் கிடையாது. எனவே இச் சொத்தில் (அட்வான்சுகளில்) முதலீடு செய்வதை இவர்கள் விரும்புவதில்லை. பாங்குகள் அட்வான்சுகட்கு அதிகமான வட்டி வீதங்கள் விதிப்பதற்கு இதுவே காரணமாகும். பாங்குகட்கு அட்வான்சுகளின் மூலம் அதிகமான வருவாய் கிடைத்தபோதிலும் இவற்றால் பாங்குகட்குச் சில தீமைகளும் நேரலாம். அட்வான்சுகள் மிகமிகக் குறைவான நீர்மைத் தன்மை உடையவையாகும். மேலும் அட்வான்சுகளை ஒட்டிப் பாங்குகட்குச் சில சமயம் நஷ்டம் ஏற்படலாம். ஆனால் இவ்விரு தீமைகளையும் ஈடு

செய்யும் வகையில் இவற்றிற்குப் பாங்குகள் விதிக்கும் வட்டி வீதம் அதிகமாகத் திகழ்கின்றது. எனவே சில குறிப்பிட்ட வரையறை கட்குட்பட்டு, இதுபோன்ற கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதையே பாங்கர்கள் பெரிதும் விரும்புகின்றனர். அட்வான்சுகள் தருவதற்கான வாய்ப்புகள் நாட்டில் பெருகியிருந்தால் பாங்குகளின் மொத்தச் சொத்துகளில் வியாபாரக் கடன்களே பெரும் பங்குபெறும்; ஏனைய சொத்துகளின் பங்கு மிகக் குறைவாகவே இருக்கும். அட்வான்சுகளுக்கான வாய்ப்புகள் பெருகி இருக்கும் போது பாங்குகள் அவற்றைப் பெருமளவில் பயன்படுத்திக்கொள்ள விரும்பி, தங்களுடைய ரொக்க விகிதங்களைக்கூடக் குறைத்துக் கொள்ள முயலும். (அதாவது தங்களிடமுள்ள ரொக்கம் அதிகமாகாதபோதிலும் தங்களிடமுள்ள மொத்தச் சொத்துக்களைப் பாங்குகள் பெருக்க முயலும்.)

தாங்கள் அட்வான்சுகட்கு விதிக்கும் வட்டி வீதத்தைவிட மிகக் குறைந்த வீதத்தில் முதல் தரமான உண்டியல்களைப் பாங்குகள் கழிவு செய்கின்றன. ஏற்பகம் ஒன்றின் புறக்குறிப்புடன் திகழும் உண்டியலே முதல்தரமான உண்டியலாகும். ஏற்பகத்தின் புறக்குறிப்பு பொறிக்கப் பெற்றுள்ள உண்டியல்களையே வாணிகப் பாங்குகள் குறைந்த கழிவு வீதத்தில் விலைக்கு வாங்க முன் வருகின்றன. கடனாளி உண்டியலுக்கான பணத்தைக்கொடுக்கத் தவறினால் ஏற்பகத்திடமிருந்து உண்டியலுக்கான பணத்தை உடனடியாகப் பாங்கால் பெறமுடியும். கடனாளிகளின் நாணயத் தன்மையை முன்கூட்டியே ஆராய்ந்து வைத்துக்கொள்வதே ஏற்பகத்தின் ஒரு முக்கியமான பணியாகும். தன்னிடம் அட்வான்சுகள் பெற வரும் வியாபாரிகட்கு அட்வான்சுகளை ஏற்பாடு செய்யுமுன் பாங்கரும் இதுபோன்ற செயலிலேயே ஈடுபடுகின்றார். அதாவது வியாபாரியின் நாணயத் தன்மையைப் பாங்கர் அறிய முயலுகின்றார். உண்டியல்களினின்றும் கிடைக்கக் கூடிய வருவாய் குறைவாக இருப்பினும் உண்டியல்களை எளிதில் பிறரிடம் மாற்றிவிட முடியும். எனவே, உண்டியல்கள் சிலவற்றைத் தம்மிடம் இருப்பாக வைத்திருப்பதைப் பாங்குகள் பெரிதும் விரும்புகின்றன. அட்வான்சுகளினின்றும் கிடைப்பதைவிட உண்டியல்களினின்றும் கிடைக்கக்கூடிய வருமானம் குறைவானதேயாகும். இதேபோல இடைக்கால அரசாங்கப் பத்திரங்கள், நெடுங்கால அரசாங்கப் பத்திரங்கள் ஆகியவற்றினின்றும் கிடைப்பதைவிட உண்டியல்களினின்றும் கிடைக்கும் வருமானம் குறைவானதாகும். ஆனால் இடைக்கால அரசாங்கப் பத்திரங்கள், நெடுங்கால அரசாங்கப் பத்திரங்கள் ஆகியவற்றினின்றும் கிடைப்பதைவிட அட்வான்சுகளின்மூலம் கிடைக்கக்கூடிய வருமானம் அதிகமானதாகும்.

பெரும்பாலும் உலகிலுள்ள பாங்குகள் யாவும் தங்களுடைய சொத்துக்களை நாம் கீழே கொடுத்துள்ளது போலத்தான் வகைப் படுத்தி வைத்திருக்கின்றன. ரொக்கம், கழிவு செய்யப்பட்ட உண்டியல்கள், அட்வான்சுகள் மற்றும் முதலீடுகள் (இவை பெரும் பாலும் அரசாங்கப் பத்திரங்களேயாகும்), பாங்குகள் யாவும் தங்களிடம் ரொக்கம் வைத்திருக்கவேண்டியது அவசியமாகும். உண்டியல்கள் சிலவற்றைப் பெரிதும் விரும்பிப் பாங்குகள் அவற்றைத் தம்மிடம் இருப்பாக வைத்திருக்கின்றன. உண்டியல்களினின்றும் கிட்டும் வருவாய் குறைவாக இருப்பினும் அவற்றை எளிதில் பிறரிடம் மாற்றிவிட முடியும். அட்வான்சுகளினின்றும் கிடைக்கக் கூடிய வருவாய் அதிகமாக இருப்பதால், அவற்றைப் பாங்குகள் பெரிதும் விரும்புகின்றன. பெரும்பாலும் பிறரிடம் மாற்றவேண்டிய அவசியமின்றி நெடுநாட்கள் பாங்குகளிடமே தங்குகின்ற ஊதியச் சொத்துக்களே (earning assets) முதலீடுகளாகும். சொத்துக்களின் பகிர்வைப் பொறுத்த வரையில் பல்வேறு நாடுகளிலு முள்ள வாணிகப் பாங்குகள் கையாண்டுவரும் முறைகள் பெரிதும் வேறுபடுகின்றன என்று ஏற்கெனவே கண்டோம். இது தவிர வேறு ஒரு முக்கியமான வேறுபாட்டையும் பல்வேறு நாடுகளிலு முள்ள பாங்கு முறைகட்கிடையே காணலாம். பாங்குகள் எந்தெந்த உபயோகங்கட்கு வாடிக்கைக்காரர்கட்கு அட்வான்சுகளை ஏற்பாடு செய்ய விரும்புகின்றனவோ, அவை நாட்டிற்கு நாடு வேறுபடுகின்றன. இங்கிலாந்திலுள்ள பாங்குகள் எந்தெந்த உபயோகங் கட்கு வழிவழியாகக் கடன்களை ஏற்பாடு செய்து வந்துள்ளன என் பதை இனிக் காண்போம். கச்சாப் பொருள்கள் வாங்கவும், தொழி லாளர்கட்கு ஊதியம் வழங்கவும் பயன்படும் நடைமுறை மூலதனத் திற்கான (working capital) பணத்தையே தங்களுடைய வாடிக் கைக்காரர்கட்குக் கடனாகக் கொடுப்பதை இங்கிலாந்திலுள்ள பாங்குகள் விரும்புகின்றன. வியாபாரி ஒருவர் பாங்கர் ஒருவரை அணுகிக் கடன் கேட்கும்போது வியாபாரி கேட்கும் கடன் சுய தீர்வு பெறக்கூடிய கடன்தானா என்று முடிவு கட்டியபின்தான், பாங்கர் அந்த வியாபாரிக்குக் கடன்தர முன்வருகிறார். ஆனால் தொழிற்சாலை விரிவுத் திட்டம், புதிய இயந்திரங்களை வாங்குவது ஆகிய உபயோகங்கட்குப் பாங்குகள் பொதுவாகக் கடன் தர விரும்புவதில்லை. சுருங்கக் கூறின் நிலை முதற்பொருள்களை (fixed capital) வாங்குவதற்குப் பயன்படும் பணத்தைத் தன்னிடம் பெற முனையும் வியாபாரிக்குப் பாங்கர் கடன்தர மறுக்கின்றார். இது பொதுவாக இங்கிலாந்துப் பாங்குகள் கடைப்பிடித்துவரும் நடைமுறை விதிகளாகும். இப்பொதுவான விதிக்குச் சில விலக்குகளும் உள்ளன. தனக்குத் தேவைப்படும் நெடுங்காலக் கடனை உடனடியாகப் பெறமுடியாத ஒரு நிறுவனம் பாங்கை அணுகி

உதவி கோரினால் பாங்கு இந்த நிறுவனத்திற்குக் கடன் தர முன் வருகின்றது. பிறிதொரு நிதி நிறுவனத்திடமிருந்து இந்நிறுவனம் நெடுங்காலக் கடனைப் பெறும்வரையிலேயே, பாங்கு இந்நிறுவனத்திற்குக் கடன் தர முன்வருகின்றது. தொழிலகங்கள் நிலைமுதற் பொருள்களை வாங்குவதற்கு வசதியாக இங்கிலாந்திலுள்ள ஒரு சில பாங்குகள் அவ்வப்போது கடன் வசதிகளை அவற்றிற்கு ஏற்பாடு செய்து வந்திருக்கின்றன. உதாரணமாக இரண்டு உலகப் போர்கட்கும் இடைப்பட்ட காலத்தில் துணி ஆலைகளின் மூலதன வளர்ச்சிக்குப் பாங்குகள் கடன்தர முன் வந்தன. நாட்டில் அவ்வமயம் பொருளாதார வீக்கம் (boom) உச்சநிலையை அடைந்திருந்ததை ஒட்டிச் சில பாங்குகள் மிகத் தாராளமாகவே நடந்துகொண்டன. எனினும் நாம் ஓர் உண்மையை உணரவேண்டும், அவ்வமயம்கூடப் பாங்குகள் நெடுங்காலக் கடன்களை ஏற்பாடுசெய்ய முன்வரவில்லை குறுகிய காலத்திற்கே இத்தகைய கடன்களைப் பாங்குகள் ஏற்பாடு செய்தன. எனவே, பாங்குகளின் அடிப்படைக் கொள்கையில் (குறுகிய காலத் தேவைகட்கே கடன் ஏற்பாடு செய்வது பாங்குகளின் கொள்கையாகும்.) மாற்றம் ஏதும் நேரவில்லை. தாங்கள் ஏற்பாடு செய்யும் கடன்கள் சுய தீர்வு பெறும் கடன்களாகவே இருக்க வேண்டும் என்று பாங்குகள் கருதுகின்றன. எனவே, அவை பொதுவாக நெடுங்காலக் கடன்களை ஏற்பாடு செய்ய விரும்புவதில்லை. குறுங்காலம், நெடுங்காலம் என்று கால வரையறை செய்து இந்தக் காலவரையறைகளையே கருத்தில்கொண்டு இங்கிலாந்திலுள்ள பாங்குகள் கடன்களைக் கொடுக்க முன்வருவது சரி என்றுபடவில்லை. தாங்கள் கொடுக்கும் கடன்களால் தங்கட்கு இழப்பு நேர வாய்ப்பு உண்டா, அல்லது இல்லையா என்பதைப்பற்றி இங்கிலாந்திலுள்ள பாங்குகள் சிறிதும் சிந்திக்காமல் கடன்களை ஏற்பாடு செய்து வந்துள்ளன. இது வருந்தத்தக்கதேயாகும். குறுங்காலக் கடன் ஆபத்தே இல்லாத கடன்; நாட்டில் நிலவுகின்ற பணவீக்க நிலையைக் குறுங்காலக் கடனால் ஊக்குவிக்கவே முடியாது; எனவே, பணவீக்க நிலையின் உச்சக் கட்டத்தைத் தொடர்ந்து நேரக்கூடிய பொருளாதாரச் சிதைவைக் (crash) குறுங்காலக் கடன் நிச்சயம் ஏற்படுத்தாது என்று பாங்கர்கள் அவ்வமயம், அதாவது இரண்டு உலகப் போர்கட்கும் இடைப்பட்ட காலத்தில், வீக்க நிலை தோன்றியிருந்த சமயம் எண்ணினர்.[1] இவ்வாறு அவர்கள்

[1] பாங்கர்கள் கொண்டிருந்த இக் கருத்து தவறான கருத்து என்பதைப் பொருளாதார நிபுணர்கள் பல வழிகளில் நிரூபித்துள்ளனர். பொருளாதார நிபுணர்களின் கருத்துக்களை நாம் கீழே கொடுத்துள்ள புத்தகங்களில் காணலாம். Robertson's classic passage on the 'Four Crucial Fractions' in his 'Money, and Machlup's The Liquidity of short-term capital." (Economica, 1932: p. 271 )

எண்ணியதால் தாங்கள் மூலதன வளர்ச்சிக்குக் கடன் கொடுப்பது தங்களுக்கே ஆபத்து என்று பாங்கர்கள் உணரவில்லை. எனவே, தத்தளித்துத் 'தள்ளாடிக்'கொண்டிருந்த தொழிலகங்களின் மூலதன வளர்ச்சிக்குப் பாங்குகள் தற்காலீகமாகக் கடன் கொடுத்தன.

வாடிக்கைக்காரர்கட்குக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்யும் போது பாங்குகள் கையாண்டு வருகின்ற விதிமுறைகளில் இந் நூற்றாண்டில் பெருமளவு மாற்றங்கள் நேர்ந்துள்ளன. தொழிலகங்களின் மூலதன வளர்ச்சிக்குப் பயன்படக்கூடிய நெடுங்காலக் கடன்களை அளிப்பதைத் தற்காலத்திலும் பாங்குகள் விரும்பவில்லை. ஆனால் மூலதன வளர்ச்சிக்குத் தேவைப்படும் குறுகிய காலக் கடன்களைத் தற்சமயம் பாங்குகள் தர முன்வந்துள்ளன. எதிர்காலத்தில் தங்கட்கு ஒரு குறிப்பிட்ட வருமானம் கிடைக்கும் என்று நம்பும் தனிப்பட்ட நபர்கள் பாங்குகளை அணுகிக் கடன் கேட்டால், தாங்கள் பெற விரும்பும் கடன்கட்கு முதல் தரமான துணையீடுகளை (collateral security) அவர்கள் தரத் தயாராக இருந்தால் அவர்கட்குப் பாங்குகள் தயக்கமின்றி கடன்வசதிகளை ஏற்பாடு செய்து வருகின்றன. நிலபுலன் போன்ற சொத்துக்கள் ஆயுள் இன்சூரன்சுப் பாலிசிகள் ஆகியவற்றை முதல்தரமான துணையீடுகள் என்று பாங்குகள் கருதுகின்றன. மோட்டார் வாகனம் ஒன்று வாங்குவதற்குத் தனக்குத் தேவைப்படும் பணத்தை பாங்கிடம் கடனாக வாங்க விரும்பும் ஒரு வர்த்தகர் இன்சூரன்சுப் பாலிசி ஒன்றினைப் பாங்கிடம் ஈடாகக் கொடுக்க முன் வரும்போது அவருக்குத் தடையின்றிப் பாங்கு கடன் வசதிகளை ஏற்பாடு செய்கின்றது. இன்சூரன்சுப் பாலிசியின் 'கைவிட்ட மதிப்பானது (surrender value) பாங்கு கடனாகக் கொடுக்கும் தொகையைவிட அதிகமாக இருப்பதால் இம்மாதிரியான கடன்களால் பாங்குக்கு எவ்வித நஷ்டமும் ஏற்பட வாய்ப்பு இல்லை.[1] வீடு, நிலபுலன் ஆகிய சொத்துக்களின்மீது அவற்றிற்குச் சொந்தக்காரருக்கான பாத்தியதைகளைக் குறிக்கும் உரிமைப் பத்திரங்களை' (title-deeds) இன்சூரன்சுப் பாலிசிகளைப் போலவே சிறந்த துணையீடுகள் என்று கருத முடியாது. இருப்பினும் நடப்புக் காலத்தில் அச் சொத்து என்ன விலை பெறும் என்றுதான் மதிப்பிடும் தொகை, தான் கொடுக்கும் கடன் தொகையைவிட மிகவும் அதிகமாக இருந்தால், பாங்கர் தடையின்றிக் கடன் தர முன்வருகிறார். அதிகாரிகள், தொழிலதிபர்கள், வர்த்தகர்கள்

1 தம்முடைய தொழிலை விரிவாக்கும் நோக்கத்துடனேயே வர்த்தகர் மோட்டார் வாகனம் வாங்க விரும்புகிறார். இருப்பினும், இவ்வாறு தொழிலை வர்த்தகர் விரிவாக்க முயலுவது வர்த்தகருக்கு ஆதாயகரமாக இருக்குமா, என்று விவேகமுள்ள பாங்கர் ஒருவர் எண்ணத் தலைப்படுவார்.

ஆகியோருடன் பாங்கருக்கு நெருங்கிய தொடர்பு ஏற்பட்டிருந்து, இவர்களெல்லோரும் நாணயமானவர்கள் என்று அறிந்திருந்தால் துணையீடு ஏதும் பெருமலேயே இவர்கட்குக் கடன் தரப் பாங்கர்கள் முன்வருகின்றனர். 19ஆம் நூற்றுண்டில்கூட இதுபோன்ற கடன் வசதிகளைப் பாங்குகள் ஏற்பாடு செய்துவந்தன. இருப்பினும் இதுபோன்ற கடன் வசதிகளைப் பாங்குகள் ஏற்பாடு செய்ய முன்வந்ததை அக்காலத்தில் தாங்கள் எழுதிய புத்தகங்களிலும் நிகழ்த்திய சொற்பொழிவுகளிலும் பாங்கர்கள் வன்மையாகக் கண்டித்தனர். ஆனால் இதுபோன்ற கடன்வசதிகளைத் தற்காலத்தில் பாங்குகள் ஏற்பாடு செய்து வருவதைத் தாங்கள் எழுதியுள்ள புத்தகங்களில் தற்காலப் பாங்கர்கள் கண்டித்திருப்பதாகத் தெரியவில்லை. தங்களுடைய புத்தகங்களில் இவற்றைக் கண்ணியமான பேரங்கள் என்றே இந்தப் பாங்கர்கள் குறித்துள்ளனர். நடைமுறைக்கு ஒவ்வாத பழக்க வழக்கங்களின் அடிப்படையில் கடன் வசதிகளைத் தாங்கள் ஏற்பாடு செய்வதைவிட நஷ்டம் ஏற்பட வாய்ப்பே இல்லாத இதுபோன்ற கடன் வசதிகளைப் பாங்குகள் ஏற்பாடு செய்வதால் கேடு ஏதும் நேராது. பாங்குகட்கு நன்மையே விளையும்.

எனினும் ஓர் உண்மையை யாம் ஈண்டு வலியுறுத்த விரும்புகிறோம். நடைமுறைக்கு ஒவ்வாத பழக்க வழக்கங்களைப் பாங்குகள் அகற்றிவிடுவது நன்மையானதாக இருக்கலாம். ஆனால் பாங்கர்களும் மனிதர்கள்தாம் என்பதை நாம் மறந்துவிடலாகாது. எனவே அவ்வப்போது பொருளாதார அமைப்பில் நேரக்கூடிய மாற்றங்கட்கு அவர்கள் அடிமையாகிவிட நேரலாம். நாட்டில் வீக்கநிலை உலவும்போது பாங்கர் மிகுந்த உற்சாகத்தோடு கடன் தர முன்வருவதால் நஷ்டம் ஏற்படக்கூடிய வாய்ப்புகளை அவர் குறைவாகவே மதிப்பிடலாம். இதேபோல மந்தநிலை நாட்டில் தவழும்போது பாங்கர்கள் உற்சாகமிழந்து இருப்பதால் நஷ்டம் ஏற்பட வாய்ப்புகளே இல்லாத சூழ்நிலையையும் நஷ்டம் ஏற்படப் பெரும் வாய்ப்புகள் உடைய சூழ்நிலையே என்று பாங்கர்கள் தப்புக் கணக்குப் போட நேரலாம். 1920-1929-க்கு இடைப்பட்ட காலத்தில் அமெரிக்கப் பாங்குகள் பெரும் நஷ்டங்களை அடைந்தன. வீடு நிலபுலன்கள் போன்ற சொத்துகட்கு ஈடாக அவை கடன் கொடுத்திருந்ததால் அவைகட்கு இவ்வாறான ஒரு கேடு நேர்ந்தது என்று கூறுவது பொருந்தாத கூற்றாகும். தற்காலிகமாக நிலவிய வாய்ப்பான வளமான சூழ்நிலையை, என்னென்றும் நீடித்திருக்கக்கூடிய வாய்ப்பான வளமான சூழ்நிலை என்று பாங்குகள் தப்புக் கணக்குப் போட்டதால் அவை நஷ்டமுற்றன. இம்மாதிரியான ஆபத்துகளினின்றும் தங்களைக் காத்துக் கொள்வ

தற்குத் திட்டவட்டமானதும் விரிவானதுமான விதிமுறைகளைப் பாங்குகள் வகுத்துக் கொள்வதென்பது சாத்தியமில்லை.

19ஆம் நூற்றாண்டில் தாங்கள் கடைப்பிடித்து வந்த விதிமுறைகள், குறைகள் உடையவை என்று தற்சமயம் பாங்கர்கள் உணர்ந்துள்ளனர். எனவே தம் நடவடிக்கைகளைத் தற்சமயம் பாங்கர்கள் மாற்றி அமைத்து வருகின்றனர். இருப்பினும் (இங்கிலாந்து நீங்கலாக உள்ள) ஐரோப்பாக் கண்டத்தில் 19ஆம் நூற்றாண்டில் பாங்குகள் கையாண்ட முறைகளை இங்கிலாந்துப் பாங்கர்கள் தற்சமயம் கையாளும் நிலைமையில் மாற்றம் நேராது என்றே தோன்றுகின்றது. ஐரோப்பாக் கண்டத்தில் 19ஆம் நூற்றாண்டில் தொழிற்சாலைகட்குத் தேவைப்பட்ட எல்லா வகைக் கடன்களையும் ஏற்பாடு செய்வதில் பாங்குகள் மிகுந்த ஆர்வம் காட்டின. எனவே, 19ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் பாங்குகள் கடைப்பிடித்த முறைகளும், ஐரோப்பாக் கண்டத்தில் பாங்குகள் கடைப்பிடித்துவந்த முறைகளும் வேறுபட்டு விளங்கின. எனினும் இந்த முறைகளும், இரண்டு மாறுபட்ட கோட்பாடுகளின் அடிப்படையில் தோன்றியவை என்று எண்ணிவிடலாகாது. இங்கிலாந்திலும், ஐரோப்பாக் கண்டத்திலும் வெவ்வேறாக உருவாகிய பொருளாதார மாற்றங்களே இந்த வேறுபாட்டிற்கான உண்மையான காரணங்களாகும். இங்கிலாந்தில் நேர்ந்ததைவிட ஐரோப்பாக் கண்டத்தில் தொழில் வளர்ச்சி வெகு வேகமாக நடைபெற்றது. அங்கே 'பேரளவு' (large scale) நிறுவனங்கள் அதிவிரைவில் வளர்ச்சியுற்றன. இங்கிலாந்தில் தோன்றிய தொழிற்சாலைகட்குக் கிடைத்ததைப் போலவே இந்தப் பேரளவு நிறுவனங்கட்கும் சிறு சிறு அளவிலேயே மூலதனக் கடன் வசதிகள் கிடைத்திருந்தால் அவை போதுமானவையாக இருந்திரா. ஐரோப்பாக் கண்டத்தில் நிறுவப்பட்ட பாங்குகள் யாவும் ஒரு குறிப்பிட்ட நோக்கத்துடனேயே நிறுவப்பட்டன. பொதுமக்களின் சேமிப்பை ஒன்று சேர்ப்பதன்மூலம் அதிவிரைவில் வளர்ந்துவந்த புதிய தொழிற்சாலைகட்குத் தேவைப்பட்ட மூலதனத்தைத் தங்களால் திரட்ட முடியும் என்று பாங்குகள் நம்பின.[1] இந்த நோக்கத்தின் அடிப்படையிலேயே அங்குப் பாங்குகள் ஏற்படுத்தப்பட்டன. தொழிற்சாலைகட்குத் தேவைப்பட்ட நடைமுறை மூலதனத்தை அளித்ததோடு, தொழிற்சாலைகளின் மூலதன வளர்ச்சிக்குத் தேவைப்பட்ட

[1] பாங்குகள் தொழிலகங்களுடன் ஏற்படுத்தியிருந்த தொடர்புகள் ஐரோப்பாக் கண்டத்திற்கும், இங்கிலாந்திற்கும் இடையே வேறுபட்டு விளங்கியது உண்மை தான். இருப்பினும், இவ் வேறுபாடுகளைச் சிலர் மிகைப்படுத்தியே கூறிவந்துள்ளனர். நாம் மேலே கொடுத்துள்ள விளக்கம் பொதுவான விளக்கமாகமேயன்றி முழு அளவிலான விளக்கமாகாது என்பதை இங்கு நாம் குறிப்பிட விரும்புகிறோம்.

கடன்களையும் பாங்குகள் ஏற்பாடு செய்துவந்தன. ஜெர்மானியப் பாங்குகள் அம்மாதிரியான பாங்குகட்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தன. தொழிற்சாலைகள் ஆரம்பிப்பதற்குத் தேவைப்பட்ட மூலதனத்தை ஜெர்மனியில் பாங்குகளே ஏற்பாடு செய்தன. தொழிற்சாலைகள் சிறந்த முறையில் செயலாற்றத் தொடங்கியதும் அவற்றின் பங்குகளைப் பாங்குகள் விற்பனை செய்தன பின்தங்கியுள்ள நாடுகளில் தொழிற்சாலைகட்குத் தேவைப்படும் நெடுங்காலக் கடன்களைப் பாங்குகள் நீண்ட காலங்கட்கு ஏற்பாடு செய்து வரும் என்று நாம் எதிர்பார்க்கலாம். தொழில்கங்களின் மூலதன வளர்ச்சிக்குத் தேவைப்படும் நெடுங்காலக் கடன்களை ஏற்பாடு செய்வதற்கென்றே பிரான்ஸில் தனித் திறமை வாய்ந்த சில நிறுவனங்கள் உள்ளன. இந்த நிறுவனங்கட்கும் வாணிகப் பாங்குகட்கும் இடையே பெருமளவு வேறுபாடுகள் உள்ளன.

1930 ஆம் ஆண்டுக்கு முன் ஐரோப்பாக் கண்டத்தில் பாங்குகள் கடைப்பிடித்துவந்த முறைகளையே வியாபாரிகள் பெரிதும் விரும்புவதில் ஆச்சரியம் ஏதுமில்லை. இங்கிலாந்தில் தங்கட்குத் தேவைப்பட்ட நெடுங்கால மூலதனத்தைப் பாங்குகளிடமிருந்து கடனாகப் பெறமுடியாத சிறு நிறுவனங்கள் ஐரோப்பாக் கண்டத்தில் தம்மைப் போன்ற சிறு நிறுவனங்கள் பாங்குகளிடமிருந்து தேவைப்பட்ட கடன் வசதிகளைப் பெற்று வந்ததைக் கண்டு பொறுமைப்பட்டன. 'சுயதீர்வு பெறும் கடன் கோட்பாடு' தவறு என்று நாம் கூறுவதை ஒட்டி 1930-க்கு முன் ஐரோப்பாக் கண்டத்தில் பாங்குகள் கடைப்பிடித்துவந்த முறைகளைத் தற்சமயம் இங்கிலாந்திலுள்ள பாங்குகள் கடைப்பிடிக்க முயலுவது நல்லது என்று யாரும் தவருக முடிவு கட்டிவிடக்கூடாது. வாடிக்கைக்காரர்கட்குக் கடன் வசதிகள் ஏற்பாடு செய்து தருவதை ஒட்டித் தங்கட்கு நஷ்டம் ஏதும் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டியதே பாங்கர்கள் மிகவும் முக்கியமாக கவனிக்கவேண்டிய ஒரு விஷயமாகும். ஒரு தொழிலகத்திற்குத்தான் நெடுங்காலக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதால் அத்தொழிற்சாலையின் வாழ்வு தாழ்வுகளில் தான் நெடுங்காலத்திற்கு அக்கறை கொள்ள வேண்டியிருக்கும் என்பதைப் பாங்கு மறந்துவிடலாகாது. எதிர்காலத்தில் நேரக் கூடியவற்றைப் பாங்கால் முன்கூட்டியே கணக்கிட முடியாது. எனவே நெடுங்காலக் கடன்களால் தனக்கு எதிர்காலத்தில் நேரக்கூடிய நஷ்டத்தைப் பாங்கால் முன்கூட்டியே கணக்கிட முடியாது. குறுங்காலக் கடன்களையே பாங்குகள் ஏற்பாடு செய்வது உசிதமானது என்னும் உண்மையே வழிவழியாக இங்கிலாந்து பாங்குகளால் போற்றிப் பாதுகாக்கப்பட்டு வரும் உண்மையாகும். இக்கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு பாங்குகள்

செயலாற்றி வருவதே உகந்தது என்று தோன்றுகிறது. இக் கட்டுப்பாட்டைப் பாங்குகள் துச்சமாக மதித்தால் தொழிலகங்கட்கு நெடுங்காலக் கடன்களை ஏற்பாடு செய்யவேண்டிய நிலை நேரும். 1930-க்கு முன் ஐரோப்பாக் கண்டத்தில் கலப்புப் பாங்கு முறை (mixed banking) கடைப்பிடிக்கப்பட்டது. வழி வழியாக இங்கிலாந்தில் கடைபிடிக்கப்பட்டு வரும் பாங்கு முறையினின்றும் கலப்பு பாங்கு முறை முற்றிலும் வேறுபட்டதாகும். எனவே கலப்புப் பாங்கு முறை வெற்றி அளிக்கவில்லை. 1929 ஆம் ஆண்டுக்குப்பின் உலகில் ஒரு பெருமந்தம் (great slump) உருவாகியது. இம் மந்த நிலையின்போது தொழிலகங்கள் பல நொடித்தன. கலப்புப் பாங்குகள் இத் தொழிலகங்கட்குப் பெருமளவில் நெடுங்காலக் கடன்கள் தந்திருந்தன. எனவே, கலப்புப் பாங்குகளும் பெருமளவில் நொடித்தன. பெருமந்தம் உலவும் காலங்களில் பாங்குகள் சில நொடித்துப் போகும்படி நேருவது இயற்கையே. ஆனுல் 1929 ஆம் ஆண்டுக்குப்பின் உருவான பெருமந்தத்தின்போது பல பாங்குகள் நொடித்தன. இதற்கு முக்கிய காரணம் கலப்புப் பாங்கு முறையே யாகும். அதிகாரிகளும் இவ்வாறே கருதினர். எனவே கலப்புப் பாங்கு முறையைத் தடை செய்யும் வகையில் பல சட்டங்கள் இயற்றப்பட்டன. 1930-க்கு முன் டெபாசிட்டுப் பாங்கு வேலைகளையும், (அதாவது குறுங்காலங்கட்கு டெபாசிட்டுக்களை ஏற்றுக் கொள்ளுதலும், குறுங்காலங்கட்குக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்தலும்), தொழிலகங்கட்கு நெடுங்கால மூலதனக் கடன்களை ஏற்பாடு செய்யும் வேலைகளையும் கலப்புப் பாங்குகள் தம்மிடம் இணைத்திருந்தன. ஆனுல் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டபின் இவ்விரு தரத்தனமான வேலைகளும் தனித்தனியே துண்டிக்கப்பட்டன. தற்சமயம் இவ்விரு வகையான பணிகளையும் தனித்தனி நிறுவனங்கள் ஆற்றி வருகின்றன.[1] பெரு மந்த நிலை ஏற்பட்ட காலத்திலும்கூட இங்கிலாந்துப் பாங்குகள் பெரிதும் பாதிக்கப்படவில்லை. அவை நிலைமையை மிகச் சாதுரியமாகச் சமாளித்தன. இங்கிலாந்துப் பாங்கு முறையின் ஆற்றலைக் கண்டு வியந்து ஏனைய நாடுகளும் டெபாசிட்டுப் பாங்கு முறையைத் தூய்மைப்படுத்தும் பணியில் (டெபாசிட் பாங்கு முறை தொழிலகங்கட்கு ஏற்பாடு செய்து வந்த நெடுங்காலக்கடன்கள் என்ற களைகளைக் களையும்பணியில்) ஆர்வத்துடன் ஈடுபட்டன.

[1] அமெரிக்கப் பாங்குகளும் முன்பு நெடுங்காலக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்துவந்தன. 1930-க்குப் பின் அமெரிக்காவில் பாங்குகளின் டெபாசிட்டுப் பாங்கு வேலையும் தொழிலகங்கட்கு நெடுங்காலக் கடன்தரும் வேலையும் தனித் தனியே துண்டிக்கப்பட்டன. ஆனுல் வேறு காரணங்கள் சட்டங்கள் நிறைவேற்ற அமெரிக்க அதிகாரிகட்குத் தூண்டுகோலாக அமைந்தன.

சிறந்த பாங்கு முறைக்கு ஆதாரமாக அமையக்கூடிய முறைகளைக் கடைப்பிடிப்பதில் உலகிலுள்ள பாங்கு முறைகள் ஒன்றுக்கொன்று வேறுபடலாம். எனினும் ஒரு குறிப்பிட்ட விஷயத்தைப் பொறுத்த வரையில் தற்சமயம் உலகிலுள்ள பாங்கு முறைகள் யாவும் ஒத்த நோக்கு உடையனவாய் விளங்குகின்றன. தொழிலகங்கட்கு நெடுங் காலக் கடன்களை ஏற்பாடு செய்வதை இங்கிலாந்துப் பாங்கர்கள் எக்காலத்தும் விரும்பியதில்லை. இதே போலத் தற்சமயம் உலகிலுள்ள பாங்கர்கள் யாவரும் தொழிலகங்கட்கு நெடுங்காலக் கடன்களை ஏற்பாடு செய்வதை விரும்பவில்லை. குறுங்காலக் கடன்களை ஏற்பாடு செய்வதுதான் தங்கள் நோக்கம் என்று இங்கிலாந்துப் பாங்குகள் நெடுநாள் தொட்டு விளம்பிவருகின்றன. இதைப் போலவே தற்சமயம் உலகிலுள்ள பாங்கர்கள் யாவரும் குறுங்காலக கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதையே பெரிதும் விரும்புகின்றனர்; புதிய தொழிலகங்கள் நிறுவப்பெறும் போது அவை விரும்பும் நெடுங்காலக் கடன்வசதிகளை அளிக்க மறுத்து, அத் தொழிலகங்கள் சிறந்த முறையில் வெற்றிகரமாகச் செயலாற்றத் தொடங்கியதும் அவற்றிற்குத் தேவைப்படும் குறுங்காலக் கடன்களை விருப்பத்துடன் ஏற்பாடு செய்ய முன்வரும் பாங்கரே, பாங்கர்கட்கு ஓர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறார் என்று நாம் கூற முடியும். இங்கிலாந்திலுள்ள கிளை பாங்குகளின் மேல் சிறு தொழிலதிபர்கள் நெடு நாட்களாக ஒரு குறையைச் சுமத்தி வந்துள்ளனர். 19 ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் தோன்றியிருந்த 'தனியார் பாங்குகள்' (private banks) சிறு தொழில் அதிபர்கள் விரும்பிய வண்ணமே கடன்வசதிகளை அளித்து வந்தனர். கிளை பாங்குகள் இது போன்ற வசதிகளை அளிக்க முன் வரவில்லை. இதை ஒரு குறையாக எண்ணிச் சிறு தொழிலதிபர்கள் கிளை பாங்குகளின் மீது குற்றஞ் சாட்டுகின்றனர். ஆனால் இங்கு நாம் ஓர் உண்மையை அறிய வேண்டும். கிளை பாங்குகளின் நடவடிக்கையில் புதுமை ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. ஏனெனில் தற்சமயம் உலகிலுள்ள பாங்குகள் யாவும் பெரும்பாலும் இதே நோக்குடையவைகளாகவே உள்ளன. குற்றச்சாட்டுகளினின்றும் தங்களை விடுவிக்கப் பாங்குகள் தங்கள் நடவடிக்கைகளில் புரட்சிகரமான மாற்றங்களைச் செய்து 1930-க்கு முன் ஐரோப்பாக் கண்டத்தில் கடைப்பிடிக்கப்பட்ட முறைகளைக் கைக்கொள்ள வேண்டும் என்று நாம் கூறமாட்டோம். எனவே பாங்கர்கள் இவ்வாறு நடந்துகொள்வதில் தவறொன்றுமில்லை என்றே தோன்றுகிறது. பாங்கர்கள் ஏற்பாடு செய்ய விரும்பாத இத்தகைய கடன் வசதிகளைத் தனித் திறமை வாய்ந்த நிறுவனங்கள் (specialist institutions) ஏற்பாடு செய்ய முன் வர வேண்டும். இம்மாதிரியான நிறுவனங்கள் ஏற்கெனவே சில தோன்றியுள்ளன. உதாரணமாக

இங்கிலாந்தில் விவசாய அடைமான பாங்கு (Agricultural Mortgage Bank) தோன்றியுள்ளது. வேறு நாடுகளிலும் 'கிராமக் கடன் வசதிப் பாங்குகள்' (Rural Credit Banks) தோன்றியுள்ளன. பலரகப்பட்ட கடனாளிகளின் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்யும் நோக்கத்துடன் பெல்ஜியத்தில் தனித்திறமை வாய்ந்த நிறுவனங்கள் பல தோன்றியுள்ளன. தொழிலகங்கள் விரும்பும் கடன்வசதிகளை அளிக்கும் நோக்கத்துடனும், பல தனித் திறமை வாய்ந்த நிதி நிறுவனங்கள் தோன்றியுள்ளன. உதாரணமாக 1930-39-க்கு இடைப்பட்ட காலத்தில் பிரிட்டனில் 'தொழில் கடன் நிறுவனம்' (Credit for Industry) ஒன்றும் 'பாங்கர்கள் நிறுவிய தொழில் வளர்ச்சிக் கம்பெனி' (Bankers' Industrial Development Company) ஒன்றும் தோன்றின. 1945 ஆம் ஆண்டு தொழில் நிதிக் கம்பெனிகள் இரண்டு பிரிட்டனில் நிறுவப்பட்டன. அதிகாரிகளின் முயற்சியால் பாங்குகளின் நிதி உதவியோடு இவ்விரு கம்பெனிகளும் நிறுவப்பட்டன. அமெரிக்காவில் 'தொடர்புப் பாங்கு முறை' ஏற்பட்டுள்ளதை ஒட்டித் தங்களுடன் தொடர்புகள் ஏற்படுத்தியுள்ள வேறு சில பாங்குகளுடன் சேர்ந்து அமெரிக்கப் பாங்குகள் தொழிலகங்கட்கு நிதி உதவி செய்துவருகின்றன. இதற்கு ஏற்றவகையில் அமெரிக்கப் பாங்குகள் தங்களிடம் தனித் திறமை வாய்ந்த துறைகளை நிறுவியுள்ளன. 'தொழிலகங்கள் பற்றிய ஆலோசனை வழங்கும் துறைகள்' (industrial consultant departments) என்று இத் தனித் திறமை வாய்ந்த துறைகள் பெயர் பெறுகின்றன.

## 5. பாங்குக் கடன்களுக்கான தேவையில் நேர்ந்துள்ள மாற்றங்கள்

தற்சமயம் பலவித உபயோகங்கட்கும் பாங்கர்கள் கடன்தர முன்வந்துள்ளனர் என்று மேலே கண்டோம். இவ்வாறு புதிதாக பாங்கர்களால் ஏற்பாடு செய்யப்பட்டுவருகின்ற கடன் வசதிகளில் தவணைக் கடன் வசதியும் (instalment credit) ஒன்றாகும். இந் நூற்றாண்டில் மோட்டார், ரேடியோ, டெலிவிஷன், துணிவெளுக்கும் இயந்திரம், குளிர்ப்பதனப் பெட்டி ஆகிய நீடித்த நுகர்வுப் பொருள்களின் உற்பத்தி பெரிதும் முன்னேற்றம் கண்டுள்ளது. இப்பொருள்களின் உற்பத்தியை ஒட்டியே பாங்கர்களால் தற்சமயம் பெருமளவில் தவணைக் கடன் வசதிகளால் பாங்கர்கட்கு இழப்பு நேர வாய்ப்புக்கள் பெரிதும் கிடையா என்றே கூற வேண்டும். இத்தகைய பொருள்களை விலைக்கு வாங்க முன் வருபவர்கள் ஒழுங்கான இடையீடில்லாத வருமானம் உடையவர்களே யாவர். இத்தகைய நபர்கட்கே தவணைக் கடன் வசதிகளை

ஏற்பாடு செய்யப் பாங்குகள் முன் வருகின்றன. சுய தீர்வு பெறும் கடன்களை ஏற்பாடு செய்வதே தங்களுடைய நோக்கம் என்று கருதிய பாங்கர்கள் பலர், ஆரம்பத்தில் இத்தகைய கடன்களை ஏற்பாடு செய்ய முன்வரவில்லை. ஆனால் காலப் போக்கில் நேர்ந்த மாற்றங்கள் இவர்களுடைய எண்ணத்தை மாற்றி அமைத்தன. பாங்குகளிடம் அபரிமிதமான நிதிகள் குவியலாயின. எனவே புதிய உபயோகங்கட்கும் பாங்குகள் கடன் வசதிகளை ஏற்பாடு செய்ய வேண்டிய கட்டாய நிலை நேர்ந்தது. பொருளாதார வளர்ச்சியில் முன்னணியில் நிற்கும் நாடுகளில் நுகர்வோருக்குத் தவணைக் கடன்களை ஏற்பாடு செய்வதற்கென்றே தனித்திறமை வாய்ந்த நிறுவனங்களும் வர்த்தகர்களும் தோன்றியுள்ளனர். இவர்கட்குப் பாங்கர்கள் கடன் கொடுக்கின்றனர். இவர்கள் இக் கடன் தொகையைப் பயன்படுத்தி நுகர்வோருக்குத் தவணைக் கடன்களை ஏற்பாடு செய்கின்றனர். அண்மைக் காலத்தில் தவணைக் கடன்களை ஏற்பாடு செய்வதில் பாங்குகள் மிகுந்த ஆர்வம் காட்டி வருகின்றன. இதற்கு இரண்டு காரணங்கள் கூறலாம். நீடித்த நுகர்வுப் பொருள்களின் விற்பனை அதிகமாகியுள்ளதே முதலாவது காரணமாகும். இரண்டாவதாக இக்கடன் வசதிகளால் நேரக்கூடிய இழப்புக்கள் மிக மிகக் குறைவானவையே என்று பாங்குகள் மதிப்பிட்டுள்ளன. அமெரிக்காவில் நுகர்வோருக்கும், சில்லறை வியாபாரிகட்கும் பாங்குகள் நேரடியாகவே இக் கடன்களை ஏற்பாடு செய்கின்றன. இங்கிலாந்திலுள்ள பாங்குகள் நுகர்வோருக்கு நேரடியாக இக் கடன் வசதிகள் ஏற்பாடு செய்ய இன்னும் முன்வரவில்லை. ஸ்காட்லாந்திலுள்ள ஒரு பாங்கு தவணைக் கடன்களை ஏற்பாடு செய்வதற்கென்றே ஒரு துணைக் கம்பெனியை (subsidiary company) நிறுவியுள்ளது. இத் துணைக் கம்பெனி நுகர்வோருக்கு நேரடியாகத் தவணைக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்து வருகின்றது.

இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் தற்சமயம் பல உபயோகங்கட்கும் பாங்குகள் கடன்வசதிகளை ஏற்பாடு செய்து வருகின்றன. இதற்குப் பல காரணங்கள் உள்ளன. நீண்ட காலமாக வெற்றிகரமாகத் தங்களுடைய தொழிலை நடத்திவரும் பாங்குகள் இக் கடன்களால் நஷ்டம் ஏற்படுவதற்கான வாய்ப்புக்கள் மிக மிகக் குறைவானவை என்று நம்புவது ஒரு காரணமாகும். அபரிமிதமான நிதிகள் பாங்குகளிடம் தேங்க ஆரம்பித்தது மற்றொரு காரணமாகும். 1930லிருந்து 1939 முடியவும், பின் 1945லிருந்து 1949 முடியவும் பாங்குகளிடம் அபரிமிதமான நிதிகள் குவியலாயின. இவற்றையெல்லாம்விட முக்கியமான காரணம் ஒன்று உள்ளது வழிவழியாகப் பாங்குகள் தங்களுடைய வாடிக்கைக்காரர்கட்கு எந்தெந்த

உபயோகங்கட்குக் கடன் கொடுத்து வந்துள்ளனவோ அந்தந்த உபயோகங்கட்குத் தேவையான கடன்கள் நெடுங்காலமாகப் படிப் படியாகக் குறைந்து வந்துள்ளன. பாங்கு அட்வான்சுகட்கான படிப்படியாக, ஆனால் உறுதியாகக் குறைந்துகொண்டே வந்துள் ளன என்று நாம் நம்புகிறோம். இவ்வாறு நேர்ந்திருப்பதற்கு ஐந்து வகையான காரணங்கள் உள்ளன. தொழில் இணைப்பு, முன்பு இருந்ததைவிடத் தற்சமயம் பாங்குக் கடன்களை நம்பி வாழும் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை குறைந்திருப்பது, தனித் திறமை வாய்ந்த நிறுவனங்களின் வளர்ச்சி, பங்கு மார்க்கெட்டுகளின் வளர்ச்சி, மற்றும் சில்லறை வியாபாரத்தில் ரொக்கங் கொடுத்துப் பொருள்களை வாங்கும் முறை வெகுவாக முன்னேறியிருப்பது— ஆகியவையே ஐவகையான காரணங்களாகும்.

பாங்குக் கடன்கட்கான தேவைகளைத் தொழில் இணைப்பு எங்ஙனம் பாதித்துள்ளது என்று காண்போம். தனிப்பட்ட நபர் கள் வைத்திருப்பது போலவே தொழில் நிறுவனங்களும் தங்களிடம் பண இருப்புக்களை வைத்துள்ளன. வரவைவிடச் செலவுகள் மிகுதியாகும் காலங்களில் பயன்படுத்தும் நோக்கத்துடனேயே தொழில் நிறுவனங்கள் இருப்புக்களைத் தங்களிடம் வைத்துள்ளன. நிறுவனங்கட்கு எதிர்பார்க்கும் செலவினங்கள் சில நேரலாம்; எதிர்பாராத விதத்திலும் சில செலவினங்கள் நிறுவனங்கட்கு நேரலாம். எதிர்பாராத விதமாக நேரக்கூடிய செலவினங்களைச் சமாளிக்கும் நோக்கத்துடனேயே நிறுவனங்கள் தங்களிடம் பண இருப்புக்களை வைத்துள்ளன. 12 சிறிய நிறுவனங்கள் உள்ளன என்றும் மற்றும், இந்த 12 சிறிய நிறுவனங்களும் இணைந்தால் எவ்வளவு பெரிய நிறுவனம் உருவாகுமோ, அந்த அளவு பெரிய ஒரு நிறுவனமும் உள்ளது என்றும் வைத்துக்கொள்வோம். 12 சிறிய நிறுவனங்களும் தனித்தனியே தம்மிடம் இருப்புக்கள் வைத்திருக்கும்; பெரிய நிறுவனமும் தன்னிடம் இருப்புகளை வைத்திருக்கும். 12 சிறிய நிறுவனங்கள் ஒவ்வொன்றும் தனித் தனியே இருப்புக்கள் வைத்திருக்க வேண்டியிருப்பதால், அவை வைத்துக்கொண்டிருக்கும் இருப்புக்களின் கூட்டு மொத்தத் தொகை அப் பெரிய நிறுவனம் வைத்திருக்கும் இருப்புத் தொகையை விட நிச்சயம் அதிகமாகவே இருக்கும். எனவே இந்த 12 சிறிய நிறுவனங்களும் ஒன்றாக இணையும் பட்சத்தில், இருப்புக்களாக வைத்திருப்பதற்குத் தேவைப்படும் பணத்தின் மதிப்புக் குறைவாகவே இருக்கும். பணத்தை இருப்பாக வைத் திருக்கும் பழக்கம் இவற்றிற்குக் கிடையாது என்றும், அவ்வப் போது பணம் தேவைப்படும்போது பாங்குகளிடமிருந்து அதிகப் பற்றுக்கடன் வாங்குவதே இவற்றின் பழக்கம் என்றும் வைத்துக்

கொள்வோம். அவ்வாருயின் சிறிய நிறுவனங்கள் பன்னிரண்டும் தனித்தனியே பாங்குகளிடம் அதிகப் பற்றுக் கடன் வாங்க வேண்டியதாயிருக்கும். பன்னிரண்டு நிறுவனங்கள் ஒவ்வொன்றும் தனித்தனியே பாங்குகளிடமிருந்து அதிகப் பற்றுக் கடன்களை வாங்க வேண்டியிருப்பதால், இவை பயன்படுத்தக்கூடிய அதிகப் பற்றுக் கடன்களின் கூட்டு மொத்தத் தொகை, பெரிய நிறுவனம் பயன்படுத்தக்கூடிய அதிகப் பற்றுக்கடன் தொகையைவிட நிச்சயம் அதிகமாகவே இருக்கும். எனவே இப்பன்னிரண்டு நிறுவனங்களும் இணையும் பட்சத்தில், அதிகப் பற்றுக் கடன்கட்கான தேவைகள் குறையும். சிறிய நிறுவனங்களின் அதிகப் பற்றுக் கடன் தேவைகளை விடப் பெரிய நிறுவனத்தின் அதிகப் பற்றுக் கடன் தேவைகள் குறைவாகவே இருப்பதற்கு ஒரு முக்கிய காரணம் உள்ளது. வரவைவிடச் செலவுகள் மிகுதியாகக்கூடிய சந்தர்ப்பங்களும் எதிர்பாராத செலவுகள் ஏற்படக்கூடிய சந்தர்ப்பங்களும் சிறிய நிறுவனங்கள் பன்னிரண்டிற்கும் நேருவதைவிடப் பெரிய நிறுவனத்திற்குக் குறைவாகவே நேரும்.

தொழில் இணைப்பு நேருவதால் வேறொரு விகிதத்திலும் அதிகப் பற்றுக் கடன்கட்கான தேவைகள் குறைய வாய்ப்புள்ளது. வரவை விடச் செலவுகள் அதிகமாகக்கூடிய காலங்களில் பயன்படுத்தும் நோக்கத்தோடு நிறுவனங்கள் பண இருப்புக்கள் வைத்திருக்கலாம் என்று மேலே கண்டோம். இதனைப் பொறுத்தவரையில் சிறிய நிறுவனத்திற்கு ஒரு பிரச்சினை எழுகின்றது. பண இருப்புக்கள் ஆதாயமில்லாதவை. எனவே பண இருப்புக்களை வைத்திருப்பது உசிதமானதா அன்றி அவ்வப்போது நேரும் தேவைகளைப் பூர்த்தி செய்யுமுகத்தான் பாங்குகளிடமிருந்து அதிகப் பற்றுக் கடன் வாங்குவது உசிதமானதா என்று ஆலோசித்துச் சிறிய நிறுவனம் ஒரு முடிவுக்கு வரவேண்டியிருக்கும். இந்த இரண்டு முறைகளிலும் எந்த முறை சிறிய நிறுவனத்திற்கு உசிதமானதாகப்படும் என்று நாம் பொதுவாகக் கூறமுடியாது. எனினும் சில நிறுவனங்கள் அதிகப் பற்றுக் கடனைக் பெறுவதே உசிதமானது என்று கருதுகின்றன. பெரிய நிறுவனங்களைப் பொறுத்தவரையில் இதுபோன்ற பிரச்சினைகள் ஏதும் இல்லை. தங்களிடமுள்ள பண இருப்புக்களை ஆதாய மற்றவையாகப் பெரிய நிறுவனங்கள் வைத்திருக்கவேண்டியதில்லை. தங்களிடமுள்ள பண இருப்புக்களைப் பயன்படுத்திப் பெரிய நிறுவனங்கள் குறுங்காலச் சொத்துக்களை (ஆதாய முள்ளவைகளை) விலைக்கு வாங்கலாம் இவை கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்கலாம் அல்லது உண்டியல் கழிவகங்களிடம் பண இருப்புக்களை டெபாசிட்டுக்களாக வைத்திருக்கலாம் அல்லது சில விசேஷ சலுகைகளுடன் பாங்கு ஒன்றில்

அவற்றை டெபாசிட்டுக்களாக வைத்திருக்கலாம். கெடுவு காலத்தை நெருங்கிக் கொண்டிருக்கக்கூடிய பத்திரங்களில்கூட அவற்றை முதலீடு செய்யலாம். பெரிய நிறுவனங்களாலேயே இவ்வாறு இருப்புக்களை ஆதாயகரமாக வைத்திருக்க முடியும். சிறிய நிறுவனங்கள் இவ்வாறு செய்வதென்பது பெரும்பாலும் சாத்தியமில்லை. சிறிய நிறுவனங்களிடமுள்ள இருப்புக்கள் மிகச் சிறிய அளவினவாக இருப்பதாலும் இவ்வாறு முதலீடு செய்ய எண்ணினுல் அவற்றிற்குச் சில செலவினங்கள் நேரக் கூடுமாதலாலும் சிறிய நிறுவனங்களால் இவ்வாறு செய்ய முடிவதில்லை. இருப்புக்களை ஆதாயகரமான சொத்துக்களில் முதலீடு செய்வதையொட்டிப் பெரிய நிறுவனங்கட்கும் சில செலவினங்கள் நேரும் என்பது உண்மைதான். எனினும் சிறிய நிறுவனம் ஒன்றின் இருப்புக்களோடு ஒப்பிடும்போது பெரிய நிறுவனம் ஒன்றின் இருப்புக்கள் அதிகமாக இருப்பதால், முதலீடு செய்வதால் கிடைக்கக்கூடிய இலாபத்தைவிட, இந்தச் செலவினங்கள் மிகக் குறைவாகவே இருக்கும். எனவே பெரிய நிறுவனத்தால் செய்ய முடிவதைப்போலச் சிறிய நிறுவனத்தால் செய்ய முடிவதில்லை. தங்களிடம் அவ்வப்போது தோன்றக்கூடிய உபரி நிதிகளைப் பெரிய நிறுவனங்கள் இவ்வாறு ஆதாயகரமாகப் பயன்படுத்துவதோடு தங்களுடைய வரவைவிடச் செலவுகள் மிகுதியாகும் காலத்திலும் அவற்றைப் பெரிய நிறுவனங்கள் பயன்படுத்த முடிகின்றது. எனவே பாங்குகளிடமிருந்து அதிகப் பற்றுக் கடன்களைப் பெரிய நிறுவனங்கள் வாங்க வேண்டிய அவசியம் நேராது போகலாம். 'இம்பீரியல் கெமிக்கல்ஸ்' போன்ற பெரிய நிறுவனங்களைப் பொறுத்தவரையில் நம் வாதம் பொருந்தும். நாம் இங்குக் கொடுத்துள்ள உதாரணம் சிறிது மிகைப்படுத்தியே கூறப்பட்டுள்ளது என்பது உண்மையே. இருப்பினும் இது தெளிவுறுத்தும் உண்மையை நாம் மறந்துவிடலாகாது. தங்களிடம் அவ்வப்போது தோன்றக்கூடிய உபரிநிதிகளைப் பெரிய நிறுவனங்கள் ஆதாயகரமாகப் பயன்படுத்த முடிவதாலும், சிறிய நிறுவனங்களால் அவ்வாறு செய்ய முடியாததாலும், தொழில் இணைப்பு ஏற்படுவதை ஒட்டி அதிகப் பற்றுக் கடன்கட்கான தேவைகள் குறைவதற்கான வாய்ப்புக்கள் உருவாகலாம்[1].

1 பெரிய நிறுவனங்கள் அதிகப் பற்றுக் கடன்களைப் பெருமளவில் பயன்படுத்தலாம் என்று கெய்ன்ஸ் கருத்தைத் தெரிவித்துள்ளார். (Treatise on Money, Vol. 1. P. 42) ஆனல் அமெரிக்காவிலிருந்து கிடைக்கக்கூடிய செய்திகள் நம்முடைய முடிவையே வலியுறுத்துகின்றன. (N. H. Jacoby and R. J. Saulnier, Business Finance and Banking) எனினும் இங்கிலாந்திலுள்ள எல்லா வகையையும் சேர்ந்த நிறுவனங்கள் ஒரே மாதிரியாகப் பாங்கு அட்வான்சுகளைப் பயன்படுத்துகின்றன. 1955-7ல் இங்கிலாந்திலுள்ள பெரிய நிறுவனங்கள் பாங்கு அட்வான்சுகளைப் பெருமளவு பயன்படுத்தின.

முன்பு இருந்ததைவிடத் தற்சமயம் பாங்குக் கடன்களை நம்பி வாழும் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை குறைந்திருப்பதே இரண்டாவது காரணமாகும். இங்கிலாந்து பாங்குகளைவிட அமெரிக்கப் பாங்குகளும், கனடா பாங்குகளும், இதனால் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளன. அமெரிக்க அரசாங்கமும் கனடா அரசாங்கமும் விவசாயத்திற்கு ஓரளவு கடன் வசதிகளை அளித்து வந்தன என்பது உண்மையேயாயினும் விவசாயத்திற்குத் தேவைப்பட்ட கடன் வசதிகளைப் பெரிதும் பாங்குகளே இந்நாடுகளில் ஏற்பாடு செய்து வந்தன. முன்பு இந்த நாடுகளின் பொருளாதார அமைப்பில் விவசாயம் பெரும் பங்கு பெற்றிருந்தது. ஆனால் தற்சமயம் பொது வசதிக் கம்பெனிகளும் பொறிவழித் தொழிற்சாலைகளும் (manufacturing industries), சுரங்கத் தொழிற்சாலைகளும் இந்த நாடுகளின் பொருளாதார அமைப்பில் மிகப் பெரிய பங்கு பெறுகின்றன. தங்கட்குத் தேவைப்படக்கூடிய பணவசதிகட்காக இவை பாங்குகளை ஒருபொழுதும் பெருமளவு சார்ந்திருக்கவில்லை. தங்கட்குப் பணம் தேவைப்படும்போது இவை தாங்களாகவே பங்கு மார்க்கெட்டுக்கள்மூலம் பணத்தை ஏற்பாடு செய்துகொள்கின்றன. எனவே நாட்டின் பொருளாதார அமைப்பில் தான் வகித்து வந்த முக்கியமான இடத்தை விவசாயம் இழந்திருப்பதையொட்டிப் பாங்குக் கடன்கட்கான தேவைகளும் குறைந்துள்ளன.

தனித் திறமை வாய்ந்த நிறுவனங்களின் வளர்ச்சி மூன்றாவது காரணமாகும். விவசாயிகட்கு முன்பு பாங்குகள் அளித்து வந்த கடன் வசதிகள் இத் தனித் திறமை வாய்ந்த நிறுவனங்களின் தோற்றத்தால் வெகுவாகப் பாதிக்கப்பட்டுள்ளன. விவசாயிகட்குக் கடன்களை ஏற்பாடு செய்யும் நோக்கத்துடன் விவசாய அடைமானப் பாங்குகள் (Agricultural Mortgage Banks) நிறுவப்பட்டுள்ளன. விவசாயிகட்குத் தேவைப்பட்ட எந்தக் கடன் வசதிகளைப் பாங்கர்கள் நிறைவேற்ற முன் வருவதில்லையோ, அந்தக் கடன் வசதிகளையெல்லாம் ஏற்பாடு செய்வதற்காகவே இந்த அடைமானப் பாங்குகள் நிறுவப்பெற்றுள்ளன. சின்னஞ்சிறு தொழிலகங்கட்கு உதவி செய்வதற்கும் தனித் திறமை வாய்ந்த நிதி நிறுவனங்கள் தோன்றியுள்ளன. இடைக்காலக் கடன்களையும், நெடுங்காலக் கடன்களையும் பொதுவாகப் பாங்கர்கள் ஏற்பாடு செய்வதில்லை. தனித் திறமை வாய்ந்த நிதி நிறுவனங்கள் இவற்றை ஏற்பாடு செய்து வருகின்றன. முன்பு பாங்குகள் ஏற்பாடு செய்ய முன்வராத கடன்களை இத் தனித் திறமை வாய்ந்த நிறுவனங்கள் எந்த அளவுக்கு ஏற்பாடுசெய்து வருகின்றவோ, அந்த அளவுக்குப் பாங்குகள் பாதிக்கப்படவில்லை

என்று நாம் கூறலாம். ஆனால் தனித் திறமை வாய்ந்த நிறுவனங்கள் தற்சமயம் ஏற்பாடு செய்துவரும் கடன் வசதிகளைக் கடந்த காலத்தில் பாங்குகள் நீர்மைத் தன்மையற்ற கடன்கள் என்று பொதுவாகக் கருதிய போதிலும், தங்களுடைய நாணயமான வாடிக்கைக்காரர்களின் அதிருப்தியைத் தேடிக்கொள்ள விரும்பாமல், இதுபோன்ற கடன்களையும் கடந்த காலத்தில் பாங்குகள் ஏற்பாடு செய்து வந்தன. கடந்த காலத்தில் பாங்குகள் விருப்பமின்றியே ஏற்பாடு செய்துவந்த கடன்களைத் தற்காலத்தில் தனித் திறமை வாய்ந்த நிறுவனங்கள் எந்த அளவுக்கு ஏற்பாடு செய்து வருகின்றனவோ, அந்த அளவுக்குப் பாங்குகளின் நீர்மைத் தன்மை அதிகரித்துள்ளது. மேலும் பாங்குகளால் திருப்பிப் பெறமுடியாத கடன்களின் எண்ணிக்கைகள் குறைவதற்கான வாய்ப்புக்கள் உருவாகியுள்ளன. ஆனால் பாங்குகளின் மொத்த இலாபம் குறைந்துள்ளது.

பங்கு மார்க்கெட்டுகளின் வளர்ச்சி நான்காவது காரணமாகும். பங்கு மார்க்கெட்டில் வீக்க நிலை உருவாகும் காலங்களில் பாங்குக் கடன்கட்கான தேவைகள் பெரிதும் குறைய நேரிடுகின்றன. சாதாரணப் பங்குகளின் விலை உயர்ந்துகொண்டே போகும் காலங்களில் மேலும் மேலும் தங்களுடைய பங்குகளை வெளியிடுவதன்மூலம், தங்கட்குத் தேவையான மூலதனத்தைத் தொழிலகங்களால் எழுப்ப முடிகின்றது. இது பொதுவான உண்மையாகும். ஆனால், 1928-29 ஆகிய ஆண்டுகளில் வால் தெருவில் (Wall Street) உருவாகியிருந்த நிலைமை அசாதாரண நிலை என்றே கூறவேண்டும். முன்பு ஒரு போதும் கண்டிராத அளவுக்குப் பங்குகட்கான தேவைகள் அவ்வமயம் மேலும் மேலும் அதிகரித்த வண்ணமே இருந்தன. தற்காலிகமாகத் தங்கட்குத் தேவைப்பட்ட நிதிகளைப் பெறும் நோக்கத்துடன் அவ்வமயம் பங்குகளை மேலும் அதிகமாக வெளியிட்ட நிறுவனங்கள் பயனுற்றன. தங்களுடைய தற்காலிக நிதித் தேவைகளை இவ்வாறு பூர்த்தி செய்த நிறுவனங்கள் செலவைவிட வரவு அதிகமான காலங்களில் கிடைத்த உபரிப் பணத்தைப் பாங்குகளில் இருப்பாக—டைம்டெபாசிட் இருப்பாக—வைத்திருந்தன. அவ்வமயம் அமெரிக்கப் பாங்குகளிடம் டைம் டெபாசிட்டுக்கள் பெருகிக் கொண்டு வந்தமைக்கும், பாங்குக் கடன்கட்கான தேவைகள் அருகிக் கொண்டு வந்தமைக்கும், பங்கு மார்க்கெட்டின்மூலம் அமெரிக்க நிறுவனங்கள் எளிதில் பணம் திரட்டுவதற்கான வாய்ப்புக்கள் பெருமளவு இருந்ததே காரணமாக இருக்க வேண்டும்.

சில்லறை வியாபாரத்தில் ரொக்கங் கொடுத்துப் பொருள்கள் வாங்கும் முறை அண்மைக் காலத்தில் வெகுவாக முன்னேறியிருப்பதும் ஒரு முக்கிய காரணமாகும். முன்பு மொத்த வியாபாரிகளிடம் சில்லறை வியாபாரிகள் கடனுக்குப் பொருள்களை வாங்கும் பழக்கம் உடையோராய் இருந்தனர். இதை ஒட்டி முன்பு மொத்த வியாபாரிகள் பாங்குகளிடம் கடன் வாங்க வேண்டியிருந்தது. தற்சமயம் சில்லறை வியாபாரிகள் மொத்த வியாபாரிகளிடமிருந்து கடனாக வாங்குகின்ற பொருள்களின் மொத்த மதிப்பு குறைந்திருப்பதால் பாங்குக் கடன்கட்கான தேவைகளும் குறைந்துள்ளன. மேலும் முன்பு பாங்குகளிடமிருந்து நேரடியாகவும், சில்லறை வியாபாரிகள் கடன் பெற்று வந்தனர். தங்கள் வியாபாரம் தற்சமயம் ரொக்க வியாபாரமாக மாறி வருவதால் முன்பு தாங்கள் பாங்குகளிடமிருந்து எந்த அளவுக்குக் கடன் வாங்கி வந்தனரோ, அந்த அளவுக்குத் தற்சமயம் பாங்குகளிடமிருந்து சில்லறை வியாபாரிகள் கடன் வாங்க வேண்டிய அவசியம் இல்லை. முன்பு இருந்ததைவிடத் தற்சமயம் நாட்டில் வறுமை நிலை குறைந்துள்ளது. வேலை வாய்ப்புக்கள் நாட்டில் மிகுந்துள்ளன, தமக்குத் தேவைப்படும் பொருள்களை ரொக்கம் கொடுத்து வாங்குவதே சிறந்த வியாபாரம் என்று சில்லறை வியாபாரிகள் தற்சமயம் எண்ணுகின்றனர். இவ்விதக் காரணங்களால் தற்சமயம் சில்லறை வியாபாரம் பெரும்பாலும் ரொக்க வியாபாரமாகவே திகழ்கிறது. கடந்த காலத்தில் மிகச் சிறிய பேரத்திற்குங்கூடச் சில்லறை வியாபாரி தம் வாடிக்கைக்காரருக்குக் கடன் கொடுத்து வந்தார். தற்சமயம் நிலைமை முற்றிலும் மாறி இருக்கின்றது. தான் கடனுக்குக் கொடுத்த பொருள்களின் மதிப்பை வியாபாரி ஒரு கரும்பலகையில் ஒவ்வொரு கடனாளியின் பெயருக்கு எதிரே கடந்த காலத்தில் எழுதி வரும் பழக்கம் நிலவியது; தற்காலம் இப் பழக்கம் அகன்று விட்டது. இதற்குப் பிரதியாகத் தற்சமயம் அந்த இடத்தில் தவணைத் கடன் முறை குடிகொண்டு விட்டது. நீடித்த நுகர்வுப் பொருள்களைப் பொறுத்தவரையில் இது மிகவும் பொருந்தும். நுகர்வோருக்குத் தேவைப்படுகின்ற தவணைக் கடன்களைச் சில நாடுகளில் பாங்குகளே நேரடியாக ஏற்பாடு செய்கின்றன. வேறு சில நாடுகளில் தவணைக் கடன்களை ஏற்பாடு செய்வதற்கென்றே தனித் திறமை வாய்ந்த நிறுவனங்கள் சில தோன்றியுள்ளன. இவற்றிற்குப் பாங்குகள் கடன் கொடுத்து வருகின்றன. தவணைக் கடன் போன்ற புதிய கடன் வசதிகளை எந்த அளவுக்கு இங்கிலாந்திலுள்ள பாங்குகள் ஏற்பாடு செய்ய முன்வரலாம் என்பது குறித்து நம்மால் இதுவரை ஏதும் அறிய முடியவில்லை. எனினும் வழி வழியாகப் பாங்குகள் ஏற்பாடு செய்து வந்த கடன் வகைகட்கான தேவைகள் தற்சமயம் அருகி வருகின்றன என்பது உண்மையாகும்.

மேற்குறித்துள்ள ஐந்து வகையான காரணங்களின் விளைவால் இங்கிலாந்திலும் வேறு சில நாடுகளிலும் பாங்குக் கடன்களுக்கான தேவைகள் குறைந்துள்ளன. தாங்கள் எந்த அளவுக்குக் கடன்களை ஏற்பாடு செய்ய முடியுமோ, அந்த அளவுக்குப் பாங்குகளால் தற்சமயம் கடன்களை ஏற்பாடு செய்ய முடிவதில்லை. இந் நிலை நெடு நாட்களாக நிலவி வருகின்றது. எனவே பாங்குகளுடைய அமைப்பும் ஓரளவுக்குப் பாதிக்கப்பட்டுள்ளது. பாங்கு மானேஜர்கள் தேர்வு, அவர்கட்கு வழங்கப்படுகின்ற அதிகாரங்களின் அளவு, தலைமை அலுவலகத்திற்கும் பாங்கு மானேஜருக்கு மிடையே உள்ள தொடர்பு, பொது மானேஜர்கள் இயக்குநர்களுடன் கலந்து ஆலோசிக்க வேண்டிய விஷயங்கள் ஆகியவற்றில் பெருமளவு மாற்றங்கள் நேர்ந்துள்ளன. இவற்றின் விளைவாக வாடிக்கைக்காரருக்கு அட்வான்சுகள் கொடுக்கும்போது திறமையும் அனுபவமும் ஒருங்கே அமையப்பெற்ற ஒருவர் (அதாவது பாங்கு மானேஜர் வாடிக்கைக்காரர்களின் தாாதரங்களைப் பற்றி ஆராய்வதே போதுமானதாகும் என்று பாங்குகள் கருதுகின்றன, ஆனால், வாடிக்கைக்காரரின் அட்வான்சு தேவை ஒன்றினை நிராகரிக்க எண்ணும் பாங்கு மானேஜர் தாமாகவே ஒரு முடிவுக்கு வரக்கூடாது என்றும் தலைமை அலுவலகத்திலுள்ள அதிகாரிகளுடன் இது குறித்துக் கலந்து ஆலோசிக்க வேண்டும் என்றும். பாங்குகள் தற்சமயம் கிளை மானேஜர்கட்கு அறிவுறுத்தியுள்ளன. இவ்வாறு தங்களுடைய விதிகளைப் பெரிதும் தளர்த்தி இங்கிலாந்திலுள்ள பாங்குகள் நெடுங்காலமாகப் பெருமளவு கடன்கள் வழங்கிவந்தன. இடையில் அரசாங்கக் கட்டுப்பாடுகட் கிணங்கத் தாங்கள் ஏற்பாடு செய்துவந்த அட்வான்சுகளைப் பாங்குகள் விருப்பமின்றியே குறைத்தன. 1958ஆம் ஆண்டு அரசாங்கக் கட்டுப்பாடுகள் அகற்றப்பட்டன. அந்நாள்தொட்டு மிகப் பரந்த நோக்கத்துடன் பாங்குகள் கடன் வசதிகளை ஏற்பாடு செய்து வருகின்றன. உதாரணமாக நீடித்த நுகர்வுப் பொருள்களை நுகர்வோர் வாங்குவதற்கு ஏதுவாக அன்னாருக்கு நேரடிக் கடன்களைப் பாங்குகள் ஏற்பாடு செய்து வருகின்றன. இதன் விளைவாக 1958ஆம் ஆண்டுக்குப் பின் முதல் பன்னிரண்டு மாத காலத்தில் பாங்குகள் ஏற்பாடு செய்த மொத்த அட்வான்சுகளின் மதிப்பு முன்பு இருந்ததைவிட மூன்றில் ஒரு பங்கு அதிகமாகியது. தவணைக் கடன்களை நுகர்வோருக்கு ஏற்பாடு செய்து வருகின்ற நிதி நிறுவனங்களைப் பாங்குகள் நிறுவியுள்ளன. இந்நிறுவனங்களைத் தங்கள் பாங்கு அலுவலகங்களினின்றும் தனித்தே வைத்துள்ளன, இவை யாவும் பாங்குகட்குத் துணைக் கம்பெனிகளேயாகும். ஆனால், இத்துணைக் கம்பெனிகட்கு வருங்காலத்தில் பாங்குகள் பெருமளவு அட்வான்

சுகளை வழங்கிவரும் என்று நாம் எதிர்பார்க்கலாம். இங்கிலாந்துப் பாங்குகள் 1959ஆம் ஆண்டில் துணிவான செயல்களில் ஈடுபடத் தயாராக இருக்கின்றன என்றே கூறவேண்டும். கடந்த காலத்தில் தாங்கள் கையாண்டுவந்த விதிமுறைகள் பொருத்தமானவைதானு என்று ஆராய்ந்து வருகின்றன. இங்கிலாந்துப் பாங்குகள் ஒரு மாபெரும் மாற்றத்தை எதிர்நோக்கி நிற்கின்றன என்று கூறுவது மிகையாகாது.

# 9. இங்கிலாந்தில் கைக்கொள்ளப்படும் பணக்கொள்கை

## 1. பணக்கொள்கையின் குறிக்கோள்கள்

பாங்குகள் அனுசரித்துவரும் முறைகளைப் பற்றியும் தங்களுடைய இருப்பு நிலைக்குறிப்புகளில் நேரும் மாற்றங்கட்கு ஏற்பத் தங்களுடைய நடவடிக்கைகளைப் பாங்கர்கள் எவ்வாறு மாற்றி அமைத்துக்கொள்கின்றனர் என்பது குறித்தும் இதுகாறும் விளக்கங்கள் தரப்பட்டன. பாங்குகளின் நடவடிக்கைகளின்மீது எந்தெந்த வழிகளில் அரசாங்கம் தனது செல்வாக்கைச் செலுத்த முடியும் என்று நாம் ஆராய்வதற்கு இந்த விளக்கங்களே போதுமானவையாகும். அரசாங்கத்தின் பொதுவான பொருளாதாரக் கொள்கையின் அடிப்படையிலேயே ஈண்டு நாம் பணக்கொள்கையின் குறிக்கோள்களை விளக்க முயலுவோம். நிலையானதும் அதிக அளவினதும் ஆகிய வேலை வாய்ப்புக்களே தங்களுடைய பொருளாதாரக் கொள்கையின் முக்கியக் குறிக்கோள் என்று பெரும்பாலான அரசாங்கங்கள் தற்சமயம் கருதுகின்றன. மேற்போக்காக நோக்குங்கால் இது மிக எளிதான குறிக்கோளாகவே தோன்றுகின்றது; ஆனல் உண்மையில் இது அவ்வளவு எளிதில் அடையக்கூடிய குறிக்கோள் அன்று ; ஏனெனில் ஓர் அரசாங்கத்தால் அதிக அளவில் வேலைவாய்ப்புக்களை ஏற்படுத்திவிட முடியும்; ஆனல் இந்த அளவிலான வேலைவாய்ப்புக்களை அந்த அரசாங்கத்தால் போற்றிப் பாதுகாக்க முடியாது. எனவே வேலைவாய்ப்புக்களை மிகுதிப்படுத்தும் நோக்கத்தோடு பெரும்பான்மையான அரசாங்கங்கள் செயல்பட்டாலும் இந்த ஒரு குறிக்கோளினை வலியுறுத்துவது மட்டும் பொருந்தாது. நாட்டில் உள்ள வறுமை நிலையை அகற்ற உற்பத்தித் திறனை (productivity) அதிகரிக்க முயலுவதே வேண்டப் படுவதாகும். எனவே. வேலைவாய்ப்புக்களைப் பெருக்கும் நோக்கத்தோடு செயலாற்றும் ஓர் அரசாங்கம்

உற்பத்தித் திறனைத் தூண்டக் கூடிய காரணிகளைத் (factors) தங்கள் நடவடிக்கைகள் தடை செய்யாவண்ணம் பார்த்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகும். தொழில் துணிவு (enterprise), புத்தாக்கம் (invention), மற்றும் மூலதனத் திரட்சி (capital accumulation) ஆகியவை உற்பத்தித் திறனைத் தூண்டக் கூடியவை. இவ்வாருன பல பிரச்சனைகளையும் ஆராயும்போது இரண்டு முக்கியமான குறிக்கோள்கள் பணக்கொள்கையின் குறிக்கோள்களாகத் திகழ்வது நல்லது என்ற எண்ணம் தோன்றுகின்றது. அதிக அளவிலான வேலைவாய்ப்புக்கள், போதுமான அளவுக்கு நிலையான விலைவாசிகள்—ஆகியவையே அந்த இரு குறிக்கோள்களாகும். இங்கிலாந்தைப்போல் அயல் நாட்டு வாணிகத்தைப் பெரிதும் சார்ந்திருக்கும் நாடுகள் தங்களுடைய செலாவணியின் வெளிநாட்டு மதிப்பை (அயல் நாட்டுச் செலாவணி மாற்று வீதத்தை) நிலைப்படுத்த எண்ணுவதும், நன்மையை அளிக்கக்கூடிய ஒரு குறிக்கோளாக அமையும். நாம் இங்குக் குறித்துள்ள மூன்று குறிக்கோள்களும், அதிக அளவிலான வேலைவாய்ப்புக்கள், நிலையான விலைவாசிகள், மற்றும் நிலையான அயல் நாட்டுச் செலாவணி மாற்று வீதம்-ஒன்றுடன் ஒன்று தொடர்புடையனவேயாகும். இருப்பினும் குறுகிய கால எல்லைக்குள் இந்த மூன்று குறிக்கோள்களையும் ஒருங்கே நிறைவேற்ற முடியாது. எனவே குறுகிய காலத்தில் ஒவ்வொரு குறிக்கோளுக்கும் தனித்தனிக் கவனம் செலுத்தவேண்டுவது அவசியமாகிறது.

நாம் இங்குக் குறித்துள்ள மூன்று குறிக்கோள்களும் செலவினங்களால் பாதிக்கப்படுகின்றன. மொத்தச் செலவினங்களும் குறிப்பிட்ட துறைகளில் நேரும் செலவினங்களும் இவற்றைப் பாதிக்கின்றன. மக்களின் செலவினங்களை மாற்றி அமைக்கக் கூடிய ஆற்றல் பாங்குகட்கு உண்டு. எனவே இக்குறிக்கோள்கட்கும் பாங்குகள் கையாளும் முறைகட்கும் நெருங்கிய தொடர்புகள் உள்ளன என்பதை நாம் அறியலாம். மக்களின் செலவினங்களைப் பாங்குகள் இரண்டு வழிகளில் மாற்றி அமைக்கமுடியும்-நாட்டிலுள்ள பணத்தின் அளவைப் பாங்குகள் மாற்றி அமைத்துச் செலவினங்களையும் மாற்றி அமைப்பது ஒரு முறையாகும் ; மக்களின் செலவு செய்வது குறித்த விருப்பத்தைப் பாங்குகள் மாற்றி அமைத்துச் செலவினங்களை மாற்றி அமைப்பது இரண்டாவது முறையாகும். வட்டி வீதங்களில் மாற்றங்கள் செய்து மக்களின் விருப்பத்தைப் பாங்குகள் மாற்றி அமைக்கமுடியும். இவை குறித்து முந்திய அத்தியாயங்களில் ஏற்கெனவே நாம் விளக்கங்கள் தந்துள்ளோம், பிரிட்டனில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கும் கருவூலமும் பாங்குகளின் நடவடிக்கைகளை (அதாவது பாங்குகள்

செலவினங்களின்மீது செலுத்தக்கூடிய செல்வாக்குக்களை)க் கண்காணித்துவருகின்றன. (இங்கிலாந்துத் தலைமைப் பாங்கும், கருவூலமும் இவ்வாறு இணைந்து செயலாற்றும்போது 'அதிகாரிகள்' (authorities) அல்லது பண அதிகாரிகள் (monetary authorities) என்று நடைமுறை நிதி இலக்கியங்களில் குறிப்பர்.

பொதுவாக அதிகாரிகள் பணத்தின் அளவைக் கட்டுப்படுத்த முயலும்போதே வட்டி வீதங்களையும் கட்டுப்படுத்த முடிகின்றது. இவை இரண்டும் இணைந்தே செல்கின்றன. பண அளிப்பு நிலை உயரும்போது வட்டிவீதங்கள் குறைகின்றன; பண அளிப்பு நிலை குறையும்போது வட்டி வீதங்கள் உயருகின்றன. நம்முடைய பல வகையான தேவைகளில் அவசரத் தேவைகளை உடனடியாகப் பூர்த்தி செய்ய முயலுகிறோம். இன்று நாம் வாழ்ந்தால்தான் நாளைய பொழுது உதயமாவதை நாம் காண முடியும் என்று நாம் அறிவோம். எனவே பணத்தின் இருப்பு இன்று குறைவாக இருக்கும்போது, இன்றைய செலவுகட்கே அவை பெரிதும் விரும்பப்படுகின்றன. இவ்வாறான நிலையில் இன்று நம்மிடமுள்ள பணத்தை வேறொருவருக்குக் கொடுத்துவிட்டு அதைப் பிறிதொரு காலத்தில் வாங்கிக்கொள்ள நாம் உடன்பட்டால், அதிகமான வட்டி வீதத்தை நாம் எதிர்பார்ப்போம். இருப்பினும் பண அதிகாரிகளால் வட்டி வீதங்களை மாற்றி அமைக்க முடியும். வட்டி வீத அமைப்பை மாற்ற முயலும்போது அதிகாரிகள் பணத்தின் அளவுக்கு ஒரு குறிப்பிட்ட முக்கியத்துவமும் வட்டி வீதங்கட்கு ஒரு குறிப்பிட்ட முக்கியத்துவமும் கொடுக்கின்றனர். இவ்வாறு பண அளவுக்கும் வட்டி வீதத்திற்கும் வெவ்வேறு அளவில் அதிகாரிகள் முக்கியத்துவம் கொடுப்பதால், பொருளாதார அமைப்பின் பல்வேறு பகுதிகளிலும் நடைபெறுகின்ற நடவடிக்கைகள் பாதிக்கப்படுகின்றன. அதிகாரிகளின் நடவடிக்கைகளால் மக்களுக்கு எளிதில் கடன் வசதிகள் கிட்டலாம் அல்லது கடன் வசதிகள் கிடைப்பது மிகக் கடினமாக இருக்கலாம். அதிகாரிகளின் நடவடிக்கைகள் மக்களின் விருப்பத்தையும் பாதிக்கலாம்—தங்களுக்குக் கிடைக்கக்கூடிய பணத்தை மக்கள் செலவு செய்ய விரும்பலாம் அல்லது செலவு செய்யும் விருப்பம் ஏதுமின்றி இருக்கலாம். இந்த முறைகளைத் (அதாவது பண அளவை மாற்றுவது, வட்டி வீதங்களை மாற்றுவது ஆகியவை) தவிர வேறு முறைகளைக் கடைப்பிடித்தும் ('நேரடிக் கட்டுப்பாடுகளின்மூலம்,) அதிகாரிகள் பொருளாதார நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்த முடியும்—குறிப்பிட்ட சில துறைகளில் ஈடுபட்டுள்ள மக்கள் கடன் பெறுவதைத் தடை செய்யலாம் அல்லது அவர்களுக்குக் கடன் எளிதில் கிடைக்கக்கூடிய வாய்ப்புக்களைப் பெருக்கலாம்.

இந்த அத்தியாயத்தின் எஞ்சியுள்ள பகுதிகளில், செலவினங்களை மாற்றி அமைப்பதையே (ஊக்குவிக்கலாம்; அல்லது தடை செய்யலாம்) தங்களது முக்கிய நோக்கமாக அதிகாரிகள் கொண்டுள்ளனர் என்று வைத்துக் கொண்டு, அதிகாரிகள் இந் நோக்கத்தை நிறைவேற்ற என்னென்ன நடவடிக்கைகள் எடுக்கின்றனர் என்று நாம் ஆராய்வோம். அடுத்து, இரண்டாம் உட்பிரிவில் பணத்தின் அளவு எவ்வாறு கட்டுப்படுத்தப்படுகின்றது என்றும் அதை ஒட்டி வட்டி வீதம் எவ்வாறு மாற்றமுறுகின்றது என்றும் ஆராய்வோம்; வட்டி வீதங்களை மாற்றி அமைக்க உதவும் ஏனைய முறைகள் பற்றிய விளக்கத்தை மூன்ருவது உட்பிரிவில் தந்துள்ளோம்; இதுகாறும் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புக்களை மாற்றியும் வட்டி வீதங்களை மாற்றியும் அதிகாரிகளால் நாட்டிலுள்ள பணத்தைக் கட்டுப்படுத்த முடியும் என்று கூறினேம். ஆனல் வேறு சில முறைகளைக் கையாண்டும் அதிகாரிகளால் நாட்டிலுள்ள பண இருப்பைக் கட்டுப்படுத்த முடியும். இவை குறித்த விளக்கங்களை நான்காம் உட்பிரிவில் காணலாம். நாம் இனி இந்த அத்தியாயத்தில் விவாதிக்கும் விஷயங்கள் யாவும் இங்கிலாந்து நாட்டுப் பாங்கு முறையை ஒட்டியே அமைந்ததாகும். ஏனைய நாட்டுப் பாங்கு முறைகள் பற்றிப் பதினென்ரும் அத்தியாயத்திலும் பன்னிரண்டாம் அத்தியாயத்திலும் நாம் சுருக்கமாக விவாதித்துள்ளோம்.

## 2. பாங்கு டெபாசிட்டுக்களின் அளவு கட்டுப் படுத்தப்படும் விதம்

தன்னிடம் பொதுமக்கள் கொடுக்கும் சொத்தினம் எதுவாயினும் சரி (இந்தச் சொத்தினம் பாங்கு ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்கவேண்டும்) அதற்கு ஈடாகப் பாங்குப் டெபாசிட்டுக்களை உற்பத்தி செய்கின்றது. பாங்கிடம் பொதுமக்கள் கொடுக்கும் சொத்தினம் ரொக்கமாக இருக்கலாம்; அரசாங்கப் பத்திரமாக இருக்கலாம் அல்லது கடனைத் திருப்பித் தருவதற்கான வாடிக்கைக்காரரின் உறுதி மொழியாகக்கூட இருக்கலாம்; இவ்வாறு சொத்தினங்களுக்கு ஈடாக டெபாசிட்டுக்களை உற்பத்தி செய்யும்போது பாங்கு தன்னுடைய கணக்குப் புத்தகங்களில் தன்னுடைய வாடிக்கைக்காரரின் பெயரில் ஒரு குறிப்பிட்ட தொகையை வரவு வைக்கின்றது. நாம் இங்கு ரொக்கம் என்று குறிப்பிட்டது செக்குத் தீர்வகத்தின் மூலம் பாங்குகட்குக் கிடைக்கும் ரொக்கத்தையும் குறிக்கின்றது. செக்குத் தீர்வகத்தில் அங்கம் வகிக்கும் பாங்குகளின் கூட்டுத் தொகையோடு ஒப்பிடும்போது ஒரு பாங்கு எவ்வளவு சிறிய அளவினதாக இருக்கின்றதோ, அந்த அளவுக்கு

அந்தப் பாங்கு ரொக்கத்திற்கு ஈடாக உற்பத்தி செய்யும் டெபாசிட்டுக்களின் பங்கு அதிகமாக இருக்கும். இவ்வாறு ரொக்கத்திற்கு ஈடாக இந்தப் பாங்கு உற்பத்தி செய்யும் டெபாசிட்டுக்கள் அது பிறருக்குக் கடன் கொடுக்கும் போது உற்பத்தி செய்யும் டெபாசிட்டுக்களைவிட அதிகமாகவே இருக்கும். எனவே பல பாங்குகளை உடைய ஓர் அமைப்பில் டெபாசிட்டுக்கள் உற்பத்திபற்றித் தீர்க்கமாக அறிந்து கொள்ள விரும்புவோர் செக்குத் தீர்வகத்தினின்றும் பாங்குகட்கு எவ்வாறு ரொக்கங்கள் கிடைக்கின்றன என்று அறிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். கிரிக்கும் (Crick) ஏனையோரும் இது பற்றி மிக அருமையாக விளக்கம் தந்துள்ளார்.[1] பொது மக்களிடமிருந்து நேரடியாக ரொக்கத்தைப் பெறும்போதும் செக்குத் தீர்வகத்தினின்றும், ரொக்கத்தைப்பெறும் போதும் பாங்கு தானாக ஏதும் நடவடிக்கை எடுக்காமலேயே டெபாசிட்டுக்களை உற்பத்தி செய்யமுடிகின்றது.[2] (இவ்வாறு தாமாக ஏதும் நடவடிக்கை எடுக்காது தங்களிடம் பிறர் கொண்டு வந்து வரும் ரொக்கத்தின் அடிப்படையில் பாங்குகள் டெபாசிட்டுக்களை உற்பத்தி செய்வதால், தங்களால் (டெபாசிட்டுக்களை உற்பத்திசெய்ய முடியாது என்று பாங்கர்கள் கருதினர்.) செக்குத் தீர்வகத் தின் மூலம் ஒரு பாங்குக்கு ரொக்கம் வந்து சேரும்போது ஏனைய பாங்குகளின் ரொக்க இருப்பு இதே அளவுக்குக் குறைகின்றது. இவ்வாறு தன்னிடம் வந்து சேர்ந்த ரொக்கத்தின் அடிப்படையில் இந்தப் பாங்கு எவ்வளவு டெபாசிட்டுக்களை உற்பத்தி செய்யமுடியுமோ அதே அளவு, டெபாசிட்டுக்களை ஏனைய பாங்குகள் இழந்திருக்கும்.[3] எனவே செக்குத் தீர்வகத்தின் மூலம் தனக்குத் கிடைக்கும் ரொக்கங்களின் அடிப்படையில் ஒரு பாங்கு தன் டெபாசிட்டுக்களை அதிகரித்துக்கொள்ள முடிந்தாலும் மொத்த டெபாசிட்டுக்களில் எந்த விதமான மாற்றமும் நேராது. இது பொதுவான விதியாகும். இந்த விதிக்கும் ஒரு விலக்கு உள்ளது. தங்கம், அயல்நாட்டுச் செலாவணி, மற்றும் பத்திரங்கள் ஆகிய

1 W. F. Crick, The Genesis of Bank Deposits,' Economica, June 1927 (Reprinted on pp. 41-53 of 'Readings in Monetary Theory,' A.E.A Series, London. 1952) Cf. J. M. Keynes, 'Treatise on Money'' Vol· I pp. 23-30.

2 தங்களிடம் அதிகமான அளவில் ரொக்கம் வந்து சேருவதற்காகப் பாங்குகள் சில சமயம் தாமாகச் சில நடவடிக்கைகளை எடுக்கலாம். உதாரணமாக, சேமிப்பு டெபாசிட்டுக்களை அதிக அளவில் கவருவதற்குப் பாங்குகளிடையே கடுமையான போட்டிகள் இருக்கலாம். இங்கிலாந்துப் பாங்குகள இம்மாதிரி நடந்து கொள்வதில்லை. ஆனால் வேறு பல நாடுகளிலுள்ள பாங்குகள் இம்மாதிரி நடந்துகொள்கின்றன.

3 இப் பத்தியிலும் அடுத்துவரும் இரண்டு பத்திகளிலும் நாம் 'பாங்குகள்' என்ற சொல்லைப் பயன்படுத்தும்போது அது மையப் 'பாங்குகளை நீக்கி வாணிகப் பாங்குகளை மட்டும் குறிக்கின்றது' என்று கொள்ள வேண்டும்.

சொத்துக்களை மையப் பாங்கு விலைக்கு வாங்கும் போது, பாங்குகள் யாவும் செக்குத் தீர்வகத்தினின்றும் ரொக்கம் பெறும் எனவே, சொத்துக்களை விலைக்கு வாங்கும் போது மையப் பாங்கு ரொக்கத்தை உற்பத்தி செய்கின்றது எனலாம்.

இவ்வாறு மிகுதியாக மையப் பாங்கால் உற்பத்தி செய்யப்படும். ரொக்கத்தின் விளைவால் மொத்த டெபாசிட்டுகள் அதிகமாகும். மேலும் மக்கள் தம்மிடம் இருப்பாக வைத்திருக்கும் ரொக்கத்தைக் குறைத்துக் கொண்டால் பாங்குகளால் மொத்த டெபாசிட்டுகளை அதிகரிக்க முடியும். இம் முறையில் டெபாசிட்டுகளைப் பெருக்க வேண்டியது சில சமயங்களில் அவசியமானதாகும். உதாரணமாக இத்தாலியில் உலகப் போருக்குப்பின் பொதுமக்கள் குறைந்த அளவே ரொக்கத்தை வைத்திருப்பதால் பாங்குகளால் டெபாசிட்டுக்களைப் பெருக்க முடிந்துள்ளது.

இதுகாறும் மொத்த டெபாசிட்டுகளை எந்தெந்த வழிகளில் அதிகரிக்க முடியும் என்று கண்டோம். அந்த வழிகளைச் சுருக்கமாகக் கீழே தந்துள்ளோம்:

1. பொதுமக்கள் குறைந்த அளவு ரொக்கமும் பெருமளவு டெபாசிட்டுகளும் வைத்திருக்க விரும்பினுல் மொத்த டெபாசிட்டுகள் அதிகமாகும்.

2. தங்களுடைய 'ஊதியச் சொத்துகளைச்' (earning assets) அதிகரிப்பதன் மூலம் பாங்குகள் மொத்த டெபாசிட்டுகளை அதிகரிக்க முடியும். பத்திரங்களை விலைக்கு வாங்கியும் வாடிக்கைக்காரர்கட்கு அட்வான்சுகள் கொடுத்தும் பாங்குகள் தங்களுடைய சொத்துகளை அதிகமாக்கலாம்.

3. தங்கம், அயல்நாட்டுச் செலாவணி, மற்றும் பத்திரங்கள் ஆகியவற்றை மைய பாங்கு விலைக்கு வாங்கும்போது மொத்த டெபாசிட்டுகள் அதிகமாகும்.

மேற்குறித்த மூன்று வழிகளில் இரண்டாவது வழி மூலமும் மூன்ருவது வழி மூலமும் மொத்த டெபாசிட்டுகள் அதிகமாகும் போது நாட்டின் பொருளாதார அமைப்பின் நீர்மைத் தன்மை பாதிக்கப்படும்; மக்களது செலவிடும் ஆற்றல் பாதிக்கப்படும்; மற்றும் நாட்டில் விலைவாசிகளின் அளவும் பண வருமானங்களின் (money incomes) அளவும் மாற்றமுறும். இவ்வாறு நாட்டின் பொருளாதார அமைப்பில் மாற்றங்கள் நேருவதால் பொதுமக்களின் ரொக்கத்தேவை மேலும் சிறிது அதிகமாகும். தங்களுடைய மிகுதியான ரொக்கத் தேவையை நிறைவேற்றும் எண்ணத்தோடு

மக்கள் பாங்குகளை அணுகுவர். இதன் விளைவாகப் பாங்குகளின் டெபாசிட்டுகள் ஓரளவு குறையும். எனினும் இவ்வாறு வீழ்ச்சியுறும் டெபாசிட்டுகளின் அளவு ஆரம்பத்தில் (இரண்டாம் வழி மூலமும் மூன்றும் வழி மூலமும்) அதிகரித்த டெபாசிட்டுகளின் அளவை விடக் குறைவாகவே இருக்கும். மொத்த டெபாசிட்டுகள் இவ்வாறு குறைவதைத் தடுக்கவேண்டுமானால், மையப் பாங்கு புதிதாக அதிகமான அளவில் ரொக்கத்தை உற்பத்தி செய்யவேண்டும். இவ்வாறு டெபாசிட்டுகள் குறைவதால் பாங்குமுறை எந்த அளவுக்குப் பாதிக்கப்படும் என்ற வினவுக்கான பதிலும், மேலே நாம் குறிப்பிட்ட மூன்று வழிகளிலும் முதலாவது வழி எவ்வளவு இன்றியமையாதது என்ற வினவுக்கான பதிலும், இரண்டு விஷயங்களைப் பொறுத்ததாகும். நாட்டில் புழக்கத்தில் இருக்கும் பாங்கு டெபாசிட்டுகள், நோட்டுகள் ஆகியவற்றில் நோட்டு களுக்கு மக்கள் கொடுக்கும் முக்கியத்துவம் ஒரு விஷயமாகும்; நோட்டுகளைப் பொதுமக்கள் எக் காலத்திலும் ஒரே அளவில் பயன்படுத்துகின்றனரா என்பது இரண்டாவது விஷயமாகும். நோட்டுகளை அதிகமாக இருப்பு வைத்திருக்கும் பழக்கம் பொது மக்களிடம் இருந்தாலும் சேமிப்பு டெபாசிட்டுக்களைப் பெருமளவில் வைத்திருக்கும் பழக்கம் மக்களிடம் இருந்தாலும், பாங்குகளுடைய முயற்சி ஏதுமின்றியே மொத்த பாங்கு டெபாசிட்டுகளில் மாற்றங் கள் நேரும். பொதுவாகக் கள்ளச் சந்தையில் வியாபாரத் தொடர் புடையோர் தம்மிடம் அதிக அளவில் நோட்டுகளை வைத்திருக் கின்றனர். எனவே கள்ளச் சந்தை வியாபாரம் குறையும்போதும், பாங்குகளின் மீது பொதுமக்களின் நம்பிக்கை மேலும் மேலும் அதிகரிக்கும்போதும், மேற்குறித்தவாறு பாங்குகளின் முயற்சி ஏதுமின்றியே நாட்டிலுள்ள மொத்த டெபாசிட்டுகளின் அளவு மாற்றமுறும் (அதாவது அதிகமாகும்). பணத்தின் மதிப்பில் பொது மக்களுக்கு அசைக்கமுடியாத நம்பிக்கை ஏற்படுவதையொட்டி, தம் பேரங்களைத் தீர்ப்பதற்குச் சேமிப்பு டெபாசிட்டுகளைவிட நோட்டுகளே உகந்தவை என்று மக்கள் கருதினாலும், ஏனைய சொத்து இனங்களைவிட நோட்டுகளே விரும்பத் தக்கவை என்று மக்கள் கருதினாலும், பாங்குகளின் முயற்சி ஏதுமின்றியே மொத்த டெபாசிட்டுகளில் மாற்றங்கள் நேரும் (அதாவது குறையும்). 1945 ஆம் ஆண்டு முதல் பாங்குகளின் முயற்சி ஏதுமின்றியே மொத்த டெபாசிட்டுகள் உயருவதற்குச் சாதகமான சூழ்நிலை இத்தாலியில் உருவாகியுள்ளது. அங்கு மொத்த டெபாசிட்டுகள் அக் காலந்தொட்டுப் பெரும்பாலும் மக்களின் நடவடிக்கை களாலேயே தீர்மானிக்கப்படுகின்றன.

ஏனைய வகையைச் சேர்ந்த பணங்களுக்கான தேவைகளோடு ஒப்பிடும்போது நோட்டுகளுக்கான தேவை இங்கிலாந்தில்கூடப்

பெருமளவு மாற்றமுற்றிருக்கின்றது. உலக யுத்தங்கட்கு முற்பட்ட காலத்திற்கும், உலக யுத்தங்கட்குப் பிற்பட்ட காலத்திற்கும் இடையே பாங்கு டெபாசிட்டுகள் எந்த அளவுக்கு அதிகரித்துள்ளனவோ, அதைவிட அதிகமான அளவுக்குப் புழக்கத்தில் உள்ள நோட்டுகள் அதிகரித்துள்ளன; இதேபோலத் தேசீய வருமானம் (National Income) எந்த அளவுக்கு அதிகரித்துள்ளதோ, அதைவிட அதிகமான அளவுக்குப் புழக்கத்தில் உள்ள நோட்டுகள் அதிகரித்துள்ளன. மேலும் உலக யுத்தங்கட்குமுன் புழக்கத்திலிருந்த நோட்டுகள், பாங்கு டெபாசிட்டுகள், தேசீய வருமானம் – ஆகியவற்றிற்கிடையே நிலவிய விகிதங்களின் அளவுகள் உலக யுத்தங்கட்குப் பின் பெரிதும் மாற்றம் அடைந்துள்ளன. இவ்வாறு நேர்ந்திருக்கும் மாற்றத்திற்குக் காரணம் இங்கிலாந்தில் ஏற்பட்டிருக்கும் 'வேலை நிறைவே' (full employment) ஆகும். இதன் விளைவாக மக்கள் எப்பொழுதும் தங்கள் கையில் போதுமான அளவு ரொக்க இருப்பு வைத்திருக்கின்றனர். இருப்பினும் 1947-48 ஆம் ஆண்டுகளில் புழக்கத்திலிருந்த நோட்டுகளின் அளவு குறைந்தது. சில குறிப்பிட்ட கள்ளச்சந்தை நடவடிக்கைகள் குறைய நேர்ந்ததே இதற்குக் காரணமாக இருக்கவேண்டும். ஆனால் மீண்டும் 1951–55-ல் புழக்கத்திலிருந்த நோட்டுகள் அதிகமாயின.[1] இங்கிலாந்தில் இவ்வளவு மாற்றங்கள் நேர்ந்தபோதிலும் பாங்குமுறை எந்த வகையிலும் பாதிக்கப்படவே இல்லை. இந்த மாற்றங்கள் குறித்து ஆராய்ச்சி செய்யும் நிபுணர்களைத் தவிர வேறு யாரும் இந்த மாற்றங்களை உணரவே இல்லை. இங்கிலாந்

[1] கீழே தரப்பட்டுள்ள புள்ளி விவரங்கட்கு யாம் பேராசிரியர் எச். ஜான்சனுக்குக் கடமைப்பட்டுள்ளோம் :

புழக்கத்தில் இருக்கும் நோட்டுகளும் காசுகளும்

(பாங்குகளிலுள்ள இருப்புகளும் இதில் அடங்கும்,)

| ஆண்டு | £மிலியன்கள் | ரொக்கம் (சதவீதம்) | நிகர டெபாசிட்டுகள் (சதவீதம்) | நிகர நடப்பு டெபாசிட் கணக்குகள் (சதவீதம்) |
|---|---|---|---|---|
| 1938 | 442 | 198 | 19·7 | 37·3 |
| 1945 | 1,263 | 346 | 27.8 | 42·4 |
| 1947 | 1,361 | 296 | 25·0 | 38 9 |
| 1948 | 1,239 | 262 | 21·7 | 33·9 |
| 1951 | 1,291 | 261 | 21·8 | 33·4 |
| 1955 (முதல் எட்டு மாதங்கட்கு மட்டும்) | 1,640 | 320 | 26.4 | 42·7 |

தின் பண அதிகாரிகள் இம் மாற்றங்களைச் சமாளிக்க ஆவலுடனும் ஆற்றலுடனும் பல மாற்று நடவடிக்கைகள் எடுத்தமையால், இங்கிலாந்து நாட்டுமக்கள் இம் மாற்றங்களை உணரவில்லை. அவ்வப்போது சில குறிப்பிட்ட காலங்களிலும், சில குறிப்பிட்ட வாரங்களிலும், பொதுமக்கள் நோட்டுகளை அதிகமாக விரும்பும் போது அவற்றால் நேரக்கூடிய விளைவுகளையும் பண அதிகாரிகள் பொருத்தமான வகையில் ஆற்றலுடன் சமாளித்து வருகின்றனர். எந்தெந்த முறைகளைக் கையாண்டு அதிகாரிகள் இம்மாதிரியான நிலைமைகளைச் சமாளிக்கின்றனர் என்று ஏற்கெனவே ஐந்தாம் அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம். எனவே இந்த அத்தியாயத்தில் எஞ்சியுள்ள பகுதிகளில் இம் மாதிரியான நிலைமைகளைச் சமாளிக்க அதிகாரிகள் கைக்கொள்ளும் முறைகள் குறித்து எதுவும் கூறாமல் செல்கின்றோம்.

தற்மயம் இங்கிலாந்தில் பாங்கு டெபாசிட்டுகளின் அளவு குறிப்பிட்ட நால்வரின் நடவடிக்கையைப் பொறுத்திருக்கின்றது. அந் நால்வரின் பெயர் வருமாறு :

1. 'அதிகாரிகள்'—கருவூலத்துடனும் ஏனைய அரசாங்க நிதிகளுடனும் இணைந்து இங்கிலாந்துத் தலைமை பாங்கு நடவடிக்கைகள் எடுக்கும்போது அது இவ்வாறு அழைக்கப்படுகின்றது,

2. இலண்டன் தீர்வுப் பாங்குகள்—இவற்றை நாம் இனி 'பாங்குகள்' என்றே குறிப்போம்.

3. உண்டியல் கழிவகங்கள்.

4. பொதுமக்கள் தீர்வுப் பாங்குகள் நீங்கலாக உள்ள ஏனைய பாங்குகளும், (வெளிப்பிரதேச பாங்குகள்—'The Outside Banks') ஏனைய நிதி நிறுவனங்களும் இதில் அடங்கும்.[1]

மேலே குறித்துள்ள நால்வரின் சொத்துக்களையும், பொறுப்புகளையும் நம்முடைய வசதிக்கு ஏற்பக் கீழே கொடுத்துள்ளபடி வகைப்படுத்தி யுள்ளோம்.

1 ஸ்காட்லாந்தைச் சேர்ந்த பாங்குகள் யாவும் நாம் மேலே குறித்துள்ள 'வெளிப்பிரதேச பாங்குகள்' என்ற தலைப்பின்கீழ் இடம்பெறுகின்றன. ஸ்காட்லாந்து பாங்குகட்கும் இலண்டன் தீர்வுப் பாங்குகட்கும் இடையே வேறுபாடுகள் உள்ளன. ஸ்காட்லந்துப் பாங்குகளினின்றும் தீர்வுப் பாங்குகளை வேறுபடுத்திக் காட்டும் நோககத்துடன் தான், நாம் இங்கு 'இங்கிலாந்து' என்ற தலைப்பின்கீழ் 'ஸ்காட்லாந்தை'ச் சேர்க்கவில்லை.

(a) ரொக்கம்

(b) கருவூல உண்டியல்களும் குறுங்காலப் பத்திரங்களும் (குறுங்காலப் பத்திரங்கள், உண்டியல் கழிவகங்கள் கையாளும் வகையைச் சேர்ந்தவையாகும்)

(c) உண்டியல் கழிவகங்கட்கு பாங்குகளால் கொடுக்கப் படும் 'நாள் நிலுவைக் கடன்கள்'

(d) பாங்குகள் தங்கள் முதலீட்டுத் துறையில் வைத்திருக்கும் அரசாங்கப் பத்திரங்கள் (இவை உண்டியல் கழிவகங்கள் கையாளும் பத்திரங்களைவிட அதிக ஆயுளை உடை யவை).

(e) பாங்கு டெபாசிட்டுகள்

(f) ஏனைய சொத்துகள்

(g) பாங்கு அட்வான்சுகள்

(a) ரொக்கம் அதிகாரிகளால் உற்பத்தி செய்யப்படுகின்றது. பாங்குகளும் (பாங்குகள் தங்களுடைய டெபாசிட்டுகளில் 8 சதவீதத்தை ரொக்கமாக தங்களிடம் வைத்திருக்கின் றன) பொதுமக்களும் ரொக்கம் வைத்திருக்கின்றனர். உண்டியல் கழிவகங்கள் ரொக்க இருப்பு வைத்திருப்ப தில்லை.

(b) உண்டியல் கழிவகங்கள் மட்டுமின்றி, பாங்குகளும் பொதுமக்களும்கூட உண்டியல்களையும் ஏனைய பண மார்க்கெட் சொத்துக்களையும் வைத்திருக்கின்றனர். இந்தச் சொத்துகள் யாவற்றையும் உற்பத்தி செய்பவர் அதிகாரிகளேயாவர். பிறரிடம் இவற்றை விற்பதன்மூலம் அதிகாரிகள் ரொக்கத்தைக் குறைக்கின்றனர்; பிறரிடம் இவற்றை வாங்குவதன்மூலம் அதிகாரிகள் ரொக்கத்தை அதிகரிக்கின்றனர்.

(c) நாள் நிலுவைக் கடனைப் பொறுத்தவரையில் பாங்குகட் கும் (கடன் ஈவோர்) உண்டியல் கழிவகங்கட்கும் (கட னாளி) இடையே மட்டும் தொடர்பு உள்ளது.

(d) ஐந்து ஆண்டுகட்குமேல் ஆயுட் காலம் உடைய பத்திரங் களை உண்டியல் கழிவகங்கள் தம்மிடம் வைத்திருப்ப தில்லை, பாங்குகளிடமுள்ள பத்திரங்களின் அளவும் பொதுமக்களிடமுள்ள பத்திரங்களின் அளவும் காலத் திற்குக் காலம் மாறக்கூடியவை. பாங்குகள் நெடுங்காலப் பத்திரங்களைப் பெருமளவில் வைத்திருப்பதில்லை. பத்தி

ரங்களை வாங்குவதன்மூலமும் விற்பதன்மூலமும் அதிகாரிகள் ரொக்கத்தை அதிகரிக்கவும் குறைக்கவும் செய்கின்றனர்.

(e) அதிகாரிகளும் உண்டியல் கழிவகங்களும் குறிப்பிடத்தக்க அளவு பாங்கு டெபாசிட்டுகள் வைத்திருக்கின்றனர் என்று கூறமுடியாது. பாங்கு டெபாசிட்டுகள் பொதுமக்களின் சொத்துக்களாகவும் பாங்குகளின் பொறுப்புகளாகவும் திகழ்கின்றன.

(f) தங்களுடைய வாடிக்கைக்காரர்கட்குப் பாங்குகள் கொடுத்துள்ள அட்வான்சுகள் பொதுமக்களின் பொறுப்புகளாகவும் பாங்குகளின் சொத்துகளாகவும் திகழ்கின்றன.

(g) ஏனைய சொத்துகள் என்ற இனத்தின் கீழ் வேறு பல வகையான செல்வங்களும் (wealth) அடங்கும். உதாரணமாதப் பத்திரங்கள் (மேலே (a)(b) என்ற உட்பிரிவுகளின் கீழ்த் தரப்பட்டுள்ள பத்திர வகைகள் போக மீதமுள்ள பத்திர வகைகள்), வீடு, நிலம் போன்ற சொத்துகள், பொருள்கள் மற்றும் பல இந்த இனத்தின் கீழ் அடங்கும்.

மேலே கொடுத்துள்ள சொத்தினங்களையும் பொறுப்புகளையும் கீழே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையில் சுருக்கிக் கொடுத்திருத்திருக்கிறோம். இந்த அட்டவணையில் 'பொ' என்ற சொல் 'பொறுப்புகளையும்' liabilities) 'சொ' என்ற சொல் 'சொத்துகளையும் (assets) குறிக்கின்றன. அட்டவணை வருமாறு :

| | அதிகாரிகள் | பாங்குகள் | உண்டியல் கழிவகங்கள் | பொது மக்கள் |
|---|---|---|---|---|
| ரொக்கம் | பொ. | சொ. | ... | சொ. |
| உண்டியல்களும் குறுங்காலப் பத்திரங்களும் | பொ. | சொ. | சொ. | சொ. |
| நான் நிலுவைக் கடன் | ... | சொ. | பொ. | ... |
| இடைக்காலப் பத்திரங்களும் நெடுங்கால்ப் பத்திரங்களும் | பொ. | சொ. | ... | சொ. |
| பாங்க டெபாசிட்டுகள் | ... | பொ. | ... | சொ. |
| பாங்கு அட்வான்சுகள் | ... | சொ. | ... | பொ. |

மேலே கொடுக்கப்பட்டுள்ள அட்டவணையில் 'ஏனைய சொத்துகள்' என்ற இனம் இடம் பெறவில்லை. நாட்டின் பண சம்பந்தமான பேரங்களில் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்களாகிய 'அதிகாரிகள்' பாங்குகள், உண்டியல் கழிவகங்கள் ஆகியன.வ இச்சொத்தினங்களைப் பெருமளவில், தங்கள் பேரங்களில் கையாளுவதில்லை. எனவே இவற்றை விலக்கிவிட்டோம்.

மேலே கொடுத்திருக்கும் விளக்கங்களில் நம்முடைய வசதி குறித்துச் சில சாதாரண-முக்கியத்துவம் இல்லாதவிஷயங்களை ஒதுக்கிவிட்டோம் ; அவை வருமாறு :

1. இங்கிலாந்துத் தலைமை பாங்குக்குச் சில தனிப்பட்ட நபர்களும் வாடிக்கைக்காரர்களாக உள்ளனர். எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கும் சிறிது டெபாசிட் பொறுப்புகள் உள்ளன; அது பொதுமக்களுக்கு அட்வான்சுகளும் கொடுக்கின்றது.

2. பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங்கள் போக வேறு வகையைச் சேர்ந்த பத்திரங்களையும் (உதாரணமாகப் பொது வசதிக் கம்பெனிகள் வெளியிட்ட பத்திரங்கள்) மிகக் குறைந்த அளவில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு வைத்திருக்கிறது.

3. பாங்குகளும் உண்டியல் கழிவகங்களும் இவை தவிர 'வெளிப் பிரதேச பாங்குகளும்' தங்களிடம் குறைந்த அளவில் சாதாரண உண்டியல்களையும் வைத்திருக்கின்றன.

4. 'வெளிப் பிரதேச பாங்குகள் ('பொதுமக்கள்' என்று மேலே நாம் குறிப்பிட்டுள்ள தலைப்பின் கீழ் வருபவை இவை), ஏனைய நிதி நிறுவனங்கள் ஆகியவற்றினின்றும் கூட உண்டியல் கழிவகங்கள், நாள் நிலுவைக் கடன்கள் பெறுகின்றன. இவ்வாறு தீர்வகப் பாங்குகள் தவிர ஏனைய நிதி நிறுவனங்களிடமிருந்து இவை பெறும் கடன் வசதிகள் இவர்களின் மொத்தக் கடன் தேவைகளில் பாதிக்குக் குறையாமல் இருக்கும். உண்டியல் கழிவகங்களின் நடவடிக்கைகளைப் பொறுத்தவரையில் அவை ஏனைய பாங்குகளிடமிருந்தும், நிதி நிறுவனங்களிடமிருந்தும் பெறும் கடன்கள் முக்கியமானவை என்றாலும், இங்கு நாம் கொண்டுள்ள குறிக்கோளைப் பொறுத்தவரையில் இவற்றைப்பற்றி நாம் அறிந்துகொள்ள வேண்டியது அவசியமில்லை.

5. 'பொதுமக்கள்' என்ற தலைப்பின் கீழ் 'பங்குத் தரகர், (jobbers) களையும் நாம் சேர்க்கவேண்டும். இவர்களும் பாங்குகளிடமிருந்து ஓரளவுக்கு நாள் நிலுவைக் கடன்கள் பெறுகின்றனர்.

'வெளிப் பிரதேசப் பாங்குகளும்' (இவை இலண்டன் பாங்கர்களின் செக்குத் தீர்வக உறுப்பினர்கள் அல்லாத ஏனைய பாங்குகள்) டெபாசிட்டுப் பொறுப்புகள் உடையவை ; பொது மக்களுக்கு அட்வான்சுகளும் தருகின்றன எனினும் மேலே தரப்பட்டிருக்கும் விளக்கங்களில் இவற்றைப் 'பாங்குகள்' என்ற தலைப்பில் சேர்க்காமல் 'பொதுமக்கள்' என்ற தலைப்பில் ஏனைய நிறுவனங்களுடன் சேர்த்திருக்கிறோம். இந்த 'வெளிப் பிரதேச பாங்குகளின்' நடவடிக்கைகளும் பணக் கொள்கையைப் பொறுத்தவரையில் ஓரளவுக்கு முக்கியத்துவம் உடையவை; ஏனைய நிதி நிறுவனங்கள் தனிப்பட்ட நபர்கள் ஆகியோரால் செய்ய முடிவதுபோல இந்த 'வெளிப் பிரதேச பாங்குகளும்' தங்களிடமுள்ள நீர்மைத் தன்மைச் சொத்துகளின் பகிர்வை மாற்றியமைத்து நாட்டில் நிலவும் பணச் சூழ்நிலையை ஓரளவுக்கு மாற்றி அமைக்க முடியும். இவற்றையெல்லாம் நாம் மறுக்கவில்லை. எனினும் நாம் கீழே விளக்கப் போகும் நீர்மைத்தன்மை பற்றிய விதிகளைத் தீர்வுப் பாங்குகள் வழுவாது மிக்க கட்டுப்பாடுகளுடன் கையாளுவதைப்போல இவை கையாளுவதில்லை. நாட்டிலுள்ள மொத்த டெபாசிட்டுகளில் பெரும் பங்கு தீர்வுப் பாங்குகளின் பங்கேயாகும். எனவே பொருளாதார அமைப்பின் நீர்மைத்தன்மையைத் தீர்வுப் பாங்குகள் மாற்றி அமைக்க முடிவதுபோல இந்த வெளிப் பிரதேசப் பாங்குகளால் முடிவதில்லை. எனவே வெளிப் பிரதேசப் பாங்குகளை 'பாங்குகள்' என்ற இனத்தினின்றும் அகற்றிப் 'பொதுமக்கள்' என்ற இனத்தின் கீழ் அவற்றிற்கு இடம் தந்துள்ளோம்.

'ஊதியச் சொத்துகளை'ப் (earning assets) பாங்குகள் வாங்குவதையும் விற்பதையும் ஒட்டி டெபாசிட்டுகளின் அளவு தீர்மானிக்கப்படுகின்றது. இவ்வாறு தீர்மானிக்கப்படும் டெபாசிட்டுகளின் அளவு நாம் முந்திய அத்தியாயங்களில் குறித்துள்ள நிபந்தனைகட்கு உட்பட்டதாகும்.[1] தங்கள் வாடிக்கைக்காரர்கட்குப் பாங்குகள் கொடுக்கும் அட்வான்சுகளும், அரசாங்கப் பத்திரங்களும் நிறைய வருமானம் தரக்கூடிய சொத்துகளாகும். அரசாங்கப் பத்திரங்களைப் பொறுத்தவரையில் இடைக்காலப் பத்திரங்களும் நெடுங்காலப் பத்திரங்களும் மிகவும் இலாபகரமான சொத்துகளாகும்.[2]

[1] நாம் இங்குக் குறிக்க விரும்புவது இரண்டு நிபந்தனைகளாகும். முதலாவது நிபந்தனை அதிகாரிகள் பத்திரங்களின் அடிப்படையில் நடத்தும் வெளி மார்க்கெட நடவடிக்கைகளின் அடிப்படையில் அமைந்துள்ளது. ரொக்கம், டெபாசிட்டுகள் ஆகிய பண வகைகளில் மக்கள் ஒருகாலம் ரொக்கத்தைப் பெரிதும் விரும்பலாம்; பிறிதொருகாலம் டெபாசிட்டுகளைப் பெரிதும் விரும்பலாம். இதுவே இரண்டாவது நிபந்தனையாகும்.

[2] நெடுங்கால வட்டி வீதத்தைவிடக் குறுங்கால வட்டி வீதங்கள் சில சமயங் அதிகமாக இருக்கலாம். சில சமயம் உண்மையிலேயே நடைமுறையில் நெடுங்கால வட்டி வீதங்களைவிடக் குறுங்கால வட்டி வீதம் அதிகமாகவே இருக்கின்றது.

வாய்ப்பான சூழ்நிலை உருவாகித் தங்களுடைய மிகுந்த நீர்மைத் தன்மைச் சொத்துகளைக் குறைத்துக்கொள்ளலாம் என்று பாங்கர் எண்ணுகின்றனர் என்றும், மேலே குறிப்பிட்டதைப்போல மிகுந்த இலாபகரமான சொத்துகள் பெருமளவில் கிடைக் கக்கூடியவை என்றும் வைத்துக்கொள்வோம். அவ்வாறான நிலையில் பாங்கர்கள் அரசாங்கப் பத்திரங்களைப் பெருமளவில் வாங்க முனைவர்; மேலும் வாடிக்கைக்காரர்கட்குப் பெருமளவில் அட்வான்சுகள் தரத் தயாராக இருப்பர். இவ்வாறு மிகவும் ஆதாயகரமான சொத்துக்களைப் பாங்கர்கள் வாங்கும்போது டெபாசிட்டுகளின் அளவு உயரும். எனவே நாம் இங்குக் கவனத்தில் கொள்ளவேண்டிய விஷயங்கள் நான்காக அமைகின்றன. அவை வருமாறு :—

1. தங்களுடைய வாடிக்கைக்காரர்கட்குப் பெருமளவில் பாங்குகள் கடன் கொடுப்பதற்கான வாய்ப்புகள்.

2. பத்திர மார்க்கெட் நிலவரம்பற்றி (விலை உயர்வு அல்லது விலைச்சரிவு) பாங்குகள் கொள்ளும் கருத்து.

3. பாங்குகள் அனுசரித்துவரும் ரொக்க நிலைச் சொத்து விகிதங்கள்.

4. பாங்குகள் விலைக்கு வாங்கக்கூடிய நீர்மைத்தன்மை சொத்துகளின் அளிப்பு நிலை.

1951 ஆம் ஆண்டு வரை பெருமளவிலும், அதற்குப்பின் 1955 ஆம் ஆண்டு வரை சிறு அளவிலும் பாங்குகளின் நீர்மைத் தன்மையில் மிகவும் சீரான நிலை பரவியது. எனவே நாணயமான கடனாளிகள் என்று தாங்கள் கருதியவர்கட்கெல்லாம் கடன்களை வழங்கப் பாங்குகள் பெருவிருப்புடன் முன்வந்தன. அதிகாரிகள் பயன்படுத்திய கடன் தன்மைக் கட்டுப்பாடு (qualitative credit control) ஒன்றே இவர்களுடைய நடவடிக்கைகட்குத் தடையாய் அமைந்தது என்று கூறலாம். உலகப்போர் முடிவுற்றபின் சில ஆண்டுகள் பாங்குகளின் நீர்மைத்தன்மை உச்ச நிலையை

---

இருப்பினும், சாதாரண காலங்களில் குறுங்கால வட்டி வீதங்கள் வீழ்ச்சியுறலாம் என்று மக்கள் கருதும்போதே இம் மாதிரியான ஒரு நிலை தோன்றும். குறுங்கால வட்டி வீதம் நெடுங்கால வட்டி வீதத்தைவிட அதிகமாக இருக்க நேரினும், பொதுவாகத் தன்னுடைய நீர்மைத் தன்மையைக் குறைவுறாமல் காததுக் கொள்ள விரும்பும் போதே பாங்குகள் குறுங்காலப் பத்திரங்களை வாங்குகின்றன. ஊதியம் ஈட்டும் நோக்கம் முதன்மையாக இருந்தால் நெடுங்காலப் பத்திரங்களையே பாங்குகள் விரும்புகின்றன. கோட்பாட்டின் அடிப்படையில் (theoretically) நிலவும் ஒரு கருத்தை ஈண்டு யாம் குறிக்க விரும்புகிறோம். அஃது வருமாறு: முதலீடு செய்பவரின் தேவைகளைவிட நெடுங்காலப் பத்திரங்கள் குறைவாக இருக்க நேரிடலாம். எனவே, நெடுங்காலப் பத்திரங்களின் வட்டி வீதம் குறுங்காலப் பத்திரங்களின் வட்டி வீதத்தைவிடக் குறைவாக இருக்க முடியும்.

அடைந்து விட்டது என்றே கூறலாம். எனவே 'நாணயமான கடனுளி' என்பவர் குறித்துத் தாங்கள் வகுத்திருந்த இலக்கணத்தைப் பாங்குகள் சிறிது தளர்த்தின. 'எந்த அளவுக்குக் கடன்கள் கொடுப்பது தொழிலுக்கு உகந்தது', என்று தாங்கள் கருதிவந்த கருத்தைப் பாங்கர்கள் பெரிதும் மாற்றி அமைத்தனர். அரசாங்கத்தின் கட்டுப்பாடுகட்கிடையே எந்த அளவுக்குத் தங்களால் கடன் கொடுக்க முடியுமோ, அந்த அளவுக்குப் பாங்குகள் கடன் கொடுத்தன. இம்மாதிரியான சூழ்நிலைகளில் வாடிக்கைக்காரர்களின் தேவைகளே பெரும்பாலும் மொத்த பாங்கு அட்வான்சுகளைத் தீர்மானித்தன என்று கூறினுல் மிகையாகாது. நீர்மைத் தன்மை பாங்குகள் மிதந்து கொண்டிருந்தபடியால் பெருகிவரும் கடன் தேவைகளைப் பாங்குகள் பெருவிருப்புடன் பூர்த்தி செய்தன. பெருமளவு கடன் வசதிகளை ஏற்பாடு செய்ய வேண்டும் என்ற ஆவலால் உந்தப்பட்ட பாங்குகள் இதுகாறும் தாங்கள் கடைப்பிடித்துவந்த கட்டுப்பாடான விதிமுறைகளைக் கூடத் தளர்த்தி அமைக்கத் தயங்கவில்லை. 'தகுதியான பேரம் எது?' என்பது பற்றித் தாங்கள் இதுகாறும் கொண்டிருந்த கருத்தை மாற்றி அமைத்துப்பரந்த நோக்கத்தோடு பாங்கர்கள் செயலாற்றத் தலைப்பட்டனர். இவற்றின் விளைவால் பாங்குகள் தம் வாடிக்கைக்காரர்கட்குக் கொடுத்த அட்வான்சுகள் பெருகின. 1955 ஆம் ஆண்டின் ஆரம்ப காலத்தில் பாங்குகளின் நீர்மைத் தன்மை குறைந்து அவை தம் அட்வான்சுகளையும், முதலீடுகளையும் குறைத்துக்கொள்ள வேண்டிய கட்டாய நிலை நேர்ந்தபோது கூடத் தங்கள் வாடிக்கைக்காரர்கள் விரும்பிய அட்வான்சுகளுக்கு ஏற்பாடுகள் செய்வதையே பாங்குகள் பெரிதும் விரும்பின.[1] மிகுதியான இலாபங்களை ஈட்ட வேண்டும் என்ற விருப்பமும், தங்களுடைய வாடிக்கைகக்காரர்களின் நன்மதிப்பை இழந்துவிடக் கூடாது என்ற அவாவும், நீர்மைத் தன்மை குறைவுற்றிருந்த போதும் கூடப் பெருமளவில் அட்வான்சுகள் கொடுப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்ய பாங்குகளுக்குத் தூண்டுகோலாக அமைந்தன. தங்களிடமுள்ள பத்திரங்களை விற்றும், பெருகிவரும் அட்வான்சுத் தேவைகளைப் பூர்த்தி செய்யப் பெரு விருப்புடையோராய்ப் பாங்கர்கள் இருந்தனர். பத்திரங்களைப் பெருமளவில் விற்பதால் விலைச் சரிவு ஏற்பட்டு, அதனுல் தாங்கள் பாதிக்கப்

1 சாதாரணமாக அரசாங்கப் பத்திரங்களைவிட அட்வான்சுகளே பாங்கர்கட்கு மிந்த ஊதியத்தைத் தருகின்றன. ஏனெனில் அட்வான்சுகளின் வட்டிவீதம் அரசாங்கப பத்திரங்களிலிருந்தும் கிடைக்கும் வட்டி வீதத்தைவிட அதிகமாகவே இருக்கின்றது. பாங்கர்களின் தொழில் பொதுவாக அவர்களுடைய வாடிக்கைக்காரர்களின் நன்மதிப்பைப பொறுத்த ஒன்ருகும். தங்கள் வாடிக்கைக்காரர்கட்குத் தடையின்றி விருப்பத்துடன் பாங்குகள் கடன் வசதிகள் செய்துவந்தால், அவை வாடிக்கைக்காரர்களின் நன்மதிப்பைப் பெறலாம்.

பட்டாலும் குறையில்லை என்றுகூடப் பாங்குகள் எண்ணத் தலைப் பட்டன. ஆனால் நிலைமை அந்த அளவுக்குப் போய்விடாமல் அதிகாரிகள் நடவடிக்கை எடுத்தனர். ஜூலை மாதம் பாங்கு அட்வான்சுகளைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன், அதிகாரிகள் தங்களுடைய அதிகாரங்களைப் பயன்படுத்தினர். அரசாங்கத்தின் வேண்டுகோளுக்கு இணங்க 1958 ஆம் ஆண்டின் மத்தியப் பகுதிவரை பாங்குகள் தங்களுடைய அட்வான்சுகளை மட்டுப் படுத்தின. தடைகள் விலக்கப்பட்ட உடனேயே தங்களுடைய அட்வான்சுகளைப் பாங்குகள் மீண்டும் பெருமளவுக்குப் பெருக்கிக் கொண்டுள்ளன. தங்களுடைய நீர்மைத் தன்மை விகிதங்களைப் போற்றிக் காக்கும் விருப்புடன் பாங்குகள் பெருமளவில் பத்திரங் களை விற்றுள்ளன.

மிகுதியான நீர்மைத் தன்மை ஏற்பட்டிருந்த காலங்களில் பாங்குகள் தங்களுடைய அட்வான்சுகளை அதிகரிப்பதில் காட்டிய அளவுக்கு ஆர்வத்தைத் தங்களுடைய அரசாங்கப் பத்திர இருப் புக்களை அதிகரிப்பதில் காட்டவில்லை. அட்வான்சுகள் மூலம் கிடைக்கும் வருமானத்தைக் காட்டிலும் மிகுதியானவை என்பது உண்மையே. இருப்பினும் அரசாங்கப் பத்திரங்களும் திருப்தி கரமான வருமானத்தைத் தருவன என்பது மறுக்க முடியாது. ஆனால் அரசாங்கப் பத்திரங்களின் வட்டி வீத உயர்வால் அவற்றின் விலைகளில் சரிவு ஏற்பட்டு, பாங்குகட்குப் பெருமளவில் முதல்இழப்பு ஏற்பட வாய்ப்பு உண்டு. அவ்வாறு முதல் இழப்பு ஏற்பட்டால் பாங்குகளின் மொத்த சொத்துக்களின் மதிப்பு குறைந்துவிடும். இதைப் பாங்கர்கள் சிறிதும் விரும்பவில்லை. எனவே 1947 ஆம் ஆண்டு 'டால்டன் பரிசோதனை'[1] தோல்வி யுற்ற பின் தங்களுடைய நீர்மைத் தன்மை மிக உச்ச நிலையை எட்டிப் பிடித்த போதுங்கூடப் பாங்குகள் தங்களுடைய முதலீட்டுத் துறையில் எந்தவிதமான மாற்றங்களையும் செய்ய வில்லை. முன்பு எந்த அளவுக்கு பத்திரங்களை வைத்திருந்தனரோ, அதே அளவு பத்திரங்களைத்தான் தங்களுடைய நீர்மைத் தன்மை அதிகரித்தப் பின்னும் பாங்குகள் வைத்திருந்தன. குறுகிய ஆயுளை உடைய பத்திரங்களை வைத்திருப்பதிலேயே மிக்க நாட்ட முடையோராய்த் திகழ்ந்தனர். பரம்பரை பரம்பரையாகக் கையாண்டு வந்தமுறைகட்கு மாறுபாடாகத் தங்களிடமிருந்த காலவரையறையற்ற பத்திரங்களை விற்றனர். எனினும் இவ் வாறான மாற்றங்களால் பத்திரங்களின் தொகுதியிலேதான் மாற்றம் நேர்ந்தது என்பதையும், பத்திர இருப்புக்களின் அளவு

[1] அத்தியாயம் 7-ல் உட்பிரிவு 2-ல் கொடுத்திருக்கும் இது குறித்த விளக் கத்தையும் நோக்கவும்.

முன்பு போலவே அமைந்திருந்தது என்பதையும், நாம் குறித்துக் கொள்ள வேண்டியது அவசியமாகும். இம்மாதிரியான சூழ் நிலையில் அரசாங்கப் பத்திரம் என்ற சொத்தினத்திற்கு ஈடாக உற்பத்தி செய்யப்பட்டிருந்த டெபாசிட்டுகளின் மொத்த அளவு முன்பு இருந்த நிலையிலேயே அமைந் திருந்தது. மொத்த டெபா சிட்டுகளில் நேர்ந்த மாற்றங்கள் யாவும் பெருகிவந்த அட்வான்சுத் தேவைகளுக்கு ஈடாக உற்பத்தி செய்யப்பட்டவையே யாகும்.[1] 1951 ஆம் ஆண்டு இறுதியில் காலத்தில் குறுங்காலக் கடனை அதிகாரிகள் நெடுங்காலக் கடனாக மாற்றி அமைத்தனர். பாங்குகள் அதிகாரிகளுடன் ஒத்துழைக்குமாறு கட்டாயப்படுத்தப் பட்டன. இதன் விளைவாகப் பாங்குகளின் முதலீடுகள் உயர்ந்தன; தங்களிடம் எஞ்சியிருந்த நீர்மைத் தன்மைச் சொத்துகளில் பெரும் பகுதியைப் பாங்குகள் இழந்தன. இதே சமயம் பணக் கொள்கையில் நேர்ந்த மாற்றங்களின் விளைவால் நெடுங்கால வட்டி வீதங்கள் உயர்ந்தன; குறுங்கால வட்டிவீதங்களும் (இதனுள் பாங்கு அட்வான்சுகளுக்கு விதிக்கப்பட்ட வீதங் களும் அடங்கும்) மிக உயர்ந்தன. எனவே அட்வான்சுகள், பத்திரங்கள் ஆகிய இருவகையான சொத்தினங்களில் பாங்கர்கள் அட்வான்சுகளைப் பெரிதும் விரும்பத் தலைப்பட்டனர். பத்திரங்களை வெறுத்து ஒதுக்கலாயினர். இதுகாறும் தங்களுடைய முதலீடு களின் அளவில் எந்த மாற்றத்தையும் செய்ய விரும்பாமல் இருந்த பாங்கர்கள் முதலீடுகளைக் குறைப்பதில் ஈடுபட்டனர். குறிப்பாக 1955 ஆம் ஆண்டின் முதற்பகுதியில் தங்களுடைய அட்வான்சுகளைவிடத் தங்களுடைய பத்திரங்களின் இருப்பைக் குறைத்துக் கொள்வதே வசதியானது என்று பாங்குகள் எண்ணின.

முதலீடுகள், அட்வான்சுகள் ஆகிய சொத்தினங்கட்குப் பாங்குகள் கொடுக்கும் முக்கியத்துவம் பாங்குகளின் நீர்மைத் தன்மையைப் பொறுத்தே அமையும். எனவே முதலீடுகள், அட்வான்சுகள் ஆகியவை குறித்துப் பாங்குகள் கொண்டிருக்கும் கருத்தை மாற்றி அமைக்க விரும்பும் அதிகாரிகள் பாங்குகளின் நீர்மைத் தன்மையை மாற்றி அமைக்க வேண்டியது இன்றியமை யாததாகும். இவை குறித்து எட்டாம் அத்தியாயத்தின் இரண்

[1] 1947-51 ஆகிய ஆண்டுகட்கு உட்பட்ட காலவரையில் ஒரு சமயம் கருவூல உண்டியல்களின் அளிப்ப நிலையை ஓரளவுக்கு அதிகாரிகள் குறைத்தனர். இதைப் பெருமளவில் அதிகாரிகள் செய்யவில்லை. எனவே பாங்குகளின் உபரி ரொக்கத் தன்மையவும் அகற்றப்பட்டன என்று கொள்ளமுடியாது. மேலும் பாங்குகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் முகத்தான் இது அமைந்திருந் தது என்று கொள்ளவும் முடியாது. எனினும் அதிகாரிகளின் செயலால் பாங்கு கள் ஒருவழியில் பாதிக்கப்பட்டன. பாங்குகளின் மொத்த அட்வான்சுகள் எந்த அளவுக்கு உயர்ந்தனவோ, அந்த அளவுக்குப் பாங்குகளின் மொத்த டெபாசிட்டு கள் உயரவில்லை.

டாவது உட்பிரிவில் ஏற்கெனவே ஓரளவுக்கு விவாதித்துள்ளோம். பாங்குகள் கடைப் பிடித்து வரும் ரொக்க விகிதம் (cash ratio) பற்றியும், நீர்மைத் தன்மை சொத்துகள் விகிதம் (liquid-assets ratio) பற்றியும் இனி நாம் வாதிக்க வேண்டியுள்ளது.

1946 ஆம் ஆண்டு முதல் புறச்சோடனை (window-dressing) ஏதுமின்றி ஒவ்வொரு வாரமும் சராசரி 8% ரொக்க விகிதத்தைப் பாங்குகள் கையாண்டு வருகின்றன. 1955 ஆம் ஆண்டுதான் நீர்மைத் தன்மைச் சொத்துகளின் விகிதத்தை அதிகாரிகள் வலியுறுத்தினர். ரொக்க விகிதத்தைப் போற்றிக் கட்டுப்பாட்டுடன் காத்து வருவதுபோல, நீர்மைத் தன்மை சொத்துகளின் விகிதத்தையும் பாங்குகள் காத்து வருகின்றன என்று கூறமுடியாது. ஏனெனில் மாறி மாறி வரும் காலங்கட்கு ஏற்ப நீர்மைத்தன்மை சொத்துகளின் விகிதங்களைத் தங்களுடைய வசதிபோலப் பாங்கு மாற்றி அமைத்துக் கொள்கின்றன. அதிகாரிகளும் இதற்கு இணக்கம் தெரிவித்துள்ளனர்.[1] பாங்குகளின் நீர்மைத்தன்மை சொத்துகளின் விகிதம் காலத்திற்குக் காலம் வேறுபடுகின்றது. இருப்பினும், எந்தக் காலத்திலும் நீர்மைத்தன்மை சொத்துகளின் விகிதம் 30 சதவீதத்தை விடக் குறைவதே இல்லை. எனவே நீர்மைத்தன்மை சொத்துகளின் விகிதம் பொதுவாக 30% என்றே கருதப்படுகின்றது. பாங்குகள் உற்பத்தி செய்யும் டெபாசிட்டுகளின் அளவு. ரொக்க விகிதத்தைப் பொறுத்து அமைகின்றது என்று கூறுவதைவிட நீர்மைத்தன்மை சொத்துகளின் விகிதத்தைப் பொறுத்தே அமைகின்றது என்று கூறுவது மிகவும் பொருத்தமானதாகும்.

தங்களுடைய 8% ரொக்க விகிதத்தை வாணிகப் பாங்குகள் போற்றிக் காத்துக்கொள்ள அவற்றிற்கு எந்த அளவு ரொக்கம் தேவைப்படுமோ, அந்த அளவு ரொக்கத்தைப் பல ஆண்டுகளாக இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு தடையின்றி ஏற்பாடு செய்து வருகின்றது. மேலும் ரொக்கப் பற்றுக்குறை நேரும் காலங்களில் கூடப் பாங்குகளும், உண்டியல் கழிவகங்களும், முன்புபோலப் பதட்டம் அடைவதில்லை. இவ்வாறான காரணங்களால், பணத்தின் அளிப்பு நிலையை முன்பு எந்த அளவுக்கு ரொக்க விகிதத்தால்

[1] பாங்குகளின் ரொக்க விகிதம் நாளுக்கு நாள் மாறுகின்றது. அதிகாரிகளும் இதற்குத் தங்களுடைய இணக்கத்தைத் தெரிவித்துள்ளனர். இந்த விஷயத்தைப் பாங்குகள் மாதந்தோறும் வெளியிடும் புள்ளி விவரங்களினின்றும் நாம் அறிய முடியாது. பாங்குகளின் மாதாந்திர அறிக்கையில் கொடுக்கப்பட்டிருக்கும் வாராந்திர ரொக்க விகிதம் ஒரு குறிப்பிட்ட கிழமையன்று நிலவிய ரொக்க விகிதத்தையே குறிக்கின்றது. அதாவது வாரந்தோறும் புதன்கிழமைகளிலுள்ள நிலைமையை மட்டும் குறிக்கின்றது. காலத்திற்குக் காலம் நீர்மைத்தன்மை சொத்துகள் விகிதம்மாறுவது நாளுக்கு நாள் ரொக்க விகிதம் மாறுவதை ஒத்திருக்கின்றது எனலாம்.

தீர்மானிக்க முடிந்ததோ அந்த அளவுக்கு இப்பொழுது தீர்மானிக்க முடியவில்லை. 1941-51 முடிய ரொக்கத்தைப் பெருமளவில் இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு ஓர் இயந்திரம் போல வெளியிட்டு வந்தது என்று கூறலாம். அது போல இங்கிலாந்துத் தலைமை பாங்கு தற்சமயம் ரொக்கத்தைப் பெருமளவிற் உற்பத்தி செய்யவில்லை. இந்த உண்மையின் அடிப் படையில், பொன்திட்டம் கைக்கொள்ளப்பட்டு வந்த காலத்தில் நிலவியது போன்றதொரு சூழ்நிலை தற்சமயம் நிலவுகின்றது என்று எண்ணிவிடலாகாது. (பொன் திட்டம்-Gold Standard — கைக்கொள்ளப்பட்ட காலங்களில் சில கட்டுப்பாடுகட்கு உட்பட்டே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் ரொக்கத்தை உற்பத்தி செய்ய முடிந்தது). ரொக்கக் காப்பிருப்புகள் வைத்திருக் கும் நோக்கத்தோடு பாங்குகளும் தங்களுடைய அன்ருடப் பேரங்கட்குப் பயன்படுத்தும் நோக்கத்தோடு பொதுமக்களும் ரொக்கத்தைத் தங்களிடம் வைத்திருக்கின்றனர் ; உண்டியல் கழிவகங்களிடம் ஒரு சிறிதும் ரொக்கம் கிடையாது. இருப்பினும், உண்டியல் கழிவகங்களின் மூலமே தங்கட்குத் தேவைப்படும் ரொக்கத்தை பாங்குகள் இங்கிலாந்துத் தலைமை பாங்கிடமிருந்து பெறுகின்றன. உண்டியல் கழிவகங்கள் பாங்குகளிடம் கடன் வாங்கிய போதிலும் அவை தங்கள் பற்று வரவுக் கணக்குகளை ஈடுகட்டியே வைத்திருக்கின்றன ; அதாவது உண்டியல் கழிவகங் களிடம் ஒரு சிறிதளவும் ரொக்கம் இருப்பாகத் தங்குவதற்கு வாய்ப்பு இல்லை. பாங்குகளிடம் ரொக்கம் கட்டாயம் இருந்தேயாக வேண்டும் ; ஆகவே பாங்குகட்கு எப்படியாவது ரொக்கம் கிடைத்தே ஆகவேண்டும். எனவே இன்றுள்ள சூழ்நிலைகளில் ரொக்கப் பற்றுக்குறை நேருங் காலங்களில்கூடப் பாங்குகள் தங்களுடைய டெபாசிட்டுகளைக் குறைத்துக்கொள்ள வேண்டிய கட்டாயம் ஏதுமின்றிச் செயலாற்றிவர முடிகின்றது.

இங்கிலாந்து பொன்திட்டத்தைக் கைக்கொண்டிருந்த காலத் தில் கடைப்பிடிக்கப்பட்ட முறைகள், தற்சமயம் கடைப்பிடிக்கப் படும் முறைகளினின்றும் பெரிதும் மாறுபட்டவையாகும். பொன் திட்டம் நிலவிய காலத்தில், தங்களுடைய டெபாசிட்டுகள் குறைந் ததை ஒட்டி ரொக்கம் குறைவுறும்போது பாங்குகள் தங்களுடைய ரொக்க விகிதங்களைக் குறைத்துக்கொண்டு (பெரும்பாலும் 'புறச் சோடனை' இவ்வாறு செய்வதற்கு உதவியாக இருந்தது எனலாம்)[1]

[1] ரொக்க விகிதங்கள் பற்றி அதிகாரிகளின் நிபந்தனை ஏதும் அவ்வமயம் கிடையாது. மேலும் வெளிப பிரதேசப் பாங்குகள் பண மார்க்கெட்டில் மிகுந்த செல்வாக்குடன் திகழ்ந்தன. பாங்குகள் அவ்வமயம் ரொக்க விகிதத்தைச் சில சமயங்களில் குறைத்துக்கொண்டு செயலாற்றியதற்கு இவையும் காரணங் களாகும்.

யாதொரு சிரமமும் இன்றிச் செயலாற்றி வந்தன. டெபாசிட்டுகளும் ரொக்கமும் ஒரு சேரக் குறைந்த போதிலும், பாங்குகள் உதவிகோரி இங்கிலாந்துத் தலைமை பாங்கை அணுகவில்லை. நிலைமை மிகவும் முற்றுவிட்டது என்பது போன்ற சூழ்நிலை ஏற்படும் காலங்களில் தான் பாங்குகள் இங்கிலாந்துத் தலைமைப்பாங்கை அணுகவேண்டிய கட்டாயம் நேர்ந்தது. எனவே, இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு மார்க்கெட்டுக்குத் தேவைப்படும் ரொக்கத்தை வழங்க முன்வரும் காலங்கள், ரொக்கப் பற்றாக்குறை பெருமளவில் நேர்ந்த காலங்களாகக் கருதப்பட்டன. கடைநிலைக் கடன் ஈவோன் என்ற முறையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு, தான் விரும்பும் அளவுக்கு உதவி செய்து விட முடியாது. அதனிடமுள்ள தங்கக் காப்பு இருப்பு இடம் தரும் அளவுக்குத்தான் இங்கிலாந்துத் தலைமை பாங்கு உதவி செய்ய முடியும் எனவே, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கடைநிலைக் கடன் ஈவோனாகச் செயலாற்றத் தொடங்கிவிட்டது என்றால், நிலைமை மிகவும் மோசமாகிவிட்டது என்பதே பொருளாகும். மார்க்கெட்டில் இக்கட்டான சூழ்நிலை பரவும் காலங்களில், நிலைமையைச் சமாளிக்கும் நோக்கத்தோடு உண்டியல் கழிவகங்கள் புதிய உண்டியல்களை மிகக் குறைந்த அளவிலேயே கழிவு செய்ய வேண்டிய கட்டாயம் நேரும். (வர்த்தக பேரங்களை ஒட்டி வரையப்படும் உண்டியல்கள் அவ்வமயம் உண்டியல் கழிவகங்களிடம் பெருமளவில் இருந்தன.) பாங்குகளும் மிகவும் கட்டுப்பாடான முறைகளைக் கையாண்டு டெபாசிட்டுகளைக் குறைக்கவேண்டிய கட்டாயம் நேரும். இவ்வாறு அடுத்தடுத்து நேரக்கூடிய விளைவுகள் நாம் மேலே கொடுத்திருப்பதுபோல் உடனடியாக நேரா; சிறிது சிறிதான கால இடையீடுகளுடன் நெடுங்காலத்தில் இம்மாதிரியான இக்கட்டான நிலை மார்க்கெட்டில் நேரும் எனினும் மேலே கொடுக்கப்பட்ட விளக்கத்தினின்றும் ஓர் உண்மை புலனாகும்- பொன்திட்டத்தை இங்கிலாந்து கைக்கொண்டிருந்த காலங்களில் டெபாசிட்டுகளின் அளவு ரொக்கத்தின் இருப்பை ஒட்டியே தீர்மானிக்கப்பட்டது. பொன்திட்ட காலத்திற்குப் பின் நிலைமையில் படிப்படியாகப் பல வழிகளில் மாற்றங்கள் தோன்றியுள்ளன.[1] 1940-51 முடிய இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பெருமளவில் ரொக்கத்தை உற்பத்தி செய்யத் தயாராக இருந்தது; தேவை நேரும் போதெல்லாம் பண மார்க்கெட்டுத் தடையின்றி இங்கிலாந்துத் தலைமை பாங்கை அணுகி ரொக்கம் பெற்றது. ரொக்கப் பற்றாக்குறையால் டெபாசிட்டுகள் குறைக்கப்பட வேண்டும்

[1] வர்த்தக உண்டியல்களின் உபயோகம் பெருமளவில் குறைவுற்றது மிகவும் முக்கியமான ஒரு மாற்றதாகும்.

என்று முன்பு இருந்த நிலை மாறியது; அதாவது ரொக்கப் பற்றுக் குறையை ஒட்டி டெபாசிட்டுகள் குறையவில்லை.

1959ஆம் ஆண்டு நிலவும் சூழ்நிலையை இனி ஆராய்வோம். பாங்குகளின் ரொக்க விகிதம் குறைவுற வாய்ப்பே இல்லை எனலாம்; பாங்குகள் யாவும் நிலையான ரொக்க விகிதங்களின் அடிப்படையில் செயலாற்றி வருகின்றன. ரொக்கங்களின் அளிப்பு நிலை பாங்குகளின் தேவைகளை ஒட்டி இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் தொடர்ந்து ஒழுங்கு செய்யப்பட்டு வருகின்றது. எனவே ரொக்க உற்பத்தியைப் பொறுத்தவரையில் இங்கிலாந்துத் தலைமை பாங்கு தொடர்ந்து இடையீடின்றிச் செயலாற்றிக்கொண்டே இருக்கின்றது எனலாம். 1940-51 முடிய, கைக்கொள்ளப்பட்ட முறைகட்கும், 1959.ல் கைக்கொள்ளப்படும் முறைகட்கும் இடையே முக்கியமான ஒரு வேறுபாடு உள்ளது. 1940-51 முடிய 'பின்புற வழி' (back-door) முறையைக் கையாண்டு 'மார்க்கெட் வீதங்களி'லேயே இங்கிலாந்துத் தலைமை பாங்கு மார்க்கெட்டுக்கு உதவி செய்து வந்தது. ஆனால் தற்சமயம் 'பின்புற வழி' முறையோடு, 'முன்புற வழிமுறையிலும்' (front-door method) உதவி செய்யும் உரிமையை இங்கிலாந்து தலைமைப் பாங்கு பயன்படுத்துகிறது. 'முன்புற வழி'யில் உதவி அளிக்கும்போது 'பாங்கு வீதத்தில்' தான் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மார்க்கெட்டுக்கு உதவுகிறது. தற்சமயம் இந்த முறையையே தலைமைப் பாங்கு பெரும்பான்மை பயன்படுத்துகிறது. எந்த அளவுக்கு 'முன்புற வழி' முறையைக் கையாண்டு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மார்க்கெட்டுக்கு உதவி செய்துவருகிறதோ, அந்த அளவுக்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் மார்க்கெட் வீதங்களைப் பாங்கு வீதத்தை ஒட்டி மாற்றி அமைக்க முடிகிறது. பாங்கு வீதத்தை (bank rate) நிர்ணயிக்கும் அதிகாரம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கே வழங்கப்பட்டிருக்கின்றது; மேலும் மார்க்கெட் நிலவரத்திற்கு ஏற்ப மையப்பாங்கு வெளி மார்க்கெட் நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றது. எனவே மார்க்கெட் வீதங்களையும் இங்கிலாந்து தலைமைப் பாங்கால் நிர்ணயிக்க முடிகிறது;[1] 'பின்புறவழி' முறையில் உதவி செய்வதைக் குறைத்துக்கொண்டு 'முன்புறவழி'யில் தண்டனை வீதமான 'பாங்கு வீதத்தில்' பெருமளவில் மார்க்கெட்டுக்கு உதவி செய்வதன் மூலம், இங்கிலாந்துத் தலைமைப்

1 மார்க்கெட் வீதத்தைத் தான் விரும்பும் அளவுக்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு உயர்த்த விரும்பினால், அதைப்பற்றிக் குறிப்பாக உண்டியல் கழிவகங்கட்குத் தலைமைப் பாங்கு முன்கூட்டியே உணர்த்தலாம். இருப்பினும் தற்சமயம் தான் நிலை நிறுத்த விரும்பும் மார்க்கெட் விதம்பற்றி இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ஏதும் முன்கூட்டியே அறிவிப்பதில்லை.

பாங்கு தன்னிச்சைப்படி மார்க்கெட் வீதங்களை உயர்த்த முடியும்,[1] மேலும் அவசியம் ஏற்பட்டால் பாங்கு வீதத்தை உயர்த்தியும் தன்னுடைய குறிக்கோளை மையப்பாங்கு நிறைவேற்றிக்கொள்ள முடியும். 1940-51 முடிய தன்னுடைய விருப்பு வெறுப்பு ஏதுமின்றி மார்க்கெட்டின் தேவையை ஒட்டி இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ரொக்கத்தை ஒழுங்குபடுத்தியது. இன்றுள்ள சூழ்நிலையிலும் தலைமைப் பாங்கு இதே முறையைத்தான் கையாண்டு வருகின்றது. சுருங்கக் கூறின், பாங்கு டெபாசிட்டுகளின் மொத்த அளவுக்கும், பொதுமக்களின் ரொக்கத் தேவைகட்கும், ஏற்றதொரு முறையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு ரொக்கத்தை ஒழுங்குபடுத்தி வருகிறது. எனினும் தன்னிடம் பணமார்க்கெட் பெறும் பணத்திற்கான வட்டி வீதத்தை நிர்ணயம் செய்யும் முழு உரிமையும் இங்கி இங்கிலாந்துத் தலைமைப் பாங்கையே சாருகின்றது. இதன் விளைவாக மார்க்கெட் வீதம்—கருவூல உண்டியல் கழிவு வீதம்—பாதிக்கப்படுகிறது. மார்க்கெட் வீதத்தில் நேரும் மாற்றத்தையொட்டிப் பத்திரங்களின் வீதங்களும் மாற்றமுற நேரலாம்.[2] மார்க்கெட் முழுவதும் வட்டி வீத உயர்வுக்கான அறிகுறிகள் தோன்றுவதால், விலைவாசிகளில் சரிவு ஏற்படப் போகின்றது

[1] இங்கு ஒரு முக்கியமான குறிப்பை நாம் குறிக்க விரும்புகிறோம். (தன்னுடைய கருத்தை வலியுறுத்துமுன்) இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு மார்க்கெட் நிலவரத்தைச் சரிவர ஆராய வேண்டும். ஆனால் இது எளிதான ஒரு காரியமன்று. உள்நாட்டில் ஓரிடத்தினின்று பிறிதோரிடத்திற்கு ரொக்கம் போவதும் வருவதும் சாதாரணமாக நடந்து கொண்டிருக்கின்றன. இவ்வாறான போக்கையும் வரவையும் முன்கூட்டித் தீர்மானிக்க முடியாது. இவை மிகவும் ஒழுங்கீனமான முறையில் நேர்ந்து கொண்டிருக்கின்றன. இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கு இது ஓர் இடையூறாக அமையலாம். மேலும் இலண்டனிலிருந்து நிதிகள் வெளி நாடுகளை நோக்கிச் செல்கின்றன; அவை இலண்டனை நோக்கியும் வருகின்றன. எனவே இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் மார்க்கெட் நிலவரத்தைச் சரிவரத் தீர்மானிக்க முடியாது போகலாம்.

[2] மார்க்கெட் வீதங்களும் பத்திர வீதங்களும் உயர்வதை ஒட்டி உண்டியல் கழிவகங்களிடமுள்ள பத்திரங்களின் இருப்பும், உண்டியல்களின் இருப்பும் பாதிக்கப்படலாம். தற்காலத்தில் இந்த வீதங்கள் உயருவதை ஒட்டி உண்டியல் கழிவகங்கள் பெரிதும் பாதிக்கப்படுவதில்லை. எவ்வளவு பணம் தங்கட்குக் கிடைக்குமோ, அந்த அளவுக்கு உண்டியல்களை விலைக்கு வாங்க உண்டியல் கழிவகங்கள் முன்வருகின்றன. உண்டியல்கள் தங்களிடம் தங்கியிருக்கும் காலங்களில் இவை இயக்க லாபமும் பெறுகின்றன. இதுபோலப் பத்திர இருப்பையும் இவை பெருக்க விரும்புவதில்லை. (எதிர் காலத்தில் ஒரு வேளை இழப்புக்கள் நேரலாம் என்று அஞ்சுவதே இதற்குக் காரணமாகும்.) மேலும் தற்சமயம் நேர்ந்துள்ள பத்திர விலைச் சரிவினால் இவை தங்களிடமுள்ள பத்திரங்களை விற்க முன்வருவதில்லை, விற்றால் இழப்பு நேரும் என்பதை இவை நன்கு அறியும். தாங்கள் விரும்பும் அளவுக்கு உண்டியல் கழிவகங்கள் பத்திரங்களை விலைக்கு வாங்க முடியாது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்குக்கும் உண்டியல் கழிவகங்கட்கும் இடையே ஏற்பட்ட உடன்பாடுகளை ஒட்டித் தங்கள் மூல தனங்களின் அடிப்படையில் ஒரு குறிப்பிட்ட அளவுக்குத்தான் உண்டியல் கழிவகங்கள் பத்திரங்களை விலைக்கு வாங்க முடியும். முன்பு உண்டியல் கழிவகங்களிடம் அரசாங்கப் பத்திரங்களே கிடையா; வர்த்தகப் பத்திரங்களே இருந்தன. எனவே மார்க்கெட் வீதங்கள் உயர்ந்து இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து தண்டனை வீதத்தில் உண்டியல் கழிவகங்கள் கடன் வாங்கவேண்டி நேர்ந்தபோது உண்டியல் கழிவகங்களின் சொத்துக்களின் இருப்பு பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கலாம்

என்ற தீர்மானமான கருத்து மார்க்கெட்டில் நிலவும். தங்களிடமுள்ள சொத்துகளின் இருப்பில் பாங்குகள் எந்த விதமான மாற்றமும் செய்யாத நிலையில், பத்திர விலைகள் குறைந்தால், பாங்கு டெபாசிட்டுகளின் அளவு எவ்விதத்திலும் பாதிக்கப்படுவதில்லை. இவ்வாறன்றிப் பாங்குகள் தங்களிடமுள்ள சொத்துகளில் சிலவற்றை விற்கின்றன என்று வைத்துக் கொண்டால், டெபாசிட்டுகள் குறையும்.[1] டெபாசிட்டுகள் எவ்வளவு குறைந்தனவோ, அந்த அளவில் 8 சதவீதத்துக்குச் சமமாகப் பாங்குகளிடமிருந்து ரொக்கம் வெளியேறும். இந்த ரொக்கம் உண்டியல் கழிவகங்களைப் போய் அடையும். உண்டியல் கழிவகங்களை வந்தடையும் உபரி ரொக்கத்தை அகற்ற இங்கிலாந்து தலைமைப் பாங்கு நடவடிக்கைகள் ஏதாவது எடுக்கவேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால் ஆரம்ப நிலையில் இங்கிலாந்துத் தலைமைப்பாங்கின் நடவடிக்கைகளால் அதிகரித்த கருவூல உண்டியல் கழிவு வீதம் குறைய நேரிடும். உண்டியல் கழிவு வீதங்களும், அட்வான்சுகளுக்குப் பாங்குகள் விதிக்கும் வட்டி வீதங்களும் பாதிக்கப்படுவதால், கடன் பெற விரும்பும் பொதுமக்கள் பாதிக்கப்படுவர். மார்க்கெட் வீதங்களில் (உண்டியல் கழிவு வீதமும் அட்வான்சுகளின்மேல் விதிக்கப்படும் வீதமும்) நேரும் மாற்றங்கள் சிறிதளவாக இருப்பினும் மொத்த டெபாசிட்டுகள் பாதிக்கப்படும்.

நாம் இதுகாறும் கூறியவற்றினின்றும் ஓர் உண்மை புலனாகிறது. ரொக்கத்தின் அளவை, தன்னிச்சைப்படி இங்கிலாந்துத் தலைமை பாங்கு தீர்மானிக்காமல் பண மார்க்கெட்டின் தேவைகளை ஒட்டியே தீர்மானிக்கின்றது. எனவே பணக்கொள்கையைப் பொறுத்தவரையில் ரொக்கத்தின் அளவு பெரிதும் முக்கியத்துவம் இல்லாத ஒன்ருகத் தோன்றுகிறது. எனினும் மார்க்கெட்டுக்கு ரொக்கத்தை வழங்கும்போது, தான் விரும்பும் வட்டி வீதத்தில்

[1] பத்திர மார்க்கெட்டையும், பங்கு மார்க்கெட்டையும், மற்றும் டெபாசிட்டுகளின் அளவினையும், பத்திர விலைச் சரிவு பாதிக்கும் என்று மேலே நாம் கூறியுள்ளோம். நாம் மேலே கொடுத்துள்ள விளக்கத்தில் சில சிக்கல்களைப் புகுத்தவில்லை. பத்திரங்களைப் பாங்குகள் விற்பனை செய்யும் போது தங்களுடைய டெபாசிட்டுகளை ஈடாகக் கொடுத்துப் பொதுமக்கள் பத்திரங்களை விலைக்கு வாங்குகின்றனர் என்று மேலே நாம் வைத்துக்கொண்டுள்ளோம். ஈண்டு நாம் ஓர் உண்மையை உணரவேண்டும். பங்குகளையோ, பத்திரங்களையோ வெளியிட விரும்பும் நிறுவனங்கள் பத்திரங்களின் விலைகள் குறைந்திருப்பதால் அவற்றைத் தற்சமயம் வெயிட விருமபாது தொடர்ந்து வாய்ப்பான சூழ்நிலை உருவாகும்வரை அவை பாங்குகளிடம் கடன் வாங்கிக்கொண்டே இருக்கும். இது எந்த அளவுக்கு நேருமோ அந்த அளவுக்குத் தங்களிடமுள்ள பத்திரங்களை அட்வான்சுகளாகப் பாங்குகள் மாற்றி இருக்கும், எனவே பாங்கு டெபாசிட்டுகள் குறையா. நிறுவனங்கள் எப்பொழுது பாங்குகளையோ, அன்றிப் பத்திரங்களையோ வெற்றிகரமாக வெளியிட்டுத் தாங்கள் பாங்குகளிடமிருந்து வாங்கியுள்ள கடன்களைத் திருப்பிச் செலுத்துகின்றனவோ, அப்பொழுதுதான் பாங்கு டெபாசிட்டுகள் குறையும்.

தான் இங்கிலாந்துத் தலைமை பாங்கு ரொக்கத்திற்கான ஏற்பாடு களைச் செய்கின்றது. இதனுல் நாட்டிலுள்ள மொத்த டெபாசிட்டு களில் மாற்றங்கள் நேரலாம் ஒரு குறிப்பிட்ட அளவு டெபாசிட்டு களும், ஒரு குறிப்பிட்ட அளவு ரொக்கமும் உகந்தவை என்று தீர்மானிக்கப்பட்டு, அந்த அடிப்படையில் இன்று பணமுறை செயல்பட்டு வருகின்றது என்று எண்ணுவது தவறு. இதற்கு மாருக அதிகாரிகள் விரும்பும் வண்ணம் ஒரு குறிப்பிட்ட வட்டிவீத அமைப்பு நிறுவப்பட்டு, இக் குறிப்பிட்ட வட்டிவீத அமைப்பை நிலைநாட்டத் தேவைப்படும் ரொக்கத்தை அதிகாரிகள் புழக் கத்தில் விடுகின்றனர் [1] இவ் வடிப்படையில்தான் இன்றைய பண முறை செயல்பட்டு வருகின்றது. குறுங்கால வட்டி வீதங்கள் போதுமான அளவுக்கு நிலையாக இருக்கவேண்டும் என்று அதிகாரிகள் விரும்புகின்றனர். தற்காலிகமாக மார்க்கெட்டில் தோன்றும் மாற்றங்கள் நிலைத்த வட்டி வீத அமைப்பைப் பாதிக் காதிருக்கும்பொருட்டு அதிகாரிகள் நிலைமைக்கு ஏற்றவகையில் ரொக்கத்தின் அளவை ஒழுங்கு செய்கின்றனர். எனவே ரொக்கத்தை உற்பத்தி செய்வதற்குத் தான் பெற்றிருக்கும் அதிகாரத்தின் அடிப்படையிலேயே மையப்பாங்கால் ஒரு நிலையான வட்டி வீத அமைப்பை நிறுவமுடியும் இவ் வகையில் பொருளாதார நிபுணர்கள் பரம்பரை பரம்பரையாக வலியுறுத்தி வந்த கருத்து (அதாவது ரொக்க இருப்பை ஒழுங்குபடுத்துவதன் மூலமே நாட்டின் பண நிலையைக் கட்டுப்படுத்த முடியும் என்ற கருத்து) எக் காலத்தும் பொருந்தக்கூடிய ஒன்ருகத் தோன்று கிறது.

இங்கிலாந்தில் தற்சமயம் ரொக்க விகிதம் நிலையாக 8 சத வீதத்தை ஒட்டி அமைந்திருக்கிறது, இந்த ரொக்க விகிதத்தைப் பாங்குகள் எப்பொழுதும் போற்றிக் காத்து வருகின்றன. எனவே தற்காலப் பாங்கு நிலைபற்றிய விவாதங்களில் ரொக்க விகிதம்பற்றி யாரும் விவாதிப்பதே இல்லை; இதைப் புறக்கணிக்கின்றனர் என்றே கூறலாம். கடந்த காலத்தில் பாங்குகளின் ரொக்க விகிதத்திற்கு முதலிடமும், பாங்குகளின் நீர்மைத் தன்மைச் சொத்துகளின் விகிதத்திற்கு இரண்டாம் இடமும் கொடுத்து வந்தனர். தற்காலத்தில் நிலைமை முற்றிலும் மாறி இருக்கின்றது.

1 இது எக்காலத்திலும் பொருந்தக்கூடிய உண்மை என்று கொள்வதற் கில்லை. தாங்கள் விரும்பினுல் வேருெரு முறையையும் அதிகாரிகள் கடைப்பிடிக்க லாம். ரொக்கத்தையும் மொத்த டெபாசிட்டுகளையும் தாங்கள் விரும்பிய வண்ண மே அமைத்துக்கொண்டு இவற்றிற்கு ஏற்றவாறு வட்டிவீதங்கள் அமையும் வகையில் தங்களுடைய நடவடிக்கைகளை அதிகாரிகள் ஒழுங்கு செய்துகொள்ள லாம். அதிகாரிகள் மொத்த பாங்கு அட்வான்சுகளை நிர்ணயிக்கின்றனர் என்று மேலே நாம் வைத்துக் கொண்டிருப்பதால் அதிகாரிகளால் வட்டிவீதங்களை மாற்றி அமைக்கமுடியாது.

நீர்மைத் தன்மைச் சொத்துக்கள் விகிதத்திற்கு முதலிடம் தரப் படுகின்றது. தங்கள் நடவடிக்கைகளால் பாங்குளிகள் நீர்மைத் தன்மைச் சொத்து விகிதத்தை அண்மையில் அதிகாரிகள் 30 சத வீதமாகத் குறைக்கமுடிந்தது. இவ்வாறு பாங்குகளின் நீர்மைத் தன்மைச் சொத்து விகிதம் குறைந்ததை ஒட்டி அவற்றின் முதலீடு களும் அட்வான்சுகளும் குறைந்தன. பாங்குகளிடமுள்ள நீர்மைத் தன்மைச் சொத்துகளின் அளவு அதிகரிக்கவும் குறையவும் ஏற்ற சூழ்நிலைகள் யாவை என்பதை அறிய முயலுவதே நமது விளக்கத் தின் அடுத்த கட்டமாகும். பாங்குகள் உண்டியல்களையும் நாள் நிலுவைக் கடன்களையும் தாம் நினைத்தபோது ரொக்கமாக மாற்ற முடியும். இதேபோல ரொக்கத்தை உண்டியல்களாகவோ, நாள் நிலுவைக் கடன்களாகவோ மாற்ற முடியும். எனவே பாங்குகளின் நீர்மைத் தன்மைச் சொத்துகளில் உண்டியல்களில் நாள் நிலுவைக் கடன்களும் இன்றியமையாதனவாகும். (தங்களுடைய மொத்த சொத்துகளில் எவ்வளவு சொத்துகளை உண்டியல்களாகவும், எவ்வளவு சொத்துகளை நாள் நிலுவைக்கடன்களாகவும் பாங்கு கள் பகிர்ந்துள்ளன என்பது குறித்து நாம் இங்கு அறியவேண்டிய அவசியமில்லை. நாள் நிலுவைக் கடன்கட்கும், உண்டியல்கட்கும் இடையே பெருமளவிலான வேறுபாடு எதுவும் கிடையாது.)

பாங்குகளின் நீர்மைத் தன்மை சொத்துகளை அதிகாரிகள் குறைக்க விரும்பும் பட்சத்தில் கீழே தரப்பட்டிருக்கும் முறைகளில் ஏதேனும் ஒன்றினைக் கடைப்பிடிக்கலாம். அவை வருமாறு:

1. கருவூல உண்டியல்களையும், குறுங்காலப் பத்திரங்களையும் பெருமளவில் வாங்குமாறு பொதுமக்களை அதிகாரிகள் தூண்டுவது முதல் முறையாகும். (முன்பு பாங்குகளிடம் கெடுவு காலத்தை அடைந்த உண்டியல்கள் எவ்வளவு இருந்தனவோ அவற்றிற்கும், உண்டியல் கழிவகங்களிடம் இருந்த உண்டியல்களும் குறுங்காலப் பத்திரங்களும் எவ்வளவோ அவற்றிற்கு ஈடாகப் பொதுமக்கள் அதிகாரி களிடமிருந்து வாங்கும் கருவூல உண்டியல்களும், குறுங் காலப் பத்திரங்களும் அமையவேண்டும்.)

2. பொதுமக்களிடமிருந்து தமக்கு வரக்கூடிய பணத்தைப் பயன்படுத்தித் தாங்கள் விலைக்கு வாங்கும் கருவூல உண்டியல்கள், குறுங்காலப் பத்திரங்கள் ஆகியவற்றிற் கான பணத்தை அதிகாரிகள் செலுத்துவது இரண்டாவது முறையாகும்.

மேலே குறித்துள்ள இரண்டு முறைகளில் எம்முறையைக் கையாண்டாலும் பாங்கு டெபாசிட்டுகள் குறையும். அதே

அளவுக்குப் பாங்குகளின் நீர்மைத் தன்மை சொத்துகளும் குறையும். எனவே, பாங்கு டெபாசிட்டுகட்கும் நீர்மைத் தன்மை சொத்துகட்கும் இடையே உள்ள விகிதமும் குறையும்.

பெருமளவில் குறுங்கால அரசாங்கத் தாள்களைப் பொதுமக்கள் விலைக்கு வாங்கக்கூடிய வாய்ப்பான சூழ்நிலைகளை அதிகாரிகள் உருவாக்கமுடியும். மார்க்கெட்டில் நிலவும் கருவூல உண்டியல்களின் கழிவு வீதத்தை அதிகாரிகள் தங்களுடைய நடவடிக்கைகளால் உயர்த்தலாம். பணமார்க்கெட் தம்மை அணுகும் போதெல்லாம் 'பாங்கு வீதத்திலேயே' பண உதவி செய்வதன் மூலமும், வேறு பல முறைகளைக் கையாளுவதன் மூலமும், குறுங்காலப் பத்திரங்களின் வட்டி வீதத்தை அதிகரிக்கலாம். இங்கு நாம் குறித்துள்ள குறுங்கால வட்டி வீதங்கட்குப், டெபாசிட் வீதத்திற்கும் இடையே உள்ள தொடர்புகள் மிகவும் இன்றியமையாதனவாகும். 1954 ஆம் ஆண்டு வரை டெபாசிட் வீதம், குறுங்கால வட்டி வீதங்களைவிட ஓரளவுக்கே குறைவாக இருந்தது. எனவே, தம்மிடமிருந்த டைம் டெபாசிட்டுகளைப் (time deposits) பொதுமக்கள் பெருமளவில் உண்டியல்களாகவும், குறுங்காலப் பத்திரங்களாகவும் மாற்ற முன்வரவில்லை. ஆனால், 1954ஆம் ஆண்டுக்குப் பின் நிலைமையில் ஓரளவு மாற்றங்கள் தோன்றியுள்ளன. தற்சமயம் பெரிய நிறுவனங்கள் தங்களிடம் தற்காலிகமாக ஆதாயமின்றிக் கிடக்கும் நிதிகளை ஆதாயகரமான குறுங்காலச் சொத்துகளாக மாற்றும் முயற்சியில் ஈடுபடுகின்றன. இதுபோன்ற காலங்களில் உண்டியல் வீதம், பத்திர வீதம் ஆகியவற்றிற்கும், டெபாசிட் வீதத்திற்கும் இடையே உண்மையில் கடும் போட்டி நிலவுகின்றது என்று கூறலாம் – அதாவது இந்த வீதங்கள் ஒன்றையொன்று விஞ்சும் வகையில் மாற்ற முறுகின்றன. பாங்கர்கள் யாவரும் டெபாசிட்டுகளுக்குக் கொடுக்கும் வீதம் ஒரே வீதமாக அமையவேண்டும்; மேலும் டெபாசிட் வீதம் பாங்கு வீதத்தைவிடப் பெருமளவு குறைவாக இருக்கவேண்டும்.[1] இவ்விரண்டு நிபந்தனைகளும் நிறைவேற்றப்படுமேயாயின் இம்முறையை (முதலாவது முறையை) வெற்றிகரமாகச் செயல்படுத்த முடியும்.

1 பாங்கு வீதத்தைவிட உண்டியல் கழிவு வீதங்கள் (அதாவது சிறந்த உண்டியல் கழிவகங்கள் எந்த வீதத்தில் கழிவு செய்யுமோ அந்தக் கழிவு வீதங்கள்) குறைவாக இருக்கவேண்டியது அவசியமாகும். அதிகப் பற்றுக் கடனுக்குப் பாங்குகள் விதிக்கும் வீதம், பாங்கு வீதத்தைவிட எவ்வளவு அதிகமாக இருக்க முடியும் என்பதற்கு இது ஒரு வரையறைபோலத் திகழ்கிறது. பாங்குகள் போதுமான அளவு வருவாய் ஈட்டவேண்டுமேயாயின், டெபாசிட் வீதங்களைவிட அதிகப் பற்றுக்கடன் வீதங்கள் அதிகமாகவே இருக்கவேண்டும்,

கருவூல உண்டியல்களையும், குறுங்காலப் பத்திரங்களையும், அதிகாரிகள் மீட்கும்போது பொதுமக்களிடமிருந்து அவர்கள் பெற பணத்தையே பயன்படுத்தவேண்டும் என்று இரண்டாவது முறை வலியுறுத்துகிறது. இந் நோக்கத்தை நிறைவேற்ற மூன்று வழிகளில் ஏதேனும் ஒன்றை அதிகாரிகள் கடைப்பிடிக்கலாம் : (a) அதிகாரிகள் தங்களுடைய நடப்புக் கணக்கில் (current account) மிகுதியான பணம் இருப்பதற்கான ஏற்பாடுகள் செய்வது. (அரசாங்கச் செலவுகளைவிட அரசாங்கத்திற்கு வரி மூலம் கிடைக்கும் வருமானம் மிகும்போது இம் மாதிரியான ஏற்பாடுகளைச் செய்யலாம்) (b) தங்கக் காப்பு இருப்புகள் அல்லது அயல் நாட்டுக் காப்பு இருப்புகள் ஆகியவற்றைக் குறைத்துக் கொள்வது. (c) நெடுங்காலப் பத்திரங்களை மக்களிடம் விற்பது. இம் மூன்று வழிகளில் முதல் இரண்டு வழிகளும் அரசாங்கத்தின் கொள்கைகளைப் பொறுத்தவையாகும். வரி, செலவு, அயல்நாட்டுச் செலாவணி மாற்றுவீதம் ஆகியவைகுறித்து அரசாங்கம் கடைப்பிடிக்கும் கொள்கைகளைப் பொறுத்தவையாகும். இக் கொள்கைகளைத் தாங்கள் கடைப்பிடிக்கும்போது குறுங்காலத்தில் பண மார்க்கெட்டில் நேரக்கூடிய விளைவுகளைப்பற்றி அரசாங்கம் கவலைப்படுவதே இல்லை. மூன்ருவது வழி தேசீயக் கடனை (national debt) ஒரு வகையினின்றும் இன்னொருவகையாக மாற்றுவதைக் குறிக்கின்றது (அதாவது தற்காலிகமான அரசாங்கக் கடன்களை நீண்டகால அரசாங்கக் கடன்களாக மாற்றுவதைக் குறிக்கின்றது.) (குறுங்கால நடவடிக்கைகளில் ஈடுபடும்) பண மார்க்கெட்டில் விளையக் கூடிய விளைவுகளைப்பற்றிக் கவலைப்படாமலேயே அரசாங்கம் இம்மூன்ருவது வழியையும் செயல்படுத்த முடியும். ஆனுல், 1950 ஆம் ஆண்டு முதல் பொருளாதார அமைப்பின் ரொக்கத் தன்மையைக் குறைக்கும் நோக்கத்துடனேயே அதிகாரிகள் தற்காலிகக் கடன்களை நெடுங்காலக் கடன்களாக மாற்றும் முயற்சிகளில் ஈடுபடுகின்றனர் என்பதை நாம் ஈண்டு வலியுறுத்த விரும்புகிருேம்.

மேற்குறித்த மூன்று வழிகளில் ஏதேனும் ஒரு வழியைக் கொண்டு பொதுமக்களின் பெயரிலுள்ள டெபாசிட்டுகளைத் தங்களுடைய பெயருக்கு அதிகாரிகளால் மாற்றமுடிகிறது என்று வைத்துக்கொள்வோம். இதன் விளைவாகப் பாங்குகளின் டெபாசிட்டுகள் குறையும். பாங்குகளின் டெபாசிட்டுகள் எந்த அளவுக்குக் குறைகின்றனவோ, அதே அளவுக்கு பாங்குகளின் நீர்மைத் தன்மை சொத்துகளும் குறையும். பாங்குகளின் நீர்மைத்தன்மை சொத்துகள் இரண்டு கட்டங்களில் குறையும். ஆரம்ப நிலையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள 'பாங்கர்களின் டெபாசிட்டுகளிலிருந்து 'பொதுத்துறைகளின் டெபாசிட்டு'களுக்குப் பணம்

மாறும்பொழுது, பாங்குகளின் நீர்மைத் தன்மை சொத்துகள் குறையும். இது முதல் கட்டமாகும். இரண்டாவது கட்டத்தில் நீர்மைத் தன்மை சொத்துகள் எவ்வாறு குறைய நேருகின்றது என்று இனிக் காண்போம். தங்களிடமுள்ள ரொக்கம் குறைந்த உடனேயே, தங்களுடைய 8 சதவீத ரொக்க விகிதத்தை மீண்டும் நிலைப்படுத்தப்படும் நோக்கத்துடன், தங்களிடமுள்ள உண்டியல் களைப் பாங்குகள் விற்கும்; மேலும் தாங்கள் உண்டியல் கழிவு மார்க்கெட்டுக்குக் கொடுத்துள்ள நாள் நிலுவைக் கடன்களை பாங்குகள் திரும்பப் பெறமுனையும். இவ்வாறு இரண்டாவது முறை யாகவும் பாங்குகளின் நீர்மைத் தன்மை சொத்துகள் குறைகின் றன. எனவே, பாங்குகளின் மொத்த டெபாசிட்டுகள் எந்த அளவுக்குக் குறைந்தனவோ, அவற்றிற்குச் சமமாகப் பாங்குகளின் மொத்த நீர்மைத் தன்மை சொத்துகளும் குறையும். இதை ஒட்டிப் பாங்குகளின் ரொக்கச் சொத்துகளின் விகிதமும் குறையும்.

இவ்வாறு குறைந்துள்ள நீர்மைத் தன்மை சொத்துகளின் விகிதம் போதுமான தொன்று அன்று என்று பாங்குகள் கருது மேயாயின் தங்களுடைய நீர்மைத் தன்மை சொத்து விகிதத்தை உயர்த்தும் முயற்சியில் அவை ஈடுபடும். அட்வான்சுகளையும் முதலீடுகளையும் குறைக்கும். இவ்வாறு தங்களுடைய அட்வான்சு களையும் முதலீடுகளையும் பாங்குகள் குறைக்கும்போது, மேலும் டெபாசிட்டுகள் குறைகின்றன. எனவே, அதிகாரிகள் முதலில் எடுக்கும் நடவடிக்கைகளால் பாங்குகளின் மொத்த டெபாசிட்டு கள் பல முறை குறைகின்றன. மேலே குறித்த மூன்று வழிகளில் ஏதேனும் ஒன்றினைக் கைக்கொண்டு மக்களிடமிருந்து டெபாசிட்டு களைத் தங்கள் பேருக்கு அதிகாரிகள் மாற்றும்போது டெபாசிட்டு கள் முதன் முதலில் குறைகின்றன; அடுத்துத் தங்களுடைய முதலீடுகளையும் அட்வான்சுகளையும் குறைக்கும்போது மறுபடியும் டெபாசிட்டுகள் குறைகின்றன. ஆரம்ப நிலையில் பாங்குகளின் நீர்மைத் தன்மை சொத்துகளின் விகிதம் 30 சதவீதமாக இருந் தது என்றும், அது குறைந்தபின் மீண்டும் தங்களுடைய முயற்சி யால் பாங்குகள் அதை 30 சதவீதமாகவே அமைத்துக்கொள்ள முடிகிறது என்றும் வைத்துக்கொண்டால், ஆரம்பத்தில் மக்களின் டெபாசிட்டுகள் எந்த அளவுக்கு அதிகாரிகளிடம் போய்ச் சேர்ந் தனவோ, (அதிக வரி வருமானம், அயல் நாட்டுச் செலாவணிக் காப்பு இருப்பைக் குறைத்தல், அல்லது பொதுமக்களிடம் பத்திர விற்பனை ஆகிய மூன்றனுள் ஏதாயினும் ஒன்றின் விளைவால் டெபாசிட்டுகள் மக்களிடமிருந்து அதிகாரிகட்குப் போய்ச் சேரும்). அவற்றின் $3\frac{1}{3}$ பங்குக்குச் சமமாக மொத்த டெபாசிட்டுகள் வீழ்ச்சி யுறும்.

பாங்கு டெபாசிட்டுகளின் அளவினை நேரடியாகத் தீர்மானிக்கக் கூடிய காரணிகளைக் (factors) கீழே சுருக்கமாகத் தந்துள்ளோம்.

1. விலைவாசிகளின் அளவும், வர்த்தக நடவடிக்கைகளின் அளவும்.

2. பொதுமக்கள் தங்களிடம் வைத்திருக்க விரும்பும் ரொக்கத்தின் அளவு.

3. பாங்குகள் ஏற்பாடு செய்யும் அட்வான்சுகளைப் பயன்படுத்துவது குறித்த பொதுமக்களின் விருப்பம்.

4. அட்வான்சுகட்கு ஏற்பாடு செய்யப் பாங்குகள் காட்டும் ஆவல். (தாங்கள் விரும்பும் கடனாளிகட்குப் பாங்குகள் ஏற்பாடு செய்யும் அட்வான்சுகளையே நாம் இங்குக் குறிக்கின்றோம்.)

5. பத்திரங்களை இருப்பாக வைத்திருப்பது குறித்த பாங்குகளின் விருப்பம்.

6. டெபாசிட்டுகட்கு ஈடாகப் பாங்குகள் வைத்திருக்க விரும்பும் நீர்மைத் தன்மை சொத்துகளின் விகிதம்.

7. ரொக்க விகிதங்கள் பற்றிய பாங்குகளின் கருத்து.

8. உண்டியல்கள், பத்திரங்கள் ஆகியவற்றைத் தங்களிடம் வைத்திருப்பது குறித்த பொதுமக்களின் விருப்பம்.

9. அரசாங்கத்தின் வரவுசெலவுத் திட்டங்களின் அளவு.

10. அரசாங்கத்தின் அயல் நாட்டுச் செலாவணிக் கொள்கையும், அதனால் அயல்நாட்டுச் செலாவணிக் காப்பு இருப்புகளில் நேரக்கூடிய மாற்றங்களும்.

11. தற்காலிகக் கடன்களை நெடுங்காலக் கடன்களாக மாற்றுவது குறித்த அதிகாரிகளின் நடவடிக்கை. (ஏற்கனவே வெளியிடப்பட்டுள்ள பத்திரங்களின் ஆயுளைக் கூட்டுவதும் குறைப்பதுமான அதிகாரிகளின் நடவடிக்கைகள் இதனுள் அடங்கும்.

12. ரொக்கத்தை உற்பத்தி செய்ய அதிகாரிகள் காட்டும் ஆர்வமும், ரொக்கத்தின் தேவை அதிகமாகும்போது அவற்றை அதிகாரிகள் பண மார்க்கெட்டுக்கு வழங்கும் போது விதிக்கப்படும் வட்டி வீதமும்.

மேலே தரப்பட்டுள்ள காரணிகளில் 9, 10, 11 மற்றும் 12 ஆகியவை பற்றி அதிகாரிகள் நேரடியான ஒரு முடிவுக்கு வரமுடியும். இருப்பினும் இவற்றுள் 9, 10 மற்றும் சில சமயங்களில் 11ங் கூடப் பண நிலை கருதிக் கடைபிடிக்கப்படாமல் வேறுபல காரணங்கட்காகக் கடைப்பிடிக்கப்படுகின்றன. நான்காவது காரணியை அதிகாரிகள் தங்களுடைய நடவடிக்கைகளால் நேரடியாகக் கட்டுப்படுத்த முடியும். இந்த முறையைப் பொதுவாக உலகப் போர் முடிந்த நாள்தொட்டு அதிகாரிகள் கையாண்டு வருகின்றனர். சிறப்பான முறையில் இது 1955-57 முடியக் கையாளப்பட்டது. ஐந்தாவது காரணியையும் அதிகாரிகள் தங்களுடைய நேரடியான நடவடிக்கையின் மூலம் கட்டுப்படுத்த முடியும். 1951லும், 1952லும் இம் முறையை அதிகாரிகள் கையாண்டனர். ஏழாவது காரணியையும், அதிகாரிகளால் தீர்மானிக்க முடியும். 1940ஆம் ஆண்டு முதல் இந்த ஏழாவது காரணி, அதிகாரிகளின் விருப்பத்திற்குக் கட்டுப்பட்டது. ஆறுவது காரணியும் அதிகாரிகளின் செல்வாக்கிற்குக் கட்டுப்பட்டது. 1955ஆம் ஆண்டு முதல் அதிகாரிகள் இதை வலியுறுத்தி வருகின்றனர்.

1, 2, 3 மற்றும் 8 ஆகிய காரணிகளைப் பொறுத்தவரையில் அதிகாரிகளின் நடவடிக்கைகள் நேரடியான விளைவுகளை ஏற்படுத்துவதில்லை. இவை நான்கும் (சில சமயங்களில் 4, 5, காரணிகள்) வட்டி வீதங்களின் செல்வாக்கிற்குக் கட்டுப்பட்டவை. வட்டி வீதங்களைப் பல வழிகளில் அதிகாரிகள் மாற்றி அமைக்க முடியும். குறிப்பாக, பதினோராம் காரணி குறிக்கும் முறையைக் கடைபிடித்தும், (குறுங்காலக் கடனை நெடுங்காலக் கடனாக மாற்றுவது) பன்னிரண்டாவது காரணி குறிக்கும் முறையைக் கையாண்டும் (பாங்கு வீதம் பற்றிய கொள்கையும் கழிவு வீதம் பற்றிய கொள்கையும்) வட்டி வீதங்களை அதிகாரிகளால் மாற்றி அமைக்க முடியும். செல்வாக்கைப் பயன்படுத்தல் (அதாவது மாற்றி அமைத்தல்) என்பது தீர்மானித்தல் என்பதைக் குறிக்காது. விலைவாசிகள், பொருளாதார நடவடிக்கைகள், பொதுமக்களின் ரொக்கத் தேவை மற்றும் பல, அதிகாரிகளின் நடவடிக்கைகளாலன்றி, ஓரளவுக்கு வேறு காரணங்களாலும் தீர்மானிக்கப்படுகின்றன. வட்டி வீதங்களின் அமைப்பைத் தாங்கள் விரும்பும் வண்ணம் அதிகாரிகள் மாற்றி அமைத்துக்கொள்ளலாம். நிதி நிறுவனங்களின் நடவடிக்கைகளை அதிகாரிகள் எந்த அளவுக்கு ஆற்றலுடன் கட்டுப்படுத்த முடியுமோ, அந்த அளவுக்கு அதிகாரிகள் தாங்கள் விரும்பும் வண்ணம் வட்டி வீதங்களின் அமைப்பை மாற்றி அமைக்க முடியும். வட்டி வீதங்களைத் தாங்கள் விரும்பும் வண்ணம் மாற்றி அமைக்கும் விருப்பத்தோடு அதிகாரிகள் நடவடிக்கைகள் எடுக்.

கும் போது, தாங்கள் விரும்பும் வண்ணம் டெபாசிட்டுகளையும் அரசாங்கப் பத்திரங்களின் கெடுவு காலங்களையும் அதிகாரிகள் அமைத்துக்கொள்ள முடியாது. அதேபோலத் தாங்கள் விரும்பும் வண்ணம் டெபாசிட்டுகளையும் அரசாங்கப் பத்திரங்களின் கெடுவு காலங்களையும் மாற்றி அமைக்கும் விருப்பத்தோடு அதிகாரிகள் நடவடிக்கைகள் எடுக்கும்போது, தாங்கள் விரும்பும் வண்ணம் வட்டி வீதங்களை அதிகாரிகள் அமைத்துக்கொள்ள முடியாது.

## 3. வட்டி வீதங்களின் அமைப்பு

பொதுமக்கள் பணத்தைப் பெருமளவில் செலவிடுகின்றனர் என்றும். அவ்வாறான செலவினங்களின் அளவை அதிகாரிகள் உடனடியாகக் கட்டுப்படுத்த விரும்புகின்றனர் என்றும் வைத்துக் கொண்டால், அதிகாரிகள் டெபாசிட்டுகளின் அளவை ஒழுங்கு படுத்துவதே உசிதமானது என்று தோன்றுகிறது. நிலைமைக்குத் தக்கவாறு டெபாசிட்டுகளைக் குறைக்கவோ (அதாவது பணச் சுருக்கத்தை ஏற்படுத்தவோ), டெபாசிட்டுகளை அதிகரிக்கவோ (அதாவது பண வீக்கத்தை ஏற்படுத்தவோ) அதிகாரிகள் விரும்ப லாம். செலவினங்களைக் குறைக்கவேண்டும் என்று அதிகாரிகள் விரும்பினால், அவர்கள் மொத்தப் பண இருப்புகளைக் குறைக்க வேண்டும். இவ்வாறு மொத்தப் பண இருப்புக் குறைவதால், முன்பு எவ்வளவு விருப்பத்தோடு பொதுமக்கள் செலவு செய்த னரோ அதே அளவு விருப்பத்தோடு அவர்கள் இப்பொழுது செலவு செய்ய முடியாது. மொத்தப் பண இருப்புகள் குறைவ தனால் பொதுமக்களுக்குக் கிடைக்கக்கூடிய பாங்கு அட்வான்சு களும் குறையும். இதன் விளைவாகக் கடன் வாங்கிச் செலவழிக்க விரும்புபவர்களின் நடவடிக்கைகள் தடை செய்யப்படும். இதே போல மந்த நிலை நாட்டைப் பாதித்திருக்கும்போது மேலும் மேலும் பணத்தை அதிகரித்து, உடனடியாக அதிகாரிகளால் செலவினங்களைத் தூண்டிவிட முடியும். அதிகாரிகள் பண இருப்பை அதிகமாக்கினால் மக்களும் நிறுவனங்களும் தங்களிடம் பெருமளவில் பண இருப்புகளை வைத்துக்கொள்வது சாத்திய மாகும். மேலும் பாங்குகளிடமிருந்தும் ஏனைய நிதி நிறுவனங்க ளிடமிருந்தும் மிக எளிதில் மக்கள் கடன் வாங்க முடியும்.

செலவினங்கள் உயர்ந்திருப்பதைத் தடுக்கும் நோக்கத்தோடு அதிகாரிகள் பண இருப்புகளை ஒழுங்கு செய்யும்போது வட்டி வீதங்களும் ஓரளவுக்குப் பாதிக்கப்படும். பண இருப்புகள் அதிக மாகும்போது வட்டி வீதங்கள் குறைவதற்கு வாய்ப்பான சூழ்நிலை உருவாகும்; பண இருப்புகள் சுருங்கும்போது வட்டி வீதங்கள்

அதிகமாவதற்கு ஏற்றதொரு சூழ்நிலை தோன்றும். பத்திரங்களைத் தம்மிடம் வைத்திருப்பது இலாபகரமானதன்று என்று மக்கள் எண்ணினால், பணத்தின் இருப்புகளை அதிகரித்துப் பெருமளவில் பண இருப்புகளை (அதிகாரிகள் பணத்தின் அளிப்பு நிலையைப் பெருமளவு உயர்த்தினால் அது பெருமளவில் செலவு செய்வதற்குத் தூண்டுகோலாக அமையும்.) மக்கள் வைத்திருக்குமாறு அதிகாரிகள் தூண்டமுடியும். இதை ஒட்டி, வட்டி வீதங்கள் குறையும். வட்டி வீதங்கள் குறைவதை ஒட்டி, நிதி நிறுவனங்கள் (சிறப்பாகப் பாங்குகள்) தங்களின் நீர்மைத்தன்மை அதிகரித்திருப்பதை உணரும். எனவே பெருமளவில் கடன் கொடுக்க இவை முன்வரும். இதுபோலவே பத்திரங்களை வைத்திருப்பது இலாபகரமானது என்று பொதுமக்கள் எண்ணுமாறு செய்து, பொதுமக்களைப் பெருமளவு பத்திரங்களை வாங்குமாறு தூண்டி, பணத்தின் அளிப்பு நிலையை அதிகாரிகள் குறைத்துவிடமுடியும். இதன் விளைவாக வட்டி வீதங்கள் உயரும். வட்டி வீத உயர்வை ஒட்டிப் பிறருக்குக் கடன்களைத் தாங்கள் ஏற்பாடு செய்யும்போது, நிதி நிறுவனங்கள் மிக்க கவனத்துடன் நடந்துகொள்கின்றன. அதிகாரிகள் சில சமயம் பாங்கு வீதக் கொள்கையில் (bank rate policy) நம்பிக்கை யற்றவராக இருக்கலாம் (இது குறித்த விளக்கத்தை ஏழாம் அத்தியாயத்தில் காண்க.) வேறு சில சமயங்களில் வேறு ஏதாவது காரணம் கருதி அதிகாரிகள் வட்டி வீதங்களில் பெருமளவு மாற்றத்தைச் செய்ய விரும்பாதிருக்கலாம். பண அதிகாரிகளின் நோக்கம் இவ்வாறு அமைந்திருக்கும் பட்சத்திலும், அதிகாரிகளால் ஆற்றலுடன் பண இருப்புகளை அதிகரிக்கவும் குறைக்கவும் இயலுமேயாயின் ஓரளவுக்கு வட்டி வீதங்கள் பாதிக்கப் படும். பணப் பெருக்கத்தையும் பணச் சுருக்கத்தையும் ஒட்டி வட்டி வீதங்களிலும் மாற்றங்கள் நேரும் என்ற கருத்து வழி வழியாகக் கொள்ளப்பட்டு வரும் கருத்தாகும்.[1] எனவே தங்களுடைய கொள்கையை வலியுறுத்தும் வகையில் அரசாங்கங்கள் நிலைமைக்கு ஏற்றவாறு வட்டிவீதங்களில் மாற்றங்கள் செய்து வருகின்றன.

[1] 'செலவுப் பெருக்கத்தைத் தூண்டிவிடுவது' என்ற பொருளில் பணப் பெருக்கம் என்ற சொற்றொடரையும் 'செலவுச் சுருக்கத்தை உண்டாக்குவது' என்ற பொருளில் பணச் சுருக்கம் என்ற சொற்றொடரையும் நாம் மேலே கையாண்டுள்ளோம். பொருளாதார நடவடிக்கைகள் மட்டுப்பட்டுவிடாமல் நிலையாக நடந்து வருவதைக் கண்காணிப்பதே தற்கால அரசாங்கங்களின் ஒரு முக்கியமான நோக்கமாகத் திகழ்வதால் மீட்சிப் பணப் பெருக்கம் (reflation) பண வீக்கக் குறைப்பு (disinflation) என்ற சொற்றொடர்களே பொருத்தமானவை என்று தோன்றுகிறது. நாட்டில் நேரக்கூடிய சுருக்க நிலையைத் தடுப்பதற்குச் செலவுப் பெருக்கத்தை உண்டாக்கும் நோக்கத்தோடு கையாளப்படும் கொள்கையே மீட்சிப் பணப் பெருக்கமாகும். நாட்டில் நேரக்கூடிய பெருக்க நிலையைத் தடுப்பதற்குச் செலவுச் சுருக்கத்தை உண்டாக்கும் நோக்கத்தோடு கையாளப்படும் கொள்கையே பண வீக்கக் குறைப்பு ஆகும்.

தங்கள் நோக்கம் நிறைவேறும்வகையில் வட்டி வீதங்களை மாற்றி அமைத்து அதிகாரிகள் செயலாற்றலாம். வட்டி வீதங்களை மாற்றி அமைப்பதிலுள்ள இடர்ப்பாடுகள் குறித்து ஏற்கனவே ஏழாம் அத்தியாயத்தில் விளக்கியுள்ளோம் இருப்பினும் வட்டி வீதங்களை எப்படியாவது மாற்றி அமைப்பதே உகந்தது என்று அதிகாரிகள் எண்ணலாம். பாங்குச் செலாவணிகளின் அளிப்பு நிலையில் எவ்வாறுன மாற்றத்தை அதிகாரிகள் விரும்புகின்றனரோ, அந்த மாற்றத்தை ஏற்படுத்தியபின் வட்டி வீதம் ஒரு குறிப்பிட்ட அளவாக அமையும்: இந்த அளவைவிட வட்டி வீதங்களை அதிகமான அளவு மாற்றியமைக்க அதிகாரிகள் விரும்பலாம். வட்டி வீத மாற்றத்தால் மூலதன வளர்ச்சியை உடனடியாகத் தூண்டிவிட முடியாது என்பது உண்மையானுலும். நாட்டின் செல்வ வளங்களை நிலை முதற் பொருள்களாக மாற்றி அமைக்கும் செலவில் மக்கள் ஈடுபடும்போது அவர்கட்குத் தூண்டுகோலாக அமைவது வட்டி வீதங்களின் அளவேயாகும்.[1] இது குறித்த விளக்கத்தை ஏற்கெனவே நாம் ஏழாம் அத்தியாயத்தில் கண்டோம். எதிர்காலத்தில் மூலதன வளர்ச்சியில் பெருமளவு வீழ்ச்சி ஏற்பட்டுத் தேக்கநிலை (stagnation) நீடிக்கலாம் என்றே, எதிர்காலத்தில் மூலதன வளர்ச்சி பெருமளவில் அதிகமாகலாம் (இதனுல் பண வீக்கநிலை நீடித்துவிடலாம்) என்றே, அதிகாரிகள் பயந்தால் அவர்கள் நீண்டகால நிலைகளின் மாற்றங்கள் செய்யும் முயற்சியில் ஈடுபடுவர். நீண்ட கால வட்டி வீதங்களை மாற்றி அமைக்கக் கருதுவர். ஒருதிட்டவட்டமான வட்டி வீதக் கொள்கையை ('Rate of interest policy') அதிகாரிகள் கைக்கொள்ள விரும்புவர். எதிர்காலத்தில் மூலதன வளர்ச்சி குறையும் என்று அதிகாரிகள் கருதினுல் வட்டி வீதங்களைக் குறைப்பதற்கான முயற்சிகளில் அவர்கள் ஈடுபடவேண்டியிருக்கும்; எதிர்காலத்தில் மூலதன வளர்ச்சி அதிகரிக்கும் என்று அதிகாரிகள் கருதினுல் வட்டி வீதங்களை அதிகரிப்பதற்கான முயற்சிகளில் அவர்கள் ஈடுபட வேண்டியிருக்கும். மூலதன வளர்ச்சியை ஊக்குவிக்கும்பொருட்டு, வட்டி வீதத்தைக் குறைக்க விரும்பும் கொள்கைக்கோர் உதாரணமாக 1945-47 முடிய டாக்டர் டால்டன் கடைப்பிடித்த பண மலிவுக் கொள்கை திகழ்கிறது. 1958-1959 ஆகிய ஆண்டுகளில் மூலதன வளர்ச்சியின் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் வட்டி வீதங்களை மிக அதிகமான அளவிலேயே நிலையாக அதிகாரிகள் வைத்திருந்தனர் புழக்கத்திலிருக்கும் பணத்தை உடனடியாக அதிகாரிகள் குறைத்ததால், மக்கள் கடன் வசதிகளை எளிதில் பெற

1 ரெயில்வேக்கள், துறைமுகம், தொழிற்சாலைகட்கான கட்டடங்கள், தொழிற்சாலைகட்கான சாதனங்கள், வீடுகள் மற்றும் நீடித்த நுகர்வுப் பொருள்கள் போன்றவை நிலைமுதற் பொருள்களாகும்.

முடியாது; ஆனால் பணத்தை உடனடியாக அதிகாரிகள் அதிகரிப்பதால், மக்கள் கடன் வசதிகளை எளிதில் பெறக்கூடிய சூழ்நிலை உருவாகும். இவ்வாறுன குறுங்கால நோக்கங்களைவிட நெடுங்காலத்தில் நிலவக்கூடிய சூழ்நிலையை மாற்றி அமைக்கும் நோக்கமே முதன்மையானது என்று அதிகாரிகள் எண்ணும்போது வட்டி வீதங்களை எவ்வாறு அவர்கள் மாற்றி அமைக்க முயலுகின்றனர் என்பது குறித்து இனி நாம் விளக்கம் காண்போம்.

இரண்டாவது உலக மகாயுத்தம் நடந்துகொண்டிருந்த காலத்தில் கருவூல உண்டியல்களின் வீதத்தை 1 சதவீதத்தில் நிலையாக அதிகாரிகளால் நிறுத்த முடிந்தது. (இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு 'பின்புற வழி' முறையைக் கையாண்டதால் இந்நிலை சாத்தியமானது.) அவ் வமயம் நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களின் வீதம் 3% ஆக இருந்தது. போர் முடிவுற்றது: விரைவில் ஒரு மந்தநிலை (slump) ஏற்படலாம் என்று அரசாங்கம் எண்ணியது. எனவே போர்க் காலத்தில் நிலவியதைப் போலவே அப்பொழுதும் குறைந்த வட்டி வீதங்கள் நிலவுவதே உகந்தது என்று அரசாங்கம் கருதியது. இதை ஒட்டி 1945-47 முடிய 'டால்டன் கொள்கை' (Dalton policy) கடைப்பிடிக்கப்பட்டது. அக் காலத்தில் நிதி அமைச்சராயிருந்தவர் திரு டால்டன் ஆவர். வட்டி வீதம் இன்னும் குறையவேண்டும் என்றும், $2\frac{1}{2}\%$ அளவிணையோ, அதற்கும் குறைந்த அளவையோ வட்டி வீதம் அடையவேண்டும் என்றும் அவர் எண்ணினுர். 1945ஆம் ஆண்டு இலையுதிர் காலத்தில் அவர் இவ்வாறு எண்ணினுர். குறுங்கால வட்டி வீதங்களைக் குறைந்த அளவில் நிலைநாட்டுவதற்காகப் போர்க் காலத்தில் என்னென்ன முறைகள் கடைப்பிடிக்கப்பட்டனவோ அவை யாவற்றையும் கையாண்டு நெடுங்கால வட்டி வீதங்களைக் குறைப்பதற்கான ஏற்பாடுகளில் திரு. டால்டன் ஈடுபட்டார். குறுங்கால வட்டி வீதம், நெடுங்கால வட்டி வீதம் ஆகிய இரண்டு வீதங்கட்கும் இடையேயுள்ள நெருக்கமான தொடர்புகளால், குறுங்கால வட்டி வீதத்தில் நேரும் மாற்றத்தை ஒட்டி நெடுங்கால வட்டி வீதம் கட்டாயம் மாறும் என்று உறுதியாக அவர் நம்பினுர். ஆனுல் குறுங்கால வட்டி வீதத்தில் ஏற்படும் மாற்றத்தை ஒட்டியே நெடுங்கால வட்டி வீதத்தில் மாற்றங்கள் நேருகின்றன என்று நாம் கருத முடியாது. எதிர்காலத்தில் நெடுங்கால வட்டி வீதங்கள் எவ்வாறு அமையும் என்று மக்கள் கருதுகின்றனரோ, அதை ஒட்டியேதான் நெடுங்கால வட்டி வீதங்கள் அமையும். ஏற்கெனவே வட்டி வீதங்கள் மிகக் குறைவாக இருந்தால்தான் (அதாவது ஏற்கெனவே பத்திரங்களின் விலை அதிகமாக இருந்தால்தான்) வட்டி வீதம் எதிர்காலத்தில் உயரலாம் (அதாவது

பத்திரங்களின் விலை குறையலாம்) என்று மக்கள் கருதுவர். பெருமளவில் பத்திரங்களை அதிகாரிகள் விலைக்கு வாங்கி, அதன் விளைவாகப் பத்திரங்களின் விலை மேலும் மேலும் உயர்ந்தால்தான், தாங்கள் விரும்பும்வண்ணம் வட்டி வீதங்களை அதிகாரிகளால் குறைக்க முடியும். இவ்வாறு பத்திரங்களை, விலைக்கு வாங்கும் நோக்கம் அரசாங்கத்திற்குக் கிடையாது என்று வைத்துக்கொண்டால் வட்டி வீதங்களைக் குறைக்க ஒரே ஒரு மார்க்கம்தான் உள்ளது. அதாவது எதிர்காலம்பற்றிய மக்களின் கருத்துக்களில் மாற்றம் நேரவேண்டும்; தாங்கள் எதிர்பார்ப்பதைவிட வட்டி வீதங்கள் குறையும் என்று மக்கள் உறுதியாக நம்பவேண்டும்.

பொதுமக்களின் கருத்துக்களைத் தாம் விரும்பிய வண்ணம் மாற்றி அமைக்கும் முயற்சியில் திரு. டால்டன் ஈடுபட்டார். தம்முடைய கருத்துகளை வெளியிட்டார். வட்டி வீதங்கள் குறைய வேண்டும் என்று தாம் ஆணித்தரமாக நம்புவதாக அறிவித்தார். தம்முடைய முயற்சியில் தமக்கு வெற்றி நிச்சயம் என்று தாம் உறுதியாக இருப்பதாக உரைத்தார். திரு. டால்டனின் உரைகளை உறுதிப் படுத்துவதுபோலக் கருவூல உண்டியல் வீதமும், கருவூல டெபாசிட் ரசீது (treasury deposit receipts) களின் வீதமும் அதிகாரிகளால் குறைக்கப்பட்டன. திரு. டால்டன் அவர்களின் ஆணித்தரமான பேச்சுகளும், அதிகாரிகளின் நடவடிக்கைளும், பொதுமக்களின் கருத்துக்களை—திரு. டால்டன் எதிர்பார்த்தது போல—மாற்றத் தொடங்கின. கான்சல்களின் வட்டி வீதம் 3%-லிருந்து $2\frac{3}{4}$% ஆகக் குறைந்தது. ஆனால் வட்டி வீதத்தை $2\frac{3}{4}$%-லிருந்து $2\frac{1}{2}$% ஆகக் குறைப்பது மிகவும் கடினமாகத் தோன்றியது. வேறு முறைகளைக் கையாளவேண்டிய கட்டாயம் நேர்ந்தது. பத்திரங்களைப் பெருமளவில் விலைக்கு வாங்கவேண்டும் என்ற சூழ்நிலை உருவாகியது. பத்திரங்களை விலைக்கு வாங்குவதற்கு ஏதுவாக, 'பொதுத் துறைகளின்' நிதிகள் பெருமளவில் இருந்தன. பத்திரங்களை விலைக்கு வாங்குவதை ஒரு நிலையான கொள்கையாகக் கடைப்பிடிக்கும் எண்ணம் திரு. டால்டனுக்குக் கிடையாது. இதைத் தற்காலிகமான கொள்கையாகவே அவர் கருதினர். பொதுமக்களின் கருத்துகள் என்று மாறுமோ, அது வரையிலும் பத்திரங்களை விலைக்கு வாங்கும் முறையைத் திரு. டால்டன் கடைப்பிடிக்க எண்ணினர்.

பத்திரங்களை விலைக்கு வாங்க, 'பொதுத் துறைகளின்' நிதிகள் பயன்படுத்தப்பட்டன. அஞ்சல் அகங்களின் சேமிப்பு டெபாசிட்டுகள் டிரஸ்டி சேமிப்பு பாங்குகளின் நிதிகள், பொதுநல இன்சூரன்சின் (Social insurance) நிதிகள்—ஆகியவை யாவும்

'பொதுத் துறைகளின் நிதிகள்' என்ற தலைப்பின்கீழ் வருவன வாகும். இந் நிதிகள் யாவும் ஒரு குழுவின் கண்காணிப்பில் இருந்தன. இக் குழு பார்லிமெண்டால் வேறு நோக்கத்திற்காகப் பல ஆண்டுகட்கு முன்பே நிறுவப்பட்டதாகும். நிதி அமைச்சர், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் கவர்னர், அதன் உதவிக் கவர்னர் ஆகியோர் இக் குழுவின் அங்கத்தினராவர். இவர்கள் 'தேசியக் கடன் கமிஷனர்கள்' (National Debt Commissioners) என்று அழைக்கப்படுகின்றனர். இவர்கள் கருவூலத்தின் நடவடிக் கைகட்கு ஏற்றவாறு தங்களிடமுள்ள நிதிகளைப் பலதரப்பட்ட பிரிட்டிஷ் அரசாங்கப் பத்திரங்களில் முதலீடு செய்கின்றனர். 'பொதுத் துறைகளில்' மிகவும் முக்கியமான அங்கம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் 'வெளியீட்டுத் துறை'யே எனலாம். 'வெளி யீட்டுத் துறை'யில் இருந்த பத்திர இருப்புகளைப் பயன்படுத்தி 1950-59 முடிய அதிகாரிகள் வெளிமார்க்கெட் நடவடிக்கை நடத்தினர். 1945 ஆம் ஆண்டு அளவில் பொதுத்துறைகளின் நிதிகள் பல்லாயிரக் கணக்கான மில்லியன்களாகப் பெருகி இருந்தன. தங்களுடைய நோக்கத்தை நிறைவேற்றப் பயன்படும் சாதனங்களாக இந் நிதிகள் அதிகாரிகட்குத் தோன்றின. மேலும் தங்களிடமுள்ள கருவூல உண்டியல்களைப் பாங்குகளிடம் விற்று அதன்மூலம் கிடைக்கும் பணத்தின் உதவியால் தாங்கள் பொது மக்களிடமிருந்து விலைக்கு வாங்கும் பத்திரங்களுக்குப் பணத்தைக் கொடுப்பதற்கான ஏற்பாடுகளை அதிகாரிகள் செய்தனர் இவ்வாறு இடைக்காலப் பத்திரங்கள், நெடுங்காலப் பத்திரங்கள் ஆகியவற்றின் விலைகளை அதிகரிப்பதற்கு (அதாவது இவற்றின் வட்டி வீதங்களைக் குறைப்பதற்கு) எந்த அளவுக்கு மேற்படி பத்தி ரங்களைத் தாங்கள் விலைக்கு வாங்க வேண்டியிருக்குமோ, அதற்கு ஏற்ற அளவு பணத்தை உற்பத்தி செய்வதற்கான ஏற்பாடுகளை அதிகாரிகள் செய்து கொண்டனர்.

மேலே குறிப்பிட்ட முறையைக் கையாண்டு (அதாவது தங்க ளிடமுள்ளன கருவூல உண்டியல்களைப் பாங்கு டெபாசிட்டுகளாக அதிகாரிகள் மாற்றி இந்தப் பாங்கு டெபாசிட்டுகளைப் பயன் படுத்திப் பொது மக்களிடமிருந்து தாங்கள் வாங்கும் பத்திரங் கட்கு அதிகாரிகள் பணம் செலுத்துவது) அதிகாரிகள் வெற்றி காண எண்ணினால் அதற்குப் பாங்குகளின் ஒத்துழைப்பும் தேவைப்பட்டது. 'பொதுத் துறைகள்' வெளியிடும் கருவூல உண்டியல்கள் யாவற்றையும் பாங்குகள் விலைக்கு வாங்க முன்வர வேண்டும். பாங்குகளிடம் கருவூல உண்டியல்கள் மிகுதியாக இருந்தால் அவற்றினின்றும் பாங்குகட்கு வட்டி வருமானம் நிறைய கிடைக்க வாய்ப்புகள் உண்டு. எனவே, தங்களுடைய ரொக்க

விகிதத்தைக் காப்பதற்காகப் பாங்குகளுக்கு எவ்வளவு ரொக்கம் தேவைப்படுமோ. அந்த ரொக்கம் தடையின்றிக் கிடைத்துக் கொண்டிருந்தால் கருவூல உண்டியல்களைப் பாங்குகள் தடையின்றி விலைக்கு வாங்கிக் கொண்டே இருக்கும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமிருந்து 'பின்புற வழி'யின் மூலம் (தங்களுடைய 8% ரொக்க விகிதத்திற்கு ஏற்றதொரு வகையில்) தங்களுக்குத் தேவைப்படும் ரொக்கத்தைப் பாங்குகள் பெற முடியும். உண்மையில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இப் 'பின்புற வழி'யில் தடையின்றிப் பாங்குகட்கு ரொக்கத்தை வழங்கி வந்தது. அதிகாரிகள் விற்பனை செய்யும் கருவூல உண்டியல்களைப் பாங்குகள் கட்டாயம் வாங்கும் என்று இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு நம்பியதால் அது பாங்குகட்குத் தடையின்றி ரொக்கத்தை வழங்கி வந்தது.[1]

மேற்குறித்த ஏற்பாடுகள் யாவற்றையும் தங்களுடைய வசதி குறித்தே அதிகாரிகள் செய்தனர். இவ் வேற்பாடுகளால் பொது மக்களிடமிருந்து தாங்கள் வாங்கும் பத்திரங்களுக்கு ஈடாகப் பணத்தை யாதொரு துன்பமுமின்றி அதிகாரிகளால் கொடுக்க முடியும். அதிகாரிகள் செய்த ஏற்பாடுகள் யாவும் மிகவும் நம்பிக்கையான ஏற்பாடுகளேயாகும். (ஏற்பாடு நம்பிக்கையானவை என்பது ஒன்று. இவற்றால் வட்டி வீதங்கள் குறையுமா என்பது வேறு. இது பற்றி விரைவில் நாம் விளக்குவோம்.) இவ் வேற்பாடுகள் மூன்று விஷயங்களைப் பொறுத்திருந்தன. அவை வருமாறு :

1. பொதுமக்களிடமிருந்த பத்திரங்களின் சராசரி ஆயுட் காலத்தை அதிகரிக்க அதிகாரிகள் பெற்றிருந்த ஆற்றலும், கொண்டிருந்த விருப்பமும்.

2. பாங்குகட்கு மேலும் மேலும் தேவைப்படக்கூடிய ரொக்கம் எளிதில் கிடைக்கக்கூடியது என்று வைத்துக் கொண்டால் கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்குவதற்குப் பாங்குகள் காட்டும் ஆர்வம்.

3. (குறுங்கால வட்டி வீதங்களைப் பாதிக்காத முறையில்) பாங்குகட்குத் தேவைப்படும் அதிகமான ரொக்கத்தை

[1] கருவூல டெபாசிட் ரசீதுகள் அவ்வமயம் இருந்தன. இதை ஒட்டி அதிகாரிகள் தங்களுடைய அதிகாரத்தைப் பெருக்கிக் கொண்டனர். கருவூல டெபாசிட் ரசீதுகள் போர்க் காலத்தில் பயன்படுத்தப்பட்டன. மார்க்கெட்டில் விற்பனை செய்ய முடியாத கருவூல உண்டியல்கள் என்று இவற்றை நாம் கூறலாம். இவற்றை விலைக்கு வாங்கி இருப்பதாக வைத்திருக்கும்படிப் பாங்குகளை அவ்வமயம் அதிகாரிகள் வற்புறுத்தினர்.

உற்பத்தி செய்வதற்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு காட்டும் ஆர்வம்.

நாம் ஏற்கெனவே கையாண்டு வந்துள்ள 'விஷயச் சுருக்க அட்டவணை'களின் மூலம் அதிகாரிகள் 1945-1947 முடிய கடைப்பிடித்த முறைகளை எளிதில் புரிந்துக்கொள்ளக்கூடிய வகையில் விளக்க முடியும் என்று நாம் கருதுகின்றேம். கீழே நாம் கொடுக்கப் போகும் புள்ளி விவரங்கள் (அட்டவணைகளிலும் விளக்கங்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளவை) உண்மையானவை அல்ல; இவை நம் வசதி குறித்து எளிதாக்கப்பட்டுள்ள எண்களாகும். இருப்பினும் இவை உண்மையான புள்ளி விவரங்களின் அடிப்படையிலேயே தயாரிக்கப்பட்டவை என்றும், உண்மையான புள்ளி விவரங்களை விட இவை முற்றிலும் மாறுபட்டவை இல்லை என்றும், நாம் ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறேம். வாசகர்கள் எளிதில் கணக்கிடக்கூடிய வகையில் நாம் 'உத்தேச எண்களை'யே தந்துள்ளோம். மேலும் நமது விவாதத்தினின்றும் சில சிக்கல்களை அகற்றியுள்ளோம். எனவே உண்மையான எண்களைக் கொடுப்பதைவிட 'உத்தேச எண்களை'க் கொடுத்திருப்பதே முறையானது என்று தோன்றுகின்றது. இச் சிக்கல்கள் கீழே தரப்பட்டிருக்கும் காரணங்களால் ஏற்படக் கூடியவையாகும் :

(a) முன்பு பாங்குகள் 'புறச் சோடனை' (window-dressing) செய்யும் பழக்கத்தை உடையன. பாங்குகளின் ரொக்க விகிதத்தில் புறச்சோடனை செய்யப்பட்டது.

(b) வேறு காரணங்களால் சில விளைவுகள் ஏற்படலாம். உதாரணமாக பொதுமக்கள் பாங்குகளின் அட்வான்சுகளை அதிகமாக விரும்பலாம்; இதனுல் சில விளைவுகள் நேரலாம்.

(பொதுத் துறைகளிடமுள்ள பத்திரங்களின் இருப்புகளில் நேரக்கூடிய மாற்றங்கள் குறித்துத்திட்டவட்டமாக நாம் அறிவதற்கான வாய்ப்புகள் இல்லை;) நாம் கீழே தந்திருக்கும் எண்கள் யாவும் 'உத்தேச எண்கள்' என்று மீண்டும் வலியுறுத்த விரும்புகிறேம். இருப்பினும் 1945 ஆம் ஆண்டு நவம்பர் மாதத்திலிருந்து 1947 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் முடிய உள்ள 15 மாதங்களில் நேர்ந்த நிகழ்ச்சிகளைக் குறிக்கும் உண்மையான புள்ளி விவரங்களின்றும் இவை முற்றிலும் மாறுபட்டவை அல்ல.

## நிலை I

(£ மிலியன்களில்)

### இங்கிலாந்துத் தலைமை பாங்கு

| | | | |
|---|---|---|---|
| வாணிக பாங்குகட்குக் கொடுக்கவேண்டிய நோட்டு, டெபாசிட் இவை சம்பந்தமான பொறுப்புகள் ... | 400 | அரசாங்கப் பத்திரங்கள் ... | 500 |
| பொதுத்துறைகளின் டெபாசிட்டுகள் ... | 100 | | |
| | 500 | | 500 |

### வாணிக பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுகள் ... | 5,000 | கையிருப்பு ரொக்கமும் இங்கிலாந்துத் தலைமை பாங்கிலுள்ள ரொக்கமும் ... | 400 |
| | | நாள் நிலுவைக் கடன், கருவூல உண்டியல்கள் மற்றும் கருவூல டெபாசிட் ரசீதுகள் ... | 2,200 |
| | | ஏனைய சொத்துகள் ... | 2,400 |
| | 5,000 | | 5,000 |

### பொதுத் துறைகள்

| | |
|---|---|
| கருவூல உண்டியல்கள் ... | 2,000 |
| இடைக்காலப் பத்திரங்களும் நெடுங்காலப் பத்திரங்களும் ... | 2,000 |
| | 4,000 |

இதன்பின் பொதுத் துறைகள் £500 மிலியன்களுக்குப் பத்திரங்களை (இடைக்காலப் பத்திரங்களையும் நெடுங்காலப் பத்திரங்களையும்) விலைக்கு வாங்குகின்றன என்று வைத்துக் கொள்ளுவோம். பொதுத் துறைகள் விற்கும் கருவூல உண்டியல்கள் யாவற்றையும் பாங்குகள் விலைக்கு வாங்குகின்றன என்றும் வைத்துக்கொள்வோம். பொதுமக்களுக்குப் பணம் கொடுப்பதற்காகத் தாங்கள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் வைத்திருக்கும் டெபாசிட்டுகளைப் பொதுத் துறைகள் பயன்படுத்தும். இதன் விளைவாகப் 'பொதுத் துறைகளின் டெபாசிட்டுகள்' குறைகின்றன. வாணிக பாங்குகளிடம் பொதுத் துறைகள் இதே அளவுக்குக் கருவூல உண்டியல்களை விற்பதால் இக் குறை நிரப்பப்படுகின்றது. இவ்வாறான மாற்றங்களைப் பின் பக்கத்தில் நாம் கொடுத்திருக்கும் அட்டவணை விளக்குகிறது.

## நிலை II

(£ மிலியன்களில்)

### (இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு)

| | | | |
|---|---|---|---|
| நோட்டு டெபாசிட் ஆகியவை சம்பந்தப்பட்ட பொறுப்புகள் .. 400+500(a)—500(b) | 400 | அரசாங்கப் பத்திரங்கள் | 500 |
| பொதுத் துறைகளின் டெபாசிட்டுகள் 100—500(a)+500(b) | 100 | | |
| | 500 | | 500 |

### வாணிகப் பாங்கு

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுகள் : 5,000+500(a) | 5,500 | ரொக்கம் : 400+500(a)—500(b) | 400 |
| | | நாள் நிலுவைக் கடன்கள், கருவூல உண்டியல்கள், கருவூல டெபாசிட் ரசீதுகள 2,200+500(b) | 2,700 |
| | | ஏனைய சொத்துகள் ... | 2,400 |
| | 5,500 | | 5,500 |

### பொதுத் துறைகள்

| | |
|---|---|
| கருவூல உண்டியல்கள் : 2,000—500(b) ... | 1,500 |
| இடைக்காலப் பத்திரங்களும் நெடுங்காலப் பத்திரங்களும் : 2,000+500(a) ... | 2,500 |
| | 4,000 |

**குறிப்புகள் :**

1 அட்டவணையில் (a) என்ற குறையீடு பொதுத் துறைகள் £ 500 மிலியன்களுக்குப் பொதுமக்களுடமிருந்து வாங்கியுள்ள பத்திரங்களைக் குறிக்கின்றது, தாங்கள் வாங்கியுள்ள பத்திரங்களுக்கு ஈடாகப் பொதுத் துறைகள் செக்குகள் கொடுக்கின்றன. இங்கிலாந்துத் தலைமைப்பாங்கு தன்னிடமுள்ள ,பொதுத் துறைகளின் டெபாசிட்டுகளி'லிருந்து 'பாங்கர்களின் டெபாசிட்டுகளுக்குப் பணத்தை மாற்றுகிறது. இவற்றைத் தங்களுடைய வாடிக்கைக்காரர்களின் கணக்குகளில் வாணிகப்பாங்குகள் வரவு வைக்கின்றன.

2 அட்டவணையில் (b) என்ற குறியீடு பொதுத் துறைகள் வாணிகப்பாங்குகளிடம் கருவூல உண்டியல்கள் விற்றதைக் குறிக்கிறது, பொதுத் துறைகட்கு வாணிக் பாஙகுகள் செக்குகள் கொடுக்கின்றது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இச் செக்குகளைப் பொதுத துறைகளின் கணக்கில் வரவு வைக்கின்றது.

3 நிலை II-ல் வாணிக பாங்குகளின் ரொக்க விகிதம் சுமார் $7\frac{1}{4}\%$ ஆகும்.

வாணிகப் பாங்குகள் தங்களுடைய ரொக்க விகிதத்தை 8 சத வீதத்திற்குக் கொண்டு வரவேண்டியிருக்கிறது. எனவே வாணிகப் பாங்குகள், நேரடியாகவோ, உண்டியல் கழிவகங்களின் மூலமாகவோ, கருவூல உண்டியல்களை இங்கிலாந்துத் தலைமை பாங்கிடம் விற்கின்றன—'பின்புற வழி'யில் விற்கின்றன. இதன் பின் ஏற்படும் நிலை வருமாறு :

## நிலை III

(£ மிலியன்களில்)

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு

| | | | |
|---|---|---|---|
| நோட்டு டெபாசிட் சம்பந்தமான பொறுப்புகள் 400+40 (c) ... | 440 | அரசாங்கப் பத்திரங்கள்; 500+40 (d) ... | 540 |
| பொதுத் துறைகளின் டெபாசிட்டுகள் — | 100 | | |
| | 540 | | 540 |

### வாணிகப் பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுகள் ... | 5,500 | ரொக்கம் : 400+40 (c) ... | 440 |
| | | நாள் நிலுவைக் கடன், கருவூல உண்டியல்கள் கருவூல டெபாசிட்டு ரசீதுகள் : 2,700—40(d) ... | 2,660 |
| | | ஏனைய சொத்துகள் ... | 2,400 |
| | 5,500 | | 5,500 |

### பொதுத் துறைகள்

(நிலை II-ல் இருந்ததுபோலவே அமையும்)

நிலை III-க்கான குறிப்புகள் :

1. அட்டவணையில் (c) என்ற குறியீடு வாணிக பாங்குகளிடமிருந்து பின்புற வழியில் தான் வாங்கிய கருவூல உண்டியல்களுக்கு இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கொடுக்கும் பணத்தைக் குறிக்கின்றது.

2. அட்டவணையில் (d) என்ற குறியீடு வாணிக பாங்குகளிடமிருந்து இங்கிலாந்துத் தலைமை பாங்குக்கும் கருவூல உண்டியல்கள் மாற்றப்பட்டதைக் குறிக்கின்றது.

இவ்வாறு பொதுத் துறைகள் விற்ற £500 மிலியன் பெறுமானமுள்ள கஜானா உண்டியல்களில் £ 460 மிலியன்கள் வாணிகப்

பாங்குகளிடம் போய்ச் சேருகின்றன; £ 40 மிலியன்கள் இங்கி லாந்துத் தலைமைப் பாங்கிடம் போய்ச் சேருகின்றன. அதாவது மொத்த விற்பனை செய்யப்பட்ட கருவூல உண்டியல்களில் 92% வாணிகப் பாங்குகளிடமும் 8% இங்கிலாந்துத் தலைமைப் பாங்கி டமும் போய்ச் சேருகின்றன. தங்களுடைய ரொக்க விகிதத்தை மீண்டும் 8% ஆக மாற்றி அமைக்க வாணிகப் பாங்குகட்கு எவ்வளவு அதிக ரொக்கம் தேவைப்பட்டதோ, அதையே இங்கி லாந்துத் தலைமைப் பாங்கிடம் போய்ச் சேர்ந்துள்ள 8% கருவூல உண்டியல்கள் குறிக்கின்றன. பொதுத் துறைகட்குப் பொது மக்கள் பத்திரங்களை விற்றபின் பாங்குகளிடம் வந்து சேரும் £ 500 மிலியன் டெபாசிட்டுகட்கு ஈடாகப் பாங்குகளிடம் வந்து சேர்ந் துள்ள ஊதியச் சொத்துக்களைக் குறிப்பதே 92% ஆகும்.

பாங்குகள் அதிகமான அளவு பணத்தை (டெபாசிட்டுகளை) உற்பத்தி செய்வதே வட்டி வீதங்கள் குறைவதற்கு அடிப்படை யான காரணமாகும். இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு அதிக மான ரொக்கத்தை உற்பத்தி செய்வதாலேயே, பாங்குகள் அதிக அளவு பணத்தை உற்பத்தி செய்ய முடியும். இந்த அதிகமான பணத்தைக் (தங்களுடைய கொள்கைக்கு ஏற்ப) குறுங்காலச் சொத்துகளுக்கு ஈடாகவே—அதாவது தங்களிடம் தற்சமயம் அதிகரித்துள்ள கருவூல உண்டியல்கட்கு ஈடாகவே—பாங்குகள் உற்பத்தி செய்கின்றன. புதிதாகப் பாங்குகளிடம் வந்து சேர்ந் துள்ள குறுங்காலச் சொத்துகள் (இவை குறுகிய காலத்திற்குப் பிறருக்குப் பாங்குகள் கொடுத்திருக்கும் கடன்களேயாகும்) நெடுங் காலச் சொத்துகளாக (இவை ஒருவர் இன்னொருவருக்கு நெடுங் காலத்திற்குக் கொடுத்திருக்கும் கடன்களேயாகும்) மாற்றப்பட்டா லன்றிப் பாங்குகள் அதிகமாக உற்பத்தி செய்துள்ள பணத்தை யொட்டி நெடுங்கால வட்டி வீதம் உயராது. எனவே குறுங் காலக் கடன்களை நெடுங்காலக் கடன்களாக மாற்ற விரும்பும் நோக்கத்தோடு யாராவது முன்வரவேண்டும். பொதுமக்களும் அதைத்தான் விரும்புகின்றனர். நெடுங்கால வட்டி வீதங்கள் குறையும்போது தங்களிடமுள்ள பத்திரங்களைப் பொதுமக்கள் விற்க எண்ணுகின்றனர் எனவே, தாங்கள் விற்க எண்ணும் பத்திரங்களை ஏற்றுக்கொள்ள யாராவது முன்வருவதைப் பொது மக்கள் பெரிதும் விரும்புகின்றனர். வட்டி வீதங்கள் வீழ்ச்சியுறும் போது, பொதுமக்கள் நெடுங்காலப் பத்திரங்களைவிடக் குறுங் காலச் சொத்துக்களையே விரும்புகின்றனர்—அதாவது தங்களிட முள்ள நெடுங்காலப் பத்திரங்களை ரொக்கமாக மாற்றும் முயற்சியில் பொதுமக்கள் ஈடுபடுவர். பொதுமக்கள் இவ்வாறு விற்க எண்ணும் பத்திரங்களை யாராவது வாங்க முன்வரவேண்டும். பாங்குகள்

அதிகமான பணத்தை உற்பத்தி செய்ய விரும்புமே ஒழிய நெடுங் காலப் பத்திரங்களை விலைக்கு வாங்க விரும்பாது. இவ்வாருன நிலையில் பொதுமக்களுக்கு ஆதரவாக மார்க்கெட்டில் 'பொதுத் துறைகள்' தோன்றுகின்றன. இவை நெடுங்காலப் பத்திரங்களை ஆர்வத்துடன் விலைக்கு வாங்குகின்றன. தங்களிடமுள்ள கருவூல உண்டியல்களை இடைக்காலப் பத்திரங்களாகவும் நெடுங்காலப் பத்திரங்களாகவும் மாற்றும் முயற்சியில் பொதுத் துறைகள் ஈடு படுகின்றன.

மேலே நாம் கொடுத்துள்ள நிலை I-ஐ நிலை III-டன் ஒப்பிட்டு நோக்குங்கால், வாணிகப் பாங்குகளின் மொத்த சொத்துகளில் மாற்றங்கள் ஏற்பட்டிருப்பதை உணர்வோம்—வாணிகப் பாங்கு களின் மொத்த சொத்துகள் அதிகரித்திருப்பதை நாம் அறிய வருவோம். நிலை I-ல் இருந்ததைவிட நிலை III-ல் வாணிகப் பாங்குகளின் பண மார்க்கெட் சொத்துகள் அதிகமாகியுள்ளன. மொத்தச் சொத்துகளில் பண மார்க்கெட் சொத்துகளின் பங்கு அதிகமாகியுள்ளது. இதை பாங்குகள் வெறுக்கமாட்டா. வாணிக பாங்குகள் தங்களிடமுள்ள கருவூல உண்டியல்களை இங்கிலாந்துத் தலைமை பாங்கிடம் எளிதில் ரொக்கமாக மாற்றிக் கொள்ள முடியும். ஏனெனில் அவ்வமயம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் 'பின்புற வழி' தடையின்றி இயங்கிக் கொண்டிருந்தது. தங்களிடம் தற்சமயம் அதிகமாக இருக்கும் பண மார்க்கெட் சொத்துகளின் ஒரு சிறு பகுதியை நெடுங்காலப் பத்திரங்களில் முதலீடு செய்வதால் கேடு ஏதும் விளைந்துவிடாது என்று பாங்கு கள் எண்ணும். இவ்வாறு பாங்குகள் நெடுங்காலப் பத்திரங்களை விலைக்கு வாங்கும்போது பொதுத் துறைகளின் பொறுப்பு ஓரள வுக்குக் குறைகின்றது எனலாம். பாங்குகள் எந்த அளவுக்கு நெடுங்காலப் பத்திரங்களை விலைக்கு வாங்குகின்றனவோ, அந்த அளவுக்குத் தாங்கள் பொதுமக்களிடமிருந்து விலைக்கு வாங்கும் பத்திரங்களின் அளவைப் பொதுத் துறைகள் குறைத்துக்கொள்ள முடியும். இதன் விளைவாகப் பொதுத் துறைகளின் சொத்துகளின் தொகுதியில் மாற்றம் நேரும். நிலை II அல்லது நிலை III-ல் எவ்வளவு கருவூல உண்டியல்கள் வைத்திருக்கின்றனவோ, அதைவிட இப்பொழுது பொதுத் துறைகளின் கருவூல உண்டியல் களின் இருப்புகள் அதிகமாகும். ஆனால் முன்பு இருந்ததைவிட நெடுங்காலப் பத்திரங்களின் அளவுகள் குறையும். பாங்குகள் பத்திரங்களை விலைக்கு வாங்கும்போது நிலை III-ஐவிடச் சிறிது மாறுபட்ட நிலை ஒன்று தோன்றும். அது வருமாறு :

## நிலை III-A

(£ மிலியன்களில்)

### இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு

| | | | |
|---|---|---|---|
| நோட்டு டெபாசிட் ஆகியவை சம்பந்தமான பொறுப்புகள் ... | 440 | அரசாங்கப் பத்திரங்கள் ... | 540 |
| பொதுத் துறைகளின் டெபாசிட்டுகள் .. | 100 | | |
| | 540 | | 540 |

### வாணிக பாங்குகள்

| | | | |
|---|---|---|---|
| டெபாசிட்டுகள் ... | 5,500 | ரொக்கம் ... | 440 |
| | | நாள் நிலுவைக் கடன்கள், கருவூல உண்டியல்கள், கருவூல டெபாசிட் ரசீதுகள் ... | 2,560 |
| | | ஏனைய சொத்துகள் (நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களும் அடங்கும்) ... | 2,500 |
| | 5,500 | | 5,500 |

### பொதுத் துறைகள்

| | |
|---|---|
| கருவூல உண்டியல்கள் ... | 1,600 |
| இடைக்காலப் பத்திரங்களும் நெடுங்காலப் பத்திரங்களும். | 2,400 |
| | 4,000 |

நிலை III A-ன் பிரகாரம் £ 100 மிலியன்கள் பெருமானமுள்ள பத்திரங்களைப் பொதுமக்களிடமிருந்து பாங்குகள் விலைக்கு வாங்குகின்றன. (பொதுத் துறைகள் வாங்கும் விலையிலேயே வாங்குகின்றன.) எனவே, பொதுத் துறைகள் £ 400 மிலியன்களுக்கே பத்திரங்கள் வருகின்றன ; இவற்றிற்கு ஈடாக £ 400 மிலியன்களுக்கே பொதுத் துறைகள் கருவூல உண்டியல்களை விற்பது போதுமானதாகும். இவ்வாறு பொதுத் துறைகள் விற்கும் £ 400 மிலியன்கள் பெறுமானமுள்ள கருவூல உண்டியல்களில் £ 360 மிலியன்கள் வாணிகப் பாங்குகளிடமும் £ 40 மிலியன்கள் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிடமும் போய்ச் சேரும். தங்களுடைய டெபாசிட்டுகள் £ 500 மிலியன்கள் அதிகரிப்பதற்கு ஈடான

ரொக்கமான £ 40 மிலியன்களைப் பெறும் நோக்கத்தோடு வாணிகப் பாங்குகள் £ 40 மிலியன்கள் பெறுமானமுள்ள கருவூல உண்டியல்களை இங்கிலாந்துத் தலைமைபாங்கிடம் விற்கின்றன.

தங்களுடைய பண மார்க்கெட் சொத்துக்களும் ரொக்கமும் அதிகமாகும்போது (நீர்மைத் தன்மை விதிகட்கு ஏற்ற வகையில்) வாணிக பாங்குகள் இடைக்காலப் பத்திரங்களையும் நெடுங்காலப் பத்திரங்களையும் விலைக்கு வாங்குகின்றன என்று மேலே கண்டோம். சில சமயம் இம் மாதிரியான நிலை நேராமலேயே போய் விடலாம். முதலீடு செய்யும் பொதுமக்கள் எதிர்காலத்தில் நிலவக்கூடிய நிலைமை எவ்வாறு மதிப்பிடுவரோ, அவ்வாறே பாங்குகளும் மதிப்பிடும். எனவே, அரசாங்கப் பத்திரங்களின் விலைகள் குறையப் போகின்றன என்று பொதுமக்கள் கருதுவது போலப் பாங்குகளும் கருதினுல் பாங்குகள் பத்திரங்களை விலைக்கு வாங்கமாட்டா. பொதுமக்கள் விரும்புவது போலவே பாங்குகளும் குறுங்காலச் சொத்துக்களையே பெரிதும் விரும்பும். அதாவது தங்களுடைய சொத்துகளின் சராசரி நீர்மைத் தன்மையைப் பாங்குகள் அதிகரிக்க விரும்பும். இவ்வாறு பாங்குகள் நடந்து கொள்வதால் தோன்றுவதே நிலை III ஆகும் நிலைI-ல் இருந்ததைவிட நிலை III-ல் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புக்களும், பண மார்க்கெட் சொத்துகளும் அதிகமாயுள்ளன. ஆனுல் பாங்குகளின் ஏனைய சொத்துகளின் (நெடுங்காலப் பத்திரங்களின்) அளவில் எந்த விதமான மாற்றமும் நேரவில்லை. உண்மையில் இதனைப் பொறுத்த வரையில் பாங்குகள் ஒரு படி மேலே சென்று விட நேரலாம். அதாவது பாங்குகள் தங்களிடமுள்ள நெடுங்காலப் பத்திரங்களை விற்று விட முனையலாம். தங்களிடமுள்ள நெடுங்காலப் பத்திரங்களைப் பொதுத் துறைகளிடம் கொடுத்துவிட்டு மேலும் மேலும் கருவூல உண்டியல்கள் வாங்குவதைப் பாங்குகள் பெரிதும் விரும்பலாம். பாங்குகள் இவ்வாறு செய்வதால் அவற்றின் ரொக்கத் தேவை எந்த விதத்திலும் மாற்றமுருது; முன்பு எவ்வளவு ரொக்கம் வைத்திருந்தனரோ, அதே அளவு ரொக்கத்தைத்தான் இப்பொழுதும் பாங்குகள் வைத்திருக்கும். இதன் விளைவாகப் பொதுத் துறைகளின் சொத்துகளில் கருவூல உண்டியல்களின் அளவு குறையும்; ஆனுல் அதற்கு ஈடாக நெடுங்காலப் பத்திரங்களின் அளவு அதிகமாகும். தங்களின் நெடுங்காலப் பத்திரங்களை விற்றபின் கூட, பாங்குகளின் ரொக்கத் தேவை எவ்விதத்திலும் மாருது என்று நாம் கூறுவது வேடிக்கையாகக்கூடத் தோன்றலாம். ஆனுல், இவ்வாருன நிலைக்குக் காரணம் இருக்கிறது. பாங்குகளிடம் கருவூல உண்டியல்களைக் கொடுப்பதன் மூலம் அவற்றின் நீர்மைத் தன்மை அதிகரிக்க முடியும்; பாங்குகளும் திருப்தியுறும். ஆனுல், பொது

மக்கள் விரும்பும் அதிக நீர்மைத் தன்மையை, பாங்கு டெபாசிட்டுகளை அதிகமாக உற்பத்தி செய்வதன் மூலமே பூர்த்திசெய்ய முடிகின்றது. இவ்வாறன்றி, டெபாசிட்டுகள் தேவை இல்லை ; கருவூல உண்டியல்களே போதுமானவை என்று பொதுமக்கள் கருதத் தலைப்பட்டால், பொதுமக்களிடமிருந்து தாங்கள் வாங்கும் நெடுங்காலப் பத்திரங்களுக்கு ஈடாக அவர்களிடம் கருவூல உண்டியல்களைப் பொதுத் துறைகள் நேரடியாகவே கொடுத்து விடலாம்; பாங்கு டெபாசிட்டுகளை உற்பத்தி செய்யவேண்டிய அவசியம் ஏதும் அதிகாரிகட்கு நேராது.[1]

இதுகாறும் நாம் கொடுத்த விளக்கத்தின் அடிப்படையில் சில பொதுவான உண்மைகளை நாம் அறிய முடிகின்றது. வட்டி வீதங்கள் குறையும் போது தங்களிடமுள்ள நெடுங்காலச் சொத்துகளை விற்று விட்டுக் குறுங்காலச் சொத்துகளை விலைக்கு வாங்குவதையே பொதுமக்கள் விரும்புகின்றனர். குறுங்காலச் சொத்துகளைப் பொதுமக்கள் எந்த அளவுக்கு வாங்குகின்றனரோ, அந்த அளவுக்கு ஈடாக நெடுங்காலச் சொத்துகளை வேறு யாராவது வைத்திருக்க வேண்டும். அல்லது அந்த அளவுக்கு ஈடாகத் தேசீயக் கடன்களை அதிகாரிகள் மாற்றி அமைக்கவேண்டும். — நெடுங்காலக் குறுங்காலக் கடன்களாக அதிகாரிகள் மாற்றி அமைக்க வேண்டும். மேலும் பாங்குகள் எந்த அளவுக்கு நெடுங்காலப் பத்திரங்களை விலைக்கு வாங்குகின்றனவோ, அந்த அளவுக்குத் தாங்கள் பத்திரங்கள் விலைக்கு வாங்குவதைப் பொதுத் துறைகள் குறைத்துக் கொள்ள முடியும். இங்கிலாந்தில் 1945-47 ஆம் ஆண்டுகளில் உண்மையிலேயே கருவூலம் நெடுங்காலப் பத்திரங்களைத் திரும்பப் பெற்றுக் குறுங்காலப் பத்திரங்களை வெளியிட்டது. மேலும் அவ்வமயம் வாணிகப் பாங்குகளும் நெடுங்காலப் பத்திரங்களில் ஓரளவுக்கு முதலீடு செய்தன. (பாங்குகளின் முதலீடு சுமார் £ 200 மிலியன் களுக்காகும்.) 1945-47 முடிய தங்களுடைய அட்வான்சுகட்கான தேவை அதிகரித்தவண்ணவே இருந்தபோதிலும் பாங்குகள் நெடுங்காலப் பத்திரங்களில் முதலீடு செய்தன. (அட்வான்சுகள் £ 100 மிலியன் களுக்கும் மேலாக அதிகமாயின.) பாங்குகளிடம் அவ் வமயம் நீர்மைத் தன்மை சொத்துகள் பெருமளவில் இருந்தன ; பாங்குகளின் நீர்மைத் தன்மை சொத்துகளில் அவ் வமயம்

[1] 1945-47 ஆகிய ஆண்டுகளில் கருவூல உண்டியல் வீதமும், பாங்கு டெபாசிட் வீதமும் ஒன்றாகவே அமைந்திருந்தன. எனவே தம்மிடம் கருவூல உண்டியல்களைப் பொதுமக்கள் இருப்பாக வைத்திருக்க விரும்பவில்லை. 1955 ஆம் ஆண்டுக்குப் பின் டெபாசிட் வீதத்தைவிடக் கருவூல உண்டியல் வீதம் அதிகமானதாகவே இருந்து வருகிறது. எனவே பொதுமக்களிடமுள்ள கருவூல உண்டியல்களின் இருப்புகள் அதிகமாகி உள்ளன. இவ் விருப்புகள் காலத்திற்குக் காலம் மாறியும் அமைந்து வருகின்றன.

ஒரு பெரிய வீக்கநிலை (inflation) நிலவியது என்று கூறுவது மிகவும் பொருந்தும். எனவே பாங்குகள் பெருமளவில் நெடுங்காலப் பத்திரங்களிலும் முதலீடு செய்தன. நெடுங்காலப் பத்திரங்களில் பாங்குகள் எந்த அளவுக்கு முதலீடு செய்தனவோ, அந்த அளவுக்கு இடைக்காலப் பத்திரங்களையும் நெடுங்காலப் பத்திரங்களையும் பொதுத் துறைகள் பொதுமக்களிடமிருந்து வாங்க வேண்டிய அவசியமின்றிப் போனது.[1]

பெருமளவு பண வசதிகளை அதிகாரிகள் (பத்திரங்களை விலைக்கு வாங்கப்) பெற்றிருந்தாலும், ஓரளவுக்கு வாணிகப் பாங்குகளும் அதிகாரிகளின் நடவடிக்கைகட்கு உறுதுணையாகத் திகழ்ந்தபோதிலும், 1945-47 மூடிய, கடைப்பிடிக்கப்பட்ட பண மலிவுக் கொள்கை தோல்வியுற்றது. இவ்வாறுன வாய்ப்பான சூழ்நிலைகள் உருவாகி இருந்த போதிலும் ஏன் அது தோல்வியுற்றது. என்ற வினு எழுவது இயற்கையே அத் தோல்வி அடைந்ததில் ஆச்சரியம் ஏதுமில்லை. 1947 ஆம் ஆண்டின் ஆரம்ப காலத்தில் இடைக்கால வீதமும், நெடுங்கால வீதமும் மீண்டும் உயரலாயின. 1947 ஆம் ஆண்டு முற்றுப் பெறுமுன்பே நெடுங்கால வட்டி வீதம் 3%ஐ விடஅதிகமாகிவிட்டது. தோல்விக்கு அடிப்படையான காரணம் மார்க்கெட்டுடன் தொடர்புள்ள மக்களின் உறுதியான நம்பிக்கையேயாகும். அவ் வமயம் மூலதனப் பொருள்களில் முதலீடு செய்வதற்குப் பெருமளவில் மூலதனம் விரும்பப்பட்டது ; அதாவது மூலதனத் தேவைகள் பெருகியிருந்தன. மேலும் செல்வ வளங்கள் மிக அருகி இருந்தன. இவ்வாறுன சூழ்நிலையில் $2\frac{1}{2}\%$ வட்டி மிகவும் குறைவானது என்றும், இயற்கைக்கு முரண்பாடானது என்றும் மக்கள் கருதினர். வட்டி வீதம் விரைவில் உயரும் என்று மக்கள் ஆணித்தரமாக நம்பியதால் தங்களிடம் பெருமளவிலிருந்த பத்திரங்களைப் பணமாக்கும் முயற்சியால் அவர்கள் ஈடுபட்டனர். விளைவு 1945-47 முடிய கடைப்பிடிக்கப்பட்ட 'டால்டன் கொள்கை'யின் தோல்வியாக முடிந்தது.

[1] 1946 ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட இங்கிலாந்துத் தலைமைப் பாங்குச் சட்டத்தின் அடிப்படையில் தலைமைப பாங்கு, கட்டளைகள் பிறப்பிக்கும் அதிகாரங்கள் பெற்றிருப்பதால் பாங்குகட்கு அதிகாரிகள் கட்டளை பிறப்பித்து அவற்றின் முழு ஆதரவையும் பெற்றிருக்கலாமே என்றும், பாங்குகள் நீர்மைத் தன்மைச் சொத்துகளை அதிகரிக்கும்போது அவற்றிற்கு ஈடாக முதலீடுகளையும் அதிகரிக்க வேண்டும் என்று அதிகாரிகள் ஆணை பிறப்பித்திருக்கலாமே என்றும் எண்ணத் தோன்றலாம். 1946 ஆம் ஆண்டுச் சட்டம் டால்டன் பரிசோதனையின் இறுதிக் காலத்திலேயே நிறைவேற்றப்பட்டது என்பதை நாம மறந்துவிடலாகாது. அதற்குப் பின்புகூட அதிகாரிகள் இவ்வாறு கட்டளைகளைப் பிறப்பிப்பது சாத்தியமில்லை என்றே தோன்றுகின்றது. பொதுமக்கள் உறுதியாக நம்புவதைப் போலவே பாங்குகளும் பத்திர விலைகள் சரியப்போகின்றன என்று உறுதியாக நம்பினால் பாங்குகளை அதிகாரிகள் கட்டுப்படுத்த முடியாது. ஏனெனில் பத்திர விலைச்சரிவை ஒட்டிப் பாங்குகட்குப் பெருமளவு மூலதன இழப்பு நேரும்.

அவ் வமயம் நிலவிய சூழ்நிலையில் 3% வட்டி வீதங்கூட மிகக் குறைவானது என்றும், இயற்கைக்கு மாருனது என்றும் மக்கள் கருதினர். மூலதன வெளியீடுகளை அரசாங்கம் பல வழிகளி லும் கட்டுப்படுத்த முடிந்ததால் 3% வட்டி வீதம் நிலவ முடிந்தது என்றும் இல்லையேல் வட்டி வீதம் உயரும் என்றும் மக்கள் கருதி னர். ஆனுல் 3% வட்டி வீதமே முன்பு நெடுநாட்களாக நிலவியது என்ற உண்மையை நாம் மறந்துவிடலாகாது. நெடுநாட்களாக நிலவிய 3% வட்டி வீதத்தை அதிகாரிகள் $2\frac{1}{2}\%$ வட்டி வீதமாகக் குறைக்க முயன்ற செயலானது பொருளாதார அமைப்பில் அவ் வமயம் நிலவிய நிலைகளை எதிர்த்துப் போராடியதை ஒக்கும். இவ் வண்ணம் மார்க்கெட்டுகள் தொடர்புள்ள மக்களின் உள்ளத்தில் ஆழமாக வேரூன்றிவிட்டது. முதலீடு செய்வதில் முன்னணியில் திகழும் நிறுவனங்களும், முதலீட்டுத் தொழிலில் ஈடுபட்டுள்ள ஏனைய மக்களும் (அரசாங்கப் பத்திரங்களுக்கான தேவைகளை மாற்றி அமைப்பதில் இவர்கள் மிகுந்த செல்வாக்குப் பெற்றிருந் தனர்.) அதிகாரிகளின் நடவடிக்கைகளை நம்பவே இல்லை. நிதி அமைச்சரின் விளம்பர உரை இவர்களுடைய அவநம்பிக்கை என்ற நெருப்பில் மேலும் நெய்யை ஊற்றியதுபோல அமைந்தது. பத்திரங்கட்கு ஈடாகப் பணத்தைப் பெறுவதில் மக்கள் மிகுந்த ஆர்வம் காட்டினர். இவற்றின் விளைவாக மார்க்கெட்டில் ஒரு நிலையற்ற தன்மை நிலவியது.

பத்திர மார்க்கெட்டில் 1943-47 முடிய நிலையற்ற தன்மை நிலவியதற்கு ஊக வாணிகமே (speculation) காரணமாகும். பேராசிரியர் F.W. பெய்ஷ் (F.W. Paish, The Post-war Financial Problem, pp. 19-21) இதைக் கீழ்க்கண்டவாறு விளக்கியுள்ளார்

'வட்டி வீதங்கள் வீழ்ச்சியுற்றுக்கொண்டும் பத்திரங்களின் விலை அதிகரித்துக்கொண்டும் இருக்கும்போது, முதலின் (capital) மதிப்பு உயர்ந்து கொண்டிருக்கும். முதலின் மதிப்பு உயர்வதையொட்டி இலாபம் ஈட்ட விரும்புபவர் வட்டி வீதங் கள் மேலும் குறையக்கூடிய வகையில் தங்களுடைய நடவடிக் கைகளை ஒழுங்குபடுத்துவர். வருமானவரி (income tax) வீதங் கள், மூலதன மதிப்பு உயர்வதால் கிடைக்கும் இலாபத்தின் மேல் விதிக்கப்படும் வரி வீதங்களைவிட மிக அதிகமாக இருப் பதால், மூலதனத்தின் மதிப்பு உயர்ந்து அதன் மூலம் தங்க ளுக்கு அதிக லாபம் கிடைப்பதையே மக்கள் பெரிதும் விரும்பு கின்றனர்; (மூலதன மதிப்பு உயராமல்) பத்திரங்களினின்றும் கிடைக்கக் கூடிய வருமானத்தை (வட்டித் தொகையை) மக்கள் பெரிதாகக் கருதுவதில்லை. பணக்காரர்களைப்

பொறுத்தவரையில் இது மிகவும் உண்மையாகும். பணக்காரர்கள் மிக உயர்ந்த வீதங்களில் மேல் வரி (surtax) செலுத்த வேண்டியிருப்பதால். மூலதன மதிப்பு 6 பென்னியே உயர்ந்த போதிலும் அது 1 பவுன் மொத்த வருமானத்திற்கு ஈடானது என்று கருதுகின்றனர். இவையாவும பத்திரங்களின் விலை உயரும்போது பொருந்தக்கூடிய உண்மைகளாகும். உயர்ந்துகொண்டிருக்கும் பத்திர விலைகள் ஒரு குறிப்பிட்ட அளவினை அடைந்ததும், பத்திர விலைகள் இனிக் குறையுமே தவிர உயரா என்ற எண்ணம் நிலவினால், நிலைமை முற்றிலும் மாறிவிடும். நிலைமையை முற்றிலும் மாற்றி அமைப்பதுவும் ஊக வாணிகமேயாகும். பத்திர வட்டி வீதங்கள் ஒரு சிறிதளவே குறைந்தபோதிலும், இதன் விளைவாக மூலதன மதிப்பு குறைகின்றது. எனவே முதல் இழப்பு நேரும். பத்திரங்களினின்றும் பல ஆண்டுகளுக்கு எவ்வளவு மொத்த வட்டித்தொகை கிடைக்குமோ, அந்த அளவுக்கு முதல் இழப்பு நேர்ந்திருக்கும். வருமான வரி கட்டியபின் பத்திரங்களினின்றும் பல ஆண்டுகட்கு எவ்வளவு நிகர வருமானம் கிடைக்குமோ அந்த மொத்தத் தொகையின் அளவுக்கு முதல் இழப்பு நேர்ந்திருக்கும். எடுத்துக்காட்டு ஒன்று காண்போம். மீட்க முடியாத (irredeemable) பத்திரங்கட்கான வட்டி வீதம் $2\frac{1}{2}\%$ என்றும், பாங்குகள் டெபாசிட்டுகளுக்குத் தரும் வட்டி வீதம் $\frac{1}{2}\%$ என்றும், வருமான வரி ஒரு பவுனில் 9 ஷில்லிங் என்றும் நாம் வைத்துக்கொண்டால், ஆண்டொன்றுக்கு நிகர வருமானம் 1 பவுன் 2 ஷில்லிங்குகளாக இருக்கும். இந் நிலையில் வட்டி வீதம் $\frac{1}{4}\%$ உயர்வதால், $2\frac{1}{2}\%$ வட்டி $2\frac{3}{4}\%$ வட்டியாக உயரும். இதன் விளைவாக 9 பவுன் முதல் இழப்பு ஏற்படும். இந்த முதல் இழப்பாகிய 9 பவுன்களும் பத்திரத்தினின்றும் 8 ஆண்டுகளுக்குக் கிடைக்கக்கூடிய மொத்த நிகர வருமானத்திற்குச் சமமாகும். எனவே பத்திரத்தை வைத்திருப்பவருக்கு அடுத்து வரும் 8 ஆண்டுகட்கு அதனால் எந்த விதமான ஆதாயமும் கிடைக்காது. பத்திரத்தை விலைக்கு வாங்கு முன், அடுத்த எட்டு ஆண்டுகளில் எப்பொழுதாவது வட்டி வீதம் உயரலாம் என்று பத்திரத்தை விலைக்கு வாங்க விரும்புபவர் எதிர்பார்த்தால் அவர் பத்திரத்தை விலைக்கு வாங்குவதைவிடப் பணத்தைப் பாங்கில் டெபாசிட்டுகளாக வைத்திருப்பதே இலாபகரமானதாகும். பெரும் பணக்காரர் ஒருவர்—மிக அதிகமான வீதத்தில் தமது வருமானத்தின் ஒரு பகுதிக்கு மேல் வரி (surtax) கட்டி வரும் ஒருவர்—பத்திரத்தை விலைக்கு வாங்குவதனால், பாங்கில் பணத்தை (பத்திரம் வாங்காமல்) டெபாசிட்டுகளாக வைத்திருந்தால் எவ்வளவு

வருமானம் கிடைக்குமோ அதைவிட அவருக்கு 100 பவுன்களுக்கு 1 ஷில்லிங் அல்லது 1 ஷில்லிங் 3 பென்னி அதிகமாகக் கிடைக்கலாம். இந்தப் பணக்காரருக்கு வட்டி வீத உயர்வால்—$2\frac{1}{2}\%$ லிருந்து $2\frac{3}{4}\%$ ஆக உயர்வதால் எவ்வளவு முதலிழப்பு நேருமோ, அத்தொகை அவருக்குப் பத்திரத்திலிருந்து 180 ஆண்டுகட்குக் கிடைக்கக்கூடிய மொத்த நிகர வருமானத்திற்குச் சமமாகும். எனவே மேல்வரி செலுத்தும் ஒரு நபர் முதல் இழப்பால் பெரிதும் பாதிக்கப்படுவார். முதலிழப்பு எவ்வளவு ஏற்பட்டுள்ளதோ, அதே அளவுக்குக் குறுகிய காலத்தில் முதல் மதிப்பு உயர்வு ஏற்பட்டால் மேல்வரி செலுத்தும்:இந்நபர் பாதிக்கப்படமாட்டார். வட்டி வீதங்கள் குறைந்துகொண்டே இருக்கும் போது ஒரு குறிப்பிட்ட அளவை அடைந்ததும், இனி வட்டி வீதம் மேலும் குறைவதற்கு வாய்ப்பில்லை என்ற நிலை ஏற்பட்டுவிட்டால், அந்நிலையில் ;மேல்வரி செலுத்துபவர்களும் வருமான வரி செலுத்துபவர்களும் பத்திரங்களில் முதலீடு செய்வதைவிடப் பாங்குகளில் தங்களுடைய பணத்தை டெபாசிட்டுகளாக வைத்திருப்பதே நல்லது. (இந்த டெபாசிட்டுகளிலிருந்து $\frac{1}{2}\%$ வட்டி கிடைக்கும்.) ஊகவாணிகத்தின் விளைவால் பத்திரங்களின் விலை மேலும் மேலும் உயர்ந்து ஒரு குறிப்பிட்ட அளவை அடைந்த பின் இனி பத்திரங்களின் விலை மேலும் உயராது என்று எண்ணம் நிலவுமேயானால், இவ்வாறு அதிகமான அளவை எட்டிப் பிடித்திருக்கும் பத்திரங்களின் விலையை அதே அளவில் நிலைநிறுத்துவது மிகவும் கடினமான காரியமேயாகும்.'

எனவே பத்திர விலைகள் உச்சநிலையை அடைந்துவிட்டன. இனியும் அவற்றின் விலைகள் உயர்வதற்கான வாய்ப்புகள் இல்லை என்ற எண்ணம் மார்க்கெட்டில் நிலவத் தொடங்கியதும், ஒரு நிலையற்ற தன்மை மார்க்கெட்டில் உருவாகியது. பொதுமக்கள் பெருமளவில் பத்திரங்களை விற்க ஆரம்பித்தனர். அவற்றையெல்லாம் வாங்கவேண்டிய கட்டாயம் பொதுத்துறைகட்கு நேர்ந்தது. இதற்கு ஏற்ப டெபாசிட்டுகளும் மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டே போயின. ஓராண்டுக் காலத்திற்குள் புதிதாக உற்பத்தி செய்யப்பட்ட டெபாசிட்டுகள் மட்டும் £800 மில்லியன்களாகத் திகழ்ந்தன. முன்பு இருந்த மொத்த டெபாசிட்டுகளைவிட இது 20%அதிகமானதாகும். இவ்வாறான சூழ்நிலை உருவாகியிருப்பதைக் கண்டு அதிகாரிகள் திகிலடைந்தனர். மார்க்கெட்டுடன் தொடர்புடைய மக்களின் கருத்து மாறாமல் இருக்கும் பட்சத்தில் பெருமளவில் டெபாசிட்டுகளை உற்பத்தி செய்தால்தான் $2\frac{1}{2}\%$

வட்டி வீதத்தை நிலைநாட்ட முடியும். இல்லாவிடில், தங்கள் நடவடிக்கைகட்கு அதிகாரிகள் ஒரு முடிவு கட்டவேண்டும். இறுதியில் பத்திர விலைக்குத் தாங்கள் கொடுத்துவந்த ஆதரவை அதிகாரிகள் நிறுத்தினர். இதன் விளைவாக நெடுங்கால வட்டி வீதங்கள் உயரலாயின. அவை 3 சதவீதத்தை அடைந்தன—3 சதவீதத்தைக்கூட தாண்டிவிட்டன என்று சொல்லலாம். ஆனால் குறுங்கால வட்டி வீதங்கள் எவ்வித மாற்றமுமின்றி 1951ஆம் ஆண்டுவரை அதே அளவினவாகத் திகழ்ந்தன.

1947ஆம் ஆண்டிற்குப் பின் பொதுவாகக் குறுங்கால வட்டி வீதங்களும் நெடுங்கால வட்டி வீதங்களும் உயர்வதற்கான வாய்ப்புகளே உருவாகியுள்ளன. இதற்கு ஏற்ப அதிகாரிகள் தங்களுடைய நடவடிக்கைகளை ஒழுங்கு செய்துவருகின்றனர், பவுனின் வெளிநாட்டு மதிப்பு பாதிக்கப்பட்டதையொட்டி 1955.57ல் குறுங்கால வட்டி வீதங்களை அதிகாரிகள் தாங்களாகவே உயர்த்தினர். 1950-59 முடிய குறுங்காலப் பத்திரங்களை நெடுங்காலப் பத்திரங்களாக மாற்றும் முயற்சியில் அதிகாரிகள் மிகத் தீவிரமாக ஈடுபட்டிருந்தனர். (இம்முயற்சி ஓரளவுக்கே வெற்றி அளித்தது.) 1945-47 முடியக் கடைப்பிடிக்கப்பட்ட பணக்கொள்கையின் குறிக்கோளைவிட 1950-59 முடியக் கடைப்பிடிக்கப்பட்ட பணக்கொள்கையின் குறிக்கோள் முற்றிலும் மாறுபட்டதாக இருந்தது.

1950-59 முடிய அதிகாரிகள் நெடுங்காலப் பத்திரங்களை விற்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இதன்மூலம் கிடைத்த பணத்தைப் பயன்படுத்திக் கருவூல உண்டியல்கள், குறுங்காலப் பத்திரங்கள் ஆகியவற்றை விலைக்கு வாங்கினர். 1945-47 முடியக் கடைப்பிடிக்கப்பட்ட பணக்கொள்கையை விளக்கும் முகத்தான் மேலே நாம் கொடுத்துள்ள நிலை I. நிலை II, நிலை III, நிலை III A ஆகியவற்றைப் பொருந்தும்வகையில் மாற்றி அமைத்துக்கொண்டால், அதிகாரிகள் பத்திரங்களை விற்றதனால் நேர்ந்த விளைவுகளை எளிதில் நாம் புரிந்துகொள்ள முடியும். அதிகாரிகள் விற்கும் பத்திரங்களையெல்லாம் பொதுமக்களே வாங்குகின்றனர் என்றும், தங்களிடமுள்ள கருவூல உண்டியல்களை விற்று, அப்பணத்தைக் கொண்டு பொதுமக்கள் பத்திரங்களை வாங்குகின்றனர் என்றும் வைத்துக்கொண்டால், பாங்குகளின் இருப்பு நிலைக் குறிப்புகளில் எந்தவிதமான மாற்றமும் ஏற்படாது. அதாவது பொதுமக்களின் நீர்மைத்தன்மை குறைந்திருந்தபோதிலும், பாங்குகளின் நீர்மைத் தன்மையில் சிறிதளவேனும் மாற்றம் நேர்ந்திராது. ஆனால் தங்களிடமுள்ள கருவூல உண்டியல்களை விற்காமல் தங்களுடைய பாங்கு டெபாசிட்டுகளைப் பயன்படுத்திப் பொதுமக்கள் பத்திரங்

களை விலைக்கு வாங்குகின்றனர் என்று வைத்துக்கொண்டால், பாங்குகளின் டெபாசிட்டுகள் குறையும்; உடனடியாக இதற்கு ஈடாகப் பாங்குகளின் ரொக்கமும் குறையும்; ரொக்க விகிதத்தைச் சரிக்கட்ட விரும்பி, பாங்குகள் கருவூல உண்டியல்களை விற்கும் போது அவற்றின் கருவூல உண்டியல்களின் இருப்புகள் குறையும். எனவே, தங்கள் பாங்கு டெபாசிட்டுகளைப் பயன்படுத்திப் பொது மக்கள் பத்திரங்களை விலைக்கு வாங்கும்போது, பொதுமக்கள், பாங்குகள் ஆகிய இரு சாராரின் நீர்மைத்தன்மையும் பாதிக்கப்படு கின்றது—தங்கள் டெபாசிட்டுகளைக் குறைத்துக்கொண்டு தங்களுடைய பத்திர இருப்புகளை அதிகரிப்பதால் பொதுமக்களின் நீர்மைத்தன்மை குறைகின்றது; பாங்குகளிடமுள்ள டெபாசிட்டுகள் குறைந்திருப்பதால் பாங்குகளின் நீர்மைத்தன்மை பாதிக்கப்பட்டுள்ளது. பாங்குகளின் நீர்மைத்தன்மை பெருமளவில் பாதிக்கப் பட்டால், அவை தங்களிடமுள்ள சில அரசாங்கப் பத்திரங்களை (பொதுவாகக் கெடுவு காலத்தை அணுகிக்கொண்டிருக்கும் அரசாங்கப் பத்திரங்களை) விற்க முனையும். இதன் விளைவாகப் பத்திரங்களின் விலைகள் மேலும் குறையலாம். (அதாவது வட்டி வீதங்கள் மேலும் உயரலாம்.) பாங்குகள் பொதுவாகக் கெடுவு காலத்தை அணுகிக்கொண்டிருக்கும் பத்திரங்களையே விற்பதால், இவ்வகையைச் சேர்ந்த பத்திரங்களின் விலையே பெரிதும் பாதிக்கப்படும். தங்களுடைய நீர்மைத்தன்மை குறையும்போது வாடிக்கைக்காரர்கட்குத் தாங்கள் கொடுக்கும் அட்வான்சுகளைப் பாங்குகள் குறைத்துக்கொள்ளலாம். (இதனுல் இக்கட்டான சூழ்நிலை உருவாகும். எனவே பத்திரங்களின் விலை மேலும் குறைய நேரிடும்) ஆனுல் 1950-59ல் இங்கிலாந்தில் உண்மையில் இம் மாதிரியான நிலை-பாங்குகள் அட்வான்சுகளைக் குறைத்துக்கொள்ளவேண்டிய நிலை-தோன்றவே இல்லை.

எதிர்காலத்தில் நிலவக்கூடிய வட்டி வீதங்களைப் பற்றிய பொதுமக்களின் அசைக்கமுடியாத நம்பிக்கை வட்டி வீதங்களைப் பாதிக்கின்றது. தங்களுடைய முதலீடுகளை நிலைமைக்கு ஏற்றவாறு மாற்றி அமைக்கும் பாங்குகளின் பழக்கமும், இதே முறையில் வட்டி வீதங்களைப் பாதிக்கின்றது. குறுங்கால வட்டி வீதம் போதுமான அளவு உயர்ந்து, இதே நிலையில் நெடுங்காலம் நீடித்திருக்கும்பட்சத்தில், யாதொரு சிரமமுமின்றித் தாம் விரும்பும்வண்ணம் நெடுங்கால வட்டி வீதங்களை அதிகாரிகளால் அதிகரிக்கமுடியும். பொதுமக்களின் கருத்துகளை மாற்றி அமைக்கும் நோக்கத்துடன் அதிகாரிகள் பல முறைகளைக் கடைப்பிடிக்கலாம். எடுத்துக்காட்டாக அதிகாரிகள் கடைப்பிடித்த ஒரு முறையைக் காண்போம். 1957ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் பாங்கு வீதம் (bank rate) $5\frac{1}{2}\%$

லிருந்து 5% ஆகக் குறைக்கப்பட்டது. அவ்வமயம் பத்திரங்களின் விலைகள் அதிகமாகிக்கொண்டிருந்தன. இருப்பினும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் மார்க்கெட் நடவடிக்கையாளர் (market operater) நெடுங்காலப் பத்திரங்களைத் தாம் விற்ற விலையில் மாற்றங்கள் எதையும் செய்யவில்லை. பாங்கு வீதம் $5\frac{1}{2}$% ஆக இருந்த போது பத்திரங்களை என்ன விலைக்கு விற்றாரோ, அதே விலைக்கே பாங்கு வீதம் 5% ஆகக் குறைந்தபின்னும் விற்றுவந்தார்.

பெருமளவில் நெடுங்காலப் பத்திரங்களை விற்பதன்மூலம் நெடுங்கால வட்டி வீதங்களை அதிகாரிகளால் அதிகரிக்க முடியும். அதிகாரிகள் கடைப்பிடிக்கும் இக் கொள்கை தவருன கொள்கை என்று சிலர் கருதுகின்றனர், அதிகாரிகள் பெருமளவில் பத்திரங்களை விற்பதனால் பத்திரங்களுக்கான தேவை, மிகச் சுருங்கிவிடும் என்றும், இவ்வாறு நேர்ந்தபின் குறுங்காலப் பத்திரங்களை (குறிப்பாகக் கருவூல உண்டியல்களை) வெளியிடுவதன் மூலமே தன்னுடைய நிதித் தேவையை அரசாங்கம் பூர்த்தி செய்யவேண்டிய கட்டாயம் நேரும் என்றும், இதன் விளைவாகப் பாங்குகளின் நீர்மைத் தன்மை மிகவும் அதிகமாகும் என்றும் இவர்கள் கருதுகின்றனர். இவர்களின் வாதத்தில் ஓரளவு உண்மை இருக்கிறது. பத்திரங்களின் விலைகள் குறையுங் காலங்களைவிடப் பத்திரங்களின் விலைகள் உயரும் காலங்களில் அரசாங்கத் தரகர் (அதாவது மார்க்கெட் நடவடிக்கையாளர்) மிகுதியான அளவு பத்திரங்களை விலைக்கு விற்கமுடியும். அன்றுடம் பத்திர மார்க்கெட்டில் நிலவக்கூடிய சூழ்நிலைக்கு ஏற்பத் தங்களுடைய நடவடிக்கைகளை அதிகாரிகள் அமைத்துக்கொண்டால், தாங்கள் விரும்பிய வண்ணமே அதிகாரிகளால் நெடுங்கால வட்டி வீதத்தை ஓரளவுக்கு மாற்றி அமைக்க முடிவதோடு, பாங்குகளின் ரொக்கத் தன்மையும் அதிகரித்துவிடாமல் பார்த்துக்கொள்ள முடியும். அண்மையில் இதுபோன்ற முறையைக் கடைப்பிடித்து, இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு பணவீக்க நிலையைக் கட்டுப்படுத்தியது.[1] ஆனல், நெடுங்கால வட்டி வீதங்களை அதிகரிக்க வேண்டும் என்று அதிகாரிகள் கருதுகின்றனர் என்றும் அதற்காக மார்க்கெட்டில் நிலவும் கருத்துகளைப் பெருமளவு மாற்ற விரும்புகின்றனர் என்றும், வைத்துக்கொண்டால், பாங்குகளின் நீர்மைத் தன்மையைக் கண்காணிப்பதைவிட நெடுங்காலப் பத்திரங்களை விற்று, வட்டி வீதங்களை அதிகரிக்க முனைவதிலேயே அதிகாரிகள் பெருங் கவனம் செலுத்தவேண்டியிருக்கும். பத்திரங்களைக் குறைந்த விலைகளில் அதிகாரிகள் விற்க முயன்ருலும்,

1 இது குறித்து மேலும் அறிய விரும்புவோர் கீழே தரப்பட்டிருக்கும் புத்தகத்தைப் பார்க்கவும் : The Radcliffe, Report, Chapter VII.

பத்திரங்களின் விலை இன்னும் குறையும் என்று பொது மக்கள் கருதினால், பத்திரங்களை அதிகாரிகளால் விற்க முடியாது. இது போன்ற ஒரு சூழ்நிலையில் அதிகாரிகள் செய்யக்கூடியது என்ன என்ற வினா எழுகிறது. நாட்டில் நிலவும் சூழ்நிலையில் வட்டி வீதத்தை உயர்த்துவதே பொருத்தமானது என்று அதிகாரிகள் எண்ணினாலும், வட்டி வீதத்தை அவர்கள் குறைக்கவேண்டிய கட்டாயம் நேருமா என்ற வினாவும் எழுகிறது.

பண வீக்க நிலையைக் கட்டுப்படுத்தும் முயற்சியில் அதிகாரிகள் ஈடுபடும்போது அவர்களின் நோக்கம் நெடுங்காலத்தைக் குறித்ததாக இருக்கலாம் அல்லது குறுங்காலத்தைக் குறித்த ஒன்றாக இருக்கலாம் – அதாவது அதிகாரிகள் நெடுங்கால வட்டி வீதங்களை உயர்த்த விரும்பலாம் அல்லது குறுகிய காலத்தில் மக்களுக்குத் தேவைப்படும் கடன் வசதிகளைக் குறைக்க விரும்பலாம். இவை இரண்டனுள் எந் நோக்கம் இன்றியமையாதது என்று அதிகாரிகள் தீர்மானிக்கின்றனரோ, அதைச் சார்ந்தே அவர்களின் கொள்கை அமையும். நாட்டின் பொருளாதார நடவடிக்கைகட்கு ஏற்ற அளவிலான கடன் வசதிகளையே பொது மக்கள் விரும்புகின்றனர் என்றும், பொது மக்களின் குறுங்காலக் கடன் தேவைகளை வாணிகப் பாங்குகள் பெருமளவில் நிறைவேற்றுவதால் யாதொரு கேடும் நேராது என்றும், முதலீட்டுத் திட்டங்களைக் கட்டுப்படுத்தி, அதே சமயம் சேமிப்பைத் தூண்டி விடவும் வேண்டும் என்றும் அதிகாரிகள் எண்ணுகின்றனர் என்று வைத்துக்கொண்டால், நெடுங்கால வட்டி வீதத்தை உயர்த்து வதே உகந்தது என்று அவர்கள் கருதுவர். ஆனால், ஓர் உண்மையை நாம் மறந்துவிடலாகாது. நிதி நிறுவனங்களும், தனிப்பட்ட நபர்களும் எளிதில் பாங்குகளிடமிருந்து கடன் வசதிகள் பெறமுடியும். இவ்வாறு பெறும் குறுங்காலக் கடன்களை இவர்கள் தற்காலீகமாகத் தங்கள் நெடுங்காலத் தேவைகளை நிறைவேற்றப் பயன்படுத்தலாம். எனவே, நெடுங்கால வட்டி வீதத்தை உயர்த்தி முதலீட்டைக் கட்டுப்படுத்த முனையும் அதிகாரிகளின் நோக்கம் நிறைவேறாமலேயே போகலாம். ஆகவே, பண வீக்க நிலையைக் கட்டுப்படுத்தும் வகையில் அதிகாரிகள் நடவடிக்கைகள் எடுக்கும்போது வட்டி வீதத்தை உயர்த்த முயலுவதோடு, பாங்கு அட்வான்சுகளையும் நேரடியாகக் கட்டுப்படுத்த முயலுவதும் இன்றியமையாதனவாகும்.

## 4. கடன் தன்மைக் கட்டுப்பாடுகள்

பாங்குகளின் நடவடிக்கைகளை அதிகாரிகளால் கட்டுப்படுத்த முடியும் என்று நாம் கண்டோம். பாங்குச் செலாவணிகளின்

அளவினையும், பாங்குகள் ஏற்பாடு செய்கின்ற வியாபாரக் கடன்கட்கான வட்டி வீதங்களையும் அதிகாரிகள் கட்டுப்படுத்த முயலுகின்றனர் என்றும் கூறினோம். இக் கட்டுப்பாட்டு முயற்சிகள் யாவும் கடன் அளவுக் கட்டுப்பாடுகள் (quantitative credit controls) என்ற பெயர் பெறுகின்றன. கடன் அளவுக் கட்டுப்பாடுகளையே கடைப்பிடித்து அதிகாரிகள் பாங்குகளின் நடவடிக்கைகளை ஒழுங்கு செய்கின்றனர் என்று நாம் இதுகாறும் கூறிவந்தோம். இதற்குக் காரணம் உள்ளது. கடந்த 100 ஆண்டுகட்கும் மேலாக மையபாங்கு முறை பற்றிய விவாதங்களில் கடன் அளவுக் கட்டுப்பாடுகளே முக்கியமான இடம் வகித்து வந்துள்ளன. ஆனால் மையபாங்கின் கட்டுப்பாட்டு முறைகள் யாவுமே கடன் அளவுக் கட்டுப்பாடுகளில் அடங்கும் என்று எண்ணிவிடலாகாது. கடன் அளவுக் கட்டுப்பாடுகளினின்றும் வேறுபட்டு விளங்கும் சில முறைகளையும் மைய பாங்குகள் கடைப் பிடித்துவருகின்றன. இவையே கடன் தன்மைக் கட்டுப்பாட்டு முறைகளாகும் (Selective methods of Credit Control) கடன் தன்மைக் கட்டுப்பாடுகள் அண்மைக் காலத்திலேயே தோன்றியுள்ளன என்று கூறிவிடமுடியாது. இவை நெடுங்காலமாக மைய பாங்குகட்கு பழக்கமானவைகளேயாகும். எனினும் நெடுங்காலமாக இவற்றை மைய பாங்கு பயன்படுத்தி வருவதை நாம் விளக்கமாக மைய பாங்கின் வரலாற்றினின்றும் அறிய முடிவதில்லை; ஆனால் இதை நாம் குறிப்பாக உணரலாம், கடந்த இருபது ஆண்டுகளில் கடன் தன்மைக் கட்டுப்பாடுகள் பெரிதும் வளர்ச்சியுற்றுள்ளன. செம்மையான முறையில் செயலாற்றிவரும் ஒரு பொருளாதார அமைப்பின் தேவைகட்கு ஏற்றதொரு வகையில் பாங்குகள் கடன் வசதிகளை ஏற்பாடு செய்துவரும். இத் தன்மைத்தான பொருளாதார அமைப்பில் ஒரு சில உபயோகங்கட்குப் பெருமளவில் கடன் வசதிகள் கிடைப்பதற்குரிய வாய்ப்புகள் ஏராளமாக உருவாகலாம். எனவே சில குறிப்பிட்ட துறைகள் கடன் வசதிகளைப் பெருமளவில் பயன்படுத்த முனையலாம். மேலும் ஊக வாணிகம் (speculation) பெருக நேரலாம். இவை பொருளாதார அமைப்பின் நிலைத்த தன்மையைப் பெரிதும் பாதிக்கலாம். குறிப்பிட்ட துறைகளின் மிகுந்த வளர்ச்சியை யொட்டியும், ஊக வாணிகத்தை யொட்டியுமே பொருளாதார அமைப்புக் கேடு சூழ்ந்திருப்பதால் நாட்டிலுள்ள மொத்த பாங்குச் செலாவணியைக் கட்டுப்படுத்த வேண்டியது அவசியமில்லை. எந்தெந்தத் துறைகளில் கடன் வசதிகள் பெருகியுள்ளனவோ, அந்தந்தத் துறைகட்குக் கிடைக்கக்கூடிய கடன் வசதிகளை மட்டும் கட்டுப்படுத்துவது சிறப்பானதாகும். இவ்வாறு குறிப்பிட்ட ஒரு சில துறைகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் அதிகாரிகளால்

கடைப்பிடிக்கப்பட்டு வருகின்ற முறைகளே கடன் தன்மைக் கட்டுப்பாடுகளாகும். வேறு சில சமயங்களிலும் கடன் தன்மைக் கட்டுப்பாடுகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. நாட்டில் பண வீக்க நிலை தோன்றியுள்ள காலத்தில் நிலைமையை உடனடியாக உறுதியுடன் கட்டுப்படுத்துவதற்குக் கடன் அளவுக் கட்டுப்பாடுகளையே கடைப்பிடிக்க முயலுவது பயனற்றதாகும். இதுபோன்ற காலங்களில் நிலைமையைச் சீரிய முறையிலும் உடனடியாகவும் கட்டுப்படுத்தும் நோக்கத்தோடு, கடன் அளவுக் கட்டுப்பாடுகளுடன், கடன்தன்மைக் கட்டுப்பாடுகளும் பயன்படுத்தப்படுகின்றன.

பாங்கு முறை மரபுகளை யொட்டியே வளர்ந்துள்ள மையப் பாங்குகள் கடன் தன்மைக் கட்டுப்பாடுகள் சிலவற்றை இயற்கையாகவே கடைப்பிடித்து வருகின்றன. ஏனெனில் நல்லது எது, கெட்டது எது என்று பொருள்களின் தன்மையை ஆராய்ந்து செயலாற்றுவதே சிறந்த பாங்குகளின் பழக்கமாகும். யார் நாணயமான கடனாளி, யார் நாணயமற்றவர் என்று சிறந்த பாங்கர் எளிதில் கண்டு கொள்கின்றார். எது நல்லது, எது கெட்டது என்று ஆராய்வது, எந்தெந்த உபயோகங்கட்குக் கடன் வசதிகளைச் செய்யலாம், எவ்வெவற்றிற்குச் செய்யக் கூடாது என்று தீர்மானிப்பது, நாணயமானவர் எவர் என்றும் நாணயமற்றவர் அவர் என்றும் மதிப்பிடுவது ஆகியவற்றில் தமது வாழ்நாள் முழுவதையும் சிறந்த பாங்கர் கழித்து வருகின்றார் என்றும் கூறினால் அது மிகையாகது. 19 ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்துத் தலைமை பாங்கு இம் முறையிலேயே தன்னுடைய நடவடிக்கைகளை ஒழுங்கு செய்து கொண்டது. சிறந்த பாங்கு முறைக்கு ஆதாரமாக அமையக்கூடிய கருத்துகளின் அடிப்படையிலே இங்கிலாந்துத் தலைமை பாங்குக்கும், உண்டியல் கழிவு மார்க்கெட் தலைமை பாங்கின் ஏனைய கடனாளிகள் ஆகியோருக்கும் இடையிலான தொடர்புகள் அமைந்திருந்தன. தன்னிடம் விற்பனைக்கு வரும் எல்லாவகையைச் சேர்ந்த உண்டியல்களையும் இங்கிலாந்துத் தலைமை பாங்கு கழிவு செய்ய முன்வரவில்லை. உண்டியலுக்கு உத்தரவாதம் அளிக்கும் வகையில் அதன்மீது இரண்டு கையொப்பங்கள் பொறிக்கப் பட்டிருக்க வேண்டும். இத் தன்மைத்தான் உண்டியல்களே கழிவுக்குத் தகுதியானவை என்று இங்கிலாந்துத் தலைமை பாங்கு கருதிவந்தது. 1875 ஆம் ஆண்டு உண்டியல் கழிவகங்கள் மேலும் மேலும் பெருமளவில் உண்டியல்களை விலைக்கு வாங்க முன்வந்தன. இதையொட்டி லிவர்பூல், கிளாஸ்கோ ஆகிய நகரங்களுடன் நடைபெற்று வந்த வட அமெரிக்க வர்த்தகத்தில் ஊக வாணிகம் (speculation) தலைவிரித்

தாடத் தொடங்கியது. அவ்வமயம் மார்க்கெட்டில் உருவாகி வந்த நிலைமைகளைக் கண்டு இங்கிலாந்துத் தலைமை பாங்கு பெரிதும் அஞ்சியது. தன்னைக் காத்துக் கொள்ளும் நோக்கத்துடன் உண்டியல் மார்க்கெட்டுடன் தொடர்புகளைத் துண்டித்துக் கொண்டது. அதாவது உண்டியல்களைக் கழிவு செய்ய இங்கிலாந்துத் தலைமை பாங்கு முன்வரவில்லை. இத்தகைய நிலை நீடித்திருக்கவில்லை. மைய பாங்குப் பணிகளையும் இங்கிலாந்துத் தலைமை பாங்கே ஆற்றிவந்தமையால், அது மீண்டும் உண்டியல் மார்க்கெட்டுடன் தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டது. ஆனால் உண்டியல் பேரங்களை மிகவும் விழிப்புடன் அது ஆற்றிவரலாயிற்று. உண்டியல்களின் தரத்தைக் கண்காணிப்பதில் இங்கிலாந்துத் தலைமை பாங்கு மிகுந்த ஆர்வம் காட்டியது. தனக்கும், உண்டியல் கழிவகங்கட்கும் ஏற்பட்டிருந்த நெருக்கமான உறவுகளின் அடிப்படையில் மார்க்கெட்டில் கையாளப்பட்டுவந்த உண்டியல்களின் தரத்தை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கால் பெரிதும் உயர்த்த முடிந்தது. இதிலும் வேறு பல காரணங்களிலும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு இருபதாம் நூற்றுண்டின் ஆரம்ப காலத்தில் மிகுந்த ஆற்றலுடன் திகழ்ந்தது. 1906-1907 ஆகிய ஆண்டுகளில் தோன்றிய அபாய நிலைகளை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு திறமையோடு சமாளித்ததனின்றும் இதை நாம் நன்கு உணரலாம். இலண்டன் மார்க்கெட்டில் 1875 ஆம் ஆண்டு உருவாகியிருந்தது போன்றதொரு சூழ்நிலை 1906-1907 ஆகிய ஆண்டுகளிலும் உருவாகியது. அவ்வமயம் நியூயார்க்கிலும், வட அமெரிக்க வர்த்தகத்திலும் ஊக வாணிகம் தழைத்தோங்கிக்கொண்டிருந்தது. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு 1885-ல் உண்டியல் மார்க்கெட்டைவிட்டுத் தற்காலிகமாக விலகியதுபோன்று, 1906-1907 ஆகிய ஆண்டுகளிலும் விலகிவிடவில்லை. ஆனால் வட அமெரிக்க வர்த்தகத்தையொட்டி வரையப்பட்ட உண்டியல்களைமட்டும்—அதாவது அமெரிக்க ஊக வாணிகத்தையொட்டி வரையப்பட்ட உண்டியல்களைமட்டும்—இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கழிவு செய்ய முன்வரவில்லை. அமெரிக்க ஊக வாணிகம் இலண்டன் மார்க்கெட்டைப் பாதிக்காமலிருந்ததற்கு இதுவே காரணமாகும். குறிப்பிட்ட துறையில் நிலவிய ஊகவாணிகம் ஆபத்தானது என்று கருதி, அது இலண்டனுக்கும் பரவவிடாமல் தடை செய்யும் நோக்கத்துடன், அக்குறிப்பிட்ட துறையினின்றும் தோன்றிய உண்டியல்களை இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கழிவு செய்ய முன்தரவில்லை. அதாவது அவ்வமயம் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு கடன் தன்மைக் கட்டுப்பாட்டைப் பயன்படுத்தியது எனலாம்.

அவ் வமயம் மையப் பாங்கராய்த் திகழ்ந்தோரும், பணம் பற்றிய கருத்துகளை வெளியிட்டோரும் சாதாரண பாங்கர்களே யாவர். எனவே அன்னூர் அவ் வமயம் கடன் தன்மைக் கட்டுப் பாடுகளின் ஆற்றலை மிகைப்படுத்தியே கூறிவந்தனர். மையப் பாங்கு முறையை நிறுவுவதுகுறித்து அமெரிக்காவில் நடந்து கொண்டிருந்த ஏற்பாடுகளில் துரதிர்ஷ்டவசமாக இக்கருத்துக் களின் சாயல் படிந்திருப்பதை நாம் காணமுடியும். மையப் பாங்கு முறையை நிறுவுவது குறித்த விவாதங்கள் பல ஆண்டுகளாக அமெரிக்காவில் நடந்து கொண்டிருந்தன. இதை அடுத்து 1907ஆம் ஆண்டு அமெரிக்கப் பண மார்க்கெட்டில் ஒரு நெருக் கடி நிலை நேர்ந்தது, இது கண்டு அஞ்சிய அதிகாரிகள் பணக் கட்டுப்பாடு சம்பந்தட்ட சிக்கல்களை ஆராயும் நோக்கத்துடன் ஒரு மாபெரும் விசாரணையை நிறுவினர். இவ் விசாரணைகளின் விளைவாக ஐக்கிய ரிசர்வ் முறை தோன்றியது. நாணயமான வர்த்தகப் பத்திரங்கட்கு ஈடாக மட்டும் மைய பாங்கு கடன் வழங்க முன்வரவேண்டும் என்ற விதிமுறையைச் சட்டம் ஐக்கிய ரிசர்வ் முறையின்மீது சுமத்தியது. மிகவும் கட்டுப்பாடான விதி களின் அடிப்படையிலேயே ஐக்கிய ரிசர்வ் முறையில் மறு கழிவுக் குத் தகுதியான சொத்துகள் யாவை என்பதைத் நீர்மானித்தனர். இதன் விளைவாக மிகக் குறைந்த அளவு சொத்தினங்களே ஐக்கிய ரிசர்வ் முறையில் மறு கழிவுக்குத் தகுதியானவைகளாத் திகழ்ந் தன. இவ் விதிமுறையின் கேட்டை 1932-33ஆம் ஆண்டுகளில் பாங்குகட்கு ஒரு நிதி நெருக்கடி நிலை நேர்ந்தது. பாங்குகளிட மிருந்த ஒரு சில சொத்துகளே மறுகழிவுக்குத் தகுதி வாய்ந்தவை யாகத் திகழ்ந்தமையால், நெருக்கடி நிலையை அகற்றும் வகையில் ஐக்கிய ரிசர்வ் முறையால் உடனடியாகப் பெருமளவு ரொக்கத் தைப் பாங்குகட்கு வழங்கமுடியவில்லை.

இவற்றிற்கிடையே ஒன்று ஈண்டு நாம் குறிப்பிட விரும்பு கிறோம். மையப் பாங்கு முறைபற்றிய சில அடிப்படையான உண்மைகளை நெடுங்காலத்திற்கு முன்பே பேஜட் விளக்கியிருந் தார். இது தவிர மையபாங்கு முறைபற்றிய விளக்கமான கோட் பாடு (theory) ஏதும் நெடுங்காலமாகத் தோன்றவே இல்லை என லாம். இந்தக் குறையை நீக்கும் வகையில் ஹாட்ரி (Hawtrey), கேய்ன்ஸ் (Keyncs) ஆகியோரின் புத்தகங்கள் வெளிவந்தன. கடன் அளவுக் கட்டுப்பாடுகள் குறித்தும் மைய பாங்கு கடை நிலைக் கடன் ஈவோனுகத் திகழவேண்டியதன் இன்றியமையாமை யையும் இவர்கள் மிகவும் விரிவான முறையில் விளக்கியுள்ளனர். எனவே பிரிட்டனைப் பொறுத்த வரையில் மையபாங்கு முறை சம்பந்தமான கோட்பாடு—விளக்கமான கோட்பாடு—ஒன்று உரு

வாகியது என்றே கூறவேண்டும். 1933ஆம் ஆண்டு அமெரிக்கப் பாங்கு முறைக்கு ஒரு சோதனை காலமாகத் திகழ்ந்தது. பாங்கு கட்கு ஒரு நெருக்கடி நிலை நேர்ந்திருந்த போதிலும், ஐக்கிய ரிசர்வ் முறை அவற்றின் உதவிக்கு உடனடியாக வரமுடியவில்லை. மறு கழிவுக்குத் தகுதியான சொத்தினங்கள் யாவை என்பது குறித்து மிகவும் கட்டுப்பாடான விதிமுறைகளை ஐக்கிய ரிசர்வ் முறை கையாளவேண்டியிருந்ததே இதற்குக் காரணமாகும். எனவே தகுதிக் கோட்பாடு பயனற்றது என்ற ஓர் எண்ணம் பரவியது. ஏற்கெனவே பெரிதும் வலியுறுத்தப்பட்டு வந்த கடன் அளவுக் கட்டுப்பாட்டுக் கோட்பாட்டுக்கே பெரும் ஆதரவு கிட்டியது. இதே சமயம் சில புதிய கடன் தன்மைக் கட்டுப்பாடுகளைப் பிரயோகிப்பது குறித்தும் அமெரிக்காவில் ஆராய்ச்சிகள் நடை பெற்றுவந்தன. 1932-33ஆம் ஆண்டு நேர்ந்த நிதி நெருக்கடி நிலைக்கு மூல காரணம் 1927-29ஆம் ஆண்டுகளில் அமெரிக் காவில் நிலவிய பொருளாதார வீக்கமேயாகும் என்று அதிகாரிகள் முடிவு கட்டினர். பங்கு மார்க்கெட்டில் முறையின்றி நடந்து வந்த வாணிகமும் நீடித்த நுகர்வுப் பொருள்களைத் தயாரித்து வந்த தொழிலகங்களில் வீக்க நிலை நிலவியதும் 1927-29 ஆகிய ஆண்டுகளில் அமெரிக்காவில் நிலவிய பொருளாதார வீக்க நிலையின் இருபெரும் அமிசங்களாகும். தவணைக் கடன் முறையின் வியக்கத் தக்க வளர்ச்சியே நீடித்த நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்து வந்த தொழிலகங்களில் நிலவிய வீக்க நிலைக் கான காரணமாகும். மேலே நாம் குறித்த இரண்டு அமிசங் களையும்—பொருளாதார வீக்க நிலையின் இருபெரு அமிசங்களையும் —இரண்டு கேடுகளாகவே கருதவேண்டும். பொருளாதார வீக்க நிலை நிலவிய காலங்களில் ஒரு கருத்து (தவறான கருத்து) நிலவி யது. நாட்டின் தொழிற்சாலைகட்கும் வர்த்தகத்திற்கும் தேவைப் பட்ட கடன் வசதிகளில் பெரும் பகுதியை வால் தெரு (Wall Street) கவர்ந்து வந்தது என்பதே இந்தக் (தவறான) கருத்தாகும். எனவே நாட்டில் பொருளாதார வீக்கம் நிலவிய போதிலும் அதி காரிகட்கு அது ஒரு தலைவலியையே உண்டாக்கியிருந்தது என்று கூறுவது மிகவும் பொருந்தும். தங்களுடைய இவ் வனுபவத்தை யொட்டியே அதிகாரிகள் புதிய கடன் தன்மைக் கட்டுப்பாடுகள் சிலவற்றைப் பயன்படுவது குறித்து ஆலோசித்தனர். அதிகாரி களின் விருப்பத்திற்கு இணங்க 1934ஆம் ஆண்டு பத்திரங்கள் பரிவர்த்தனைச் சட்டம் (Securities Exchange Act) நிறைவேற்றப் பட்டது. பாங்குகளேயன்றி ஏனைய நிதி நிறுவனங்களும் பங்கு மார்க்கெட்டுக்கு அளித்து வந்த கடன் வசதிகளை ஒருங்கு செய்யும் அதிகாரம், ஐக்கிய ரிசர்வ் முறைக்கு வழங்கப்பட்டது. இரண் டாவது உலகப் போர் நடைபெற்ற காலத்தில் அதிகாரிகள்

தவணைக கடன முறைகளை ஒழுங்குபடுததி வநதனர் இம முறையை மீணடும குறுகிய காலததிறகு 1950 ஆம ஆணடி லிருந்து 19‌52 ஆம ஆண்டு முடிய அதிகாரிகள கடைபபிடித தனா நுகாவோரின மொதத செலவினங்களில நீடிகத நுகர்வுப பொருளகளை அவர்கள விலைக்கு வாஙகுவதறகுப பயனபடுத்து கினற செலவினஙகள நிலையறறவையாக இருபபதால, தவணைக் கடன முறையைக் கட்டுபபடுததவேணடியது இனறியமையாதது எனறு அதிகாரிகள நமபினர் தறகாலிகமாக 1950-லிருந்து 1952 முடிய வேறொரு வகையைச சோந்த கடன தனமைக் கட்டுபபாடடையும அதிகாரிகள பயனபடுததினர் வீடுகள போனற சொததினஙகளைக் கட்டுவதறகு அளிக்கபபடட கடனகள அவ வமயம அதிகாரிகளால ஒழுஙகு செயயபபடடன குறிப பிடட துறைகளுககு மிகுதியான அளவு கடன வசதிகள அளிக்கப படுவதைத தடை செயயவேணடும எனறு அதிகாரிகள எணணிய தால இக கட்டுபபாட்டு முறைகள செயலாறறபபடடன கொரி யாப போா நடைபெறற காலததில தாஙகள ஏறபாடு செயது வந்த கடன வசதிகளைக் குறைததுககொளவதறகு பாங்குகளே முனவந்தன குறிபபிட்ட துறைகட்குத் தாஙகள ஏறபாடு செயது வந்த கடனகளைக குறைபபதறகான விதிமுறைகளைப பாஙகர்களும ஏனைய கடன ஈவோரும ஒருஙகு கூடி வகுததனா 1952-ககுப பின நிலைமையில சிறிது மாறறம ஏறபடடுளளது 1952ஆம ஆண்டு தொடடு கடன அளவுக் கட்டுபபாடுகளே அமெரிக காவில பெருமபாலும கையாளபபட்டு வருகினறன எனினும ஓரளவுக்குக் கடன தனமைக கட்டுபபாடுகளும கையாளபபடடே வருகினறன. உதாரணமாகப பாஙகுகளும ஏனைய நிதி நிறுவனங களும பததிர மார்க்கெடடுகக வழஙகி வருகினற கடனகளைத் தற சமயமும அதிகாரிகள் ஒழுங்கு செய்தே வருகினறனா அமெரிக் காவில மீணடும ஊக வாணிகம பெருமளவு தாணடவமாட நேர்ந் தால அதிகாரிகள மீண்டும கடன் தனமைக கட்டுபபாடுகளைப பெருமளவில கையாளுவா என்பதில ஒரு சிறிதும ஐயமிலலை

பிரிடடன, காமனவெலத நாடுகள, மறறும வேறு நாடுகள ஆகியவை யாவும் இரணடாவது உலக யுதத காலததில கடன தனமைக கட்டுபபாட்டு முறைகளைக் கையாணடன உலக யுததம முடிவுறறதும பணவீகக நிலை தொடர்ந்தது இப பணவீகக நிலை யைக் கட்டுபபடுததும முகததான இந நாடுகள பல முறைகளைக் கையாண்டன கடன தனமைக கட்டுபபாடுகளையும இந நாடுகள விரிவான முறையில கையாணடு வநதன உலகப போர் முடிநத பின இஙகிலாந்தில கடன தனமைக் கட்டுபபாடுகள எவவாறு செயலாறறபபடடன எனபதை இனிக் காணபோம 1946 ஆம

ஆண்டு நிறைவேற்றப்பட்ட சட்டத்தின்படி, கடன் தன்மைக் கட்டுப்பாடுகளையும் செயலாற்றும் அதிகாரம் இங்கிலாந்துத் தலைமை பாங்குக்கு வழங்கப்பெற்றுள்ளது. எனினும் இங்கிலாந்தில் சட்டத்தின் அடிப்படையில் கடன் தன்மைக் கட்டுப்பாடுகள் பயன்படுத்தப்படவில்லை. இங்கிலாந்திலுள்ள வாணிக பாங்குகள் நாட்டு நலனில் எப்பொழுதும் அக்கறை உடையவை. எனவே வாணிக பாங்குகள் அதிகாரிகளின் வேண்டுகோள்கட்கு இணங்கித் தங்களுடைய நடவடிக்கைகளை அதிகாரிகள் விரும்பிய வண்ணமே ஒழுங்கு செய்தன. எனவே நிதி அமைச்சரும், இங்கிலாந்துத் தலைமைப் பாங்கின் கவர்னரும், சட்டத்தின் துணையை நாடவேண்டிய அவசியமே நேரவில்லை. கடன் தன்மைக் கட்டுப்பாடுகளைப்பயன் படுத்தவேண்டியது இன்றியமையாததென்று தான் எண்ணியகாலங்களில் இங்கிலாந்துத் தலைமை பாங்கின் கவர்னருக்கு இது குறித்து நிதி அமைச்சர் வேண்டுகோள்கள் விடுத்து வந்தார். இங்கிலாந்துத் தலைமை பாங்கு அதிகாரிகளின் வேண்டுகோள்களை, வாணிக பாங்குகள் தலைமேல் தாங்கி நிறைவேற்றின. நிதி அமைச்சர் விடுத்த வேண்டுகோள்களின் முறை காலத்திற்குக்காலம் வேறுபட்டு விளங்கியது; ஊக வாணிகத்திற்கு பாங்குகள் கடன்தர முன்வரலாகாது என்றும், வெளிநாடுகட்கு ஏற்றுமதி செய்யப்படுகின்ற பொருள்களை உற்பத்தி செய்து வருகின்ற தொழிலகங்கட்குப் பாங்குகள் முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்றும், நாட்டில் எரிபொருள்களின் உற்பத்தியைப் பெருக்கும் முயற்சியில் பாங்குகளும் ஒத்துழைக்கவேண்டுமென்றும், தொழிற்சாலைகளின் உற்பத்தித் திறனைப் பெருக்குவதற்கு ஏற்ற முறையில் தங்கள் நடவடிக்கைகளைப் பாங்குகள் ஒழுங்கு செய்ய வேண்டுமென்றும், கேட்டுக்கொண்டு நிதி அமைச்சர் அவ்வப்போது வேண்டுகோள்கள் விடுத்தார். 1951 ஆம் ஆண்டுக்குப் பின், குறிப்பாக 1955-ஆம் ஆண்டிலிருந்து 1958ஆம் ஆண்டு முடிய, பாங்குகள் எவ்வெவற்றைச் செய்யக்கூடாது என்பதே பெரிதும் வலியுறுத்தப்பட்டது. தாங்கள் ஏற்பாடு செய்து வரும் தவணைக்கடன்களைப் பாங்குகள் தீர்க்கமாக ஆராயவேண்டுமென்றும், தவணைக் கடன்கட்குத் தாங்கள் அளித்துவரும் மொத்த அட்வான்சுகளைப் பாங்குகள் குறைப்பதற்கு முன்வரவேண்டும் என்றும், நிதி அமைச்சர் கேட்டுக்கொண்டார். சாதாரணமாக வர்த்தகத்தில் ஈடுபட்டிருக்கும் நபர்கட்கேயன்றி வேறு நபர்கட்குப் பாங்குகள் அட்வான்சுகள் தரமுன்வரக் கூடாது என்றும் வேண்டுகோள் விடுக்கப்பட்டது. மூலதன வளர்ச்சிக்குப் பாங்குகள் தற்காலிகக் கடன் அளிப்பதைத் தடைசெய்யும் நோக்கத்துடனேயே இதுபோன்ற வேண்டுகோள் விடுக்கப்பட்டது. தொழிற்சாலைகட்குத் தேவைப்பட்ட நெடுங்கால நிதிகள் யாவற்றையும் மூலதன

வெளியீட்டுக் குழு (capital issues committee) ஒழுங்கு செய்து வந்தது. எனவே மூலதன வளர்ச்சிக்குத் தாங்கள் கடன் தர விரும்பினால், மூலதன வெளியீட்டுக் குழுவுடன் பாங்குகள் கலந்து ஆலோசனைகள் நடத்தியபின்பே, இவ்வாறு செய்ய முனைய வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளப்பட்டது.

1955 ஆம் ஆண்டு ஜூலை மாதம் இத்தகைய கடன் தன்மைக் கட்டுப்பாடுகளை மேலும் விரிவான முறையில், நிதி அமைச்சர் கையாளத் தொடங்கினார். வாய்ப்பான சூழ்நிலையில் தாங்கள் எவ்வளவு கடன் வசதிகளை ஏற்பாடுசெய்ய முடியுமோ, அவற்றை விடக் குறைவான அளவு கடன்களையே அவ் வமயம் நிலவிய நெருக்கடி நிலையில் பாங்குகள் ஏற்பாடுசெய்ய முன்வரவேண்டும் என்று நிதி அமைச்சர் கேட்டுக்கொண்டார். தாங்கள் இதுகாறும் கொடுத்து வந்த அட்வான்சுகளைப் பாங்குகள் இன்னும் ஓரிரு மாதங்களில் கணிசமான அளவு குறைத்துக்கொள்ளும் என்று தாம் நம்புவதாகவும் நிதி அமைச்சர் கூறினார். 'கணிசமான அளவு' எவ்வளவு என்று தம்முடைய வேண்டுகோளில் நிதி அமைச்சர் குறிக்கவில்லை. ஆனால் பாங்குகள் யாவும் ஒருங்கு கூடி ஆலோசித்துத் தாங்கள் இதுகாறும் கொடுத்துவந்த மொத்த அட்வான்சுகளில் 10% குறைவாக அட்வான்சுகள் கொடுக்கவேண்டும் என்று ஓர் உடன்பாட்டிற்கு வந்தன. ஒவ்வொரு பாங்கும் தான் வழங்கி வந்த மொத்த அட்வான்சுகளை 10%ஆகக் குறைத்துக் கொள்ள ஒருப்பட்டது. இதன் விளைவாகப் பாங்குகள் ஏற்பாடு செய்துவந்த தவணைக் கடன்களே பெரிதும் பாதிக்கப்பட்டன. முன்பு தாம் எவ்வளவு பணத்தைத் தவணைக் கடன்கட்கு அட்வான்சுகளாகக் கொடுத்து வந்தனவோ, அவற்றை 10 சதவீதத்திற்கும் மேலாகப் பாங்குகள் குறைத்தன. மேலும் வேறு முக்கியத்துவம் இல்லாத உபயோகங்கட்குத் தாங்கள் கொடுத்து வந்த அட்வான்சுகளையும் பாங்குகள் பெருமளவு குறைத்தன. பாங்குகள் இவ்வாறு செய்ததற்குக் காரணங்கள் உள்ளன. சில முக்கியத்துவம் பெற்ற தொழில்கட்குப் பாங்குகள் பேராதரவு தர வேண்டும் என்று நிதி அமைச்சர் ஏற்கனவே வேண்டுகோள் விடுத்துள்ளார். தங்களுடைய மொத்த அட்வான்சுகள் குறைந்த போதிலும், இம் முக்கியத்துவம் பெற்ற தொழில்கட்குத் தாங்கள் ஏற்பாடுசெய்து வரும் அட்வான்சுகள் குறைந்துவிடக்கூடாது என்று பாங்குகள் எண்ணியமையால், தவணைக் கடன்களையும், முக்கியத்துவம் இல்லாத உபயோகங்கட்குத் தாங்கள் அளித்து வந்த அட்வான்சுகளையும், பாங்குகள் குறைத்துக்கொள்ளும்படி நேர்ந்தது.

கடன் தன்மைக் கட்டுப்பாடுகள் குறித்து வேண்டுகோள்கள் விடுத்ததோடு அதிகாரிகள் அமைந்துவிட்டனர். இக் கட்டுப்பாடுகளைப் பாங்குகள் தாங்களாகவே நிர்வகித்து வந்தன. ஒவ்வொரு பாங்கும் ஒவ்வொரு முறையைக் கையாண்டு இக் கட்டுப்பாடுகளை நிர்வகித்து வந்தது. கட்டுப்பாட்டை எங்ஙனம் செயலாற்ற வேண்டும் என்பது குறித்துப் பாங்குகள் தங்களுடைய கிளை மானேஜர்கட்கு வழங்கிய அறிவுரைகள் பாங்குக்குப் பாங்கு வேறுபட்டன. ஒரே முறையை எல்லா பாங்குகளும் கடைபிடிப்பதற்காகப் பெரு முயற்சிகள் செய்யப்பட்டன. பாங்குகளின் நடவடிக்கைகளையும் அவை அளித்து வந்த அட்வான்சுகளையும்பற்றி விசாரணை செய்வதற்கு எந்த முறையும் கைக்கொள்ளப்படவில்லை. எனவே, பாங்குகட்கிடையே போட்டி தழைத்தது. தம்மை உதவி கோரி அணுகிய கடனாளி எத் தன்மையராக இருந்தபோதிலும் மறுத்துரைக்க பாங்கர்கள் பெரிதும் தயங்கினர். தாம் மறுத்துரைத்தால் அக் கடனாளி வேறு பாங்கிடம் அட்வான்சுகள் பெற முடியும் என்று பாங்குகள் கருதியதால் அவை இது போல நடந்துகொண்டன. இது ஒரு குறையேயாகும். உலகப்போர் முடிவுற்றபின் ஆரம்ப காலத்தில் இக் குறை பெரிதும் விளங்கித் தோன்றியது. எத் தொழிலாயினும் சரி, அதை முக்கியத்துவம் வாய்ந்தது என்று பாங்குகள் கருத அவ் வமயம் நிறைய வாய்ப்புகள் இருந்தன. எனவே, அந்தத் தொழில்கட்கெல்லாம் பாங்குகள் கடன்தரமுன் வந்தன. எனவே, அதிகாரிகள் அவ்வப்போது நடவடிக்கைகள் எடுக்கவேண்டியது அவசியமாகியது. அதாவது கட்டுப்பாடுகளைப் பாங்குகள் சீரிய முறையில் நிர்வகித்து வருகின்றனவா என்று அதிகாரிகள் கண்காணிக்க வேண்டியது அவசியமாகியது. உதாரணமாக 1951-ல் அதிகாரிகள் இது போன்ற நடவடிக்கைகள் எடுத்தனர். 1955 ஆம் ஆண்டு நிதி அமைச்சர் விரிவான முறையில் கடன் தன்மைக் கட்டுப்பாடுகளை செயல்படுத்தத் தொடங்கினார். அவ்வமயம் மேலே குறித்தது போன்ற குறை (கட்டுப்பாடுகளைப் பாங்குகள் நிர்வகித்து வந்ததை யொட்டி நேர்ந்த குறை) தோன்றவே யில்லை. பாங்குகட்குள் ஓர் உடன்பாடு தோன்றியமையே இதற்கான காரணமாகும். ஒரு பாங்கானது கடன்தர மறுத்த ஒரு நபருக்குப் பிறிதொரு பாங்கு கடன் தர முன்வரக்கூடாது என்பதே இவ்வுடன்பாடாகும். தங்கட்குள் நிலவி வந்த போட்டியை இவ்வுடன்பாடு பெரிதும் தடை செய்யும் என்று பாங்குகள் எண்ணின. தங்களுடைய நடவடிக்கைகட்கு இவ்வுடன்பாடு ஒரு மாபெரும் வரையறையாகத் திகழும் என்று கருதி, பாங்கர்கள் இதை வெறுத்த போதிலும், இவ்வுடன்பாட்டை ஏற்றுக்கொள்ளவே செய்தனர். கடுமையான கட்டுப்பாட்டு நடவடிக்கைகளை அதிகாரிகள் எவ்வளவு காலம் கடைப்பிடித்து

வருவாரோ. அதுவரை இது போன்றதோர் உடன்பாட்டைத் தாங்கள் கடைப்பிடித்தல் மிகவும் இன்றியமையாததே என்று, பாங்குகள் கருதின.

பாங்குகட்குள் நிலவிய போட்டி குறைந்திருப்பதே கடன் தன்மைக் கட்டுப்பாடுகளினால் நேர்ந்துள்ள கேடு என்று எண்ணி விடலாகாது. மற்றுமொரு முக்கியமான கேடு விளைவதற்கும் வாய்ப்புகள் உள்ளன. நாட்டிலுள்ள செல்வ வளங்களைத் திறம்படப் பயன்படுத்த விரும்பினால் நிலைநாட்டப்பட்டுள்ள தொழில்கட்கும், நெடுநாட்களாகப் பாங்குக் கடனையே நம்பிவரும் கடனாளிகட்கும், கடன் வசதிகள் தடையின்றிக் கிடைக்கும் வகையில் கடன்தன்மைக் கட்டுப்பாடுகள் அமையவேண்டியது அவசியமாகும். நெருக்கடி நிலை நேர்ந்துள்ளதையொட்டி, தற்காலிகமாக இவர்கள் பெற்று வந்த கடன் வசதிகள் குறைய நேர்ந்தால் கேடு ஏதும் விளையாது. ஆனால், தொடர்ந்து நெடுங்காலத்திற்கு இது போன்றதொரு நிலை நீடிக்குமேயாயின் கேடு சூழும் நாட்டின் வளங்களைச் செம்மையாகப் பயன்படுத்த முடியாது. இங்கிலாந்தில் 1950-லிருந்து 1959-க்கு இடைப்பட்ட காலத்தில் கடன் தன்மைக் கட்டுப்பாடுகள் நெடுங்காலமாகக் கடைப்பிடிக்கப்பட்டன. எனவே, இதையொட்டிப் பெருங்கேடுகளும் சூழ்ந்தன.

கடன் தன்மைக் கட்டுப்பாடுகளைக் கையாளுதலையொட்டிச் சில கேடுகள் விளையலாம் என்பது உண்மையேயாயினும், சில சமயங்களில் இக் கேடுகளையும் ஏற்றுக்கொண்டு கடன் தன்மைக் கட்டுப்பாடுகளைக் கடைப்பிடிக்கவேண்டுவது அவசியமாகும். இங்கிலாந்தில் தற்சமயம் பல வகைப்பட்ட தொழில்களும், மற்றும் தனிப்பட்ட நபர்களும், பாங்குகளிடமிருந்தே தங்கட்கு உகந்த முறையில் அட்வான்சுகளைப் பெறமுடிகின்றது. பரம்பரை பரம்பரையாகக் கையாளப்பட்டு வருகின்ற கடன் அளவுக் கட்டுப்பாடுகளைத் தாங்கள் கையாளும் போது அதிகாரிகள் எதிர்பார்க்கக் கூடிய விளைவுகள் படிப்படியாகத்தான் நேருகின்றன. ஆனால், இவற்றுடன் கடன் தன்மைக் கட்டுப்பாடுகளையும் அதிகாரிகள் கைக்கொண்டால் உடனடியான விளைவுகள் ஏற்படும். இங்கிலாந்தில் பாங்கு அட்வான்சுகளைப் பெரும்பாலோர் நம்பியிருப்பதால் இரு வகையான கட்டுப்பாடுகளையும் ஒருங்கே கடைப்பிடிப்பதே சிறந்தது என்று தோன்றுகிறது. சில சந்தர்ப்பங்களில் குறுங்காலக் கட்டுப்பாடுகளே பொருத்தமானவையாக இருக்கும். அவ்வமயங்களில் அதிகாரிகள் வட்டி வீதங்களை உயர்த்த முனைவதை விட (அதாவது கடன் அளவுக் கட்டுப்பாடுகளைக் கையாள முனைவதை விட) பாங்கு அட்வான்சுகளை நேரடியாகக் கட்டுப்படுத்த முயலு

வதே (அதாவது கடன் தன்மைக்கட்டுப்பாடுகளைக் கையாள முயலுவதே) சாலச் சிறந்ததாகும். ஒரு பொதுவான உண்மையை ஈண்டு நாம் குறிக்க விரும்புகிறேம். வழக்கத்திற்கு மாருக இக்கட்டான நிலை நாட்டில் உருவாகியிருக்கக்கூடிய காலங்களில் உடனடியாக நிலைமையைக் கட்டுபடுத்த வேண்டியது அவசியமாகும். எனவே இதுபோன்ற சந்தர்ப்பங்களில் பாங்கு அட்வான்ட்சுகளைக் கட்டுப்படுத்தக்கூடிய கடன் தன்மைக் கட்டுப்பாடுகளே உகந்தவையாகும் கடன்தன்மைக் கட்டுப்பாடுகளால் கேடுகள் விளையலாம் என்று நாம் கண்டோம். இதன் அடிப்படையில் கடன் தன்மைக் கட்டுப்பாடுகள் யாவற்றையும் முற்றிலும் ஒழித்துக் கட்டவேண்டும் என்று கூறுவது மடமையாகும். கடன் தன்மைக் கட்டுப்பாடுகளை நெடுங்காலத்திற்கு நீடித்துக்கொண்டே போகாது விரைவில் அவற்றைத் தளர்த்திவிடவேண்டும் என்று கூறுவதே பொருத்த முடையதாகும்.

# 10. அமெரிக்காவின் பாங்குமுறையும் பணக்கொள்கையும்-தராதரம் பற்றிய ஓர் ஆய்வு

## 1. வாணிக பாங்கு முறை

அமெரிக்காவிலுள்ள பாங்குகள் யாவும் நியூயார்க் பண மார்க்கெட்டுடன் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ இணைந்து செயலாற்றி வருகின்றன. அமெரிக்க மையப் பாங்கு அமைப்பு பன்னிரண்டு மையப்பாங்குகளால் ஆகிய ஓர் அமைப்பாகும். மையப்பாங்கு அமைப்பின் தலைமை அலுவலகங்கள் யாவும் வாஷிங்டனிலேயே உள்ளன; நியூயார்க் பணமார்க்கெட்டினின் றும் 200 மைல்களுக்கு அப்பால் வாஷிங்டன் நகரம் உள்ளது. இருப்பினும் அமெரிக்காவிலுள்ள பாங்குகள் யாவும் ஒரே மைய பாங்கு அமைப்பிற்குக் கட்டுப்பட்டவையாகும். இவ்விரண்டு காரணங்களின் (பாங்குகள் யாவும் நியூயார்க் பண மார்க்கெட்டுடன் தொடர்பு கொண்டிருப்பது; பாங்குகள் யாவும் ஒரே மையப் பாங்கு அமைப்பின்கீழ்ச் செயலாற்றி வருவது) அடிப்படையில், அமெரிக்க பாங்குகள் யாவும் ஒரு 'பாங்குமுறை' என்ற கட்டுக்கோப்பின் கீழ்ச் செயலாற்றி வருகின்றன என்று நாம் கூறலாம். இங்கிலாந்தில் 'ஐம்பெரும் பாங்குகள்' ('The Big Five') நாட்டின் பாங்கு முறையில் பெரும் பங்கு பெறுகின்றன. இங்கிலாந்தில்குறிப்பிட்ட ஆறு அல்லது ஏழு பாங்குகளின் கிளைகளே ஒவ்வொரு நகரத்திலும் செயலாற்றி வருவதை நாம் காணமுடியும். எனவே ஒரு நகரத்திலுள்ள ஒரு பாங்கின் ஒரு கிளை எப்மாதிரியான பாங்கு வசதிகளைப் புரிந்து வருகின்றதோ, அதே வசதிகளை ஏனைய நகரிலுள்ள ஏனைய கிளைகளும் புரிந்து வருவதைக் காணலாம். அமெரிக்காவில் இதுபோன்ற ஒரு பாங்கு முறை அமைந்திருக்கவில்லை. நாடு முழுவதிலும் கிளைகளை உடைய பாங்குகளை அமெரிக்காவில் காண முடியாது. இருப்பினும் இதைப் பொறுத்தவரையில் கலிபோர்

னியா இராச்சியம் தனித்து விளங்குகிறது என்று கூறலாம். இங்கிலாந்திலுள்ளதைப் போலவே கலிபோர்னியா இராச்சியத்திலும் கிளை பாங்குமுறை தழைத்து ஓங்கியுள்ளது. ஆனல் அமெரிக்காவில் கலிபோர்னியா தவிர ஏனைய இராச்சியங்களில் கிளை பாங்கு முறை வலுப்பெற்றிருக்கிறது என்று சொல்லமுடியாது. அமெரிக்காவில் தற்சமயம் உள்ள பாங்குகளின் மொத்த எண்ணிக்கை 1,4000-த்திற்கும் மேற்பட்டதாகும். இந்த 14000 பாங்குகட்கிடையே பெரும் வேறுபாடுகள் உள்ளன. இவை அளவில் பெரிதும் வேறுபடுகின்றன ; ஆற்றிவரும் பணிகளைப் பொறுத்த வரையிலும் இவற்றிற் கிடையே பெரும் வேறுபாடுகளைக் காணலாம்; மேலும் நோக்கங்களிலும் இவற்றிற்கிடையே பெரும் வேறுபாடுகளைக் காணமுடியும். எனவே அமெரிக்க பாங்குகள் ஆற்றி வரும் பணிகளை அமெரிக்க நாடு முழுவதற்கும் பொருந்தும் வகையில் நாம் பொதுப்படையாகக் கூறமுனைவதில் சில இடர்ப்பாடுகள் உள்ளன. அமெரிக்கப் பாங்குகட்கிடையே பெருத்த வேறுபாடுகள் இருப்பதால் அமெரிக்கப் பாங்கு முறை இங்கிலாந்து மற்ற பெரும்பாலான நாடுகளின் பாங்கு முறைகளினின்றும் மாறுபட்டு விளங்குகின்றது. எனவே இவ் வேற்று நாடுகளில் மையப் பாங்கு சமாளிக்க வேண்டிய சிக்கல்களைவிட அமெரிக்க மையப் பாங்கு சமாளிக்க வேண்டிய சிக்கல்கள் முற்றிலும் மாறுபட்டவையாக விளங்குகின்றன.

அண்மையில் உலகம் முழுவதும் 'தனிப் பாங்கு முறை'யை (unit banking) விடக் 'கிளை பாங்கு முறையே' (branch banking) வலுப்பெற்று வருவதை நாம் காணலாம். அமெரிக்காவைப் பொறுத்தவரையில்கூட இது ஓரளவுக்கு உண்மையாகும். இருப்பினும் அமெரிக்க பாங்குமுறை 'கிளை பாங்கு முறை'யின் அடிப்படையில் அமைந்துள்ள ஒரு முறை என்று நாம் கூறிவிடமுடியாது. இன்னும் 'தனி பாங்குகளே' (unit banks) அமெரிக்காவில் மேலோங்கித் திகழ்கின்றன. மேலும் இத் தனி பாங்குகளிடையே பெருமளவு வேறுபாடுகள் உள்ளன. நாடு முழுவதிலும் கிளைகளை உடைய பாங்கு முறை அமெரிக்காவில் நிலைபெருததற்குச் சில காரணங்கள் உள்ளன. கிளைகள் நிறுவுவதைத் தடை செய்து பல சட்டங்கள் இயற்றப்பட்டுள்ளன, பரம்பரை பரம்பரையாக மக்கள் கிளை பாங்கு முறையை வெறுத்தே வந்துள்ளனர், இவ்வாறு பரம்பரை பரம்பரையாக நிலவி வரும் கருத்துகளே சட்டங்களாக பரிணமித்துள்ளன. புதிதாக அமெரிக்காவின் மேற்குப் பகுதியில் தோன்றிய இராச்சியங்கள், கிளை பாங்கு முறை ஏற்பட்டால், தாங்கள் கிழக்கத்திய இராச்சியங்களின் பணச் செல்வாக்குக்குக் கட்டுப்பட வேண்டியிருக்கும் என்று அஞ்சுகின்றன. கிளைபாங்கு

முறை ஏற்பட்டால், நாட்டின் ஒரு கோடியில் உள்ள நிறுவனம் மறு கோடியில் வசித்துவரும் மக்களைக் கட்டுப்படுத்த நேரலாம் என்றும், ஒரு சில நிதியாளரின் சர்வாதீனத்திற்குத் (manopoly) தாங்கள் அடிமையாக நேரலாம் என்றும் மக்கள் அஞ்சுகின்றனர். இம்மாதிரியான உணர்வுகள் பரம்பரை பரம்பரையாக நிலவி வருகின்றன. கிளை பாங்கு முறையைத் தடை செய்யும்வகையில் அமெரிக்காவில் இயற்றப்பட்டுள்ள சட்டங்கள் யாவும் இவ்வுணர்வு களின் பிரதிபலிப்பே எனலாம். அமெரிக்காவில் மொத்தம் நாற்பத் தொன்பது இராச்சியங்கள் உள்ளன. இராச்சியங்கள் யாவும் தத்தம் எல்லைகட்குள் பாங்குமுறைகளை ஒழுங்கு செய்யும் அதி காரம் பெற்றிருக்கின்றன. எனவே அமெரிக்கப் பாங்குமுறை நாற் பத்தொன்பது இராச்சியங்களின் சட்ட திட்டங்களால் ஒழுங்கு செய்யப்படுகின்றது. கலிபோர்னியா உட்பட்ட பதினறு இராச்சி யங்களில், கிளைகளை நிறுவுவதற்குப் பாங்குகட்கு அனுமதிகள் வழங்கப்பட்டிருக்கின்றன. அடுத்து, பத்தொன்பது இராச்சியங் கள் பாங்குகட்குக் கிளைகள் நிறுவும் அதிகாரத்தை வழங்கியிருப்பி னும், குறுகிய எல்லைகட்குள்தான் இந்த இராச்சியங்களிலுள்ள பாங்குகள் கிளைகளை நிறுவ முடியும். இவை எஞ்சிய இராச்சியங் களில் பொதுவாகக் கிளைகளை நிறுவும் உரிமை பாங்குகட்கு அளிக்கப்படவில்லை. பொதுவாக அமெரிக்காவில் ஓர் இராச்சியத் தில் தலைமை அலுவலகங்களை உடைய பாங்குகள் பிறிதொரு இராச்சியத்தில் கிளைகளை நிறுவமுடியாது.

மேலே குறிப்பிட்டதுபோலப் பல தடைகள் இருந்தபோதிலும், 1930ஆம் ஆண்டு முதல்—மிகச் சீரிய முறையில் 1945ஆம் ஆண்டு முதல்—அமெரிக்காவில் கிளை பாங்கு முறை விரைவாக வளர்ந்து வருகின்றது என்று கூறலாம். இருப்பினும் இங்கிலாந்துப் பாங்கு முறைக்கும் அமெரிக்க பாங்கு முறைக்கும் இடையே இன் னும் பெருமளவு வேறுபாடுகள் உள்ளன. இங்கிலாந்திலுள்ள பெரும்பாங்குகளான இலண்டன் தீர்வு பாங்குகளின் (London Clearing Banks) மொத்த எண்ணிக்கை பதினொன்று ஆகும். இந்தப் பதினொரு பாங்குகள் நிறுவியுள்ள கிளைகளின் மொத்த எண்ணிக்கை சுமார் 9700 ஆகும். அமெரிக்காவில் தற்சமயம் 14,242 பாங்குகள் உள்ளன. இவற்றுள் ஒவ்வொரு எட்டுப் பாங்கு களிலும் ஏழு பாங்குகட்குக் கிளைகளே கிடையா. எஞ்சியுள்ள (கிளை களையுடைய) 1,889 பாங்குகள் நிறுவியுள்ள கிளைகளின் மொத்த எண்ணிக்கை 7,252 ஆகும். இவை பெரும்பாலும் இரண்டு அல் லது மூன்று கிளைகளையே உடையவை. பாங்கின் தலைமை அலுவ லகம் ஏற்படுத்தப்பட்டுள்ள நகரத்திலேயே இக் கிளைகள் பெரும் பாலும் அமைந்துள்ளன. இதற்கு மேற்பட்ட கிளைகளையுடைய

பாங்குகளை நாம் விதி விலக்காகவே கொள்ளவேண்டும். சுமார் 200 பாங்குகள் ஒவ்வொன்றும் 5-க்கு மேல் கிளைகளை நிறுவியுள்ளன. மூன்று பாங்குகள் மட்டிலும் 100-க்கு மேற்பட்ட கிளைகளை நிறுவியுள்ளன. அமெரிக்காவிலுள்ள இராச்சியங்களில் கிளை பாங்கு முறை வெகுவாக முன்னேறியுள்ள இராச்சியம் கலிபோர்னியாவேயாகும். உலகத்திலேயே மிகப் பெரிய பாங்காகிய 'அமெரிக்க பாங்கு' (Bank of America) இந்த இராச்சியத்தில்தான் உள்ளது. இந்தப் பாங்கு 600-க்கும் மேற்பட்ட கிளைகளை உடையது. கலிபோர்னியாவில் இந்தப் பாங்குதவிர வேறு ஐந்து பெரிய பாங்குகளும் உள்ளன. இவை மொத்தத்தில் சுமார் 400 கிளைகளை நிறுவியுள்ளன. நியூயார்க் இராச்சியத்தில் 111 பாங்குகள் சுமார் 800 கிளைகளை நிறுவியுள்ளன. ஆனால், சிக்காகோ இராச்சியத்தில் 74 பாங்குகள் உள்ளன ; இவை யாவும் தனி பாங்குகளே; இவற்றிற்குக் கிளைகளே கிடையா [1] வேறு பல இராச்சியங்களில் வெவ்வேறு முறையில் பாங்குகள் அமைந்துள்ளன. பொதுவாகக் கூறினால் அமெரிக்க பாங்கு முறை 'தனி பாங்கு'களால் ஆகிய ஒரு முறையேயாகும். அதாவது அமெரிக்கப் பாங்குகளில் பெரும்பான்மையானவை ஒரே ஒரு அலுவலகத்துடன் நாட்டின் சிறுசிறு பகுதிகளில் தங்கள் தொழிலை நடத்தி வருகின்றன. அமெரிக்காவில் பெருமளவில் நகரங்கள் உள்ளன. பெரும்பாலான நகரங்களில் இரண்டு அல்லது மூன்று பாங்குகளே ஏற்படுத்தப்பட்டுள்ளன. சில நகரங்களில் ஒரே ஒரு பாங்கு நிறுவப்பட்டுள்ளது. எனவே, அமெரிக்காவிலுள்ள மொத்த பாங்குகளான சுமார் 14,000 பாங்குகட்கிடையேயும் கடும் போட்டி இருக்கின்றது என்று எண்ணிவிடலாகாது. இருப்பினும் இதற்கு ஒரு விலக்குள்ளது. பெரிய நகரங்களில்-சிறப்பாக நியூயார்க்கில் பல பாங்குகள் நிறுவப் பெற்றுள்ளன. உலகில் ஏனைய நாடுகளில் நிலவும் கிளை பாங்கு முறையில் பாங்குகட்கிடையே எந்த அளவுக்குப் போட்டிகள் உள்ளனவோ, அந்த அளவுக்கு இப்பெரிய நகரங்களில் நிறுவப்பட்டுள்ள பாங்குகட்குமிடையே போட்டிகள் நிலவுகின்றன.

இதுகாறும் நாம் அமெரிக்காவிலுள்ள பாங்குகள் யாவும் அளவில் சிறியனவே என்று கூறிவந்தோம். ஆனால் ஓரளவுக்கு இக் கூற்று பொருந்தாது என்று எமக்குத் தோன்றுகிறது. அண்மையில் அமெரிக்காவில் 'கூட்ட பாங்கு முறை'யும் (Group Banking) 'இணைப்பு பாங்கு முறை'யும் (Chain Banking) பெருமளவில் ஏற்

1 தங்கள் வாடிக்கைக்காரர்கட்குப் பாங்குகள் ஆற்றி வரும் சேவைகளைச் சிக்காகோவில் 'செலாவணிப் பரிவர்த்தனைகள்' (Currency Exchanges) என்ற அலுவலகங்கள் செய்து வருகின்றன. எனவே, சிக்காகோவில் பாங்கு அலுவலகங்கள் மிகக் குறைவாக இருந்தபோதிலும் மக்களுக்குத் தேவைப்படும் பாங்கு வசதிகள் யாவும் கிடைத்து வருகின்றன.

பட்டுள்ளன. இம்முறைகளின் அடிப்படையில் பல பாங்குகள் ஒரு தனிப்பட்ட நபர் அல்லது ஒரு தனிப்பட்ட நிறுவனத்தின் உடைமைகளாகத் திகழ்கின்றன; அல்லது அன்னாரால் கட்டுப்படுத்தப் பெற்றிருக்கின்றன. எனவே அமெரிக்க பாங்கு முறை 'பேரளவு, (large-scale) பாங்குகளை உடையதாக வளர்ச்சியுற்றிருக்கின்றது எனலாம்; அமெரிக்காவில் கிளை பாங்கு முறை போன்றதொரு முறை உருவாகி வருகின்றது எனலாம். "பேரளவு' (large-scale) நிறுவனங்களின் வளர்ச்சி குறித்து நம்பிக்கையான புள்ளி விவரங்கள் ஏதும் கிடைக்கவில்லை. இருப்பினும் தற்சமயம் சுமார் 400 பாங்குகள் 46 ஓல்டிங் கம்பெனிகள் (holding companies) கட்டுப்பாட்டின் கீழ் இயங்கி வருகின்றன என்றும் நாம் அறிய வருகிறோம். அண்மையில் அமெரிக்காவில் உருவாகியுள்ள 'கூட்ட பாங்குகள்' பலவற்றிலும் மொத்த டெபாசிட்டுகளைப் பொறுத்த வரையில் 'டிரான்ஸ் அமெரிக்கா' (Trans America) என்ற நிறுவனமே முதலிடம் வகிக்கின்றது. இந்த 'டிரான்ஸ் அமெரிக்கா'க் கம்பெனியின் கட்டுப்பாட்டில் மொத்தம் பத்து பாங்குகள் உள்ளன; இப் பத்து பாங்குகளும் ஆறு இராச்சியங்களில் அமைந்துள்ளன. இது தவிர மின்னியாபோலீஸ் (Minneapolis) இராச்சியத்திலும், நியூயார்க் இராச்சியத்திலும் பெரிய 'கூட்ட பாங்கு முறை' (Group Banking) நிறுவனங்கள் ஏற்படுத்தப் பட்டுள்ளன. அண்மையில் அமெரிக்க பாங்கு முறையில் ஒரு 'தொழில் கலப்பு' இயக்கம் (Amalgamation or Merger Movement) தோன்றியுள்ளது. நியூயார்க், பிட்ஸ்பார்க் (Pittsburgh). பாஸ்டன் (Boston)' டல்லாஸ் (Dallas), கான்சாஸ் நகரம் (Kansas City). பால்டிமோர் (Baltimore), வாஷிங்டன், டீ சி. (D.C ) ஆகிய இராச்சியங்களிலும் உள்ள பெரும் பாங்குகள் இத் 'தொழில் கலப்பு இயக்கத்தால் பெரிதும் மாற்றம் அடைந்துள்ளன. இதன் விளைவாகப் பாங்குகளின் அமைப்பில் பெரும் மாற்றம் நேர்ந்துள்ளது. 1917-18 ஆகிய ஆண்டுகளில் இங்கிலாந்தில் இது போன்ற ஒரு 'தொழில் கலப்பு' இயக்கம் ஏற்பட்டது. இதன் விளைவாக இங்கிலாந்தில் 'ஐம்பெரும் பாங்குகள்' (The 'Big Five') தோன்றின. அவ் வமயம் 'பேரளவு' (large-scale) பாங்கு முறைபற்றி இங்கிலாந்தில் ஒரு விவாதம் ஏற்பட்டது. 'பேரளவு' பாங்கு நிறுவனங்களை நிறுவுவதால் விளையக்கூடிய நன்மை தீமைகள் விவாதிக்கப்பட்டன. தற்சமயம் அமெரிக்காவில் நேர்ந்துள்ள 'தொழில் கலப்பு' இயக்கத்தையொட்டி இதுபோன்ற ஒரு விவாதம் அங்கு ஏற்பட்டுள்ளது. தற்சமயம் அமெரிக்காவில் பெரிய நகரங்களில் பல பாங்குகள் செறிவாக அமைந்துள்ளன, எனவே. கலிபோர்னியா நீங்கலாக எஞ்சியுள்ள அமெரிக்காவில் நிறுவப்பட்டுள்ள பாங்குகள் யாவும் சிறிய பாங்குகளே என்ற கருத்து இனிமேல்

பொருந்தாத ஒன்றாகும். கலிபோர்னியாவைப் போலவே ஏனைய இராச்சியங்களிலுள்ள நகரங்களிலும் பாங்குகள் செறிவாக ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆனால் கலிபோர்னியாவிலுள்ள பாங்குகள் இராச்சியம் முழுவதும் பரவலாகக் கிளைகளை உடையவை. ஏனைய இரச்சியங்களிலுள்ள பாங்குகட்கு இதுபோலப் பரவலாகக் கிளைகள் கிடையா. அதாவது இன்றும் அமெரிக்காவிலுள்ள பெரும்பாலான பாங்குகள் 'பிரதேச பாங்குகளே' (local banks) யாகும். தங்கள் நாட்டின் பாங்கு முறை பிரதேச பாங்குகளாகிய ஒரு முறையாகத் திகழ்வதையே அமெரிக்க மக்கள் பெரிதும் விரும்புகின்றனர். ஆனால் காலம் மாறிக்கொண்டே வருகின்றது என்னும் உண்மையை அவர்கள் இன்னும் உணரவில்லை.

இங்கிலாந்து நாட்டின் பாங்கு முறை ஒரு 'கச்சிதமான' அமைப்புடன்' திகழ்கின்றது என்று கூறுவது மிகவும் பொருந்தும். பாங்குத் தொழில் பற்றிய கருத்துகள் யாவும் இங்கிலாந்தில் ஒரு சில மனிதர்களிடையே தான் உருவாகின்றன. ஒரு சிறிய மேஜையைச் சுற்றிலும் அமர்ந்து எத்தனை மனிதர்கள் விவாதத்தில் ஈடுபட முடியுமோ, அத்தனை மனிதர்கள்தாம் நாம் மேலே கூறிய 'ஒரு சில மனிதர்கள்' ஆவர். பாங்கர்களின் அலுவலகங்களும், அதிகாரிகளின் அலுவலகமும் இலண்டனில் மிக அருகிலேயே அமைந்துள்ளன. எனவே தங்களுடைய விருப்பங்களையும் நோக்கங்களையும் அதிகாரிகளால் உடனடியாகப் பாங்கர்களிடம் அறிவிக்க முடிகின்றது. ஆனால், அமெரிக்காவில் நிலவும் நிலைமை முற்றிலும் மாறுபாடானது ஆகும். 'பாங்கர்கள்' என்ற அடைமொழியைத் தாங்கிக்கொண்டு அமெரிக்காவில் பல்லாயிரக்கணக்கானவர் நாடு முழுவதும் பரவலாக வசித்து வருகின்றனர். நியூயார்க்கிலுள்ள பாங்கர்களைத் தங்களுடைய பிரதிநிதிகள் என்று இவர்கள் கருதுவதில்லை; வாஷிங்டனிலுள்ள மையப்பாங்கு அமைப்பின் அதிகாரிகளைக் கூடத் தங்களுடைய அதிகாரிகள் என்று இவர்கள் முழுவதும் ஒப்புக்கொள்ளுவதில்லை. பாங்குத் தொழில் குறித்து ஒரு கருத்தை உருவாக்குவதென்பது அமெரிக்காவில் சாமானியமான விஷயமே அன்று. எனவே ஐரோப்பாக் கண்டத்திலுள்ள பாங்கர்களின் சங்கங்களைவிட அமெரிக்கப் பாங்கர்களின் சங்கம் பல புதுமைகளோடு திகழ்கிறது.

பொதுமக்களின் டெபாசிட்டுகளைத் தம்மிடம் வைத்திருத்தல், டெபாசிட்டுகளை ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்திற்கு மாற்றுதல் ('இதைப் பேரேடு-குமாஸ்தா பணி'—the 'ledger-clerk function' என்று அமெரிக்காவில் அழைக்கின்றனர்.) 'தனிப்பட்ட மனிதர்கட்கும் நிறுவனங்கட்கும் குறுங்காலக் கடன் வசதிகள்

செய்து கொடுத்தல் ஆகிய மூன்று பணிகளே பொதுவாக அமெரிக்க பாங்குகள் ஆற்றிவரும் முக்கியப் பணிகளாகும். அமெரிக்க பாங்குகளிடம் 'டைம் டெபாசிட்டுகள்' (Time Deposits) பெருமளவில் உள்ளன. எனவே இங்கிலாந்து நாட்டிலுள்ள பாங்குகளிடம் வந்து சேரும் 'சேமிப்பு நிதிகளை'விட அமெரிக்க பாங்குகளிடம் வந்து சேரும் 'சேமிப்பு நிதிகள்' அதிகமானவை ஆகும். நிறுவனங்கட்கு அமெரிக்க பாங்குகள் ஏற்பாடு செய்யும் கடன் வசதிகளில் இடைக்காலக் கடன் (medium-term loans) வசதிகள் பெரும்பங்கு பெருகின்றன. தனிப்பட்ட நபர்கட்கும் நிறுவனங்கட்கும் அமெரிக்கப் பாங்குகள் சில சமயம் அடைமானக் கடன்களையும் (mortgage loans) ஏற்பாடு செய்கின்றன. இடைக்காலக் கடன்களையும், அடைமானக் கடன்களையும் இங்கிலாந்து பாங்குகள் பெரும்பாலும் நேரடியாக ஏற்பாடு செய்வதில்லை. ஆனால் அமெரிக்க பாங்குகள் இவற்றை நேரடியாகவே ஏற்பாடு செய்கின்றன. அண்மையில் நுகர்வோர் கடன்களை (consumer credit) அமெரிக்க பாங்குகள் பெருமளவில் ஏற்பாடு செய்து வருகின்றன. இங்கிலாந்து பாங்குகளைப் போலவே அமெரிக்க பாங்குகளும், குறுங்கால அரசாங்கப் பத்திரங்களையும் நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களையும் போதுமான அளவு வைத்திருக்கின்றன. இலண்டனில் பாங்குகள் உண்டியல் கழிவகங்கட்குக் கொடுப்பது போன்ற நாள் நிலுவைக் கடன்களை அமெரிக்க பாங்கு முறையில் காண முடியாது. எனினும் பலதரப்பட்ட நிதிபற்றிய நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்போருக்கு நகரங்களிலுள்ள பெரிய பாங்குகள் பலதரப்பட்ட கடன் வசதிகளை ஏற்பாடு செய்துவருகின்றன. அமெரிக்காவிலுள்ள சிறிய பாங்குகள் தங்களுடைய டெபாசிட்டுகளில் ஒரு பகுதியை ஏனைய பாங்குகளிடம் இருப்பாக வைத்துள்ளன. நெருக்கடி நிலை நேரும்போது பயன்படுத்தும் நோக்கத்துடனேயே சிறிய பாங்குகள் இவ்வாறு ஏனைய பாங்குகளிடம் டெபாசிட் இருப்புகள் வைத்திருக்கின்றன.

ஒரு பாங்கு பிறிதொரு பாங்கிடம் டெபாசிட் இருப்புகள் வைத்திருக்கும் பழக்கம் நெடுங்காலந்தொட்டு இன்று வரை அமெரிக்காவில் நிலவி வரும் ஒரு பழக்கமாகும். அன்று போலவே இன்று இப் பழக்கம் மிகவும் இன்றியமையாத ஒன்ருகக் கருதப்படுகின்றது. இவ்வாறு பாங்குகட்கு இடையே நிலவும் உறவு, 'தொடர்பு பாங்கு முறை' (correspondent banking) என்ற பெயர் பெற்றுத் திகழ்கின்றது. ஐக்கிய ரிசர்வ் முறை நிறுவப்பெறும் முன்பே நாட்டுப்புறப் பாங்குகள் தங்களுடைய டெபாசிட்டுகளில் ஒரு பகுதியை நகரப் பாங்குகளிடம் இருப்பாக வைத்திருக்கின்றன. இந்த இருப்பு உண்மையிலேயே நாட்டுப்புற பாங்குகளின் காப்பு

இருப்புகளாக விளங்கின. மேலும் தாங்கள் பிற பாங்குகட்குக் கொடுக்க வேண்டிய கடன்களைத் தீர்ப்பதற்கும் இந்த இருப்புகள் நாட்டுப்புற பாங்குகட்குப் பயன்பட்டன. பாங்கர் ஒருவருக்கும் அவருடைய வாடிக்கைக்காரருக்கும் இடையே எம்மாதிரியான உறவு நிலவுமோ, அம்மாதிரியான உறவு நகரப் பாங்குக்கும் நாட்டுப்புறப் பாங்குக்கும் இடையே நிலவின. தம் வாடிக்கைக்காரருக்குப் பாங்கர் என்னென்ன உதவிகளைச் செய்கின்றாரோ, அவற்றையெல்லாம் நாட்டுப்புற பாங்குக்கு நகர பாங்கு செய்து வந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் நாட்டுப்புற பாங்குகட்கும், அவற்றின் இலண்டன் ஏஜெண்டுக்கும் இடையே இருந்த உறவை இது நினைவூட்டுகின்றது. ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் 1914 ஆம் ஆண்டு நிறுவப்பட்டன. நாட்டுப்புற பாங்குகள் முன்பு நகரப் பாங்குகளிடமிருந்து என்னென்ன வசதிகளைப் பெற முடிந்ததோ, அவற்றையெல்லாம் இப்பொழுது அவை ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடமிருந்து பெறமுடியும். எனவே 'தொடர்பு பாங்கு முறை' தேவையற்ற ஒன்றாகிவிடும் என்று சிலர் கருதலாயினர். ஆனால், தொடர்பு பாங்கு முறை, இன்றும் மிக இன்றியமையாததாகவே இருந்துவருகின்றது. 'தொடர்பு பாங்கு முறை'யின் துணைகொண்டு பாங்குகட்கிடையே நடைபெறும் பேரங்கள் இன்றும் பெருமளவிலேயே உள்ளன. இன்றும் நாட்டுப்புற பாங்குகள் (முக்கியமான நிதி கேந்திரங்களாகத் திகழும்) நகரங்களிலுள்ள பாங்குகளிடம் டெபாசிட்டுகளை இருப்பாக வைத்துள்ளன. இந் நகர பாங்குகள் நியூயார்க்கிலுள்ள பாங்குகளிடம் டெபாசிட்டுகளை இருப்பாக வைத்துள்ளன. இவ்வாறு பாங்குகள் ஒன்றிடம் மற்றொன்று வைத்திருக்கும் டெபாசிட்டுகள் தற்சமயம் பாங்குகளின் மொத்த டெபாசிட்டுகளில் 8 சதவீதத்திற்குச் சமமாகும். இவ்வாறு பாங்குகள் இருப்பாக வைத்திருக்கும் டெபாசிட்டுக்களில் (8 சதவீதத்தில்) மூன்றில் ஒரு பங்கு நியூயார்க்கிலுள்ள பாங்குகளில் இருப்பாக வைக்கப்பட்டுள்ளன. இவ் விருப்புகளால் பாங்குகட்கு இரண்டு நன்மைகள் உண்டாகின்றன. பணத்தை ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்திற்கு அனுப்பும்போது, இந்த இருப்புகள் பயன்படுகின்றன. மேலும் தங்கட்கிடையே ஏற்படும் கடன்களைத் தீர்த்துக்கொள்வதற்கும் பாங்குகள் இந்த இருப்புகளைப் பயன்படுத்துகின்றன. தற்சமயம் ஐக்கிய ரிசர்வ் முறை இவ் விரண்டு விதமான பணிகளையும் செய்வதில் பெரும் பங்கு பெறுகிறது. எனினும் 'தொடர்பு பாங்கு முறை'யும் இப் பணிகளைச் செய்வதில் இன்னும் குறிப்பிடத்தக்க பங்கு பெறுகிறது.

பாங்குகளின் எண்ணிக்கை அமெரிக்காவில் மிக அதிகமாக இருப்பதாலும், அவை நாடு முழுவதும் பரந்துகிடப்பதாலும்,

ஓரிடத்தினின்றும் பிறிதோரிடத்திற்குப் பணத்தை அனுப்பவும், பாங்குகட்கிடையே ஏற்படும் கடன்களைத் தீர்க்கவும், அமெரிக்காவில் மிக விரிவான அளவில் ஏற்பாடுகள் செய்யவேண்டிய அவசியம் நேர்ந்துள்ளது. இவ் வேறுபாடுகள் கட்டுக்கடங்காதவைகளாக இங்கிலாந்து நாட்டு மக்களுக்குத் தோன்றலாம். இயந்திர சாதனங்களின் உதவியாலும், ஏனைய முறைகளின் உதவியாலும் இவ் வேறுபாடுகள் திறமையாகச் செவ்வனே செயலாற்றப்படுகின்றன. எனினும் இவ் வேலைகள் மிகவும் கடினமான வேலைகளாக இருப்பதால், பாங்குகள் வாடிக்கைக்காரர்களிடம் விதிக்கும் கட்டணங்கள் அதிகமாகவே உள்ளன. இது நாட்டில் பாங்கு முறைப் பழக்கம் (banking habit) பரவுவதற்குத் தடையாக அமைந்துள்ளது. பாங்கு முறைப் பழக்கம் இங்கிலாந்தில் எந்த அளவுக்குப் பரவியுள்ளதோ. அந்த அளவுக்குத்தான் அமெரிக்காவின் பெரும் பகுதியில் பரவியுள்ளது. எனினும் அமெரிக்காவில், பல இடங்களில் பாங்குகள், ஆர்வத்துடனும் துணிவுடனும் பாங்கு முறைப் பழக்கத்தைப் பரப்பும் முயற்சியில் ஈடுபட்டுள்ளன. இதன் விளைவாகப் பாங்குகளின் புதிய வாடிக்கைக்காரர்களின் எண்ணிக்கை பெருகியுள்ளது பாங்குகளிடமுள்ள நடப்புக் கணக்குகள் (current accounts) வியக்கத்தக்க அளவு அதிகமாகியுள்ளன.

டைம் டெபாசிட்டுகளுக்கான வட்டி வீதம் இங்கிலாந்தில் ஏழு நாட்களுக்கு நிர்ணயிக்கப்படுகின்றன. ஏழு நாட்களைவிட அதிகமான காலங்கட்கும் ஏழு நாட்களுக்கான வட்டி வீதமே அளிக்கப்படுகின்றது. ஆனால் அமெரிக்காவில் கைக்கொள்ளப்படும் முறை முற்றிலும் வேறுபட்டதாகும். பல கால அளவுகளை வகுத்து அவற்றிற்கு வெவ்வேறு வட்டி வீதங்களை நிர்ணயம் செய்கின்றனர். குறுகிய காலங்கட்கு வைக்கப்படும் டைம் டெபாசிட்டுகளுக்குக் குறைந்த வீதமும், நெடுங்காலங்கட்கு வைக்கப்படும் டைம் டெபாசிட்டுகட்கு அதிகமான வட்டி வீதம் வழங்கப்படுகின்றன. இவ்வாறு அமெரிக்காவில் டைம் டெபாசிட்டுகளுக்கு அளிக்கப்படுகின்ற வட்டி வீதம் டெபாசிட்டுகள் வைக்கப்படும் கால அளவுகளைப் பொறுத்து மாறுபடுகிறது. அமெரிக்க பாங்குகளின் மொத்த டெபாசிட்டுகளில் சுமார் ஐந்தில் இரண்டு பங்கையே டைம் டெபாசிட்டுகளேயாகும். இப் புள்ளி விவரத்தின் அடிப்படையில் எல்லாப் பாங்குகளும் தங்கள் டெபாசிட்டுகளில் ஐந்தில் இரண்டு பங்கையே டைம் டெபாசிட்டுகளாக வைத்துள்ளன என்று முடிவு கட்டிவிடக் கூடாது. சில பாங்குகளின் மொத்த டெபாசிட்டுகளில் பாதிக்குமேல் டைம் டெபாசிட்டுகளாகவே உள்ளன. வேறு சில பாங்குகளிடம் இதைவிட அதிக அளவு டைம் டெபா

சிட்டுகள் உள்ளன. (இவ்வாறான பாங்குகள் சேமிப்பு பாங்குகளைப் பெருமளவு ஒத்திருக்கின்றன என்று நாம் கருதலாம்.) குறைந்த அளவு பணத்தைச் சேமிக்கும் மக்களுக்குப் பாங்குகள் அளிக்கும் வசதிகள் பெருமளவு வேறுபடுகின்றன. தங்களுடைய தொழிலைப் பெருக்கும் முகத்தான், குறைந்த அளவு பணம் சேமிக்கும் மக்களிடம் தாம் நடத்தும் பேரங்களைப் பெரும்பாலான பாங்குகள் அதிகரிக்க விரும்புகின்றன.

1930-40 க்கு இடைப்பட்ட காலத்தின் முதற்பகுதியில் அமெரிக்காவில் பல பாங்குகள் நொடித்தன. இதற்குப் பின் பொதுமக்களின் டெபாசிட்டுகளுக்குப் பாதுகாப்புக் கொடுக்கும் நோக்கத்தோடு அரசாங்கம் டெபாசிட் இன்சூரன்சுத் திட்டம் ஒன்றை வகுத்துள்ளது. இந்த இன்சூரன்சுத் திட்டத்தால் பாங்கு டெபாசிட்டுகளில் (டெபாசிட்டுகள் டைம் டெபாசிட்டுகளானாலும் சரி, நடப்பு டெபாசிட்டுகளானாலும் சரி—அவை இன்சூரன்சுத் திட்டத்தின்கீழ் வருவனவேயாகும்.) பெரும்பகுதி பாதுகாக்கப் பட்டு வருகின்றது. டெபாசிட் இன்சூரன்சைச் செயல்படுத்தும் பொறுப்பு ஐக்கிய டெபாசிட் இன்சூரன்சு கார்ப்பொரேஷனைச் (Federal Deposit Insurance Corporation) சார்ந்ததாகும். இக் கார்ப்பொரேஷன் அரசாங்கத்தின் ஓர் அங்கமாகத் திகழ்கிறது. இன்சூரன்சு செய்யப்பட்ட டெபாசிட்டுகளின்மீது ஒரு தீர்வை விதிக்கப்படுகிறது. இத் தீர்வையினின்றும் கிடைக்கும் பணத்தைக் கொண்டு 'ஐக்கிய டெபாசிட் இன்சுரன்சுக் கார்ப்பொரேஷன்' செயலாற்றி வருகின்றது. பாங்குகளில் கணக்கு வைத்திருக்கும் வாடிக்கைக்காரர்கள் ஒவ்வொருவரின் டெபாசிட் தொகையிலும் 10,000 டாலர்கள் வரை பாதுகாப்பு அளிக்கப்படுகின்றது. தனிப்பட்ட மனிதர்கள் பாங்குகளில் வைத்திருக்கும் டெபாசிட்டுகள் முழுவதற்கும் பாதுகாப்பு அளிக்க இந்த 10,000 டாலர் வரையறை போதுமானது என்றே தோன்றுகின்றது. ஆனால் பெரும் வர்த்தகக் கம்பெனிகளைப் பொறுத்த வரையில் இது மிகவும் குறைந்த தொகையேயாகும். டெபாசிட்டு இன்சூரன்சுத் திட்டத்தின் கீழ் வரும் பாங்குகள் யாவும் ஐக்கிய டெபாசிட் இன்சூரன்சுக் கார்ப்பெரேஷனின் பரிசோதனைகட்குக் கட்டுப்பட்டவையாகும். இதன் விளைவாக, அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின் கீழ் வேறு எந்த வழியிலும் வராமல் தப்பி விடக் கூடிய பெரும்பாலான பாங்குகளும் அரசாங்கத்தின் கண்காணிப்பின் கீழ் வந்துள்ளன. (ஐக்கிய டெபாசிட்டு இன்சூரன்சு கார்ப்பொரேஷனுக்கு மட்டுமன்றி வேறுபல அதிகார பூர்வமான நிறுவனங்கட்கும் அமெரிக்கப் பாங்குகளைப் பரிசோதிக்கும் அதிகாரம் வழங்கப்பட்டுள்ளது. இருப்பினும் இந்த வகையில் ஏனைய

நிறுவனங்களைவிட ஐக்கிய டெபாசிட் இன்சூரன்சு கார்ப்பொரேஷன் அதிகமான அதிகாரங்களைப் பெற்றுள்ளது.)

வியாபாரிகட்குக் கடன் கொடுக்கும்போது அமெரிக்கப்பாங்குகள் கடைப்பிடிக்கும் கொள்கைகள் யாவை என்பது குறித்தும், தங்களிடம் உபரிநிதிகள் தேங்கி இருக்கும்போது அவற்றை அமெரிக்க பாங்குகள் எவ்விதம் பயன்படுத்துகின்றன என்பது குறித்தும் இனி விளக்கங்கள் காண்போம். பொதுவாக இங்கிலாந்து பாங்குகளைப் போலவே அமெரிக்க பாங்குகளும் குறுங்காலக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதையே பெரிதும் விரும்புகின்றன. தன்னிடம் இருப்பாகப் பொருள்களைத் தேக்கி வைக்க விரும்பும் வியாபாரிகட்குக் கடன் கொடுப்பதையே பாங்குகள் பெரிதும் விரும்புகின்றன. இவ் வியாபாரிகள் தேக்கிவைக்கும் பொருள்களுக்கு எக் காலத்திலும் தேவை இருக்கவேண்டும். அத் தேவை கால வண்ண வேறுபாட்டாலோ, பருவகால மாறுபாட்டாலோ மாறுமலிருக்கவேண்டும். இந் நிபந்தனைகட்கு வியாபாரியின் வர்த்தகப் பொருள்கள் உட்பட்டிருந்தால் வியாபாரியின் தற்காலிகத் தேவைகளைப் பாங்குகள் தடையின்றி நிறைவேற்றும். ஆனால் நாம் ஈண்டு ஓர் உண்மையைக் குறிக்க விரும்புகிறோம். குறுங்காலக் கடன்களை ஏற்பாடு செய்வதே தமது இலட்சியம் என்று இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் உள்ள பாங்குகள் முழங்கினாலும், அவற்றால் இக் குறிக்கோளை எப்பொழுதும் போற்றிக் காக்க முடிவதில்லை. தாங்கள் ஏற்பாடு செய்யும் கடன் வசதிகளில் ஒரு சிலவற்றைப் பொறுத்தவரையில் மட்டுமே பாங்குகளின் இந்த இலட்சியம் நிறைவேறுகின்றது. எனவே பாங்குகள் நிலை முதற் பொருள்களை (fixed capital) வாங்க விரும்பும் தொழிலதிபருக்குத் தற்காலிகக் கடன்களை ஏற்பாடு செய்யவும் முன் வருகின்றன. ஈண்டு 'தற்காலிகக் கடன்கள்' என்ற சொற்றொடரை யாம் வலியுறுத்த விரும்புகிறோம். சில சமயங்களில் நிலை முதற் பொருள்களை வாங்குவதற்குப் பயன்படும் மூலதனத்தைத் தொழிலதிபர்களால் தற்காலிகமாகக் கடனாகப் பெறமுடியாமல் இருக்கலாம். அவ் வமயம் அவர்கள் பாங்குகளை அணுகுகின்றனர். தொழிலதிபர் தமக்குத் தேவைப்படும் மூலதனத்தை வேறு ஒரு நிறுவனத்தினிடமிருந்து விரைவில் நெடுங்காலக் கடனாகப் பெறமுடியும் என்று பாங்கு அறிந்தால், அவருக்குத் தற்காலிகக் கடன்களை ஏற்பாடு செய்யும். இங்கிலாந்துப் பாங்கு முறைக்கும் அமெரிக்க பாங்கு முறைக்கும் இடையேயுள்ள ஒற்றுமைகள் சிலவற்றை இதுகாறும் கண்டோம். இனி இவ் விரண்டு முறைகட்குமிடையேயுள்ள வேறுபாடுகள் யாவை என்று ஆராய்வோம். வியாபாரிக்குக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்யும் முன் பாங்குகள் முறைப்படிச் செய்யவேண்

டிய முன் ஏற்பாடுகளையொட்டி இரண்டு முறைகட்கிடையேயும் ஒரு வேறுபாடு உள்ளது. இங்கிலாந்தைப் பொறுத்தவரையில் வாடிக்கைக்காரர்களின் (கடனாளிகளின்.) வாய்ச்சொல் ஒன்றே போதுமானது என்று பாங்குகள் எண்ணுகின்றன. சில சமயங்களில் கடனாளியும் பாங்கும் தமக்கிடையே நேருகின்ற கடன்பேரம் குறித்துச் சாதாரணக் கடிதங்களைப் பரிமாறிக் கொள்கின்றனர். ஆனால் அமெரிக்காவில் முறைப்படி ஒரு தஸ்தாவேஜு தயாரிக்க வேண்டியது அவசியமாகிறது. இதற்காக வழக்கறிஞரின் உதவி இன்றியமையாததாகிறது எனவே அமெரிக்கப் பாங்கு முறையில் வழக்கறிஞரின் பங்கும் பெரும் பங்காகவே திகழ்கிறது. இரண்டு பாங்கு முறைகட்கும் இடையே மற்றொரு வேறுபாடும் உள்ளது. அமெரிக்காவில் தங்களுடைய வாடிக்கைக்காரர்கட்குக் (முழுத் தொகையையும் உடனே கொடுத்துவிடும்) கடன்களையே பாங்குகள் பெரிதும் ஏற்பாடு செய்கின்றன. ஆனால் இங்கிலாந்தில் அதிகப்பற்று முறையில் கடன் வழங்குவதே சர்வ சாதாரணமாகும். (இங்கிலாந்தில் எல்லாக் கடன் வசதிகளும் அதிகப்பற்றுக் கடன் வகையையே சாரும் என்று எண்ணிவிடலாகாது .

பரம்பரை பரம்பரையாகப் பாங்குகள் அளித்து வரும் கடன் வசதிகளுக்கான தேவை இருபதாம் நூற்றாண்டில் பெரிதும் சுருங்கி விட்டது. இங்கிலாந்து பாங்கு முறையும், அமெரிக்க பாங்குமுறையும் இதைப் பொறுத்தவரையில் ஒரே மாதிரியாகப் பாதிக்கப்பட்டுள்ளன என்று கூறலாம். கடன் வசதிகட்கான தேவை சுருங்கியதற்கான காரணங்கள் இரண்டாகும். தொழிலகங்கள் வெளியிடும் பத்திரங்களை மக்களும் நிறுவனங்களும் விரும்பி விலைக்கு வாங்குவது முதற்காரணமாகும்; சில்லரை வியாபாரத்தில் ரொக்கங் கொடுத்துச் சரக்குகளை விலைக்கு வாங்கும் முறை மக்களிடையே பெருமளவு பரவியிருப்பது இரண்டாவது காரணமாகும். 1939-க்கு முன் ஒருகாலத்திலும், இரண்டாம் உலகப் போருக்குப் பின் ஒரு காலத்திலும் தங்களிடம் மிகுதியான ரொக்கம் பெருமளவிலிருந்தும் அவற்றை லாபகரமாகப் பாங்குகளால் பயன்படுத்த முடியாத நிலைகள் உருவாயின. 1939-க்கு முன் தங்களுடைய தேவைக்கு அதிகமாகவே ரொக்க இருப்புகள் பாங்குகளிடம் இருந்தபோதிலும், வர்த்தக நடவடிக்கைகளில் ஒரு தேக்கநிலை ஏற்பட்டதன் காரணமாகத் தங்களுடைய உபரிப் பணத்தைப் பாங்குகளால் இலாபகரமாகப் பயன்படுத்த முடியவில்லை. உலக யுத்தத்திற்குப் பின் அரசாங்கம் பெருமளவில் பண வீக்கக் கொள்கையைக் கடைப்பிடித்த சமயமும் பாங்குகளிடம் பெருமளவில் ரொக்கம் தேங்கியது; ஆனால் இவற்றைத் தாங்கள் விரும்பிய வண்ணம் பாங்குகளால் பயன்படுத்த முடியவில்லை. இவ்வாறான சூழ்நிலைகளில்

கடன் கொடுக்கும்போது தாங்கள் சாதாரணமாகக் கையாண்டு வந்த கட்டுப்பாடான கொள்கை சரியான தன்று என்று பாங்குகள் முடிவுக்கு வந்தன. எனவே தங்களது கொள்கையைப் பாங்குகள் தளர்த்தின. இதன் விளைவாகக் காலக் கடன் வசதிகளையும் (term loans), நுகர்வோர் கடன் (consumer credit) வசதிகளையும் ஏற்பாடுகள் செய்யப் பாங்குகள் முன்வந்தன.

காலக் கடன்களை ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பாங்குகள் கொடுக்கின்றன. கடனின் கெடுவுகாலம் மூன்று, அன்றிப் பத்து ஆண்டுகளாகக்கூட இருக்கலாம்.[1] எனினும் இக் கடன்கள் பல தவணைகளில் திருப்பித் தரப்படுகின்றன. சிறிய நிறுவனங்கள் மட்டுமன்றிப் பெரிய நிறுவனங்களும் காலக் கடன் வசதிகளைப் பயன்படுத்துகின்றன. பங்குமார்க்கெட்டில் டிபன்ஜர்களையோ, பாங்குகளையோ வெளியிடமுடியாத அளவுக்குச் சிறியதாக இருக்கும் நிறுவனங்களே காலக் கடன்களைப் பாங்குகளிடமிருந்து அதிகமாகப் பெறுகின்றன. பங்குதாரர்கட்கு இலாபத் தொகையைப் பகிர்ந்தளிக்காது (undistributed profit) முதலீடு செய்ய விரும்பும் கம்பெனிகளும் (குறிப்பாகப் பொதுவசதிக் கம்பெனிகள்) காலக் கடன்களை மிக அதிகமாகப் பெறுகின்றன. இலாபத் தொகையைத் தாம் அடைந்ததும் அவற்றைப் பயன்படுத்தித் தாம் வாங்கிய காலக் கடன்களை இக் கம்பெனிகள் திருப்பிச் செலுத்துகின்றன. சிறிய தொகைக்கான கடன்களைப் பாங்குகள் தனிப்பட்டமுறையில் தாங்களாகவே ஏற்பாடு செய்கின்றன. ஆனால் பெரிய தொகைக்கான கடன்களைத் தனியாக ஒரு பாங்கே ஏற்பாடு செய்வதில்லை; பல பாங்குகள் ஒன்று சேர்ந்தே பெரிய தொகைக்கான கடன்களை ஏற்பாடு செய்கின்றன. ஒவ்வொரு பாங்கும் தனித்தனியே கடனாளிக்குக் கொடுக்கவேண்டிய கடன் தொகை, பணத்தைத் திருப்பிச் செலுத்தும்போது கடனாளி கையாள வேண்டியமுறை ஆகியவற்றைக் குறித்துத் தமக்குள் ஏற்பாடுகளைச் செய்துகொள்கின்றன. பிற பாங்குகளுடன் சேர்ந்து காலக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதையே அமெரிக்கப்பாங்குகள் பெரிதும் விரும்புகின்றன. எனவே வியாபாரிகட்குத் தாம் ஏற்பாடு செய்யும் சாதாரணக் குறுங்காலக் கடன்களுக்கு விதிக்-

[1] பண மலிவுக் கொள்கையை அமெரிக்க அதிகாரிகள் கடைப்பிடித்து வந்த சமயம் இந்தக் காலக் கடன்கட்கான (term loans) கெடுவுகாலம் அதிகமாக்கப்பட்டன. ஆனால் 1950-59க்கு இடைப்பட்ட காலத்தின் மத்தியப் பகுதியில் பண நெருக்கடி நேர்ந்தமையால் பாங்குகள் இத்தகைய கடன்கட்கான கெடுவு காலத்தைக் குறைத்தன. இன்ஷூரன்ஸ் கம்பெனிகளுடன் சேர்ந்து பாங்குகள் சில சமயங்களில் இக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்கின்றன. தனக்குச் சேர வேண்டிய கடன் பணத்தை முதல் ஐந்து தவணைகளில் மூலம், ஐந்து ஆண்டுகளில் பாங்கு திரும்பப் பெற்றுவிடுகின்றது. எஞ்சியுள்ள தவணைகளின்மூலம் தனக்கு வந்து சேரவேண்டிய பணத்தை இன்ஷூரன்ஸ் கம்பெனி பெறுகின்றது.

கும் வட்டியைவிட $\frac{1}{4}$ அல்லது $\frac{1}{2}$ சதவீதமே அதிக வட்டியைப் பாங்குகள் இக் கடன்களுக்கு விதிக்கின்றன. பாங்குகள் பொதுவாக ஏற்பாடு செய்யும் மொத்தக் கடன் தொகையில், காலக் கடன்களும் ஓராண்டுக்கு மேற்பட்ட கெடுவு காலங்களை உடைய கடன்களும், தற்சமயம் மூன்றில் ஒரு பங்காகத் திகழ்கின்றன. இங்கிலாந்திலுள்ள பாங்குகளும் சில சமயம் இது போன்ற காலக் கடன்களை வழங்குகின்றன. இருப்பினும் அமெரிக்கப் பாங்குகள் ஏற்பாடு செய்யும் அளவுக்கு இங்கிலாந்துப் பாங்குகள் காலக் கடன்களை ஏற்பாடு செய்யவில்லை.

பாங்குகளின் நடவடிக்கைகளில் இத் தலைமுறையில் மற்றும் ஒரு புதுமை நேர்ந்துள்ளது. நுகர்வோருக்குப் பாங்குகள் தவணைக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்து வருவதே இப் புதுமையாகும். நுகர்வோருக்குத் தவணைக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதற்கென்றே தனித்திறமை வாய்ந்த நிதிக் கம்பெனிகளும் நிறுவனங்களும் உள்ளன இவை பாங்குகளிடமிருந்து கடன் பெற்று, நுகர்வோருக்குத் தவணைக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்கின்றன. பாங்குகள் ஏற்பாடு செய்யும் மொத்தத் தவணைக் கடன் வசதிகளில் அரைப் பங்குக்கு மேல் மேற்குறித்த நிதிக் கம்பெனிகட்கும் நிறுவனங்கட்கும் போய்ச் சேருகின்றன. இது தவிர, பாங்குகள் நுகர்வோருக்கு நேரடியாகவே தவணைக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்கின்றன. பாங்குகள் ஏற்பாடு செய்யும் மொத்தத் தவணைக் கடன் வசதிகளில் இது மூன்றில் ஒரு பங்காகும்; பாங்குகள் ஏற்பாடு செய்யும் மொத்தக் கடன் வசதிகளில், இது எட்டில் ஒரு பங்காகும். நுகர்வோருக்குத் தவணைக் கடன்கள் கொடுப்பதற்கென்றே சில பாங்குகள் தனித் துறைகளை ஏற்படுத்தியுள்ளன. கார்கள் குளிர்பதனப் பெட்டிகள் (refrigerators) ஆகிய பொருள்களை வாங்குவதற்குக் கடன்பெற விரும்பும் நுகர்வோர், இத் துறைகளை அணுகித் தமக்கு வேண்டிய கடன்களைப் பெறுகின்றனர். இம் மாதிரியான கடன் வசதிகளைத் தாம் ஏற்பாடு செய்வது குறித்துப் பாங்குகள் சிறந்த முறையில் விளம்பரம் செய்கின்றன. தவணைக் கடன் வசதிகளைப் பெற விரும்பும் வாடிக்கைக்காரர்களின் நாணயத்தைப் பாங்குகள் மிக்க கவனத்துடன் ஆராய்ச்சி செய்கின்றன. இந்த வகையில் பாங்குகட்கு அதிகமான செலவுகள் ஏற்படுகின்றன. எனவே தவணைக் கடன்களுக்குப் பாங்குகள் விதிக்கும் வட்டி வீதங்கள் மிக அதிகமாகவே இருக்கின்றன. பாங்குகள் இம்மாதிரியான முன்னேற்பாடுகள் செய்வதால் திரும்பப் பெற முடியாத கடன்களின் அளவு மிகமிகக் குறைவாகவே உள்ளது. பாங்குத் தொழில் நிபுணர்கள் இம் மாதிரியான தவணைக் கடன்களை மனப்பூர்வமாக ஆதரிப்பதில்லை, இருப்பினும் பல பாங்கர்கள் இவற்றைப் பெரிதும்

விரும்புகின்றனர். தாங்கள் ஆற்றி வரும் சாதாரணத் தொழிலைப் பரப்புவதற்கு இவ்வாறு தாங்கள் கொடுக்கும் தவணைக் கடன்கள் ஒரு சாதனம் என்று இப் பாங்கர்கள் கருதுகின்றனர். தவணைக் கடன்கள் கொடுக்கும்போது பாங்குகள் கடைப்பிடிக்கவேண்டிய விதிகள் குறித்து ஐக்கிய ரிசர்வ் முறை நேரடியாகவே ஒழுங்கு செய்துவந்துள்ளது.[1]

வீடுகள், நிலபுலன்கள் ஆகிய சொத்துகட்கு ஈடாகவும் நேரடியாகவே அமெரிக்கப் பாங்குகள் கடன் வசதிகளை ஏற்பாடு செய்கின்றன. இச் சொத்துகட்கு ஈடாகக் கடன் கொடுக்கும் தொழிலில் தனித் திறமை வாய்ந்த நிறுவனங்கள் சில உள்ளன. அவற்றிற்குப் பாங்குகள் கடன் கொடுக்கின்றன. இவற்றைப் பயன் படுத்தி இந் நிறுவனங்கள் சொத்துகளின் உடைமையாளர்கட்கு அச் சொத்துகளின் ஈட்டின் பேரில் கடன் கொடுக்கின்றன. இது தவிர பாங்குகளே நேரடியாகவும் இம் மாதிரிக் கடன் வசதிகளைச் செய்கின்றன. இங்கிலாந்திலுள்ள பாங்குகள், வீடுகள், நில புலன்கள், ஆகிய சொத்துகளுக்கு ஈடாக நேரடியாகவோ, மறைமுக மாகவோ கடன்கள் கொடுப்பதே இல்லை. 1920-29 முடிய ஏற்பட்ட பொருளாதார வீக்கம் (boom) நீடித்திராமல், மந்தநிலை உருவாகியதற்கு இம் மாதிரி சொத்துகளின் பேரில் பாங்குகள் தடையின்றிக் கடன்கள் கொடுத்ததும் ஒரு முக்கிய காரணமாகும். இதையொட்டி அமெரிக்க அதிகாரிகள் 'கடன் தன்மைக் கட்டுப் பாடுகளைச்' (qualitative credit control) செயலாற்றுவது குறித்து ஆலோசிக்கலாயினர். இதே சமயந்தான் பத்திர மார்க்கெட்டுக்குப் பாங்குகள் கொடுத்து வந்த கடன்களை ஒழுங்கு செய்யும் வகையில் கட்டுப்பாடுகளை அதிகாரிகள் நிறுவினர். முன்பு பத்திர மார்க்கெட்டுக்கு மிகப் பெரும் அளவில் பாங்குகள் கடன்கொடுத்து வந்தன. தற்சமயம் பாங்குகள் கொடுக்கும் மொத்தக் கடன்களில் இத்தகைய கடன்களின் பாங்கு மிகமிகக் குறைவானதேயாகும். ஆனால், நியூயார்க்கிலுள்ள பாங்குகள் மட்டும் இதற்கு விதி விலக்காகும். நியூயார்க்கிலுள்ள பாங்குகள், இன்றுகூடப் பத்திர மார்க்கெட்டுக்குப் பெருமளவில் கடன்களைக் கொடுத்து வருகின்றன.

இதுகாறும் தங்கள் வாடிக்கைக்காரர்கட்குப் பாங்குகள் ஏற்பாடு செய்துவரும் கடன் வசதிகளைப்பற்றி விவாதித்தோம். இவை நீங்கலாக அமெரிக்க பாங்குகளிடம் உள்ள ஏனைய சொத்து வகைகள் குறித்து இனி ஆராய்வோம். அமெரிக்கப்பாங்குகள் ஒரு குறிப்பிட்ட அளவு ரொக்கக் காப்பு இருப்புகளைக் கட்டாயம்

[1] ஒன்பதாம் அத்தியாயத்தில் நான்காவது உட்பிரிவில் நாம் இதுகுறித்து விளக்கம் தந்துள்ளோம்.

வைத்திருக்கவேண்டும். இதை ஐக்கிய ரிசர்வ் முறை வலியுறுத்து கின்றது. இதை வலியுறுத்துவதற்கு ஐக்கிய ரிசர்வ் முறை சட்ட பூர்வமான அதிகாரம் பெற்றிருக்கிறது. ஐக்கிய ரிசர்வ் முறையில் அங்கம் வகிக்காத பாங்குகள் தங்களிடம் வைத்திருக்கவேண்டிய ரொக்கக் காப்பு இருப்புகள் குறித்து இராச்சியச் சட்டங்கள் ஒழுங்கு செய்கின்றன. இவ்வாறு அதிகாரிகள் நிர்ணயிக்கும் ரொக்கக் காப்பு இருப்புகள் நீங்கலாக, தங்களுடைய அன்றாடத் தேவைகட்குப் பயன்படும் வகையில், தங்களுடைய கல்லாவிலோ (till), நிலவறையிலோ (vault) பாங்குகள் ஓரளவு ரொக்கமும் வைத்திருக்கவேண்டியுள்ளது அமெரிக்க பாங்குகளின் சொத்து களில் குறிப்பிடத் தக்க அளவு பத்திரங்களும் உள்ளன. இப் பத்திரங்களில் பெரும்பாலானவை அமெரிக்க அரசாங்கப் பத்திரங் களேயாகும். பாங்குகளிடமுள்ள பத்திர இருப்புகளில் மூன்றில் இரண்டு பங்குப் பத்திரங்கள் ஐந்து ஆண்டுகட்கு உட்பட்ட ஆயுட் காலத்தை உடையன. பாங்குகளிடமுள்ள பத்திரங்கள் யாவும் பத்து ஆண்டுகட்கு உட்பட்ட ஆயுட் காலத்தை உடையன. எனவே, அமெரிக்க பாங்குகள் வைத்திருக்கும் பத்திரங்களின் சராசரி ஆயுட் காலம், இங்கிலாந்து நாட்டிலுள்ள பாங்குகள் வைத்திருக்கும் பத்திரங்களின் சராசரி ஆயுட் காலத்தைவிடக் குறைவாகவே உள்ளன. அமெரிக்க பாங்குகள் வைத்திருக்கும் பத்திரங்களுக்கும், இங்கிலாந்து பாங்குகள் வைத் திருக்கும் பத்திரங்களுக்கும் இடையே அண்மையில் மற்றும் ஒரு வேறுபாடு தோன்றியுள்ளது. இங்கிலாந்து பாங்குகள் வைத் திருக்க விரும்பும் பத்திரங்களின் சராசரி ஆயுட் காலம் குறைந்து கொண்டே வருகிறது; ஆனால் அமெரிக்கப் பாங்குகள் வைத் திருக்க விரும்பும் பத்திரங்களின் சராசரி ஆயுட்காலம் அதிகரித்துக் கொண்டே வருகிறது.

அமெரிக்க பாங்குகளின் நடவடிக்கைகள் பாங்குக்குப் பாங்கு பெரிதும் வேறுபடுகின்றன. இதையொட்டி நாம் பல வகையான பாங்குகளைக் காணமுடிகின்றது. நியூயார்க்கிலுள்ள பாங்குகளை ஒரு வகையைச் சேர்ந்தவை என்று கூறலாம். இவை குறுங்காலக் கடன்களைக் கொடுக்கின்றன; தொழிற்சாலைகட்கும் வர்த்தகக் கம்பெனிகட்கும் பெருமளவில் காலக்கடன்களைக் (term loans) கொடுக்கின்றன; மார்க்கெட்டில் நிதிபற்றிய நடவடிக்கைகளில் ஈடுபட்டிருப்போருக்குத் தற்காலிகக் கடன்களையும் வழங்குகின் றன. இந்த வகையைச் சேர்ந்த பாங்குகள் விவசாயத்திற்குக் கடன்கள் கொடுப்பதில்லை. இத்தகைய பாங்குகளை ஒரு வகை யினவாக நாம் கருதலாம். இவற்றினின்றும் முற்றிலும் வேறுபட்ட வேறு வகையைச் சேர்ந்த பாங்குகளும் உள்ளன. இவை நாட்டுப்

புற பாங்குகளாகும். இந் நாட்டுப்புற பாங்குகள் தங்கள் பணத்திற் சுமார் அரைப் பங்கை நிலபுலன்கள், வீடுகள் ஆகிய சொத்தினங்கட்கு ஈடாகக் கடன்கள் வழங்குவதற்குப் பயன்படுத்துகின்றன; இவை தங்கள் ஊரைச் சேர்ந்த விவசாயிகளிடமிருந்து ஈடு ஏதும் பெருமலேயே கடன்களை வழங்க முன்வருகின்றன; இச் சொத்துகள் போக எஞ்சியுள்ள இவற்றின் சொத்துகள், அரசாங்கப் பத்திரங்களின் உருவில் உள்ளன. இம் மாதிரியான பாங்குகளை இரண்டாம் வகையைச் சேர்ந்த பாங்குகள் என்று நாம் கருதலாம். இந்த இரண்டு வகையைச் சேர்ந்த பாங்குகளும் இரண்டு எல்லைகளைக் குறிக்கின்றன. இவ் விரண்டு எல்லைகட்கும் இடைப்பட்ட நிலையில் பல வகையான பாங்குகள் உள்ளன. இவ்வாறு அமெரிக்க பாங்குகள் பல வகையைச் சேர்ந்தவைகளாக விருப்பதால், அவற்றின் இருப்புநிலைக் குறிப்புகளும் பலவாருக அமைந்துள்ளன. பாங்குகள் ஆற்றிவரும் பணிகள் பாங்குக்குப் பாங்கு வேறுபடுவதால், பாங்குகட்கு ஆகும் செலவினங்களும் அவ்வாறே வேறுபடுகின்றன. எனவே. பாங்குகள் தங்களுடைய வாடிக்கைக்காரர்கட்கு விதிக்கும் கட்டணங்களும் பாங்குக்குப் பாங்கு பெருமளவில் வேறுபடுகின்றன. பாங்குகளிடையே போட்டி மிகக் குறைவாக யிருக்குமிடங்களில் இவ் வுண்மைகள் மிக மிகப் பொருந்தும். இங்கிலாந்து நாட்டில், கடனாளி, இலண்டன் மாநகரில் வாழ்ந்து வந்தாலும் அல்லது வடக்குப் பகுதியில் ஒரு சிறிய நகரத்தில் வாழ்ந்து வந்தாலும் அவர் பாங்கிடமிருந்து பெறும் கடன் வசதிக்கு ஒரே விதமான வட்டி வீதமே கொடுக்கின்றார். சிறிய தொகையைக் கடனுகப் பெறும் வாடிக்கைக்காரராயினும், அன்றிப் பெரிய தொகையைக் கடனுகப் பெறும் வாடிக்கைக்காரராயினும் இருவரும் தாங்கள் வாங்கும் கடன்களுக்கு ஒரே வட்டி வீதந்தான் கொடுக்கின்றனர். இங்கிலாந்தில் நாடு முழுவதும் பரந்து கிடக்கும் பாங்குகள் யாவும் விதிக்கும் கட்டணங்கள் ஒரே அளவில் அமைந்துள்ளன. ஆனல், அமெரிக்காவிலுள்ள நிலை முற்றிலும் மாறுபட்டதாகும். இதற்குக் காரணம் அமெரிக்காவிலுள்ள பாங்குகளில் பெரும்பாலானவை ‘தனிப் பாங்கு’களாக (unit bank) இருப்பதேயாகும். பாங்குகள் விதிக்கும் கட்டணங்கள் பிரதேசத்திற்குப் பிரதேசம் வேறுபடுகின்றன. பெரிய நகரத்திலுள்ள பாங்கு ஒன்று தன்னிடம் பெருந்தொகையைக் கடனுகப் பெற விரும்பும் தன்னுடைய வாடிக்கைக்காரர் ஒருவருக்கு விதிக்கும் கட்டணம், சிறிய நாட்டுப்புற பாங்கு ஒன்று தன்னிடம் குறைந்த தொகையைக் கடனுகப் பெற விரும்பும் வாடிக்கைக்காரருக்கு விதிக்கும் கட்டணத்தைவிட, மிகக் குறைவாகவே இருக்கும். பெரிய தொகையைத் தன்னிடம் கடனுகப் பெற முன்வரும் வாடிக்கைக்காரர் பிறிதொரு பாங்கின் உதவியை

நாடாது, தம்மிடமே கடன் வசதிகளைப் பெறுமாறு செய்யும் நோக்கத்துடனேயே பாங்கு அவருக்குக் குறைந்த வட்டி வீதத்தில் கடன்தர முன்வருகிறது. இவ்வாறாக அமெரிக்கப் பாங்குகளின் சொத்துகளின் அமைப்பு பாங்குக்குப் பாங்கு வேறுபடுகிறது. எனவே அமெரிக்க மைய பாங்கு கடைப்பிடிக்க வேண்டிய கட்டுப்பாட்டு முறைகளும், இவ் வேறுபாடுகட்கு ஏற்றவகையில் அமைய வேண்டியிருக்கிறது. அமெரிக்க மைய பாங்கு கடைப்பிடிக்கும் கட்டுப்பாட்டு முறைகளை ஆராயும் முன்பு நாம் நியூயார்க் பண மார்க்கெட்டைப்பற்றி அறியவேண்டியது அவசியமாகும். நியூயார்க் பண மார்க்கெட்டின் நடவடிக்கைகள் வாணிகப் பாங்குகளின் நடவடிக்கைகளைப் பெருமளவு பாதிக்கின்றன மேலும் அதிகாரிகள் கடைப்பிடிக்கும் கட்டுப்பாட்டு முறைகளைப் பொறுத்த வரையிலும்கூட நியூயார்க் பண மார்க்கெட் நடவடிக்கைகளின் செல்வாக்கு இன்றியமையாததேயாகும்.

## 2. நியூயார்க் பண மார்க்கெட்

இப் புத்தகத்தின் முதல் பதிப்பு வெளியான நாள்தொட்டு அமெரிக்க நாட்டுப் பாங்கு முறைகளில் பல மாற்றங்கள் நேர்ந்துள்ளன. அவற்றுள் நியூயார்க் பண மார்க்கெட்டின் வளர்ச்சி மிகவும் குறிப்பிடத்தக்க மாற்றமாகும். கடந்த காலத்தில் பங்கு மார்க்கெட்டுக்குப் (stock exchange) பாங்குகள் பெருமளவு குறுங் காலக் கடன்களை ஏற்பாடு செய்துவந்தன. இந்த அலுவலே நியூயார்க் பணமார்க்கெட் கடந்த காலத்தில் ஆற்றி வந்த முக்கியமான அலுவலாகும். இப்பொழுது நிலைமை முற்றிலும் மாறிவிட்டது. இன்றுகூடப் பங்கு மார்க்கெட் பாங்குகளிடமிருந்து குறுங்காலக் கடன்களைப் பெறமுடியும். ஆனால் முன்பு இருந்தது போல அல்லாது, பாங்குகளும் பங்கு மார்க்கெட்டும் தமக்குள் சில ஏற்பாடுகளைச் செய்துகொண்ட பின்னே பங்கு மார்க்கெட்டு, பாங்குகளிடமிருந்து கடன்களைப் பெறுவது சாத்தியமாகும். நியூயார்க் பண மார்க்கெட்டின் நடவடிக்கைகளில் வர்த்தகர்கள் (dealers) பெரும் பங்கு பெறுகிறார்கள். பாங்குகளும், பாங்குகள் அல்லாத சிலருமே இவ் வர்த்தகர்கள் ஆவர். குறுங்கால அரசாங்கப் பத்திரங்களையும், நியூயார்க்கிலுள்ள ஐக்கிய ரிசர்வ் பாங்கிலுள்ள வாணிக பாங்குகட்குச் சொந்தமான இருப்புகளையும், இன்று இவ் வர்த்தகர்கள் நியூயார்க் பண மார்க்கெட்டில் முக்கிய வர்த்தகப் பொருளாகக் கையாளுகின்றனர். இலண்டனிலுள்ள அயல்நாட்டுச் செலாவணி மார்க்கெட்டில் பேரங்கள் பெரும்பாலும் தொலைபேசிகளின் உதவியால் நடைபெறுவதைப் போலவே, நியூ

யார்க் பண மார்க்கெட்டிலும் பெரும்பாலான பேரங்கள் தொலை பேசியின் உதவியால் நடைபெறுகின்றன. நியூயார்க்கிலுள்ள ஐக்கிய ரிசர்வ் பாங்கு, (இது அமெரிக்க நாட்டு கருவூலத்திற்கு நியூயார்க்கில் ஏஜெண்டாகவும் விளங்குகின்றது.) ஐம்பெரும் வர்த்தகப் பாங்குகள், வால்தெருவில் (Wall Street) செயலாற்றிக் கொண்டிருக்கும் (பாங்குகள் அல்லாத) பன்னிரண்டு வர்த்தகர்கள், பத்திரங்களில் பேரங்கள் நடத்தும் ஏனைய வர்த்தகர்கள், பலரகப் பட்ட நிதி நிறுவனங்கள், மற்றும் நாடு முழுவதும் பரந்து கிடக்கும் பெரிய பாங்குகள் ஆகியவை யாவும் நியூயார்க் பண மார்க்கெட் டுடன் தொலைபேசிகளின்மூலம் இணைக்கப்பட்டுள்ளன.[1]

நெடுநாட்களாக நியூயார்க் பணமார்க்கெட்டில் கையாளப் பட்டு வரும் பத்திரங்கள் இரண்டு உள்ளன. அவை வாணிகத் தாளும் (commercial paper), பாங்கர்களின் ஏற்புகளும் (bankers' acceptances) ஆகும். இவை இரண்டிலும் கடந்த காலத்தில் பெரு மளவு பேரங்கள் நடைபெற்றன. தற்காலத்தில் இவற்றில் ஓரள வுக்குப் பேரங்கள் நடைபெறுகின்றன. வாணிகத் தாட்கள் குறுங் காலப் புரோ நோட்டுகளே (promissory notes) யாகும். இவற்றை நாடு முழுவதிலுமுள்ள சுமார் 350 நிறுவனங்கள் வெளியிடு கின்றன. இப் புரோ நோட்டுகளின் ஆயுட்காலம் மூன்று அல்லது நான்கு அல்லது ஆறு மாதங்களாக இருக்கிறது. தங்கட்குச் சில காலங்களில் தேவைப்படும் தற்காலிகப் பணத் தேவைகளை நிறை வேற்றும் நோக்கத்துடனேயே நிறுவனங்கள் இவற்றை வெளியிடு கின்றன. தற்சமயம் இலண்டன் பண மார்க்கெட்டில் மிகக் குறைந்த அளவில் கையாளப்படும் உள் நாட்டு வர்த்தக உண்டி யல்களை இவை ஓரளவுக்கு ஒத்திருக்கின்றன. இவ் வாணிகத் தாட்களும், மற்றும் நிதி நிறுவனங்களால் வெளியிடப்பட்ட (இவற் றைப் பெரிதும் ஒத்திருந்த) குறுங்காலத் தாட்களும், கடந்த காலத்தில் நியூயார்க் பண மார்க்கெட்டின் நடவடிக்கைகளில் பெரும் பங்கு பெற்றன. பின் இடைக் காலத்தில் இவற்றில் நடை பெற்ற பேரங்கள் மிகவும் சுருங்கின. தற்சமயம் இவற்றில் நடை பெற்றுவரும் பேரங்கள் ஓரளவுக்கு வளர்ச்சியுற்றுள்ளன. இக் குறுங்காலத் தாட்களின் உதவியால் தொழிற்சாலைகளும் வாணிகர் களும் தங்களுடைய குறுங்காலப் பணத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்ள முடிகிறது. இத் தாட்களின் மூலம் கிடைக்கும் பணத்திற்கு இவர்கள் கொடுக்கவேண்டியுள்ள வட்டிவீதம், பாங்குகளிடமிருந்து கடனாக வாங்கும் பணத்திற்கு இவர்கள்

[1] இங்கு நாம் கொடுத்துள்ள சுருக்கமான விளக்கத்திற்குக் கீழே நாம் குறித் துள்ள புத்தகமே ஆதாரமாகும்: Federal Reserve Operations in the money and Government Securities Markets by Robert V. Roosa, published by the Federal Reserve Bank of New York, 1956.

கொடுக்க வேண்டியுள்ள வட்டிவீதத்தைவிடக் குறைவாகவே உள்ளது. நியூயார்க் பண மார்க்கெட்டில் 'பாங்கர்களின் ஏற்புகளும்' (bankers' acceptances) நெடுநாட்களாகக் கையாளப்படுகின்றன. முன்பு இவை பெருமளவில் கையாளப்பட்டன; இடைக்காலத்தில் இவை வீழ்ச்சியுற்றன; மீண்டும் தற்சமயம் ஓரளவுக்கு இவை பெருகியுள்ளன. எனினும் 1920-29-க்கு இடைப்பட்ட காலத்தில் இவற்றிற்கிருந்த செல்வாக்கு, மீண்டும் ஏற்படுவதற்கான அறிகுறிகள் ஏதும் இல்லை. இலண்டனில் கையாளப்படும் முதல்தரமான உண்டியல்களுக்கு, 'இப் பாங்கர்களின் ஏற்புகள்' சமமாகும். இங்கு நாம் குறித்துள்ள இரண்டு வகைப் பத்திரங்களிலும் (வர்த்தகத் தாட்கள், பாங்கர்களின் ஏற்புகள்) கடந்த காலத்தில் பெருமளவு பேரங்கள் நடைபெற்றன. தற்காலம் இவற்றில் நடைபெறும் பேரங்கள் பெருமளவின என்று கூறுவதற்கில்லை. கருவூல உண்டியல்கள், வேறு குறுங்கால அரசாங்கப் பத்திரங்கள், 'ஐக்கிய நிதிகள்' (Federal Funds)-இவை ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் வாணிகப் பாங்குகள் தங்கள் தேவைக்குமேல் வைத்திருக்கக்கூடிய உபரி இருப்புகளாகும்.) அரசாங்கப் பத்திரங்கட்கு ஈடாகப் பணமார்க்கெட் வர்த்தகர்கள் பெறும் கடன்கள்—ஆகியவற்றைப் பொறுத்த பேரங்களே இன்று நியூயார்க் பண மார்க்கெட்டில் பெருமளவு நடைபெறுகின்றன.

குறுங்கால அரசாங்கப் பத்திரங்களைப் பொறுத்த பேரங்களில் ஐந்து பாங்குகளும் (இவற்றில் இரண்டு பாங்குகள் சிக்காகோவைச் சேர்ந்தவை), பண மார்க்கெட் வர்த்தகர்களும் (dealers) பெரும் பங்கு பெறுகின்றனர். இலண்டனிலுள்ள பங்குத் தரகர்கள் போலவே நியூயார்க் பண மார்க்கெட்டிலுள்ள வர்த்தகர்கள் எந்நேரமும் குறுங்கால அரசாங்கப் பத்திரங்களை விலைக்கு வாங்கவும் விற்கவும் தயாராக உள்ளனர். தங்களிடம் பத்திர இருப்புகள் இருந்தாலும் இல்லாவிடினும் இவ் வர்த்தகர்கள் பத்திரங்களில் எந்த வகையான பேரங்களும் நடத்தத் தயாராக உள்ளனர். இதேபோலத் தங்களிடம் பத்திரங்களை இருப்பாக வைத்திருக்க விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், இவ் வர்த்தகர்கள் எந்நேரமும் குறுங்கால அரசாங்கப் பத்திரங்களை விற்கவும் வாங்கவும் தயாராக உள்ளனர். எனினும் இவர்களிடம் எப்பொழுதும் பத்திர இருப்புகள் உள்ளன. சாதாரணப் பண மார்க்கெட் வர்த்தகர்கள் (non-bank dealers) தங்கள் மூலதனத்தைவிட அதிகமான நிதிகளைப் பத்திரத் தொழிலில் பயன்படுத்துகின்றனர். இவ்வதிகமான நிதிகளை, இவர்கள் நியூயார்க்கிலுள்ள பாங்குகளிடமிருந்தும், வேறு வெளிப் பிரதேசங்களிலுள்ள பாங்குகளிடமிருந்தும் கடனாகப் பெறுகின்றனர். தங்களிடமுள்ள அரசாங்கப் பத்திர இருப்பு

களுக்கு ஈடாக இவ் வர்த்தகர்களால் கடன் பெற முடிகிறது. மிகவும் குறுகியகால அரசாங்கப் பத்திரங்கள் பலவற்றிலும் கருவூல உண்டியல்களிலேயே அதிக அளவு பேரங்கள் நடைபெறுகின்றன. (ஐக்கிய ரிசர்வ் பாங்கு சாதாரணமாகக் கருவூல உண்டியல்களிலேயே தன் வெளி மார்க்கெட் நடவடிக்கைகளை நடத்துகிறது.) அமெரிக்க கருவூல உண்டியல்கள் பொதுவாக பிரிட்டிஷ் கருவூல உண்டியல்களை ஒத்திருக்கின்றன. இவற்றின் ஆயுட்காலம் மூன்று மாதங்களாகும். வாரந்தோறும் ஒரு குறிப்பிட்ட அளவு கருவூல உண்டியல்கள் 'டெண்டர்' முறையில் (tender issue) வெளியிடப்படுகின்றன. இலண்டனில் கருவூல உண்டியல்கள் டெண்டர் முறையில் வெளியிடப்படும்போது ஒரு வாரம் 'டெண்டர்' கொடுப்பவர் மறுவாரம் தாம் விரும்பிய கிழமையில் கருவூல உண்டியல்களைப் பெறலாம். ஆனால் நியூயார்க்கில் இது இயலாது. நிர்ணயிக்கப்பட்டுள்ள ஒரே ஒரு கிழமையன்றுதான் அதிகாரிகளிடமிருந்து கருவூல உண்டியல்களைப் பெற முடியும். நியூயார்க் 'டெண்டர்' முறையைக் காட்டிலும் இலண்டன் முறையே மிகவும் நெகிழ்ச்சியான முறையாகும். எனவே இலண்டனில் கருவூல உண்டியல்கட்குத் தடையில்லாத மார்க்கெட் ஏற்பட்டுள்ளது; கருவூல உண்டியல்கட்கான மார்க்கெட்டில் எப்பொழுதாவது தடைகள் நேர்ந்தால், மையப் பாங்கு அதற்கான காரணங்களை எளிதில் அறிந்துகொள்ள முடிகிறது. இலண்டனில் உள்ள உண்டியல் கழிவகங்கள் தங்களுக்குள் போட்டி ஏதுமின்றிச் சங்கம் ஒன்று நிறுவி, அதன் மூலம் கருவூல உண்டியல்கட்கு 'டெண்டர்கள்' கொடுக்கின்றன. இங்கிலாந்து நாட்டிலுள்ள பெரும் பாங்குகள் 'டெண்டரில்' கலந்து கொள்வதே இல்லை. இதன் அடிப்படையில் இலண்டன் 'டெண்டரில்' போட்டியே கிடையாது என்று முடிவு கட்டிவிடலாகாது. இருப்பினும் நியூயார்க் 'டெண்டரிலு'ள்ள அளவு, போட்டி, இலண்டன் 'டெண்டரில், கிடையாது பெரும் பாங்குகள், நடுத்தரமான (இவை நியூயார்க்கிலும், ஏனைய வெளிப் பிரதேசங்களிலும் உள்ள பாங்குகளைக் குறிக்கும்.) பணமார்க்கெட் வர்த்தகர்கள், நிதி நிறுவனங்கள், பெரும் வர்த்தகக் கம்பெனிகள் (நிதி நிறுவனங்களும் பெரும் வர்த்தகக் கம்பெனிகளும் நியூயார்க்கிலுள்ள பெரிய பாங்குகளின் மூலமே டெண்டரில் கலந்து கொள்கின்றன) — ஆகியவை நியூயார்க்கில் கருவூல உண்டியல்கட்கான டெண்டர்களில் போட்டியிடுகின்றன. மேற்குறித்த போட்டி முறை தவிர, போட்டி ஏதுமின்றியும் கருவூல உண்டியல்களின் விலைகள் நிர்ணயிக்கப்பட்டு அவை வெளியிடப்படுகின்றன, போட்டியில் கலந்து விலையை நிர்ணயித்து கருவூல உண்டியல்களை வாங்கக் கூடிய ஆற்றல் குன்றியுள்ள சிறிய பாங்குகள், பெருமளவில் கருவூல உண்டியல்

களைக் கையாளுவதற்குச் சாதகமாக இம்மாதிரியான (போட்டி இல்லாத) வசதிகள் செய்யப்பட்டுள்ளன: கருவூல உண்டியல்கட்கான டெண்டரில் நியூயார்க் நகரத்திலுள்ள நிறுவனங்களே பெரும் பங்கு பெறுகின்றன. ஒவ்வொரு வாரமும் டெண்டர் முறையில் வெளியிடப்படும் கருவூல உண்டியல்களில் சுமார் மூன்றில் இரண்டு பங்கு நியூயார்க் நகரத்திலுள்ள நிறுவனங்களையே போய்ச் சேருகின்றன, பின் இவற்றுள் பெரும் பகுதி நியூயார்க்கை விடுத்து வெளிப் பிரதேசங்களிலுள்ள நிறுவனங்களையும் போய்ச் சேருகின்றன. தங்களிடம் இருப்பாக வைத்திருக்கும் நோக்கத்துடன் நியூயார்க் பண மார்க்கெட் வர்த்தகர்கள் பெருமளவில் கருவூல உண்டியல்களை வாங்கவில்லை. எனவே, அவர்கள் உடனடியாக கருவூல உண்டியல்களைப் பிறரிடம் விற்றுவிடுகின்றனர். சிறிய பாங்குகளும், 'டெண்டர்' மூலம் கருவூல உண்டியல்களை வாங்க முடியாத பெரும் பாங்குகளும் கூடப் பண மார்க்கெட் வர்த்தகர்களிடமிருந்து கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்குகின்றன. இலண்டனில் நடைபெறும் கருவூல உண்டியல்களிலான பேரங்களைவிட நியூயார்க்கில் நடைபெறும் பேரங்கள் மிகவும் சிக்கல்கள் நிறைந்தவை. நியூயார்க் நகரில் கருவூல உண்டியல்களுக்கான மார்க்கெட் பலவாறு அமைந்துள்ளது என்று கூறலாம். மார்ஷல் (Marshall) விளக்கம் தந்துள்ள 'செம்மையான மார்க்கெட்' (perfect market) தோன்றுவதற்கு எம்மாதிரியான சூழ்நிலை உருவாக வேண்டுமோ அதைப் பெரிதும் ஒத்ததொரு சூழ்நிலை நியூயார்க் மார்க்கெட்டில் நிலவுகிறது எனலாம்.

வெளியிடப்பட்ட கருவூல உண்டியல்கட்கு நல்ல விறுவிறுப்பான மார்க்கெட் உருவாகிவிடுகின்றது. பணமார்க்கெட் வர்த்தகர்கள் (சாதாரண வர்த்தகர்களும், பாங்கு வர்த்தகர்களும்) தங்களிடமுள்ள கருவூல உண்டியல்கட்கு விலை கூறுகின்றனர்; ஏனையோரிடமுள்ள கருவூல உண்டியல்களை ஒரு குறிப்பிட்ட விலையில் வாங்குவதற்கும் தயாராக உள்ளனர். பண மார்க்கெட் வர்த்தகர்கள் தரகர்களைப் போலப் பிறருக்காக கருவூல உண்டியல்களை வாங்கவோ, விற்கவோ முன் வருவதில்லை. தங்களுக்காகவே வாங்குகின்றனர்; தாங்களே விற்கின்றனர். பெரும் பாங்குகள் கூடக் கருவூல உண்டியல்களை வாங்கவும், விற்கவும் செய்கின்றன. இவ் வகையில் நியூயார்க் பாங்குகள் இலண்டன் பாங்குகளைவிட வேறுபட்டு விளங்குகின்றன. இலண்டன் பாங்குகள் கருவூல உண்டியல்களை விலைக்கு வாங்குகின்றன; ஆனால் விலைக்கு வாங்கிய கருவூல உண்டியல்களை அவை விற்பதில்லை. ஐக்கிய ரிசர்வ் பாங்கு கருவூல உண்டியல் மார்க்கெட்டில் மிக்க ஆர்வம்

காட்டுகிறது. ஐக்கிய ரிசர்வ் பாங்கு வாராந்தர டெண்டரிலும் கலந்து கொள்கிறது. அந்தந்த வாரம் கெடுவுகாலத்தை அடையும் கருவூல உண்டியல்களின் இடததை நிரப்புவதற்கே ஐக்கிய ரிசர்வ் பாங்கு 'டெண்டர்' முறையில் கருவூல உண்டியல்களை வாங்குகிறது. எனினும் ஐக்கிய ரிசர்வ் பாங்கு, தொடர்ந்து பண மார்க்கெட் வர்த்தகர்களுடன் கருவூல உண்டியல்களைப் பற்றிய பேரங்களை நிகழ்த்திவருகிறது.

தங்களுடைய சொத்துகளில் (வாணிகத்தாள், பாங்கர்களின் ஏற்புகள், அரசாங்கப் பத்திரங்கள்) தாங்கள் விரும்பும் மாற்றங்களைப் பாங்குகள் செய்தபின், தங்களிடம் ரொக்கம் குறைவாக இருக்கிறது என்று அவை அறிய வருகின்றன என்று வைத்துக் கொள்வோம். இந் நிலையில் பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்கை அணுகிக் கடன் பெறலாம். ஆனால் பங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்கைத்தான் அணுகிக் கடன் பெறவேண்டும் என்ற கட்டாயம் ஏதுமில்லை. பாங்குகள் 'ஐக்கிய நிதிகளுக்கான மார்க்கெட்டை' (Federal Funds Market) அணுகித் தங்களுக்குத் தேவைப்படும் ரொக்கத்தைக் கடனாகப் பெறலாம். இவ்வாறன்றிப் பாங்குகளிடம் ரொக்கம் தேவைக்குமேல் அதிகமாக உள்ளது என்று வைத்துக் கொள்வோம். இந் நிலையில் தங்களிடமுள்ள மிகுதியான ரொக்கத்தைப் பாங்குகள் ஆதாயமின்றி வைத்திருக்கவேண்டிய அவசியமில்லை. உபரி ரொக்கத்தை அவை 'ஐக்கிய நிதிகள் மார்க்கெட்டின்' மூலம் பிற நிறுவனங்கட்குக் கடனாகக் கொடுக்கமுடியும். இந்த ஐக்கிய நிதிகள் மார்க்கெட், நியூயார்க்கில் மிக விரைவில் உருவாகி வந்துள்ள ஒரு மார்க்கெட்டாகும். இலண்டனில் இதற்கு இணையான மாாக்கெட் ஏதுமில்லையெனலாம். மிகவும் இக்கட்டான நிலையில் உண்டியல் கழிவகங்கள் இங்கிலாந்துத் தலைமை பாங்கிடம் 'முன்புற வழி'யில் பண வசதிகள் பெறுவதற்குச் சற்றுமுன், இலண்டன் மார்க்கெட்டில் கிடைக்கக்கூடிய மிகக் குறைந்த அளவிலான நிதிகட்கு உண்டியல் கழிவகங்கள் ஒன்றோடொன்று போட்டியிடும். இம் மாதிரி உண்டியல் கழிவகங்கள், நிதிகட்குப் போட்டியிடும் காலங்களில், அமெரிக்காவிலுள்ள ஐக்கிய நிதிகள் மார்க்கெட் போன்ற ஒரு மார்க்கெட், இலண்டனில் உருவாகின்றது என்று கூறலாம். பாங்குகட்கும், அரசாங்கப் பத்திரங்களில் பேரங்கள் நிகழ்த்தும் வர்த்தகர்கட்கும், ஐக்கிய நிதிகள் பெரிதும் பயன்படுகின்றன. 1954-55ஆம் ஆண்டுகளில் பாங்குகட்குப் பண நெருக்கடி நேர்ந்தது. அவ்வமயம்கூட நியூயார்க் பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்கிடம் பெருமளவு கடன்களைத் தொடர்ந்து நெடுங்காலத்திற்கு வாங்க வேண்டிய அவசியம் நேரவில்லை. இதற்கு முக்கிய காரணம், நியூயார்க் பாங்குகள்

தங்கள் பணத்தேவையை ஐக்கிய நிதிகளின் மார்க்கெட்டை அணுகிப் பூர்த்தி செய்துகொண்டதேயாகும். இன்றுகூட ஐக்கிய நிதிகளை நியூயார்க் பாங்குகள் பெருமளவில் பயன்படுத்தி வருகின்றன. ஐக்கிய நிதிகளின் அளிப்பில் (supply) பெருமளவு, பாங்குகளிடமிருந்தே வருகின்றது. மொத்த ஐக்கிய நிதிகளில் நியூயார்க் பாங்குகளின் பங்கு ஏனைய பாங்குகளின் பங்கைவிட மிகவும் அதிகமாகும். நியூயார்க் பாங்குகள் தவிர வெளிப் பிரதேச பாங்குகளும் ஐக்கிய நிதியாகப் பயன்படுவதற்குத் தங்களிடமுள்ள உபரி ரொக்கத்தை அனுப்புகின்றன. பாங்கு களல்லாத ஏனைய நபர்களும் ஐக்கிய நிதியில் பங்கு பெறுகின் றனர். தங்களிடமுள்ள உண்டியல்களை ஐக்கிய ரிசர்வ் பாங்கிடம் விற்றபின் பணமார்க்கெட் வர்த்தகர்களின் பெயரில் ஐக்கிய ரிசர்வ் பாங்கில் இருப்புகள் சேருகின்றன. இந்த இருப்புகளை ஐக்கிய நிதிகள் மார்க்கெட்டில் பண மார்க்கெட் வர்த்தகர்கள் பயன்படுத்துகின்றனர். ஐக்கிய ரிசர்வ் பாங்கிடம் தங்களுடைய இருப்புகளை வைத்திருக்கும் அயல்நாட்டுப் பாங்குகளின் ஏஜெண்டு களும், இந்த இருப்புகளை ஐக்கிய நிதிகள் மார்க்கெட்டில் பயன் படுத்துகின்றனர். ஐக்கிய நிதிகள் மார்க்கெட் எப்பொழுதும் மிகவும் விறுவிறுப்புடன் திகழ்கிறது. 1950-59-க்கு இடைப் பட்ட காலத்தின் மத்தியப் பகுதியில் பண நெருக்கடி தோன்றிய பொழுது நாடு முழுவதிலுமுள்ள பாங்குகளிடம் தற்காலிகமாகத் தேங்கி இருந்த உபரி ரொக்கம் யாவும் ஐக்கிய நிதிகள் மார்க்கெட் டையே வந்து அடைந்தன. நியூயார்க்கிலுள்ள பாங்குகளும், வெளிப் பிரதேச பாங்குகளும், ஐக்கிய நிதிகள் மார்க்கெட்டில் வர்த்தகர்களாகத் திகழ்கின்றன. அமெரிக்க நாடு முழுவதும் பரந்து கிடக்கும் பாங்குகளுடன் இவை தொடர்புகள் வைத்திருக் கின்றன. எனவே, அவ்வப்போது ஐக்கிய நிதிகளைக் கடனாகப் பெறவும், பிறருக்குக் கடன் கொடுக்கவும் இயலுகிறது. ஐக்கிய நிதிகளில் நடைபெறும் பேரங்களில் வால் தெருவில் (Wall Street) அமைந்திருக்கும் ஒரு தரகு நிறுவனம் பெரும் பங்கு பெறுகிறது.

ஐக்கிய நிதிகட்கான வட்டி வீதத்தைக் குறிப்பதில் இந் நிறுவனத் தின் செல்வாக்கு மேலோங்கித் திகழ்கிறது. பெரும் பாங்குகள் ஒன்றோடொன்று தொடர்பு கொண்டு, தங்கட்குத் தேவைப்படும் ஐக்கிய நிதிகளைத் தங்களுக்குள்ளேயே ஏற்பாடு செய்துகொள் கின்றன. இது தவிரப் பிறருக்குத் தேவைப்படும் ஐக்கிய நிதிகளை யும் பெரும் பாங்குகள் கடனாக வாங்கித் தருகின்றன. அவ்வப் போது தங்கட்குத் தேவைப்படும் ரொக்கத்தை ஐக்கிய நிதிகளின் மார்க்கெட்டினின்றும் கடனாகப் பெற முடிந்தாலும், ஒரு சில பாங்கு கள் ஐக்கிய ரிசர்வ் பாங்கை அணுகித் தமக்குத் தேவைப்படும்

ரொக்கத்தைத் 'தகுதிவாய்ந்த பத்திரங்கட்கு' ஈடாகக் கடனாகப் பெறவும் தயாராக இருக்கின்றன. பாங்குகட்கு உதவும்போது ஐக்கிய ரிசர்வ் பாங்கு தன்னுடைய கழிவு வீதத்திலேயே கடன்களை வழங்குகிறது. எனவே ஐக்கிய நிதிகட்கான வட்டி வீதம் எக் காலத்தும் ஐக்கிய ரிசர்வ் பாங்கு விதிக்கும் கழிவு வீதத்தை விடப் பெருமளவு அதிகமாக இருப்பதில்லை. எனவே ஐக்கிய நிதி கட்கான மிக உயர்ந்த வட்டி வீதம் ஐக்கிய ரிசர்வ் பாங்கு விதிக்கும் கழிவு வீதத்திற்குச் சமம் என்று நாம் முடிவு கட்டலாம். சாதாரணமாக, ஐக்கிய நிதிகட்கான மிகக் குறைந்த வட்டி வீதம் $\frac{1}{8}$ சதவீதமாக உள்ளது. இந்த இரண்டு எல்லைகட்கும் இடையே ஐக்கிய நிதிகட்கான வட்டி வீதம் காலத்திற்குக் காலம் மாறிக் கொண்டே இருக்கிறது. அதிகாரிகளின் கட்டுப்பாட்டு நடவடிக்கைகளின் விளைவால் பாங்குகளிடமுள்ள ரொக்க இருப்புகள் சுருங்கும்போது, ஐக்கிய நிதிகளின் வட்டி வீதம் ஐக்கிய ரிசர்வ் பாங்கு விதிக்கும் வட்டி வீதத்திற்கு இணையாக அமைந்துவிடுகிறது.

பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்கிடம் இருப்புகளை வைத்துள்ளன. இவ்வாறு ஐக்கிய ரிசர்வ் பாங்கிடம் உள்ள பாங்குகளின் இருப்புகளே ஐக்கிய நிதிகளாகும். பாங்கு ஒன்று தனது தேவைக்கு அதிகமாக இருப்புகளை வைத்திருக்கிறது என்றும், வேறொரு பாங்கு தேவைக்குக் குறைவான இருப்பு வைத்திருக்கிறது என்றும் வைத்துக்கொள்வோம். முதலாவது பாங்கிடமிருந்து இரண்டாவது பாங்கு ஐக்கிய நிதிகளைக் கடனாகப் பெற முயலும். என்றைக்கு இவை இரண்டிற்கும் இடையே பேரம் நடக்கின்றதோ, அன்றைய தினமே முதலாவது பாங்கின் கணக்கிலிருந்து இரண்டாவது பாங்கின் கணக்கிற்கு ஒரு குறிப்பிட்ட தொகை மாற்றப்படுகின்றது. ஐக்கிய நிதிகள் போக வேறொரு வகையைச் சேர்ந்த நிதிகளும் நியூயார்க் பணமார்க்கெட்டில் உள்ளன. அவை 'செக்குத் தீர்வக நிதிகளாகும்' (clearing house funds') நியூயார்க்கிலுள்ள பாங்குகளின்மேல் அவற்றின் வாடிக்கைக்காரர்கள் வரைந்த செக்குகளே இச் 'செக்குத் தீர்வக நிதிகளாகும்'. இச் செக்குகள், தீர்வகத்தின்மூலம்தான் தீர்வு பெற வேண்டும். (அதாவது செக்கில் குறிக்கப்பட்டுள்ள பணம் செக்கின் சொந்தக்காரரிடம் போய்ச் சேரவேண்டும்) பிறிதொரு பாங்கின்மேல் வரையப்பட்ட செக்கு ஒன்றை, இன்று ஒரு பாங்கு பெறுகிறது என்று வைத்துக்கொள்வோம். இச் செக்கு, தீர்வகத்தின்மூலம் நாளைய தினந்தான் தீர்வு பெறும். எனவே, இச் செக்கில் குறிக்கப்பட்டுள்ள பணம் நாளைய தினம் கிடைக்கக் கூடிய பணம் இன்றே கிடைக்கக்கூடிய பணமாகும். இம்மாதிரியான

செக்குகட்கு ஈடாக ஒரு நிறுவனம் ஐக்கிய நிதிகளை இன்று கடனாகப் பெறும் போது இன்றைக்குக் கிடைக்கக்கூடிய பணம், நாளைக்குக் கிடைக்கக்கூடிய பணமாக மாற்றப்படுகின்றது எனலாம். இவ்வாறு 'செக்குத் தீர்வக நிதிகளை' 'ஐக்கிய நிதிகளாக' ஒரு பாங்கு மாற்றும்போது, அது ஒரே ஒரு நாளுக்கே கடன் வாங்குகிறது என்று நாம் கருதலாம்.

நியூயார்க் பணமார்க்கெட்டில் அரசாங்கப் பத்திரங்களில் பேரங்கள் நடத்தும் வர்த்தகர்கள், அரசாங்கப் பத்திரங்களை இருப்பாக வைத்திருப்பதற்குத் தமக்குத் தேவைப்படும் பணத்தை ஐக்கிய நிதிகளினின்றும், செக்குத் தீர்வக நிதிகளினின்றும் கடனாகப் பெற முயலுகின்றனர். சாதாரணமாகத் தங்களிடமுள்ள செக்குத் தீர்வக நிதிகளையே வர்த்தகர்கட்குக் கடனாகத் தர நியூயார்க் பாங்குகள் முன் வருகின்றன. தங்களுக்குத் தேவைப்படும் ஐக்கிய நிதிகளை வெளிப் பிரதேச பாங்குகளிடமிருந்து வர்த்தகர்கள் பெற முடிகிறது. தாங்கள் கடனாக வாங்கும் மொத்த நிதிகளில் ஒரு பகுதியை வர்த்தகர்கள் கீழ்க்கண்ட முறையில் பெறுகின்றனர். உடனடியாகத் தேவைப்படும் நிதிகட்கும், எதிர் காலத்தில் தேவைப்படும் நிதிகட்கும், இம் முறையின் அடிப்படையில் ஓர் இணைப்பு ஏற்படுகிறது. உடனடியாக வர்த்தகர்கள் பெறும் நிதிகட்கு ஒரு குறிப்பிட்ட வட்டி வீதமும், எதிர் காலத்தில் அவர்கட்குத் தேவைப்படும் நிதிகட்கு இதைவிட அதிகமான வட்டி வீதமும், இப்பொழுதே நிர்ணயிக்கப்படுகின்றன. இவ்வாறு தங்களுடைய குறுங்காலக் கடன்களின்மூலம் எந்த வட்டி வீதம் பெறமுடியுமோ, அதே வட்டி வீதத்தை இம் முறையின் அடிப்படையில் ஐக்கிய நிதிகளைக் கடன் தரும் பாங்குகள் பெறமுடிகிறது. இரண்டாம் உலகப் போருக்குப்பின் இவ் வேற்பாடே பெருமளவில் கைக்கொள்ளப்படுகிறது. இது போன்ற ஓர் ஏற்பாட்டின்கீழ் ஐக்கிய ரிசர்வ் பாங்கிடமிருந்து வர்த்தகர்களால் ரொக்கம் பெறமுடிகிறது. இவ் வேற்பாடு பண நெருக்கடிக் காலங்களிலேயே பயன்படுத்தப்படுகிறது ; மார்க்கெட்டின் ரொக்கப் பற்றுக்குறை நேர்ந்திருக்கும்போது தண்டனை வீதமான 'கழிவு வீதத்தில்' தங்களிடமிருந்து பாங்குகள் பெருமளவில் கடன் பெறுவதை விரும்பாத சமயம், ஐக்கிய ரிசர்வ் பாங்கு இவ் வேற்பாட்டின்கீழ் வர்த்தகர்கட்குத் தேவைப்படும் ரொக்கத்தை அளிக்க முன்வருகிறது.

நியூயார்க் பணமார்க்கெட்டில் ஐக்கிய நிதிகளுக்கான மார்க்கெட், மிகுந்த போட்டியுடன், அதிவேகமாக வளர்ச்சியுற்றுவருகிறது. நியூயார்க் நகரிலும் வெளிப் பிரதேசத்திலும் உள்ள

பாங்குகள், ஏனைய நிறுவனங்கள் ஆகியவற்றிடமுள்ள உபரி ரொக்கத்திற்காக, ஐக்கிய நிதிகள் மார்க்கெட்டில், நியூயார்க்கிலுள்ள பாங்குகட்கும் வர்த்தகர்கட்கும் இடையே போட்டி நிலவுகிறது. ஐக்கிய நிதிகள் மார்க்கெட் சீரிய முறையில் வளர்ச்சியுற்றிருப்பதால், ஒரு பாங்கிடமுள்ள உபரி ரொக்கம் முழுவதையும் ரொக்கப் பற்றுக்குறையுடைய வேறொரு பாங்கால் பயன்படுத்த முடிகிறது. இவ் வகையில் ஐக்கிய நிதிகள் மார்க்கெட், இலண்டன் பணமார்க்கெட்டை ஓரளவுக்கு ஒத்திருக்கிறது என்று கூறலாம். இலண்டனிலுள்ள பாங்குகளிடம் உபரி ரொக்கமே தேங்குவதில்லை தன் நடிவடிக்கைகளால் உண்டியல் கழிவு மார்க்கெட், பாங்குகளிடமுள்ள உபரி ரொக்கம் முழுவதையும் அகற்றி விடுகிறது. இலண்டனில் நிலவும் நிலை, சிக்கல் ஏதுமில்லாத எளிதான நிலையாகும் (அதாவது இலண்டனில் பாங்குகள் யாவும் நிலையான ரொக்க விகிதங்களையே வைத்திருக்கின்றன.) அமெரிக்கப் பாங்குகள் எண்ணிக்கையிலும் தரத்திலும் பலவாக உள்ளன. இவை நாடு முழுவதும் பரவலாக அமைந்துள்ளன. எனவே இலண்டனில் இருப்பது போல அமெரிக்காவிலும் பாங்குகள் யாவும் ஒரு நிலையான ரொக்க விகிதத்தின் அடிப்படையில் செயலாற்றுவதை நாம் எதிர்பார்க்க முடியாது. அமெரிக்க மைய பாங்கு அதிகாரிகளும் இதை நன்குணர்வர். எந்தக் காலத்தும் ஒரு சில பாங்குகளிடம் ரொக்கம் அதிகமாக இருக்கவும், வேறு சில பாங்குகளிடம் ரொக்கப் பற்றுக்குறை இருக்கவும் கூடும் என்பதை அவர்கள் அறிவர், இதன் அடிப்படையிலேயேதான் அமெரிக்க மைய பாங்கு அதிகாரிகள் தங்கள் நடவடிக்கைகளை ஒழுங்கு செய்கின்றனர்.

## 3. கடன் அளவுக் கட்டுப்பாடும் கடன் விலைக் கட்டுப்பாடும்

அமெரிக்கப் பாங்கு முறை மத்திய அரசாங்கச் சட்ட திட்டங்கட்கும் நாற்பத்தொன்பது இராச்சியங்களின் சட்ட திட்டங்கட்கும் உட்பட்டதாகும். மத்திய அரசாங்கச் சட்டத்தின்கீழ்ப் பதிவு செய்யப்பட்டுள்ள பாங்கு 'தேசீயப் பாங்கு' (National Bank) என்று அழைக்கப்படுகிறது. அந்தந்த இராச்சியங்களின் சட்ட திட்டங்களின்கீழ் நிறுவப்படும் பாங்கு 'இராச்சியப் பாங்கு' ('State Bank') என்ற பெயர் பெறுகிறது. இராச்சியங்களின் சட்ட திட்டங்கள் இராச்சியத்திற்கு இராச்சியம் வேறுபடுகின்றன. எனினும் பாங்குகள் கையாளவேண்டிய விதி முறைகளை எல்லா இராச்சியங்களின் சட்டங்களிலும் நாம் காணமுடியும். பாங்குகளின் மூலதனம் குறித்து இராச்சியங்கள் ஒழுங்கு செய்கின்றன.

பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புகள் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கின்றன. பாங்குகளின் கணக்குகள் குறித்தும் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. பாங்குகளின் நடவடிக்கைகளை அரசாங்க அதிகாரிகள் (இவர்கள் மத்திய அரசாங்க அதிகாரிகளாக இருக்கலாம்; அன்றி இராச்சிய அரசாங்க அதிகாரிகளாக இருக்கலாம்.) பரிசோதனை செய்வதற்கு ஏற்றவகையிலும் இச் சட்ட திட்டங்கள் அமைந்துள்ளன. ஒரு தனிப்பட்ட வாடிக்கைக்காரருக்கு ஒரு குறிப்பிட்ட தொகைக்குமேல் அமெரிக்க பாங்குகள் கடன் தர முடியாது. இதுவும் சட்டத்தாலேயே ஒழுங்கு செய்யப்பட்டிருக்கிறது. அமெரிக்கப் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புகள் அதிகாரிகளால் கட்டுப்பாடு செய்யப்படுவதைப் போல, இங்கிலாந்துப் பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புகளை அங்குள்ள அதிகாரிகள் ஒழுங்கு செய்கின்றனர். விதி முறைகளைப் பொறுத்தவரையில் அமெரிக்க பாங்கு முறையும், இங்கிலாந்து பாங்கு முறையும், இவ்வொன்றில் மட்டும் ஓரளவுக்கு ஒத்திருக்கின்றன. இது நீங்கலாக உள்ள ஏனைய விதி முறைகளை இங்கிலாந்து பாங்கு முறையில் காணமுடியாது. கிளைப்பாங்கு முறையின் அடிப்படையில் இங்கிலாந்துப் பாங்கு அமைப்பு உருவாகியிருப்பதால், அமெரிக்காவிலுள்ளது போல விரிவான விதி முறைகள் இங்கிலாந்தில் தேவையற்றவையாகும். அமெரிக்காவில் தனி பாங்கு முறை நிலவுவதால், இம்மாதிரியான விதி முறைகளும் சட்ட திட்டங்களும் ஓரளவுக்கு அவசியமாகின்றன. அமெரிக்கப் பாங்குகளின் நடவடிக்கைகள் யாவும் பெரும்பாலும் ஐக்கிய ரிசர்வ் முறையின் மூலமே கட்டுப்படுத்தப்படுகின்றன. தேசீய பாங்குகள் யாவும் ஐக்கிய ரிசர்வ் முறையில் கட்டாயம் அங்கம் வகிக்க வேண்டும். இராச்சியப் பாங்குகள் தாம் விரும்பினால் ஐக்கிய ரிசர்வ் முறையில் அங்கம் வகிக்கலாம்; கட்டாயம் ஏதுமில்லை. இருப்பினும் பெரும்பாலான இராச்சியப் பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் முறையில் அங்கம் வகிக்கின்றன. 1957ஆம் ஆண்டு மொத்தம் 6,393 பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் முறையில் அங்கம் வகித்தன. அமெரிக்க பாங்குகளின் மொத்த டெபாசிட்டுகளில் 85% ஐக்கிய ரிசர்வ் முறையில் அங்கம் வகிக்கும் பாங்குகளைச் சேர்ந்ததாகும். ஐக்கிய ரிசர்வ் முறையில் அங்கம் பெறாத இராச்சிய பாங்குகளின் நடவடிக்கைகள் அந்தந்த இராச்சியங்களின் சட்ட திட்டங்கட்குக் கட்டுப்பட்டவையாகும். எனவே நாட்டிலுள்ள பணத்தின் அளிப்பை (supply) ஐக்கிய ரிசர்வ் முறையால் சிறந்த முறையில் கட்டுப்படுத்த முடிகிறது. பணத்தின் அளிப்பைக் கட்டுப்படுத்தும் நோக்கத்துடன் ஐக்கிய ரிசர்வ் முறை பல வழிகளைக் கையாளுகிறது. ரொக்க விகிதங்களை நிர்ணயம் செய்வது ஒரு முறையாகும். கடைநிலைக் கடன் ஈவோன் என்ற முறையில் ஐக்கிய

ரிசர்வ் முறை ஈடுபடும் நடவடிக்கைகளும் பண அளிப்பைக் கட்டுப் படுத்துகின்றன. ஐக்கிய ரிசர்வ் முறை வெளி மார்க்கெட் நட வடிக்கைகளிலும் ஈடுபடுகின்றது. நாம் இங்குக் குறித்துள்ள முறைகள் யாவும் பொதுவான கடன் அளவுக் கட்டுப்பாடுக ளாகும் (quantitative methods of credit control). இவையன்றி, குறிப்பிட்ட துறையிலோ, குறிப்பிட்ட உபயோகத்திற்கோ, பய னுறும் கடன்களைக் கட்டுப்படுத்தும் அதிகாரமும் ஐக்கிய ரிசர்வ் முறை பெற்றிருக்கிறது. இவை யாவும் கடன் தன்மைக் கட்டுப் பாடுகளாகும் (selective or qualitative methods of credit control). கடன் தன்மைக் கட்டுப்பாடுகள் குறித்து ஏற்கெனவே 9ஆம் அத்தியாயத்தில் சுருக்கமாக விளக்கம் தந்துள்ளோம். எனவே இந்த அத்தியாயத்தில் எஞ்சிய பகுதியில் அமெரிக்காவில் கையாளப்படும் கடன் அளவுக் கட்டுப்பாடுகள் குறித்த விளக்கமே தரப்படும்.

ஐக்கிய ரிசர்வ் முறை அமெரிக்காவில் ரொக்கத்திற்கு மூலா தாரமாகத் திகழ்கின்றது. ரொக்கத்தை ஒழுங்கு செய்யும் அதிகாரம் ஐக்கிய ரிசர்வ் முறைக்கு வழங்கப்பட்டிருப்பதால், பாங்குகளின் நடவடிக்கைகளைச் சீரிய முறையில் ஐக்கிய ரிசர்வ் முறையால் கட்டுப்படுத்த முடிகிறது. நாட்டில் புழக்கத்திலுள்ள மொத்தச் செலாவணியில் ஐக்கிய ரிசர்வ் முறை வெளியிடும் நோட்டுகள் எட்டில், ஏழுபங்காகத் திகழ்கின்றன. எஞ்சியவை காசுகளும் சிறிய நோட்டுகளுமேயாகும். இவற்றை மத்திய அரசாங்கம் வெளியிடுகின்றது. இங்கிலாந்தில் இராச்சிய நாணயச் சாலை, காசுகளை வெளியிடும் முறையை இஃது ஒக்கும். இங்கி லாந்திலுள்ள பாங்குகள் யாவும் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கில் டெபாசிட்டுகளை இருப்பாக வைத்திருப்பதுபோல, அமெரிக்காவில் அங்க பாங்குகள் யாவும் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் இருப்புகள் வைத்திருக்கின்றன. இங்கிலாந்துத் தலைமைப் பாங்கிலுள்ள தங்க ளுடைய டெபாசிட்டுகளைத் தாங்கள் விரும்பும் வண்ணம் காசு களாகவோ, நோட்டுகளாகவோ பாங்குகளால் மாற்ற முடிவது போல, ஐக்கிய ரிசர்வ் பாங்குகளில் இருப்புகள் வைத்திருக்கும் அங்க பாங்குகளும் தங்களுடைய இருப்புகளைக் காசுகளாகவோ, நோட்டுகளாகவோ மாற்ற முடியும். மைய பாங்குகளிலுள்ள இருப்பு களையொட்டி அமெரிக்க முறைக்கும் இங்கிலாந்து முறைக்கும் இடையே சில வேறுபாடுகள் உள்ளன. தங்களிடமுள்ள கல்லாப் (till) பணமும், இங்கிலாந்துத் தலைமை பாங்கில் உள்ள தங்க ளுடைய டெபாசிட்டுகளும், இங்கிலாந்திலுள்ள பாங்குகளின் ரொக்கம் ஆகும். இங்கிலாந்துப் பாங்கு முறைக்கு ஆதாரமாக (அதாவது மைய பாங்கின் ஒழுங்கு முறைகட்குக் கட்டுப்பட்

டவை) இவ்விரண்டு விதமான ரொக்க இனங்களும் அமைந்துள்ளன. அமெரிக்காவிலுள்ள அங்க பாங்குகளும் (Member Banks) தங்களிடம் கல்லாப் பணம் வைத்துள்ளன; ஐக்கிய ரிசர்வ் முறையில் இருப்புகளும் வைத்துள்ளன. ஆனால், அமெரிக்கப் பாங்கு முறைக்கு ஆதாரமாக (அதாவது மைய பாங்கின் ஒழுங்கு முறைகட்குக் கட்டுப்பட்டவை) இவ்விரண்டு விதமான ரொக்க இனங்களும் அமைந்திருக்கவில்லை. ஐக்கிய ரிசர்வ் முறையில் அங்க பாங்குகள் வைத்திருக்கும் ரொக்க இருப்புகளே அமெரிக்க பாங்கு முறைக்கு ஆதாரமாக (அதாவது மைய பாங்கின் ஒழுங்கு முறைகட்குக் கட்டுப்பட்டு) அமைந்துள்ளன. (ஐக்கிய ரிசர்வ் முறையில் அங்கம் பெருத பாங்குகளைப் பொறுத்த வரையில் இதுவும் ஓரளவுக்கே உண்மையாகும்.) ஐக்கிய ரிசர்வ் முறையில் அங்கம் பெறும் பாங்குகள் யாவும் தங்களுடைய டெபாசிட்டுகளில் ஒரு குறிப்பிட்ட பகுதியை ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் இருப்பாக வைத்திருக்கவேண்டும். இதைச் சட்டம் வலியுறுத்துகிறது. கவர்னர்களின் போர்டு இந்த ரொக்க விகிதத்தை நிர்ணயிக்கிறது. 1935ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட சட்டத்திற்கு உட்பட்டுத் தாம் விரும்பும் வண்ணம் ரொக்க விகிதங்களைக் கவர்னர்களின் குழு மாற்றி அமைக்கமுடியும். டைம் டெபாசிட்டுகட்கு ஈடாக எல்லா அங்க பாங்குகளும் ஐந்து சதவீத ரொக்க விகிதம் (இது 1959-ல் நிலவிய விகிதமாகும்) வைத்திருக்கவேண்டும். நடப்பு டெபாசிட்டுகட்கு ஈடாக அங்கப் பாங்குகள் வைத்திருக்க வேண்டிய ரொக்க விகிதங்கள் மூன்று வகையாக அமைந்துள்ளன. பாங்குகள் எந்தெந்தப் பிரதேசங்களில் நிறுவப்பட்டிருக்கின்றனவோ, அந்தந்தப் பிரதேசங்களின் தன்மைக்கு ஏற்ப அங்கப் பாங்குகள் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன அவை வருமாறு: மத்திய ரிசர்வ் நகரங்களிலுள்ள பாங்குகள் (இவை நியூயார்க்கிலும் சிக்காகோவிலும் உள்ளவையாகும்), ரிசர்வ் நகரிலுள்ள பாங்குகள் (Reserve City Banks), மற்றும் நாட்டுப்புற பாங்குகள் (Country Banks)[1] இந்த மூன்று வகையான பாங்குகட்கும் மூன்று வகையான ரொக்க விகிதங்களை அதிகாரிகள் நிர்ணயித்துள்ளனர். (1959ஆம் ஆண்டு அவை 18%, 16½%, மற்றும் 11% ஆகும்.) ஐக்கிய ரிசர்வ் முறையில் அங்கம் பெருத

[1] ஐக்கிய ரிசர்வ் துறை தோன்றும் முன்பு பாங்குகட்கிடையே நிலவிய தொடர்புகளை யொட்டியே ரொக்க விகிதங்களை அதிகாரிகள் இவ்வாறு மூன்று வகையினவாகப் பாகுபாடு செய்துள்ளனர். ரிசர்வ் நகரிலுள்ள பாங்குகள நாட்டுப்புற பாங்குகட்குப் பாங்கர்களாகத் திகழ்ந்தன. அவ்வாறே, மத்திய ரிசர்வ் நகரிலுள்ள பாங்குகள் ரிசர்வ் நகரிலுள்ள பாங்குகட்குப் பாங்கர்களாகத் திகழ்ந்தன இவ்வாறு ரொக்க விகிதங்களை மூவகையாகப் பாகுபாடு செய்திருப்பது இயற்கைக்கு மாறானதாகவே எமக்குத் தோன்றுகின்றது. 1959-ல் இந்த முறையை மாற்றி அமைக்கும் நோக்கத்துடன் சில தீர்மானங்கள் காங்கிரஸில் கொண்டு வரப்பட்டுள்ளன. ஐக்கிய ரிசர்வ் அதிகாரிகள் இத் தீர்மானங்கட்கு ஆதரவு கொடுப்பதாக நாம் அறிய வருகிறோம்.

இராச்சிய பாங்குகளின் ரொக்க விகிதங்களை அந்தந்த இராச்சியங்களின் சட்டங்கள் ஒழுங்கு செய்கின்றன. (இவை பொதுவாகப் பாங்குகட்கு உகந்த முறையிலேயே அமைந்துள்ளன). இந்த ரொக்க விகிதங்களைப் பொறுத்த வரையில் ஐக்கிய ரிசர்வ் முறைக்கு யாதொரு விதமான அதிகாரமும் கிடையாது. இவ்வாறு அமெரிக்காவிலுள்ள பாங்குகள் யாவும் ஒரு திட்ட வட்டமான விகிதத்தை ரொக்க இருப்புகளாக வைத்திருக்கவேண்டியுள்ளது. எந்த ஒரு நிறுவனத்திற்குப் பாங்குகளின் இருப்புகளைக் குறைக்கவும் அதிகரிக்கவும் அதிகாரங்கள் வழங்கப்பட்டிருக்கின்றனவோ, அந் நிறுவனத்தால் நாட்டிலுள்ள பாங்குச் செலாவணிகளின் உற்பத்தியைக் கட்டுப்படுத்த முடியும். இந்த உண்மையை நாம் ஏற்கெனவே அறிவோம். அமெரிக்காவில் இம் மாதிரியான அதிகாரங்கள் பெற்றிருக்கும் நிறுவனம் ஐக்கிய ரிசர்வ் முறையே யாகும். தங்களிடம் பாங்குகள் வைத்திருக்கும் இருப்புகளைக் குறைப்பதற்கும் அதிகரிப்பதற்கும் ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் அதிகாரம் பெற்றுள்ளன. வெளி மார்க்கெட்டில் ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் பத்திரங்களை விலைக்கு வாங்குவதன்மூலம் அவை தங்களிடமுள்ள பாங்குகளின் இருப்புகளை அதிகரிக்க முடியும்; பத்திரங்களை விற்பதன்மூலம் தங்களிடமுள்ள பாங்குகளின் இருப்புகளை ஐக்கிய ரிசர்வ் பாங்குகளால் குறைக்கமுடியும்.[1]

ஐக்கிய ரிசர்வ் முறை நிர்ணயித்துள்ள ரொக்க விகிதங்கட்கு மிகாமல் இருப்புகள் வைத்திருக்கும் பழக்கத்தைப் பாங்குகள் அனுசரித்து வந்தால் ரொக்க அளவுகளை ஐக்கிய ரிசர்வ் பாங்குகளால் சிறந்த முறையில் ஒழுங்குபடுத்த முடியும். தங்களுக்குத் தேவைப்படும் மிகுதியான ரொக்கத்தை அவ்வப்போது மைய பாங்கிடமிருந்து தாங்கள் பெற்றுக்கொள்ள முடியும் என்று பாங்குகள் உறுதியாக நம்பினால்,[2] அவை தங்களிடம் மிகுதியாக ரொக்கம் வைத்திருக்க மாட்டா; குறிப்பிட்ட அளவு ரொக்கத்தையே அவை இருப்பாக வைத்திருக்கும். சில சமயம் வாய்ப்பான சூழ்நிலை உருவாகிப் பாங்குகளின் ரொக்கம் இருப்புகள் பெருமளவு அதிகமாகி விட நேரலாம். (இம் மாதிரியானதொரு சூழ்நிலை 1930-39-க்கு இடைப்பட்ட காலத்தில் அமெரிக்காவில் உருவாகியி

[1] 'பத்திரங்கள், என்ற சொல்லை ஈண்டு நாம் பல பொருள்களையும் உணர்த்தக் கூடிய ஒரு சொல்லாகப் பயன்படுத்தியுள்ளோம். நாம் 'பத்திரங்கள்' என்று குறித்து பாங்கர்களின் ஏற்புகள், அமெரிக்க கருவூல உண்டியல்கள், அரசாங்கப் பத்திரங்கள் ஆகியவற்றையே உணர்த்தும் ஒரு சொல் என்று எண்ணி விடலாகாது. தங்க இறக்குமதியாளருக்கு அமெரிக்க கருவூலம் அளித்துள்ள தங்க சர்டிபிகேட்டுக்களையும் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடமிருந்து தாம் கடன் வாங்குவதற்குப் பாங்குகள் பயன்படுத்தி வருகின்ற பாங்குகளின் ஐ. ஓ. யூ. புரோநோட்டுக்களையும் (I. O. Us.) 'பத்திரங்கள் என்ற சொல் குறிப்பதாகக் கருத வேண்டும்.

[2] ஐந்தாம் அத்தியாயத்தில் நான்காவது உட்பிரிவை உற்று நோக்கவும்.

ருந்தது.) அவ் வமயம் ரொக்க விகிதங்களை உயர்த்துவதன் மூலம் பாங்குகளின் இருப்புகளை ஐக்கிய ரிசர்வ் முறையால் குறைக்க முடியும். பாங்குகளின் இருப்புகள் ஓரளவுக்கே உயர்ந்திருந்தால், ஐக்கிய ரிசர்வ் முறை ரொக்கவிகிதத்தை அதிகரிக்கவேண்டிய அவசியமில்லை. வெளி மார்க்கெட்டில் பத்திரங்களை விற்பதன் மூலம் ஐக்கிய ரிசர்வ் முறையால் பாங்குகளின் இருப்புகளைக் குறைக்கமுடியும்.

பாங்குகளின் நடவடிக்கைகளைச் சிறந்த முறையில் தான் கட்டுப்படுத்த எண்ணினுல் பாங்குகளின் இருப்புகள் மிகுந்து விடாமல் ஐக்கிய ரிசர்வ் முறை கண்காணித்து வரவேண்டியது அவசியமாகும். பாங்குகளின் ரொக்க விகிதங்களைக் கண்காணிப்பதோடு பண நெருக்கடி காலங்களில் பாங்குமுறை சீர்குலைந்து விடாமல் காக்கவேண்டியதும் ஐக்கிய ரிசர்வ் முறையின் தலையாய பணியாகும். எனவே ஐக்கிய ரிசர்வ் முறை கடைநிலைக் கடன் ஈவோனுகத் திகழ வேண்டியது அவசியமாகும். அதாவது தேவைப்படும்போது (நெருக்கடிக் காலங்களில்) அங்க பாங்கு, ஐக்கிய ரிசர்வ் பாங்கிடம் ரொக்கத்தைக் கடனுகப் பெற முடியும். தன்னிடமுள்ள பத்திரங்களை ஐக்கிய ரிசர்வ் முறையில் மறுகழிவு (rediscounting) செய்வதன்மூலம் தனக்குத் தேவைப்படும் ரொக்கத்தை அங்க பாங்கால் பெற முடியும் அல்லது தன்னுடைய ஐ.ஓ.யு. புரோநோட்டுகளை (I.O.U.) ஐக்கிய ரிசர்வ் பாங்கிடம் கொடுத்து, அங்க பாங்கு ரொக்கத்தைக் கடனுகப் பெற முடியும். பெரும்பாலும் இந்த இரண்டாவது முறையின் அடிப்படையிலே தற்சமயம் அங்க பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்கிடமிருந்து கடன் பெறுகின்றன. இவ்வாறு கடன் பெறும்பொழுது தங்களிடமுள்ள அரசாங்கப் பத்திரங்களை அங்க பாங்குகள் ஈடாக வைக்கின்றன. இக் கடன்களை ஐக்கிய ரிசர்வ் பாங்கானது தான் பிரசுரிக்கும் கழிவு வீதத்தில் (discount rate) ஏற்பாடு செய்கிறது.

ஐக்கிய ரிசர்வ் பாங்கு அங்க பாங்குகட்குக் கழிவு வீதத்தில் கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதைப் போலவே, இங்கிலாந்துத் தலைமை பாங்கும் வாணிக பாங்குகட்குக் கழிவு வீதத்தில் கடன் வசதிகளை ஏற்பாடு செய்கின்றது எனினும் இந்த இரண்டு முறைகட்கும் இடையே பெருமளவில் வேறுபாடுகள் உள்ளன. இங்கிலாந்துத் தலைமை பாங்கு, வாணிக பாங்குகட்கு மறைமுகமாகவே கடன் வசதிகளை ஏற்பாடு செய்துவருகிறது. பண நெருக்கடிக் காலங்களில் வாணிக பாங்குகள் தாம் உண்டியல் கழிவகங்கட்குக் கொடுத்துள்ள நாள் நிலுவைக் கடன்களைத் திரும்பப் பெறமுயலும். உண்டியல் கழிவகங்கள் அவ்வமயம் இங்கிலாந்துத் தலைமை

பாங்கை உதவிகோரி அணுகும். இவ்வாறு மறைமுகமாகவே வாணிக பாங்குகள் தங்கட்குத் தேவைப்படும் ரொக்கத்தை மையப் பாங்கிடமிருந்து பெறுகின்றன. ஆனால், அமெரிக்க பாங்குகள் தங்கட்குத் தேவைப்படும் ரொக்கத்தை ஐக்கிய ரிசர்வ் முறையிடமிருந்து நேரடியாகவே பெறுகின்றன. அமெரிக்க நாடு இங்கிலாந்தைவிடப் பரந்தது; அமெரிக்கப் பாங்குகள் யாவும் பொதுவாகத் தனி பாங்குகளே. எனவே, பாங்குகள் மைய பாங்கிடமிருந்து நேரடியாகக் கடன் வசதிகளைப் பெறுவதற்கு ஏற்ற வகையில் மைய பாங்கின் அலுவலகங்களை நாடு முழுவதும் நிறுவ வேண்டியது அவசியமாகும். உண்மையில் அமெரிக்காவில் ஐக்கிய ரிசர்வ் முறை பல ஐக்கிய ரிசர்வ் பாங்குகளையும் கிளைகளையும் நிறுவியுள்ளது. மைய பாங்கின் முப்பத்தாறு அலுவலகங்கள் நாடு முழுவதும் பரந்து கிடக்கின்றன. இங்கிலாந்தில் இவ்வாறு மைய பாங்கானது அலுவலகங்கள் பெற்றுத் திகழ வேண்டியது அவசியமில்லை. பாங்குகட்கு மறைமுகமாகவே கடன் வசதிகள் அளிக்கப்படுவதால், ஓர் அலுவலகமே போதுமானதாகும். உண்மையில் இங்கிலாந்துத் தலைமைபாங்கு வாணிகப் பாங்குகட்குக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதற்குத் தன்னுடைய அலுவலகங்களில் ஒன்றினையே பயன்படுத்துகின்றது. அமெரிக்க மைய பாங்கு முறைக்கும் இங்கிலாந்தின் மைய பாங்கு முறைக்கும் இடையே மற்றும் ஒரு வேறுபாடு உள்ளது. அமெரிக்க மைய பாங்குக்கும் வாணிக பாங்குகட்கும் நேரடியான தொடர்பு இருப்பதையும், இங்கிலாந்தின் மைய பாங்குக்கும் வாணிகப் பாங்குகட்கும் மறைமுகமான தொடர்பு இருப்பதையும் யொட்டி இந்த வேறுபாடு அமைந்துள்ளது. சாதாரணமான காலங்களில் தாம் நினைத்தபோது ஐக்கிய ரிசர்வ் பாங்கை அணுகித் தடையின்றி, அங்க பாங்குகளால் கடன் வசதிகள் பெறமுடியாது. ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடமிருந்து கடன்களைப் பெறுவதற்கு அங்க பாங்குகட்கு உரிமைகள் (rights) ஏதும் வழங்கப்படவில்லை; ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடமிருந்து கடன்களை வாங்கக்கூடிய சலுகைகளையே (privilege) அங்க பாங்குகள் பெற்றிருக்கின்றன. சில நிபந்தனைகளை நிறைவேற்றினால் தான் அங்க பாங்குகள் இச் சலுகைகளைப் பயன் படுத்த முடியும். பொதுவாக ஓர் அங்க பாங்கு தொடர்ந்து பெருமளவில் கடன்களைத் தன்னிடம் வாங்கிக் கொண்டிருப்பதை ஐக்கிய ரிசர்வ் பாங்கு விரும்புவதில்லை.[1] தன்னை அணுகிக் கடன் பெற விரும்பும் பாங்கு ஒன்றின் நடவடிக்கைகளைப்

[1] தொடர்ந்து பெருந்தொகைக்குக் கடன்களைப் பெறுவதை ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் மட்டும் வெறுப்பதாக எண்ணலாகாது. சில அங்க பாங்குகளும் இதை வெறுக்கின்றன. ஒரு பாங்கு பிறிதொரு பாங்கைச சார்ந்திருப்பது அப் பாங்கின் அவல நிலையையே வெளிப்படுத்தும் என்று இந்த அங்க பாங்குகள் கருதி வருகின்றன. எனவே, ஐக்கிய ரிசர்வ் பாங்குகளை இவை அணுக விரும்புவதில்லை.

பற்றி விசாரிக்கும் உரிமை ஐக்கிய ரிசர்வ் பாங்குக்கு அளிக்கப் பட்டுள்ளது. அங்க பாங்குகள் தொடர்ந்து பெருமளவில் தன்னிடமிருந்து கடன்களை வாங்கிக்கொண்டே இருக்கமுயலும் பட்சத்தில் இவ்வுரிமையை ஐக்கிய ரிசர்வ் பாங்கு பெரிதும் பிரயோகிக்கின்றது. இது காறும் நாம் கூறியவற்றினின்றும் இரு உண்மைகளை உணரலாம். கடன்கோரித் தம்மை அணுகிவரும் பாங்குகளின் நடவடிக்கைகளை ஐக்கிய ரிசர்வ் பாங்குகள் அறிய விரும்புவதால், ஐக்கிய ரிசர்வ் பாங்குகட்கும் அங்க பாங்குகட்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருக்கவேண்டும். எனவே, நெருங்கிய தொடர்பு ஏற்படும் வகையில் ஐக்கிய ரிசர்வ் முறை பரவலாகப் பல கிளைகளுடன் அமைந்துள்ளது. இஃது ஓர் உண்மையாகும். இரண்டாவது உண்மை வருமாறு : ஒரு அங்க பாங்கு ஐக்கிய ரிசர்வ் பாங்கிடம் பெருமளவில் கடன் வாங்கிக் கொண்டிருக்கும்போது, அப் பாங்கின் நடவடிக்கைகளை ஐக்கிய ரிசர்வ் பாங்கு மிக அக்கறையுடன் விசாரணை செய்ய ஆரம்பிக் கிறது. பாங்கின் நடவடிக்கைகள் ஐக்கிய ரிசர்வ் பாங்கிற்குச் சீரானவையாகத் தோன்றுவிடில், ஐக்கிய ரிசர்வ் பாங்கு அப் பாங்கைக் கண்டிக்கும். அப்பாங்கி தன் நடவடிக்கைகளைச் சீரிய முறையில் ஒழுங்குபடுத்துமாறு ஐக்கிய ரிசர்வ் பாங்கு அதை வலி யுறுத்தும். இவ்வாறு பாங்குகளின் நடவடிக்கைகளை ஐக்கிய ரிசர்வ் பாங்கால் ஒழுங்குபடுத்தமுடிகிறது. இந்த அதிகாரம் மிக வும் இன்றியமையாத ஒன்றாகும். இங்கிலாந்துத் தலைமைப் பாங் குக்கு இவ்வாறான அதிகாரங்கள் கிடையா. நெருக்கடி காலங்களில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு உண்டியல் கழிவகங்கட்குத்தான் கடன் வசதிகளை ஏற்பாடு செய்து வருகின்றது எனவே, வாணி கப் பாங்குகளின் நடவடிக்கைகளை விசாரணை செய்யும் வாய்ப்பு இங்கிலாந்துத் தலைமை பாங்குக்கு இல்லை ; வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளே நெருக்கடி நிலைக்குக் காரணம் என்று உண்டி யல் கழிவகங்களிடம் இங்கிலாந்துத் தலைமை பாங்கு சுட்டிக்காட் டிய போதிலும் அதனால் பயன் ஏதும் விளையப் போவதில்லை.

தங்களுடைய கழிவு வீதங்களைத் (discount rates) தனித் தனியே நிர்ணயிக்கும் உரிமையைப் பன்னிரண்டு ஐக்கிய ரிசர்வ் பாங்குகளும் பெற்றிருக்கின்றன. பன்னிரண்டு ஐக்கிய ரிசர்வ் பாங்குகளும் தனித்தனியே நிர்ணயிக்கும் கழிவு வீதங்களைப் பரிசீலித்து, தான் விரும்பும் மாற்றங்களைச் செய்யும் அதிகாரம் வாஷிங்டனிலுள்ள கவர்னர்களின் குழுவுக்கு வழங்கப்பட்டிருக் கிறது. இருப்பினும் பன்னிரண்டு ஐக்கிய ரிசர்வ் பாங்குகளும் தத்தம் கருத்தைப் பெரிதும் வலியுறுத்தினால், அவற்றின் விருப்பப் படியே கவர்னர்களின் குழு கழிவு வீதங்களை நிர்ணயிக்கிறது.

இவ்வாறு, கழிவு வீதங்களை ஒழுங்குபடுத்தும் அதிகாரத்தை மட்டும் கவர்னர்களின் போர்டு பெற்றிருக்கின்றது ; கழிவு வீதங்களை நிர்ணயிக்கும் அதிகாரங்களைப் பெரும்பாலும் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளே பெற்றிருக்கின்றன. எனவே, ஐக்கிய ரிசர்வ் பாங்குகட்கிடையே பலதரப்பட்ட கருத்துகள் நிலவுங்கால், கழிவு வீதங்கள் ஒரே அளவில் மாற்றமுறுவதை நாம் எதிர் பார்க்க முடியாது. கருவூல உண்டியல் வீதத்தைவிட மைய பாங்கின் கழிவு வீதம் அதிகமாகவே விளங்குகிறது. இவ் வகையில் கழிவு வீதத்தைத் தண்டனை வீதம் (penal rate) என்று நாம் கூறலாம். ஆனால் மார்க்கெட்டில் நிலவும் கடன் வீதங்களைவிடக் கழிவு வீதம் குறைவாகவே இருக்கிறது. எனவே சாதாரண காலங்களில் அங்க பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்கை உதவிகோரி அணுகுவதற்குக் கழிவு வீதம் இடையூறாக அமைந்திருக்கிறது என்று நாம் கருத முடியாது. ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் உதவிபெற விரும்பும் அங்க பாங்குகள் தங்களுடைய நடவடிக்கைகளை ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் எடுத்துரைக்க வேண்டியது அவசியம் என்பதை நாம் ஏற்கனவே கண்டோம். எனவே ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் சாதாரணமான காலங்களில் பாங்குகள் கடன் பெறுவதற்கு இஃது ஒன்று தான் தடையாக அமைந்துள்ளது.

அங்க பாங்குகட்குக் கடன் வசதிகளை அவ்வப்போது ஏற்பாடு செய்யும் அதிகாரம் ஐக்கிய ரிசர்வ் பாங்குகட்கும் வழங்கப் பட்டிருக்கின்றது. ஆனால் வெளி மார்க்கெட் நடவடிக்கைகளைப் பொறுத்த வரையில் ஐக்கிய ரிசர்வ் பாங்குகட்கு அதிகாரம் ஏதும் வழங்கப் பெறவில்லை. வாஷிங்டனிலுள்ள ஐக்கிய ரிசர்வ் முறையின் அதிகாரிகளே வெளி மார்க்கெட் நடவடிக்கைகட்கான ஏற்பாடுகளைச் செய்கின்றனர். இதற்கென்று 'ஐக்கிய வெளி மார்க்கெட் குழு' (Federal open market Committee) ஒன்று நிறுவப்பட்டுள்து. வெளி மார்க்கெட் நடவடிக்கைகளை ஐக்கிய ரிசர்வ் முறையில் 'பத்திரத் துறை' (securities department) செயலாற்றி வருகின்றது. நியூயார்க் நகரில் நிறுவப்பட்டிருக்கும் ஐக்கிய ரிசர்வ் பாங்கின் 'வர்த்தகப் பகுதி'யே (trading desk) இப் 'பத்திரத் துறை'யாகும். சாதாரண காலங்களில் கருவூல உண்டியல்களிலேயே ஐக்கிய ரிசர்வ் முறை வெளி மார்க்கெட் நடவடிக்கைகளை நடத்துகிறது. நிலைமைக்கு ஏற்றவாறு கருவூல உண்டியல்களை அது வாங்குகின்றது அல்லது விற்கின்றது. சில சமயங்களில் மட்டும் 'பாங்கர்களின் ஏற்புகளில்' (banker's acceptances) வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் நடத்தப்படுகின்றன. சில விசேஷமான காலங்களிலேயே நெடுங்கால அரசாங்கப் பத்திரங்களில் வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் நடத்தப்படு

கின்றன. அண்மைக் காலத்திலிருந்து நியூயார்க்கிலுள்ள ஐக்கிய ரிசர்வ் பாங்கின் 'வர்த்தகப் பகுதி' (trading desk) அரசாங்கப் பத்திரங்களில் பேரங்கள் நடத்தும் பண மார்க்கெட் வர்த்தகர்கட்குப் பதினைந்து நாட்களுக்கான கடன் வசதிகளை ஏற்பாடு செய்து வருகின்றது. இக் கடன் வசதிகள் கீழ்க்கண்ட முறையில் அமைந்துள்ளன. தங்கட்குப் பணம் தேவைப்படும்போது தங்களிடமுள்ள அரசாங்கப் பத்திரங்களை ஐக்கிய ரிசர்வ் பாங்கிடம் விற்று வர்த்தகர்கள் பணம் பெறலாம். ஆனால் எதிர்காலத்தில் ஒரு குறிப்பிட்ட தேதியில் அதே பத்திரங்களை ஐக்கிய ரிசர்வ் பாங்கிடமிருந்து வர்த்தகர்கள் திரும்பவும் விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டும். தாங்கள் விரும்பும் போதெல்லாம் வர்த்தகர்கள் இவ்வாறான வசதிகளைப் பெற முடியாது. ஐக்கிய ரிசர்வ் பாங்கு விரும்பினால் மட்டுமே வர்த்தகர்கள் இக் கடன் வசதிகளைப் பெற முடியும். வர்த்தகர்களிடமிருந்து ஒரு குறிப்பிட்ட விலையில் ஐக்கிய ரிசர்வ் பாங்கு பத்திரங்களை வாங்குகின்றது. எதிர்காலத்தில் அவற்றை வர்த்தகர்களிடமே ஒரு குறிப்பிட்ட விலையில் ஐக்கிய ரிசர்வ் பாங்கு விற்றுவிடுகின்றது. இந்த இரண்டு விலைகட்குமுள்ள வேறுபாடுதான் வர்த்தகர்கட்குக் கொடுத்த கடன் தொகைக்கு ஐக்கிய ரிசர்வ் பாங்கு பெறும் வட்டியாகத் திகழ்கின்றது. பொதுவாகத் தன்னுடைய கழிவு வீதத்திலேயே (நியூயார்க்கிலுள்ள கழிவு வீதத்திலேயே) ஐக்கிய ரிசர்வ் பாங்கு வர்த்தகர்களிடமிருந்து பத்திரங்களை விலைக்கு வாங்கவும் விற்கவும் செய்கின்றது.

அமெரிக்காவில் ஐக்கிய ரிசர்வ் முறை வெளி மார்க்கெட் நடவடிக்கைளில் ஈடுபடுகின்றது; பிரிட்டனில் இங்கிலாந்துத் தலைமைப் பாங்கு வெளி மார்க்கெட் நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றது. வெளி மார்க்கெட் நடவடிக்கைகளால் இரண்டு நாடுகளிலும் நேரக்கூடிய விளைவுகளில் எந்த விதமான வேறுபாடுகளும் கிடையா. ஐக்கிய ரிசர்வ் முறை பத்திரங்களை வாங்கும்போது அங்க பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புகள் அதிகமாகின்றன. ஐக்கிய ரிசர்வ் முறை பத்திரங்களை விற்கும்போது அங்க பாங்குகளின் ரொக்கக் காப்பு இருப்புகள் குறைகின்றன. ஆனால், இதற்குப் பிறகு பாங்கு அமைப்பில் என்னென்ன மாற்றங்கள் நேருமோ, அவை இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் வெவ்வேறாக அமைந்துள்ளன.

அமெரிக்க பாங்குகளுடைய சொத்துகளின் அமைப்பும் இங்கிலாந்து பாங்குகளுடைய சொத்துகளின் அமைப்பும் வெவ்வேறாக அமைந்திருப்பதே இதற்கான ஒரு காரணமாகும். சில பாங்கு

களிடம் உபரி ரொக்கம் (ஐக்கிய ரிசர்வ் முறை நிர்ணயித்துள்ள ரொக்க விகிதம் பாங்குகளின் கல்லாவிலுள்ள ரொக்கம் ஆகியவற்றிற்கான தேவைகளைவிட அதிகமாக இருக்கும். ரொக்கமே உபரி ரொக்கமாகும்) இருப்பதும் அதே சமயம் வேறு சில பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் கடன்பட்டிருப்பதும் அமெரிக்காவில் சாதாரணமாகக் காணக்கூடிய ஒரு நிலையாகும். பாங்குகள் சிலவற்றிடமுள்ள உபரி ரொக்கத்தின் மதிப்பு ஏனைய பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடமிருந்து கடன் வாங்கியுள்ள தொகையின் மதிப்பைவிட அதிகமாக இருந்தால், மார்க்கெட்டில் நெருக்கடி நிலை ஏதும் நிலவாது. பாங்குகளிடமிருந்து வாடிக்கைக்காரர்கள் கடன் வசதிகளைப் பெறுவதில் சிரமம் ஏதும் இருக்காது. மேலும் அவ் வமயம் ஐக்கிய ரிசர்வ் பாங்கின் கழிவு வீதம் பண மார்க்கெட் வீதங்களைவிடக் குறைவாகவே இருக்கும். இம் மாதிரியான சூழ்நிலையில் நாட்டில் ஒரு பொருளாதார வீக்கம் நிலவுகிறது என்றும், இப்பொருளாதார வீக்கம் கட்டுக்கடங்காமல் போய்விடலாம் என்று ஐக்கிய ரிசர்வ முறை கருதுவதாகவும் வைத்துக் கொள்வோம். உடனடியாகப் பண மார்க்கெட்டில் ஒரு நெருக்கடி நிலையை உருவாக்குவதிலேயே ஐக்கிய ரிசர்வ் முறை முனைந்து செயலாற்றும். இந் நோக்கத்தை நிறைவேற்றும் பொருட்டு ஐக்கிய ரிசர்வ் முறை மார்க்கெட் டில் பத்திரங்களை விற்க முனையும். பத்திரங்களை விற்பனை செய்வதன் மூலம் ரொக்க இருப்புகளைக் குறைக்கமுடியும் என்பதை நாம் அறிவோம். ஐக்கிய ரிசர்வ் முறையின் பத்திர விற்பனை எல்லாப் பாங்குகளையும் பாதிக்கும் பாங்குகளிடமிருந்த உபரி ரொக்கங்கள் குறையும். தங்களுடைய ரொக்க விகிதத்தைக் குறையாமல் பாதுகாக்கும் பொருட்டுச் சில பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் கடன் வாங்க வேண்டியதிருக்கும். ஏற்கெனவே ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடம் கடன் வாங்கிக் கொண்டிருந்த பாங்குகள் இன்னும் அதிகமாகக் கடன் வாங்க நேரிடும். இதன் விளைவாக ஐக்கிய ரிசர்வ் பாங்கு, பாங்குகளின் நடவடிக்கைகள் பற்றி மேலும் ஆராயும். இப் பாங்குகளின் நடவடிக்கைகளைப் பரிசீலனை செய்யும். இவற்றின் நடவடிக்கைகள் வரம்பை மீறியுள்ளன என்று அறிய நேர்ந்தால் ஐக்கிய ரிசர்வ் பாங்கு இவற்றைக் கண்டிக்கும் பாங்குகள் யாவும் பொதுவாகக் கடன் கொடுப்பதில் ஆர்வம் காட்டாமல் இருக்கும். இதன் விளைவாகப் பண மார்க்கெட்டில் நிலவும் வீதங்கள் (கழிவு வீதங்களும் வட்டி வீதங்களும்) உயரும். இம் மாதிரியான விளைவுகள் தொடர்ந்து நீடித்துக் கொண்டே இருக்கும் பட்சத்தில், பாங்குகளிடமுள்ள உபரி ரொக்கம் அருகி விடும். பல பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளை அணுகி உதவி கோர வேண்டி நேரிடும் எனவே, மார்க்கெட் வீதங்கள் மேலும்

உயரும். தன் கட்டுப்பாட்டு நடவடிக்கைகளை ஐக்கிய ரிசர்வ் முறை ஒரு சிறிதும் தளர்த்தாதிருந்தால், எல்லா வகையைச் சேர்ந்த வட்டி வீதங்களும் உயரும். இதையொட்டித் தங்களுடைய நாணயமான வாடிக்கைக்காரர்கட்கு (தொழில், வர்த்தகம் ஆகிய துறைகளில் ஈடுபட்டிருப்போர்) பாங்குகள் கொடுக்கும் கடன் களுக்கான வட்டி வீதங்களும் உயரும், அண்மைக் காலங்களில் அமெரிக்காவில் இம் மாதிரியான சூழ் நிலைகளில் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளின் கழிவு வீதங்கள் உயர்த்தப்படும், முன்பே மார்க் கெட்டில் நேர்ந்துள்ள வட்டி வீத மாற்றங்களைக் குறிக்கும் வகை யிலும், புதிதாக உருவாகியுள்ள நிலைமைக்கு ஏற்றதொரு வகை யிலும், பின் கழிவு வீதங்கள் உயர்த்தப்படுகின்றன.

* தொழிலில் பின்னிறக்கம் (recession) ஏற்படலாம் என்றும் கருதி ஐக்கிய ரிசர்வ் முறை மார்க்கெட்டில் நிலவக்கூடிய நெருக்கடி நிலையை அகற்ற விரும்புகின்றது என்று வைத்துக்கொள்வோம்; இதற்குச் சாதகமாக வாடிக்கைக்காரர்கட்குப் பாங்கு, கடன்கள் எளிதில் கிடைக்கக்கூடிய நிலையை உருவாக்க வேண்டுவது அவசியமாகும். எனவே, அவ் வமயம் ஐக்கிய ரிசர்வ் முறை பத்திரங்களை விலைக்கு வாங்கும். இதன் விளைவாகப் பாங்குகள், ஐக்கிய ரிசர்வ் பாங்குகளிடமிருந்து கடன் வாங்க வேண்டிய அவசியம் ஏதும் இல்லாமல் போய்விடும், பாங்குகளிடம் உபரி ரொக்கம் திரளும்; மார்க்கெட் வீதங்கள் குறையும். தடையின்றி ஆர்வத்துடன் கடன் தருவதற்குப் பாங்குகள் முன் வரும். இவ் வாறான சூழ்நிலைக்கு மேலும் ஆக்கம் தேடும் வகையில் ஐக்கிய ரிசர்வ் முறை கழிவு வீதங்களைக் குறைக்கலாம்.

கட்டுப்பட்டு முறைகளைக் கையாளுவதில் இலண்டனுக்கும் அமெரிக்காவிற்கும் இடையே பல வேறுபாடுகள் உள்ளன. நெடு நாள் தொட்டுப் பாங்கு வீத மாற்றங்கள் இலண்டனில் மிக்க ஆற்றல் வாய்ந்தவையாக விளங்குகின்றன. பாங்குவீத மாற்றத் தால் அதிகாரிகள் எதிர்பார்க்கக்கூடிய விளைவுகள் தடையின்றி நேருவதற்குச் சாதகமான சூழ்நிலையை உருவாக்கும் நோக்கத் துடனேயே இலண்டனில் வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் நடத் தப்படுகின்றன. இலண்டனில் (கட்டுப்பாட்டு நடவடிக்கை களால்) நேரக் கூடிய விளைவுகட்கும், அமெரிக்காவில் நேரக் கூடிய விளைவுகட்கும் இடையே பெரும் வேறுபாடுகள் இருப் பதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. இலண்டனில் வழி வழி யாகப் பாங்கு வீதம் மிகவும் ஆற்றலுடையதாகத் திகழ்ந்து வரு கிறது. (முன்பு இருந்ததைப் போலத் தற்சமயமும் பாங்கு வீதம் இலண்டனிடம் ஆற்றல் மிக்க ஆயுதமாக விளங்குகின்றது என்று

கூற முடியாது.) இது ஒரு காரணமாகும் அமெரிக்க பாங்குகளின் ரொக்க விகிதம் நிலையற்ற ரொக்க விகிதமாகும். இதுவே இரண்டாவது காரணமாகும். இலண்டன் பாங்குகளின் ரொக்க விகிதம் நிலையான விகிதமாகும். இலண்டனில் வாணிக பாங்குகட்கும் மைய பாங்குக்கும் இடையே நேரடியான தொடர்புகள் கிடையா. மைய பாங்குக்கும் வாணிகப் பாங்குகட்கும் இடையே உண்டியல் கழிவகங்கள் நடுநாயகமாக அமைந்துள்ளன. தன்னுடைய கட்டுப்பாட்டு நடவடிக்கைகளின் மூலம் ஐக்கிய ரிசர்வ் முறை அமெரிக்காவில் ரொக்கப் பற்றுக் குறையை ஏற்படுத்த முடியும். இதன் விளைவாகப் பாங்குகட்கு வசதிக் குறைவான ஒரு நிலை ஏற்படும். அவ் வமயம் சில பாங்குகள் ஐக்கிய ரிசர்வ் பாங்குகளை அணுகி, கடன் பெற வேண்டிய நிலையும் ஏற்படலாம்.

பாங்குகளிடம் உபரி ரொக்கம் குவிகின்றன என்று வைத்துக் கொள்வோம். மிகப் பெருமளவில் வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் நடத்தினால்தான் அங்க பாங்குகளைத் தன்னுடைய கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டுவர முடியும் என்று ஐக்கிய ரிசர்வ் முறை கருதுவதாகவும் வைத்துக் கொள்வோம். இது போன்ற சாதாரணமான சூழ்நிலைகளில் ரொக்க விகிதங்களை அதிகரித்து, அங்க பாங்குகளைத் தன்னுடைய கட்டுப்பாட்டின்கீழ் ஐக்கிய ரிசர்வ் முறை கொண்டு வந்திருக்கிறது. ரொக்க விகிதத்தை ஐக்கிய ரிசர்வ் முறை உயர்த்தியதும், பாங்குகளிடமுள்ள உபரி ரொக்கங்கள் மறைந் தொழிகின்றன நிலைமை ஐக்கிய ரிசர்வ் முறையின் கட்டுக்கு அடங்கிவிடும். ஆனால், இம் முறையை அசாதாரணமான காலங்களிலேயே பயன்படுத்துவது நல்லது என்பதை நாம் மறந்துவிடலாகாது. சாதாரண காலங்களில் பாங்குகளிடமிருக்கும் உபரி ரொக்கம் ஓரளவேயாகும். எனவே சாதாரணமான காலங்களில் ஐக்கிய ரிசர்வ் முறை வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் நடத்துவதே போதுமானதாகும்.

நியூயார்க் பண மார்க்கெட் அதிவிரைவில் வளர்ச்சியுற்றுள்ளது, சிறப்பாக ஐக்கிய நிதிகள் மார்க்கெட் சீரிய முறையில் வளர்ந்துள்ளது. இவற்றையொட்டி அமெரிக்கப் பாங்கு முறைக்கும், இங்கிலாந்துப் பாங்கு முறைக்கும் இடையே இருந்து வரும் வேறுபாடுகள் பெரிதும் குறைந்து வருகின்றன எனலாம். ஐக்கிய நிதிகள் மார்க்கெட்டுக்கு நாடு முழுவதிலுமுள்ள பாங்குகளிடமுள்ள உபரி ரொக்கம் வந்து சேருகின்றது. இந்த உபரி ரொக்கம் முழுவதையும் பண மார்க்கெட் வர்த்தகர்கள் பயன்படுத்தி வருவதால், பாங்குகளிடமுள்ள உபரி ரொக்கங்கள் குறைந்துள்ளன. பாங்குகளிடமுள்ள உபரி ரொக்கங்கள் முற்றிலும்

அகன்று விட்டால், ஐக்கிய ரிசர்வ் முறை நடத்தும் வெளி மார்க்கெட் நடவடிக்கைகள் மிக்க ஆற்றல் வாய்ந்தவையாகத் திகழும். அவ்வாருன நிலையில் ஐக்கிய ரிசர்வ் முறை வெளி மார்க்கெட் நடவடிக்கைகளில் ஈடுபட்டு, பத்திரங்களை விற்கும்போது, அங்க பாங்குகள் உதவி நாடி ஐக்கிய ரிசர்வ் பாங்குகளை அணுக வேண்டிய நிலை கட்டாயம் ஏற்படும். உபரி ரொக்கம் அங்க பாங்குகளிடம் இருக்கும் பட்சத்தில் ஐக்கிய ரிசர்வ் முறைப் பத்திரங்களை விற்பனை செய்த போதிலுங்கூட அவை தங்கள் கடன் நடவடிக்கைகளை உடனடியாகக் குறைக்க வேண்டிய அவசியம் ஏதும் நேராது, தங்களுடைய கடன் நடவடிக்கைகளை அங்க பாங்குகள் படிப் படியாகக் குறைத்துக் கொள்வது போதுமானதாக இருக்கும். ஆனால் அங்க பாங்குகளிடம் உபரி ரொக்கம் ஏதும் இல்லாத நிலையில், ஐக்கிய ரிசர்வ் முறை வெளி மார்க்கெட் நடவடிக்கையின் மூலம் பத்திரங்களை விற்பனை செய்தால் தங்களுடைய நடவடிக்கைகளைப் படிப்படியாக மாற்றுவதென்பது பாங்குகட்கு இயலாது. இலண்டன் பாங்குகளைப் போலவே அமெரிக்க பாங்குகளிடம் உபரி ரொக்கம் இல்லாத நிலை உருவாகினும் அமெரிக்கப் பாங்கு முறைக்கும், இங்கிலாந்து பாங்கு முறைக்கும் இடையே ஒரு முக்கிய வேறுபாடு இருக்கும். ஐக்கிய ரிசர்வ் பாங்குகட்கும் அங்க பாங்குகட்கும் இடையே நேரடியான தொடர்புகள் உள்ளன. மேலும் தன்னை அணுகிக் கடன் பெற விழையும் அங்க பாங்குகளின் நடவடிக்கைகளை அக்கறையோடு விசாரித்துப் பாங்குகளை நல்வழிப்படுத்தவும் ஐக்கிய ரிசர்வ் பாங்கு முனைகின்றது. ஆனால், இலண்டனிலுள்ள முறை முற்றிலும் வேறுபட்டதாகும்.

அமெரிக்க மைய பங்கு கடைப்பிடிக்கும் கட்டுப்பாட்டு முறைகட்கும், இங்கிலாந்தின் மைய பாங்கு கடைப்பிடிக்கும் கட்டுப்பாட்டு முறைகட்கும் இடையே வேறுபாடுகள் உள்ளன என்று நாம் கண்டோம். இவற்றையொட்டி மைய பாங்கு முறைபற்றிய கருத்துகளிலும் இரு நாடுகட்கிடையே வேறுபாடுகள் நிலவுகின்றன. ஐக்கிய ரிசர்வ் அதிகாரிகள் வாணிக பாங்குகளின் நீர்மைத் தன்மையை அதிகரிப்பதற்கும் குறைப்பதற்கும் ஏற்ற முறையில் அமெரிக்கப் பாங்கு முறை வளைந்து கொடுக்கின்றது. வாணிகப் பாங்குகள் ஒரு காலம் கடன் வசதிகளை ஏற்பாடு செய்வதில் மிகுந்த ஆர்வம் காட்டுகின்றன; பிறிதொரு காலம் கடன் வசதிகளை ஏற்பாடுசெய்ய முன் வருவதில்லை. இவ்வாருன வாணிக பாங்குகளின் விருப்பும் வெறுப்பும் ஐக்கிய ரிசர்வ் அதிகாரிகளின் நடவடிக்கைகளையொட்டியே அமைகின்றன. தாங்கள் ஏற்பாடு செய்யும் கடன்களுக்குப் பாங்குகள் விதிக்கும் வட்டி வீதம் ஒரு காலத்தில் குறைவாக இருக்கிறது; பிறிதொரு காலத்தில் அதிக

மாக இருக்கிறது. இவ்வாறு வட்டி வீதம் குறைவதும் அதிகரிப்பதும் ஐக்கிய ரிசர்வ் அதிகாரிகளின் நடவடிக்கைகளையொட்டியே அமைகின்றன. பாங்குகளின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்த வேண்டியதே மைய பாங்கின் கடமையாகும் என்றும், பாங்கு முறைக்குப் புறம்பாக அமைந்துள்ள ஏனைய மார்க்கெட்டுகளில் நிகழக்கூடிய நடவடிக்கைகளைப்பற்றி மைய பாங்கு அக்கறை காட்டவேண்டிய அவசியம் ஏதும் இல்லை என்றும், அமெரிக்க அதிகாரிகள் கருதுகின்றனர். அமெரிக்க பாங்குகள் கடைப்பிடிக்கும் முறைகள் பெருமளவில் வேறுபடுகின்றன ; அடைமான மார்க்கெட்டில் அமெரிக்க பாங்குகள் நேரடியாகவும் பெருமளவிலும் பேரங்கள் நடத்துகின்றன. எனவே பாங்குகளின் நடவடிக்கைகளை மட்டிலும் மாற்றி அமைக்கும் நோக்கத்துடன் அதிகாரிகள் நடவடிக்கைகள் எடுத்தபோதிலும், பாங்குமுறை மட்டுமின்றி அமெரிக்கப் பொருளாதார அமைப்பே பாதிக்கப்படுகிறது. பாங்கு முறையில் நேரும் மாற்றங்கட்கு ஏற்ப அமெரிக்கப் பொருளாதார அமைப்பிலும் மாற்றங்கள் நேருகின்றன. இருப்பினும் வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளை மட்டும் ஒழுங்கு செய்வதே மையப் பாங்கின் கடமையாகும் என்று அமெரிக்க அதிகாரிகள் கருதுகின்றனர். அதிகாரிகளின் இக் கருத்தையொட்டியே அமெரிக்காவில் மைய பாங்கு நடத்தும் வெளி மார்க்கெட் நடவடிக்கைகளும் அமைந்துள்ளன. அமெரிக்க மைய பாங்கு குறுங்காலப் பத்திரங்களிலேயே தன் வெளி மார்க்கெட் நடவடிக்கைகளை நடத்துகிறது மேலும் அதிகாரிகளின் மேற்குறித்த கருத்தையொட்டியே அமெரிக்காவில் தேசீயக் கடனும் நிர்வகிக்கப்பட்டு வருகின்றது.[1] அரசாங்கப் பத்திர வெளியீடு, மீட்பு ஆகியவற்றைப் பொறுத்த வரையில் ஐக்கிய ரிசர்வ் முறைக்கு எந்த விதமான பங்கும் கிடையாது. பத்திர வெளியீடு, மீட்பு ஆகிய வேலைகள் அமெரிக்காவில் கருவூலத்தையே சார்ந்தனவாகும். ஐக்கிய ரிசர்வ் முறையையும் கருவூலத்தையும் இணைப்பு ஏதுமின்றித் தனித்தனியே பிரித்து வைத்திருப்பதை அமெரிக்க அதிகாரிகள் பெரிதும் வலியுறுத்துகின்றனர். (இருப்பினும் ஐக்கிய ரிசர்வ் அதிகாரிகளும் கருவூல அதிகாரிகளும் ஒருவருடனொருவர் கலந்து ஆலோசித்துக் கொள்கின்றனர்.) பாங்கு நிலையைக் கண்காணிப்பதிலேயே ஐக்கிய ரிசர்வ் முறை

1 இக் கருத்தையொட்டியே திரு W. W. ரைப்ளர் என்பார் ரேட்கிளிஃப் குழுவினரின் முன் பகர்ந்த சான்றுரை அமைந்துள்ளது. நெதர்லாந்து நாட்டு மைய பாங்கின் தலைமை அதிகாரியாகிய டாக்டர் M. W. ஹோல்டிராப்பும் இதே கருத்தையே குழுவினரின் முன் வலியுறுத்தினர். அன்னாரின் கூற்றுகளை ரேட்கிளிஃப் அறிக்கையில் எந்தெந்தப் பகுதிகளில் காணமுடியும் என்பதைக் கீழே குறித்துள்ளோம். Mr. W. W. Rieffler's view—Radcliffe Report—Minutes of Evidence Qus. 9395—9609 and 9735—9890 Dr. M. W. Holtrop's view—Minutes of Evidence, Qu. 11742—11918

கருத்தைச் செலுத்துகிறது. தேசீயக் கடனை நிர்வகிப்பதிலேயே கருவூல கருத்தைச் செலுத்துகின்றது. கருவூலத்தையும் ஐக்கிய ரிசர்வ் முறையையும் இனியும் தனித்தனியே பிரித்து எவ்வாறு வைத்திருக்க முடியும் என்பது விளங்கவில்லை. பண வீக்க நிலையே நிலவும் தற்கால உலகில் பத்திரங்களைப் பொதுமக்கள் விலைக்கு வாங்க முன்வரவேண்டுமாயின், அதற்கு ஏற்றதொரு சூழ்நிலையை உருவாக்கவேண்டியது அவசியமாகும். எனவே தனது 'பாங்கு முறைக் கொள்கையையும்' 'கடன் கொள்கையையும்' அரசாங்கம் தனித்தனியே தொடர்புகள் ஏதுமின்றிக் கடைப்பிடித்து வருவது முறையானதன்று என்றே தோன்றுகிறது. 1957-58ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட பின்னிறக்கமும் (recession) இக் கருத்தையே வலியுறுத்துகிறது. இன்னொரு உண்மையையும் நாம் அறியவேண்டியது அவசியமாகும். தற்சமயம் பாங்குகளைத் தவிர ஏனைய நிதி நிறுவனங்களும் பெருமளவில் வளர்ச்சியுற்றுள்ளன. இவை யாவும் ஐக்கிய ரிசர்வ் முறையின் நேரடிக் கட்டுப்பாட்டின்கீழ் வராதவையாகும். அதையொட்டி ஓர் ஐயம் எழுகிறது. பாங்கு முறையை மட்டும் கட்டுப்படுத்துவதே மைய பாங்கின் குறிக்கோளாகத் திகழ வேண்டும் என்று வைத்துக்கொண்டாலும் இந்த ஏனைய நிதி நிறுவனங்களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தாமல் பாங்குகளின் நடவடிக்கைகளை மட்டும் கட்டுப்படுத்துவதன் மூலம் தனது குறைந்த பட்சக் குறிக்கோளையாவது (அதாவது வாணிக பாங்குகளின் நடவடிக்கைளில் மட்டும் அக்கறை காட்டுவது) மைய பாங்கால் செவ்வனே நிறைவேற்ற முடியுமா என்பதே இந்த ஐயமாகும். இது போன்ற சிக்கல்களை அண்மையில் இங்கிலாந்தில் ரேட்கிளிஃப் குழுவினர் (Radcliffe Committee) ஆராய்ந்தனர். அமெரிக்கப் பண முறையை ஆராயும் நோக்கத்தோடு தற்சமயம் விரிவான ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. இவ் விசாரணைகளில் இதுபோன்ற சிக்கல்களும் கட்டாயம் இடம் பெறும் என்று நாம் நம்பலாம்.

# 11. புதிய நாடுகளில் தோன்றி யுள்ள பாங்கு முறைகள்

## 1. புதிய நாடுகளில் தோன்றியுள்ள பாங்கு முறைகளின் குறிப்பிடத்தக்க சிறப்புகள்

இங்கிலாந்திலுள்ள பாங்கு அமைப்பும், அமெரிக்காவிலுள்ள பாங்கு அமைப்பும், சீரிய முறையில் வளர்ச்சி பெற்றுள்ள பாங்கு முறைகட்கு எடுத்துக்காட்டுகளாகத் திகழ்கின்றன எனலாம். இவ்விரு பாங்கு முறைகளையும் ஒட்டி எழக்கூடிய சிக்கல்களையும், அவை எவ்வாறு தீர்க்கப்படுகின்றன என்பவற்றையுமே நாம் இதுகாறும் விவாதித்தோம். இவ் விரு நாடுகளிலுமுள்ள பாங்கு அமைப்புகளே இலட்சிய அமைப்புகள் என்றும், ஏனைய நாடுகளி லுள்ள பாங்கு அமைப்புகள் இந்த இலட்சிய அமைப்புகள் என்ற நேர்பாதையினின்றும் வருந்தத் தக்க விதத்தில் விலகிச் சென்றுள் ளவை என்றும், நாம் கருதுவதாக எண்ணிவிடலாகாது. இங்கி லாந்துப் பாங்கு முறையிலும் அமெரிக்க பாங்கு முறையிலும் நாம் சிறப்பான கவனம் செலுத்தியமைக்கு வேறு பல காரணங்கள் உள்ளன. இப் புத்தகம் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருக்கிறது. உலகிலுள்ள மொத்த ஆங்கில வாசகர்களில் பெரும்பாலானவர்கள் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் வசிக்கின்றனர். பெரும்பாலான ஆங்கில வாசகர்கட்கு நேரடியான தொடர்புகள் உடையனவற்றை விவாதிப்பது சரியானது என்ற நோக்கத்துடனேயே நாம் இங்கி லாந்து பாங்கு முறையிலும் அமெரிக்க பாங்கு முறையிலும் சிறப் பான கவனம் செலுத்தினோம். மற்றும் ஒரு காரணமுள்ளது. இவ் விரண்டு பாங்கு முறைகளைச் சார்ந்தே உலகிலுள்ள ஏனைய பாங்கு முறைகள் உருவாகி வருகின்றன. உண்மையில் இந்த ஏனைய நாடுகளிலுள்ள அதிகாரிகள் இவ் விரு பாங்கு முறைகள் கடைப்பிடிக்கும் முறைகளையே தங்கள் நாட்டிலுள்ள பாங்கு முறை களும் கடைப்பிடிக்க வேண்டும் என்று எண்ணி வற்புறுத்தி வருகின்

றனா இப புதிய நாடுகளில தறசமயம உருவாகிவரும பாங்கு முறைகளை மடடும சாரநத சில சிறபபான சிக்கலகள தோனறியுள்ளன பாஙகு முறைகளைப பறறிய பொதுவான கருததுகளை நாம தீரக்கமாக அறிந்துகொளவதறகு இப புதிய நாடுகளில் தோன்றியுளள பாங்கு முறைகளையும அவறறின சிககலகளையும ஆராயவேண்டுவது அவசியமாகும இந்தியா, கனடா, ஆஸதிரேலியா, தென ஆபபிரிக்கா ஆகிய நாடுகள இப புதிய நாடுகளில ஒரு சிலவாகும இந் நாடுகளில உருவாகியுள்ள பாஙகு முறைகள நாடடுககு நாடு பெருமளவு வேறுபடுகினறன தென் அமெரிக்க நாடுகள, ஜபபான், ஐரோபபாவிலுளள பல சிறிய நாடுகள ஆகியவறறில தோனறியிருக்கும பாங்கு முறைகடகு இடையேயும பெருதத அளவில வேறுபாடுகள உளளன பிரிட்டனுககுச் சொநதமான குடியேறற நாடுகளிலும, ஏனைய காமனவெலத நாடுகளிலும, மறறும வேறு பல நாடுகளிலும அணமைக காலத்தில தான நிதி நிறுவனஙகள ஏறபட ஆரமபித்துளளன இநதியா, கனடா, ஆஸதிரேலியா ஆகிய நாடுகளில தோனறியுளள சிககலகளைப போலவே இந்த நாடுகளிலுளள பாஙகு முறைகளிலும சில சிறபபான சிக்கலகள உருவாகியுளளன

இப புதிய நாடுகளில உருவாகியுள்ள பாங்கு முறைகளில் காணககிடைககும குறிபபிடத தக்க சிறபபான அம்சங்கள வருமாறு

1. பாஙகு முறைப் பழககம இந்தப புதிய நாடுகளில் வளாசசியுறவிலலை மேலும இந் நாடுகளில நிறுவபபடடிருககும பாஙகு அலுவலகங்கள மிகக் குறைவானவையாகும் இநத அலுவலகஙகளும அஙகொன்றும இஙகொனறுமாக நிறுவபபட்டுளளன

2 குறுங்காலப பண மார்க்கெட இந்த நாடுகளில கிடையா சில நாடுகளில குறுங்காலப பண மார்க்கெடடுகள் உருவாகி இருந்த போதிலும அவை சிறந்த முறையில் இனனும் வளர்ச்சியுறவிலலை

3 இநத நாடுகளில மையப பாஙகுகள ஆற்றலுடன் செயலாறற முடியவிலலை

இப புதிய நாடுகள பலவறறிலும உளள பாஙகுகளில பெரும்பான்மை அயலநாடடு பாஙகுகளின கிளைகளேயாகும்—உலகிலுள்ள பெரிய நிதி கேந்திரஙகளில நிறுவபபடடுளள பாஙகுகளின கிளைகளேயாகும. உதாரணமாகப் பிரிட்டிஷ அயலநாடடு

பாங்குகள் இப் புதிய நாடுகளில் பல கிளைகளை நிறுவியுள்ளன. வருங்காலத்தில் இந் நாடுகளில் உள் நாட்டுப் பாங்குகளே பெரும் பங்கு பெறும் என்று நாம் நம்புகிறோம். மேலே நாம் கொடுத்துள்ள குறிப்பிடத்தக்க சிறப்பான அம்சங்கள் யாவும் இப் புதிய நாடுகள் யாவற்றிலும் ஒன்றுபோலக் காணக்கிடக்கின்றன என்று கூற முடியாது. ஒரு சிறந்த குறுங்காலப் பண மார்க்கெட் கிடையாது என்பது எல்லா நாடுகளைப் பொறுத்த வரையிலும் உண்மைதான். ஆனால், சில நாடுகளில், உதாரணமாகக் கனடாவிலும், ஓரளவுக்கு ஆஸ்திரேலியாவிலும் பாங்குமுறைப் பழக்கம் சீரிய முறையில் வளர்ச்சியுற்றிருக்கின்றது. இச் சில நாடுகளில் பாங்கு அலுவகங்களும் பெருமளவில் நிறுவப்பட்டுள்ளன. மேலும் இந்தச் சில நாடுகளிலுள்ள நிதி நிறுவனங்களின் அமைப்பு, இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளிலுள்ள நிறுவனங்களின் அமைப்பைப் பெரிதும் ஒத்திருக்கிறது. புதிய நாடுகளில், அநேகமாக எல்லா நாடுகளிலும் மைய பாங்குகள் தோன்றியுள்ளன. ஆனால், பெரும்பாலான நாடுகளில் இன்னும் மையப் பாங்கு ஆற்றலுடன் செயலாற்ற முடியவில்லை.

பாங்கு முறை சிறந்த முறையில் வளர்ச்சியுற்றிராத சீனு, பர்மா ஆகிய நாடுகளிலும், மற்றும் தென் அமெரிக்காவின் பல பாகங்களிலும் நடைபெறும் வர்த்தக பேரங்கள், பெரும்பாலும் ரொக்கத்திலேயே தீர்த்துவைக்கப்படுகின்றன. இந் நாடுகளிலுள்ள பண அளிப்பில் ரொக்கமே பெரும் பங்கு பெறுகிறது. எனவே ரொக்க அளிப்பில் நேரக்கூடிய மாற்றங்களை ஒட்டியே இந்த நாடுகளில் மொத்தப் பண அளிப்பிலும் மாற்றங்கள் நேருகின்றன. அரசாங்கமோ, மைய பாங்கோ வெளியிடுகின்ற நோட்டுகளும், மற்றும் சிறிய செலுத்தினங்கட்குப் பயன்படக்கூடிய காசுகளும் இந் நாடுகளிலுள்ள ரொக்கங்களாகும். எனவே அரசாங்க நோட்டு வெளியீடுகளில் நேரக்கூடிய மாற்றங்களையொட்டியே இந் நாடுகளிலுள்ள ரொக்க அளிப்புகளில் மாற்றங்கள் ஏற்படுகின்றன. எனினும் பாங்குகளின் நடவடிக்கைகளையொட்டி இந் நாடுகளிலுள்ள விலைவாசிகளின் மட்டம் பாதிக்கப்படலாம். ஆனால் பாங்குகளின் நடவடிக்கைகளால் விலைவாசிகளில் நேரக்கூடிய மாற்றங்கள் அதிகமானவையாக இருக்கமுடியாது; மேலும் இம் மாற்றங்கள் நீடித்தும் இருக்க முடியாது. பாங்குகளின் நடவடிக்கைகட்கு ஏற்றதொருமுறையில் நாட்டிலுள்ள ரொக்கத்தின் அளிப்பில் அரசாங்கம் மாற்றங்களை ஏற்படுத்தினுல் மட்டுமே பாங்குகளின் நடவடிக்கைகளினுல் விலைவாசிகளில் நேரக்கூடிய மாற்றங்கள் அதிகமானவையாக இருக்கும்; அவை நீடித்தும் இருக்கும். உதாரணமாகத் தாங்கள்

விவசாயிகட்குக் கொடுத்துவரும் கடன் வசதிகளைப் பாங்குகள் பெருக்கும்போது பணவீக்க நிலை தோன்றலாம். பணவீக்க நிலையை யொட்டி நாட்டில் வர்த்தக பேரங்கள் பெருகும். பெருகியுள்ள வர்த்தக பேரங்கட்கு ஏற்றவகையில் ரொக்கத்தை அரசாங்கம் அதிகரிப்பதற்கு முன்வரவேண்டும். இல்லாவிடில் நாட்டில் தோன்றியுள்ள பணவீக்கநிலை தடையுறும். இப் புதிய நாடுகளில் ஒரு சில பாங்குகளே ஏற்பட்டுள்ளன என்று கண்டோம். இந்த ஒரு சில பாங்குகளும் பெரும்பாலும் நாட்டிலுள்ள வர்த்தக மையங்களிலேயே நிறுவப்பட்டுள்ளன. (உதாரணமாக ரங்கூன், கேன்டன், ஷாங்காய் போன்ற இடங்களிலேயே நிறுவப்பட்டுள்ளன). இந் நாடுகளிலுள்ள பாங்குகள் யாவும், பெரும்பாலும் இந்த வர்த்தக மையங்களிலுள்ள வர்த்தகர்களுடனேயே தொடர்புகள் உடையனவாக இருக்கின்றன. பாங்குகள் மிகுதியாகக் கடன் கொடுக்க முன்வருவதை யொட்டி இந்த வர்த்தக மையங்களில் ஊக வாணிகம் பெருகலாம். முதலீடுகள் பெருமளவு நடைபெறலாம். (உதாரணமாக 1860 69க்கு இடைப்பட்ட காலத்தில் பம்பாயில் இதுபோன்றதொரு நிலை உருவாகி இருந்தது. இவ் வுதாரணம் பழைய உதாரணமாகத் திகழ்ந்த போதிலும், இங்கு நாம் விளக்கப்போந்துள்ள கருத்தைத் தெளிவுபடுத்தக் கூடியதாகும்.) இவ் வர்த்தக மையங்களிலுள்ள பாங்குகட்கும் நாட்டின் ஏனைய பகுதிகட்கும் இடையே பொதுவாகத் தொடர்புகள் இல்லாவிடினும், இவ் வர்த்தக மையங்கட்கும் நாட்டின் ஏனைய பகுதிகட்கும் இடையே வர்த்தகத் தொடர்புகள் பெருமளவில் ஏற்பட்டுள்ளன. எனவே வர்த்தக கேந்திரங்களிலுள்ள பாங்குகள் பெருமளவு கடன் வசதிகளை ஏற்பாடு செய்ய முன்வரும் காலங்களில் வர்த்தக மையங்களினின்றும் நாட்டின் ஏனைய பகுதிகளை நோக்கி ரொக்கமானது பாய்ந்து ஓடுகின்றது.[1] எனவே வர்த்தக மையங்களில் கிடைக்கக்கூடிய ரொக்கம் சுருங்கிவிட நேரலாம். இதன் விளைவாகப் பாங்குகள் கடைப்பிடித்துவந்த கடன் பெருக்கக் கொள்கை உடனடியாகத் தடையுறலாம். (இதுபோன்றதொரு சூழ்நிலை சிறப்பான முறையில் பாங்குகள் வளர்ச்சியடைந்துள்ள நாடுகளிலுங்கூடச் சில சமயம் உருவாகலாம். குறிப்பாகக் கிளை பாங்கு முறை கைக்கொள்ளப்படாத நாடுகளில் இதுபோன்றதொரு சூழ்நிலை உருவாவதற்கு நிறைய வாய்ப்புகள் உள்ளன. எனினும் இந் நாடுகளிலுள்ள வர்த்தக மையங்கள் இழக்கக்கூடிய ரொக்கமானது நாம் மேலே குறிப்பிட்டுள்ள புதிய நாடுகளிலுள்ள

[1] இது எவ்வாறு நேருகின்றது என்பது குறித்து விளக்கத்தைக் கீழே கொடுத்துள்ள புத்தகத்தில் காணலாம்: Transmission of the Precious Metals, Value of Money and Cost of Obtaining Money by Senior.

வர்த்தக மையங்கள் இழக்கக்கூடிய ரொக்கத்தைவிட மிக மிகக் குறைவானதாகவே இருக்கும்.) இப் புதிய நாடுகளில் செயலாற்றி வரும் பாங்குகள் தங்களுடைய நடவடிக்கைகளை மிக்க கவனத்துடன் ஒழுங்கு செய்து கொள்ள வேண்டியது அவசியமாகும். இல்லாவிடில் வாடிக்கைக்காரர்களின் ரொக்கத் தேவையைத் தாங்கள் பூர்த்தி செய்ய முடியாதநிலை ஏற்பட்டுப் பாங்குகள் பெருமளவில் வீழ்ச்சியுற நேரலாம். எனவே இந் நாடுகளிலுள்ள பாங்குகளுடைய நீர்மைத்தன்மையைப் பாதுகாப்பதிலும் பாங்குகளுடைய சொத்துகளை ஒழுங்குபடுத்துவதிலும், அதிகாரிகள் மிக்க அக்கறை காட்ட நேரலாம். வேறு நாடுகளிலும் கடந்த காலத்தில் அதிகாரிகள் இதுபோன்ற வைகளில் பெரிதும் கவனம் செலுத்தினர். பாங்குகளின் நீர்மைத் தன்மையைப் பாதுகாக்கும் நோக்கமே அதிகாரிகளின் முக்கிய நோக்கமாக நெடுங்காலமாகத் திகழ்ந்து வந்திருக்கிறது. மையப் பாங்கு ஒன்றுக்கு வாணிக பாங்குகளைக் கீழ்ப்படியச் செய்ய வேண்டுமென்பது அதிகாரிகளின் முக்கிய நோக்கமேயன்று.

பாங்குகள் சீரிய முறையில் வளர்ச்சியடைந்துள்ள நாடுகளில் குறுங்காலப் பண மார்க்கெட்டும் சீரிய முறையில் வளர்ச்சியடைந்துள்ளது. ஆனால் இப்புதிய நாடுகளில் சிறந்த முறையில் வளர்ச்சியடைந்துள்ள குறுங்காலப் பணமார்க்கெட் கிடையாது. கனடாவில் பத்திர மார்க்கெட் வளர்ச்சியடைந்துள்ளது. எனவே தங்களிடமுள்ள குறுங்கால நிதிகளைக் கனடாப் பாங்குகள் முதலீடு செய்வதற்குரிய வாய்ப்புகள் உள்ளன. இவ் வாய்ப்புகளை உருவாக்கிய பெருமை கனடாவின் தலைமைப் பாங்கையே (Bank of Canada) சாரும். அண்மையிலேயே தோன்றியுள்ளபோதிலும், கனடாவின் தலைமைப் பாங்கு ஆற்றலுடன் செயலாற்றி வருகிறது. நெடுங்காலமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வரும் பழைய முறைகளே இன்றும் ஆஸ்திரேலியாவில் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. கருவூல உண்டியல் மார்க்கெட் ஒன்றை உருவாக்க அண்மையில் ஆஸ்திரேலியாவில் எடுக்கப்பட்ட முயற்சிகள் பயனளிக்கவில்லை. தென் அமெரிக்காவிலும் தென் ஆப்பிரிக்காவிலும், குறுங்கால நிதிகளை முதலீடு செய்யச் செம்மையான வாய்ப்புகளே இல்லை எனலாம். எனினும் தென் ஆப்பிரிக்காவில் 1950-59க்கு இடைப்பட்ட காலத்தில் சில புதிய நிதி நிறுவனங்கள் நிறுவப்பட்டுள்ளன. காலப்போக்கில் இந்நிறுவனங்கள் யாவும் ஒரு மார்க்கெட்டாக உருவெடுக்க வாய்ப்புகள் உள்ளன. இந்தியாவில் மார்க்கெட்டுகள் உள்ளன. இவை உள்நாட்டு மார்க்கெட், ஐரோப்பிய மார்க்கெட் என்று இரு தரத்தனவாகும், இவ்விரண்டு மார்க்கெட்டுகளும் தனித்தனியே அமைந்துள்ளன. இந்த மார்க்கெட்டுகள் ஒன்றுட

ஞென்று தொடர்பு இல்லாதவை. எனவே வாணிகப் பாங்குகட்கும் மைய பாங்குக்கும் இடையே தொடர்புகளை ஏற்படுத்துவதற்கு இன்றியமையாத ஒரே ஒரு மார்க்கெட் இந்தியாவில் இருப்பதாக நாம் கருதமுடியாது. பல தரப்பட்ட பணமார்க்கெட்டுகள் யாவும், ஒன்றுடனொன்று தொடர்புடையனவாய் இருந்தாலன்றி அவற்றையெல்லாம் ஒன்று சேர்த்துப் பாங்குமுறை என்று கூற முடியாது. இந்தியாவில் இரு வேறு பண மார்க்கெட்டுகள் தனித்தனியே யாதொரு தொடர்புமின்றி இயங்கிக்கொண்டிருத்தலால் இவை இரண்டையும் நாம் ஒன்ருக இணைத்து ஒரு பாங்கு முறை என்று கருதமுடியாது. இவ் விரு மார்க்கெட்டுகளையும் அதிவிரைவில் இணைக்கும் முயற்சிகள் இந்தியாவில் எடுக்கப்பட்டு வருகின்றன. ஆனல் ஐரோப்பாவில் தலைசிறந்து விளங்கும் சில நிதி மையங்களில், சீரிய முறையில் வளர்ந்துள்ள குறுங்காலப் பணமார்க்கெட்டுகள் செயலாற்றி வருகின்றன. ஆனல் ஐரோப்பாவில் ஏனைய பகுதிகளில் இவற்றைக் காண முடியாது. இலண்டன் பண மார்க்கெட்டிலுள்ள நிறுவனங்களைத் தங்கள் நாட்டிலும் உருவாக்க இந்நாடுகள் எடுத்த முயற்சி பெரும்பாலும் பயனளிக்கவே இல்லை. இலண்டனில் இயங்கிவரும் மைய பாங்கு முறை போன்றல்லாது அதனின்றும் முற்றிலும் மாறுபட்ட மைய பாங்கு முறைகளை இந் நாடுகள் கடைப்பிடிக்கவேண்டியது குறித்து அடுத்து விளக்குவோம்.

பாங்குகள் சிறந்த முறையில் வளர்ச்சியடைந்துள்ள நாடுகளில் மைய பாங்குகள் ஆற்றலுடன் செயலாற்றி வருகின்றன. ஆனல் புதிய நாடுகளில் தோன்றியுள்ள மைய பாங்குகளால் ஆற்றலுடன் செயலாற்ற முடியவில்லை. தற்சமயம் மைய பாங்கு நிறுவப் பெருத நாடே இல்லை என்லாம். எனினும் இந் நாடுகளில் பெரும்பாலானவற்றில்—குறிப்பாகச் சிறிய நாடுகளில் நிறுவப்பெற்றுள்ள மைய பாங்குகள் அந்தந்த நாடுகளில் வேரூன்றிவிட்டன என்று கூறுவதற்கில்லை. அயல் நாட்டுச் செலாவணி மார்க்கெட்டிலேயே இந்த மைய பாங்குகள் பெரிதும் ஈடுபடுகின்றன.[1] தற்காலத்தில் அயல்நாட்டுச் செலாவணியைப் பொறுத்தவரையில் இடையீடின்றித் தொல்லைகள் நேர்ந்துகொண்டேயுள்ளன. எனவே மைய பாங்கு அயல்நாட்டுச் செலாவணி மார்க்கெட்டில் பெரும் பங்கு பெறுவது விரும்பத் தக்கதேயாகும். எனினும் இப்

1 கனடாவைப் பொறுத்த வரையில் இது உண்மை என்று கூறுவதற்கில்லை. கனடாவில் மைய பாங்கு நன்கு வேரூன்றிவிட்டது என்லாம். அயல்நாட்டுச் செலாவணி மார்க்கெட்டில் மட்டுமின்றிப் பத்திர மார்க்கெட்டிலும் அது பெரும் பங்கு பெறுகின்றது. இது குறித்துக் கீழே தரப்பட்டுள்ள புத்தங்களை நோக்கவும்: A. F. W. Plumptre, Central Banking in the British Dominions, and E. P. Neufeld, Bank of Canada Operations, 1935-54.

பணி, வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளை மைய பாங்கு கட்டுப்படுத்த வேண்டிய பணியினின்றும் முற்றிலும் மாறுபட்டதாகும். இந்த மைய பாங்குகளும் காலப்போக்கில் இங்கிலாந்துத் தலைமை பாங்கைப் போலவே உருவெடுக்கும் என்ற எண்ணத்திலேயே இவை இந் நாடுகளில் நிறுவப்பட்டன. இங்கிலாந்து தலைமை பாங்கு சிறந்த முறையில் செயலாற்றுவதற்கு ஏற்றமுறையில் இலண்டனிலுள்ள நிறுவனங்கள் அமைந்துள்ளன. ஆனால் இந் நாடுகளில் இதுபோன்று வாய்ப்பான சூழ்நிலைகள் கிடையா. எனவே இங்கிலாந்துத் தலைமை பாங்கால் முடிவதுபோல இம் மைய பாங்குகளால் ஆற்றலுடன் செயலாற்ற முடியவில்லை. இலண்டனில் உருவாகியுள்ள சூழ்நிலை இந்த நாடுகளில் உருவாகாத நிலையிலும், இந்த நாடுகளிலுள்ள மைய பாங்குகள் எங்ஙனம் ஆற்றலுடன் செயலாற்ற முடியும் என்பதைக் குறித்து நாம் ஆராய்வது பயனுள்ளதேயாகும்.

## 2. குறுங்காலப் பண மார்க்கெட் உருவாகாத நாடுகளில் மைய பாங்கு முறை

ஒரு நாட்டில் பாங்குகள் பரவலாக நாடு முழுவதும் அமைந்துள்ளன என்றும், பாங்கு முறைப் பழக்கத்தைப் பெரும்பாலான மக்கள் கடைப் பிடிக்கின்றனர் என்றும் வைத்துக்கொள்வோம். இத் தன்மைத்தான நாட்டில் மைய பாங்கு முறை எவ்வாறு அமைதல் வேண்டும் என்பதையே ஈண்டு நாம் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டுள்ளோம். இத் தன்மைகளை உடைய நாட்டிற்குச் சிறந்ததோர் எடுத்துக்காட்டாகக் கனடா திகழ்கின்றது. ஆஸ்திரேலியாவிலும், தென் ஆப்பிரிக்காவிலும்கூட இத் தன்மைகளை ஓரளவுக்கு நாம் காணலாம். தன்னுடைய சொத்துகளை அதிகரிப்பதன்மூலமும், குறைப்பதன்மூலமும் மைய பாங்கால் வாணிப பாங்குகளின் நடவடிக்கைகளை இந்நாடுகளில் ஓரளவுக்கு எளிதாகக் கட்டுப்படுத்த முடியும். இதற்கு ஏற்றதொரு சூழ்நிலையை உருவாக்கவேண்டிக் கீழ்க் காணும் நடவடிக்கைகளை அதிகாரிகள் எடுக்கின்றனர்.

1. முதலாவது நடவடிக்கை நோட்டு வெளியிடும் உரிமையைப் பற்றியதாகும். வாணிக பாங்குகள் பெற்றிருந்த நோட்டு வெளியீட்டு உரிமை முழுவதும் சில நாடுகளில் பறிமுதல் செய்யப்பட்டுள்ளது. வேறு சில நாடுகளில் வாணிகப் பாங்குகள் பெற்றிருக்கின்ற நோட்டு வெளியீட்டு உரிமை பெரும் கட்டுப்பாட்டுகட்கு ஆளாகி இருக்கிறது.

2. வாணிக பாங்குகள் மைய பாங்கில் கட்டாயமாக இருப்புகள் வைத்திருக்க வேண்டியுள்ளது. வாணிக பாங்குகளின் டெபாசிட்டுகளில் ஒரு சிறு பகுதியையே இந்த இருப்புகள் குறிக்கின்றன.

3. மைய பாங்கு, கடை நிலைக் கடன் ஈவோனுகத் திகழ்கிறது.

இந் நாடுகளில் மைய பாங்கு கடை நிலைக் கடன் ஈவோனுகத் திகழ வேண்டியதும், வாணிக பாங்குகளின் நோட்டு வெளியீட்டுரிமை பெரிதும் கட்டுப்படுத்த வேண்டியதும் மிகவும் இன்றியமையாதவையாகும். வாணிக பாங்குகள் மைய பாங்கில் இருப்புகள் வைத்திருப்பதும் வாணிக பாங்குகளின் நோட்டு வெளியீட்டுரிமை அகற்றப் பட்டிருப்பதும் மைய பாங்குக்கு மிகவும் அனுகூலமானவையாகும். ஏனெனில் இவற்றையொட்டி மைய பாங்குக்கு ஓரளவு வருவாய் கிடைத்து வருகின்றது. ஆனால் இவ்விரு முறைகளையும் சிறந்த கட்டுப்பாட்டு முறைகள் என்று மைய பாங்கு கருத முடியாது. இந்த நாடுகளில் மைய பாங்கு கடை நிலைக் கடன் ஈவோனுகத் திகழ வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும். இதனால் வாணிக பாங்குகள் பயனுறும். தங்களுக்கு நேரக்கூடிய ரொக்க இழப்புகள் யாவற்றையும் வாணிக பாங்குகள் முன்கூட்டியே கணக்கிட்டு அவற்றிற்கு ஈடாகக் காப்பு இருப்புகள் வைத்திருக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லை. ஓரளவுக்குக் காப்பிருப்புகள் வைத்திருப்பதே போதுமானதாகும். தங்கட்குத் தேவைப்படும் ரொக்கத்தை மைய பாங்கிடமிருந்து வாணிக பாங்குகள் பெற முடியும். எனவே, தாங்கள் ஈட்டக்கூடிய இலாபத்தை வாணிக பாங்குகள் அதிகரித்துக் கொள்ள முடியும்.[1] வாணிக பாங்குகள் மைய பாங்கில் இருப்புகள் வைத்திருப்பதால் மைய பாங்குக்குச் சில நன்மைகள் ஏற்படலாம் என்று நாம் கண்டோம். மற்றும் இதன் விளைவாக வாணிக பாங்குகளின் ரொக்க விகிதங்கள் நிலையானவையாக இருக்கலாம். வாணிகப் பாங்குகளின் நோட்டு வெளியீட்டு உரிமையை அதிகாரிகள் பெரிதும் கட்டுப்படுத்தினால் தாம் விரும்பிய மாத்திரத்தில் வாணிகப் பாங்குகளால் ரொக்கத்தை உற்பத்தி செய்ய முடியாது. அதாவது நோட்டுகளை அச்சிடுவதன் மூலம் தங்களிடமுள்ள ரொக்கத்தை வாணிக பாங்குகள் எளிதில் அதிகரித்துக் கொள்ள முடியாது. (இந்த நாடுகளில் 'தடையிலாக் காசடிப்பு'—free

[1] முந்திய அத்தியாயங்களில் விளக்கப்பட்டுள்ள வரையறைகட்குக் கட்டுப்பட்டே இவ்வாறு இலாபத்தை வாணிக பாங்குகள் அதிகரித்துக்கொள்ள முடியும்.

coinage— உரிமை மக்களுக்கு வழங்கப்படவில்லை என்று வைத்துக் கொண்டுள்ளோம். இவ்வாறன்றி இந்த உரிமையை மக்கள் பெற்றிருந்தால், ஒரு நிலையான அயல்நாட்டுச் செலாவணிக் கொள்கையை அதிகாரிகள் கடைப்பிடித்து வருகின்றனர் என்பதே பொருளாகும். இதையொட்டி மைய பாங்குக்கு ஒரு சங்கடமான நிலை தோன்றலாம். முன் கூட்டியே தீர்மானிக்கப்பட்ட அயல் நாட்டுச் செலாவணிக் கொள்கையை அதிகாரிகள் கடைப்பிடிப்பதை யொட்டி மைய பாங்குக்கு ஏற்படக்கூடிய சங்கடமான நிலையும், இச் சங்கடமான நிலையும் ஒன்றுகவே அமையும். இவை குறித்து நாம் கீழே விளக்கம் தந்துள்ளோம்.)

சீரிய முறையில் வளர்ச்சி பெற்றுள்ள நிதி மையங்களில் நாம் மேலே கொடுத்துள்ளவை யாவும் அமைந்திருந்தால், மைய பாங்கு வாணிகப் பாங்குகளை ஆற்றலுடன் கட்டுப்படுத்த முடியும். ஏனெனில் இதுபோன்ற வாய்ப்பான சூழ்நிலையில் தன்னிடமுள்ள சொத்துகளைக் கூட்டுவதன் மூலமும் குறைப்பதன் மூலமும் பாங்கு டெபாசிட்டுகளின் மொத்த அளிப்பைத் (மற்றும் குறுங்கால வட்டி வீதங்களை) தான் விரும்பும் வண்ணமே மைய பாங்கு மாற்றி அமைத்துக்கொள்ள முடியும். ஆனல் நாம் மேலே குறிப்பிட்டுள்ள நாடுகளில் இது சாத்தியமில்லை. சிறந்த முறையில் அமைந்துள்ள குறுங்காலப் பண மார்க்கெட் இந் நாடுகளில் கிடையாது என்று நாம் வைத்துக் கொண்டுள்ளோம். எனவே தன்னிடமுள்ள சொத்துகளைக் கூட்டுவதன் மூலமும் குறைப்பதன் மூலமும் வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளை மைய பாங்கால் எளிதில் ஒழுங்கு செய்துவிட முடியாது. அரசாங்கப் பத்திரங்கள், அயல் நாட்டுச் செலாவணிகள், தங்கம் ஆகியவை இந்த நாடுகளிலுள்ள மைய பாங்குகளிடமுள்ள சொத்தினங்களாகும். வாணிக பாங்குகட்கு மைய பாங்குகள் கொடுத்துள்ள கடன்களும் சில நாடுகளிலுள்ள மைய பாங்குகளின் ஒரு சொத்தினமாகத் திகழ்கிறது. மைய பாங்கிடமிருந்து வாணிக பாங்குகள் பெற்றுவரும் கடன்கள் பெருமளவினதாக இருந்தால், இச் சொத்தினத்தைக் குறைப்பதன் மூலமும் கூட்டுவதன் மூலமும் வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளை மைய பாங்கால் கட்டுப்படுத்த முடியும். தான் வாணிக பாங்குகட்கு அளித்துவரும் கடன்கட்கான வட்டி வீதத்தைத் தான் விரும்பும் வண்ணம் மைய பாங்கால் கூட்டவோ, குறைக்கவோ முடியும். இவ்வாறு செய்வதன் மூலம் வாணிக பாங்குகள் பொதுமக்களுக்குக் கொடுத்துவரும் கடன்களை, மைய பாங்கு மாற்றி அமைக்க முடியும். அதாவது குறுங்கால வட்டி வீதங்களை மைய பாங்கு கட்டுப்படுத்த முடியும். ஆனல் ஏற்கெனவே பல பாங்குகள் நிலையாகச் செயலாற்றிக் கொண்டிருக்கக்

கூடிய ஒரு நாட்டில் மைய பாங்கு நிறுவப்பட்டால், வாணிக பாங்குகள் மைய பாங்கை அணுகிக் கடன் பெற முன்வரும் என்று நாம் எதிர்பார்க்க முடியாது. இந் நாட்டிலுள்ள வாணிக பாங்கு கட்கும், புதிதாக நிறுவப்பட்டுள்ள மைய பாங்குக்கும் இடையே இதுபோன்ற உறவுகள் அதி விரைவில் ஏற்படும் என்று கொள்வ தற்கில்லை. உண்மையில் இதுபோன்ற நாடுகளில் மைய பாங்கை, உதவி கோரி வாணிக பாங்குகள் அணுகுவதென்பது மிகமிக அரிதாகும். இது தவிர ஒரு சூழ் நிலையிலும் (இந்தச் சூழ் நிலையில் வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளை. தான் கட்டுப்பாடு செய்ய வேண்டும் என்று மைய பாங்கு பெரிதும் விரும்பிய போதிலும்) மைய பாங்கை வாணிக பாங்குகள் அணுக வேண்டியதில்லை. அதாவது அயல் நாட்டுச் செலாவணி நிலை மிகவும் சீராக அமைந் திருக்கக் கூடிய காலங்களில் மைய பாங்கிடம் வாணிக பாங்குகள் கடன் பெற முன்வருவதில்லை.

அரசாங்கப் பத்திர இருப்புகளும் மைய பாங்கிடம் உள்ளன. எவ்வளவு அரசாங்கப் பத்திரங்களைத் தான் விலைக்கு வாங்க விரும்புகின்றதோ, அதைப் பொறுத்தே மையப் பாங்கிடமுள்ள பத்திர இருப்புகளின் அளவு அமைகிறது. தன்னிடமுள்ள அரசாங் கப் பத்திர இருப்புகளைக் கூட்டுவதன்மூலமும், குறைப்பதன்மூல மும் வாணிக பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தை மைய பாங்கு ஓரளவுக்குக் கட்டுப்படுத்த முடியும். ஆனால், இம் முறையைக் கையாளும்போது மைய பாங்குக்குப் பெரும் இடர்ப் பாடுகள் நேரலாம். இந்நாடுகளிலுள்ள பங்கு மார்க்கெட்டுகள் இலண்டனிலும் நியூயார்க்கிலுமுள்ள பங்கு மார்க்கெட்டுகள் போலவே அமைந்துள்ளன என்பது உண்மைதான். ஆனால், இந் நாடுகளிலுள்ள பங்கு மார்க்கெட்டுகள் பெருமளவிலான பேரங் களில் ஈடுபட முடியாத அளவுக்குச் சிறியனவாகும். மெல்போர்ன் (Melbourne) பங்கு மார்க்கெட்டிலோ, சிட்னி (Sydney) பங்கு மார்க்கெட்டிலோ பத்திரங்களை விற்பனை செய்வதன்மூலம் வாணிக பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தை ஆஸ்திரேலியக் காமன் வெல்த் பாங்கு (The Commomwealth Bank of Australia) குறைத்துவிட முடியுமே என்று ஒருவர் எளிதில் தம்முடைய கருத்தைக் கூறிவிட முடியும். ஆனால் இதிலுள்ள இடர்ப்பாடுகளை நாம் அறியவேண்டியது அவசியமாகும். இப் பங்கு மார்க்கெட்டு கள் மிகச் சிறியனவேயாகும். எனவே, பெருமளவில் பத்திரங்களை விற்பதோ, வாங்குவதோ சாத்தியமில்லை. பத்திரங்களில் பெருமள விலான பேரங்களை அதிகாரிகள் நடத்த முனையும்போது தற்காலிக மாகப் பங்கு மார்க்கெட்டுகளை மூடவேண்டிய நிலை ஏற்படலாம். எனினும் பத்திர விலைகளில் போதுமான அளவு மாற்றங்களைச்

செய்ய அதிகாரிகள் முன் வருவார்களேயானுல் யாதொரு சிரமமு மின்றித் தாங்கள் விரும்பியவண்ணமே பத்திரங்களைப் பெருமள வில் அதிகாரிகளால் விற்கவோ. வாங்கவோ முடியும். பத்திர விலை களில் நேரக்கூடிய மாற்றங்களுக்கு ஏற்ப நெடுங்கால வட்டி வீதங் களிலும் மாற்றங்கள் நேரும். எனவே, நெடுங்கால வட்டி வீதத்தை அதிகாரிகளால் நேரடியாகக் கட்டுப்படுத்த முடிகிறது. இதை ஒரு நன்மையாகவே கணக்கிடலாம். ஆனுல், பத்திர விலைகளில் மாற் றங்கள் நேருவதால் பல கேடுகளும் சூழலாம்; பொதுமக்கள் பாதிக்கப்படலாம். ஊக வாணிகம் தூண்டப்படலாம் என்று அர சாங்கம் அஞ்சலாம். பத்திர விலைகளில் பெருமளவு மாற்றங்கள் நேர்ந்துகொண்டிருந்தால் அரசாங்கப் பத்திரங்கட்கான மார்க்கெட் டுகள் நிலையாகப் பாதிக்கப்படலாம் என்று அரசாங்கம் அஞ்சலாம். பத்திர விலைகளில் நேரக்கூடிய மாற்றங்களையொட்டி மையப் பாங் குக்கும் இழப்புகள் நேரும். ஏனெனில் மைய பாங்கிடம் பெரு மளவு பத்திர இருப்புகள் உள்ளன. தனக்கு இவ்வாறு நேரக்கூடிய இழப்புகளை அரசாங்கம் ஏற்றுக்கொள்ள முன்வரும் பட்சத்தில், பத் திரப் பேரங்களில் மைய பாங்கு தடையின்றி ஈடுபடலாம். ஆனுல், அரசாங்கம் இவ்வாறு செய்ய முன்வருமா என்பது ஐயப் பாட்டிற்குரிய ஒன்றேயாகும். இதுபோன்ற இடர்ப்பாடுகட்கிடை யேயும் கனடாவின் தலைமை பாங்கு (Bank of Canada) தன் வெளிமார்க்கெட் நடவடிக்கைகளை வெற்றிகரமாக நடத்திவரு கிறது. கனடா அரசாங்கத்தின் கடன் கொள்கையும் இதற்கு ஏற்ற முறையிலேயே அமைந்துள்ளது. அரசாங்கத்தின் கடன் கொள்கை எஞ்ஞான்றும் இவ்வாறே அமையும் என்று கொள்வதற் கில்லை. எனினும் தன் வெளி மார்க்கெட் நடவடிக்கைகளை மிகுந்த ஆற்றலுடன் வெற்றிகரமாகக் கனடாவின் தலைமை பாங்கு செய லாற்றி வருவதால் ஏனைய நாடுகளும் கனடாவின் தலைமைபாங்கு கடைப்பிடிக்கும் முறைகளைக் கையாண்டு நன்மை பெறலாம்.[1]

உள்நாட்டில் வெளி மார்க்கெட் நடவடிக்கைகட்கான வாய்ப் புகள் மிகவும் குறைவாகவே இருப்பதால் வாணிக பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தை ஒழுங்கு செய்யும் நோக்கத்தோடு தன்னிடமுள்ள தங்க இருப்புகளையும் அயல்நாட்டுச் செலாவணி இருப்புகளையும் மைய பாங்கு மாற்றி அமைக்கலாம். தங்கத்

1 மார்க்கெட்டிலுள்ள பத்திரங்களினின்றும் கிடைக்கக்கூடிய வருவாய்களில் பெரிய மாற்றங்களை ஏற்படுத்தும் நோக்கத்தோடு தற்சமயம் மைய பாங்குகள வெளிமார்க்கெட் நடவடிக்கைகளில் ஈடுபடுவதாகக் கொள்வதற்கில்லை. பொது மக்கள் பத்திரங்களில் முதலீடு செய்வதை ஊக்குவிக்கும் நோக்கத்தோடு பத திரங்களின் விலைகளை நிலைப்படுத்துவதே மைய பாங்கின் குறிக்கோளாகத் திகழ வேண்டும் என்னும் கருத்தே தற்சமயம் வலியுறுத்தப்படுகின்றது. (இதுபோன்ற தொரு கருத்தை 1949 ஆம் ஆண்டில் இலங்கையில் வெளியிடப்பட்ட இலங்கை மைய பாங்கு முறை பற்றி அறிக்கையில் காணலாம்.)

தையும் அயல்நாட்டுச் செலாவணியையும் தன்னிடம் காப்பு இருப்புகளாக வைத்திருக்கவேண்டியது மைய பாங்கின் கடமை என்று கருதப்படுகிறது. (இவ்வாறு கருதுவது மிகவும் பொருத்த மானதேயாகும்) எனவே தன்னிடம் தங்க இருப்பையும், அயல் நாட்டுச் செலாவணி இருப்பையும் மைய பாங்கு வைத்திருக்கிறது. இவ் விரண்டு வகையான இருப்புகளையும் மைய பாங்கு மாற்றி அமைப்பதால் சில விளைவுகள் நேரும். விரிவு அஞ்சித் தங்க இருப்பு களை மாற்றி அமைப்பதால் மட்டும் நேரக்கூடிய விளைவுகளை ஈண்டு நாம் ஆய்வோம். அயல் நாடுகளினின்றும் கிடைக்கக்கூடிய பணத்தை மைய பாங்கு தங்கமாக மாற்ற முனையலாம்; அன்றி மாற்ற முனையாதிருக்கலாம். இதனால் உள்நாட்டு நிலை சிறிதள வேனும் பாதிக்கப்படமாட்டாது.[1] தங்க இருப்புகளையொட்டிய தன் நடவடிக்கைகளை மைய பாங்கு இரண்டு விதமாக அமைத்துக் கொள்ள முடியும். இவ் விரண்டு விதமான நடவடிக்கைகளையும் இரண்டு எல்லைகள் என்றே நாம் கருதவேண்டும். முதலாவது முறை வருமாறு: தங்கத்தின் விலை நிர்ணயம் செய்யப்பட் டிருக்கும். இந்த நிர்ணயிக்கப்பட்ட விலையில் மைய பாங்கு தங்கத்தை விற்கலாம் அல்லது விலைக்கு வாங்கலாம். உலக நாடுகள் பொன் திட்டத்தைக் (gold standard) கடைப்பிடித்து வந்தபோது உருவாகியிருந்தது போன்றதொரு நிலை இதன் விளை வாக ஏற்படும். இரண்டாவது முறை வருமாறு: தான் வெளியிட விரும்பும் உள்நாட்டுச் செலாவணியின் அளவை மைய பாங்கு தீர்மானித்துக்கொள்ளும். இதற்கு ஏற்பத் தங்க விலையை அமைத்துக்கொண்டு மைய பாங்கு தங்கத்தை விலைக்கு வாங்க முயலும். இவ் விரண்டு முறைகளிலும், நிர்ணயிக்கப்பட்ட விலை யிலேயே மைய பாங்கு தங்கத்தை விலைக்கு வாங்கும் முறை முதலா வதாகும் என்று கண்டோம். இதனால் மைய பாங்கு அதிகமான ரொக்கத்தை உற்பத்தி செய்யும். ஈண்டு நாம் ஓர் உண்மையை உணரவேண்டுவது மிக அவசியமாகும். இவ்வாறு தான் உற் பத்திச் செய்யும் ரொக்கம் மைய பாங்கின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டதன்று. இந்த ரொக்கத்தின் அளவினைப் பன்னாட்டுக் கொடுப்பல் நிலையே (International Balance of Payments) கட்டுப்

1 பல சிறிய நாடுகளில் தோன்றியுள்ள மைய பாங்குகள் தங்களிடம் தங் கத்தையும் அயல் நாட்டுச் செலாவணியையும் இருப்பாக வைத்திருக்கின்றன. தங் கத்தை இருப்பாக வைத்திருப்பதில் ஒரு நன்மை உள்ளது. ஏனைய நாட்டுச் செலாவணிகளின் தங்க மதிப்புகள் ஒரு குறிப்பிட்ட அயல் நாட்டுச் செலாவணி யின் மதிப்பு உயர்வதையும் தாழ்வதையும் ஒட்டி பாதிக்கப்படமாட்டா, எனினும் ஒரு நாட்டின் அயல்நாட்டுப் பொருளாதாரத் தொடர்புகள் ஒரு குறிப்பட்ட நாட் டுடனேயே பெருமளவில் அமைந்திருந்தால், தங்கத்தை வைத்திருப்பதைவிட இந்த அயல்நாட்டின் செலாவணிகளை ஓரளவுக்கு மையபாங்கு இருப்பாக வைத் திருப்பது நன்மை தரக்கூடியதாகும். ஏனெனில் இந்த அயல்நாட்டுச் செலா வணியின் தங்க மதிப்பு மாற்றமுற நேரலாம்.

படுத்துகிறது. இதுபோலவே தங்கத்தை விற்று நாட்டிலுள்ள ரொக்கத்தைத் தான் குறைக்கும்போது மைய பாங்கால் ரொக்கத்தின் அளவினைக் கட்டுப்படுத்த முடிவதில்லை. பன்னாட்டுக் கொடுப்பல் நிலையே ரொக்க அளவைக் கட்டுப்படுத்துகிறது. இதுபோன்ற சூழ்நிலைகளில் மக்களுக்குத் 'தடையிலாக் காசடிப்பு' (free coinage) உரிமை வழங்கப்பட்டிருப்பதும், வழங்கப்படாதிருப்பதும் ஒன்றுபோலவே அமையும் இந்த உரிமையை மக்கள் பெற்றிருந்தாலும் அன்றிப் பெருதிருப்பினும் மைய பாங்கின் விருப்பு வெறுப்பைச் சாராமலேயே நாட்டிலுள்ள ரொக்க அளிப்பு அமையும். வாய்ப்பான காலங்களில் தங்க இருப்புகளையும், அயல் நாட்டுச் செலாவணி இருப்புகளையும் திரட்டிப் பாதகமான அயல் நாட்டுக் கொடுப்பல் நிலை நேரும்போது, இவற்றை மைய பாங்கு பயன்படுத்தவேண்டும் என்று நமக்குக் கூறத் தோன்றலாம். எனினும் ஓர் உண்மையை நாம் ஈண்டு உணரவேண்டும். தான் அயல்நாட்டுச் செலாவணியைப் பெறும்போது உள்நாட்டில் உடனடியாக மைய பாங்கானது ரொக்கத்தை உற்பத்தி செய்ய வேண்டிய கட்டாயம் இருந்தால் மைய பாங்கிடம் வந்து சேர்ந்துள்ள அயல்நாட்டுச் செலாவணி வாணிக பாங்குகளிடம் போய்ச் சேர்ந்தாலும், இதே விளைவுகள் தான் நேரும் இரண்டு விதமான சூழ்நிலைகளிலும் எந்த மாற்றத்தையும் நாம் காணமுடியாது. எனவே இதுபோன்ற சூழ்நிலைகளில் மைய பாங்கால் நிலைமையைக் கட்டுப்படுத்த முடிவதில்லை.[1]

மேலே நாம் குறிப்பிட்டுள்ள இரண்டு முறைகளிலும் இரண்டாவது முறையை மைய பாங்கு தொடர்ந்து ஒழுங்காகக் கடைப்பிடித்து வருவது விரும்பத்தக்க தன்று. இந்த இரண்டாவது முறையின்படி தங்கவிலையோ, அயல்நாட்டுச் செலாவணிகளின் விலையோ நிலையான விலையாக இராது என்று கண்டோம். எனவே அயல்நாட்டுச் செலாவணி வீதங்கள் கூடுவதும் குறைவதும் இடையீடின்றி நிகழ்ந்துகொண்டே இருக்கும். ஆனால், அயல்நாட்டுச் செலாவணி வீதங்களை ஓரளவுக்கு நிலையாக வைத்திருக்கவேண்டியது மைய பாங்கின் கடனாகும். எனவே அயல் நாட்டுச் செலாவணி வீதங்கள் தடையேதுமின்றிக் கூடுவதையும் குறைவதையும் பார்த்துக்கொண்டு மைய பாங்கு நடவடிக்கையெடுக்காதிருக்க முடியாது. பொன் திட்டம் உகந்தது அன்று என்று கூறுவதனால், மேலே குறிப்பிட்டுள்ள இந்த இரண்டாவது முறையைக் கடைப்பிடிப்பதே உகந்தது என்று தவருக எண்ணி

1 நிலைமை மேலும் மோசமாகலாம். மைய பாங்கு கடை நிலைக் கடன் ஈவோனாகத் திகழாவிடில் சில வசதியான பாங்குகள் நெடுங்காலத் தேவையைக் கருத்தில் கொண்டு தங்களிடமுள்ள தங்க இருப்பை அதிகரிக்க முனையலாம்.

விடலாகாது. ஏனெனில் அயல்நாட்டுச் செலாவணிகளின் போக்கு வரத்தையும் அயல்நாட்டுச் செலாவணிகளின் வீதத்தையும் தடை ஏதுமின்றி விட்டுவிடுவது நல்லதன்று. இக் கருத்தை யாரும் மறுத்துரையார் என்றே நாம் எண்ணுகிறோம். ஆனால் இவற்றை மைய பாங்கு ஒழுங்கு செய்ய முனையும்போது வாணிக பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தைத் தன்னிச்சைப்படி கட்டுப்படுத்தக்கூடிய உரிமையை மைய பாங்கு ஓரளவுக்கு இழக்க நேரிடும். ஏனெனில் நிலையான அயல்நாட்டுச் செலாவணி வீதங்களை நிலை நாட்டும் பொருட்டுச் சில சமயங்களில் மைய பாங்கானது அயல்நாட்டுச் செலாவணிகளை விற்க நேரிடுகிறது; வேறு செலாவணிகளை மைய பாங்கு விற்கும்போது பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கம் குறைகிறது. இதுபோல அயல்நாட்டுச் செலாவணிகளை மைய பாங்கு விலைக்கு வாங்கும்போது பாங்கு கட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கம் அதிகமாகிறது. அயல்நாட்டுச் செலாவணி வீதத்தை நிலையாக வைத்திருப்பதற்கு எந்த விலை உகந்தது என்று மைய பாங்கு கருதுகின்றதோ, அந்த விலையி லேயே மைய பாங்கானது அயல்நாட்டுச் செலாவணியை விலைக்கு வாங்குகிறது அல்லது விற்கிறது. பொன் திட்டமுறை இதற்கு முற்றிலும் மாறுபட்ட ஒன்றாகும். இம் முறையின்கீழ்த் தங்க விலை அன்றி அயல்நாட்டுச் செலாவணி வீதம் நிர்ணயம் செய்யப்பட்டுவிடுகிறது. இந் நிர்ணயிக்கப்பட்ட விலையிலேயே மையப் பாங்கு அயல் நாட்டுச் செலாவணியை விலைக்கு வாங்கு கிறது அல்லது விற்கிறது.[1] நாட்டில் அயல் நாட்டுச் செலாவணி களின் அளிப்பு, அவற்றிற்கான தேவைகளைவிட மிகுதியாக இருந் தால், மையப் பாங்கு அயல் நாட்டுச் செலாவணிகளை விலைக்கு வாங்குகின்றது. ஆனால், நாட்டில் அயல் நாட்டுச் செலாவணிகளுக் கான தேவை அவற்றின் அளிப்பைவிட அதிகமாக இருந்தால் மையப் பாங்கு அயல் நாட்டுச் செலாவணிகளை விற்பனை செய் கின்றது. பொன் திட்ட முறையை மையப் பாங்கு கடைப்பிடித் தாலும் அன்றிக் கடைப்பிடிக்காவிடினும், தனது அயல் நாட்டுச் செலாவணிக் கொள்கையின்மூலம் நாட்டிலுள்ள ரொக்க அளவினை (அதாவது தான் விலைக்கு வாங்கியுள்ள தங்கம் அல்லது அயல் நாட்டுச் செலாவணியின்மூலம் மையப் பாங்கால் உற்பத்தி செய் யப்படும் ரொக்க அளவினை) மையப் பாங்கு தீர்மானிக்க முயலுமே யன்றி, நாட்டிலுள்ள ரொக்க அளவின்மூலம் (அதாவது தான் விலைக்கு வாங்கியுள்ள தங்கம் அல்லது அயல் நாட்டுச் செலாவணி

[1] பன்னாட்டுச் செலாவணி நிதி (IMF) உள்நாட்டுச் செலாவணிகளின் அயல் நாட்டு மதிப்பை நிர்ணயித்துள்ளது. மேலே கொடுத்துள்ளவை யாவும் இதற்கும் பொருந்தும்.

யின் மூலம் மையப் பாங்கால் உற்பத்தி செய்யப்படும் ரொக்க அள வின் மூலம்) அயல் நாட்டுச் செலாவணிக் கொள்கையை மையப் பாங்கு தீர்மானிக்க முயலாது.[1]

இந் நாடுகளின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலைகளில் (balance af payments) ஓரளவு மாற்றங்களே நேர்ந்துகொண்டிருக் கும் பட்சத்தில், மேலே நாம் குறிப்பிட்டுள்ள உண்மைகளை இந் நாடுகள் கவனத்தில் கொள்ளாவிடினும் கேடுகள் ஏதும் நேர்ந்து விடா. ஆனல், உண்மையில் இந் நாடுகளின் அயல் நாட்டுக் கொடுப்பல் நிலைகளில் பெருமளவு மாற்றங்கள் நேருவதற்கான வாய்ப்புகளே ஏராளமாக உள்ளன. இந்த நாடுகள் ஒரு சில பொருள்களையே பிற நாடுகட்கு ஏற்றுமதி செய்கின்றன. இந்த ஒரு சில பொருள்களும் சுரங்கப் பொருள்கள், விவசாயப் பொருள் கள் போன்ற மூலப் பொருள்களாகவே உள்ளன. பருவ காலங் களில் நேரக்கூடிய மாற்றங்களின் விளைவாக இவற்றின் உற்பத்தி பாதிக்கப்படலாம். மூலப் பொருள்களின் விலைகள் நிலையான விலை கள் என்று கூறிவிட முடியாது. இந்த விலைகளில் காலத்திற்குக் காலம் பெருமளவு ஏற்றத் தாழ்வுகள் நேர்ந்துகொண்டே இருக் கின்றன. குறிப்பிட்ட ஒரு சில பொருள்களையே இந்நாடுகள் ஏற்று மதி செய்து வருவதால், வெளிநாட்டு மார்க்கெட் ஒன்றில் இப் பொருள்களுக்கான தேவை பெரிதும் குறைய நேர்ந்தால் இந் நாடு களின் வாணிகக் கொடுப்பல் நிலை (balance of trade) பெரிதும் பாதிக்கப்படும். இவ்வாறன பலவித காரணங்களாலும் இந் நாடு கள் ஒவ்வொன்றும் ஏற்றுமதி செய்யக்கூடிய பொருள்களின் மொத்த மதிப்பானது பெருமளவு மாற்றங்களுக்கு உள்ளாக நேர லாம். ஏற்றுமதி செய்யக்கூடிய பொருள்களின் மொத்த மதிப்பில் நேரக்கூடிய மாற்றங்களை யொட்டியே, இந் நாடுகளில் முதலீடு செய்யக்கூடிய வெளி நாட்டு மூலதனங்களின் அளவிலும் மாற்றங் கள் நேருகின்றன. வளமான காலங்களில் (முதலீடு செய்யும் வெளிநாட்டவர் இந்நாடுகளில் வாய்ப்பான சூழ்நிலைகள் உருவாகி யுள்ளன என்று கருதுவதால், நெடுங்கால மூலதனத்தைப் பெரு மளவில் முதலீடு செய்ய முன்வருகின்றனர். எனவே சாதகமான வாணிகக் கொடுப்பல் நிலை தொடர்ந்து நேரக்கூடிய காலங்களில்

1 1950-59க்கு இடைப்பட்ட காலத்தில் கனடாவின் தலைமை பாங்கு ஓர் 'இலட்சிய' கொள்கையைக் கடைப் பிடித்து வந்தது என்று கூறலாம். அயல் நாட்டுச் செலாவணி வீதங்களை நிலைபடுத்தும் நோக்கம் ஏதும் இல்லாவிடினும் தலைமை பாங்கு தொடர்ந்து அயல் நாட்டுச் செலாவணி மார்க்கெட்டில் தலை யிட்டுக் கொண்டே இருக்கும். இதன் விளைவாக வாணிக பாங்குகட்குக் கிடைக்கக் கூடிய ரொக்கத்தைக் கனடாவின் தலைமை பாங்கால் எளிதில் கட்டுப்படுத்த முடியவில்லை.

இந்நாடுகளை நோக்கி ஓடக்கூடிய வெளிநாட்டு மூலதனத்தின் (நெடுங்கால மூலதனத்தின்) அளவும் அதிகமாகவே உள்ளது.[1]

இந் நாடுகளின் பன்னாட்டுக் கொடுப்பல் நிலை, பெரும் மாற்றங் கட்கு உட்பட்டன என்பதும் இந் நாடுகள் அயல் நாட்டுச் செலா வணி வீதங்களை நிலைப்படுத்த விரும்புகின்றன என்பதும் உண் மையேயாயின், பாதகமான காலங்களில் பயன்படுத்துவதற்குச் சாதகமான காலங்களில் அயல்நாட்டுச் செலாவணியையோ, தங் கத்தையோ திரட்டி வைப்பதற்கு இந் நாடுகளிலுள்ள மையப் பாங்குகள் முன்வர வேண்டும். மையப் பாங்கின் பணிகளுள் இது வும் ஒரு பணியே யாகும். பாதகமான காலங்களில் பயன்படுத்து வதற்காகச் சாதகமான காலங்களில் திரட்டப்படுகின்ற அயல் நாட்டுச் செலாவணி இருப்புகளை ஆஸ்திரேலியாவில் 'வறட்சிக் கால காப்பிருப்புகள்' (drought reserves) என்ற பெயரிட்டு அழைக் கின்றனர். இப் பெயர் பொருத்தமான பெயராகவே தோன்றுகிறது. அயல்நாட்டுச் செலாவணி வீதம் நிர்ணயிக்கப்பட்ட வீதம் என்று நாம் வைத்துக்கொண்டால், இந்த வீதத்தை ஸ்திரமாக வைத் திருக்கும் நோக்கத்துடன் மையப் பாங்கு செயலாற்ற வேண்டியது அவசியமாகும். எனவே, அயல் நாட்டுச் செலாவணிகளின் போக்குவரத்துகளால் இச் செலாவணி வீதம் பாதிக்கப்படாமல் மைய பாங்கு காத்துக்கொள்ள வேண்டும். இப் போக்குவரத்துகட் கேற்ப தன்னிடமுள்ள ஏனைய சொத்துகளில் மைய பாங்கு மாற் றங்களைச் செய்யவேண்டியது இன்றியமையாததாகும். தங்கம் அல்லது அயல் நாட்டுச் செலாவணிகள் ஒரு நாட்டிற்குப் பெரு மளவு கிடைக்கும்போது, அந்நாட்டின் மைய பாங்கு தன்னிட முள்ள ஏனைய சொத்துகளைக் குறைத்துக்கொள்ள வேண்டியது அவசியமாகும். இதேபோல தங்கம் அல்லது அயல் நாட்டுச் செலா வணிகள் பெருமளவு நாட்டை விட்டு வெளியேறும்போது மைய பாங்கு ஏனைய சொத்துகளை அதிகரித்துக்கொள்ளவேண்டியது அவசியமாகும். எனவே, தன்னிடமுள்ள தங்க இருப்புகளையோ, அன்றி அயல் நாட்டுச் செலாவணி இருப்புகளையோ மாற்றி அமைப்பதன்மூலம் வாணிக பாங்குக்குக் கிடைக்கக்கூடிய ரொக் கத்தைத் தன்னால் ஆற்றலுடன் மாற்றமுடியுமா என்பதையொட்டி

1 சாதகமான அயல்நாட்டு வாணிகக் கொடுப்பல் நிலை நேர்ந்துள்ள காலங் களில் வெளி நாடுகளினின்றும் பெருமளவு கடன்கள வாங்குவதிலுள்ள கேடுகளை 1929ஆம் ஆண்டு முதல் இந் நாடுகள் உணர்ந்துள்ளன என்றே கூறவேண்டும் உதாரணமாக ஆஸ்திரேலிய மத்தியக் கடன் சபை (Australian Federal Loan Council) இது போன்ற காலங்களில் அயல் நாட்டுக் கடன்களைப் பெரு மளவில் வாங்க முன்வருவதில்லை. மைய பாங்குத் துணையாக இதுபோன்ற சபைகளை ஏனைய நாடுகளும் நிறுவலாம். பன்னாட்டுக் கடன் கொடுக்கும் வாய்ப்புகள் விரிவடைந்துள்ள தற்காலத்தில் (உதாரணமாக உலக பாங்கு நிறுவப்பட்டுள்ளது.) உண்மையில் கடன் வாங்கும் நாடுகள் தாங்கள் பெறும் அயல நாட்டுக் கடன்களை ஒழுங்கு செய்தே வருகின்றன.

வேறு ஒரு நடவடிக்கையில் மைய பாங்கு ஈடுபட வேண்டிய கட்டாய நிலை அதற்கு நேரலாம். அதாவது நாட்டின் அயல்நாட்டுச் செலாவணிக் கொள்கைக்கு ஏற்ப, தன்னிடமுள்ள ஏனைய சொத்துகளை மைய பாங்கு மாற்றி அமைக்கவேண்டிய கட்டாய நிலை நேர்ந்துள்ளது.

இந்த ஏனைய சொத்துகளை மைய பாங்கு மாற்றியமைப்பதிலுள்ள இடர்ப்பாடுகளை நாம் ஏற்கெனவே கண்டோம். இவற்றை மாற்றி அமைப்பதற்கான வாய்ப்புகள் இந்நாடுகளில் மிக மிகக் குறைவு என்றும் கண்டோம். வளமான காலங்களில் மைய பாங்கிடம் வாணிக பாங்குகள் கடன்பட்டிருக்கும் என்று கொள்வதற்கில்லை. ஏனெனில் வளமான காலங்களில் சாதகமான அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையே நேர்ந்திருக்கும். சாதகமான அயல் நாட்டுக் கொடுப்பல் நிலையை யொட்டிப் பெருமளவு அயல்நாட்டுச் செலாவணிகளை மைய பாங்கு விலைக்கு வாங்கியிருக்கும். இவற்றிற்கு ஈடாக உள்நாட்டுச் செலாவணியை மைய பாங்கு உற்பத்தி செய்திருக்கும். இவ்வாறு அதிகரிக்கக்கூடிய உள்நாட்டுச் செலாவணிகளைப் பயன்படுத்தி மைய பாங்கிடமிருந்து தாங்கள் வாங்கியிருக்கக்கூடிய கடன்களை வாணிக பாங்குகள் திருப்பிச் செலுத்திவிடும். இதுபோன்ற சூழ்நிலைகளில் அயல்நாட்டுச் செலாவணிகளின் போக்குவரத்துகளை ஈடு செய்வதன்மூலமே மைய பாங்கால் நிலைமையைக் கட்டுப்படுத்த முடியும். வெளி மார்க்கெட் நடவடிக்கைகளின்மூலம் அயல் நாட்டுச் செலாவணிகளின் போக்குவரத்துகளை மைய பாங்கு ஈடு செய்ய முயலலாம். ஆனால், இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளிலுள்ள மைய பாங்குகள் வெளி மார்க்கெட் நடவடிக்கைகளில் ஆற்றலுடன் ஈடுபட முடிவதுபோல இந்நாடுகளிலுள்ள மைய பாங்குகளால் ஈடுபட முடிவதில்லை.

நிலைமை இவ்வாறிருக்க இந் நாடுகளில் மைய பாங்குகள் செயலாற்றி வருவதால் கிடைக்கக்கூடிய பயன் தான் என்னே? என்ற வினா எழுவது இயற்கையே. எனினும் இந்நாடுகளில் மைய பாங்குகள் நிறுவப்படுவதால் சில நன்மைகள் ஏற்பட வாய்ப்புகள் உள்ளன என்றே நாம் கருதுகிறோம். அயல் நாட்டுச் செலாவணி வீதத்தை நிலையாகப் போற்றிப் பாதுகாப்பதைத் தனது குறிக்கோளாகக் கொண்டிருக்கக்கூடிய ஒரு நாட்டில் மைய பாங்கு பயனுள்ளதாகத் திகழ முடியும். இதற்கு ஆதரவாக இரண்டு வாதங்கள் உள்ளன. அயல் நாட்டுச் செலாவணி வீதத்தை நிலைப்படுத்தும் எண்ணமே இல்லாத நாடுகளிலும் மைய பாங்குகள் பயனுடையவைகளாகவே திகழ முடியும். இதற்கு ஆதரவாக ஒரு வாதம் உள்ளது. இவ் வாதங்கள் யாவை என்பது குறித்து இனி ஆராய்வோம். மைய பாங்கு வெளி மார்க்கெட் நடவடிக்கைகளில் ஈடு

பட்டு வாணிக பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தை ஒழுங்கு செய்வதற்கு ஏதேனும் வாய்ப்புகள் இந் நாடுகளில் உள்ளனவா என்பது குறித்து இதுகாறும் நாம் ஆராய்ந்தோம். இது தவிர வேறு ஒரு வாய்ப்பு உள்ளது. தன்னிடமுள்ள பொறுப்புகளின் தொகுதியில் சில மாற்றங்களைச் செய்வதன்மூலம் தன்னுடைய குறிக்கோளை மைய பாங்கால் நிறைவேற்ற முடியும். மைய பாங்கு அரசாங்கத்தின் பாங்கர் என்பதை நாம் அறிவோம். இவ்வாறு தான் அரசாங்கத்தின் பாங்கராகத் திகழ்வதைத் தனக்குச் சாதகமானதாக மைய பாங்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்பதே எமது கூற்றுகும். அயல் நாட்டுச் செலாவணிகள் அதிகமாகக் கிடைக்கக்கூடிய காலங்களில் தன்னிடமுள்ள உள்நாட்டுச் சொத்துகளை மைய பாங்கால் குறைக்க இயலாவிட்டாலும், தன்னிடமுள்ள 'பொதுத்துறைகளின் டெபாசிட்டுகளை' (அதாவது தன்னிடமுள்ள அரசாங்க இருப்புகளை)க் குறைப்பதன்மூலம் வாணிகப் பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தை மைய பாங்கால் குறைக்க முடியும். அதாவது அரசாங்கத்தின் வரவுகளைவிட அரசாங்கத்தின் செலவுகள் குறைவாக அமையவேண்டும், தன்னிச்சைபடி இவ்வாருன நிலை ஒன்றினை மைய பாங்கால் உருவாக்க முடியாது என்பது உண்மையே. எனினும் அரசாங்கத்தின் கூட்டுறவோடு இது போன்றதொரு நிலையை மைய பாங்கால் உருவாக்க முடியும். மைய பாங்குக்கும் கருவூலத்திற்கும் இடையே நெருங்கிய தொடர்புகள் இருக்கவேண்டியது மிக அவசியம் என்று வலியுறுத்தப்படுவதற்கு இதுவும் ஒரு காரணமாகும்.

ஈண்டு நாம் ஒன்றினை வலியுறுத்த விரும்புகிறோம். பொதுத் துறைகளின் டெபாசிட்டுகளை மாற்றி அமைக்கும் ஆற்றலோடு மைய பாங்கு திகழவேண்டும் என்று மேலே நாம் கூறியுள்ளோம். இவ்வாருன மாற்றங்கள் அரசாங்கத்தின் வரவுகளைவிடச் செலவுகள் மிகுதியாவதையொட்டியும், செலவுகளைவிட வரவுகள் மிகுதியாவதையொட்டியுமே நேரவேண்டும். அரசாங்கம் கடன்களைத் திருப்பித் தருவதையொட்டியும், கடன்களை எழுப்புவதை யொட்டியும் இம் மாற்றங்கள் ஏற்படுவதால் பயன் ஏதும் இல்லை. அரசாங்கத்தின் கடன் நடவடிக்கைகளையொட்டியே பொதுத் துறைகளின் டெபாசிட்டுகளில் மாற்றங்கள் நேரவேண்டியிருந்தால், மைய பாங்கு அரசாங்கத்தின் உதவியை நாடவேண்டிய அவசியமே இல்லை. மார்க்கெட்டில் பத்திரங்களை அரசாங்கத்தால் விற்க முடியுமேயாயின், மைய பாங்கிலும் தன்னிடமுள்ள பத்திரங்களை விற்க முடியும். இதேபோல அரசாங்கத்தால் பத்திரங்களை மீட்க முடியுமேயாயின் மைய பாங்கும் மார்க்கெட்டில் பத்திரங்களை விலைக்கு வாங்க முடியும். அதாவது பத்திரங்கட்குச் சிறந்ததொரு

மார்க்கெட்டானது தோன்றியிருப்பின், கருவூலத்தின் தயவை நாடவேண்டிய அவசியம் ஏதுமின்றி மைய பாங்கானது தன்னிச்சைப்படி பத்திரங்களை வாங்கவோ அன்றி விற்கவோ முடியும். ஆனால் இந் நாடுகளில் பத்திரங்கட்குப் பெருமளவிலான மார்க்கெட் கிடையாது என்று நாம் ஏற்கெனவே கண்டோம். எனவே 'பொதுத் துறைகளின் டெபாசிட்டுகளை' மாற்றி அமைக்க வேண்டும் என்று நாம் கூறுவது அரசாங்கக் கடன் நடவடிக்கைகளின்மூலம் 'பொதுத் துறைகளின் டெபாசிட்டுகளை' மாற்றி அமைக்கவேண்டும் என்பதாகாது. அரசாங்கத்தின் வரவுகளை விடச் செலவுகள் அதிகமாவதாலும், அரசாங்கத்தின் செலவுகளை விட வரவுகள் அதிகமாவதாலும், 'பொதுத் துறைகளின் டெபாசிட்டுகளில்' மாற்றங்கள் நேரவேண்டும். இவ்வாறு செய்வதால் மற்றும் ஒரு அனுகூலமும் கிட்டலாம். அரசாங்கத்தின் வரவுகளை விடச் செலவுகள் அதிகமாகும்போது பணவீக்க நிலை நேரடியாகவே நாட்டில் உருவாகும். இதுபோல அரசாங்கத்தின் செலவுகளைவிட வரவுகள் அதிகமாகும்பொழுது பணச் சுருக்க நிலை நேரடியாகவே நாட்டில் உருவாகும்.[1] மைய பாங்கு பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த முயலும்போது, அரசாங்கத்தின் வரவுகள் செலவுகளைவிட அதிகமாக இருப்பது பயனுள்ளதாகவே அமையும்; அதாவது மைய பாங்கிடமுள்ள பொதுத் துறைகளின் டெபாசிட்டுகள் அதிகமாவது பயனுள்ளதாகவே அமையும். இதுபோலவே மைய பாங்கு பணச் சுருக்கத்தைக் கட்டுப்படுத்த முயலுங்கால், அரசாங்கத்தின் செலவுகள் வரவுகளைவிட அதிகமாக இருப்பது பயனுள்ளதாகவே அமையும்; அதாவது மைய பாங்கிடமுள்ள பொதுத் துறைகளின் டெபாசிட்டுகள் வீழ்ச்சியுறுவது பயனுள்ளதாகவே அமையும்.

தங்களிடமுள்ள மொத்தச் சொத்துகளை மாற்றி அமைப்பதன் மூலமோ, தங்களுடைய மொத்தப் பொறுப்புகளின் தொகுதியை மாற்றி அமைப்பதன் மூலமோ, வாணிக பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தை மைய பாங்கு கட்டுப்படுத்துதற்குரிய வாய்ப்பு ஏதேனும் உள்ளனவா என்று நாம் மேலே ஆராய்ந்தோம். இம் முறைகளைக் கையாளுவதையொட்டி மைய பாங்குக்கு நேரக்கூடிய இடர்ப்பாடுகளையும் கண்டோம். இவை தவிர வாணிக

1 அரசாங்கத்தின் வரவுகளைவிடச் செலவுகள் அதிகமாகும்போது பொருள்கள், சேவைகள் ஆகியவற்றிற்கான அரசாங்கத் தேவைகள் பெருகும். பொது மக்களின் தேவைகள எவ்வளவு குறைந்துள்ளனவோ அதைவிட அதிகமான அளவினவாக அரசாங்கத் தேவைகள பெருகும். எனவே, நாட்டிலுள்ள மொத்த தேவைகள் அதிகமாகும். அதாவது நாட்டில் பண வீக்கநிலை ஏற்படுவது சாத்தியமாகும். இதேபோல அரசாங்கத்தின் செலவுகளைவிட வரவுகள் அதிகமாகும்போது அரசாங்கத்தின் தேவைகள் பெருமளவு குறையும். இதையொட்டி மொத்தத் தேவைகள் குறையும். அதாவது நாட்டில் பணச் சுருக்க நிலை ஏற்படுவது சாத்தியமாகும்.

பாங்குகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதற்கு ஏதுவான மற்றொரு முறையும் உள்ளது. இம் முறையைக் கையாண்டு மைய பாங்கு ஆற்றலுடன் வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்த முடியும். வாணிக பாங்குகள் தங்களிடம் கட்டாயம் வைத்திருக்க வேண்டிய ரொக்க விகிதங்களை மாற்றி அமைக்கும் அதிகாரத்தை மைய பாங்குக்கு இந் நாடுகள் வழங்க முன்வர வேண்டும். உண்மையில் பெரும்பாலான நாடுகளிலுள்ள மைய பாங்குகட்கு இந்த அதிகாரம் வழங்கப்பட்டிருக்கிறது. வாணிக பாங்குகட்குப் பெருமளவு ரொக்கம் கிடைப்பதையொட்டிப் பண அளிப்பு அதிகமாக நேரும். இது போன்ற சூழ்நிலையில் தங்களிடம் வாணிக பாங்குகள் வைத்திருக்கவேண்டிய ரொக்க விகிதங்களை உயர்த்துவதன்மூலம் பண அளிப்பு அதிகரிக்காமல் மைய பாங்குகள் கண்காணித்துக்கொள்ள முடியும். வாணிக பாங்குகட்கு மிகக் குறைந்த அளவு ரொக்கமே கிடைக்கக்கூடிய காலங்களில் நாட்டிலுள்ள பண அளிப்பு குறைய நேரும். இது போன்ற சூழ்நிலைகளில் தங்களிடம் வாணிக பாங்குகள் வைத்திருக்க வேண்டிய ரொக்க விகிதங்களைக் குறைப்பதன் மூலம் நாட்டிலுள்ள பண அளிப்பு சுருங்கிவிடாமல் மைய பாங்கு கண்காணித்துக்கொள்ள முடியும்.[1] ரொக்க விகிதங்களைக் கூட்டவும் குறைக்கவும் மைய பாங்கு அதிகாரம் பெற்றிருந்தால், வாணிக பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய இலாபம் பாதிக்கப்படலாம் என்ற ஒரே ஒரு குறையைத்தான் இக் கட்டுப்பாட்டு முறையின்மீது சுமத்த முடியும். (இதைக்கூட ஒரு குறையாக நாம் கருதிவிட முடியாது. ஏனெனில் இம் முறையை மைய பாங்கு கடைப் பிடிப்பதன் விளைவாக வாணிக பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய இலாபங்கள் நிலையானவைகளாக அமைவதற்கான வாய்ப்புகள் உள்ளன.) எனவே குறுங்காலப் பண மார்க்கெட் செம்மையான முறையில் வளர்ச்சியுற்றிராத நாடுகளிலெல்லாம் மைய பாங்குகட்கு இவ்வாறான அதிகாரம் வழங்கப்பட வேண்டியது இன்றியமையாததாகும். இந்த அதிகாரத்தைப் பெற்றுள்ள மைய பாங்குகள் வாணிக பாங்குகளால் ஆற்றமுடியாத பயனுள்ள பணிகளை ஆற்றமுடியும்.

1 வாணிக பாங்குகள் தங்கள் ரொக்க விகிதங்களை நிலையானவைகளாக அமைந்துள்ளன என்று நாம் மேலே வைத்துக்கொண்டுள்ளோம். குறுங்காலப் பண மார்க்கெட்டு இந் நாடுகளில் உருவாகவில்லை. மேலும் மைய பாங்கானது கடைநிலைக் கடன் ஈவோனாகத் திகழ்கின்றது என்று கூறுவதற்கில்லை. எனவே இந் நாடுகளிலுள்ள வாணிக பாங்குகளிடமுள்ள ரொக்க விகிதங்களில் நிலைத்த தன்மையைக் காண முடிவதில்லை. ரொக்க விகிதங்களில் பெருமளவு மாற்றங்கள் நேர்ந்தவண்ணமே இருக்கின்றன. இந் நாடுகளிலுள் மைய பாங்குகள் கடைநிலைக் கடன் ஈவோன்களாகத் திகழும் பட்சத்தில், காலப்போக்கில் தங்களிடம் நிலையான கையிருப்பு ரொக்கம் வைத்திருக்கும் பழக்கத்தை வாணிக பாங்குகள் கைக்கொள்ளும். மற்றும் வாணிக பாங்குகளிடமுள்ள அயல்நாட்டுச் செலாவணிகளின் இருப்பை மைய பாங்கிடம் மாற்றுவதற்கான ஏற்பாடுகளும் செய்யப்பட்டால் வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளை மைய பாங்கால் ஆற்றலுடன் கட்டுப்படுத்த முடியும்.

சில நாடுகள் நிலையான அயல் நாட்டுச் செலாவணி வீதங்களைப் போற்றிப் பாதுகாப்பதை ஒரு கொள்கையாகக் கடைப்பிடித்து வரலாம். வேறு சில நாடுகள் நிலையான அயல் நாட்டுச் செலாவணி வீதங்களில் நாட்டம் செலுத்தா திருக்கலாம் இவ்விரு தன்மைத்தான நாடுகளிலுமுள்ள மைய பாங்குகட்கு நாம் மேலே குறித்துள்ள அதிகாரம் வழங்கப்பெற்ருல், அவை ஆற்றலுடன் திகழும். ஒரு நாட்டில் மைய பாங்கு இன்னும் நிறுவப்படவில்லை என்றும், அயல் நாட்டுச் செலாவணி வீதங்களின் நிலைத்த தன்மையில் இந் நாடானது நாட்டம் செலுத்தவில்லை என்றும் நாம் வைத்துக் கொண்ட போதிலும், இந் நாட்டில் மைய பாங்கோ, அன்றி மைய பாங்கு போன்றதொரு நிறுவனமோ நிறுவப்பட வேண்டிய சூழ்நிலை விரைவில் உருவாகும். இது எவ்வாறு என்று காண்போம், மைய பாங்கு நிறுவப்பெருத இந் நாட்டிலுள்ள வாணிக பாங்குகளிடம் பெருமளவில் அயல் நாட்டுச் செலாவணி இருப்புகள் இருக்கும். தங்களுடைய பொதுவான பாங்குத் தொழிலுக்கு ஏற்ற முறையில் வாணிக பாங்குகள் இவ்வாறு அயல் நாட்டுச் செலாவணி இருப்புகள் வைத்திருக்க வேண்டியதிருக்கும். அயல் நாட்டுச் செலாவணி மார்க்கெட்டில் வாணிக பாங்குகளே முக்கியமான வர்த்தகர்களாகத் திகழும். ஆனுல் இதுபோன்ற நிலை நெடுங்காலத்திற்கு நீடித்திருக்க முடியாது நாட்டிலுள்ள தொழில், வர்த்தகம் ஆகியவற்றின் நலன் கருதி அயல்நாட்டுச் செலாவணி மார்க்கெட்டில் அரசாங்கம் அக்கறை காட்ட வேண்டிய நிலை ஏற்படும். அயல் நாட்டுச் செலாவணி வீதங்களை ஒழுங்கு செய்ய அரசாங்கம் முன்வர வேண்டியதிருக்கும். வாணிக பாங்குகளின் ஒத்துழைப்பைப் பெற்றே அரசாங்கம் சிறந்த முறையில் இதுபோன்ற செயல்களில் ஈடுபட முடியும். எனினும் அயல்நாட்டுச் செலாவணி வீதங்களை அரசாங்கம் மாற்றி அமைக்க முனைந்தால், தங்கட்குப் பெரும் இழப்புகள் நேரும் என்று வாணிக பாங்குகள் கருதுவதால், அரசாங்கத்தின் நடவடிக்கைகளை அவை குறை கூற நேரிடலாம். இவ்வாருன குறைகளை நீக்குமுகத்தான் அயல்நாட்டுச் செலாவணி இருப்புகள் யாவற்றையும் தன் வசமாக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டியதிருக்கும். தான் விரும்பிய வண்ணமே அயல்நாட்டுச் செலாவணி வீதத்தை மாற்றி அமைக்கும் பொறுப்பை அரசாங்கமே ஏற்றுக்கொள்ள முன்வர வேண்டியதிருக்கும். இதுபோன்ற விஷயங்களைக் கண்காத்துக் கொள்ளும் பொருட்டுப் புதியதொரு நிறுவனத்தை அரசாங்கம் நிறுவ முன்வரலாம். 1930ஆம் ஆண்டிற்குப் பின் நியூஸிலாந்தில் இது போன்றதொரு சூழ்நிலையே உருவாகியது. ஆஸ்திரேலியாவிலும் இவ்வாறே நேர்ந்தது. எனவே நிலையான அயல் நாட்டுச் செலாவணி வீதத்தைப் போற்றிப் பாதுகாக்க வேண்டியது

அவசியமே என்று ஒரு நாடு உணரும்பட்சத்தில், மைய பாங்கு நிறுவப்பட வேண்டியது அவசியமே என்றும் அந்த நாடு உணரும். நிலையான அயல் நாட்டுச் செலாவணி வீதத்தில் நாட்டங் கொள்ளாத ஒரு நாட்டிலும், மைய பாங்கு நிறுவப்பட வேண்டியது அவசியமானதே யாகும். இந்த நாட்டின் அரசாங்கமானது அயல்நாட்டுச் செலாவணி மார்க்கெட்டில் ஒரு சிறிதும் ஆர்வம் காட்டாது என்று நாம் கொள்வதற்கில்லை. எவ்விதமான கட்டுப் பாடுகளும் இன்றி, அயல் நாட்டுச் செலாவணி மார்க்கெட் இயங்கி வருவதை இந்த நாட்டின் அரசாங்கம் விரும்பும் என்றும் கொள்வதற்கில்லை அயல்நாட்டுச் செலாவணி வீதத்தை ஓரளவுக்காவது ஒழுங்கு செய்வதையே இந்த அரசாங்கம் விரும்பும். எனவே, இப் பணியை ஆற்றி வருவதற்கு ஒரு நிறுவனம்—அதாவது மைய பாங்கு—இந் நாட்டிலும் ஏற்படுத்தப்பட வேண்டியது இன்றியமையாததாகும்.

அயல்நாட்டுச் செலாவணிக் கொள்கையைச் செயல்படுத்துவதற்கென்றே இந் நாடுகளில் மைய பாங்குகள் நிறுவப்பெற்ற போதிலும், வேறு சில துணைப் பணிகளையும் இம் மைய பாங்குகளால் ஆற்றமுடியும். அரசாங்கத்தின் நிதிக் கொள்கையால் நேரக்கூடிய பொருளாதார விளைவுகளை இம் மைய பாங்குகள் அரசாங்கத்திடம் எடுத்துரைக்கலாம். நெடுங்கால மூலதனத்தை அயல்நாடுகளினின்றும் பெறுவதையும், அயல்நாடுகட்கு அனுப்புவதையும் ஒழுங்கு செய்வதைப் பொறுத்த வரையில் இம் மைய பாங்குகள் அரசாங்கத்துடன் ஒத்துழைக்கலாம். பிறரைத் தம் வழிப்படுத்தும் கலையில் மைய பாங்கு தேர்ந்து விளங்கினுல் இப் பணிகளை மைய பாங்கு ஆற்றலுடன் புரிந்து வரமுடியும். தாம் விரும்பும் வண்ணமே வாணிக பாங்குகளைத் தம்முடைய வழிக்குக் கொண்டுவருவதன் மூலம், மைய பாங்குகள் நேரடியாகவே பொருளாதார நடவடிக்கைகளை மாற்றி அமைக்கமுடியும். வட்டி வீதத்தில் மாற்றங்கள் செய்வதன் மூலமும் பொருளாதார நடவடிக்கைகளை மைய பாங்குகளால் மாற்றி அமைக்கமுடியும். ஆனுல் வட்டி வீத மாற்றத்தையொட்டி மைய பாங்குகள் எதிர் பார்க்கக் கூடிய விளைவுகள் உடனடியாக நேர்ந்துவிடா. மேலும் வட்டி வீத மாற்றத்தால் நேரக்கூடிய விளைவுகள் குறிப்பிடத் தக்கவையாகவும் அமையா. சில சமயங்களில் இந் நாடுகளில் பண வீக்க நிலை உருவாகலாம். இந் நாடுகளின் பொருள்கள் வெளி நாடுகட்குப் பெருமளவில் அடுத்தடுத்து ஏற்றுமதி செய்யப் படுவதையொட்டி இந் நாடுகளில் பண வீக்க நிலை உருவாகலாம். இதையொட்டி ஏற்றுமதிப் பொருள்களை உற்பத்தி செய்யும் தொழிலதிபர்களுடைய வருவாய்கள் அதிகமாகும். வளமான காலப்

உருவாகியுள்ளது என்ற உறுதியான நம்பிக்கையில் அரசாங்கம் பெருமளவு செலவுகள் செய்ய முன்வரும். வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளைத் தான் விரும்பிய வண்ணமே மைய பாங்கால் கட்டுப்படுத்த முடியுமேயாயின், மைய பாங்கால் நாட்டில் உரு வாகியுள்ள பண வீக்கத்தையும் கட்டுப்படுத்த முடியும். தாங்கள் ஏற்பாடு செய்துவரும் கடன் வசதிகளை வாணிக பாங்குகள் குறைத்துக்கொள்ளவேண்டும் என்று மைய பாங்கு கேட்டுக்கொள் வதற்கு ஏற்பத் தாங்கள் ஏற்பாடு செய்துவரும் கடன் வசதிகளை வாணிக பாங்குகள் குறைக்க முன்வந்தால், மைய பாங்கால் நிலைமையை ஆற்றலுடன் கட்டுப்படுத்த முடியும். வட்டி வீதங் களை உயர்த்துவதால் நேரக்கூடிய விளைவுகளைவிட மைய பாங்கின் இம் முயற்சியால் நேரக்கூடிய விளைவுகள் மிக்க ஆற்றலுடையவை களாக இருக்கும். இம் முறைகளைவிட ஆற்றலுடைய மற்றொரு முறையையும் மைய பாங்கு, கடைப்பிடித்துப் பண வீக்க நிலை யைக் (பொருள்களின் ஏற்றுமதி மிகுந்திருப்பதையொட்டி உரு வாகியுள்ள பண வீக்க நிலையை) கட்டுப்படுத்தமுடியும். அதாவது உள்நாட்டுச் செலாவணியின் அயல்நாட்டு மதிப்பை மைய பாங்கு உயர்த்தவேண்டும். இதன் விளைவாக ஏற்றுமதிப் பொருள்களின் உற்பத்தியாளர்கட்குக் கிடைக்கக்கூடிய வருவாய்கள் (உள் நாட்டுச் செலாவணியின்மூலம் கிடைக்கக்கூடிய வருவாய்கள்) குறைய நேரிடும். தன்னுடைய செலவுகளையும், வரிவிதிப்பையும் நிலைமைக்கு ஏற்றவாறு அரசாங்கம் மாற்றி அமைத்துக்கொள் வதன் மூலமும், நிலைமையை ஓரளவுக்குக் கட்டுப்படுத்த முடியும். வெளிநாடுகளினின்றும் வரக்கூடிய மூலதனங்களின்மீது கட்டுப் பாடுகளை விதிப்பதன் மூலமும், நாட்டில் உருவாகியுள்ள பண வீக்க நிலையை மட்டுப்படுத்த முடியும்.[1] இதுபோன்ற நோக்கங்களை அடைவதற்கு மைய பாங்கு உறுதுணையாகத் திகழவேண்டியது மிகவும் அவசியமாகும். இதுபோலவே நாட்டின் அயல்நாட்டுத் தொடர்புகளையொட்டிப் பணச் சுருக்க நிலை உருவாகக்கூடிய காலங்களில் பணப் பெருக்கத்தை உண்டாக்கக்கூடிய முறைகளைக் கையாண்டு நிலைமையைக் கட்டுப்படுத்தவேண்டியது மைய பாங்கின் கடனேயாகும்.

எனவே, அமெரிக்க மைய பாங்கின் அமைப்பையொட்டியோ, இங்கிலாந்து நாட்டு மைய பாங்கின் அமைப்பையொட்டியோ இந் நாடுகளில் மைய பாங்குகளை நிறுவுவது மட்டும் போதாது. நாட்டி லுள்ள பண அளிப்பை ஆற்றலுடன் கட்டுப்படுத்துவதற்கு என் னென்ன அதிகாரங்கள் தேவைப்படுமோ, அவை யாவற்றையும்

[1] வட்டி வீதத்தை உயர்த்துவதை இதுபோன்ற காலங்களில் நம்பி இருக்கக் கூடாது என்பதற்கு இது ஒரு முக்கிய காரணமாகும்.

இம் மைய பாங்குகட்கு வழங்குவதற்கு இந் நாடுகள் முன்வர வேண்டும். (சிறப்பாக, வாணிக பாங்குகளின் ரொக்க விகிதத்தை மாற்றி அமைக்கக்கூடிய அதிகாரம் மைய பாங்குகட்கு வழங்கப் படவேண்டும்.) பணத்தின் அளிப்பை ஆற்றலுடன் கட்டுப் படுத்துவதற்கு ஏதுவான பல தரப்பட்ட நிறுவனங்களை உருவாக் குவதற்கும் இந் நாடுகள் முன்வரவேண்டும். பாங்குச் செலா வுணிகள், அயல்நாட்டுச் செலாவணிகள் ஆகியவற்றின் அளிப்பு களைக் கட்டுப்படுத்துவதற்கு உறுதுணையாக அமையக்கூடிய மைய பாங்கு, அயல்நாடுகளினின்றும் பெறக்கூடிய கடன்களை ஒழுங்கு செய்வதற்கு ஒரு நிறுவனம், பட்ஜெட் கொள்கையினால் நேரக்கூடிய பொதுவான பொருளாதார விளைவுகளைக் கண் காணித்துக்கொள்ளுவதற்குக் கருவூலம் ஆகியவற்றை நிறுவு வதற்கு இந் நாடுகள் முன்வரவேண்டும். எனவே இந் நாடுகளில் பலவிதமான பணக் கட்டுப்பாட்டு நிறுவனங்கள் தோன்ற நேரிடும். இதையொட்டிப் பட்ஜெட் கொள்கைக்கும் அரசாங்கத்தின் நடவடிக்கைகள் யாவற்றிற்கும் இடையே தொடர்புகள் ஏற்படும். மற்றும்நாம் மேலே குறித்துள்ள ஏனைய பணிகள் பொதுமக்கட்குப் பொதுவான நன்மைகளை ஏற்படுத்துவனவாக அமையவேண்டி யிருக்கும். எனவே, பணக் கட்டுப்பாட்டை வெற்றிகரமாகச் செயலாற்றுவதற்குச் சில ஏற்பாடுகள் செய்யவேண்டியது அவசிய மாகின்றது. இந் நிறுவனங்கள் ஒவ்வொன்றினுடைய அமைப்பு, இந் நிறுவனங்கட்கிடையே நிலவவேண்டிய தொடர்புகள், அரசாங்கத்திற்கும் இந் நிறுவனங்கட்கும் இடையேயுள்ள தொடர் புகள் - ஆகியவை குறித்துச் சில ஏற்பாடுகள் செய்யவேண்டி யுள்ளன. இத்தகைய ஏற்பாடுகளைச் செய்வதற்கு அரசியல் வாதிகள் முன்வரவேண்டும். அரசியல் வாதிகளின் ஒத்துழைப்பு கிடைக்கும் பட்சத்தில், பொருளாதார நிபுணர்களின் கொள்கை கள் முற்றிலும் பயன்படுவதற்கான வாய்ப்புகள் இந் நாடுகளில் உருவாகும்.

## 3. பாங்கு முறை செம்மையாக உருவாகாத நாடுகளில் மைய பாங்கு முறை

வாணிக பாங்கு முறை நன்கு வளர்ச்சியுற்றிருந்த போதிலும், குறுங்காலப் பண மார்க்கெட் செம்மையான முறையில் வளர்ச்சி யுற்றிராத நாடுகளில் மைய பாங்குகட்கு நேரக்கூடிய சிக்கல்கள் குறித்து நாம் இதுகாறும் விளக்கம் தந்தோம். வாணிக பாங்குகள் செம்மையான முறையில் வளர்ச்சியுற்றிராத நாடுகளில் மைய பாங்குகட்கு எத்தன்மைத்தான சிக்கல்கள் உருவாகியுள்ளன என்பது குறித்து இனி ஆராய்வோம். கடந்த உட்பிரிவில் நாம்

கூறியுள்ளவை யாவும் இந் நாடுகட்கும் பொருந்தும். சிறப்பாக இறுதியில் சில பத்திகளில் நாம் ஆராய்ந்துள்ளவை மிகவும் பொருந்தும். இறுதிப் பத்திகளில் ஆராய்ந்துள்ள செய்திகள் உண்மையில் உலகிலுள்ள எல்லா நாடுகட்கும் பொருந்தக்கூடிய உண்மைகளேயாகும். எனினும் மிகவும் பின் தங்கியுள்ள நாடுகளைப் பொறுத்த வரையில் – உதாரணமாகக் குடியேற்ற நாடுகள், மற்றும் லேடின் அமெரிக்க (Latin America) நாடுகளைப் பொறுத்த வரையில் - மேலும் சில விஷயங்களை நாம் விவாதிக்கவேண்டியுள்ளது. இந் நாடுகளிலும் மைய பாங்குகள் நிறுவப்பட்டுள்ளன. ஆனல், மைய பாங்கின் கட்டுப்பாடுகட்குக் கீழே அமைந்திருக்கக்கூடிய பாங்கு முறை இந் நாடுகளில் இன்னும் உருவாகவே இல்லையென்று கூறலாம். அயல்நாட்டுப் பாங்குகள் சில இந் நாடுகளில் கிளைகளை நிறுவியுள்ளன. ஒரு சில துறைமுகப் பட்டினங்களிலும், மிகப் பெரிய வர்த்தக மையங்களிலுமே இவை கிளைகளை நிறுவிப் பெருமளவு பேரங்களை நடத்தி வருகின்றன. இந்த இடங்களைத் தவிர, இந் நாடுகளின் உள் பிரதேசங்களில் இந்த அயல்நாட்டுப் பாங்குகளின் கிளைகளைக் காண்பது மிகமிக அரிதாகும். மேலும் இந் நாடுகளிலுள்ள பணத்தின் அளிப்புப் பெரும்பாலும் ரொக்கத்தினுல் மட்டுமே ஆகியதாகும்.

இதுபோன்ற நாடுகளில் நிறுவப்பட்டுள்ள மைய பாங்குகள் ஆரம்ப காலங்களில் அயல்நாட்டுச் செலாவணி மார்க்கெட்டின் நடவடிக்கைகளில் பெரும் பங்கு பெறலாம். ஏனெனில் அயல் நாட்டுச் செலாவணி மார்க்கெட்டில் மட்டும் இம் மைய பாங்குகளால் பணத்தின் அளிப்பை ஆற்றலுடன் கட்டுப்படுத்தமுடியும். எனினும் இது தவிர வேறு முறைகளைக் கையாண்டும் நாட்டில் நிலவுகின்ற சூழ்நிலையை மாற்றி அமைக்கும் முயற்சியில், மைய பாங்கு ஈடுபட முனையலாம். மைய பாங்கே நேரடியாகச் சாதாரண பாங்கு வசதிகளை ஏற்பாடு செய்வதற்கு மு ை வரலாம்; அல்லது வாணிக பாங்குகள் ஆற்றிவரும் சாதாரண பாங்குப் பணிகளுடன் மைய பாங்கும் சாதாரண பாங்கு வசதிகளை ஏற்பாடு செய்ய முன் வரலாம். அல்லது தன்னுடன் இணைந்திருக்கக்கூடிய வாணிக பாங்குகள் உருவாவதை மைய பாங்கு ஊக்குவிக்கலாம். பெரிதும் வாய்ப்பான சூழ்நிலைகளில் வாணிக பாங்குகள் ஏற்பாடு செய்தது போகத் தானும் சாதாரண பாங்கு வசதிகளை ஏற்பாடு செய்வதற்கு மைய பாங்கு முன்வருவதோடு, வாணிக பாங்குகள் தாமே வளர்ச்சியுறுவதையும் மைய பாங்கு ஊக்குவிக்கலாம். எனினும் சாதாரண பாங்கு வசதிகளை ஏற்பாடு செய்ய முன்வருவது, மற்றும் தன்னுடன் இணைந்திருக்கக்கூடிய வாணிக பாங்குகள் உருவாவதை ஊக்குவிப்பது ஆகிய இரண்டையுமே ஒருசேர மைய பாங்கு

செயலாற்ற முனைவது விரும்பத்தக்க தன்று. இந்த இரண்டனுள் ஏதேனும் ஒரு முறையே மைய பாங்கு கடைப்பிடிப்பது உசிதமான தாகும். இவ்வாறு நாம் கருதுவதற்குக் காரணங்கள் உள்ளன. முதலாவது முறையின் மூலம் – அதாவது சாதாரண பாங்கு வசதிகளை மைய பாங்கே ஏற்பாடு செய்வதன் மூலம் – நாட்டிலுள்ள பாங்குப் பணத்தின் அளிப்பினை மைய பாங்கே நேரடியாகக் கட்டுப்படுத்தமுடியும். ஏனெனில், நாட்டிலுள்ள பாங்கு டெபாசிட்டுகள் முழுவதுமோ, பெரும் பகுதியோ மைய பாங்கின் பொறுப்புகளாகவே இருக்கும். ஆனால், இரண்டாவது முறையின் மூலம் – அதாவது தன்னுடன் இணைந்திருக்கக்கூடிய வாணிக பாங்குகள் உருவாவதை ஊக்குவிப்பதன் மூலம் – நாட்டிலுள்ள பாங்குப் பணத்தின் அளிப்பினை மைய பாங்கால் மறைமுகமாகவே கட்டுப்படுத்தமுடியும். அதாவது வாணிக பாங்குகட்குக் கிடைக்கக்கூடிய ரொக்கத்தைக் கட்டுப்படுத்துவதன் மூலமே நாட்டிலுள்ள பாங்குப் பணத்தை மைய பாங்கால் கட்டுப்படுத்த முடியும்.

சாதாரண பாங்கு வசதிகளை மைய பாங்கு ஏற்பாடு செய்வது உகந்ததன்று என்று சிலர் கருதுகின்றனர். சாதாரணப் பாங்கு வசதிகளை ஏற்பாடு செய்யும் பொறுப்பு வேறு நிறுவனங்களைச் சாருமேயன்றி மைய பாங்கைச் சாராது என்று இவர்கள் வாதிடுகின்றனர். தங்கள் கூற்றுக்குச் சாதகமாகச் சில வாதங்களையும் இவர்கள் எடுத்துரைக்கின்றனர். இந் நாடுகளில் ஏற்கெனவே பெரும் பகுதிகளில் வாணிக பாங்குகள் நிறுவப்பட்டுள்ளன என்ற அடிப்படையிலேயே இவ் வாதங்கள் அமைந்துள்ளன என்பதை ஈண்டு நாம் குறிக்க விரும்புகிறோம். கீழே தரப்பட்டுள்ள இரண்டு வாதங்களினின்றும் இதை நாம் நன்கு உணரலாம். முதலாவது வாதம் வருமாறு: இந் நாடுகளிலுள்ள வாணிக பாங்குகள் ஆதாயம் ஏதுமின்றி மைய பாங்கில் இருப்புகளை வைத்திருக்க வேண்டியுள்ளன. ஆனால் மக்களிடமிருந்து டெபாசிட்டுகளைப் பெறுவதற்கு இந் நாடுகளிலுள்ள வாணிக பாங்குகள் பெரும் முயற்சிகளில் ஈடுபடவேண்டியுள்ளது. எனவே வாடிக்கைக்காரர்கட்குக் கடன் தருவதைப் பொறுத்தவரையில் மைய பாங்கு வாணிக பாங்குகளுடன் போட்டியிடலாகாது. இவ்வாறன்றி மைய பாங்கு போட்டியிட முனைந்தால் அதை நாம் முறையற்ற போட்டி என்றே கருதவேண்டும்[1] இரண்டாவது வாதம் வருமாறு: மைய பாங்கானது சாதாரண பாங்கு வசதிகளை

[1] இவ்வாறு வாணிக பாங்குகளுடன் போட்டியிட்டோ, வேறு முறைகளைக் கையாண்டோ மைய பாங்கானது வாணிக பாங்குகளின் விரோதத்தைத் தேடிக்கொண்டால், தான் விரும்பும் வண்ணம் வாணிக பாங்குகளை மைய பாங்கால் தன் வழிக்குக் கொண்டுவர முடியாதுபோக நேரலாம்.

ஏற்பாடு செய்ய முன்வருவதை யொட்டி வாணிக பாங்குகளின் வாடிக்கைக்காரர், மைய பாங்கின் வாடிக்கைக்காரர் ஆகியவர் கட்கிடையே பணம் மாற்றப்படவேண்டிய அவசியங்கள் நேரும். இதன் விளைவாக நாட்டிலுள்ள பணத்தின் அளிப்பு பாதிக்கப்படும். இனி இவ் வாதங்களின் ஆற்றல் குறித்து ஆராய் வோம். இந் நாடுகளில் வாணிக பாங்கு எதுவுமே கிடையாது என்பது உண்மையானுல், இவ் விரு வாதங்களும் பொருளற்ற வாதங்களாகும். நாட்டிலுள்ள மொத்த பாங்கு வசதிகளில் வாணிக பாங்குகள் ஒரு சிறு பங்கே பெறுகின்றன என்பது உண்மையானுல் இவ் விரு வாதங்களும் முற்றிலும் பொருந்தக் கூடியவை என்று கூறுவதற்கில்லை. எனினும் இவ் விரு வாதங் களிலும் முதலாவது வாதத்தில் ஓர் உண்மை உள்ளடங்கிக் கிடப்பதை நாம் உணரலாம். அதாவது மைய பாங்கு சாதாரணப் பாங்கு வசதிகளை ஏற்பாடு செய்ய முன் வருவதை யொட்டித் தாமே உருவாகிவரக்கூடிய வாணிக பாங்குகளின் வளர்ச்சி தடையுற நேரலாம். எனவே நாட்டில் சாதாரணப் பாங்கு வசதிகளைப் பெருக்கும் முயற்சியில் தான் ஈடுபடும்போது வாணிக பாங்குகளுடன் போட்டியிட முயலுவதைவிட, வாணிக பாங்குகளின் வளர்ச்சியிலேயே மைய பாங்கு நாட்டம் செலுத்த வேண்டும். இதையொட்டி மைய பாங்குடன் இணைந்திருக்கக் கூடிய வாணிக பாங்கு முறையைப்பற்றி நாம் ஆராய வேண்டி யுள்ளது.

இத் தன்மைத்தான பாங்கு முறையின்-மைய பாங்குடன் இணைந்திருக்கக்கூடிய பாங்குகளால் ஆகிய முறையின் - இன்றி யமையாமையை வலியுறுத்தும் வகையில், ஓர் ஆணித்தரமான வாதம் உள்ளது. அது வருமாறு : இணைக்கப்பட்ட பாங்குகளின் நடவடிக்கைகளை மைய பாங்கு நேரடியாகவே கட்டுப்படுத்த முடியும். மறைமுகமான கட்டுப்பாட்டு முயற்சிகளைக் கையாளும் முயற்சியில் மைய பாங்கு ஈடுபட வேண்டிய அவசியம் ஏதுமில்லை. மைய பாங்கின் எத்தன்மைத்தான நடவடிக்கைகட்கும் ஏற்ற முறையில் தங்களுடைய நடவடிக்கைகளை வாணிக பாங்குகள் மாற்றி அமைத்துக்கொள்கின்றன என்பது உண்மையானுல், மறைமுகமான கட்டுப்பாட்டு முறைகளும், நேரடியான கட்டுப் பாட்டு முறைகளும் ஒரே வகையான ஆற்றலுடையவை என்று நாம் கருத முடியும். வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளை ஒழுங்கு செய்யும் நோக்கத்துடன், மைய பாங்கு நடவடிக்கை களை எந்த அளவிற்கு எடுத்த போதிலும், இவற்றிற்கு ஏற்ற வகையில் சிறிதளவேனும் பிழையின்றி வாணிக பாங்குகள் தங்களுடைய நடவடிக்கைகளை மாற்றி அமைத்து வருகின்றன

என்று நாம் கொள்வதற்கில்லை; இது குறித்த விளக்கத்தை ஏற்கெனவே நாம் இப் புத்தகத்தில் தந்துள்ளோம். இந் நாடுகளிலுள்ள வாணிக பாங்குகள் ஒரு குறிப்பிட்ட அளவு ரொக்க விகிதத்தை மைய பாங்கில் கட்டாயமாக வைத்திருக்கவேண்டியுள்ளது என்பது உண்மைதான். வாணிக பாங்குகளும் இவ் வரம்புக்குக் கட்டுப்பட்டு ரொக்க இருப்புகளை மைய பாங்கில் வைத்திருக்கின்றன என்பதும் உண்மையே யாகும். ஆனால் தாம் விரும்பிய வண்ணம் இந்த ரொக்க இருப்புகளை வாணிக பாங்குகள் அதிகரித்துக் கொள்ள முடியும். பின் தாம் விரும்பிய வண்ணமே மைய பாங்கு குறித்துள்ள அளவினதாகக் குறைத்துக்கொள்ள முடியும். மைய பாங்கின் நடவடிக்கைகள் ஆற்றல் மிக்கவையாகத் திகழ வேண்டுமேயாயின், தங்களிடமுள்ள சில குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த ஊதியச் சொத்துகளை (earning assets) வாணிக பாங்குகள் அதிகரித்து வேறுவகையைச் சேர்ந்த சொத்துகளைக் குறைக்கவேண்டியிருக்கும். அல்லது ஒரு குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த ஊதியச் சொத்துகளைக் குறைத்து வேறு வகையைச் சேர்ந்த சொத்துகளை அதிகரித்துக் கொள்ள வேண்டிய திருக்கும். மறைமுகமான கட்டுப்பாட்டு நடவடிக்கைகளில் ஈடுபடுவதன்மூலம் மைய பாங்கால் இதுபோன்றதொரு சூழ்நிலையை உருவாக்க முடியாது. 1890ஆம் ஆண்டு முதல் இங்கிலாந்துத் தலைமை பாங்கு, மறைமுகமான கட்டுப்பாட்டு முறைகளின் குறைகளை உணர்ந்து வந்துள்ளது. இக் குறையை நீக்குமுகத்தான் தனக்கும் பாங்குகட்குமிடையே நேரடித் தொடர்புகளை (சட்டத்தின் துணையின்றியே) இங்கிலாந்துத் தலைமைபாங்கு ஏற்படுத்தி வந்துள்ளது. நேரடித் தொடர்புகள் ஏற்படுத்தும் முயற்சியில் மைய பாங்கு மேலும் ஈடுபடவேண்டியுள்ளது. இங்கிலாந்துத் தலைமை பாங்குகளைப்போல, செய்திகளை வெளியிட விரும்பாத மைய பாங்குகளைப் பொறுத்தவரையில் இது மிகவும் பொருந்தும். ஆனால் மைய பாங்குக்கும் வாணிக பாங்குகட்குமிடையே தொடர்புகள் மேலும் மேலும் அதிகரிக்க நேர்ந்தால், இத் தொடர்புகள் பழக்க வழக்கங்களையொட்டியே அமைய நேரிடும். மைய பாங்குடன் இணைந்திருக்கக்கூடிய பாங்கு முறையால் ஒரு கேடும் விளையலாம். தன்னுடைய தலையாய பொறுப்பு யாது என்பதை மைய பாங்கு நன்கு அறியும். எனவே வாணிக பாங்குகள் எந்த அளவுக்குக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்ய முன்வருகின்றனவோ, அந்த அளவுக்குக் கடன் வசதிகளை ஏற்பாடு செய்ய மைய பாங்கு பெரிதும் தயங்கலாம். எனவே பொது மக்களுக்குத் தேவைப்படும் சாதாரண பாங்கு வசதிகளை ஏற்பாடு செய்யும் பொறுப்பை வாணிக பாங்குகளே ஏற்றுக்கொண்டு, இந்த வாணிக பாங்குகள் மைய பாங்கைச் சார்ந்திருந்து

அதனுடைய வாடிக்கைக்காரர்களாகத் திகழக்கூடிய ஒரு முறையே சிறந்த முறையாக அமையலாம்.

வாணிக பாங்கு முறையின் வளர்ச்சியைத் தூண்டிவிடும் முகத்தான் மைய பாங்கு இரண்டு முறைகளைக் கையாளலாம். மறு கழிவு வசதிகளை வாணிக பாங்குகட்கு ஏற்பாடு செய்வதுடன் இந்த வசதிகளை வாணிக பாங்குகள் பயன்படுத்துமாறு, மைய பாங்கானது ஊக்குவிப்பது ஒரு முறையாகும். புதிதாக நிறுவப் பெற்றுள்ள வாணிக பாங்குகட்கு மைய பாங்கு 'உதவி நிதி' (subsidy) அளிக்க முன்வருவது இரண்டாவது முறையாகும். 'இவ் விரு முறைகளில் முதலாவது முறையே சிறந்த முறையாகத் தோன்றுகிறது. இரண்டாவது முறையை, மைய பாங்குகள் செய லாற்றுவதற்கான வாய்ப்புகள் மிகக் குறைவாகவே உள்ளன.

புதிய நாடுகளில் தோன்றியுள்ள பாங்குகள் மைய பாங்கிடம் மறு கழிவு செய்ய முன்வருவது இப் பாங்குகட்கே நன்மையாக அமையும். மறுகழிவு செய்யும் பழக்கமுடைய ஒரு பாங்கு தன் னிடம் குறைந்த அளவு கல்லா ரொக்கம் வைத்திருப்பதே போது மானதாகும் நெருக்கடி காலங்களில்கூட இப் பாங்கால் நிலைமை யைச் சமாளிக்க முடியும், ரொக்கம் ஓர் ஊதியமற்ற சொத்தாகும். எனவே பாங்கின் கல்லா ரொக்கம் குறையும்போது பாங்கின் இலாபங்கள் மிகுவதற்கான வாய்ப்புகள் தோன்றும். எனவே 'உதவி நிதி' அளிப்பதால் நேரக்கூடிய விளைவுகளே மறுகழிவு முறையாலும் ஏற்படும். அதாவது இம் முறை பாங்கு வளர்ச்சிக்குத் தூண்டுகோலாக அமையும். மறுகழிவு முறையால் மற்றும் ஒரு நன்மையுண்டு; மைய பாங்குக்கும் ஏனைய பாங்குகட்கும் இடையே நெருங்கிய தொடர்புகள் ஏற்படும். எனவே தன்னுடைய கொள் கையை மைய பாங்கு சிறந்த முறையில் நிறைவேற்றுவதற்கு ஏது வான வாய்ப்புகள் உருவாக முடியும். மறுகழிவு முறையை ஊக்கு விக்கும்வகையில் மைய பாங்கு சில ஏற்பாடுகளைச் செய்யலாம். நாட்டில் பழக்கத்தில் இருக்கக்கூடிய கடன் பத்திரங்களில் ஒன்றை (உதாரணமாக இந்தியாவில் உள்நாட்டு 'உண்டியல்' (hundi) பழக்கத்தில் இருந்து வருகின்றது) மைய பாங்கு மறுகழிவுக்குத் தகுதியுடைய பத்திரமாக மாற்றி அமைக்கலாம். இப் பத்திரங்களை மறு கழிவு செய்யும் பாங்குகட்குக் குறைந்த வீதங்களில் மைய பாங்கு ரொக்கத்தை வழங்கலாம். இப் பத்திரங்களின் மீது அர சாங்கம் விதித்து வரக்கூடிய பத்திரக் கட்டணத்தை'க் (stamp duty) குறைப்பதற்கான ஏற்பாடுகளில் மைய பாங்கு ஈடுபடலாம். நாட்டில் பாங்கு முறையில் வளர்ச்சியை ஊக்குவிப்பதற்கு அர சாங்கம் தன்னுடைய வருமானத்தின் ஒரு சிறு பகுதியை இழக்க

வேண்டியதன் அவசியத்தை மைய பாங்கு அரசாங்கத்திடம் எடுத்துரைக்கலாம். மறுகழிவு வசதிகளை உடனடியாகவும் எளிதான முறையிலும் வாணிக பாங்குகள் பெறக்கூடிய வகையில் நாட்டின் பல பகுதிகளிலும் மைய பாங்கு தன்னுடைய கிளைகளை நிறுவ முன்வர வேண்டியதிருக்கும். எனினும் ஒரு வருந்தத்தக்க உண்மையை நாம் ஈண்டுக் குறிக்கவேண்டியுள்ளது. மறுகழிவைப் பற்றி வாணிக பாங்குகளின் மத்தியில் (இந்நாடுகளில் மட்டுமன்று உலகிலுள்ள எல்லா நாடுகளிலும்) ஒரு தவறான எண்ணம் நிலவி வருகிறது. மறுகழிவு செய்வது தங்களுடைய பலவீனத்தையே வெளிப்படுத்தும் என்று பாங்குகள் முன்பு கருதின. எனவே, மறுகழிவு செய்வது கேடான பழக்கமே அன்று என்னும் கருத்தை, வாணிக பாங்குகள் உணருமாறு எடுத்துரைக்க வேண்டியது மைய பாங்கின் கடனேயாகும்.[1]

செலவை ஏற்றுக்கொள்வதற்கு அரசாங்கம் முன்வந்தால், இரண்டாவது முறையான 'உதவி நிதி' அளிக்கும் முறையை மைய பாங்கு கடைப்பிடிக்கலாம் மைய பாங்கின்மூலமே வாணிக பாங்குகட்கு 'உதவி நிதி' அளிக்கப்படல் வேண்டும். ஏனெனில் இதையொட்டி வாணிக பாங்குகளின் நடவடிக்கைகளை விசாரணை செய்யக்கூடிய அதிகாரம் மைய பாங்கை வந்தடையும். இதனால் ஒரு குறிப்பிடத்தக்க நன்மை விளையும். அதாவது புதியனவாக நிறுவப்படும் வாணிக பாங்குகட்கும் மையப் பாங்குகட்குமிடையே நெருங்கிய தொடர்புகள் ஏற்படும். 'உதவி நிதி' முறையைக் கடைப்பிடிக்கும்போது ஏற்கெனவே நெடுங்காலமாகச் செயலாற்றி வரக்கூடிய பாங்குகட்கும் புதிதாகத் தோன்றக்கூடிய பாங்குகட்கும் இடையே மைய பாங்கு வேறுபாடுகள் கற்பிக்க வேண்டி நேரிடும். இதற்கு ஏற்ற முறையில் கிளைப் பாங்கு முறையைவிடத் தனிப் பாங்கு முறையையே மைய பாங்கு ஊக்குவிக்கவேண்டிய நிலை ஏற்படலாம். எனினும் இதுபோன்ற இடர்ப்பாடுகளை எளிதில் மைய பாங்கால் சமாளிக்க முடியும் என்றே எமக்குத் தோன்றுகிறது. ஈண்டு ஓர் உண்மையை நாம் குறிப்பிட விரும்புகிறோம். இந்நாடுகளிலுள்ள அரசாங்கத்திற்குக் கிடைக்கக் கூடிய நிதிகள் மிகக் குறைவானவையேயாகும். இந்நிதியைப் பயன்படுத்திப் பல உடனடியான தேவைகளை இந்த அரசாங்கம் நிறைவேற்ற வேண்டியுள்ளது. எனவே இந்த உதவி நிதி முறை

1 உண்டியல்களோ, உண்டியல்களை ஒத்த பத்திரங்களோ பழக்கத்தில் இல்லாவிடில் மறுகழிவு வசதிகளை மைய பாங்கு ஏற்பாடு செய்ய முன்வருவதால் பயன் ஏதும் இல்லை. இதுபோன்ற நாடுகளில் (குறிப்பாகத் தென் ஆப்பிரிக்காவில்) உண்டியல் பழக்கத்தைப் பரப்புவதற்கான முயற்சிகள் நடந்துவருகின்றன. ஆனால் இம்முயற்சிகள் வெற்றி அளிக்கவில்லை.

யைப் பற்றி நாம் விவாதிப்பது நேரத்தை வீணுக்குவதாவே முடியும் என்று தோன்றுகிறது. அதாவது உதவி நிதி முறையைக் கடைப்பிடிப்பதற்கான வாய்ப்புகள் இந்நாடுகளில் மிகவும் குறைவானவை என்று தோன்றுகிறது; இந்த அளவுக்கு அரசாங்கம் பாங்கு முறை வளர்ச்சிக்கு உதவி செய்ய முடியாவிடினும், வேறு ஒரு வசதியை ஏற்பாடு செய்யமுடியும். அதாவது மைய பாங்கின் யோசனைப்படி சில குறிப்பிட்ட வகையைச் சேர்ந்த கடன் பத்திரங்களின்மீது தான் விதித்துவரக்கூடிய 'பத்திரக் கட்டணத்தை' அரசாங்கம் குறைக்க முன்வரலாம்.

வாணிக பாங்குகளின் வளர்ச்சியையே முதன்மையான நோக்கமாகக் கொண்டு மைய பாங்கு செயலாற்றி வந்தால், பெருமளவு செலவு ஏதுமின்றியே வாய்ப்பான சூழ்நிலையை மைய பாங்கால் உருவாக்க முடியும். இது எமது திடமான நம்பிக்கையாகும். வாணிக பாங்குகள் சீரிய முறையில் வளர்ச்சி அடைந்துவிட்டால், இந் நாடுகளிலுள்ள மைய பாங்குகளுடைய சிக்கல்கள் ஓரளவு குறையும். குறுங்கால பண மார்க்கெட் சீரிய முறையில் உருவாகாததையொட்டி ஏற்படக்கூடிய சிக்கல்களே மிஞ்சும். இச் சிக்கல்களை நாம் ஏற்கெனவே முந்திய உட்பிரிவில் ஆராய்ந்துள்ளோம். பாங்கு முறை வளர்ச்சி உண்மையான வளர்ச்சியாகத் திகழ வேண்டுமேயாயின், அமெரிக்கா, இங்கிலாந்து போன்ற நாடுகளிலுள்ள நிறுவன அமைப்புகளை அப்படியே பின்பற்றுவதால் பயன் ஏதுமில்லை. தாங்கள் என்னென்ன சிக்கல்களைத் தீர்த்துவைக்க வேண்டியிருக்கிறது என்பதைத் தீர்க்கமாக ஆராய்ந்து பொருத்தமான முறைகளை இந்நாடுகளிலுள்ள மைய பாங்குகள் கடைப்பிடிக்க முன்வர வேண்டியது அவசியமாகும். பலவித காரணங்களால் தூண்டப்பட்ட இந்தப் புதிய நாடுகள் இரண்டு உலக யுத்தங்கட்கும் இடைப்பட்ட காலத்தில் மைய பாங்குகளை நிறுவுவதில் —உடனடியாக நிறுவுவதில்—பெரிதும் ஆர்வம் காட்டின. அமெரிக்க மைய பாங்கு அல்லது இங்கிலாந்தின் மைய பாங்கு போன்ற மைய பாங்குகளே இந்நாடுகளில் நிறுவப்பட்டன. ஆனல் அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் நிலவுகின்ற வாய்ப்பான சூழ்நிலைகள் தங்கள் நாடுகளில் கிடையா என்று இம் மைய பாங்குகள் படிப்படியாக உணர்ந்துவந்துள்ளன. தங்களுடைய கருத்துக்கள் தவருனவை என்பதையும் உணர்ந்துள்ளன. இந்நாடுகள் தவருன கருத்துகளின் அடிப்படையில் மைய பாங்குகளை நிறுவியதற்கு இந் நாடுகளே பொறுப்பு என்று நாம் கொள்ள முடியாது. பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளும் ஓரளவுக்குப் பொறுப்பாகின்றன. தாங்கள் மைய பாங்குகளை நிறுவுமுன் இந்நாடுகள் அமெரிக்கா, பிரிட்டன் ஆகிய நாடுகளிடம் ஆலோசனைகள் கேட்டன;

பாங்கு முறை பற்றிய அடிப்படையான சிக்கல்களை ஆராயாமலேயே தங்கள் நாடுகளில் நிலவக்கூடிய சூழ்நிலைகளையே மனத்தில்கொண்டு இந்நாட்டு ஆலோசகர்கள் தங்களுடைய ஆலோசனைகளை வழங்கினர். இதையொட்டி அந்நாள்தொட்டு இந்நாள் வரை நமக்கு ஒரு சிறந்த அனுபவம் கிடைத்துவருகிறது.

# 12. ரேட்கிளிஃப் அறிக்கை

இப் புத்தகத்தின் நான்காம் பதிப்பு ஏப்ரல் 1957–ல் அச்சகத்திற்குச் சென்றது ; அவ் வமயம் பிரிட்டனின் பண முறையை (monetary system) ஆராயும் நோக்கத்தோடு ஒரு குழு (committee) அமைக்கப்பட்டது. இதற்கு முன், பண முறையை ஆராய நிறுவப்பட்ட குழு மாக்மில்லன் குழுவாகும் (Macmillian Committee); மாக்மில்லன் குழு 1929 ஆம் ஆண்டு முதல் 1931 ஆம் ஆண்டு முடியச் செயலாற்றியது. மாக்மில்லன் குழுவுக்குப் பின் முதன் முறையாகப் பண முறையை ஆராய நிறுவப்பட்ட குழுவே இந்த ரேட்கிளிஃப் குழுவாகும். இக் குழுவை நிதி அமைச்சர் (Chancellor of Exchequer) நிறுவினர். இது ஒரு சுதந்தரக் குழுவாகச் செயலாற்றியது. 1927 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் நிதி அமைச்சர் திரு. பீட்டர் தானிகிராஃப்ட் (Mr. Peter Thorneycroft) அவர்கள் தமது பட்ஜெட் பேச்சில், அரசாங்கம் ரேட்கிளிஃப் துரை அவர்களின் தலைமையில் ஒரு குழுவினை நிறுவ எண்ணியிருப்பதை வெளியிட்டார். 1957 ஆம் ஆண்டு மே மாதம் முதல், குழு தனது வேலையைத் தொடங்கியது; 1959 ஆம் ஆண்டு ஜூலை மாதம் தனது அறிக்கையைச் சமர்ப்பித்தது. பிரிட்டனின் பண முறையைப் பற்றிய விவரங்களை இக் குழுவின் அறிக்கை, குறிப்புகள் (Minutes), சான்றுச் சுருக்கங்கள் (Memoranda of Evidence) ஆகியவற்றில் விரிவாகக் காணலாம்; இதுவரை வெளியிடப்பட்டுள்ள எந்த அறிக்கையிலும் இருப்பதைவிட மிக விரிவாக ரேட்கிளிஃப் அறிக்கையில் செய்திகள் விளக்கப்பட்டுள்ளன.

குழு, ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ள வேண்டிய செய்திகள் முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்டன. இங்கிலாந்தின் பண முறையும் கடன் முறையும் (credit system) எவ்வாறு இயங்குகின்றன என்று ஆராயுமாறு குழு பணிக்கப்பட்டனர்; மேலும் இவை பற்றித் தன் கருத்துகளை வெளியிடுமாறும் குழு கேட்டுக்கொள்ளப்பட்டது. எனவே இக் குழுவுக்குப் 'பண முறையின் நடவடிக்கைபற்றி

ஆய்வுக் குழு, என்று அதிகாரிகள் பெயரிட்டனர். இதற்குமுன் இதுபோன்ற குழுக்கள் பலவற்றை அரசாங்கம் நியமித்துப் பெயரும் சூட்டியிருக்கிறது. ஆனால் அவை யாவும் அரசாங்கம் இட்ட பெயரோடு விளங்கவில்லை; அந்தந்தக் குழுவின் தலைவர் பெயராலேயே அவை அழைக்கப்படுகின்றன. அதுபோல இக் குழுவும் இதன் தலைவராகிய ரேட்கிளிஃப் பெயராலேயே அழைக்கப்படுகிறது; அதாவது 'ரேட்கிளிஃப் குழு' என்ற பெயருடனேயே இது விளங்குகிறது. அமைப்பு முறையைப் பொறுத்த அளவில், இக்குழு பெரும்பாலும் மாக்மில்லன் குழுவினை ஒத்திருந்தது. ஆனால் மாக்மில்லன் குழுவில் இருந்ததைவிட இக்குழுவில் அங்கத்தினர்களின் எண்ணிக்கை குறைவு ஆகும். தலைவர்; இரண்டு பாங்கர்கள் (இவர்களுள், ஒருவர் தீர்வு பாங்கு ஒன்றின் தலைவர்; மற்றவர் வியாபாரப் பாங்கு ஒன்றில் கூட்டாளி), இரண்டு தொழில் அதிபர்கள், இரண்டு தொழில் சங்கப் பிரதிநிதிகள், இரண்டு (கல்வித் துறையைச் சார்ந்த) பொருளாதார நிபுணர்கள் ஆகியோர் குழுவின் அங்கத்தினராவர். இந்த ஒன்பது அங்கத்தினர்களும், ஏற்கெனவே பல அரசாங்க ஆய்வுக் குழுக்களில் பணியாற்றியவர்கள்; எனவே நல்ல அனுபவம் உடையவர்கள். இவர்களுள் நான்கு பேர் அரசாங்க ஆய்வுக் குழுக்களில் முன்பு தலைவர்களாகப் பணியாற்றியுள்ளனர். அங்கத்தினர்கள் யாவரும் அரசாங்க விவகாரங்கள் குறித்து அனுபவ அறிவு உடையவர்கள்; இவர்களுள் பெரும்பாலோர் வியாபார உலகத்தைப்பற்றி நேரடியாக அறிந்த அனுபவ அறிவு உடையவர்கள். மாக்மில்லன் அறிக்கையில் அங்கத்தினர்களுள் கருத்து வேறுபாடுகள் இருந்தன. அதுபோன்று இல்லாமல் ரேட்கிளிஃப் அறிக்கை, ஒருமுகமான அங்கத்தினர் யாவரும் ஒப்பிய கருத்துகளை உடையது.

ரேட்கிளிஃப் குழு 1957ஆம் ஆண்டு இளவேனிற் காலத்தில் அமைக்கப்பட்டது. அவ்வமயம் பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளிலும், ஐரோப்பாவிலும் பொதுவாக உலகமெங்கும், பொருளாதார வீக்கம் (boom) மிக உச்ச நிலையை அடைந்திருந்தது. பெரும்பாலான நாடுகளில் பணவீக்கம் (inflation) அதிவேகமாகப் பரவிக்கொண்டிருந்தது; பண வீக்கமானது எல்லையைத் தாண்டி விட்டது என்றும், கட்டுப்பாடுகளையும் மீறிவிட்டது என்றும், மக்கள் பீதி கொள்ளலாயினர். இம்மாதிரியான ஒரு சூழ்நிலை உருவாகு முன்பே- அதாவது 1957ஆம் ஆண்டுக்கு முன்பே—பிரிட்டன் பணக் கொள்கை (monetary policy) பற்றிய சில புதிய முறைகளைக் கையாண்டது; ஆனால் அவை வெற்றி அளிக்கவில்லை. இத் தோல்வியே பிரிட்டனில் ரேட்கிளிஃப் குழு தோன்றுவதற்குச் சாதகமான சூழ்நிலையை உருவாக்கியது. எனவே குழுவினர் தமது

ஆராய்ச்சியைத் தொடங்கிய ஆரம்ப காலத்தில், அவர்களிடம் எழுத்துமூலம் சான்றுகள் வழங்கியவர்களின் உரைகளில், அக் காலத்தில் நிலவிய பொருளாதாரச் சூழ்நிலையின் சாயல் நன்கு படர்ந்திருப்பதை நாம் காண முடிகிறது; அதாவது அச் சான்றுகள் யாவும் அவ் வமயம் நிலவிய பொருளாதார வீக்கம், பண வீக்கம், பிரிட்டன் கைக்கொண்ட புதிய பணக் கொள்கை அதன் தோல்வி-ஆகியவற்றை ஆதாரமாகக் கொண்டிருக்கின்றன. ஆனால் இச் சூழ்நிலை சிறிது காலமே நீடித்தது. குழுவினரின் வேலைகள் ஆரம்பமான ஒரு சில மாதங்களிலேயே பொருளாதாரச் சூழ்நிலையில் சில அடிப்படையான மாறுதல்கள் நேர்ந்தன. உலகமெங்கும் நிலவிய பொருளாதார வீக்கம் முடிவடைந்தது: அதைத் தொடர்ந்து வர்த்தகம், வியாபாரம் ஆகியவற்றிற்கான சூழ்நிலையில் ஒரு துன்பமான நிலை படர்ந்தது. பிரிட்டனில், அயல் நாட்டுச் செலாவணியைப் பொறுத்தவரையில் ஓர் இக்கட்டான சூழ்நிலை நேர்ந்தது; எனவே இதுவரை செயல்படுத்தி அறியாத வன்மையான முறைகளைக் கையாளவேண்டிய நிலை பிரிட்டனுக்கு நேர்ந்தது. ஆனால் சிறிது காலத்தில் நிலைமையில் மாறுதல்கள் தோன்றலாயின. அயல் நாட்டுச் செலாவணியைப் பொறுத்த அளவில் உலவிய இக்கட்டான சூழ்நிலை அகன்றது. உலகம் எங்கும் ஒரு பின்னிறக்கம் (recession) விரைவாகத் தொடர்ந்தது. 1957ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலும் அதற்கு முன்னதாகவும் கையாளப்பட்ட வன்மையான கட்டுப்பாட்டு முறைகள் 1958ஆம் ஆண்டு சிறிது சிறிதாகத் தளர்த்தப்பட்டன. 1958-59ஆம் ஆண்டுகளில் கார் காலத்தில் 'பின்னிறக்கம்' வலுப் பெற்றது. இதற்கு ஏற்றாற்போல 1959ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் சமர்ப்பிக்கப்பட்ட பட்ஜெட் அமைந்திருந்தது; அதாவது நாட்டில் பொருளாதார நடவடிக்கைகளைத் தூண்டிவிடக்கூடிய முறையில் பட்ஜெட் அமைந்திருந்தது. கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டவுடன் பாங்குகள் முன்பு இல்லாத அளவுக்கு நம்பிக்கை கொள்ளலாயின. ஆர்வத்துடன் புதிய முறைகளைக் கையாண்டு முன்னேறலாயின. பண அதிகாரிகளும் (monetary authorities) புதிய முறைகளைக் கையாளுவதுபற்றிச் சிந்திக்கலாயினர். இவ்வாறாக, ரேட்கிளிஃப் குழு வெவ்வேறான மாறுபட்டச் சூழ்நிலைகளில் தங்கள் வேலையை நடத்தினர். எனவே குழுவினர் முன் கொடுக்கப்பட்ட சான்றுகள் ஒரே காலத்தையோ அல்லது ஒரே வகையான சூழ்நிலையையோ குறிப்பிடுவனவாய் இல்லை; எந்தெந்தச் சூழ்நிலையில் சான்றுகள் வழங்கப்பட்டனவோ, அந்தந்தச் சூழ்நிலைகளின் சாயலைச் சான்றுகளில் காணலாம். ரேட்கிளிஃப் அறிக்கையைப்பற்றி நாம் விவாதிக்கும்பொழுது இந்த உண்மையை மனதில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியமாகும்.

ரேட்கிளிஃப் அறிக்கையின் கருத்தைக் (summary) கொடுப்பது இந்த அத்தியாயத்தின் நோக்கம் அன்று. ஏனெனில் இந்த அறிக்கையைச் சுருக்குவது என்பது எளியதொரு செயலன்று. இருப்பினும், ரேட்கிளிஃப் அறிக்கையினின்றும், அவர்கள் சேகரித்துள்ள சான்றுகளின்றும், நாம் என்னென்ன அறிந்துகொள்ள முடியும் என்பதுபற்றிப் பொதுவாகக் கூற முடியும். இதுவே இந்த அத்தியாயத்தின் நோக்கமாகும்.

ரேட்கிளிஃப் அறிக்கையில் முன்னுரையும் அதுபோகப் பன்னிரண்டு அத்தியாயங்களும் உள்ளன. முதலாவது அத்தியாயத்தின் தலைப்பு 'இரண்டாம் உலகப் போருக்குப்பின் கைபாளப்பட்டு வரும் பணக்கொள்கைக்கு உரிய பின்னணி' என்பதே ஆகும். முதலாவது அத்தியாயத்தில் விவாதிக்கப்படுபவை யாவை என்று இனிக் காண்போம். முதற்கண் எந்தெந்தச் சூழ்நிலைகளில் பணக் கொள்கை கடைப்பிடிக்கப்படல் வேண்டும் என்பது பற்றிய விவாதத்தைக் காணலாம். இதைப்பற்றி விவாதிக்கும்போது, தற்காலச் சூழ்நிலை முப்பது ஆண்டுகட்கு முன்பு நிலவிய சூழ்நிலையோடு—அதாவது மாக்மில்லன் குழுவினர் ஆய்வு நடத்திய போது நிலவிய சூழ்நிலையோடு—ஒப்பிடப்படுகிறது. இரண்டாவது உலகமகா யுத்தத்திற்குப் பின் எல்லா நாடுகளிலும் காணக்கூடிய சில பொதுவான அம்சங்களைப்பற்றிப் பின் விவாதிக்கின்றனர். பெருமளவில் வேலை வாய்ப்புகள், விரைவான பொருளாதார வளர்ச்சி, இடையறுத விலைவாசி உயர்வு ஆகியவையே அந்தப் பொதுவான அம்சங்களாகும். பிரிட்டன் உட்பட உலகம் முழுவதும் ஏற்பட்டுள்ள மூலதனப் பற்றுக்குறைக்கு இவைகளே காரணங்கள் என்பதும் விளக்கப்படுகின்றது. இரண்டாவது உலகப் போருக்குப்பின் பிரிட்டனின் பொருள்கட்கு அயல்நாடுகளினின்றும் தேவைகள் அதிகமாகவே இருந்து கொண்டிருக்கின்றன; மேலும் இவ்வாறு பெருகியுள்ள தேவைகளைச் சமாளிக்கும் வகையில் பிரிட்டனில், ஏற்றுமதிக்கான வாய்ப்பைப் பெருக்கிக்கொண்டே வந்துள்ளனர். இவ்வாறுன வாய்ப்பான சூழ்நிலைகள் நிலவிய போதிலும் பிரிட்டனின் 'அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை' (balance of payments) ஆபத்தான நிலையிலேயே இருந்து வருகின்றது என்பதையும் அறிக்கை சுட்டிக்காட்டுகிறது. உலக மகா யுத்தம், நாடுகளின் ரொக்கத் தன்மையை (liquidity) வெகுவாகப் பாதித்துள்ளது—அதாவது நாடுகளின் நீர்மைத் தன்மை மிகுந்துள்ளது; எல்லா நாடுகளிலும் பட்ஜெட் விரிவடைந்துள்ளது; பொதுத் துறை (public sector) நாட்டின் செல்வ வளங்களில் பெரும் பங்கு வகிக்கின்றது. இம்மாதிரியான சூழ்நிலையில்

டணக் கொள்கையை வெற்றிகரமாகச் செயலாற்றுவது கடினமானதேயாகும் என்று அறிக்கை கூறுகின்றது.

இரண்டாவது அத்தியாயத்தின் தலைப்பு 'பணக் கொள்கையின் நோக்கங்கள்' என்பதாகும். பணக் கொள்கையின் ஆற்றல்பற்றிய நம் கருத்துகளில் மாற்றம் தேவை என்பது குறித்தும், ஏன் மாற்றங்கள் தேவை என்பது குறித்தும் விளக்கங்கள் காணலாம். அரசாங்கத்தின் தற்போதைய பொருளாதாரக் கொள்கையின் நோக்கங்கள் எவ்வாறு மிகவும் சிக்கலானவைகளாக இருக்கின்றன என்பதை அறிக்கை தெளிவுபடுத்துகிறது. பொருளாதாரக் கொள்கையின் நோக்கங்களைப் பொறுத்தவரையில், எவ்வெவற்றிற்கு முதலிடம் கொடுக்கவேண்டும் என்ற எண்ணமே தற்சமயம் அரசாங்கத்திற்குக் கிடையாது என்பதையும் தெளிவுபடுத்துகிறது. இந்த அத்தியாயத்திலும் மாக்மில்லன் குழுவினர் ஆய்வு நடத்திய காலத்தின் சூழ்நிலையுடன், தற்காலச் சூழ்நிலை ஒப்பிடப்படுகின்றது. இருப்பினும், குழுவினரின் முக்கியமான வாதங்கள் யாவும் தற்காலத்தில் நிலவும் கருத்துகளையே அடிப்படையாகக் கொண்டவை என்ற உண்மையை நாம் மறந்துவிடலாகாது.

மூன்று, நான்கு, ஐந்து ஆகிய அத்தியாயங்களில் தற்சமயம் நடைமுறையில் இருக்கும் நிதி நிறுவனங்கள் பற்றிய விளக்கமான உரைகளைக் காணலாம். மூன்றும் அத்தியாயத்தின் தலைப்பு: 'பொதுத் துறைக்கான நிதி வசதிகள்' என்பதாகும். பணக் கொள்கையைச் செயல்படுத்துவதில் ஸ்தல ஸ்தாபனங்கள், தேசியமயமாக்கப்பட்ட தொழில்கள், அரசாங்கத்தின் ஏனைய அங்கங்கள் ஆகியவை அரசாங்கத்திற்கு உறுதுணையாக இருக்கின்றன; இவற்றின் நிதிபற்றிய நடவடிக்கைகள், பணக் கொள்கையைப் பொறுத்த அளவில் மிகவும் இன்றியமையாதனவாகும். எந்த அளவுக்கு இவை முக்கியமானவை என்று அறிக்கை விளக்கமாகக் கூறுகிறது. நான்காம் அத்தியாயத்தின் தலைப்பு 'தனியார் துறையில் உள்ள நிதி நிறுவனங்கள்' என்பதே யாகும். மக்களுக்குத் தேவையான நிதி வசதிகளைச் செய்து தரும் நிறுவனங்கள் பற்றியும் அவை எங்ஙனம், எந்தெந்த நிபந்தனைகளுடன் அவ்வசதிகளைச் செய்கின்றன என்பது பற்றியும்; கடன் ஈவோரிடமிருந்து (creditors) பணம் யார் யார் கை வழியாக இறுதியில் கடனாளியிடம் போய்ச் சேருகிறது என்பதுபற்றியும், விளக்கங்கள் காணலாம். இலண்டன் தீர்வு பாங்குகள், (London clearing banks), ஸ்காட்லாந்து பாங்குகள், உண்டியல் கழிவு அகங்கள், உண்டியல் ஏற்பு அகங்கள், அயல்நாடுகளிலுள்ள பாங்குகள், தவணைக்

கொள் முறை நிதி நிலையங்கள் (hire purchase finarce houses), இன்சூரன்ஸ் கம்பெனிகள் வயது முதிர்ந்தோர் நிதிகள் (superannuation funds), ஓய்வு ஊதிய நிதிகள் (pension funds), முதலீட்டு டிரஸ்டுகள் (investment trusts), யூனிட் டிரஸ்டுகள் (unit trusts), கட்டடச் சங்கங்கள் (buiding societies) ஆகிய நிறுவனங்கள் பற்றிய விளக்கங்களைக் காணலாம். மேலும் உண்டியல் தொழிலுக்கான நிதி வசதிகள், புதிய நிறுவனங்களின் பங்குகட்கான மார்க்கெட், வர்த்தகர்கட்குரிய கடன் வசதிகள் ஆகியவைபற்றியும் பொதுவான விளக்க உரைகளைக் காணலாம். 312 ஆம் பத்தியிலிருந்து 319 வரை உள்ள பத்திகளில் சில இன்றியமையாத விஷயங்களைப் பொறுத்த அளவில் குழுவினரின் பொதுவான கருத்துகள் யாவை என்பது பற்றி அறிந்துகொள்ள முடியும். தனியார் துறையிலுள்ள நிதி நிறுவனங்களைப் பொறுத்த வரையில், அறிக்கையானது எல்லாவற்றையும் கூறிவிட்டது என்று கூறுவதற்கில்லை. இருப்பினும், மேற்குறித்த நிதி நிறுவனங்களின் நடவடிக்கைகளில், எவை பொருளாதார அமைப்பின் நீர்மைத் தன்மையை நேரடியாக பாதிக்கக்கூடியவை என்பதுபற்றி அறிக்கை சிறந்த முறையில் விளக்கம் தந்திருக்கிறது. இந் நான்காம் அத்தியாயத்தில் கொடுக்கப்பட்டுள்ள விளக்கங்கள், மேலே குறிக்கப்பட்டுள்ள நிறுவனங்கள் அளித்த சான்றுச் சுருக்கங்களின் அடிப்படையில் வரையப்பட்டுள்ளனவாகும். நேரடியாகவோ, எழுத்து மூலமாகவோ நிறுவனங்கள் குழுவினிடம் தம் சான்றுச் சுருக்கங்களை அளித்தன.

ஐந்தாம் அத்தியாயத்தின் தலைப்பு 'இங்கிலாந்தின் மைய பாங்கின் அலுவல்கள்' என்பதாகும். பொதுத் துறைக்கும், தனியார் துறைக்கும் இடையே நிதியைப் பொறுத்தவரையில், மைய பாங்கு எங்ஙனம் ஒரு பாலம்போன்று அமைந்துள்ளது என்பதை, விளக்கமாக அறிக்கை கூறுகிறது. அறிக்கை மைய பாங்கின் நடவடிக்கைகளை இரு பெரும் கூறுகளாகப் பிரித்து விளக்கம் தருகிறது : (1) மைய பாங்கும், வெளிநாட்டு உறவும் (பிரிட்டனுக்கும் ஏனைய நாடுகட்கும் இடையே நடைபெறும் பேரங்களைப் பற்றியது). (2) மைய பாங்கின் உள்நாட்டு நடவடிக்கைகள் (அரசாங்கத்திற்கும் பாங்குகட்கும் இடையே நடைபெறும் ஸ்டெர்லிங் பேரங்கள் பற்றியவை) நாட்டின் தொழில் நிலை, வர்த்தக நிலை ஆகியவற்றை நேரடியாகப் பாதிக்கும் வகையில் இங்கிலாந்தின் மைய பாங்கு கைக்கொள்ளும் முறைகள் யாவை என்பது பற்றிய விளக்கத்தோடு இந்த அத்தியாயம் முடிகிறது. மைய பாங்கு நாட்டின் கடனை நிர்வகித்து வருவது எவ்வளவு இன்றியமையாதது என்பதும் இந்த அத்தி

யாயத்தில் வலியுறுத்தப்படுகிறது. நாட்டின் கடனை நிர்வகிக்கும் பணியில் ஈடுபட்டிருக்கும்போது மைய பாங்கு, வட்டி வீதங்களின் அமைப்பையும், தனியார் துறையில் நீர்மைத் தன்மையையும் மாற்றி அமைக்கக் கூடிய ஆற்றல் பெற்று விளங்குகிறது. இங்கிலாந்தின் மைய பாங்கு புரிந்துவரும் அலுவல்களைப்பற்றி, இவ்வளவு விரிவாக, இவ்வளவு விளக்கமாக வேறு எப் புத்தகத்திலும் காண முடியாது. இதற்கு முன் மைய பாங்குபற்றி இதுபோன்ற நுணுக்கமான ஆராய்ச்சி இல்லையென்று உறுதியாகக் கூறலாம்.

பொதுத்துறை, தனியார்துறை ஆகியவற்றிலுள்ள நிதி நிறுவனங்களைப்பற்றிய ஆராய்ச்சியை முடித்துக்கொண்டு, அறிக்கையானது கொள்கைகள்பற்றிய விவாதத்தைத் தொடங்குகிறது. கொள்கைகள் பற்றிய விளக்கங்களை ஆறு, ஏழு, எட்டு ஆகிய அத்தியாயங்களில் காணலாம். ஆருவது அத்தியாயத்தின் தலைப்பு 'பண முறைகளின் விளைவுகள்' என்பதாகும். நாட்டில் மொத்தத் தேவைகளின் உயர்வைச் சமாளிக்க, அதிகாரிகள் கைக்கொள்ள வேண்டிய கொள்கை பற்றிய விளக்கம் தரப்பட்டுள்ளது. தேவைகளைக் கட்டுப்படுத்த எண்ணும்போது பண அளிப்பு நிலையை (supply of money) மாற்றி அமைக்க விரும்புவது பயனற்றதாகவே முடியும் என்றும், நீர்மைத் தன்மையை மாற்றி அமைப்பதற்கான முயற்சியில் ஈடுபடுவதே சாலச் சிறந்தது என்றும் அறிக்கை வலியுறுத்துகிறது. அவர்களிடம் கொடுக்கப்பட்ட சான்றுகளின் அடிப்படையிலேயே இக் கொள்கை வலியுறுத்தப்படுகிறது. பின், 1951-ஆம் ஆண்டு முதல், பிரிட்டனில் பண அதிகாரிகள் நடத்திய பரிசோதனை முயற்சிகளைப் பற்றி விளக்கமாகக் கூறிவிட்டு, அப் பரிசோதனை முயற்சிகளால் நேர்ந்த விளைவுகளையும் குறிக்கின்றது. அப் பரிசோதனையின்போது கையாண்ட பலவிதமான முறைகளையும், அவற்றின் விளைவுகளையும், அப் பரிசோதனை முயற்சிபற்றிய தனது கருத்தையும் அறிக்கை விளக்குகிறது. 437-வது பத்தியிலிருந்து 454-வது பத்திமுடிய வட்டி வீதம் பற்றியும், 455-வது பத்தியிலிருந்து 460-வது பத்தி முடிய கடன் நெருக்கம்' (credit squeeze) பற்றியும், 461-வது பத்தியிலிருந்து 463-வது பத்தி முடிய மூலதன வெளியீட்டுக் கட்டுப்பாடு (Capital Issues control) பற்றியும், 464-வது பத்தியிலிருந்து 468-வது பத்தி முடிய தவணைக் கொள்முறை கட்டுப்பாடு (Hire purchase control) பற்றியும், 439-வது பத்தியிலிருந்து 473-வது பத்தி முடிய பொதுவான முறைகளைப்பற்றியும் ஆராய்ச்சிக் குறிப்புகளைக் காணலாம். 1950-ஆம் ஆண்டு முதல் 1959-ஆம் ஆண்டுவரை உள்ள காலத்தில் நிலவிய சூழ்நிலை 1960-ஆம் ஆண்டு முதல் 1969-ஆம் ஆண்டுவரை உள்ள கால அளவிலும்

எந்த அளவுக்கு நிலவலாம் என்ற ஓர் ஆராய்ச்சியைக் காணலாம். இதுபற்றிய ஆராய்ச்சி நடக்கும்போது மூலதனப் பற்றாக்குறை, தனியார்களின் நீர்மைத்தன்மை, நிறுவனங்களின் நீர்மைத்தன்மை ஆகியவை 1960-69ல் எவ்வாறு அமைந்திருக்கும் என்றும் ஆராயப்படுகிறது.

ஆறுவது அத்தியாயத்தில் எஞ்சியுள்ள பகுதிகளில், 1960-1969 முடிய உள்ள கால வரம்பில் பண முறைகளைக் கையாண்டு, எந்த அளவுக்கு வெற்றிகாண முடியும் என்பது பற்றிய விளக்கம் காணப்படுகிறது. தொழிலின் ஏற்றத்தாழ்வுகளைப் பற்றி விவாதிக்கும்போது, வட்டி வீதம் (488-503 பத்திகள்), பாங்குகளின் நீர்மைத் தன்மை குறித்த கட்டுப்பாடுகள் (504-508) மூலதன வெளியீட்டுக் கட்டுப்பாடுகள் (512), தவணைக் கொள்முறை கட்டுப்பாடு (513) ஆகியவை பற்றிய விளக்கங்களைக் காண லாம். தொழிலில் ஏற்றமோ, தாழ்வோ நேரும்போது மேற்குறித் தவை எந்த அளவுக்குத் தேவைப்படும் என்று விளக்கப்படுகிறது. மேலும் இதுமாதிரியான சூழ்நிலைகளில் பணமுறைகளின் பங்கு பற்றிய பொதுவான விவாதமும் காணப்படுகிறது (514-519). குழு பணக்கொள்கை குறித்து சாதகமான முடிவுக்கு வரவில்லை. எதிர்காலத்தில் பணக்கொள்கை ஆற்றல் மிக்கதாக இருக்காது என்று குழு கருதுகிறது. குழுவின் இக் கருத்தை நாம் அப்படியே ஏற்றுக்கொள்ள முடியாது—இது விவாதத்திற்குரிய ஒன்றாகும். இருப்பினும் காலப்போக்கில் தொடர்ந்து நேர்ந்துகொண்டிருக்கும் பலவிதமான சிக்கல்கள் குறித்து மேலும் மேலும் தொடர்ந்து ஆராயவேண்டுவது அவசியமே என்று குழு கருத்துத் தெரிவித் திருக்கிறது என்ற உண்மையை மறந்துவிடலாகாது.

ஆறுவது அத்தியாயத்தின் இறுதியில் 520-லிருந்து 529 முடிய உள்ள பத்திகளில் முற்றிலும் மாறுபட்ட ஒரு செய்தி விவா தத்திற்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது. சில சமயம் பொருளா தார அமைப்பு, கட்டுப்பாடுகட்கு அடங்காமல் வரம்பை மீறுவ தால், ஓர் ஆபத்தான சூழ்நிலை உருவாகலாம். அம்மாதிரியான சூழ்நிலையில் எந்தெந்த முறைகளைக் கைக்கொண்டு நிலைமையைச் சரிப்படுத்த வேண்டும் என்பது பற்றிய குறிப்புகளைக் காணலாம். தற்காலிகமாகக் கடைப்பிடிக்கவேண்டிய முறைகள் விளக்கப்படு கின்றன பாங்குக் கடன் கட்டுப்பாடு, மூலதன வெளியீட்டுக் கட்டுப்பாடு, நுகர்வோருக்கு அளிக்கப்படும் கடன்பற்றிய கட்டுப் பாடு நுகர்வோருக்கு அளிக்கப்படும் கடன் பற்றிய கட்டுப் பாடு ஆகியவையே அந்தத் தற்காலிக முறைகளாகும். இந்த முறைகள் யாவற்றையும் ஒரே காலத்தில் வன்மையுடன் செய

லாற்றவேண்டும் என்று வலியுறுத்தப்படுகிறது. இதைப்பற்றி விவாதித்துக்கொண்டிருக்கும்போது தற்செயலாக வேறொன்றினைப் பற்றியும் தங்கள் கருத்தைத் தெரிவிக்கின்றனர். அது 1844ஆம் ஆண்டிலிருந்து நிலவிவரும் நோட்டு வெளியீடு பற்றிய கட்டுப் பாட்டைப்பற்றியதாகும். பரம்பரை பரம்பரையாக நிலவிவரும் கட்டுப்பாடு அகற்றப்பட்டு, அதற்குப் பதில் சட்ட ரீதியான கட்டுப்பாடுகளைப் புகுத்த வாய்ப்புகள் இருக்கின்றனவா என்று அறிக்கை ஆராய்கின்றது. இவற்றை 522-லிருந்து 524 முடிய உள்ள பத்திகளில் காணலாம். இவற்றிற்கெல்லாம் முன்பாக 509ஆம் பத்தியிலிருந்து 511ஆம் பத்தி முடிய வேறு ஒரு விஷயம் ஆராயப்படுகின்றது. சில சமயங்களில் சாதாரணமாக அதிகாரிகள் கைக்கொள்ளும் கட்டுப்பாட்டு முறைகள் வலிமை குன்றியவைகளாக மாறலாம்; அதிகாரிகளும் அதற்கான காரணத்தை அறியமுடியால் திணறலாம். இதுபோன்ற சூழ்நிலையில்-நாம் மேலே குறிப்பிட்ட நெருக்கடிநிலை போன்றதொரு சூழ்நிலை அகன்று, இதுபோன்ற சூழ்நிலையில் கடைப்பிடிக்கவேண்டிய முறைகளையும் குழுவினர் தருகின்றனர். கடன் தரும் நிறுவனங் களின் நடவடிக்கைகளைப் பெருமளவில் நேரடியாகக் கட்டுப் படுத்த முயலுவதே இதுபோன்ற காலங்களில் பயன் அளிக்கக் கூடிய முறை என்று குழு கருதுகிறது.

ஆறும் அத்தியாயத்தில் விளக்கப்பெறும் பொதுவான கருத்து களைச் சார்ந்து, ஏழாவது அத்தியாயம் தொடங்குகிறது. அரசாங் கக் கடனை நிர்வகிப்பதில் ஏற்படக்கூடிய சிக்கல்கள் பற்றிய விளக் கத்தை இந்த அத்தியாயத்தில் காணலாம். ஏற்கெனவே ஐந்தாம் அத்தியாயத்தில் இதுபற்றிய ஒரு சிறு குறிப்பு காணப்படுகிறது. ஏழாம் அத்தியாயத்தில் முற்றிலும் புதுமையான புள்ளி விவரங் களோடு கூடிய விளக்கம் காணப்படுகிறது. இந்த விளக்கம் மன நிறைவு அளிக்கக்கூடியது என்று கொள்ள முடியாவிட்டாலும், இதுவரை வெளியிடப்பட்டுள்ள விளக்கங்களைவிட அதிகமான செய்திகளை உள்ளடக்கித் திகழ்கிறது என்ற உண்மையை மறந் திடலாகாது. 542ஆம் பத்தியிலிருந்து 548ஆம் பத்தி முடிய அரசாங்கக் கடன் தேவைபற்றியும், 549ஆம் பத்தியிலிருந்து 556ஆம் பத்தி முடிய அரசாங்கம் இரண்டாம் உலகப்போருக்குப் பின் கையாண்டுவரும் முறைகள்பற்றியும் விளக்கங்கள் காண லாம். கடன் எழுப்பும் பொழுது இதுவரை கைக்கொள்ளப்பட்ட விதிகள், இனிக் கையாளவேண்டிய விதிகள் ஆகியவைபற்றிய மிக விளக்கமான ஆராய்ச்சியும் உள்ளது. 557ஆம் பத்தியி லிருந்து 577ஆம் பத்தி முடிய அரசாங்கக் கடன் பத்திரங்களின் வருவாயைப் பாதிக்கக் கூடியவை பற்றிய விளக்கம் காணப்

படுகிறது. கருவூல உண்டியல்கள், அரசாங்கப் பத்திரங்கள் ஆகியவற்றை வெளியிடுவதற்குமுன் அரசாங்கம் செய்யவேண்டிய ஏற்பாடுகள் பற்றியும், கருவூல உண்டியல்களிலும், அரசாங்கப் பத்திரங்களிலும் வெளிமார்க்கெட் நடவடிக்கைகள் (open market operations) நடத்துவதற்குமுன் செய்யவேண்டிய ஏற்பாடுகள் பற்றியும், விளக்கங்கள் (578-590) காணப்படுகின்றன. தேசீயமயமாக்கப்பட்டுள்ள தொழில்கள் தங்கட்குத் தேவையான மூலதனத்தை எழுப்பும்போது நேரக்கூடிய சிக்கல்கள்பற்றியும் (591-595), ஸ்தல ஸ்தாபன அதிகாரிகள் கடன் எழுப்பும்போது நேரக்கூடிய சிக்கல்பற்றியும் (601-602) விளக்கங்கள் காணப்படுகின்றன. இந்த அத்தியாயம் முழுவதிலும் இரண்டு கருத்துகள் வலியுறுத்தப்படுவதைக் காணலாம். அரசாங்கக் கடனை நிர்வகிப்பதே மைய பாங்கின் அடிப்படையான கடமை என்பது ஒரு கருத்து மைய பாங்கு அரசாங்கக் கடனை நிர்வகிக்கும்போது கையாளப்படும் முறைகள் அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையுடன் தெளிவாக இணைக்கப்படல் வேண்டும் என்பது மற்றொரு கருத்து.

1950ஆம் ஆண்டிலிருந்து 1959ஆம் ஆண்டு முடிய உள்ள காலவரம்பில் நடைபெற்ற நிகழ்ச்சிகளை ஆராயுங்கால், வெளிநாட்டு நிகழ்ச்சிகளால் இங்கிலாந்தில் கடைப்பிடிக்கப்பட்ட பண முறைகள் எந்த அளவுக்குப் பாதிக்கப்பட்டன என்பதைப்பற்றிய குறிப்புகளைக் குழுவினரின் அறிக்கையில் காணலாம். இதைப் பற்றியும், பிரிட்டனின் பணக்கொள்கை எந்தவிதமான உலகச் சூழ்நிலையில் கடைப்பிடிக்கப்படவேண்டியுள்ளது என்பது குறித்தும், எட்டாம் அத்தியாயம் விவரிக்கிறது. பிரிட்டனின் பணக்கொள்கையின், வெளிநாடுகள் பற்றிய குறிக்கோள்களை ஓரிரு வாக்கியங்களில் விளக்கிவிட முடியாது என்பதை இந்த அத்தியாயம் தெளிவுபடுத்துகிறது. உலகம் என்ற சமுதாயத்தில், தான் ஓர் அங்கம் என்ற முறையில் பிரிட்டனுக்குச் சில கடமைகளும், பேரார்வங்களும் உள்ளன என்பதைக் குழு விளக்குகிறது. இந்த அத்தியாயம் சிக்கலான விஷயங்களை விளக்குகின்றது; இவை பிரிட்டன் உலக நாடுகளினிடையே ஒரு சிக்கலான நிலை வகித்து வருவதின் பிரதிபலிப்பேயாகும். பிரிட்டனிடமுள்ள காப்பு இருப்புகள் (reserves) பற்றியும், பிரிட்டனின் பொறுப்புகள் (liabilities) பற்றியும் விளக்கங்கள் தரப்படுகின்றன. அயல்நாட்டுச் செலாவணியைப் பொறுத்த வரையில், பிரிட்டன் அடிக்கொரு முறை அல்லலுறுவதற்கான உண்மைக் காரணத்தை விளக்குகிறது. பிரிட்டன் தான் வாங்கும் பொருள்களுக்குப் பணம் கொடுக்க இயலாத நிலையில் இருப்பதுதான் இதற்குக் காரணம் என்று

தவருக எண்ணிவிடலாகாது என்று அறிக்கை வலியுறுத்துகிறது. காப்பு இருப்பு பற்ருமல் போய்விடுவதும் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலைப் பட்டியலில் (balance of payments) உள்ள சில கூறுகள் நிலையில்லாமல் அடிக்கொரு முறை மாறுவதுமே உண்மையான காரணங்களாகும் என்பதை விளக்கமாக எடுத்துரைக்கிறது. (612-633). காப்பு இருப்பு எவ்வெவற்ருல் பாதிக்கப்படுகிறது என்பது குறித்த விளக்கமும் (634 - 643) காணப்படுகின்றது. ஸ்டெர்லிங் பிரதேசம் (sterling area) பற்றிய விளக்கமும் (644-656) அதனுடைய எதிர்காலம் பற்றிய விளக்கமும் (657-663) காணக்கிடக்கின்றன. சர்வதேச ரொக்கத் தன்மைபற்றிய விவாதமும் காணப்படுகிறது. (664-690) குறிப்பிட்ட ஒரு நாட்டின் தனித்த செய்கையால் சர்வதேச சமன்நிலை (international balance) பற்றிய சிக்கல்களைத் தீர்த்துவிட முடியாது என்றும் சர்வதேச நிறுவனங்களின் வளர்ச்சியே சர்வதேச சமன்நிலைக்கு உறுதுணையாக அமையமுடியும் என்றும் குழு வலியுறுத்துகின்றது. காப்பு இருப்புக்குப் பாதகம் ஏற்படாமல் காத்துக்கொள்வதற்கு அதிகாரிகள் கைக்கொள்ள வேண்டிய முறைகள் விளக்கப்படுகின்றன (691-747). இது குறித்து மைய பாங்கு வீதம்பற்றியும் (695-702), முன்னேக்கிய அயல்நாட்டுச் செலாவணி வீதம் பற்றியும் (forward exchange rate) (703-707), மதிப்புக் குறைப்பு (devaluation) மாறுபடும் செலாவணி வீதம் ஆகியவைபற்றியும் (708-722), நிர்வாகக் கட்டுப்பாடுகள் பற்றியும் (administrative controls) (723 - 730) அயல்நாடுகளில் முதலீடு செய்வது குறித்த கட்டுப்பாடுகள் பற்றியும் (731 - 747) விளக்கங்கள் காணலாம்.

கொள்கை சம்பந்தமான சிக்கல்கள், அதிகாரிகள் கையாள வேண்டிய முறைகள் ஆகியவற்றை ஆராய்ந்துவிட்டு, குழு, மைய பாங்கின் அமைப்பு முறைகள் எந்த அளவுக்குக் கொள்கைகளை நிறைவேற்றுவதற்குச் சாதகமாக அமைந்துள்ளன என்பது பற்றி விவாதிக்கிறது. ஒன்பதாம் அத்தியாயத்தின் தலைப்பு, 'இங்கிலாந்தின் மைய பாங்கின் அமைப்பும் அந்தஸ்தும்' என்பதாகும். இந்த அத்தியாயத்தை, ஐந்தாம் அத்தியாயத்துடன் மட்டுமின்றி ஆறு, ஏழு, எட்டு ஆகிய அத்தியாயங்களுடனும் இணைத்துப் படிப்பது பயன் தருவதாகும். மைய பாங்கின் தற்கால நிலைபற்றியும், அதையொட்டி மைய பாங்குக்கும் அரசாங்கத்தின் ஏனைய அங்கங்கட்கும் இடையே நிலவும் உறவு முறைபற்றியும், விவாதங்களைக் காணலாம். 1946ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட தேசீய மயச் சட்டத்தின் சில பகுதிகளை அனுபவ ரீதியில் ஆராய்கின்றது. கோர்ட் ஆஃப் டைரக்டர்களின் கடமைகளைப்

பற்றியும் ஆராய்கின்றது. இதை ஆராயும் பொழுது 1957 ஆம் ஆண்டு பார்க்கர் டிரிபியூனல் (Parker Tribunal) ஆராய்ந்த விஷயத்தையும் உற்று நோக்கியுள்ளது. 'மைய பாங்கு வீத உயர்வு பற்றிய செய்தி முறையின்றி உரிய காலத்திற்குமுன் வெளியிடப்பட்டது' என்ற குற்றச்சாட்டை ஆராய்வதற்காகவே 1957 ஆம் ஆண்டு பார்க்கர் டிரிபியூனல் நியமிக்கப்பட்டது. கோர்ட் ஆஃப் டைரக்டர்களின் அமைப்பு முறையைப் பொறுத்த அளவில் பெருமளவு மாற்றங்கள் எதையும் செய்யவேண்டிய அவசியமில்லை என்று குழு எண்ணுவதாகத் தெரியவருகிறது. இருப்பினும் கோர்ட் ஆஃப் டைரக்டர்களின் வெளித்தோற்றம், நடைமுறையில் கைக்கொள்ளப்படும் முறைகட்கு ஏற்றவாறு அமையவேண்டுவது இன்றியமையாதது என்று குழு கருத்துத் தெரிவித்துள்ளது.

பத்தாவது அத்தியாயத்தின் தலைப்பு 'புள்ளி விவரங்கள்' என்பதாகும். கிடைக்கக் கூடிய புள்ளி விவரங்களையும், பணக் கொள்கைக்கு அவை போதுமானவையாகுமா என்பதையும் பற்றிய விளக்கங்களைக் காணலாம். பணக் கொள்கையைப் பொறுத்த அளவில் நிதி நிறுவனங்கள் புள்ளி விவரங்கள் மட்டும் போதா; ஏனைய துறைகள் பற்றிய புள்ளி விவரங்களும் வேண்டற்பாலன என்பதை வலியுறுத்துகிறது. பொருளாதாரப் புள்ளி விவரங்களைப் பொறுத்த வரையில் அண்மையில் மிக்க வளர்ச்சி நேர்ந்துள்ளது என்றும், ஆனால் இந்த வளர்ச்சியில் நிதிபற்றிய புள்ளி விவரங்களின் பங்கு மிகக் குறைவு என்றும் அறிக்கை குறிப்பிடுகின்றது. புள்ளி விவரங்களைச் சேகரித்து அவற்றை வெளியிடும் பணியில் மைய பாங்குக்குச் சிறப்பான பொறுப்பு உள்ளது என்னும் கருத்து வலியுறுத்தப்படுகின்றது. பணக் கொள்கையைச் சர்வாதிகார ரீதியில் செயல்படுத்தக்கூடாது என்ற கருத்தும், தெளிந்த கருத்துக்களின் அடிப்படையில் சார்பற்ற நோக்குடன் பணக் கொள்கையைப் பயன்படுத்த வேண்டும் என்ற கருத்தும் இந்த அத்தியாயம் முழுவதும் வலியுறுத்தப்படுகிறது. எனவே தங்கள் நடவடிக்கைகட்கு ஆதாரமாக அமையக் கூடியவற்றை அதிகாரிகள் முடிந்த அளவுக்கு முழுவதையும் வெளியிடுவதே சிறந்தது என்று குழு கருத்துத் தெரிவிக்கின்றது.

பதினொன்றாவது அத்தியாயத்தின் தலைப்பு 'பணம் பற்றிய நிறுவனங்களின் வளர்ச்சி' என்பதாகும். ஏற்றுமதிகட்கு நிதி (867-898), விவசாயத்திற்கு நிதி (899-931), சிறு தொழில்கள் தொழிற்சாலைகளில் புதிய கண்டுபிடித்தல் ஆகியவற்றிற்கு நிதி (932-952), கிரோ முறை (Giro system) செலுத்தினங்கள் (953-964), மூலதன வெளியீடுகளின் கட்டுப்பாடு (965-967)

ஆகிய ஐந்து வகையான செய்திகள் பற்றிய விவாதத்தை இந்த அத்தியாயத்தில் காணலாம். இந்த ஐந்து வகையான செய்திகளிலும் சீர்திருத்தங்களோ, சிறிய மாற்றங்களோ தேவை என்று சான்றுகளின் அடிப்படையில் குழு தனது கருத்தை வெளியிடுகின்றது.

பன்னிரண்டாம் அத்தியாயம் முடிவுரையாகத் திகழ்கின்றது. பிரிட்டனின் பண அமைப்பைத் தாங்கள் ஆராய்ந்தபோது தங்களுக்குத் தோன்றிய முக்கியமான கருத்துகளை மிகச் சுருக்கமாகக் குழுவினர் இந்த அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளனர்.

அறிக்கை நீங்கலாக 'சான்றுக் குறிப்புகள்' அடங்கிய ஒரு புத்தகமும், 'சான்றுச் சுருக்கங்கள்' அடங்கிய மூன்று புத்தகங்களும், அரிய செய்திகட்கு மூலாதாரமாகத் திகழ்கின்றன. ரேட்கிளிஃப் குழுவின் முன்பு வாக்கு மூலம் கொடுத்தவர்களில் பெரும்பாலோர் முன் கூட்டியே எழுத்து மூலம் குறிப்புகள் அனுப்பி இருந்தனர். சாட்சிகளிடம் கேட்கப்பட்ட பெரும்பாலான கேள்விகள் அவர்கள் இவ்வாறு ஏற்கெனவே அனுப்பி இருந்த குறிப்புக்களின் ஒரு சில பகுதிகளைப் பற்றியனவாகவே அமைந்திருந்தன, எனவே, மேற்குறித்த புத்தகங்களைப் படிக்க விரும்பும் வாசகர்கள் முதற்கண் எழுத்து மூலம் தரப்பட்ட குறிப்புகளைப் படித்து விட்டுப் பின் சாட்சிகளின் நேரடி வாக்கு மூலங்களைப் படிப்பார்களேயானுல் அவர்கள்பயனுறுவர்; குறிப்பாகக் கருவூலமும் இங்கிலாந்தின் மைய பாங்கும் கொடுத்த சாட்சியங்களைப் படிக்கும்போது இம் முறையைக் கடைப்பிடிக்க வேண்டுவது அவசியமாகும்.

குழு, முதல் நாளிலிருந்து பதின்மூன்ரும் நாள் வரை சேகரித்த வாக்குமூலங்கள், பதினைந்தாம் நாளில் சேகரித்த வாக்குமூலங்கள் ஆகியவற்றின் கருவூல மைய பாங்கு ஆகியவை கொடுத்துள்ள சான்றுகளைக் காணலாம். 38, 51, 59 ஆகிய தினங்களில் சேகரித்த வாக்குமூலங்களிலும் கருவூல மைய பாங்கு ஆகியவை கொடுத்துள்ள முக்கியமான சான்றுகளைக் காணலாம். இவற்றையும் தவருமல் படிக்கவேண்டியது அவசியமாகும்.

இலண்டன் தீர்வு பாங்கர்கள் 16, 17, 57 ஆகிய தினங்களிலும், ஸ்காட்லாந்து பாங்குகள் 20-வது தினத்திலும், தனியார் துறையிலுள்ள ஏனைய நிதி நிறுவனங்களிலும் 16, 18, 19, 21, 23 மேலும் 28-லிருந்து 31 ஆகிய தினங்களிலும் சான்றுகள் கூறினர்.

அயல்நாடுகளினின்றும் அழைக்கப்பட்ட மூன்று மைய பாங்கர்கள், குழுவினர்முன் தங்கள் வாக்குமூலங்களைக் கொடுத்தனர். அவர்களின் பெயர் வருமாறு: (1) திரு. எம். எச். டீகாக் (M. H' DeKock), தென் ஆப்ரிக்க ரிசர்வ் பாங்கு கவர்னர் (36ஆம் நாள்). (2) திரு. வின்பீல்டு டபிள்யூ ரைஃப்ளர் (Mr. Winfield W. Rieffler) ஐக்கிய ரிசர்வ் அமைப்பின் போர்ட் ஆஃப் கவர்னர்களின் தலைவருக்கு உதவியாளர் (37, 38ஆம் நாட்கள்), (3) டாக்டர் எம். டபிள்யூ. ஹோல்டிராப் (Dr. M. W. Holtrop), நெதர்லண்ட் பாங்கின் தலைவர் (50ஆம் நாள்). இந்த மைய பாங்கர்களின் வாக்குமூலமும், ஏனைய சில மைய பாங்குகளிடமிருந்து வந்த குறிப்புகளும், முதலாம் புத்தகத்தில் ஐந்தாவது பகுதியில் காணக் கிடக்கின்றன. மேலே கூறப்பட்டுள்ள மைய பாங்கர்கள் மூவரின் வாக்குமூலங்களும் மாணவர்கட்கு மிகவும் பயனுள்ளவையாகும். ஏனெனில் அவர்கள் மைய பாங்கு பற்றிக் கொடுத்த கருத்துகள் ஓர் அடிப்படையில் அமைந்துள்ளன; குழுவினர் இறுதியாக ஏற்றுக்கொண்டு விளக்கியுள்ள மைய பாங்கு பற்றிய கருத்துகள் முற்றிலும் மாறுபட்ட அடிப்படையில் அமைந்துள்ளன. மேற்குறித்த சாட்சியங்களின் ஊகங்கள் இங்கிலாந்தின் நிலைக்கு ஏற்றன அல்ல என்பதே குழுவின் கருத்தாகும். அவை வேறு சூழ்நிலைகளில் வேறு சில நாடுகளுக்குப் பொறுந்தலாம் என்று குழு கருதுகிறது.

குழுவின் வேண்டுகோளுக்கு இணங்க பொருளாதாரம், சமுதாயம் பற்றிய தேசீய ஆராய்ச்சிக் கழகம் (National Instiiute of Economic and Social Research): குழுவினர் வெளியிட்டுள்ள புள்ளி விவரங்கள் போதுமானவைதானா என்பதுபற்றியும் புள்ளி விவரங்கள் குறிக்கும் காலம் சரிதானா என்பதுபற்றியும் விரிந்த அளவில் ஆராய்ந்தது. இவற்றைக் குறிப்புகள் (memoranda) அடங்கிய மூன்றாவது புத்தகத்தில் பன்னிரண்டாம் பகுதியில் காணலாம்.

# பிற்சேர்க்கை

## இலண்டன் பாங்கர்களின் செக்குத் தீர்வகம்

['மூன்று பாங்குகளி'ன் (The Three Banks) அதிகாரிகள் செக்குத் தீர்வக அதிகாரிகளின் கூட்டுறவோடு கீழே தரப்பட்டுள்ள விளக்கத்தைத் தயாரித்துள்ளனர். இக் கட்டுரை 'மூன்று பாங்குகளின் விமரிசனம்' (Three Banks Review) என்ற இதழில் வெளியிடப்பட்டதாகும். நம்முடைய புத்தகத்தில் வெளியிடுவதற்கு இக் கட்டுரையில் சில திருத்தங்கள் செய்யப்பட்டுள்ளன. இக் கட்டுரையைத் தயாரித்து அளித்ததோடு மட்டுமின்றி இங்கு அச்சிட உரிமையையும் வழங்கியுள்ள 'மூன்று பாங்கு'களின் அதிகாரிகட்கும், செக்குத் தீர்வக அதிகாரிகட்கும் எமது நன்றி உரித்தாகுக.]

தீர்வு பாங்குகளின் மொத்த எண்ணிக்கை பதினொன்றாகும். பார்க்லேஸ் (Barclays), லாயிட்ஸ் (Lloyds), மிட்லண்ட் (Midland) நேஷனல் புரவின்ஷியல் (National Provincial), வெஸ்ட் மினிஸ்டர் (West Minister), கோட்ஸ் (Coutts), டிஸ்டிரிக்ட் (District), கிளைன் மில்ஸ் (Glyn Mills), மார்டின்ஸ் (Martins), நேஷனல் (National) மற்றும் வில்லியம்ஸ், டீகான்ஸ் (Williams, Deacons) ஆகியவையே தீர்வு பாங்குகளாகும். இங்கிலாந்துத் தலைமை பாங்கும் செக்குத் தீர்வகத்தின் ஓர் அங்கத்தினராகத் திகழ்கிறது; தன்னுடைய அலுவலால் (ex officio) இங்கிலாந்துத் தலைமை பாங்கு ஓர் அங்கத்தினராகத் திகழ்கிறது. தங்களுக்கிடையே அன்றாடம் ஏற்படுகின்ற கொடுக்கல் வாங்கல்களைத் தீர்த்துக்கொள்ளவும், தங்களுக்கும் இங்கிலாந்துத் தலைமை பாங்குக்கும் இடையே அன்றாடம் ஏற்படுகின்ற கொடுக்கல் வாங்கல்களைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டுப், இப்பதினொரு பாங்குகளும் இங்கிலாந்துத் தலைமை பாங்கில் தங்களுடைய பெயரில் கணக்குகள் வைத்திருக்கின்றன. கொடுக்கல் வாங்கல்களைத் தீர்த்துக்கொள்ளும்பொருட்டும் தீர்வுப் பாங்கு குமாஸ்தாக்கள் தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் செக்குத் தீர்வகத்தில் சந்திக்கின்றனர். செக்குத் தீர்வகம் லொம்பார்டுத் தெருவில் (Lombard Street) அமைந்துள்ளது. செக்குத் தீர்வகத்தை இலண்டன் செக்குத் தீர்வு பாங்கர்களின் குழு' (Commi-

ttee of London Clearing Bankers) நிர்வகித்து வருகிறது. குழுவில் ஒவ்வொரு பாங்கின் பிரதிநிதியும் இடம் பெறுகிறார். பொதுவாக அந்தந்தப் பாங்கின் தலைவர் (Chairman) குழுவில் பாங்கின் பிரதிநிதியாக இடம் பெறுகிறார். குழு ஒவ்வொரு மாதமும் ஒரு முறை கூடுகிறது, மூன்று மாதத்திற்கு ஒரு முறை குழுவின் கூட்டம் இங்கிலாந்துத் தலைமை பாங்கில் நடைபெறுகிறது. அவ்வமயங்களில் இங்கிலாந்துத் தலைமை பாங்கின் கவர்னரும் உதவி கவர்னரும் கூட்டத்தில் கலந்து கொள்கின்றனர். செக்குத் தீர்வகத்தின் நிர்வாகத்தைத் தலைமை ஆய்வாளர் (Chief Inspector) ஒருவரிடமும் உதவி ஆய்வாளர் (Deputy Inspector) ஒருவரிடமும், குழு ஒப்படைத்திருக்கிறது. இந்த ஆய்வாளர்கள் செக்குத் தீர்வகத்தின் அன்றாட நடவடிக்கைகளை கவனித்துக் கொள்ளுகின்றனர்.

தங்களிடம் வந்து சேரக்கூடிய ஏனைய தீர்வு பாங்குகளின் மீது வரையப்பட்ட செக்குகளைத் தீர்வு பாங்குகள் செக்குத் தீர்வகத்திடம் கொடுக்கின்றன. இத் தன்மைத்தான செக்குகளையே செக்குத் தீர்வகம் கையாளுகிறது. தீர்வு பாங்குகளின் கிளைகள் நாட்டில் வெவ்வேறு பகுதிகளில் அமைந்துள்ளன. இதையொட்டியே செக்குத் தீர்வக வேலை சில பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இரண்டாவது உலக யுத்தத்திற்கு முன் மூன்று பிரிவுகள் இருந்தன. நகரத் தீர்வு (Town Clearing), தலைநகரத் தீர்வு (Metropolitan Clearing), மற்றும் நாட்டுப்புறத் தீர்வு (Country Clearing) ஆகியவையே இந்த மூன்று பிரிவுகளாகும். 120 கிளைகள் (பாங்குகளினுடைய கிளைகள்) நகரத்தீவின்கீழ் வந்தன. பின்ஸ்பரி சர்க்கஸிலிருந்து (Finsbury Circus) சவுத்வார்க் (South wark) வரையிலும், மற்றும் செயின்ட் பால்ஸ் சார்ச்யார்டிலிருந்து (St. Paul's Churchyard) மினுரிஸ் (Minories) வரையிலும், இடைப்பட்ட பிரதேசங்களில் நகரத் தீர்வு நடந்து வந்தது. தலைநகரத் தீர்வின்கீழ் 670 கிளைகள் (பாங்குகளுடைய கிளைகள்) அமைந்திருந்தன, நகரத் தீர்வின் எல்லைக்குட்படாத இலண்டன் மாநகரின் பகுதிகள் தலைநகரத் தீர்வுக்கு உட்பட்டவையாகும். இங்கிலாந்து நாட்டின் எஞ்சியுள்ள பகுதிகளும் வேல்சும் (Wales) நாட்டுப்புறத் தீர்வுக்கு உட்பட்டவையாகும். தீர்வு பாங்குகள் ஒன்றின்மேல் மற்றொன்று வரைந்த செக்குகள் தவிர ஏனைய வகைகளைச் சேர்ந்த செக்குகளையும் தீர்த்து வைப்பதற்கான ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன. ஏனைய வகைகளைச் சேர்ந்த செக்குகள் வருமாறு :

1. தீர்வு பாங்கு ஒன்றின் ஒரு கிளையின்மீது வரையப்பட்டுப் பிறிதொரு கிளையில் கொடுக்கப்பட்டுள்ள செக்கு.

2. ஸ்காட்லாந்து பாங்குகளின் மீதும், அயர்லாந்து பாங்குகளின் மீதும் வரையப்பட்ட செக்குகள்.

3. செக்குத் தீர்வகத்தில் அங்கத்தினரல்லாத பாங்குகளின் இலண்டன் கிளைகளின் மீதோ, அலுவலகங்களின் மீதோ வரையப்பட்ட செக்குகள், அயல்நாட்டு பாங்குகள், வெளி நாட்டு பாங்குகள், வியாபார பாங்கு அகங்கள் ஆகியவை செக்குத் தீர்வகத்தில் அங்கம் பெறவில்லை. இச் செக்குகள் தீர்வு பெறும் முறைக்கு 'நடைகள்' (Walks) என்பது பெயராகும்.

4. தீர்வு பாங்கு ஒன்றின் கிளைமீது வரையப்பட்டு, பிறிதொரு தீர்வு பாங்கின் கிளையில் கொடுக்கப்பட்டுள்ள செக்குகள்: இந்த இரண்டு கிளைகளும் மாகாணத் தீர்வு ஏற்பாடுகளின் கீழ் அமைந்திருக்கவேண்டும்; அன்றிப் பிரதேசத் (local) தீர்வு ஏற்பாடுகளின் கீழ் அமைந்திருக்க வேண்டும். லீட்ஸ் நகரிலுள்ள பார்க்லேஸ் பாங்கின் கிளைமீது வரையப்பட்டு, லீட்ஸ் நகரிலேயே உள்ள மிட்லண்ட் பாங்கின் கிளையில் கொடுக்கப்பட்டுள்ள செக்கை இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

5. அரசாங்கத் துறைகளின் டிராப்டுகளுக்கான பணத்தை வசூல் செய்வதற்குச் சில பிரத்தியேகமான ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். பேமாஸ்டர் ஜெனரல் (Paymaster General), இன்லண்ட் ரெவன்யூ (Indland Revenue) ஜி.பி.ஓ. (G.P.O.) மற்றும் இங்கிலாந்துத் தலைமை பாங்கின் வட்டி வாரண்டுகள் (Interest Warrants) ஆகியவை இம் மாதிரியான டிராப்டுகளாகும்.

மேலே நாம் கொடுத்துள்ள பலவகைப்பட்ட செக்குகள் எங்ஙனம் தீர்வு பெறுகின்றன என்பதைப் பற்றிய விளக்கம் பின்பு தரப்படும்.

இரண்டாம் உலகப்போரின் ஆரம்பகாலத்தில் செக்குத் தீர்வக அமைப்பில் சில மாற்றங்கள் செய்யப்பட்டன. நகரத் தீர்வின்கீழ் வந்த பாங்குக் கிளைகளின் எண்ணிக்கை பெரிதும் குறைந்தது. 33 கிளைகளே நகரத் தீர்வின்கீழ் வந்தன. தலைநகர் தீர்வும் நாட்டுப்புறத் தீர்வும் அகற்றப்பட்டன. இவற்றிற்குப் பதிலாகப் பொதுத் தீர்வு (General Clearing) ஏற்படுத்தப்பட்டது. புதிதாக நிர்மாணிக்கப்பட்டுள்ள நகரத் தீர்வின் எல்லைகட்கு உட்படாத இங்கிலாந்து நாட்டின் பகுதிகள், மற்றும் வேல்ஸ் ஆகியவை பொதுத் தீர்வுக்கு உட்பட்டவை. போர்க் காலங்களில் நகரத் தீர்வு இலண்டனிலும்,

ஸ்டோக் - ஆன் - டிரண்ட்டுக்கு (Stoke-on-Trent) அருகிலுள்ள டிரன்தம் கார்டன்ஸ்ஸில் (Trentham Gardens) நிறுவப்பட்ட செக்குத் தீர்வகத்தில் பொதுத் தீர்வும் நடைபெற்று வந்தன. இரண்டாம் உலக யுத்தம் முடிவுற்றபின் நகரத் தீர்வின் எல்லைகள் விவரிக்கப்பட்டுள்ளன. தற்சமயம் 82 கிளைகள் நகரத் தீர்வின் கீழ் வருகின்றன. முக்கியமான மார்க்கெட்டுகள் யாவும் அமைந்துள்ள இலண்டன் வாலிலிருந்து (London Wall) தேம்ஸ் நதியின் வடகரை வரையிலும் மற்றும் குவின் தெருவிலிருந்து மார்க் சந்து வரையிலும் உள்ள பகுதிகள் யாவும் நகரத் தீர்வின் எல்லைகட்குள் அமைந்துள்ளவையாகும். இரண்டாம் உலகப் போருக்குப் பின் பொதுத் தீர்வு மீண்டும் இலண்டனிலேயே நடைபெற்று வருகிறது. எனவே; தற்சமயம் நகரத் தீர்வு அலுவலகமும் பொதுத் தீர்வு அலுவலகமும் லொம்பார்டுத் தெருவிலேயே அமைந்துள்ளன. போர்க் காலத்தில் இரண்டு பிரிவுகளே இயங்கி வந்தது போல, தற்சமயம் இரண்டு பிரிவுகளே இயங்கி வருகின்றன.

வாடிக்கைக்காரர்கட்குத் தீர்வு பாங்குகள் கொடுக்கக்கூடிய செக்குப் புத்தகங்களில் செக்குகளை எளிதில் அடையாளம் கண்டு கொள்வதற்கும் பிரித்து வைப்பதற்கும் ஏதுவான வகையில் சில குறியீடுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இச் செக்குகளின் இடப் பக்கம் கீழே மூலையில் 'T' 'M' அல்லது 'C' என்ற எழுத்துக்களில் ஏதேனும் ஒன்று அச்சிடப் பெற்றிருக்கும். இரண்டாவது உலகப் போருக்கு முன் இயங்கி வந்த நகரத் தீர்வின் எல்லைகட்குள் அமைந்துள்ள பாங்குகளின் கிளைகள் யாவும் 'T' என்ற எழுத்துப் பொறிக்கப்பட்டுள்ள செக்குகளை வெளியிடுகின்றன. முன்பு இயங்கிக் கொண்டிருந்த தலைநகரத் தீர்வின் எல்லைகட்குள் அமைந்துள்ள கிளைகள் யாவும் 'M' என்ற எழுத்து பொறிக்கப்பெற்றுள்ள செக்குகளை வெளியிடுகின்றன. முன்பு இயங்கிக் கொண்டிருந்த நாட்டுப்புறத் தீர்வின் எல்லைகட்குள் அமைந்துள்ள கிளைகள் யாவும் 'C' என்ற எழுத்து பொறிக்கப் பெற்றுள்ள செக்குகளை வெளியிடுகின்றன. செக்கை வெளியிட்டுள்ள கிளையின் இருப் பிடத்தை எளிதில் அடையாளம் கண்டுகொள்ளும் வகையில் செக்கின் மேலே வலப் புற மூலையில் அதன் 'தேசீய எண்' பொறிக் கப்பட்டிருக்கிறது. 'செக்குத் தீர்வகத்தின் கீழ் முன்பு இயங்கி வந்த மூன்று பிரிவுகட்கும் தனித்தனியான எண்கள் அளிக்கப் பட்டுள்ளன. முன்பு இயங்கிக் கொண்டிருந்த நகரத் தீர்வின் எல்லைகட்குள் நிறுவப்பட்டுள்ள பாங்கு அலுவலகங்கள் யாவற் றிற்கும் மூன்று இலக்கங்களை உடைய எண்கள் வழங்கப்பட்டிருக் கின்றன. தலைநகரத் தீர்வின் எல்லைகட்குள் அமைந்துள்ள கிளைகள் யாவற்றிற்கும் நான்கு இலக்கங்களை உடைய எண்கள்

வழங்கப்பட்டிருக்கின்றன. நாட்டுப்புறத் தீர்வின் எல்லைகட்குள் அமைந்துள்ள கிளைகள் யாவற்றிற்கும் ஐந்து இலக்கங்களை உடைய எண்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. இவை தவிர எளிதில் அடையாளம் கண்டு கொள்ளும் வகையில் ஒரு சுலபமான குறியீடும் அமைத்திருக்கின்றனர். இம் முறை வருமாறு : ஐம்பெரும் பாங்குகளில் ஒவ்வொரு பாங்கின் எல்லாக் கிளைகளின் செக்குகளில் பொறிக்கப்பட்டிருக்கும் எண்களின் முதல் இலக்கம் ஒரு குறிப்பிட்ட இலக்கமாகவே அமைந்துள்ளது. உதாரணமாக, பார்க்லேஸ் பாங்கின் கிளைகள் வெளியிடுகின்ற செக்குகளில் பொறிக்கப் பெற்றிருக்கின்ற எண்கள் யாவும் இரண்டு என்ற இலக்கத்துடன் ஆரம்பமாகின்றன. லாயிட்ஸின் செக்குகள் '3' என்ற இலக்கத்தை முதலாவதாக உடைய தேசீய எண்களைப் பெற்றுள்ளன. இவ்வாருகப் பாங்குகளின் பெயர்கள் ஆங்கில அகர வரிசையில் ஒழுங்கு செய்யப்பட்டு எண்கள் வழங்கப்பட்டுள்ளன. எனவே வெஸ்ட் மினிஸ்டரின் செக்குகள் '6' என்ற இலக்கத்தை முதலாவதாக உடைய தேசீய எண்களைப் பெற்றுள்ளன. ஐம்பெரும் பாங்குகள் நீங்கலாக உள்ள ஏனைய தீர்வு பாங்குகள் வெளியிட்டுள்ள செக்குகள் யாவும் '1' என்ற இலக்கத்தை முதலாவதாக உடைய தேசீய எண்களைப் பெற்றுள்ளன. இந்த ஏனைய தீர்வு பாங்குகள் ஒவ்வொன்றும் வெளியிட்டுள்ள செக்குகளை எளிதில் அடையாளம் கண்டுகொள்ளும் வகையில் இவை ஒவ்வொன்றுக்கும் வாங்கப்பட்டுள்ள எண்களின் இரண்டாவது இலக்கம் வெவ்வேருக அமைந்துள்ளது. உதாரணமாக கிளான் மில்ஸ் (Glyn Mills) பாங்கின் கிளைகள் வெளியிடும் செக்குகளில் பொறிக்கப் பட்டிருக்கின்ற எண்கள் யாவும் '15' என்ற இலக்கங்களுடன் ஆரம்பமாகின்றன. வில்லியம்ஸ் டீ கான்ஸ் வெளியிட்டுள்ள செக்குகள் யாவும் '16' என்ற முதலிரு இலக்கங்களை உடைய எண்களைப் பெற்றுள்ளன. 'நடைகள்' (Walks) முறையின் கீழ்ப் பணம் வசூல் செய்யப்படவேண்டிய செக்குகள் யாவும் '7' என்ற முதலாம் இலக்கம் உடைய எண்களைப் பெற்றுள்ளன. இந்த எண்கள் யாவும் நெடுங்காலத்திற்கு முன்பே பாங்குகட்கு வழங்கப்பட்டவையாகும். அந் நாள்தொட்டு இங்கிலாந்துப் பாங்குகளின் எண்ணிக்கையில் மாற்றங்கள் நேர்ந்துள்ளன. எனவே நாம் மேலே விளக்கியுள்ள விதிகட்குச் சில விலக்குகளும் உள்ளன. உதாரணமாக '70' என்ற இலக்கங்களுடன் ஆரம்பமாகக் கூடிய எண்களை டிஸ்டிரிக்ட் பாங்கு வெளியிடுகின்ற செக்குகள் சிலவற்றில் காண முடியும். மான்செஸ்டர் பகுதியில் நிறுவப்பட்டுள்ள பார்க்லேஸ் பாங்கின் சில கிளைகள் வெளியிடும் செக்குகள் 72 என்ற இலக்கங்களை முதலிரு இலக்கங்களாகக் கொண்டுள்ள எண்களை உடையவையாகும். யார்க்ஷயர்

பென்னி பாங்கின் (Yarkshire Penney Bank) செக்குகள் யாவும் '78' என்ற இலக்கங்களை முதலிரு இலக்கங்களாகக் கொண்டுள்ள எண்களை உடையவையாகும். கிளைகளின்மீது வரையப்பட்டுள்ள செக்குகளைப் பாங்குகளின் தலைமை அலுவலகங்கள் எளிதில் பிரித்துவைத்துக்கொள்வதற்கு ஏதுவாக மற்றும் ஒரு குறியீட்டு எண்ணும் செக்குகளில் பொறிக்கப்பட்டுள்ளது.

இரண்டாவது உலக யுத்தகாலத்தில் செக்குத் தீர்வகத்தின் அமைப்பில் மாற்றங்கள் ஏற்படுத்தப்பட்டன என்று கண்டோம். எனினும் மேலே நாம் குறித்துள்ள குறியீட்டு முறைகளில் எந்த விதமான மாற்றங்களும் ஏற்படவில்லை. உலக யுத்தத்திற்குமுன் கடைப்பிடிக்கப்பட்ட குறியீடுகளே தற்சமயம் கடைப்பிடிக்கப் படுகின்றன. இரண்டாவது யுத்த காலத்தில் ஏற்படுத்தப்பட்ட பிரிவுகள் இன்னும் சரியான உருப்பெறவில்லை என்பது ஒருவேளை இதற்கான காரணமாக இருக்கலாம். உதாரணமாக உலக யுத்தத்திற்குமுன் ஐம்பெரும் பாங்குகளில் ஒரு பாங்கின் ஒரு கிளை நகரத் தீர்வின்கீழ் வந்தது. 1939 ஆம் ஆண்டு இக் கிளை பொதுத் தீர்வுக்கு மாற்றப்பட்டது. இதன்பின் உலோக மார்க்கெட் மீண்டும் திறக்கப்பட்டதையொட்டி இக் கிளையை மீண்டும் நகரத் தீர்வுக்கே மாற்றியுள்ளார். நகரத் தீர்வின் விரைவான தீர்வு வசதிகளை இக் கிளை பெறுவதற்காகவே இது மீண்டும் நகரத் தீர்வுக்கு மாற்றப்பட்டுள்ளது. போர்க் காலத்திற்குமுன் நகரத் தீர்வின்கீழ் வந்த சில கிளைகள் தற்சமயம் பொதுத் தீர்வின்கீழ் அமைந்துள்ளன. இவை இன்னும் 'T' என்ற எழுத்துப் பொறிக்கப் பட்ட செக்குகளையே வழங்கி வருகின்றன. இம் முரண்பாடுஒன்று தவிர இக் குறியீட்டுமுறை தற்சமயமும் திருப்திகரமாகவே இயங்கி வருகிறது.

செக்குகள் எங்ஙனம் தீர்வு பெறுகின்றன என்று நாம் தரப் போகும் விளக்கத்தில் நான்கு சொற்றொடர்கள் மீண்டும் மீண்டும் பயன்படுத்தப்படும். எனவே நகரத் தீர்வின் மூலமும் பொதுத் தீர்வின் மூலமும் எங்ஙனம் செக்குகள் தீர்வு பெறுகின்றன என்று அறிவதற்குமுன் இந் நான்கு சொற்றொடர்கட்கான பொருளை அறியவேண்டியது அவசியமாகும். வெளித்தீர்வு அல்லது வெளி சார்ஜ் (Out Clearing or Out Charge), உள் தீர்வு அல்லது உள் சார்ஜ் (In Clearing or In Charge), பணம் பெறும் பாங்கர் (Collecting Banker), பணம் தரும் பாங்கர் (Paying Banker) ஆகிய வையே இந் நான்கு சொற்றொடர்களாகும். ஒரு தீர்வு பாங்கின் கிளைகளிடம் வந்து சேருகின்ற ஏனைய தீர்வு பாங்குகளின்மேல் வரையப்பட்டுள்ள செக்குகளைக் குறிப்பதற்கே 'வெளித் தீர்வு' என்ற சொற்றொடர் பயன்படுத்தப்படுகிறது. ஏனைய தீர்வுப்

பாங்குகளின்மீது இத் தீர்வு பாங்கு கொண்டுள்ள 'பாத்தியதை களை'யே (claims) இச் செக்குகள் குறிக்கின்றன. ஒரு தீர்வு பாங்கின் கிளைகளின்மீது வரையப்பட்டு ஏனைய தீர்வு பாங்கு களால் அந்தப் பாங்கிடம் கொடுக்கப்படும் செக்குகளைக் குறிப்ப தற்கே 'உள் தீர்வு' என்ற சொற்றொடர் பயன்படுத்தப்படுகிறது. பிறிதொரு பாங்கிடமிருந்து பணம் பெறவேண்டி அதனிடம் செக்கு ஒன்றினைக் கொடுக்கும் பாங்கைக் குறிப்பதற்குப் 'பணம் பெறும் பாங்கர்' என்ற சொற்றொடர் பயன்படுத்தப்படுகிறது. தன்னிடம் பிறிதொரு பாங்கு தந்துள்ள, தன்மீது வரையப்பட்ட செக்குக் கான பணத்தைச் செலுத்தவேண்டிய நிலையிலுள்ள பாங்கைக் குறிப்பதற்குப் 'பணம் தரும் பாங்கர்' என்ற சொற்றொடர் பயன் படுத்தப்படுகிறது. உதாரணமாக பார்க்லேஸ் பாங்கின் கிளை ஒன்றின்மீது வரையப்பட்ட செக்கு ஒன்று வில்லியம்ஸ் டீகான் ஸின் கிளை ஒன்றில் கொடுக்கப்படுறது என்று வைத்துக்கொள் வோம். அவ்வாறுயின் வில்லியம்ஸ் டீகான்ஸ் 'பணம் பெறும் பாங்கர்' ஆகும். பார்க்லேஸ் 'பணம் தரும் பாங்கர்' ஆகும். இந்த செக்கு வில்லியம்ஸ் டீகான்ஸின் 'வெளித் தீர்வில்' இடம் பெறும். ஆனால் பார்க்லேஸில் 'உட்தீர்வில்' இடம் பெறும்.

'வெளித்தீர்வினை'ப் பொறுத்த வரையில் தற்காலம் கையாளப் பட்டுவரும் முறைக்கும், உலகப் போருக்குமுன் அநுசரிக்கப்பட்டு வந்த முறைக்கும் இடையே ஒரு முக்கியமான வேறுபாடு உள்ளது. உலகப் போருக்கு முன்பு கையாண்டுவந்த முறை வருமாறு: பணம் தரவேண்டிய கிளை செக்குத் தீர்வகத்தின் மூன்று பிரிவு களில் எந்தப் பிரிவின்கீழ் அமைந்திருந்ததோ அந்தப் பிரிவின் மூலமே செக்கு, தீர்வு பெற்று வந்தது. எனவே பணம் பெற வேண்டிய கிளை எந்தப் பிரிவின்கீழ் அமைந்திருந்த போதிலும், அது தலைமை அலுவலகத்தின் உதவியோடு தனக்கு ஏனைய பாங்குகளினின்றும் வரவேண்டிய பணத்தை வசூல் செய்து வந்தது. பணம் தரவேண்டிய பாங்கு நகரத் தீர்வில் அமைந் திருந்தால் தலைமை அலுவலகம் நகரத் தீர்வுக்குச் செக்குகளை அனுப்பிப் பணம் பெற்று வந்தது. தலைநகரத் தீர்வின் எல்லைக்குள் பணம் தரவேண்டிய பாங்கு அமைந்திருந்தால் தலைநகரத் தீர்வின் மூலமே செக்குக்குரிய பணத்தைப் பெறமுடியும். இதுபோலவே பணம் தரவேண்டிய பாங்கு நாட்டுப்புறத் தீர்வின்கீழ் அமைந் திருந்தால் செக்கானது நாட்டுப்புறத் தீர்வின் மூலமே தீர்வுபெற்று வந்தது. தற்சமயம் இதுபோன்ற முறை கையாளப்படவில்லை. பொதுத் தீர்வின் எல்லைக்குள் பணம் பெறவேண்டிய கிளை அமைந் திருந்தால், அது பொதுத் தீர்வின்மூலமே பணம் தரவேண்டிய கிளையினிடமிருந்து செக்குக்கான பணத்தை வசூல் செய்கின்றது.

பணம் தரவேண்டிய கிளை பொதுத் தீர்வின்கீழ் அமைந்திருந்தாலும், அன்றி நகரத் தீர்வின்கீழ் அமைந்திருந்தாலும் பணம் பெறவேண்டிய கிளை பொதுத் தீர்வின்கீழ் அமைந்திருந்தால் பொதுத் தீர்வின்மூலமே செக்குகளுக்குரிய பணம் வசூல் செய்யப்படுகிறது. நகரத் தீர்வைப் பொறுத்த வரையில் இது பொருந்தாது. நகரத் தீர்வுமுறை முற்றிலும் மாறுபட்டதாகும். பணம் தரவேண்டிய கிளை எங்கு அமைந்திருக்கின்றதோ, அந்தப் பிரிவின் மூலமே செக்குகட்கான பணத்தைப் பெறமுடியும். பணம் தர வேண்டிய கிளை நகரத் தீர்வின்கீழ் அமைந்திருந்தால் நகரத் தீர்வின் மூலமே செக்குக்குரிய பணத்தைப் பெறமுடியும். பணம் தர வேண்டிய கிளை பொதுத் தீர்வின்கீழ் அமைந்திருந்தால் பொதுத் தீர்வின்மூலமே செக்குக்குரிய பணத்தைப் பெற முடியும்.

இனி, பொதுத் தீர்வின் மூலம் எவ்வாறு செக்குகள் தீர்வு பெறுகின்றன என்பதைக் காண்போம். மேட்லாக் என்பவர் வில்லியம்ஸ் டீகான்ஸ் பாங்கின் வாடிக்கைக்காரர் என்றும், குரோமர் என்பவர் பார்க்லேஸ் பாங்கின் வாடிக்கைக்காரர் என்றும் வைத்துக்கொள்வோம். குரோமர் தம்முடைய பாங்கான பார்க்லேஸின்மீது வரையப்பட்ட செக்கு ஒன்றினை மேட்லாக்கிடம் கொடுக்கின்றார். மேட்லாக் இச் செக்கைத் தம்முடைய பாங்கான வில்லியம்ஸ் டீகான்சில் திங்கட்கிழமையன்று செலுத்துகின்றார். எளிதில் அடையாளம் கண்டு கொள்வதற்காக வில்லியம்ஸ் டீகான்ஸின் கிளையில் இச் செக்கின்மீது ஒரு முத்திரை குத்தப்படுகின்றது. இந்த முத்திரையில் வில்லியம்ஸ் டீகான்சின் பெயரும் இதனுடைய வாடிக்கைக்காரரான மேட்லாக்கின் பெயரும் பொறிக்கப்பட்டிருக்கின்றன வில்லியம்ஸ் டீகான்ஸ் பணம் பெற வேண்டிய பாங்காகத் திகழ்கின்றது. எனவே இந்தச் செக்கின் மீது முத்திரை குத்தப்படுவது செக்கிற்குப் பாதுகாப்பு அளிப்பது போல அமைகின்றது. ஒருவேளை இந்தச் செக்கு தொலைந்து போய்விட்டாலும், வேறு யாரும் செக்குக்குரிய பணத்தைப் பெற முடியாது. வில்லியம்ஸ் டீகான்ஸ் மட்டிலுமே செக்குக்குரிய பணத்தைப் பெறமுடியும். தன்னிடமுள்ள பார்க்லேஸ்மீது வரையப்பட்ட செக்குகளுடன் இந்தச் செக்கும் அடுக்கி வைக்கப்படுகின்றது. இந்தச் செக்குக்குப் பணம் தரவேண்டிய பாங்கு நகரத் தீர்வின் எல்லைக்குள் அமைந்திருக்கலாம்; அன்றிப் பொதுத் தீர்வின்கீழ் அமைந்திருக்கலாம். இதைப்பற்றி வில்லியம்ஸ் டீகான்ஸ் கவலை கொள்ளவேண்டியதில்லை. பார்க்லேஸ்மீது வரையப்பட்ட செக்குகள் யாவற்றிற்கும் வில்லியம்ஸ் டீகான்ஸ் ஒரு பட்டியல் தயாரிக்கிறது; இந்தப் பட்டியலின் மதிப்பைக் கணக்கிடுகின்றது. இந்தச் செக்குகள் யாவற்றையும் ஒரு கட்-

டாகக்கட்டி இவற்றைச் சுற்றி 'அடக்க விவரம்' (Docket) குறிக்கப்பட்டுள்ள ஒரு மேலுறையைச் சுற்றுகின்றது. (ஒவ்வொரு செக்கின் தனித்தனியான மதிப்பு எவ்வளவு என்றும், பார்க்லேஸின் ஒவ்வொரு கிளையின்மீதும் வரையப்பட்டுள்ள செக்குகளின் மதிப்பு எவ்வளவு என்றும், இந்த மேலுறையில்—அதாவது 'அடக்க விவரத்தில்'—குறிக்கப்பட்டிருக்கும்.) இவ்வாறு செய்தபின் வில்லியம்ஸ் டீகான்ஸ் தன்னுடைய இலண்டன் அலுவலகத்திற்கு இச் செக்குகளைத் தபாலில் அனுப்பி வைக்கிறது. இச் செக்குகள் செவ்வாய்க்கிழமை காலை இலண்டன் அலுவலகத்தைப் போய்ச் சேருகின்றன. (செக்குகளின் மதிப்பையே தற்சமயம் எல்லா பாங்குகளும் பட்டியலில் குறிக்கின்றன; செக்குகள் எந்த பாங்கின்மீது வரையப்பட்டுள்ளனவோ, அவற்றின் எண்களைத் தற்சமயம் பட்டியலில் குறிப்பிடும் பழக்கம் இல்லை எனலாம். எனினும் இந்த விதிக்கும் ஒரு விலக்கு உள்ளது. செக்குகளின் மதிப்பை மட்டுமின்றி, பாங்குகளின் எண்களையும், நேஷனல் புரவின்ஷியல் பாங்கு பட்டியலில் குறித்து வருகின்றது) தன்னுடைய கிளைகள் யாவற்றினின்றும் வந்திருக்கக்கூடிய பார்க்லேஸ் பாங்கின்மீது வரையப்பட்டுள்ள செக்குகள் யாவற்றையும் செவ்வாய்க்கிழமை காலையில் வில்லியம்ஸ் டீகான்ஸின் இலண்டன் அலுவலகத்தில் ஒன்று சேர்க்கின்றனர். செக்குகளின்மேல் சுற்றப்பட்டிருந்த அடக்க விவரப் பட்டியல்களில் காணக்கூடிய மதிப்புத் தொகைகள் யாவற்றையும் கூட்டுகின்றனர். இதன்பின் செக்குகள், செக்குகளின் மேலுறையாகிய அடக்க விவரப் பட்டியல்கள், அடக்க விவரப் பட்டியல்களின் மொத்த மதிப்பு கணக்கிடப்பட்டுள்ள குறிப்பு ஆகியவற்றைத் தம்முடன் எடுத்துக்கொண்டு வில்லியம்ஸ் டீகான்ஸின் குமாஸ்தா செக்குத் தீர்வகத்திற்குச் செல்கின்றார். அங்கு வந்துள்ள பார்க்லேஸ் பாங்கின் குமாஸ்தாவிடம் இவை யாவற்றையும் வில்லியம்ஸ் டீகான்ஸின் குமாஸ்தா கொடுத்துவிடுகிறார். இவை யாவும் செவ்வாய்க்கிழமை காலை 10-15 மணி அளவில் நடைபெறுகின்றன. (இதுவரை வில்லியம்ஸின் 'வெளித்தீர்வு'களாகத் திகழ்ந்த செக்குகள் யாவும் பார்க்லேஸின் குமாஸ்தாவிடம் போய்ச் சேர்ந்தவுடன் பார்க்லேஸின் 'உள் தீர்வு'களாக மாறுகின்றன) பார்க்லேஸ் பாங்கின் குமாஸ்தா செக்குகளைத் தம்முடைய தலைமை அலுவலகத்திற்கு எடுத்துச் செல்கின்றார். தலைமை அலுவலகத்தில் மீண்டும் செக்குகளுக்கான பட்டியல்கள் தயாரிக்கப்படுகின்றன. இவற்றின் மதிப்பை இயந்திர சாதன உதவியுடன் கணக்கிடுகின்றனர். இவ்வாறு செக்குகளின் மதிப்பைச் சரிபார்க்கின்றனர், அடுத்து எந்தெந்தக் கிளையின்மீது செக்குகள் வரையப்பட்டுள்ளனவோ அதையொட்டி மீண்டும் செக்குகளை அடுக்குகின்றன. இவ்வாறு அடுக்கப்பட்ட

செக்குகட்கான பட்டியல்களைத் தயாரிக்கின்றனர்; அல்லது இவற்றின் உருவங்களைப் படம் பிடிக்கின்றனர். எந்தெந்தக் கிளைகளின் மீது செக்குகள் வரையப்பட்டுள்ளனவோ, அந்தந்தக் கிளைகட்குச் செவ்வாய்க்கிழமை மாலையன்று செக்குகள் தபால்மூலம் அனுப்பப் படுகின்றன. இச் செக்குகள் யாவும் புதன்கிழமையன்று காலை கிளைகளைச் சென்று அடைகின்றன. இவ்வாறு திங்கட்கிழமையன்று வில்லியம்ஸ் டீகான்ஸிடம் மேட்லாக் கொடுத்த செக்கானது, புதன்கிழமை காலையில் பார்க்லேஸ் மூலம் குரோமருக்குப் போய்ச் சேருகின்றது. செக்கில் யாதொரு விதமான குறையும் இல்லை என்று நாம் வைத்துக்கொண்டால், புதன்கிழமையன்று குரோமரின் கணக்கிலிருந்து பார்க்லேஸ் பாங்கு செக்கில் குறிப்பிடப்பட்டுள்ள தொகையைக் குறித்துவிடும். புதன்கிழமையன்று இந்தச் செக்கானது தீர்வகத்தில் தீர்வு பெறுவதை யொட்டி வில்லியம்ஸ் டீகான்சுக்குச் செக்கில் குறிப்பிடப்பட்டுள்ள தொகை கிடைக்கும். இவ்வாறு செக்கு ஒன்று பொதுத் தீர்வு மூலம் தீர்வுபெறுகின்றது. நாம் மேலே கொடுத்துள்ள விளக்கமானது தபால் தாமதங்கள், (காலம்) தள்ளிப்போடப்பட்ட தீர்வு ஏற்பாடுகள் (உதாரணமாக இவை சனிக்கிழமைகளில் நேரக் கூடியவை) ஆகியவற்றிற்கு உட்பட்டனவாகும்

தான் அனுப்பியுள்ள செக்குக்கான பணம் செலுத்தப்பட்டு விட்டதா அன்றிச் செலுத்தப்படவில்லையா என்பதை, வியாழக்கிழமை யன்றுதான் வில்லியம்ஸ் டீகான்சால் முடிவுகட்ட முடியும். ஏனெனில் செக்குக்கான பணம் செலுத்தப்படாமல் ஒரு வேளை செக்கானது திருப்பி அனுப்பப்பட்டுவிடலாம்.

ஏதோ ஒரு காரணத்தினல் செக்குக்கான பணம் செலுத்தப்படவில்லை என்று வைத்துக்கொண்டால், பார்க்லேஸ் பாங்கு செக்கை நேரடியாகவே வில்லியம்ஸ் டீகான்சுக்குப் புதன்கிழமையன்று அனுப்பிவைக்கும். செக்குக்கான பணம் செலுத்தப்படாத காரணத்தைப் பார்க்லேஸ் பாங்கு செக்கின்மீது குறித்து அனுப்பும் வில்லியம்ஸிடமிருந்து பெறவேண்டிய 'வெளித் தீர்வு'களோடு இவ்வாறு தன்னல் திருப்பி அனுப்பப்பட்ட செக்கின் மதிப்பு குறிக்கப்பட்டுள்ள ஒரு காகிதத்தைச் சேர்த்து அன்றைய தினமே பார்க்லேஸ் பாங்கு செக்குத் தீர்வகத்திற்கு அனுப்பிவைக்கும்.

பிறிதொரு தீர்வு பாங்கின்மீது வரையப்பட்டுள்ள செக்குகளையுடைய ஒரு தீர்வு பாங்கு நகரத் தீர்வின் எல்லைக்குள் அமைந்திருந்தால், இச் செக்குகள் தீர்வு பெறும் முறை நாம் மேலே குறித்துள்ள முறையினின்றும் ஓரளவு வேறுபடுகிறது. பணம் தரும் பாங்கு ஒன்றின்மீது வரையப்பட்டுள்ள செக்குகள் யாவும் முதற்

